உ

கவிச்சக்கரவர்த்தி

# கம்பர்

இயற்றிய

# இராமாயணம்

## பாலகாண்டம்

(இரண்டாம் பகுதி)




அண்ணுமலைப் பல்கலைக் கழகம்

1958

ரூ 6 - 0

# உள்ளுறை

# கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழு

—⁘⁘⁘⁘⁘⁘⁘⁘⁘⁘—

தலைவர் :

பேராசிரியர் டாக்டர் திரு. ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் B. A., B. L.

உறுப்பினர்கள் :

,, இராவ்சாகிபு திரு. மு, இராகவையங்கார் அவர்கள்

,, திரு. தெ. பொ. மீனுட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள் M.A.,B.L.

,, திரு. G. சுப்பிரமணியபிள்ளை அவர்கள் M. A., B. L.

,, திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள்

,, திரு. A. சிதம்பரநாதச் செட்டியார் அவர்கள் M. A. Ph. D.

திருவாளர் பி. ஸ்ரீ ஆச்சாரியார் அவர்கள்

,, நீ. கந்தசாமிப்பிள்ளை அவர்கள்

,, A. C. பால்நாடார் அவர்கள் B. A., B. L.

செயலாளர் :

,, T. K. இராமாநுஜ ஐயங்கார் அவர்கள்

# முன்னுரை

சொல்லின் செல்வர் டாக்டர் திரு. ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள், B.A., B.L.,
(தமிழ்ப் பேராசிரியர், சென்னைப் பல்கலைக் கழகம்)

செவ்வரிநற் கருநெடுங்கண் சீதைக்காகிச்
சினவிடையோன் சிலையிறுத்து மழுவாளேந்தி
வெவ்வரிநற் சிலைவாங்கி வென்றிகொண்டு
வேல்வேந்தர் பகைதடிந்த வீரன்றன்னைத்
தெவ்வரஞ்ச நெடும்புரிசை யுயர்ந்தபாங்கர்த்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள்
எவ்வரிவெஞ் சிலைத்தடக்கை இராமன்றன்னை
இறைஞ்சுவா ரிணையடியே இறைஞ்சினேனே.

[பெருமாள் திருமொழி 10-3.]

செந்தமிழ் நாட்டின் செழுங்கலை நியமமாக விளங்கும் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் ஆராய்ந்து வெளியிட்டுவரும் தமிழ்நூல்களுள், கவிச் சக்கரவர்த்தி கம்பர் இயற்றியருளிய இராமாயணமும் ஒன்று. இந்நூலின் பாலகாண்டத்தின் முதற் பகுதி சென்ற ஆண்டு வெளியிடப்பெற்றது. அதைத் தொடர்ந்து பாலகாண்டத்தின் இரண்டாம் பகுதி இப்பொழுது வெளியிடப் பெறுகிறது.

இதனுள், இராமபிரானுடைய முன்னோர் பெருமைகூறும் குலமுறை கிளத்து படலம் முதல், அப்பெருமான் சீதாபிராட்டியை மணந்து அயோத்திக்கு மீளுங்கால் வழியிடை எதிர்ப்பட்ட பரசுராமனைச் செருக்கழித்து அவன் வில்லையும் கைக்கொண்ட செய்தி பேசும் பரசுராமப் படலம் வரை பன்னிரண்டு படலங்கள் அடங்கியுள்ளன.

இப்பன்னிரண்டு படலங்களுள், குலமுறை கிளத்து படலம், கார்முகப் படலம், வரைக்காட்சிப் படலம், பூக்கொய் படலம், கடிமணப் படலம் என்பவற்றுக்குப் பேராசிரியர் ராவ்ஸாகிபு திரு. மு. இராகவையங்காரவர்களும், உலாவியற் படலத்துக்குத் தமிழாராய்ச்சித் துறைத் தலைவர் பேராசிரியர் வித்துவான் திரு. G. சுப்பிரமணிய பிள்ளை M. A. B. L. அவர்களும், எழுச்சிப் படலம் உண்டாட்டுப் படலம் என்பவற்றுக்கு வித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகரவர்களும், நீர்விளையாட்டுப் படலம், எதிர்கொள் படலம், கோலங்காண் படலம், பரசுராமப் படலம் என்பவற்

றுக்கு, தமிழாராய்ச்சித் துறை விரிவுரையாளர் திரு. E. S. வரத ராஜையரவர்களும் உரை வரைந்துள்ளார்கள்.

பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சித் துறைத் தலைவர் பேராசிரியர் வித்துவான் திரு. G. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் தலைமையில் அத்துறை விரிவுரையாளர்களாகிய திரு. T. K. இராமாநுஜையங்கார், வித்துவான் திரு. S. வேங்கடராமச் செட்டியார், வித்துவான் சிரோமணி திரு. P. S. இராமாநுஜாசாரியர், வித்துவான் திரு. வை. சுந்தரேசவாண்டையார் ஆகியோர் பாலகாண்டத்தின் அச்சுப் புத்தகங்களோடு நாற்பதுக்கு மேற்பட்ட ஓலைச் சுவடிகளை ஒப்புநோக்கித் தொகுத்த பாடவேறுபாடுகள் இதன்கண் பிற்சேர்க்கையாகத் தரப் பெற்றுள்ளன.

பல்கலைக் கழகத்தாரது வேண்டுகோட்கு இணங்கி, கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழுவில் உறுப்பினராயிருந்து இப்பதிப்பு சிறக்கும் வகையில் அவ்வப்போது ஆய்வுரைகள் வழங்கிய அன்பர்கள் அனைவர்க்கும், உரையெழுதியுதவிய அறிஞர்களுக்கும் இப்பணி இனிது நிறைவுறும் வண்ணம் பொருளுதவி புரிந்து வரும் இந்தியப் பேரரசினர்க்கும் பல்கலைக் கழகத்தின் சார்பில் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இப்பதிப்புக்கு வேண்டிய ஏட்டுச் சுவடிகளைக் கொடுத்து உதவிவரும் மதுரைத் தமிழ்ச் சங்கத்தார்க்கும், தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையத்தார்க்கும் மற்றும் பல அன்பர்களுக்கும் பல்கலைக் கழகத்தின் நன்றி உரியதாகும்.

இத்தகைய தமிழ்த் தொண்டுகள் சிறப்பாக நிகழ்தற்கு ஊக்கம் அளித்து அன்போடு ஆவனபுரிந்துவரும் அண்ணாமலைப் பல்கலைக் கழக இணைவேந்தரும் பெருங்கொடை வள்ளலுமாகிய டாக்டர் ராஜா ஸர். M. A. முத்தைய செட்டியார் B.A. M.L.A., அவர்களுக்கும், பல்கலைக் கழகத் துணைவேந்தரும் செந்தமிழ்ப் பேரன்பரும் ஆகிய திருவாளர் T. M. நாராயணசாமி பிள்ளை M.A.B.L., அவர்களுக்கும் தமிழ் மக்களது அன்புகனிந்த பாராட்டும் வாழ்த்தும் என்றும் உரியனவாம்.

இப்பதிப்பினைக் கண்கவர் வனப்புடன் திருந்திய முறையில் அச்சிட்டுதவிய சென்னைக் கமர்ஷியல் அச்சகத்தாரது பணி பாராட்டற்குரியதாகும்.

ரா. பி. சேதுப்பிள்ளை,
தலைவர், கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழு.

# 11. குலமுறை கிளத்து படலம்

இப்படலம், இராம லக்குமணர்களின் குலவரலாறு கூறுவதாம். விவசுவான் என்ற சூரியனிலிருந்து தொடங்கிய அம் மரபினரிலே, புகழ்பெற்ற வேந்தரின் பெருமைகளையும், இராம லக்குமணர்களது பிறப்பு வளர்ப்பு அருங்குணங்கள் பெருஞ் செயல்களையும், கோசிக முனிவர், தம்மை உசாவிய சனக மகா ராசனுக்கு விடையாகக் கூறியதை இக்கதைப் பகுதி விவரிக்கின்றது.

விவசுவான் என்ற சூரியன், காசிப மாமுனிவர்க்கு அவர் மனைவியருள் ஒருத்தியான அதிதி வயிற்றில் பிறந்தவன் ஆதலின் ஆதித்தன் எனப்பட்டான். இவனுக்கு வைவசுவதன் என்ற புத்திரன் உதித்தனன். இப்போது நிகழும் மனுவந்தரம் இம் மனுவுக்குரிய காலபேதமாகும். ஆதலால், ''ஆதித்தன் குல முதல்வன் மனுவினை'' என்பர் கம்பர். இவனிலிருந்து தொடங்கிய குலமுறை பின் வருமாறு:

1. வைவசுவத மனு
2. பிருது
3. இட்சுவாகு
4. ககுத்தன்
5. கடல் கடைந்து அமுதளித்தவன்
6. மாந்தாதா
7. முசுகுந்தன்
8. சிபி
9. சகரர்
10. பகிரதன்
11. அசுவமேதம் நூறு புரிந்தவன்
12. சந்திரனை வென்றோன்
13. உருத்திரனைச் சாய்த்தோன்
14. துந்துமாரன்
15. ரகு
16. அயன்
17. தயரதன்

இங்குக் குறித்த அரசர் பதினெழுவரும், இராமபிரான் அவதரித்த சூரியகுலத்து அரசர்களுள், அருஞ்செயல்களும் பெரும் புகழ்களும் படைத்த முன்னோர்கள் என்பது தெரியலாம். அச்செயல்களும் புகழ்களும் கம்பர் பாடல்களால் பெருஞ் சிறப்புப் பெறுகின்றன. இக்குலத்தில் பின்பு உதித்த தசரதன், கோசிகன் காலத்தவர் ஆதல்பற்றி அவரது பெரும் புகழ்களை மிகச் சுருக்கமாகவே கூறிவிட்டு, அம்மன்னன் மகவின்றி நெடுங் காலம் வருந்தியதையும், கலைக்கோட்டு முனிவரைக் கொண்டு புத்திரகாமேட்டி புரிந்து மக்கட்பேறுற்றதையும், அம்முனிவர்

கூற்றில் வைத்து நம் புலவர்பெருமான் சுருக்கமாகவும் விளக்கமாகவும் பாடுகிறூர். பின், இராமன், பரதன், இலக்குமணன், சத்துருக்கன் என்ற தசரத புத்திரர் நால்வரின் அவதாரங்களேயும், அவர்களுள், சிறப்பாக இராமபிரானது பிறப்பு வளர்ப்புக்களேயும் பற்றி நம் புலவர் பாடியவை, அற்புதம் வாய்ந்தவை. அவற்றின் சொல்வளமும், பொருட் பொலிவும், ஓசையமைதியும், நாம் பலமுறை படித்து இன்புறத்தக்கவை.

வான்மீகத்தில்: இராம லக்குமணர்களின் ஆண்மைத் திறங்களேயும், பேரழகுகளேயும், தோற்றப் பொலிவுகளேயும், கண்ட சனகன், வியப்பும் உவப்பும் உற்று, இவர் யாவர்? என்று கோசிகரை வினுவ, அம்முனிவர், 'இவர்கள் தசரத குமாரர்கள்' என்று மட்டும் கூறிப் பின், தாம் வேள்விபுரிந்து வந்த சித்தாச்சிரமத்தில் அவ்வேள்விக்கு இடையூறு விளேத்த தாடகை, சுபாகு, மாரீசன் முதலிய அரக்கர் இனங்களே இக்குமாரர்கள் அழித்தோட்டியது முதல், அகலிகையின் சாபவிமோசனம் வரை கூறியதோடு, தாடகைவதத்துக்குப் பின், இராமபிரானுக்கு அத்திர சத்திரங்களேயெல்லாம் மந்திர பூர்வமாகத் தாம் உபதேசித்து அளித்ததையும் கூறியதாக வான்மீகி முனிவர் விரிவாகக் கூறுகிறூர். இதனேயே கம்பநாடர், சுருக்கமாக இப்படலத்தில் பாடுவர். இக்கவிஞர் கூறிய சூரிய குலமன்னர் பதினெழுவரில் சிலர் வரலாறுகள் தெரியக் கூடவில்லே. வேறு சிலர் செய்திகள் புராணங்களில் மாறுபட்டும் உள்ளன. சூரிய குலத்தவரான சோழரின் குலமுறையைக் கலிங்கத்துப்பரணி, மூவருலா முதலிய நூல்களிலும், அன்பில், கன்னியாகுமரிச் செப்பேடுகளிலும் காணலாம். ஆனுல், கம்பர் கூறியபடி, அக்குல அரசர்களிற் சிலரைப்பற்றி அவற்ருல் அறியக்கூடவில்லே. ஆயினும், கி. பி. 11-ஆம் நூற்ருண்டினனுன முதல் இராசேந்திர சோழன் காலத்து அமைந்த திருவாலங்காட்டுச் செப்பேடுகளில் சூரிய குலத்து அரசர் பலர் செய்திகள் ஆதிமுதல் ஒழுங்காகச் சிறு விவரங்களுடன் காணப்படுகின்றன. அவ்வரசரிற் பலரைப் பற்றிக் கம்பரும் பாடுதல் இங்கே குறிப்பிடத்தக்கது. அவருள் சில அரசர் பெயர்களும் வரலாறுகளும் கீழ்வருமாறு:

மேற்காட்டிய கொடிவழியில், இரண்டாமவனுன பிருது என்பான், அனலப்பிரதாபன் என்ற அரசன் மரபில் உதித்தவன் என்றும், தீயோனுன வேனன் என்பவன் மகன் என்றும், தன் வரிசிலேயால், நிலமடந்தை முலேசுரப்பச் சாதித்தவன் என்றும் திருவாலங்காட்டுச் செப்பேடுகள் கூறும். ஆனுல், ஆதி மனுவான சுவாயம்புவ மனுவின் வழியில் வந்த சக்கரவர்த்தி என்று அவனேப் புராணங்கள் கூறுகின்றன. எனினும், மேற்

கண்ட செப்பேட்டிற் கண்ட முறையே சூரிய புத்திரனான வைவசுவத மனுவின் மரபினனாகவே கூறுகின்றார் கம்பநாடர்.

நாலாமவனான ககுத்தன் என்ற வேந்தனை இட்சுவாகு வின் பேரன் என்று கூறும் அச் செப்பேடு. இட்சுவாகுவுக்கு அடுத்துவைத்துக் கம்பர் இவனைப் பாடுதலாலும், இவனது வர லாற்றாலும் பெருங் கீர்த்திபெற்ற வேந்தன் இவன் என்பதும் இவன் மரபினனாதல் பற்றி இராமபிராற்குக் 'காகுத்தன்' என்ற பெயர் வழங்கலாயிற்று என்பதும் அறியத்தக்கன.

ஐந்தாமவனான கடல் கடைந்து அமுதளித்த அரசன் இன்னான் என்பது இதுவரை அறியப்படவில்லை. ஆனால், திரு வாலங்காட்டுச் செப்பேடு, இவன் பெயர், 'பிருதுலாட்சன்' என்று கூறுகின்றது.

பன்னிரண்டாமவனான, 'சந்திரனை வென்றான்' என்பவன், 'சந்திரஜித்' என்ற பெயருடையான் என்று அச்செப்பேடு கூறும். இவனைத் திலீபன் எனவும், 'சந்திர ஜேதா' என்ற பெயர் இவனுக்கு உண்டெனவும் இரகுவமிசம் முதலியவற்றில் விவரங்கள் காணப்படுகின்றன.

பதின்மூன்றாமவனான 'உருத்திரனைச் சாய்த்தான்' என் பவன், உருத்திரன் என்ற வலிமிக்க பகையரசனை வென்றதனால் 'ருத்ரஜித்' என்று பெயர்பெற்றான் என்றும், இவனது இயற் பெயர், 'சத்தியவிரதன்' என்றும் கூறும் திருவாலங்காட்டுச் செப்பேடு. சிவனை இவன் எதிர்த்து வென்றவன் என்று கந்த புராணம் சனற்குமார சங்கிதையில் கூறப்படுகிறதென்று சிலர் எழுதியிருப்பது ஆராய்ச்சிக்குரியது.

பதினான்காமவனான, 'துந்துவெனுந் தானவனை......துணித் தான்' என்பவன், 'துந்துமாரன்' என்ற பெயரினன் என்று கூறும் அச்செப்பேடு. துந்து ஓர் அசுரன். துந்துமாரனுக்குக் 'குவலயாசுவன்' என்பது பெயர் என்று விஷ்ணுபுராணத்திற் காணப்படுகின்றதாம்.

மேற்கூறிய செய்திகள் புதிய வரலாறுகளாலும் முறை வைப்பாலும் கம்பர் பாடல்கள் சிலவற்றுக்கு விளக்கந் தரு கின்றன. ஏனைய அரசர்களின் பெயர்களும் கதைகளும் கலிங் கத்துப்பரணி, மூவருலாக்களிலும் கம்பரது குலமுறையிலும் மேற்கூறிய செப்பேட்டிலும் ஒத்துள்ளனவே.

இவ்வாறு கம்பர் கூறிய வரலாற்றுக் குறிப்புக்களையே விளங்க வைப்பது திருவாலங்காட்டுத் தாமிர சாஸனம்

என்பது அறிந்து மகிழத்தக்கது. அதனுல், கம்பர் கூற்றிற்கும் அச்செப்பேடுகட்கும் மூலமான நூலொன்று ஆதியில் இருந்திருத்தல்வேண்டும் என அறியலாம். அது யாது என்பது ஆராயத்தக்கதாம். மேலும் அறிதற்குரிய விவரங்களை இப்படலவுரையினுட் கண்டுகொள்க.

இனி, இந்த வமிசாவளி, சீதாராமர்களின் திருமணக் காலத்தில் சம்பந்தியான சக்கரவர்த்தியின் குலமுறையைக் கூற வேண்டிய சந்தர்ப்பத்தில் வசிட்ட பகவானுல் விவரிக்கப்பட்டதாக 70-ஆம் சருக்கத்தில் வான்மீகி முனிவர் கூறுகின்றுர். இவர் கூறிய அரசரிற் பலர் பெயர்களைக் கம்பர் வாக்கினும் காணலாம்.

இங்ஙனம் சூரியகுலப் பெருமைகளையும் தசரத புத்திரர் தோற்றங்களோடு இராமாவதாரத்தின் ஏற்றத்தையும் கம்பர் புகழ்ந்ததில் விசேட நயம் ஒன்று உண்டு. சீதையின் பிறப்பு வளர்ப்புக்களையும், கன்னியாசுல்கமான வில்லின் மகிமைகளையும் சனகன் அவையில் சதானந்தர் புகழ்ந்து கூறுதற்கு முன்பே, மணமகன் ஆகப்போகும் இராமபிரானது குலவரலாற்றையும் அவனது பேராற்றல்களையும் சனகனும் அவன் அவையோரும் நன்கு அறியும்படி கோசிக முனிவர் கூற்றுக முற்பட வைத்து நம் புலவர் அமைத்துப் பாடியது பெரிதும் ஏற்புடையதெனலாம்.

---

# 11. குலமுறை கிளத்து படலம் *

## மனுவும் பிருதுவும்

721\. ஆதித்தன் குலமுதல்வன்
மனுவினையா ரறியாதார்
பேதித்த வுயிரனைத்தும்
பெரும்பசியால் வருந்தாமல்
சோதித்தன் வரிசிலையா
னிலமடந்தை முலைசுரப்பச்
சாதித்த பெருந்தகையு
மிவர்குலத்தோர் தராபதிகாண்.†

'ஆதித்தன் குல முதல்வன் மனுவினை யார் அறியாதார்?
பேதித்த உயிர் அனைத்தும் பெரும் பசியால் வருந்தாமல்
சோதித் தன் வரி சிலையால் நிலமடந்தை முலை சுரப்பச்
சாதித்த பெருந்தகையும் இவர் குலத்து ஓர் தராபதி காண்.'

பொழிப்பு: விவசுவான் என்ற சூரியனது குலத்துக்கு முதற் புதல்வனாகத் தோன்றிய வைவசுவதன் என்ற மனுச்சக்கர வர்த்தியைப் பற்றி (க் கேள்வியால்) அறியாதார் யாவர் உளர்? வேற்றுமைப்பட்ட ஆன்மகோடிகள் எல்லாம், மிக்க பசியால் வருந்தி இளையாவண்ணம், வரிந்து கட்டப்பெற்ற தன் ஒளி வாய்ந்த வில்லால் பூமிதேவியை முலை சுரக்கும்படிசெய்து முடித்த பெருந்தகையான பிருதுச்சக்கரவர்த்தியும் இவர் குலத்தே, ஆதியில் தோன்றிய ஓர் அரசனுவன்.

குறிப்பு: உலகசிருட்டிக்காகப் பிரமதேவன் படைத்த உபப் பிரமர்கள் ஒன்பதின்மருள் ஏழாமவனான ஆதித்தன், காசிபப் பிரசாபதிக்கு அதிதிவயிற்றிற் பிறந்த விவசுவான் என்ற சூரிய னுவன். இவன் புத்திரனே வைவசுவதமனு என்பான். சூரிய

---

* இது, குலமுறைப்படலம் (24) எனவும், வரலாற்றுப்படலம் (13, 17, 18, 20, 22, 40) எனவும், முதன்முறைகிளத்து படலம் (1, 3, 6, 14,) எனவும், வரலாற்று முதன்முறைகிளத்து படலம் (23, 44) எனவும் சுவடிகளில் வரையப் பட்டுள்ளது.

† 23, 27, 29, 43 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இது 3-ஆம் பாடலாகக் காணப்படுகிறது.

குலத்துக்கு இவனே முதல்வனுதலால், 'ஆதித்தன் குலமுதல்வன் மனுவினையா ரறியாதார்' என்றுர்.

இந்த வைவசுவத மனுவிற்குப் பின், பெரும்புகழ்பெற்ற அரசனெருவன் இவன் வழியில் தோன்றினன்; அவன் பிருதுச் சக்கரவர்த்தி என்பான்; அவன் ஆட்சிக்கு வந்ததும் பூமி தேவியானவள் பயிர்பச்சைகளையெல்லாம் தன்னுள் அடக்கி வைத்திருந்தனளென்றும் அவை பெறுமல் உயிர்கள் யாவும் வருந்தி வாடி அரசன்பால் முறையிட்டனவென்றும், அதற்கு இரங்கிய இச் சக்கரவர்த்தி கையில் ஏந்தி வில்லேருழவனுய்ப் பூமியுடன் போர் புரிந்தபோது பூதேவி பணிந்து தான் அடக்கி வைத்திருந்த வளங்களையெல்லாம் சுரந்து மன்னுயிர்கட்கு அருளினளென்றும் கூறுவர். அதனுல், 'உயிரனைத்தும் பெரும் பசியால் வருந்தாமல்.........நிலமடந்தை முலைசுரப்பச் சாதித்த பெருந்தகை' என்றுர். இது பற்றியே இச்சக்கரவர்த்தி பெயரால் பிருதிவி என்ற பெயரைப் பூமி பெற்றதென்பர். அனலப் பிரதாபன் என்ற அரசன் வழியில் பிருது உதித்தவன் என்றும், இவன் தீயோனுன வேனன் மகனென்றும் கூறும் திருவாலங் காட்டுப் பழைய சாசனம்.$ இவனை முதல் மனுவான சுவாயம்புவமனுவின் புத்திரன் என்று புராணங்கள் கூறவும், வைவசுவதமனுவின் வழியினனுக இவனைக் கம்பர் கொண்டனர். திருவாலங்காட்டுச் செப்பேடும் இக்கருத்தையே புலப் படுத்தல் அறியத்தக்கது.

நிலமடந்தை, முலை சுரத்தலாவது - பல்வகைப் பயிர்கள், பழம் தரும் தருக்கள், மூலிகைகள் முதலியவற்றை அளித்த லாம். (1)

## இட்சுவாகு

**722.** பிணியரங்க வினையகலப்
பெருங்காலந் தவம்பேணி
மணியரங்க நெடுமுடியாய்
மலரயனை வழிபட்டுப்
பணியரங்கப் பெரும்பாயற்
பரஞ்சுடரை யாங்காண
அணியரங்கந் தந்தானை
யறியாதா ரறியாதார்.

$ முதல் இராசேந்திர சோழன் காலத்துத் திருவாலங்காட்டுச் செப்பேடுகள் (S. I. I. Vol. III. Part iii. p 418)

'பிணி அரங்க வினை அகலப், பெருங்காலம் தவம் பேணி,
மணி அரங்கு அம் நெடுமுடியாய்! மலர் அயனை வழிபட்டுப்,
பணி அரங்கப் பெரும் பாயல் பரம் சுடரை யாம் காண
அணி அரங்கம் தந்தானை அறியாதார் அறியாதார்.'

பொ:—நவமணிகள் பதிக்கப்பெற்று நீண்டு அழகியதான முடியுடைய வேந்தே! நோய்கள் ஒழியவும் ஊழ்வினைகள் அழியவும் நெடுங்காலம் தவத்தை விரும்பிச்செய்து, உந்திமலரில் தோன்றிய பிரமனை வழிபட்டு, ஆதிசேடனது உடலத்தைப் பாயலாகக் கொண்டு திருக்கண்வளரும் ஆதியஞ்சோதியான திருமாலை என்போல்வாரும் தரிசித்து உய்யும்படி அலங்காரமான கருப்பக்கிருகத்தில் ·பிரதிட்டித்து அளித்த இட்சுவாகு வேந்தனை (உலகில் கேள்வியால்) அறியாதவர்கள் ஒன்றும் அறியாதவர்களே யாவர்.

கு:—உடலைப்பற்றிய பிணிகளும் உயிரைப் பற்றிய வினைகளும் ஒழிய என்பார், 'பிணியரங்க வினையகல' என்றார். அரங்குதல் ஒழிதல்; 'அரக்கர் அங்கு அரங்க' என்றார் பெரியாரும் (திருச்சந்த. 32). மணி அரங்கு நெடுமுடியாய் என்றும் பாடம். அரங்குதல் - பதித்தல். பணி அரங்கம் - பாம்பின் உடலிடம். பரம் சுடர் - ஆதியஞ்சோதியான திருமால் மூர்த்தம். இராமபிரான், தன் குலதெய்வமான இம்மூர்த்தியைத் திருமணக் காலத்தும் வணங்கிய செய்தி, 'ஆதியஞ்சோதியை அடி வணங்கினான்' (கடிமணப். 50) எனப் பின் கூறப்படுதலாலும் அறிக. குலமுறை கிளத்துபவர் விசுவாமித்திரரேயாதலால் 'யாம் காண' என்றது பிறரை உளப்படுத்திய அவரது கூற்றேயாகும். பரஞ்சுடரை யாம் காணத் தந்தவன் - இட்சுவாகு மன்னன். அணி அரங்கம் - அலங்காரமான உள்ளறை. உள்ளறை என்பது ஈண்டுக் கோயிலுள் கருப்பக்கிருகத்தை உணர்த்தும். 'அரங்கம் - இல்லின்கண் ஒரு பக்கம்' என்றார் தெய்வச்சிலையாரும் (தொல். சொல். எச்ச. 3. உரை). அயோத்தியில் இட்சுவாகுவால் பிரதிட்டை பெற்ற இம் மூர்த்தியை வணங்கியவர் முனிவர் ஆதலால் 'யாம் காண அணியரங்கம் தந்தானை' என்றார். சிறப்ப அலங்காரமுடையதாதலின், அணியரங்கம் எனப்பட்டது.

இட்சுவாகுமன்னன், பிரமதேவனை வழிபட்டு அவன் பூசித்த திருமால் மூர்த்தத்தைப் பெற்று அயோத்தியில் அதனைப் பிரதிட்டித்தான் என்றும், அவ்வரசன் காலமுதலே அவன் மரபினர்க்கெல்லாம் தொழுகுலமாக அம்மூர்த்தி வழிபடப் பெற்றனரென்றும், இராமபிரான் திருமுடிசூடியபின் அம்மூர்த்தியை ஆராதித்துவரும்படி விபீடணனுக்கு அளிக்க, அவன் கொண்டு

இலங்கை செல்லுமிடையில், திருவரங்கத் தலத்துக்கு வந்த போது அப்பெருமான் அத்தலத்தை விரும்பி நிலைபெற்றருளினர் என்றும் வரலாறு வழங்குகின்றது. வேறுவகையாகவும் கதைகள் உண்டு. 'மன்னுடைய வீடணற்கா மதிலிலங்கைத் திசை நோக்கி மலர்க்கண் வைத்த, என்னுடைய திருவரங்கர்' (திவ். பெரியாழ் வார். 4, 9, 2) என்ற பெரியார் திருவாக்கும் இங்கு அறியத்தகும். (2)

கருத்தன்

**723.** தான்றனக்கு வெலற்கரிய
தானவரைத் தலைதுமித்தென்
வான்றரக்கிற் றிகொலென்று
குறையிரப்ப வரங்கொடுத்தாங்
கேன்றெடுத்த சிலையினனு
யிகல்புரிந்த விவர்குலத்தோர்
தோன்றலைப்பண் டிந்திரன்காண்
விடையேருய்ச் சுமந்தானும்.

"தான் தனக்கு வெலற்கு அரிய
'தானவரைத் தலை, துமித்து என்
வான் தரக்கிற்றிகொல்?' என்று
குறை இரப்ப, வரம் கொடுத்து ஆங்கு
ஏன்று எடுத்த சிலையினனுய்
இகல்புரிந்த இவர்குலத்து ஓர்
தோன்றலைப் பண்டு இந்திரன்காண்
விடையேருய்ச் சுமந்தானும்!"

பொ :—(தேவேந்திரன்) தன்னுல் வெல்லுதற்குக் கூடாதிருந்த அசுரர்களைத் தலைகளைத் துணித்துக் கொன்று, 'என் விண்ணுலகை மீட்டுக் கொடுக்கவல்லையோ?' என்று குறைவேண்டி நிற்க, அப்பொழுதே அவன் வேண்டுகோளை ஏற்றுக் கையில் வில்லை ஏந்தியவண்ணம் அசுரர்களுடன் போர்புரிந்த இக்குமரர் வமிசத்துப் பிறந்த அரசனெருவனை, முன் காலத்தில் எருத்தின் வடிவாய்ச் சுமந்துநின்றவனும் தேவேந்திரன்.

கு :—சூரியகுலத்தில் திருமாலமிசமாய் உதித்த புரஞ்சயன் என்ற அரசனிடம் வேண்டிக்கொண்டபடி இந்திரன், இடப வடிவெடுத்து அவனைச் சுமந்து நிற்க, அவனுடன் அசுரர் புரிந்த

பெரும்போரை வென்று, விண்ணுலகை அந்த இந்திரனுக்கு மீட்டுக்கொடுத்தான் என்பது வரலாறு. இடபத்தின் முசுப்பின் மேல் ஏறியவனாதலால் 'ககுத்தன்' என்று இவன் பெயர் பெற்றான். ககுத் - இடபத்தின் திமில். இவனை மேற்கூறிய இட்சுவாகுவின் பேரன் என்பர்.* இவன் மரபினனாதலால் இராம பிரானுக்குக் காகுத்தன் என்ற திருநாமம் உண்டாயிற்று என்க. கிற்றி கொல் - கில் என்னும் வினைமுதலடியாக வந்த முன்னிலை யொருமை முற்று; 'கிற்பன் கில்லேன் என்றிலன்' (திருவாய் - 3.3-6) என இதன் விகற்பங்கள் காண்க. (3)

### கடல் கடைந்த காவலன்

**724.** அரசவவன் பின்னோரை
 யென்னானு மளப்பரிதால்
உரைகுறுக நிமிர்கீர்த்தி
 யிவர்குலத்தோ னொருவன்காண்
நரைதிரைமூப் பிவைமாற்றி
 யிந்திரனு நந்தாமல்
குரைகடலை நெடுவரையாற்
 கடைந்தமுது கொடுத்தானும்.

'அரச! அவன் பின்னோரை என்னானும் அளப்பரிதால்:
உரை குறுக நிமிர் கீர்த்தி இவர்குலத்தோன் ஒருவன் காண்,
நரை திரை மூப்பு இவை மாற்றி, இந்திரனும் நந்தாமல்,
குரை கடலை நெடுவரையால் கடைந்து அமுது கொடுத்தானும்.'

பொ:—அரசே! அந்தக் ககுத்த ராசனது குலத்தில் பின்பு உதித்த அரசர்களை அளவிட்டுக் கூறுதல் என்னாலும் முடியாததாம். நரை திரை மூப்பு என்னும் உடற்குறைகளை ஒழித்து இந்திரனும் (அவனைச் சார்ந்த தேவர்களும்) மரண மடையாதவாறு, ஒலிக்கின்ற திருப்பாற்கடலை (மந்தர) மலையைக் கொண்டு கடைந்து அமிருதத்தை (எடுத்துத் தேவர்களுக்கு)க் கொடுத்தவனும் (புகழ்தற் குரிய) சொற்கள் போதாதபடி கீர்த்தி வாய்ந்த இக்குமாரர்களின் குலத்தில் அவதரித்த ஓர் அரசனே ஆவன்.

கு:—அமுதளித்த இவ்வேந்தனை, 'கடல்கலக்கவெழும் இன்னமுது தன்னை யொருவன், கடவுள் வானவர்கள் உண்ணவருள்

* திருவாலங்காட்டுச் செப்பேடுகள் (S. I. I. Vol, III, Plate iii, p. 413)

செய்த கதையும்' என்று கலிங்கத்துப் பரணியும் கூறும் (இராச பாரம். 13). நிமிச்சக்கரவர்த்தி என்ற குறிப்பொன்று கையெழுத்துப் பிரதிகள் சிலவற்றில் காணப்படுகின்றது. சுமித்திரைக்கு அமுதனைய பாயசத்தைப் பகிர்ந்தளித்த தசரதனை, 'நிமித்திரு மரபுளான்' என்று கம்பர் பாடியதிலிருந்து, தேவர்க்கு அமுதளித்த நிமிபோல் சுமித்திரைக்குப் பாயச அமுதளித்தவன் என்ற குறிப்பும் இதனில் தொனிக்கும். பிருதுலாட்சன் என்ற சூரிய குலத்தரசன், தேவர் வேண்டுகோளின்படி கடல் கடைந்து அமுதளித்தவன் என்று திருவாலங்காட்டுச் செப்பேடு கூறுகின்றது*. (4)

### மாந்தாதா

**725.** கருதலரும் பெருங்குணத்தோ
  ரிவர்முதலோர் கணக்கிறந்தோர்
திரிபுவன முழுதாண்டு
  சுடர்நேமி செலநின்றோர்
பொருதுறைசேர் வேலினாய்
  புலிப்போத்தும் புல்வாயும்
ஒருதுறையி னீருண்ண
  வுலகாண்டோ னுளனொருவன்.

**'கருதல் அரும் பெருங்குணத்தோர்,**
  **இவர் முதலோர் கணக்கு இறந்தோர்,**
**திரிபுவனம் முழுது ஆண்டு**
  **சுடர் நேமி செல நின்றோர்,**
**பொருது உறைசேர் வேலினாய்!**
  **புலிப்போத்தும் புல்வாயும்**
**ஒரு துறையில் நீர் உண்ண**
  **உலகு ஆண்டோன் உளன் ஒருவன்.'**

பொ:—பகைவருடன் போர்புரிந்து (வெற்றி பெற்றபின்) உறையிடம் புகும் வேற்படையுடைய சனகவேந்தே! தம் ஆணைச் சக்கரம் (எங்கும் தடையின்றிச்) செல்லும்படி மூவுலகம் முழுவதும் தம் ஆட்சி செலுத்தி நின்றவர்களும் (பிறரிடம் உள்ளனவாகக்) கருதவும் அரிய பெருங்குணங்கள்

* S. I. I. Vol. III, Part iii, p. 415.

படைத்தவர்களும் ஆகிய இங்கே கூறிய அரசர்கள் முதலியோர் அளவற்றவர்களாவர்; (இக்குலத்தினுள் சென்மப்பகைமை யுள்ள) ஆண்புலிகளும் மான்களும் (அப்பகையின்றி) ஒரு பொய் கைக்கரையில் (கூடியிருந்து) நீர் பருகும்படி உலகம் ஆண்ட அரசனொருவன் உளன்.

கு:—பெரியவை சிறியவற்றை நலியாதபடி ஆண்டவன் என்பார், 'புலிப்போத்தும் புல்வாயும் ஒரு துறையில் நீருண்ண' என்றார், இங்ஙனம் நீதிபெற அருள்மிக்கு ஆட்சிபுரிந்தவன் மாந்தாதா என்பர். 'ஒரு துறைப்புனல் சினப்புலியு மானு முடனே, உண்ணவைத்த வுரவோ னுலகில் வைத்த அருளும்' என்றார் சயங்கொண்டாரும் (கலிங். பரணி. 789). போத்து என்பது, புலி மான் எருமை முதலிய விலங்கின் ஆண்களுக்கு வழங்கும் பெயர் (தொல். பொருள். மரபு. 2). (5)

### முசுகுந்தன்

**726.** மறைமன்னு மணிமுடியு
மாரமும்வா ளொடுமின்னப்
பொறைமன்னு வானவருந்
தானவரும் பொருமொருநாள்
விறன்மன்னர் தொழுகழலா
யிவர்குலத்தோன் விற்பிடித்த
அறமென்ன வொருதனியே
திரிந்தமரா பதிகாத்தான்.

'மறை மன்னும் மணி முடியும்
ஆரமும் வாளொடு மின்னப்,
பொறை மன்னு வானவரும்
தானவரும் பொரும் ஒரு நாள்,
விறல் மன்னர் தொழு கழலாய்!
இவர் குலத்தோன் வில் பிடித்த
அறம் என்ன ஒருதனியே
திரிந்து அமராபதி காத்தான்.'

பொ:—வெற்றி வேந்தர்களும் அடிவணங்கும் அரசே! பொறுமை மிக்க தேவர்களும் அசுரர்களும் போர்புரிந்து வந்த ஓர் காலத்தே இக்குமரர்களின் குலத்தவனான அரசனொருவன்

வேதவிதிப்படி சூடிய மணிமுடியும் ஆரங்களும் ஒளியோடுதிகழ, வில்லை யேந்திய தருமதேவதை போலத் தான் ஒருவனாகவே சஞ்சரித்து இந்திரனது அமராவதி நகரைக் காத்தளித்தான்.

கு :—'அமராபதி காத்தான்' என்றது, முசுகுந்தனை; 'பொரு துறைத்தலை புகுந்து முசுகுந்த னிமையோர் - புரமடங்கலு மரண் செய்து புரந்த புகழும்' என்பர் சயங்கொண்டார் (கலிங் - பரணி – 189). 'நறை மன்னு மலர்முடியு மாரமும் நாணொடு மின்ன' என்ற பாடம் பிரதிகள் பலவற்றிற் காணப்படுகின்றது. இதனில், நாண் - இடையணி என்க. அமராவதி - இந்திரபுரி, (6)

சிபி

727. இன்னுயிர்க்கு மின்னுயிரா
யிருநிலங்காத் தாரென்று
பொன்னுயிர்க்குங் கழலவரை
யாம்போலும் புகழ்கிற்பாம்
மின்னுயிர்க்கு நெடுவேலா
யிவர்குலத்தோன் மென்புறவின்
மன்னுயிர்க்குந் தன்னுயிரை
மாறாக வழங்கினனால்.

'இன் உயிர்க்கும் இன் உயிராய்
இரு நிலம் காத்தார்' என்று,
பொன் உயிர்க்கும் கழலவரை
யாம்போலும் புகழ்கிற்பாம்!
மின் உயிர்க்கும் நெடு வேலாய்!
இவர் குலத்தோன் மென் புறவின்
மன் உயிர்க்கும் தன் உயிரை
மாறாக வழங்கினனால்.'

பொ :—ஒளிவீசும் நீண்ட வேலாயுதம் தரித்த வேந்தனே! பொன்மயமான வீரக்கழல் அணிந்த அரசராய், இனிய பிராணி கட்கெல்லாம் இன்னுயிராயிருந்து இப்பெரிய பூமியைக் காத்து அளித்தவர் என்று (இவர் குலத்துதித்த அரசர் பெருமையை) புகழவல்லோம் யாமே போலும்; இத்தோன்றலரின் குலத்து முன்னோன் ஒருவன், எளிய புறாவொன்றன் உயிர்க்கும் ஈடாகத் தன் உயிரையே கொடுத்து அளித்தவன். (7)

**சாகரர்**

**728.** இடரோட்ட வினநெடிய
 வரையுருட்டி யிவ்வுலகம்
திடரேட்ட மெனக்கிடந்த
 தெனவிரிதார்த் தெவ்வேந்தர்
உடரேட்ட நெடுவேலா
 யிவர்குலத்தோ ருவரிநீர்க்
கடரேட்டா ரெனின்வேறோர்
 கட்டுரையும் வேண்டுமோ.

'இடறு ஓட்ட இன நெடிய
 வரை உருட்டி இவ் உலகம்
திடல் தோட்டம் எனக் கிடந்தது
 என விரி தார்த் தெவ் வேந்தர்
உடல் தோட்ட நெடு வேலாய்!,
 இவர் குலத்தோர் உவரி நீர்க்
கடல் தோட்டார் எனின், வேறு ஓர்
 கட்டுரையும் வேண்டுமோ ?'

பொ :—மலர்ந்த மலர்மாலைகளை அணிந்த பகைவேந்தரின் உடலைத் துளைக்கும் நீண்ட வேலையுடைய வேந்தே! இக்குமாரர் களின் குலமுன்னோர் (சகரர்), தம் முன்னோன் துன்பமுறுதலை ஒழிக்க நினைந்து கூட்டமான உயர்ந்த மலைகளை உருட்டித்தள்ளி, இவ்வுலகம் திடராகவும் பள்ளமாகவும் கிடந்ததென்று சொல்லும் படி உவர்க்கடலைத் தோண்டினர் என்றால் (இக்குலத்தவர் பெரு மைக்கு) வேறு சான்றுரையும் வேண்டுமோ?

கு :—இடறு - துன்பம்; 'ஈமின் எமக்கொரு துற்றென்று இடறுவர்' (திவ். திருவாய். 4. 1. 7.) திடல் - மேடு. தோட்டம் - பள்ளம்; தோண்டப்பட்டது என்பது பொருள். தோண்டப் பட்ட நீர்க்கால்களைத் 'தோடு' என்பது மலைநாட்டு வழக்கு; அம் சாரியை. உடல் தொட்ட - உடலைத் துளைத்த; தொட்ட என்பது தோட்ட என முதனீண்டது. சாகரர்கள் தோண்டிய பள்ளமே கங்கைநீரால் நிரம்பலாயிற்றென்றும், அதனால் சாகரம் என்று வடமொழியிலும், தொடுகடல் (புறநா. 1.) என்று தென்மொழியிலும் வழங்கலாயிற்றென்றும் உணர்க, சாகரரால் நிலம் தோண்டப்பட்ட வரலாறு, அகலிகைப் படலத் தால் அறியப்பட்டது. (8)

### பகீரதன்

729. தூநின்ற சுடர்வேலோ
யனந்தனே சொல்லானேல்
யானின்று புகழ்ந்துரைத்தற்
கெளிதோவே டவிழ்கொன்றைப்
பூநின்ற மவுலியையும்
புக்கலைந்த புனற்கங்கை
வானின்று கொணர்ந்தானு
மிவர்குலத்தோர் மன்னவன்காண்.

'தூ நின்ற சுடர் வேலோய்!
அனந்தனே சொல்லானேல்,
யான் இன்று புகழ்ந்து உரைத்தற்கு
எளிதோ? ஏடு அவிழ் கொன்றைப்
பூ நின்ற மவுலியையும்
புக்கு அலைந்த புனல் கங்கை,
வான் நின்று கொணர்ந்தானும்,
இவர் குலத்து ஓர் மன்னவன் காண்.'

பொ :—(பகைவரது) தசையும் ஒளியும் பொருந்திய வேலை யுடைய வேந்தே! இவர் குலப்பெருமை, (ஆயிரம் நாவுடைய) ஆதிசேடனே சொல்ல வல்லவனல்லன் என்றால் (ஒரு நாவுடைய யான் இன்று புகழ்ந்து கூறுதற்கு எளியதாமோ? இதழ்கள் விரிந்த கொன்றைப் பூவோடு கூடிய சிவபிரானது சடைமுடி யினும் புகுந்து திளைத்த கங்கைப்புனல் வெள்ளத்தை ஆகாயத்தி னின்று நிலவுலகத்திற்குக் கொணர்ந்து அளித்தவனும், இக் குமரரது மரபிலுதித்த ஓர் அரசனவன்.

கு :—மவுலியையும், உம்மை உயர்வுசிறப்பு. அளவிலாற்றல் உடையவனான சிவபிரானது மவுலியையும் அலைந்து கலக்கியது என்பது கருத்து. வானின்று கொணர்ந்தான் - பகீரதன். அவனது வரலாறு அகலிகைப் படலத்தால் அறியப்பட்டது. (9)

### அசுவமேதயாகம் நூறு செய்தவன்

730. கயற்கடல்சூ ழுலகெல்லாங்
கைநெல்லிக் கனியாக்கி
இயற்கைநெறி முறையாலே
யிந்திரற்கு மிடரியற்றி

முயற்கறையின் மதிக்குடையா
யிவர்குலத்தோன் முன்னொருவன்
செயற்கரிய பெருவேள்வி
யொருநூறுஞ் செய்தமைத்தான்.

'கயல் கடல் சூழ் உலகு எல்லாம்
கை நெல்லிக் கனி ஆக்கி,
இயற்கை நெறி முறையாலே
இந்திரற்கும் இடர் இயற்றி,
முயல் கறை இல் மதிக் குடையாய்!
இவர் குலத்தோன் முன் ஒருவன்,
செயற்கு அரிய பெரு வேள்வி
ஒருநூறும் செய்து அமைத்தான்.'

பொ :—முயலாகிய களங்கமற்ற சந்திரன் எனத்தகும் வெண் கொற்றக் குடையுடையாய்! இவன் குலத்துதித்த முன்னோ ஞெருவன், மீன்கள் வாழும் கடல் சூழ்ந்த உலகனைத்தையும், உள்ளங்கை நெல்லிக்கனி போன்று எளிதில் தன் வசமாக்கி, இந்திரனுக்கும் இடையூறு உண்டாகும்படி, பிறர் செயற்கரிய நூறு பெரிய வேள்விகளையும் செய்து முடித்தவன்.

கு :—'நூறு அசுவமேத யாகம் புரிந்தவன் இந்திரன் பதம் பெறுவான்' என்பதனுல், இந்திரனுக்கு இடையூருயிற்று. இவ்வாறு வேள்வி புரிந்தவன் சுதாசன் என்பர். நகுடன் என்பான் அவ்வரிய செயல் புரிந்து இந்திர பதம் பெற்றும் சாபத் தால் அப்பதவி யிழந்தவனுதலாலும், சந்திர வமிசத்தவனுக அவன் கூறப்படுதலாலும், சூரிய குலப் பெருமை கூற வந்த இடத்தில் அவனைக் கூறல் பொருந்தாதென்க. (10)

ரகு

731. சந்திரனை வென்றானு
முருத்திரனைச் சாய்த்தானும்
துந்துவெனுந் தானவனைச்
சுடுசரத்தாற் றுணித்தானும்
வந்தகுலத் திடைவந்த
ரகுவென்பான் வரிசிலையால்
இந்திரனை வென்றுதிசை
யிருநான்குஞ் செருவென்றான்.

'சந்திரனை வென்றானும், உருத்திரனைச் சாய்த்தானும்,
துந்து எனும் தானவனைச் சுடு சரத்தால் துணித்தானும்
வந்த குலத்து இடை வந்த ரகு என்பான், வரி சிலையால்
இந்திரனை வென்று, திசை இருநான்கும் செரு வென்றான்'

பொ :—சந்திரனை வென்றவனும், உருத்திரனைத் தோல்வியுறச் செய்தவனும், எரிக்கவல்ல தன் பாணத்தால் துந்துவெனும் அசுரனைக் கொன்றவனும் ஆகிய அரசர்கள் தோன்றிய இக் குலத்தில் பிறந்த ரகு என்ற மகாராசன், வரிந்து கட்டிய தன் வில்லால் தேவேந்திரனை வென்று திக்கெட்டிலும் போரில் வெற்றி கொண்டவன்.

கு :—சந்திரனை வென்றவன் 'சந்திரஜித்' என்பான் என்று திருவாலங்காட்டுச் செப்பேடும் கூறும். திலீபன் என்பான் சந்திரனை வென்றதனால் 'சந்திரஜேதா' எனப் பெயர் பெற்றனன் என்று கூறுவாரும் உளர். இனி, உருத்திரன் என்ற வலிமிக்க பகையரசனை வென்றவன் 'சத்தியவிரதன்' என்ற வேந்தன் என்றும் 'துந்து' என்ற அசுரனைக் கொன்றவன் 'துந்துமாரன்' என்பானென்றும் அப்பழைய செப்பேட்டிற் காணப்படுகின்றன. துந்துமாரனுக்குக் 'குவலயாசுவன்' என்பது பெயர் என்று விஷ்ணுபுராணம் கூறுகின்றது. (11)

அயன்

**732.** வில்லென்னு நெடுவரையால்
வேந்தென்னுங் கடல்கலக்கி
எல்லென்னு மணிமுறுவ
லிந்துமதி யெனுந்திருவை
அல்லென்னுந் திருநிறத்த
வரியென்ன வயனென்பான்
மல்லென்னுந் திரள்புயத்துக்
கணியென்ன வைத்தானே.

'வில் என்னும் நெடு வரையால் வேந்து என்னும் கடல் கலக்கி,
எல் என்னும் மணி முறுவல் இந்துமதி எனும் திருவை
அல் என்னும் திரு நிறத்த அரி என்ன, அயன் என்பான்
மல் என்னும் திரள் புயத்துக்கு, அணி என்ன வைத்தானே.'

போ :—இவர்குலத்துதித்த அயன் என்னும் அரசன், தன் வில் என்ற பெரிய (மந்தர) மலையால், பகையரசர்களான பாற் கடலைக் கலங்கச்செய்து, ஒளிமயமான முத்தையொத்த பல் வரிசைகளையுடைய இந்துமதி என்ற திருவை, இருளெனக் கறுத்த நிறமுள்ள திருமால்போல, வலிமையே வடிவாகிய திரண்ட தன் தோள்களுக்கு ஓர் அணிகலனாக அணிந்துகொண்டவன்.

கு :—பாற்கடலைக் கடைந்தருளிய அரியானவர், 'விண்ணவர் அமுதுண அமுதின்வந்த பெண்ணமுதை' அடைந்தவாறே, போர்க்கடலைக் கடைந்த அயனும் இந்துமதி என்ற திருமகளை அடைந்தான் என்றார். பாற்கடலைக் கடைந்து திருமகளைப் பெற் றவன் அரி. போர்க்கடலைக் கடைந்து இந்துமதியை அவ்வாறு பெற்றவன் அயன் என ஒரு கவி நயமும் இதனில் தோன்றுதல் காண்க. 'வாளாற் காய்ந்தே கடந்தான் பகைவேலை' (அரசியற் படலம். 5) என்பராதலின், 'வேந்தென்னுங் கடல் கலக்கி' என்றார். இந்துமதியை அவளது சுயம்வர காலத்தில் வேந்தர் பலருடன் போர்புரிந்து அடைந்தவன் அயமகாராசன் என்று இரகுவமிசம் கூறும். (12)

தசரதனும் அவன் திருக்குமாரர்களும்

**733.** அயன்புதல்வன் றயரதனை
யறியாதா ரில்லையவன்
பயந்தகுலக் குமரரிவர்
தமையுள்ள பரிசெல்லாம்
நயந்துரைத்துக் கரையேற
நான்முகற்கு மரிதாம்பல்
இயந்துவைத்த கடைத்தலையா
யானறிந்த படிகேளாய்.

**'அயன் புதல்வன் தயரதனை**
**அறியாதார் இல்லை; அவன்**
**பயந்த குலக் குமரர் இவர்**
**தமை உள்ள பரிசு எல்லாம்**
**நயந்து உரைத்துக் கரை ஏற**
**நான்முகற்கும் அரிது ஆம்; பல்,**
**இயம் துவைத்த கடைத்தலையாய்!**
**யான் அறிந்தபடி கேளாய்!'**

பொ :—பலவான வாச்சியங்களும் முழங்கும் (அரண்மனைத்) தலைவாயிலையுடைய சனகவேந்தே! (மேற்குறித்த) அயமகாராசன் புதல்வனான தசரத சக்கரவர்த்தியை அறியாதவர்கள் (உலகிடை) இல்லை. அச்சக்கரவர்த்தி பெற்ற சீரிய குமாரர்களான இவர்கட்குள்ள சிறப்பியல்புகள் முழுதும் விரும்பிக்கூறி, (இவரது புகழ்க் கடலின்) கரையையேறுதல் நான்முகக் கடவுட்கும் அரிதாம். (ஆயினும் அதனை) நான் அறிந்துள்ளவாறு ஒருவாறு சொல்லுவேன், கேட்பாயாக.

கு :—'நீ கேட்டதனால் ஒருபடியாகக் கூறுவேன்' என்பார் 'நான்முகற்குமரிது...யானறிந்தபடி கேளாய்' என்றும், நிகழ் காலத்துச் சக்கரவர்த்தி தசரதனாதலாலும் அவனது வீரச்செயல்களும் ஆட்சி யியல்பும் உலகறிந்தனவாதலாலும் 'தயரதனை அறியாதாரில்லை' என்றும் கூறினர். (13)

733 (a) அந்தரத்தி லுருள்சேர வடுசனிவந் துறுமளவில்
சிந்தைமகிழ் தசரதனும் சென்றவன்மேல் சரங்கள்
தொடுத்து
இந்தவழி போகரிதென் றியைந்தவனை யென்நாளும்
உந்துமென வுலகுதனக் குறுதுயர்தீர்த் திடுமுரவோன்

என்பது 14-வது பாடலாக 23, 27, 29, 43-ஆம் ஏடுகளில் காணப்படுகிறது.

### தசரதன் மகவின்றி வருந்தல்

**734.** துனியின்றி யுயிர்செல்லச்
சுடராழிப் படைவெய்யோன்
பனிவென்ற படியென்னப்
பகைவென்று படிகாப்போன்
தனுவன்றித் துணையில்லான்
றருமத்தின் கவசத்தான்
மனுவென்ற நீதியான்
மகவின்றி வருந்துவான்.

**'துனி இன்றி உயிர் செல்லச், சுடர் ஆழிப் படை வெய்யோன் பனி வென்ற படி என்னப், பகை வென்று படி காப்போன், தனு அன்றித் துணை இல்லான், தருமத்தின் கவசத்தான், மனு வென்ற நீதியான், மகவு இன்றி வருந்துவான்.'**

பொ :—மன்பதைகள் துன்பமின்றி வாழும்படி, சக்கராயுதம் போன்ற சூரியன் பனியாகிய பகையை வென்றதுபோலப் பகையரசர்களை வெற்றிகொண்டு உலகைக் காத்துவருபவனும், (அவ் வெற்றிக்குத்) தன் கைவில்லையன்றி வேறு துணையில்லாதவனும், மனுவினும் மேம்பட நீதி செலுத்துபவனும் ஆகிய அந்தத் தசரதன் மகப்பேறில்லாமல் வருந்துவானாயினன்.

கு :—சூரியனது தோற்றத்தினளவில் அவனது பனிப்பகை தானே ஒழிவதுபோலத் தசரதனது எழுச்சியினளவில் அவனது பகைவர் ஒழிவர் என்பார்—'வெய்யோன் பனிவென்ற படியென்னப் பகைவென்று' என்றார். சூரியனைப் பனிப்பகை என்ப; 'பனிப்பகை வானவன்' (மணிமேகலை 25, 86) என்றார் சாத்தனாரும்; 'சீத சத்துரு' என்பது வடநூல் வழக்கு (தக்க - பரணி, 485 உரை).

போர்நிகழ்ச்சிகளால் ஆன்மகோடிகள் அலைவுற்று வருந்தா வண்ணம் அவனது வெற்றியும் உலகாட்சியும் நிகழ்வனவாதலின், 'துனியின்றி உயிர் செல்ல...படிகாப்போன்' என்றும், பிறர் துணைகொண்டு நிகழ்வது அவன் கொற்றமன்று என்பார், 'தனுவன்றித் துணையில்லான்' என்றும், இவற்றையெல்லாம் தலை காப்பது அவன் புரிந்துவரும் அறச்செயல்களே என்பார், 'தருமத்தின் கவசத்தான்' என்றும், அவ்வறநெறிகளை மனுவினும் மேம்பட நடத்துபவன் என்பார், 'மனுவென்ற நீதியான்' என்றும், இத்தகைய உத்தம சக்கரவர்த்திக்கும் தவக்குறைவு ஒன்றிருந்தது என்று இரங்குவாராய், 'மகவின்றி வருந்துவான்' என்றும் கூறினர். (14)

### தசரதன் கலைக்கோட்டுமுனிவரை எண்ணுதல்

**735.** சிலைக்கோட்டு நுதற்குதலைச்
செங்கனிவாய்க் கருநெடுங்கண்
விலைக்கோட்டும் பேரல்குன்
மின்னுடங்கு மிடையாரை
முலைக்கோட்டு விலங்கென்றங்
குடனணுகி முன்னின்ற
கலைக்கோட்டுத் திருமுனியாற்
றுயர்நீங்கக் கருதினன்.

'சிலைக் கோட்டு நுதல் குதலைச்
செங்கனிவாய்க், கருநெடுங்கண்,
விலைக்கு ஓட்டும் பேர் அல்குல்,
மின் நுடங்கும் இடையாரை,
முலைக் கோட்டு விலங்கு என்று அங்கு
உடன் அணுகி, முன் நின்ற
கலைக்கோட்டுத்திருமுனியால்,
துயர் நீங்கக் கருதினன்.'

பொ :—விற்போலும் வளைந்த நெற்றியையும், மழலை மொழியுள்ள செங்கனிவாயினையும், கரிய நெடிய கண்களையும், விலைப் பொருட்டு விற்கும் பெரிய அல்குலையும், மின்னல்போலத் துவளும் இடையையும் உடைய பொதுமகளிரை, தனங்களாகிய கொம்புகளுடைய விலங்குகள் என்று கருதி, தன் ஆசிரமத்திருந்து அவருடன் கூடிவந்து,(உரோமபாத அரசனது) முன்பாக எழுந்தருளின 'கலைக்கோட்டு முனிவன்' என்ற இருடியால், மகப்பேறில்லாத துயரத்தினின்று நீங்க எண்ணினன்.

கு :—செங்கனிவாய் - கொவ்வைப்பழம் போன்ற சிவந்த அதரத்தையுடைய வாய். கலைக்கோட்டு முனிவன் என்பது தலையிற் கொம்புடைமைபற்றி வந்த பெயர்; 'ருசியசிருங்கர்' என்பது வடமொழி வழக்கு. விலைமாதருடன் இம்முனிவர் உரோமபாதரிடம் வந்த செய்தி திருவவதாரப் படலத்துக் கண்டது. தலையில் மான்கொம்புடைய தம்மைப்போல், மார்பில் விலங்குக் கொம்புடைய முனிவர்கள் இவரென்று விலைமாதரைக் கருதி, அவருடன் அரசனை அணுகினர் என்பது வரலாறு. நெற்றிக்கு வில் உவமையாதலை, 'வில்லொக்கு நுதலென்றாலும்' (ஆரணிய. மாரீசன் வதை. 74.) என்பதனாலும் அறிக. (15)

### தசரதன் கலைக்கோட்டுமுனியை வேண்டல்

**736.** தார்காத்த நறுங்குஞ்சித்
தனயர்களென் றவமின்மை
வார்காத்த வனமுலையார்
மணிவயிறு வாய்த்திலரால்
நீர்காத்த கடல்காத்த
நிலங்காத்தே னென்னிற்பின்
பார்காத்தற் குரியாரைப்
பணிநீயென் றடிபணிந்தான்.

'தார் காத்த நறுங்குஞ்சித் தனயர்கள், என் தவம் இன்மை
வார் காத்த வன முலையார் மணி வயிறு வாய்த்திலரால்,
நீர் காத்த கடல் காத்த நிலம் காத்தேன், என்னில் பின்,
பார் காத்தற்கு உரியாரைப் பணி நீ என்று அடி பணிந்தான்.'

பொ:—'பூமாலையணிந்ததும் மணமுள்ளதுமான மயிர்முடியுடையபுத்திரர்கள்,—முற்பிறப்பிற் செய்த தவப்பயன் எனக்கில்லாமையால், கச்சைக் காத்துநிற்கும் தனங்களையுடைய என் மனைவியரின் கருப்பத்தில் தோன்றினரில்லை; நீர்நிறைந்த கடல் சூழ்ந்த நிலவுலக முழுதும் ஆட்சிபுரிந்துவரும் எனக்குப் பின்பு, இவ்வுலகைக் காப்பதற்குரிய புத்திரரை நான் பெறும்படி அருள் செய்வீராக' என்று கூறி, அம்முனிவரது திருவடிகளை வணங்கினான்.

கு:—'கோசலைதன் மணிவயிறு வாய்த்தவனே' (பெருமாள் திருமொழி – 8, 1) 'மிதிலைச் செல்வி......திருவயிறு வாய்த்த மக்கள்' (ஷை 10-8) என்பவற்றால், 'தலைவியர்' சற்புத்திரரைக் கருப்பத்தில் கொள்ளுதல்' என்ற பொருளில், 'வயிறு வாய்த்தல்' என்ற தொடர் வழங்குதல் காண்க. (16)

## கலைக்கோட்டுமுனி வேள்வி தொடங்குதல்

737. அவ்வுரைகேட் டம்முனியு
மருள்சுரந்த வுவகையனாய்
இவ்வுலக மன்றியீ
ரேழுலகு மினிதளிக்கும்
செவ்வியிளங் குரிசிலரைத்
தருகின்றே னினித் தேவர்
வவ்விநுகர் பெருவேள்விக்
குரியவெலாம் வருகென்றான்.

அவ் உரை கேட்டு அம்முனியும்
அருள் சுரந்த உவகையனாய்,
'இவ் உலகம் அன்றி, ஈர்
ஏழ் உலகும் இனிது அளிக்கும்
செவ்வி இளங்குரிசிலரைத்
தருகின்றேன்; இனித் தேவர்
வவ்வி நுகர் பெரு வேள்விக்கு
உரிய எலாம் வருக' என்றான்.

போ :—(தசரதனது) அம்மொழியைக் கேட்டு, அந்தக் கலைக் கோட்டுமுனிவரும் கருணை சுரக்கும் மகிழ்ச்சியுடையராய், இப் 'பூவுலகொன்றுமட்டுமேயன்றிப் பதினுன்குலகங்களையும் இனிது காக்கும் சீரிய இளங்குமரர்களைத் தருவேன்; இனி, தேவர்கள் அவிர்ப்பாகங்களைப்பெற்று உண்பதற்குரிய பெரிய வேள்வியைப் புரிதற்கு உரிய பண்டங்கள் யாவும் இங்கு வந்துசேரக் கடவன' என்று கூறினர். (17)

## வேள்விக் குண்டத்தில் பூதம் தோன்றுதல்

**738.** காதலரைத் தரும்வேள்விக்
குரியவெலாங் கடிதமைப்ப
மாதவரிற் பெரியோனு
மற்றதனை முற்றுவித்தான்
சோதிமணிப் பொற்கலத்துச்
சுதையனைய வெண்சோறேர்
பூதகணத் தரசேந்தி
யனனின்றும் போந்ததால்.

'காதலரைத் தரும் வேள்விக்கு உரிய எலாம் கடிது அமைப்ப, மாதவரில் பெரியோனும், மற்று அதனை முற்றுவித்தான்; சோதி மணிப் பொன் கலத்துச் சுதை அனைய வெண் சோறு, ஓர் பூதகணத்து அரசு ஏந்தி, அனல் நின்றும் போந்ததால்.'

போ :—(சக்கரவர்த்தியும் அவ்வாறே) புத்திரகாமேட்டி யாகத்துக்குரிய பொருளெல்லாவற்றையும் விரைவாக அமைத்து வைக்க, மாதவரிற் பெரியோனான அம்முனிவனும் பின்பு அவ் வேள்வியை நிறைவேற்றிவைத்தான்; பூதகணங்களுள் அரச பூதமொன்று, அமுதம்போன்ற, வெண்ணிறமான பாயச உணவை ஒளிமணிகள் இழைத்த பொற்கலத்தில் ஏந்திக் கொண்டு அந்த வேள்வித் தீயினின்று வெளிப்பட்டது. (18)

### தசரதன் சுதையைத் தன் தேவியர்க்கு அளித்தல்

**739.** பொன்னின்மணிப் பரிகலத்திற்
புறப்பட்ட வின்னமுதைப்
பன்னுமறைப் பொருளுணர்ந்த
பெரியோன்றன் பணியினால்
தன்னனைய நிறைகுணத்துத்
தசரதனும் வரன்முறையால்
நன்னுதலார் மூவருக்கு
நாலுகூ றிட்டளித்தான்.

'பொன்னின் மணிப் பரிகலத்தில்
புறப்பட்ட இன் அமுதைப்,
பன்னும் மறைப் பொருள் உணர்ந்த
பெரியோன் தன் பணியினால்,
தன் அனைய நிறை குணத்துத்
தசரதனும், வரன்முறையால்,
நல் நுதலார் மூவருக்கும்
நாலு கூறு இட்டு அளித்தான்.'

பொ :—பொன்னால் இயற்றப்பட்ட மணிகள் பதித்த பாத்திரத்தில் வெளிப்பட்ட இனிய அமுதை, சிறப்பித்துக்கூறும் வேதப் பொருள்களை உணர்ந்த அக் கலைக்கோட்டுமுனிவரின் கட்டளைப் படி, தன்னைத்தானே ஒத்த நிறைகுணங்களை உடைய தசரதனும், மணந்தமுறைப்படி தேவியர் மூவருக்கும் நாலுபாக மாக்கி அளித்தான்.

கு :—தன் அனைய நிறை குணத்து - நிறை குணத்தால் தனக்குத்தானே ஒப்பான என்றபடி. அமுதை மூன்று பங்காகப் பிரித்துத் தேவியர் மூவர்க்கும் கொடுத்துப் பின் சிதறி எஞ்சிய பாகத்தை இளந்தேவிக்கு அளித்தான் என்பர் (திருவவதாரம்-92). (19)

### கௌசலை இராமனைப் பெறுதல்

**740.** விரிந்திடுதீ வினைசெய்த
வெவ்வியதீ வினையாலும்
அருங்கடையின் மறையறைந்த
வறஞ்செய்த வறத்தாலும்

இருங்கடகக் கரதலத்திவ்
வெழுதரிய திருமேனிக்
கருங்கடலைச் செங்கனிவாய்க்
கௌசலையென் பாள்பயந்தாள்.

'விரிந்திடு தீவினை செய்த வெவ்விய தீவினையாலும்,
அரும் கடை இல் மறை அறைந்த அறம் செய்த அறத்தாலும்,
இரும் கடகக் கரதலத்து இவ் எழுதரிய திருமேனிக்
கருங்கடலைச், செங்கனி வாய்க் கௌசலை என்பாள் பயந்தாள்.'

பொ:—பரவியுள்ள பாவங்கள் பண்ணிய கொடிய பாவச் செயலாலும், முடிவில்லாத வேதங்கள் கூறிய தருமங்கள்புரிந்த புண்ணியச் செயலாலும் கோவைக் கனிபோலும் வாயுடைய கோசலாதேவி (என்ற முதன் மனைவி) யானவள், பெருங்கடக அணிபூண்ட கைத்தலங்களையும் ஓவியம் வல்லாரும் எழுத ஒண்ணாத திருமேனியையுமுடைய நீலக்கடல்போல விளங்கும் இங்குள்ள மூர்த்தியைப் பெற்றெடுத்தாள்.

கு:—விரிந்திடு தீவினை செய்த தீவினை—அரக்கர் போல்வார் புரிந்த தீச்செயல்கள். அறஞ்செய்த அறம்—தேவர் போல்வார் புரிந்த நற்செயல்கள். சீதாபிராட்டியும் இவ்வாறே 'தவஞ் செய்த தவமாந்தையல்' (சுந்தர. திருவடி தொழுத படலம். 64) என்று சிறப்பிக்கப்படுதல் காண்க. அருங்கடையின்—முடிவு இல்லாத; அருமை—இன்மைப்பொருளது, வடநூல் முடிபு. அரிய வேதத்தின் முடிவான உபநிடதம் எனினுமாம். கோசிக முனிவர் இராமன்பாற் பேரன்புததும்பப் பேசிய வசனங்கள் இப்பாடலில் திகழ்தல் காணத்தகும். (20)

## கைகேயி பரதனைப் பெறுதல்

**741.** தள்ளரிய பெருநீதித்
தனியாறு புகமண்டும்
பள்ளமெனுந் தகையானைப்
பரதனெனும் பெயரானை
எள்ளரிய குணத்தாலு
மெழிலாலு மிவ்விருந்த
வள்ளலையே யனையானைக்
கேகயர்கோன் மகள்பயந்தாள்.

'தள் அரிய பெரு நீதித் தனி ஆறு புக மண்டும்
பள்ளம் எனும் தகையானைப், பரதன் எனும் பெயரானை,
எள் அரிய குணத்தாலும் எழிலாலும், இவ் இருந்த
வள்ளலையே அனையானைக், கேகயர் கோன் மகள் பயந்தாள்.'

பொ :—விலக்கற்கரிய உத்தமநீதி என்ற பேராறு பள்ள மடையாக மண்டிவந்து பாயும் கடல் என்று சொல்லத்தக்க தன்மையுடையவனும், இகழ்வற்ற நற்குணங்களாலும் அழ காலும் இங்குள்ள இராமபிரானையே ஒத்தவனும் ஆகிய பரதன் என்ற பெயருள்ள குமரனைக் கேகயன் மகளான கைகேயி என் பாள் பெற்றாள். (21)

## சுமித்திரை இலக்குமண சத்துருக்கனரைப் பெறுதல்

**742.** அருவலிய திறலினரா
யறங்கெடுக்கும் விறலரக்கர்
வெருவருதிண் டிறலார்கள்
வில்லேந்து மெனிற்செம்பொன்
பருவரையு நெடுவெள்ளிப்
பருப்பதமும் போல்வார்கள்
இருவரையு மிவ்விருவர்க்
கிளையாளு மீன்றெடுத்தாள்.

'அரு வலிய திறலினராய், அறம் கெடுக்கும் விறல் அரக்கர்
வெரு வரு திண் திறலார்கள், வில் ஏந்தும் எனில் செம்பொன்
பரு வரையும் நெடு வெள்ளிப் பருப்பதமும் போல்வார்கள்
இருவரையும், இவ் இருவர்க்கு இளையாளும் ஈன்றெடுத்தாள்.'

பொ :—அடைதற்கரிய வலிமையும் வெற்றித்திறனுமுடைய வர்களாய், வீரம்வாய்ந்த அரக்கர் அஞ்சும்படியுள்ள பெருந்திறல் படைத்தவர்களும், செம்பொன்மயமான மேருமலையும் சிறந்த வெள்ளிமயமான கயிலாய மலையும் விற்களை ஏந்தி நிற்குமாயின் அவற்றை ஒப்பவர்களுமான (இலக்குமணன் சத்துருக்கனன் என்ற) புத்திரர்கள் இருவரையும் (மேற்கூறிய) இரண்டு தேவி யர்க்கும் இளையவளான சுமித்திரையும் பெற்றெடுத்தாள்.

கு :—இலக்குமணன் திருமேனி பொன்னிற மாதலை, 'வடவரை யுடன்வரு செயலென' (திருவவ. 134) 'விற்கை வடவரை' (யுத்த 4-132) என்பவற்றாலும், சத்துருக்கனன் திருமேனி வெண்மைநிறமாதலை, 'முத்துருக் கொண்டு செம் முளரி யலர்ந்தால்' (திருவவ. 123) என்பதனாலும் அறிக. (22)

## புதல்வர்களின் வளர்ச்சி

**743.** தலையாய பேருணர்விற்
கலைமகட்குத் தலைவராய்ச்
சிலையாயுந் தனுவேதந்
தெவ்வரைப்போற் பணிசெய்யக்
கலையாழிக் கதிர்த்திங்க
ளுதயத்திற் கலித்தோங்கும்
அலையாழி யெனவளர்ந்தார்
மறைநான்கு மனையார்கள்.

**'தலை ஆய பேர் உணர்வின் கலைமகட்குத் தலைவராய்ச்,
சிலை ஆயும் தனுவேதம் தெவ்வரைப்போல் பணிசெய்யக்,
கலை ஆழிக் கதிர்த் திங்கள் உதயத்தில், கலித்து ஓங்கும்
அலை ஆழி என, வளர்ந்தார், மறை நான்கும் அனையார்கள்.'**

பொ:—வேதங்கள் நான்கினையும் ஒத்த அக்குமரர் நால்வரும், கலைகளின் உயரிய உண்மைப்பொருள்களை உணர்தலில் நாமகளுக்கும் மேம்பட்டவர்களாய், வில்வித்தையை ஆராய்ந்து கூறும் தனுர்வேதமானது, பகைவர்கள் (தமக்குப் பணிந்து குற்றேவல் செய்வது) போல ஏவல் புரியும்படி, கலைகளின் நிறைவும் வட்டவடிவும் ஒளியுமுடைய பூரணசந்திரனது உதய காலத்தில் முழங்கிப் பொங்கும் அலைகடல்போல் வளர்ந்து வந்தார்கள்.

கு:—கோசிக முனிவர் இராமபிரானுக்குப் படைக்கல முதலியவற்றை மந்திரங்களுடன் அளித்தபோது அவை, 'மேவினம் பிரிதலாற்றேம் வீரநீ விதியின் எம்மை, ஏவின செய்து நிற்றும்' என்றன—என்ற வேள்விப்படலப் பாடல் (3) இங்கு ஒப்பிடத் தகும். (23)

## புதல்வரின் வேத முதலிய கலைப்பயிற்சி

**744.** திறையோடு மரசிறைஞ்சுஞ்
செறிகழற்காற் றசரதனும்
பொறையோடுந் தொடர்மனத்தான்
புதல்வரெனும் பெயரேகாண்

உறையோடு நெடுவேலா
யுபநயன விதிமுடித்து
மறையோது வித்திவரை
வளர்த்தானும் வசிட்டன்காண்.

'திறையோடும் அரசு இறைஞ்சும்
செறி கழல் கால் தசரதனும்
பொறையோடும் தொடர் மனத்தான்
புதல்வர் எனும் பெயரே காண்?
உறை ஓடும் நெடு வேலாய்!
உபநயன விதி முடித்து,
மறை ஓதுவித்து, இவரை
வளர்த்தானும் வசிட்டன் காண்.'

போ:—(போரின்மையால்) உறையில் சென்று கிடக்கும் நீண்ட வேற்படையுடையாய்! திறைப்பொருளுடன் வந்து அரசர்கள் வணங்குதற்குரியவனும், செறிந்த வீரக்கழலணிந்த காலையுடையவனுமான தசரதன் என்ற பொறுமை தொடர்ந்த மனமுடைய சக்கரவர்த்தியின் புதல்வர்கள்—என்ற பெருமை மட்டுமோ? விதிப்படி உபநயனச் சடங்கை முடித்து, வேதங்களைக் கற்பித்து இன்னோரை வளர்த்துவந்தவனும் வசிட்டமா முனிவனே.

கு:—இவர்களைப் பெற்றபேறு தசரதனதாயினும் இவர்களை வளர்த்துவந்த ஞானத்தந்தை வசிட்ட பகவானே என்றபடி. மறை - மற்றக் கலைகட்கும் உபலட்சணம். இங்கே, 'வசிட்டன் காண்' என்று தனக்கும் வசிட்டனுக்கும் முன்பு உண்டான பகைமையுணர்ச்சி யொழிந்து, வசிட்டன் பெருமையை உள்ளவாறு உணர்ந்து விசுவாமித்திரன் பாராட்டும் நிலை போற்றத் தக்கது. (24)

## இராமலக்குமணர்கள் தன் வேள்வி காத்தமை கூறல்

**745.** ஈங்கிவரா லென்வேள்விக்
கிடையூறு கடிதியற்றும்
தீங்குடைய கொடியோரைக்
கொல்விக்குஞ் சிந்தையனாய்ப்

பூங்கழலார்க் கொண்டுபோய்
வனம்புக்கேன் புகாமுன்னம்
தாங்கரிய பேராற்றற்
ருடகையே தலைப்பட்டாள்.

'ஈங்கு இவரால் என் வேள்விக்கு
இடையூறு கடிது இயற்றும்
தீங்கு உடைய கொடியோரைக்
கொல்விக்கும் சிந்தையனுய்ப்,
பூங்கழலார்க் கொண்டுபோய்
வனம் புக்கேன், புகாமுன்னம்
தாங்கு அரிய பேர் ஆற்றல்
தாடகையே தலைப்பட்டாள்.'

பொ :—எனது யாகத்துக்குப் பெருந்தடைகளை விரைந்து செய்யும் தீமையுடைய கொடிய அரக்கரைக் கொல்விக்குங் கருத்துடையனுய், பூத்தொழிலமைந்த கழலுடைய இவர்களை அழைத்துக்கொண்டு என் தபோவனத்துட் புகுந்தேன்; புகுவதற்கு முன்பே, பிறரால் எதிர்த்துத் தாங்கமுடியாத பெருவலி படைத்த தாடகை என்ற அரக்கியே முதலில் எதிர்நோக்கி வருவாளாயினள்.

கு :—பூங்கழல் – பூத்தொழில் அமைந்த வீரக்கழல். இளைஞர்களாயினும் பெருவீரமுடையவர்கள் என்பார் 'பூங்கழலார்' என்ருர் ; பூப்போலும் பாதங்களுடையாரெனின், கல்லுமுள்ளுஞ் செறிந்த காட்டில், இவ்விளைஞர்களைப் பகைவெல்ல வேண்டி, வழிநடத்தலானேன் என்று இரங்கிக் கூறியவாரும். எவளைக் குறிக்கொண்டு சென்ருேமோ அவளே முதலில் எதிர்ப்பட்டாள் என்றது வீரத்திறத்தில் இவர்கள் தெய்வ பலமும் படைத்தவர்கள் என்பதைப் புலப்படுத்தும். (25)

## இராமன் தாடகைமேல் எய்த அம்பின் சிறப்பு

746. அலையுருவக் கடலுருவத்
தாண்டகைதன் னிண்டுயர்ந்த
நிலையுருவப் புயவலியை
நீயுருவ நோக்கையா

உலையுருவக் கனலுமிழ்கட்
டாடகைதன் னுரமுருவி
மலையுருவி மரமுருவி
மண்ணுருவிற் றொருவாளி.

'அலை உருவு அக் கடல் உருவத்து
ஆண்டகைதன் நீண்டு உயர்ந்த
நிலை உருவப் புய வலியை
நீ உருவ நோக்கு, ஐயா!
உலை உருவக் கனல் உமிழ் கண்
தாடகைதன் உரம் உருவி,
மலை உருவி, மரம் உருவி,
மண் உருவிற்று ஒரு வாளி'

பொ:—அரசே! அலைமோதும் அந்தக் கடல்போலும் கரிய திருமேனியனும் ஆண்டகையுமான இவனது நீண்டுயர்ந்தனவும், இயற்கையழகு நிலைகொண்டனவுமான தோள்களின் வலிமையை நீயே கூர்ந்து பார்ப்பாயாக. இவன் எய்த அம்பு ஒன்றே, உலைக் களத்துச் செந்நிற நெருப்பைப்போலச் சினத்தீயைப் பொழியும் கண்களையுடைய தாடகையின்மார்பினைத் துளைத்து அடுத்த மலைகளையும் துளைத்துப் பின் மரங்கள் பலவற்றையும் துளைத்து அடுத்து (வேறு பொருளின்மையால்) பூமியையே துளைத்துப் பாய்வதாயிற்று.

கு:—பல பொருள்களையும் துளைத்தோடும்படி அம்பு எய்யும் விற்றிறமையை 'வல்வில்' என்ற அடைமொழியாற் சிறப்பிப்பர் முன்னோர்; 'வல்விலிராமனிடம்' (பெரியதிரு-5-1-4) 'வல்விலோரி' (புறநா) என்பன காண்க. அக்கடல் உலகறிசுட்டு. (26)

**தாடகை மக்களின் மறைவு**

**747.** செக்கர்நிறத் தெரிகுஞ்சிச்
சிரக்குவைகள் பொருப்பென்ன
உக்கனவோ முடிவில்லை
யோரம்பி னெடுமரக்கி
மக்களிலங் கொருவன்போய்
வான்புக்கான் மற்றையவன்
புக்கவிட மறிந்திலேன்
போந்தனனென் வினைமுடித்தே.

'செக்கர் நிறத்து எரி குஞ்சிச் சிரக் குவைகள் பொருப்பு என்ன
உக்கனவோ முடிவு இல்லை ; ஓர் அம்பினொடும், அரக்கி
மக்களில் அங்கு ஒருவன் போய் வான் புக்கான் மற்றையவன்
புக்க இடம் அறிந்திலேன், போந்தனன் என் வினை முடித்தே'

பொ :—செவ்வானின் நிறங்கொண்டு தீப்போலத் தோற்றும் செம்மயிருள்ள அரக்கர் தலைக் குவியல்கள் (அப்போது) மலை போல அறுபட்டு விழுந்தனவோ அளவில்லை ; (போர்க்களத்தே) அரக்கி மக்களில் ஒருவனான சுபாகு என்பான், ஓரம்பினால் மாண்டு மேலுலகம் சென்றான். மற்றொரு மகனான மாரீசன் என்பான், (இவனெய்த அம்பால்) போனவிடம் தெரியவில்லை. (இவ்வாறு எனக்கிருந்த இடையூறு அகற்றப்பட்டபின்) என் யாககாரியத்தை முடித்துக்கொண்டு இங்கு வரலானேன். (27)

### இராமன் படைக்கலங்களின் சிறப்பு

**748.** ஆய்ந்தேற வுணரைய
வயற்கேயு மறிவரிய
காய்ந்தேவி லுலகனைத்துங்
கடலோடு மலையோடும்
தீந்தேறச் சுடுகிற்கும்
படைக்கலங்கள் செய்தவத்தால்
ஈந்தேனு மனமுட்க
விவற்கேவல் செய்குநவால்.

'ஆய்ந்து ஏற உணர் ஐய! அயற்கேயும் அறிவு அரிய;
காய்ந்து ஏவில், உலகு அனைத்தும் கடலோடும் மலையோடும்
தீந்து ஏறச் சுடுகிற்கும் படைக்கலங்கள், செய் தவத்தால்
ஈந்தேனும் மனம் உட்க, இவற்கு ஏவல் செய்குந ஆல்'

பொ :—பிரமதேவனாலும் அறிதற்கரிய (இவன்) அருமை பெருமைகளை ஆராய்ந்து நன்குணர்வாயாக ! சினத்துடன் ஏவினால் இவ்வுலகமட்டுமன்றி எல்லாவுலகங்களையும் கடல்களுடனும் மலைகளுடனும் கரிந்துபோம்படி எரிக்கவல்ல படைவகைகள், என் தவப்பேற்றால் அளித்திட்ட யானும் மனம் வெள்கும்படி இத் திருமகற்கு ஏவல்செய்கின்றன.

கு :—யான் கற்றும் பெற்றும் போந்த விற்கலைகள், முடிவில் என் தவப்பேறாகவே இவனைச் சார்ந்தன என்பார்,

" செய்தவத்தா லிந்தேனும் " என்றும், இத்தன்மையையும் நீயே ஆலோசித்து முடிவுகாண்பாயாக என்பார், 'ஆய்ந்து ஏற உணர்' என்றும் கூறினர். எல்லாவற்றையும் சுட்டெரிக்கவல்ல படைக் கலங்களை என் தவத்திறமையால் புதியவாகப் படைத்த யானும் என்று பொருள் கூறினும் அமையும். (28)

## இராமனின் மேன்மை

**749.** கோதமன்றன் பன்னிக்கு
முன்னையுருக் கொடுத்ததிவன்
போதுநின்ற தெனப்பொலிந்த
பொலன்கழற்காற் பொடிகண்டாய்
காதலென்ற னுயிர்மேலு
மிக்கரியோன் பாலுண்டால்
ஈதிவன்றன் வரலாறும்
புயவலியு மெனவுரைத்தான்.

'கோதமன்தன் பன்னிக்கு
முன்னை உருக் கொடுத்தது இவன்
போது நின்றது எனப் பொலிந்த
பொலன் கழல் கால் பொடி கண்டாய்!
காதல் என் தன் உயிர் மேலும்
இக்கரியோன் பால் உண்டு ஆல்;
ஈது இவன்தன் வரலாறும்
புயவலியும்' என உரைத்தான்.

பொ :—'(எப்போதும் ஒருபடியாக) நிற்கும் தாமரைபோற் பொலியும் பொற்கழலமைந்த இத்திருமகனது திருவடித்துகளே கௌதம பத்தினியான அகலிகைக்கு அவளது பழைய வடிவத்தை அருளியது; இதனை நன்கறிவாயாக; எனது உயிரைக் காட்டிலும் இக் கார்வண்ணனிடம் எனக்குக் காதல் (பெரிதும்) உண்டு. இப்பெருமகனது திவ்விய சரித்திரமும் திருத்தோள் வலிமையும் இவையே' என்று (கோசிக முனிவன்) கூறிமுடித்தான்.

கு :—தன் பத்தினி இழைத்த பெருந்தவற்றுக்குப் பரிகாரம், பரமபுருடனது பாததூளே யன்றி வேறில்லை யென்பதை உணர்ந்தே பெருமுனிவரான கோதமர் அத்தகைய சாப நீக்கம் அளித்தவர் என்பதும், அதனால் அப்பெருமானது அவதார

உண்மையையும் அவர் நன்குணர்ந்தவர் என்பதும் பெறப்படும். படவே, அகலிகையின் கொடும்பாவத்துக்கு அவ்வவதார மூர்த்தி எழுந்தருளுமளவும் நெடுங்காலம் காத்துக் கிடக்கும்படி சாப விமோசனத்தை முனிவர் அளித்தார் என்க. சாபம் நீங்கவே குற்றமற்ற பழைய தன்னுருவை அகலிகை அடையலாயினள் என்னுங் கருத்தால் 'கோதமன்றன் பன்னிக்கு முன்னையுருக் கொடுத்தது' என்றும், 'பிரம இருடி' என்ற பெரும்பேற்றைத் தான் பெறினும், அது பரமனிடம் அமையும் பத்தித்திறத்தாலும் அவனது பேரருளாலும் அன்றிப் பயன்பெறுதாகலின் 'காத லென்ற னுயிர்மேலும் இக்கரியோன் பாலுண்டால்' என்றும், மகாஞானியான உனக்கு இவை அறியக்கூடியனவே என்பார் 'முன்னையுருக்கொடுத்தது...காற்பொடி கண்டாய்' என்று நினை வுறுத்தியும் கூறினர். பன்னி - பத்தினி என்பதன் திரிபு. காதல்- பத்திமை ; 'காதலால் நெஞ்ச மன்பு கலந்திலேன்' (திருமாலை, 26), 'அருங்காதலிற் பெரியவன்' (எதிர்கொள். 27) எனக் காண்க.

(29)

குலமுறை கிளத்து படலம் முற்றிற்று.

# 12. கார்முகப் படலம்

கார்முகப் படலம் என்பதற்கு வில்லைப்பற்றிய கதைப் பகுதி என்பது பொருள். கார்முகம்-வில்; ஈண்டுச் சிவதனுசை உணர்த்தும். சிவபிரானது வில்லை இராமபிரான் எடுத்து நாணேற்றும் போது, அது முறிபட்ட செய்தியும் பிறவும் இப்பகுதியில் விரிக்கப் படுகின்றன.

மேற் படலத்தில், சூரிய வமிசத்து முன்னோரான பேரரசர் பெருமைகளை சனகராசன் அவையில் கூறிவந்த விசுவாமித்திர முனிவர், அக்குலத்தில் அவதரித்த இராம லக்குமணர்களின் அருமை பெருமைகளையும் கூறத் தொடங்கி, இன்னோர் தசரத குமாரர்கள் என்றும் ''நின் வேள்வி காணிய வந்தார் வில்லும் காண்பார்'' என்றும் கூறினரன்றோ! அச்சனகன், தான் தொடங்கிய பெரு வேள்வியை நிறைவேற்றியபின் முனிவர் முதலியோர் சூழ வீற்றிருந்த சமயம், அது. இராம லக்குமணர்களும் அவ்வேள்வி முற்றுப்பெற்றபோது அதனை நேரில் கண்டவர்களே. முற்கூறியபடி, 'வேள்வி காணிய வந்தார்' என்ற யாககாரியம் இப்போது நிறைவேறிவிட்டது. இனி, 'வில்லும் காண்பார்' என்பதே எஞ்சி நிற்பது. சனகன் உள்ளத்தில் இவையிரண்டும் நன்கு பதிந்திருந்தமையால், வில்லைப்பற்றிக் கூறத் தொடங்கி, அவ்வரசன்,

''மாற்றம்யா துரைப்பது மாய விற்குநான்
தோற்றவா றெனமனந் துளங்கு கின்றதால்
நோற்றனள் நங்கையு நொய்தின் ஐயன் வில்
ஏற்றுமே லிடர்க்கட லேற்றும்.''

என்று, முனிவரர் உசாவிய மற்றொரு பகுதிக்கு விடை கூறுபவனானான். கோக்குமரனான இராமன் ஆற்றல் அழகுகளைக் கண்டு வியந்த அவ்வரசன், 'இத்தகைய உத்தம நாயகன் தன் புத்திரிக்கு வாய்ப்பனோ? வில்லேற்றும் வல்லமை உடையவன் போலவும் தோற்றுகின்றனனே' என்ற எண்ணம் தூண்ட, அச்சிவ தனுசையே தன் அவைக்குக் கொண்டுவரும்படி உடனே கட்டளை யிட்டுவிட்டனன். அறுபதினாயிர வீரர்களால் தறியில் மடுத்துத் தண்டுகளில் தாங்கியவண்ணம், அவன் அவைமுன் அது கொண்டுவரப்பெற்றது. இச்செய்தி நகர முழுதும் நொடிப்பொழுதிற் பரவியது. அதுபற்றிப் பற்பலவாறு மக்கள் பேசலாயினர். அவையிலிருந்த அரசர்களும் பிறரும் 'இதனை

எடுத்து வளைப்பவன் எவனோ?' என்ற ஐயமும் அச்சமும் அடைந்தனர்.

இந்த நிலையில், இராமனுடைய தோற்றப்பொலிவையும், இடையே கிடந்த வில்லின் பெருமையையும், கன்னியான சீதையின் இளமைக் கட்டழகையும் நினைந்திருந்த சனகனது உள்ளக் குறிப்பை அவன் குல குருவான சதானந்த முனிவர் தெரிந்துகொண்டு அடியில் வருமாறு பேசலானார் :—

'முனிவர்பெருமானே! ஒருகாலத்தில் உமாதேவியை இகழ்ந்தவனான தட்சப்பிரசாபதி புரிந்துவந்த வேள்வியை அழித்துவிட எண்ணிய சிவபிரான், இந்த வில்லைத் தாங்கியவண்ணம் அவன் வேள்விச்சாலைக்குச் சென்றார். சினத்துடன் வந்த அவர் அங்கே வேள்வி உணவைப் பெற வந்திருந்த தேவர்களைச் சிதறியோடச் செய்தனர். அதனால், அவ்வேள்வி முற்றும் அழிந்தொழிந்தது. சிவபிரானும் சினமாறித் தாம் ஏந்தி வந்த வில்லினை எனது குலத்து முன்னோன் ஒருவனிடம் ஒப்படைத்துவிட்டுச் சென்றனர். யாவும் உணர்ந்த நீவிரும் இச் செய்தியை நன்கறிவீர், இது நிற்க,

இந்தச் சனகனுக்குப் புதல்வியாக வந்த பெண்மணியின் வரலாற்றையும் சொல்ல விரும்புகிறேன் ; கேண்மின்.

யாகம் புரியவேண்டி நிலத்தில் கலப்பைகளைக் கொண்டு பல சால்களாக முன்பு நாங்கள் உழச் செய்தோம். பூமிதேவியின் உருவமே வெளிப்பட்டதுபோல, திருமகளினும் மேம்பட்ட கட்டழகுடன் பெண்ணரசி யொருத்தி உழுத அக்கொழுமுகத்தினின்று உதித்தனள். அழகாலும் குணச் சிறப்புக்களாலும் இவள் ஒப்புயர்வற்றவளாய் இவ்வரசனால் வளர்க்கப்பெற்று வந்தாள். இவளது தோற்றத்தால், முன்பு உத்தம மங்கையர் பலர் அடைந்திருந்த பெரும் புகழ்களும் மங்கலாயின. ஆகவே, பூவேந்தரெல்லாரும் இவளைக் காதல் புரிபவராய்த் திருமணம் புரிய விரும்பி எங்களிடம் மகட்பேச வரலாயினர். இவ்வாறு வேந்தரெல்லாம் ஒருங்கே இவளை விரும்புதலறிந்து, இச்சிவதனுசைக் கன்னியாசுற்கமாக வைத்து, 'இதனை எடுத்து வளைப்பவனே இந்நங்கைக்குரிய மணமகனவன்' என்று உறுதி கூறி, இந்த வில்லை இடையில் அமைத்துவிட்டேம். இவ்வருஞ் செயலை முடித்தற்குச் சிறிதும் ஆற்றாதவர்களாய் அவ்வரசரெல்லாம் ஒருங்கு திரண்டு, இவ்வேந்தனோடு பெரும்போர் புரியலானார்கள். அதனால் எங்கள் சேனை யாவும் சுருங்கவும், பகையரசர்களின் படைகள் பெருகவும் நேர்ந்தன. இஃதறிந்த தேவர்கள், சனகன் சேனைகளின் மெலிவுக்கு இரங்கி, வேண்டிய படைகளையளித்து

உதவ, அஃதறிந்த வேந்தர்கள் அனைவரும் அஞ்சியொடுங்கி விட்டனர். அதற்குப் பின், அவர்களுள் எவரும், இந்தச் சிவதனுசின் பக்கமும் நாடவில்லை. இந்தப் பிரதேசத்தையே எட்டிப் பார்த்தவருமல்லர்' என்று வில் வரலாற்றுடன் இணைந்த சானகியின் செய்திகளையும் கூறிமுடித்தனர் சதானந்தர்.

இவையே கார்முகப் படலத்தின் முற்பகுதி வரலாறு. இச் சரிதத்தைச் சொற்செறிவு பொருட்பொலிவுகளுடனும் சிறிய உவமைகளுடனும் செவ்விய மதுரம் சேர்ந்த கவிகளாற் கம்பநாடர் கூறும் திறம் படிக்கப் படிக்கத் தெவிட்டாததாகும்.

இக்கதைக் கூறு பெரும்பாலும் முன்னூலோடு மாறுபட்ட தன்று என்றே சொல்லலாம், எனினும் இவற்றிலும் ஒருசில வேறுபாடுகள் காணப்படுகின்றன.

வடமொழி இராமாயணத்தில், கௌதமாச்சிரமத்திலிருந்து மிதிலை சென்ற முனிவர் முதலிய மூவரும் சனகனது யாகசாலைக்கு அருகே ஏகாந்தமானதோரிடத்தில் தங்க, அவர் வருகையறிந்த சதானந்தர், சனகராசனுடன் வந்து முகமனும் உபசாரங்களும் வழங்கியதோடு, விசுவாமித்திரரின் வரலாறுகளையும் மகிமைகளையும் விரித்து உரைக்க, யாவரும் கேட்டு வியப்பும் உவப்பும் அடைந்தனர் என்றும், மறுநாட் காலை யாகசாலைக்கே அம்மூவரும் எழுந்தருளுமாறு அரசன் வேண்டிக்கொண்டபடி, சென்றனர் என்றும், அப்போது சனகனது வேள்வி முடிய மேலும் பன்னிரண்டு நாட்களிருந்தன என்றும் கூறப்படுகின்றன. பின் சனகவேந்தன், அம்மூவரும் வந்த காரியம்பற்றி விசுவாமித்திரரை உசாவ, அவர் அவ்வரசன்பாலுள்ள சிவதனுசை இராமபிரான் காண விரும்புவதாகக் கூறவே, ஆற்றல் மிக்க பல்லாயிரவரால் அந்த வில் சகடங்களில் ஏற்றி இழுத்துவரப்பட்டதென்றும், அரசவைக்கு அது வந்தபின், விசுவாமித்திரர் இராமனை அழைத்து 'ஐய! இதனை நோக்குவாயாக!' எனலும் அப்பெருமானும் அதனையணுகி வில்லிருந்த இருப்புப் பெட்டியைத் திறந்து 'இதனைத் தொட்டுப் பார்க்கிறேன்; வளைப்பதற்கும் முயல்வேன்' என்று கூறினர் என்றும், பின் சனகன் அனுமதி பெற்று வில்லின் நடுப்பகுதியைப் பிடித்து எடுத்து வளைத்து நாணேற்றி இழுக்க, பேரொலியுடன் அந்தச் சிவதனுசு இடையில் முறிந்து விழுந்தது என்றும் கூறுவர் வால்மீகிபகவான்.

அன்றியும், அவ்வில் அவையில் வருவதற்கு முன்பே அதன் வரலாற்றையும் சீதையின் செய்திகளையும் சனகனே முனிவர் முதலியோர் கேட்கக் கூறினன் எனவும், அப்பெரிய வில் பெரியதோர் இருப்புப்பெட்டியில் கொணரப்பட்டது என்றும்,

அஃது எட்டுச் சக்கரமுடைய சகடத்தில் ஏற்றப்பட்டு வலிமிக்க ஐயாயிரவரால் இழுத்துவரப்பட்டதென்றும் வான்மீகம் கூறு கின்றது.

கம்பரோ, சனகன் யாகத்தை முடித்துக்கொண்ட அன்றே, அவன் வீற்றிருந்த பேரவையில் வில் கொணரப்பட்டது என்றும், அதன் வரலாறுகளை அவன் குலகுருவான சதானந்தரே கூறினர் என்றும், உடல்வலி படைத்த அறுபதினுயிரவரால் அது தறியிற் கட்டித் தண்டுகளால் தாங்கிவரப்பட்ட தென்றும் கூறுகின்றுர். இவையே வான்மீகத்துக்கும் கம்ப-ராமாவதாரத்துக்கும் உள்ள வேறுபாடுகள்.

இனி வரும் நிகழ்ச்சிகள் கம்பநாடரது உள்ளத்தில் அருமை யாகத் தோன்றிய கற்பனைக் காட்சிகளேயாகும். சதானந்தர், வில்லின் வரலாற்றையும் சீதையின் செய்திகளையும் கூறிவிட்டு,

‘என்றுமினி மணமுமிலை என்றிருந்தேம் இவனேற்றின்
நன்று, மலர்க் குழற்சீதை நலம் பழுதாகாது’

என்று கூறி முடித்தனர். இவ்வாறு கூறியதும்,

‘நினைந்து முனி பகர்ந்தவெலாம் நெறியுன்னி அறிவனுந்தன்
புனைந்தசடை முடிதுளக்கிப் போரேற்றின்முகம் பார்த்தான்’

என்று வில் முறிவின் கதையைத் தொடங்குகின்றுர் நம் புலவர். ‘பேரரசர் பலர் திரண்டு சாதிக்க முடியாத அரும்பெருஞ் செயலை இவ்விளங் குமரனே முடிக்க வல்லவன்’ என்ற குறிப்பு, ‘இவன் ஏற்றின் நன்று’ என்ற சதானந்தர் கூற்றுல் புலனுயிற்று, அதனுல் விசுவாமித்திரர் தம் ‘சடைமுடி துளக்கிப் போரேற்றின் முகம்’ பார்க்கலானுர். அவர்க்குச் சதானந்தர் கூறிய மொழி களில் உள்ளம் கவியவில்லை. அதனுல் புறக்கணித்தவர்போலவே அவர் தம் தலையை அசைத்தார்போலும்! அசைத்துவிட்டு விசயராகவனுன அவ்விளந் தோன்றலின் திருமுகத்தைப் பார்க்க லானுர் அம் முனிவரர். அப்போது அவரது திருவுளத்தில் ஓடிய தெல்லாம் நன்கு அறிந்துகொண்டனன் இராமபிரான். உடனே அருகிற் கிடந்த அச்சிவதனுசைத் தான் இருந்த நிலையிலே நிமிர்ந்து நோக்கலாயினன் அவன். நோக்கியது மட்டுமோ? உடனே அவன் எழுந்து நின்றுன். பெருவேள்வியின் இறுதியில், ஒருசேரப் பொழியப்படும் பூரணுகுதி, அவ்வேள்வித்தீயிற் பட்டமாத் திரத்தில் அதன் சுவாலைகள் பொங்கியெழுவதுபோல் ஆயிற்று அவன் நின்ற நிலை என்று, படம் பிடித்ததுபோலச் சித்திரித்துப் பாடுகின்றுர் கம்பநாடர். இராமனது எழுச்சி பொலிவுகளுக்கு

எல்லா நன்மைகளையும் அளிக்கவல்ல பூரணாகுதியால் எழுந்த அங்கியை அவர் உவமித்திருப்பது சந்தர்ப்பத்திற்குப் பெரிதும் ஏற்றதன்றோ! சனகனது வேள்வியிறுதியில் நிகழ்ந்த இவ்வாகுதியின் பெருமையை இராமலக்குமணர்களும் நேரில் அறிந்தவர்கள் என்பதும், இதுவே பின் நிகழ இருக்கும் சீதா கல்யாணத்துக்கு அறிகுறி என்பதும் இங்கே குறிப்பிடத்தக்கன. இவ்வாறு இருந்த நிலையில் பெருமான் வில்லை நிமிர்ந்து நோக்கியதும், பின் எழுந்து நின்ற பொலிவும் கண்ட நகர மாதரெல்லாம் காதல் வெள்ளம் கரைபுரண்டோடத் தம்முள் பலபடியாகப் பேசிக் கொள்ளலானார்கள். பின்பு அவ்வில்லின் பக்கம் இராமபிரான் சென்ற கம்பீர நடையழகை,

‘மாக மடங்கலும் மால் விடையும் பொன்
நாகமு நாகமு நாண நடந்தான்’

என்று சிறப்பிக்கின்றார் கவியரசர். அவன் நடந்து சென்றதுதான் தாமதம். உடனே அருகிற் கிடந்த சிவதனுசை அப்பெருமான் தம் கரதலத்தால் எடுத்து நிறுத்தியும்விட்டார். இதற்குக் கம்பராற் கூறப்படும் உவமையழகு ஓர் அற்புதம் வாய்ந்தது எனலாம். சீதையெனும் பெண்ணுக்குச் சூட்டிட நீட்டும் ஏடவிழ்மாலையிது என்று கண்டோர் யாவரும் கருதும்படி, எளியதாகவும் இன்பம் பயப்பதாகவும் இருந்தது என்று புலவர் பாடுவது படிப்போர் உள்ளங்களைக் கொள்ளைகொள்வதாகும். இவ்வுவமையால், தான் மணமாலை சூட்டப்போவதற்கு மூல காரணமாக நின்றது அவ்வில்லே என்பதும் அதனை வளைக்க முடியாதாயின், பிராட்டியுடன் சேர்தலும் கூடாதது என்பதும் இனிது புலப்படுமன்றோ! இவ்வாறு வில்லெடுத்ததைக் கண் கொட்டாமற் கண்டு அதிசயித்திருந்த மக்களின் செவிகளில் திடீரென்று பேரொலியொன்று இடிபோல விழுந்தது. வில்லைப் பெருமான் தூக்கி நிறுத்தியதற்கும் எழுந்த அப்பேரொலிக்கும் இடையே நிகழ்ந்த செயல்கள் இன்ன என்பதை அவையோர் எவருமே அறிந்தவரல்லர். வில்லை இராமன் அடியால் மிதித்ததும் நாணேற்றியதும் ஆகிய அவ்விடை நிகழ்ச்சிகள் இமைப்பொழுதுக்குள் நடந்தேறிவிட்டமையால் ஒருவருமே அவற்றை அறியக்கூடவில்லை. ஆகவே, ‘எடுத்ததுகண்டனர் இற்றது கேட்டார்’ என்கின்றார் கவியரசர். அதிவேகத்தில் நடந்தேறிய செயல்களை அதே வேகத்தில் ஒரு கவியுள் முடித்து உணர்த்திய இப்புலவரது ஆற்றல், இராமபிரானது செயலைப்போலவே அதிசயிக்கத்தக்கதன்றோ?

இனி, வில் முறிந்த பேரோசை முதலில் மக்கட்கெல்லாம் அச்சத்தை உண்டாக்கினும் பின்பு பெருமகிழ்ச்சியே

விளைத்தது. நாடும் நகரமும் அதுவே பேச்சாக ஆயிற்று. இங்கே, விண்ணவரும் மண்ணவரும் அடைந்த மகிழ்ச்சிக் கொண்டாட்டங்கள் பல, கவிகளாற் புனையப்படுதல் காணலாம்.

மேற்கூறிய செய்திகளையெல்லாம் கன்னிமாடத்தில் தனித்திருந்த பெண்ணரசி எங்ஙனம் அறியக்கூடும்? அவள் பெருமானைக் கண்டதுமுதல், விரகதாபமடைந்து அவனைப் பற்றிய சிந்தனைக் கடலிலே ஆழ்ந்து தத்தளித்துக் கொண்டிருந்தாள். இச்செய்திகளும் புலவர் வாக்கினின்றே அறிந்து மகிழத்தக்கன. இவ்வாறு சானகி இருந்த நிலையில், சனகரது வேள்விச்சாலையிலிருந்து அதிவேகமாக ஓடிவந்தாள் ஒருத்தி. சானகிக்கு அன்புமிக்க சேடி அவள். நீலமாலை என்பது அவள் பெயராம். முடித்த கூந்தலும் உடுத்த ஆடைகளும் நெகிழ அலங்கோலமாக ஓடிவந்த அவள் சீதையை அணுகி, வழக்கப்படி புரியும் மரியாதைகளையும் செய்யாமல் ஆரவாரத்துடன் ஆடுவதும் பாடுவதுமாயிருந்தாள். 'சுந்தரீ! உன் மகிழ்ச்சிக்குக் காரணம் யாது?' என்று தலைவியான சானகி பலமுறை கேட்டபோது அவளும் உணர்ச்சியுற்று, சானகியைத் தொழுதவண்ணம் 'தசரத சக்கரவர்த்தியின் திருக்குமரனும், இராமனென்பது அவன் திருநாமமாம்; மன்மதனினும் மேம்பட்ட வடிவழகுடையவன், திருமாலோ என்று ஐயமுறத் தக்கவன். தன் தம்பியுடனும் விசுவாமித்திர முனிவருடனும் நகரடைந்து நம் அரசனையணுகி, சிவதனுசைப் பார்க்க விருப்பம் என்று கூறவே அரசன் ஆணையால் உடனே அவ்வில் தருவிக்கப்பட்டது. மாத்திரையளவில் அதனை எடுத்து வளைத்தான் அவ்விளங்தோன்றல். அது இடையில் முறிந்துவிழுந்தது. உலகமெல்லாம் பெரிதும் வாழ்த்தலாயிற்று. என்ன பேரதிசயம்!' என்று கூறி முடித்தாள் அச்சேடி.

இவை கேட்டதும் முனிவருடனும் தம்பியுடனும் வந்தவன் என்றதனுலும், கமலக்கண்ணனும் மேகவண்ணனுமான திருமாலோ என்று ஐயுறக் கூடியவன் என்றதனுலும், 'கன்னிமாடத்தருகில் இன்று காலையில் தான் கண்ட பெருமகனே அவன்' என்று தன் ஐயம் நீங்கியவளானுள் சானகி. ஒருகால் அவனல்லாது போனுல், என் உயிரைத் துறப்பேன் என்று உறுதியும் பூண்டாள் அவள்.

இங்கே பிராட்டியின் விரகதாப நிகழ்ச்சிகளும் மேற்கூறிய நீலமாலை கூற்ருல் நிகழ்ந்தனவும் நம் கவியரசரால் கூறப்படும் அழகு நாம் சொல்லும் திறத்தன அல்ல.

இனி, வில் வளைக்கப்பட்டு முறிந்ததனுல் உண்டான ஆனந்தப் பெருங்கடலில் திளைத்திருந்த சனகமகாராசன் விசுவாமித்திரரை

நோக்கி, 'எம்பெருமானே! உம்முடைய புத்திரனது திருமணப் பெருவிழாவை இன்று ஒரு பகலிலே முடித்துவிடத் திருவுள் ளமோ? தந்தையான சக்கரவர்த்தியையும் அழைத்துவந்து நடத்தத் திருவுள்ளமோ' என்று உசாவ, 'தந்தையான தயரத னும் வந்து நடைபெறுதலே நலம்' என்று முனிவரர் கூறினர். உடனே இங்கு நடந்த அரும் பெரும் செயல்களை யெல்லாம் சக்கர வர்த்திபக்கல் சென்று கூறும்படி சொல்லித் திருமண ஓலையையும் தூதுவர் மூலம் கொடுத்து விடுத்தான் சனக மன்னன் என்பது இப்படலத்தின் சரித்திரச்சுருக்கம்.

இக்கதா பாகத்தின் பிற்பகுதி யாவும் வான்மீகத்தில் காணப் படாதவையாதலால், மிதிலைக் காட்சியிற்போலவே, கம்பர் பெருமானது கற்பனைக் களஞ்சியத்தினின்று எடுத்துச் சமைத்த அமுத உணவே இவை என்பது தெரியலாம். அதனுல் முன்னைப் படலம்போல நாடக உருவில் அமைந்ததே இக்கார்முகப் படல மும் என்பது நன்கு விளங்கும்.

---

# 12. கார்முகப் படலம்.

## சனகனின் விருப்பம்

750. மாற்றம்யா துரைப்பது மாய விற்குநான்
★ தோற்றவா றெனமனந் துளங்கு கின்றதா ல்
நோற்றன ணங்கையு நொய்தி னையன்வில்
ஏற்றுமே லிடர்க்கட லேற்று மென்றனன்.

"மாற்றம் யாது உரைப்பது? மாயவிற்கு நான்
தோற்ற ஆறு என, மனம் துளங்குகின்றது ஆல்,
நோற்றனள் நங்கையும், நொய்தின் ஐயன் வில்
ஏற்றுமேல், இடர்க்கடல் ஏற்றும்" என்றனன்.*

பொ :—(சனகன் கோசிக முனிவரை நோக்கி) தேவரீர் மொழிந்தவற்றுக்கு மறுமொழியாக யானுரைக்கக் கூடியது யாதுளது? (எவரையும் அணுக வொட்டாமற் செய்யும்) மாயத் தன்மையுடைய இவ்வில்லுக்கு, நான் தோற்றபடி என்று என்மனம் கலங்குகின்றது. ஐயனுன இக்குமாரன் சிவதனுசை விரைந்து வளைத்து நாண் ஏற்றுவானாயின், என் புத்திரியும் நோற்ற பயன் பெற்றவளாவள்; என்னையும் துயர்க்கடலினின் றும் கரையேற்றியவனாவன்.

கு :—மாற்றம் - மறுமொழி. 'வில்லை வளைப்பவற்குப் பெண் ணைக் கொடுப்பேன்' என்ற தன் உறுதிமொழியை, எவரும் அணுக வொட்டாமல், வளைத்தற்கரியதாகச் செய்யும் இவ் வில்லானது தடுத்துநிற்கின்றமையின் 'மாயவிற்கு' என்றான். அதனால், என் பெண் புரிந்த நோன்பு பயன் பெறாமலும், யானும் பெருங்கவலை நீங்காமலும் ஆயினேம், என்பது பின் இரண்டடிகளின் கருத்து, விசுவாமித்திரன் 'வில்லுங்காண்பார்' என்றதற்கு, சனகன் கூறிய விடை இஃது என்க. (1)

---

* 4 என்னும் குறியீடுள்ள சுவடியில் இச்செய்யுளுடன் முதல் முறை கிளத்துபடலம் முற்றுப் பெற்றுளது.

**சனகன் பணியாளரை ஏவ அவர்கள் விற்சாலையை அணுகல்**

**751.** என்றன னேன்றுதன் னெதிர்நின் ருரையக்
குன்றுறழ் வரிசிலை கொணர்மி னீண்டென
நன்றென வணங்கினர் நால்வ ரோடினர்
பொன்றிணி கார்முகச் சாலை புக்கனர்.

**என்றனன், ஏன்று தன் எதிர் நின்றுரை, 'அக்**
**குன்று, உறழ் வரி சிலை கொணர்மின் ஈண்டு' என,**
**' நன்று' என வணங்கினர், நால்வர் ஓடினர்,**
**பொன் திணி கார்முகச்சாலை புக்கனர்.**

பொ :—என்று கூறினவனுய், தன் கட்டளையை ஏற்றுத் தன் எதிர் நின்ற ஏவலாளரை நோக்கி, ' மலையையொத்த அந்தக் கட்டமைந்த (சிவ)தனுசை இங்கே கொணருங்கள்' என்று ஆணையிட, ' நல்லது ' என்று கூறி வணங்கினராய்' அவர்களுள் நால்வர் விரைந்து சென்று, பொன்னிழைத்த அவ்வில் வைக்கப்பட்டுள்ள சாலையுட் புகுந்தார்கள்.

கு :—' நன்று ' என்பது அரசன் பணியை ஏற்று ஏவலாளர் கூறும் ஓர் மரியாதைச் சொல். (2)

751 (a) புக்கவர் சனகர்கோன் பொருவி லிங்கடாம்
ஒக்கவே வில்லினை யுருத்த டுத்தெடுத்
திக்கணத் தெய்துவீ ரென்ற னன்னென
மிக்ககா வலர்க்கிவை விளம்பி னரரோ

என்பது 3-ஆம் பாட்டாக 28, 29-ஆம் ஏடுகளிற் காணப் படுகின்றது.

**சிவதனுசைப் பலர் சுமந்து வருதல்**

**752.** உறுவலி யானையை யொத்த மேனியர்
செறிமயிர்க் கல்லெனத் திரண்ட தோளினர்
அறுபதி னுயிர ரளவி லாற்றலர்
தறிமடுத் திடையிடை தண்டிற் ருங்கினர்.

**உறு வலி யானையை ஒத்த மேனியர்,**
**செறி மயிர்க் கல் எனத் திரண்ட தோளினர்,**
**அறுபதினுயிரர், அளவு இல் ஆற்றலர்,**
**தறி மடுத்து இடையிடை தண்டின் தாங்கினர்.**

பொ :—(அவ்வேவலாளர் தெரிவித்தபடி) பெருவலி கொண்ட யானையை ஒத்த திடசரீரம் படைத்தவர்களும், குன்றுபோல் திரண்டு மயிர் செறிந்த தோளினரும், அளத்தற்கரிய ஆற்றலுடையருமான அறுபதினுயிரவர் இடையிடை வில்லிடைகளில் தம்பங்களை வைத்துப் பெருந்தண்டுகளிற் கட்டி அதனைத் தாங்கி வந்தார்கள், (3)

752 (a) புக்கன ரவர்களைப் பொருந்த நோக்கியும்
முக்கணன் வில்லினை மொய்ம்பி னுற்றலோ
டிக்கணத் தளித்தியென் றெம்மை யாளுடை
மிக்குயர் சனகனும் விளம்பி னனரோ.

என்பது 26 என்னும் குறியீடுள்ள சுவடியில் அடுத்துக் காணப்படுகின்றது.

## சிவதனுசு சனகன் திருமுன் வந்து சேர்தல்

**753.** நெடுநில மகண்முது காற்ற நின்றுயர்
தடநிமிர் வடவரை தானு நாணுற
இடமிலை யுலகென வந்த தெங்கணும்
கடல்புரை திருநக ரிரைத்துக் காணவே.

நெடுநிலமகள் முதுகு ஆற்ற நின்று உயர்
தடம் நிமிர் வடவரை தானும் நாண் உற,
இடம் இலை உலகு என வந்தது, எங்கணும்
கடல்புரை திருநகர் இரைத்துக் காணவே.

பொ :—பெரிய இப்பூமிதேவி முதுகின் நோவை ஆற்றிக் கொள்ளவும், நிலைபெற்றோங்கும் பெரிய மேருமலையும் (இதன் தோற்றத்தைக்கண்டு) நாணமுறவும், கடல் போலும் நகர மக்கள் திரண்டு இரைச்சல் செய்து காணும்படியும், உலகில் எங்குமே இடமில்லை என்னும்படி அச் சிவதனுசு (கொணரப் பட்டு) வந்தது.

கு :—நெடுங்காலமாக அச்சிவன் வில்லைத் தாங்கி நின்றதனால், நோவுற்ற பூமிக்கு இளைப்பாற இடமுண்டாயிற்றென்பார், 'நெடு நில மகள் முதுகாற்ற' என்றார். (4)

## மிதிலை மக்கள் கூற்று 754—758

754. சங்கொடு சக்கரந் தரித்த செங்கையச்
சிங்கவே றல்லனே லிதனைத் தீண்டுவான்
எங்குள னொருவனின் றேற்றி னிச்சிலை
மங்கைதன் றிருமணம் வாழுமா லென்பார்.

'சங்கொடு சக்கரம் தரித்த செங்கை அச்
சிங்க ஏறு அல்லனேல் இதனைத் தீண்டுவான்
எங்கு உளன் ஒருவன்? இன்று ஏற்றின் இச்சிலை,
மங்கைதன் திருமணம் வாழுமால்' என்பார்.

பொ:—சங்கு சக்கரங்களைத் தாங்கும் செம்மையான கைகளை யுடைய ஆண் சிங்கம் போன்ற திருமாலே யல்லாமல், இதனைத் தீண்டுதற்கும் தகுதியுள்ள ஒருவன் எங்கே யுள்ளான்? (அத்திரு மாலே வந்து) இந்த வில்லை இன்று நாணேற்றி வளைப்பானுயின், சீதாபிராட்டியின் திருமணம் நல்வாழ்வு பெறும் என்று கூறினர் (சிலர்).

கு:—சங்குசக்கரக் குறியுள தடக்கையில் தாளில் (கிட்கிந்தா - நட்புக் - 79) என்று அப்பெருமான் கூறப்படுதல் காண்க. அ, உலகறிசுட்டு. 'சிங்கவேறு - திருமால்; இராமபிரான் எனினு மாம். இப்போது கோசிக முனிவர் அழைத்து வந்த இளங் குமரன், திருமாலாயிருப்பின் இது, கைகூடுதலும் பிராட்டி நன்மணம் பெறுதலும் ஆம் என்பது கருத்து, 'என்று மினி மணமுமிலை யென்றிருந்தேம் இவனேற்றின் நன்றுமலர்க் குழற் சீதை நலம் பழுதாகாது' எனப் பின்வரும் சனகன் கூற்றும் ஒப்பிடத்தக்கது. (5)

755. கைதவந் தனுவெனல் கனகக் குன்றென்பார்
எய்தவன் யாவனோ வேற்றிப் பண்டென்பார்
செய்ததத் திசைமுகன் றீண்டி யன்றுதன்
மொய்தவப் பெருமையின் முயற்சி யாலென்பார்

'கைதவம் தனு எனல், கனகக் குன்று' என்பார்;
'எய்தவன் யாவனோ ஏற்றிப் பண்டு?' என்பார்;
'செய்தது அத் திசைமுகன் தீண்டி அன்று, தன்
மொய் தவப் பெருமையின் முயற்சியால்' என்பார்.

பொ :—(இதனை) வில்லென்று சொல்லுதல் வஞ்சனைச் சொல்லே; மேருமலையே இஃது என்பாரும், முற்காலத்தில் நாணேற்றி இதனை எய்தவன் யாவனோ என்பாரும், பிரமதேவன் இதனை இயற்றியது தன் கையால் தீண்டி அன்று, மற்றுத் தனது நிறைந்த பெரிய தவத்தின் மகிமையால் என்பாரும் ஆயினர். (6)

756. திண்ணெடு மேருவைத்
திரட்டிற் றோவென்பார்
வண்ணவான் கடல்பண்டு
கடைந்த மத்தென்பார்
அண்ணல்வா ளரவினுக்
கரச னோவென்பார்
விண்ணிடு நெடியவில்
வீழ்ந்த தோவென்பார்.

'திண் நெடு மேருவைத் திரட்டிற்றோ? என்பார்;
'வண்ண வான் கடல் பண்டு கடைந்த மத்து' என்பார்;
'அண்ணல் வாள் அரவினுக்கு அரசனோ?' என்பார்;
'விண் இடு நெடிய வில் வீழ்ந்ததோ?' என்பார்.

பொ :—வலிய நெடிய மேருவையே திரட்டிச் செய்ததோ என்பார் (சிலர்), அழகிய பாற்கடலைப் பண்டு கடைந்த மத்தான மந்தரமலையே இஃது என்பார் (சிலர்), பெருமை பொருந்திய ஒளியுள்ள பாம்பரசனான ஆதிசேடனோ என்பார் (சிலர்), வானில் இடுகின்ற இந்திரவில்லே தவறிக் கீழ் விழுந்ததோ என்பார் சிலர்.

கு :—'அரவின் தோற்றமே போலுஞ் சிலை' (சீவக – 2158) என்பதனால் பாம்பு விற்குவமையாதல் காண்க. (7)

757. என்னிது கொணர்கென
வியம்பி னானென்பார்
மன்னவ ருளர்கொலோ
மதிகெட் டாரென்பார்

முன்னையூழ் வினையினுன்
முடிக்க லாமென்பார்
கன்னியு மிச்சிலை
காணு மோவென்பார்.

'என் இது கொணர்க என இயம்பினுன் ?' என்பார்;
'மன்னவர் உளர்கொலோ மதி கெட்டார் ?' என்பார்;
'முன்னை ஊழ் வினையினுல் முடிக்கல் ஆம்' என்பார்;
'கன்னியும் இச்சிலை காணுமோ ?' என்பார்.

பொ :—''எதற்காக 'இந்தவில்லைக் கொணர்க' என அரசன் கட்டளையிட்டான்'' என்பாரும் (வில்லைவளைக்க விரும்பிய) 'மதி கெட்ட அரசர் மற்றும் உளரோ' என்பாரும், 'முற்பிறப்பிற் செய்த நல்வினையால் வளைத்தலும்' கூடும் என்பாரும், 'கன்னியான சீதையும் இந்த வில்லைக் காணக்கூடுமோ' என்பாரும் (ஆயினர்).

கு :—இரண்டாம் அடிக்கு இந்த வில்லைக் கன்னியா சுற்கமாக வைத்த இவனைப்போல மதிகெட்ட அரசர் உளரோ என்று உரைகூறலும் ஆம். வளைக்கப்படாது கிடக்கும் இதனைச் சீதை கண்டறிந்தால் கதிகலங்குவளே என்பது இறுதியடியின் கருத்து. (8)

758. இச்சிலை யுதைத்தகோற் கிலக்கம் யாதென்பார்
நச்சிலை நங்கைமே ஞட்டு வேங்தென்பார்
நிச்சய மெடுக்குங்கொ னேமி யானென்பார்
சிற்சிலர் விதிசெய்த தீமை தானென்பார்.

'இச்சிலை உதைத்த கோற்கு இலக்கம் யாது ?' என்பார் ;
'நச்சு இலை நங்கைமேல் நாட்டு வேந்து' என்பார்;
'நிச்சயம் எடுக்குங்கொல் நேமியான் ?' என்பார்
'சிற்சிலர் விதிசெய்த தீமைதான்' என்பார்.

பொ :—சிற்சிலர், 'இந்த வில்லால் ஏவப்பட்ட அம்புக்குக் குறியாக அமைவது யாதோ,' என்பவரும், சிற்சிலர், 'நாட்டு அரசனுக்குத் தன் பெண்ணிடம் விருப்பமில்லை' என்பவரும், சிற் சிலர், 'திருமாலும் இதனை நிச்சயமாக எடுக்க வல்லனே' என்பவரும், சிற்சிலர், 'ஊழ்வினை செய்த தீமையே இஃது' என்பாரும் ஆயினர்.

கு :—நாட்டு வேந்துக்கு என்ற நான்கனுருபு, செய்யுள் விகாரத்தால் தொக்கது; 'ஐந்தவித்தானாற்றல்' என்புழிப் போல, (குறள் - 25 - பரிமே - உரை) 'நாட்டும் வேந்து என்பது பாடமாயின். தன் மகள் மேல் (பணையமாக இதனை) அரசன் நாட்டுகின்றான்; அவள்பால் (அவனுக்கு) விருப்பமில்லை எனப் பொருள் கொள்க, சிற்சிலர் என்பது முன்னும் கூட்டப் பட்டது. (9)

759. மொய்த்தன ரின்னண மொழிய மன்னன்முன்
உய்த்தனர் நிலமுது குளுக்கிக் கீழுற
வைத்தனர் வாங்குந ரியாவ ரோவெனுக்
கைத்தலம் விதிர்த்தனர் கண்ட_ வேந்தரே.

மொய்த்தனர் இன்னணம் மொழிய, மன்னன் முன்
உய்த்தனர், நிலம் முதுகு உளுக்கிக் கீழ் உற
வைத்தனர்; 'வாங்குநர் யாவரோ?' எனுக்
கைத்தலம் விதிர்த்தனர், கண்ட வேந்தரே.

பொ :—(அங்கே கூடியிருந்த) மிதிலைமக்கள் இவ்வாறு பல படியாகச் சொல்லாநிற்க, (ஏவலாளர்கள் அந்த வில்லை) சனக ராசன் முன் கொணர்ந்து, பூமி தாங்கமாட்டாமல் நெளிந்து கீழேயுறும்படி நிலத்தில் பொருந்த வைத்தார்கள். பார்த்திருந்த அரசர்கள் இந்தவில்லை வளைக்கப் போகிறவர் யாவரோ? என்று சொல்லிக் கையை உதறினர். (10)

760. போதக மனையவன் பொலிவு நோக்கியவ்
வேதனை தருகின்ற வில்லை நோக்கித்தன்
மாதினை நோக்குவான் மனத்தை நோக்கிய
கோதமன் காதலன் கூறன் மேயினான்

போதகம் அனையவன் பொலிவு நோக்கி, அவ்
வேதனை தருகின்ற வில்லை நோக்கித், தன்
மாதினை நோக்குவான் மனத்தை நோக்கிய,
கோதமன் காதலன், கூறல் மேயினான்.

பொ :—இளம்பருவத்து யானையை ஒத்த இராமனது திருமுகப் பொலிவை (ஒருபுறம்) பார்த்து (மறுபுறம்)

துன்பம்தருகிற வில்லின் தன்மையையும் பார்த்து, சீதையின் நிலைமையையும் சிந்தித்து நின்ற சனகனது மனக்கலக்கத்தைக் கண்ட கோதமபுத்திரனுன சதானந்தமுனிவன் (இடைநின்று) சொல்லத்தொடங்கினுன்.

கு :—'போதக மணியவன் பொலிவு நோக்கி' என்றது, வில்லினைக் கண்ட வேந்தரெல்லாம் அஞ்சிக் கைவிதிர்த்து நின்றனராக, இராமனது பேரழகும் முகப்பொலிவும் திகழு மாற்றைக் கண்டு என்றபடி. 'தன் மாதினை நோக்குவான் மனம்' என்றது, தன் அருமைப் பெண் கன்னியாகவே மூத்துக்கழிய நேருமோ என்ற மனக்கவலை குறிக்கும்; இவை யாவும் உள்ளூறக் குழப்ப முண்டாக்கிச் சனகனை ஒன்றுங் கூற வொட்டாமற் செய்தமையின், இவற்றை அறிந்த சதானந்தர் இடைநின்று கோசிகர்க்கு அவ்வில்லின் வரலாறு கூறுவா ராயினர் என்க. (11)

761. இமையவில் வாங்கிய வீசன் பங்குறை
உமையினை யிகழ்ந்தன னென்ன வோங்கிய
கமையறு சினத்தனிக் கார்மு கங்கொளாச்
சமையுறு தக்கனுர் வேள்வி சாரவே.

'இமையவில் வாங்கிய ஈசன், பங்கு உறை
உமையினை இகழ்ந்தனன் என்ன, ஓங்கிய
கமை அறு சினத்தன், இக் கார்முகம் கொளாச்,
சமையுறு தக்கனுர் வேள்வி சாரவே.'

பொ :—மேருமலையை வில்லாக வளைத்த சிவபிரான், தன் இடப்பக்கத்து வாழும் உமாதேவியை அவமதித்தான் என்று கருதிப் பொங்கியெழுந்த பொறுமையற்ற சினத்தனுய், இந்த வில்லினைக் கையிற்கொண்டு தக்கன் வேள்வி புரிதற்கு அமைந்த யாகசாலையை நோக்கிச் சார.

கு :—மந்தரம், இமயம், கயிலாயம் என்பவற்றை மேருவுடன் வேறுபாடின்றியே கூறுவது நூல்வழக்காகும். 'இமயவில் வாங்கிய ஈர்ஞ்சடை யந்தணன்' (கலித் - 3) என்ருர் முன்னோரும். (12)

**762.** உக்கன பல்லொடு கரங்க ளோடினர்
புக்கனர் வானவர் புகாத சூழல்கள்
தக்கனல் வேள்வியிற் றழலு மாறின
முக்கணெண் டோளவன் முனிவு மாறினன்.

'உக்கன பல்லொடு கரங்கள், ஓடினர்,
புக்கனர் வானவர் புகாத சூழல்கள்.
தக்கன் நல் வேள்வியில் தழலும் ஆறின,
முக்கண் எண் தோளவன் முனிவும் ஆறினன்.'

பொ:—(அந்தத் தக்க யாகம் நடைபெறற்கு உதவிய) தேவர்கள் பற்களும் கைகளும் உடைந்தும் அறுபட்டும் போக ஓடலாயினர்; (வேறு) தேவர்கள் தாம் முன் சென்றறிந் திராத இடங்களிற் புகுந்து பதுங்கினர்; தக்கனது உயர்ந்த வேள்விக் குண்டங்களிலிருந்த அக்கினிகளும் ஆறின. அதனால் மூன்று கண்களும் எண்டோள்களுமுடைய சிவபிரான் தன் சினமும் ஆறலானன்.

கு:—பல் உக்கது பகன் என்ற சூரியனுக்கு, கரங்களற்று வீழ்ந்தது அக்கினிதேவனுக்கு என்பர். தக்கயாக அழிவின் சரித்திர விரிவு, கந்தபுராணம், தக்கயாகப் பரணி முதலிய நூல்களிற் காண்க. வானவர் இடைநிலை விளக்கு. (13)

**763.** தாளுடை வரிசிலை சம்பு வும்பர்தம்
நாளுடை மையினவர் நடுக்க நோக்கியிக்
கோளுடை விடையனன் குலத்துட் டோன்றிய
வாளுடையுழவனோர் மன்னன் பால்வைத்தான்.

'தாள் உடை வரி சிலை, சம்பு, உம்பர்தம்
நாள் உடைமையின், அவர் நடுக்கம் நோக்கி, இக்
கோள் உடை விடை அனன் குலத்துள் தோன்றிய
வாள் உடை உழவன் ஓர் மன்னன்பால் வைத்தான்.'

பொ:—(சினமாறிய) சிவபிரான், தேவர்கள் அஞ்சி நடுங்கு தலை உணர்ந்து, அவர்களின் ஆயுட்காலம் நீண்டிருந்ததனல், அடித் தண்டினையுடைய கட்டமைந்த அவ்வில்லினை, வலிமை யுடைய இடபம் போன்ற இச் சனகராசன் குலத்தில் தோன்றியவனும், பகைக்களத்தில் வாளாகிய ஏர்கொண்டு உழுபவனுமான அரசன் ஒருவனிடம் கொடுத்துவைத்தான்.

கு :—சிவபிரானால் வில் அளிக்கப் பெற்றவன் தேவராதன் என்ற அரசன் என்பர். கோபம் ஆறாமல் வில்லை அப்பெருமானே தரித்திருப்பின், தேவர்கள் அழிந்திருப்ப ராதலால், 'சினம் ஆறி மன்னர்பால் வைத்தான்' எனப்பட்டது. போர்க்களமாகிய கழனிகளில் வாளாகிய ஏரினைக் கொண்டு உழுபவன் என்பது 'வாளுடையுழவன்' என்ற தொடர்க்குப் பொருள். 'வாளேருழவ' என்று புறநானூற்றிலும் (368) வருதல் காண்க, 'வில்லே ருழவர் 'சொல்லேருழவர்' என்று திருக்குறளில் (882) வருவன வும் ஒப்பிடத்தகும். (14)

### சானகியின் வரலாறு

764. கார்முக வலியையான் கழறல் வேண்டுமோ
வார்சடை யரனிகர் வரத நீயலால்
யாருள ரறிபவ ரிவற்குத் தோன்றிய
தேர்முக வல்குலாள் செவ்வி கேளென்றா.

'கார்முக வலியை யான் கழறல் வேண்டுமோ?
வார் சடை அரன் நிகர் வரத! நீஅலால்
யார் உளர் அறிபவர்? இவற்குத் தோன்றிய
தேர்முக அல்குலாள் செவ்வி கேள்!' என்றா.

பொ :இந்த வில்லின் வலிமையை யான் எடுத்துக்கூறவும் வேண்டுமோ? நீண்ட சடைமுடியுடைய (அச்) சிவபிரானை ஒத்த முனிவரனே? நீ அல்லாமல் இதன் பெருமையை உண்மையாக அறியவல்லவர் எவருளர்? இச் சனகமாராசனுக் குப் புத்திரியாக அவதரித்த - தேர்த்தட்டுப் போலும் அரைப் பக்கமுடைய சீதையின் வரலாற்றைக் கேட்பாயாக என்று சொல்லி.

கு :—குளகம். வில்லை அளித்த சிவபிரான் அனைய நீயே, அவ் வில்லை வளைப்பிக்கவும் சானகியின் திருமணம் நிறைவேற்றி வைக்க வும் அருள்புரிய வேண்டும் என்பது, 'வார்சடை அரன்நிகர் வரத' என்ற விளியால் தொனிப்பதாம். (15)

765. இரும்பனைய கருநெடுங்கோட்
★ டிணையேற்றின் பணையேற்ற
பெரும்பியலிற் பளிக்குநுகம்
பிணைத்ததனோ டணைத்தீர்க்கும்

**762.** உக்கன பல்லொடு கரங்க ளோடினர்
புக்கனர் வானவர் புகாத சூழல்கள்
தக்கனல் வேள்வியிற் றழலு மாறின
முக்கணெண் டோளவன் முனிவு மாறினன்.

'உக்கன பல்லொடு கரங்கள், ஓடினர்,
புக்கனர் வானவர் புகாத சூழல்கள்.
தக்கன் நல் வேள்வியில் தழலும் ஆறின,
முக்கண் எண் தோளவன் முனிவும் ஆறினன்.'

பொ:—(அந்தத் தக்க யாகம் நடைபெறற்கு உதவிய) தேவர்கள் பற்களும் கைகளும் உடைந்தும் அறுபட்டும் போக ஓடலாயினர்; (வேறு) தேவர்கள் தாம் முன் சென்றறிந் திராத இடங்களிற் புகுந்து பதுங்கினர்; தக்கனது உயர்ந்த வேள்விக் குண்டங்களிலிருந்த அக்கினிகளும் ஆறின. அதனால் மூன்று கண்களும் எண்டோள்களுமுடைய சிவபிரான் தன் சினமும் ஆறலானன்.

கு:—பல் உக்கது பகன் என்ற சூரியனுக்கு, கரங்களற்று வீழ்ந்தது அக்கினிதேவனுக்கு என்பர். தக்கயாக அழிவின் சரித்திர விரிவு, கந்தபுராணம், தக்கயாகப் பரணி முதலிய நூல்களிற் காண்க. வானவர் இடைநிலை விளக்கு. (13)

**763.** தாளுடை வரிசிலை சம்பு வும்பர்தம்
நாளுடை மையினவர் நடுக்க நோக்கியிக்
கோளுடை விடையனன் குலத்துட் டோன்றிய
வாளுடையுழவனோர் மன்னன் பால்வைத்தான்.

'தாள் உடை வரி சிலை, சம்பு, உம்பர்தம்
நாள் உடைமையின், அவர் நடுக்கம் நோக்கி, இக்
கோள் உடை விடை அனன் குலத்துள் தோன்றிய
வாள் உடை உழவன் ஓர் மன்னன்பால் வைத்தான்.'

பொ:—(சினமாறிய) சிவபிரான், தேவர்கள் அஞ்சி நடுங்கு தலை உணர்ந்து, அவர்களின் ஆயுட்காலம் நீண்டிருந்ததனல், அடித் தண்டினையுடைய கட்டமைந்த அவ்வில்லினை, வலிமை யுடைய இடபம் போன்ற இச் சனகராசன் குலத்தில் தோன்றியவனும், பகைக்களத்தில் வாளாகிய ஏர்கொண்டு உழுபவனுமான அரசன் ஒருவனிடம் கொடுத்துவைத்தான்.

கு :—சிவபிரானால் வில் அளிக்கப் பெற்றவன் தேவராதன் என்ற அரசன் என்பர். கோபம் ஆறாமல் வில்லை அப்பெருமானே தரித்திருப்பின், தேவர்கள் அழிந்திருப்ப ராதலால், 'சினம் ஆறி மன்னர்பால் வைத்தான்' எனப்பட்டது. போர்க்களமாகிய கழனிகளில் வாளாகிய ஏரினைக் கொண்டு உழுபவன் என்பது 'வாளுடையுழவன்' என்ற தொடர்க்குப் பொருள். 'வாளேருழவ' என்று புறநானூற்றிலும் (368) வருதல் காண்க, 'வில்லே ருழவர் 'சொல்லேருழவர்' என்று திருக்குறளில் (882) வருவன வும் ஒப்பிடத்தகும். (14)

## சானகியின் வரலாறு

**764.** கார்முக வலியையான் கழறல் வேண்டுமோ
வார்சடை யரனிகர் வரத நீயலால்
யாருள ரறிபவ ரிவற்குத் தோன்றிய
தேர்முக வல்குலாள் செவ்வி கேளெனு.

'கார்முக வலியை யான் கழறல் வேண்டுமோ ?
வார் சடை அரன் நிகர் வரத! நீஅலால்
யார் உளர் அறிபவர் ? இவற்குத் தோன்றிய
தேர்முக அல்குலாள் செவ்வி கேள் !' எனு.

பொ :இந்த வில்லின் வலிமையை யான் எடுத்துக்கூறவும் வேண்டுமோ ? நீண்ட சடைமுடியுடைய (அச்) சிவபிரானை ஒத்த முனிவரனே ? நீ அல்லாமல் இதன் பெருமையை உண்மையாக அறியவல்லவர் எவருளர் ? இச் சனகமாராசனுக் குப் புத்திரியாக அவதரித்த - தேர்த்தட்டுப் போலும் அரைப் பக்கமுடைய சீதையின் வரலாற்றைக் கேட்பாயாக என்று சொல்லி.

கு :—குளகம். வில்லை அளித்த சிவபிரான் அனைய நீயே, அவ் வில்லை வளைப்பிக்கவும் சானகியின் திருமணம் நிறைவேற்றி வைக்க வும் அருள்புரிய வேண்டும் என்பது, 'வார்சடை அரன்நிகர் வரத' என்ற விளியால் தொனிப்பதாம். (15)

**765.** இரும்பனைய கருநெடுங்கோட்
★ டிணையேற்றின் பணையேற்ற
பெரும்பியலிற் பளிக்குநுகம்
பிணைத்ததனே டணைத்திர்க்கும்

வரம்பின்மணிப் பொற்கலப்பை
வயிரத்திண் கொழுமடுத்திட்
டுரம்பொருவி னிலம்வேள்விக்
கலகில்பல சாலுழுதேம்,

'இரும்பு அனைய கரு நெடும் கோட்டு
இணை ஏற்றின் பணை ஏற்ற
பெரும் பியலில், பளிக்கு நுகம்
பிணைத்து, அதனோடு அணைத்து ஈர்க்கும்
வரம்பு இல் மணிப் பொன் கலப்பை
வயிரத்திண் கொழு மடுத்திட்டு,
உரம் பொரு இல் நிலம், வேள்விக்கு,
அலகு இல் பல சால், உழுதேம்.'

பொ :—வேள்வி செய்வதன்பொருட்டு, இரும்பை யொத்த கருமையும் பெருமையுமுடைய கொம்புகளைக் கொண்ட இரண்டு எருதுகளின் பருத்த பெரும் பிடரின் மேல், பளிங்கால் இழைத்த நுகத்தடியைப் பூட்டி, அதனோடு அணைத்து இழுக்கப் படுவதும் எண்ணற்ற இரத்தினங்கள் பதித்ததுமான பொற் கலப்பையில் திண்ணிய வயிரக் கொழுவைச் சேர்த்து, உர வளத்தில் ஒப்பில்லாத பூமியை அளவற்ற பல சால் படப் பன்முறை நாங்கள் உழலானோம்.

கு :—வேள்வி தொடங்கற்கு முன் நிலத்தைத் தூயதாக்கு வதற்கு அதனை நன்றாக உழவேண்டும் என்பது விதியாதலின், பல சால் உழுதேம் எனப்பட்டது. சால் - வயலில் ஒரு முறை நீள உழுதல். ஏறு - இடபம்; எருமை என்பாரு முளர். (16)

**766.** உழுகின்ற கொழுமுகத்தி
னுதிக்கின்ற கதிரினொளி
பொழிகின்ற புவிமடந்தை
யுருவெளிப்பட் டெனப்புணரி
எழுகின்ற தெள்ளமுதோ
டெழுந்தவளு மிழிந்தொதுங்கித்
தொழுகின்ற நன்னலத்துப்
பெண்ணரசி தோன்றினாள்.

‘ உழுகின்ற கொழுமுகத்தின்,
உதிக்கின்ற கதிரின் ஒளி
பொழிகின்ற புவிமடந்தை
உரு வெளிப்பட்டு எனப், புணரி
எழுகின்ற தெள் அமுதோடு
எழுந்தவளும் இழிந்து ஒதுங்கித்
தொழுகின்ற நல் நலத்துப்
பெண் அரசி தோன்றினள்.’

பொ :—(அவ்வாறு) உழுதுவந்த கொழுவின் முனையில், உதய சூரியனது ஒளி கொண்ட பூமிதேவியின் திருவுருவம் வெளிப் பட்டாற்போல், பாற்கடலில் எழுந்த தெள்ளிய அமுதுடன் தோன்றிய இலக்குமியும் தாழ்ந்து ஒதுங்கித் தொழத்தக்க பேரழகு படைத்த பெண்கள் நாயகம் (ஒருத்தி) தோன்றினள்.

கு :—மேலே ‘பலசால் உழுதேம்’ என்றார். அவ்வுழுபடைச் சாலொன்றில் தோன்றினமைபற்றிச் ‘சீதை’ எனத் திருநாமம் பெற்றாள் என்பது இப்பாடலாற் புலப்படும் (சீதை - உழு படைச்சால்). இலக்குமியும் தாழ்ந்து வணங்கத்தக்க பேரழகு படைத்தவள் சீதை என்பது, ‘தாமரையிருந்த தையல் சேடியாந் தரமு மல்லள்’ எனப் பின்னரும் (ஆரணிய–மாரீசன் வதை-69) கூறுவர். தன் அவதாரத்துக்கு மூலமான பிராட்டியினும் மேம் பட்ட கட்டழகுள்ளவள் என்பது கருத்து. கொழுமுகத்தில் தோன்றினள் என இயையும். (17)

767. குணங்களையென் கூறுவது
கொம்பினைச்சேர்ந் தவையுய்யப்
பிணங்குவன வழகிவளைத்
தவஞ்செய்து பெற்றதுகாண்
கணங்குழையா ளெழுந்ததற்பின்
கதிர்வானிற் கங்கையெனும்
அணங்கிழியப் பொலிவிழந்த
வாறுரைத்தார் வேறுற்றார்.

‘ குணங்களை என் கூறுவது ?
கொம்பினைச் சேர்ந்து அவை உய்யப்
பிணங்குவன ; அழகு இவளைத்
தவம் செய்து பெற்றது காண் !

கணங்குழையாள் எழுந்ததன்பின்,
கதிர்வானில் கங்கை எனும்
அணங்கு இழியப் பொலிவு இழந்த
ஆறு ஒத்தார் வேறு உற்ருர்.'

பொ :—(அந்தப் பெண்ணரசியின்) குண விசேடங்களைப்பற்றி என்னவென்று நான் சொல்வது? அக்குணங்கள் யாவும், பூங் கொம்பு போன்ற இச் சீதையை அடைந்து, தாங்கள் உய்தற் பொருட்டு (ஒன்றினென்று முந்த வேண்டிக்) கலகம் புரிவன ஆயின; (இம்மட்டோ) அழகு என்பது தவம்புரிந்து இவளை அடையலாயிற்று. திரண்ட காதணியணிந்த இந்தத் தேவி (பூமியினின்று) வெளிப்பட்டபின் மற்றை (உயர்ந்த) மங்கையரா யமைந்தவர் யாவரும், கங்காநதியென்று பேர்பெற்ற தெய்வப் பெண், சூரியனியங்கும் வானத்தினின்று இறங்கியதனுல், தாமடைந்திருந்த பொலிவை இழந்த மற்ற நதிகளைப்போல ஆயினர்; இவற்றை அறிவாயாக.

கு :—எத்தகைச் சிறப்புடையராயினும் நல்லினத்தைச் சார்ந்தே பெயர்பெற வேண்டுதலின், நற்குணங்கள் யாவும் தம் நன்மை கருதியே சீதையைச் சார்தற்குத் தம்முட் பிணங்கலாயின எனப்பட்டது. பேரழகு படைத்தவளென்ருர், மேற்பாட்டில்; அவ்வழகும் தவம்புரிந்து இவளை அடைந்ததென்பதனையும், அழகு மட்டுமிருந்து உயர்குணமில்லையேல் அது பயனற்றதாம் என்பதனையும், உத்தம அழகு குணங்களுடன் தெய்வத் தன்மை யும் வாய்ந்தவள் என்பதனையம் விளக்குகின்ருர் இப்பாடலால் என்க. பூவுலகத்து நதிகளில் முன்பு புகழ்பெற்றிருந்தன யாவும் கங்கையாகிய தெய்வ நதி வானின்றிறங்கியபின் தம் புகழ் மங்கியவாறே, தெய்வத்தன்மை வாய்ந்த சீதை அவதரித்தபின், ஏனைப் பூதல மங்கையர்தம் சிறப்புக்கள் மங்கலாயின என்பது கருத்து. (18)

**763.** சித்திரமிங் கிதுவொப்ப
தெங்குண்டு செய்வினையால்
வித்தகமும் விதிவசமும்
வெவ்வேறே புறங்கிடப்ப
அத்திருவை யமரர்குல
மாதரித்தா லெனவற்றிஞ
இத்திருவை நிலவேந்த
ரெல்லாருங் காதலித்தார்.

‘ சித்திரம் இங்கு இது ஒப்பது
எங்கு உண்டு? செய்வினையால்
வித்தகமும் விதிவசமும்
வெவ்வேறே புறம் கிடப்ப,
அத் திருவை அமரர்குலம்
ஆதரித்தால் என, அறிஞ !
இத் திருவை நில வேந்தர்
எல்லாரும் காதலித்தார்.’

பொ :—யாவும் அறிந்தோய் ! செய்தொழில்கொண்டு (வெளிப் படக் காட்டும்) தம் (வில்வன்மை முதலிய) திறமையும், ஊழ் வினையின் பயனும் (ஒன்றுபடாமல்) வேறு வேறாகப் பிரிந்து கிடந்த நிலையில் பாற்கடலினின்று தோன்றி அத்திருமகளைத் தேவ கணத்தார் விரும்பியவாறே—இந்தச் சிதையாகிய திருவை, நில வுலகாளும் அரசரெல்லாம் விரும்பலாயினர் இதனை ஒப்பதொரு அதிசயம் எங்கு உள்ளது ?

கு :—உருவம் குணம் செயல்களால் ஒப்புயர்வற்றவளும் தெய்வப் பிறவியுமான சனக புத்திரியை, திறமையும் ஊழின் வலியும் ஒத்துவராத நிலையில், உலக வேந்தரெல்லாரும் தத்தமக் கென்று காதலித்த அதிசயம் வேறெங்குமே காண முடியாது என்றும்; பாற்கடலில் தோன்றிய திருமகளொருத்தியைத் தேவ கணமெல்லாம் அக்காலத்து விரும்பியடைந்த செயலே இதற் கேற்ற உவமையாம் என்றும் கூறியவாறு. (19)

769. கலித்தானைக் கடலோடுங்
கைத்தானக் களிற்றரசர்
ஒலித்தாழி யெனவந்து
மணமொழிந்தார்க் கெதிருடுத்த
புலித்தானைக் களிற்றுரிவைப்
போர்வையான் போர்வில்லை
வலித்தானே மங்கைதிரு
மணத்தானென் றியாம்வலித்தேம்.

“ கலித் தானைக் கடலோடும்
கைத் தானக் களிற்று அரசர்,
ஒலித்து ஆழி என வந்து
மணம் மொழிந்தார்க்கு, ‘எதிர் உடுத்த

புலித் தானைக் களிற்று உரிவைப்
போர்வையான் போர் வில்லை
வலித்தானே மங்கை திரு
மணத்தான்' என்று, யாம் வலித்தேம்."

பொ :—துதிக்கையும் மதநீருமுடைய யானைப்படை கொண்ட அரசர்கள், ஆரவாரமுடைய சேனை சமுத்திரத்தோடு கடல்போல முழங்கிக்கொண்டுவந்து, மணம்பற்றி மகட்பேச வந்தவர்க்கு (எல்லாம்) எதிர்மொழியாக, 'புலித்தோலை ஆடையாகவும் யானைத் தோலைப் போர்வையாகவும்கொண்ட சிவபிரான் போரில் எடுத்த வில்லினை, தன் ஆற்றல்கொண்டு வளைத்தவனே இந்தச் சீதையின் மணமகனுதற்கு உரியவன்' என்று நாங்கள் (கொண்ட) உறுதியைத் தெரிவித்தோம்,

கு :—முதல் வலித்தல்-வளைத்தல். இரண்டாவது வலித்தல்-நிச்சயித்தல், உறுதி கூறல். (20)

**770.** வல்வில்லுக் காற்றுர்கண்
மாரவேள் வளைகரும்பின்
மெல்வில்லுக் காற்றுராய்த்
தாமெம்மை விளிகுற்றுர்
கல்வில்லோ டுடன்வந்த
கணங்குழையைக் காதலித்துச்
சொல்வில்லா லுலகளிப்பாய்
போர்செய்யத் தொடங்கினர்.

'வல் வில்லுக்கு ஆற்றுர்கள்,
மாரவேள் வளை கரும்பின்
மெல் வில்லுக்கு ஆற்றுராய்த்,
தாம் எம்மை விளிகுற்றுர்,
கல் வில்லோடு உடன் வந்த
கணம் குழையைக் காதலித்துச்,
சொல் வில்லால் உலகு அளிப்பாய் !
போர் செய்யத் தொடங்கினர்.'

பொ :—சொல்லாகிய வில்லைக்கொண்டு உலகத்தை அளிக்கும் முனிவனே ! இந்த வலிய வில்லை வளைக்கும் ஆற்றலற்ற அரசர்கள் காமனது வளைந்த மெல்லிய வில் வலியைத் தாங்குதற்கும்

வன்மையற்றவராய் மலைபோன்ற இந்த வில்லுடன் வந்த சீதையைக் காதல் புரிந்து எம்மை அறைகூவி அழைத்துப் போர்புரியத் தொடங்கினுர்கள்.

கு :—பணையமாக வைக்கப்பட்ட இந்த வில்லை அசைத்தற்கும் முடியாத அவ்வரசர்கள், பெண் காதலாலும், பட்ட பரிபவத்தாலும் பெருஞ்சினங்கொண்டு ஒன்றுகூடிப் போர்புரியலானுர்கள் என்றபடி. விளிகுற்றுராய்ப் போர் செய்யத் தொடங்கினுர் என்க. (21)

771. இம்மன்னன் பெருஞ்சேனை
யீவுதனை மேற்கொண்ட
செம்மன்னர் புகழ்வேட்ட
பொருளேபோற் றேய்ந்ததால்
பொம்மென்ன வண்டலம்பும்
புரிகுழலைக் காதலித்த
அம்மன்னர் சேனைதம
தாசைபோ லாயிற்றுல்.

'இம் மன்னன் பெருஞ்சேனை,
ஈவுதனை மேல் கொண்ட
செம்மன்னர் புகழ் வேட்ட
பொருளே போல் தேய்ந்ததால்,
பொம் என்ன வண்டு அலம்பும்
புரிகுழலைக் காதலித்த
அம் மன்னர் சேனை, தமது
ஆசை போல், ஆயிற்று, ஆல்.'

பொ :—இந்தச் சனகராசனது பெருஞ்சேனை (இடைவிடாது புரிந்த அப்போரால்) கொடைத்தொழிலை மேற்கொண்ட நீதியுள்ள அரசரின் புகழையே விரும்பிய செல்வம்போல, வரவரக் குறையலாயிற்று. பொம்மென்னும் ஒலியுண்டாக வண்டுகள் ஒலிக்கப் பெற்றதும், கடை குழன்றதுமான கூந்தலுடைய சீதாதேவியை விரும்பிய (பகை) அரசர்களின் சேனை, தம் ஆசையேபோல ஆக்கம்பெற்றது.

கு :—வேந்தர் பலர்கூடி இடைவிடாது விளைத்த போர்களாதலால், தனித்துநின்ற சனகன்படை சுருங்கவும், பகைப் படைகள் ஆக்கமுற்றுப் பெருகவும் ஆயின என்றபடி,

'யாரொடும் பகை கொள்ளலன் என்றபின், போரொடுங்கும்...... தன் தார் ஒடுங்கல் செல்லாது' (அயோத், மந்தரை சூழ்ச்சிப் 13) எனப்படுதலால், எதிர்பாராதபடி பல் பகையாளனுயின சனகனுக்குப் படைச்சுருக்கம் அமைந்தது, புகழ்வேட்ட பெருங் கொடையாளனது செல்வம் சுருங்குதல்போலும் என்றும், அவ்வகை வேந்தர் படைகள் ஆக்கம்பெற்றது சீதைபால் அமைந்த அவரது ஆசைப்பெருக்கம் போல்வது என்றும் உவமைகளாற் சிறப்பிக்கப்பட்டன என்க. ஈகையாளன் பொருள் சுருங்கும் என்பது நல்லிசை வேட்ட நயனுடை நெஞ்சிற் - கடப்பாட்டாளனுடைய பொருள் போலத் - தங்குதற் குரியதன்று (குறுந்தொகை. 142), என்ற சான்ருேர் வாக்காலும் அறிக. 'ஆசைபோல் ஆயிற்று, வெற்றி வளரவளரப் பெண்காதலும் பெருகியது என்றபடி ஆயிற்று ஆக்கம் பெற்றது; 'ஆகூழ்' ஆகிவந்த வீடு, ஆங்காலம், என இருவகைவழக்கும் காண்க.(22)

**772.** மற்காக்கு மணிப்புயத்து
மன்னனிவன் மழவிடையோன்
விற்காக்கும் வாளமருண்
மெலிகின்ரு னெனவிரங்கி
எற்காக்கு முடிவிண்ணோர்
படையீந்தா ரெனவேந்தர்
அற்காக்கை கூகையைக்கண்
டஞ்சினவா மெனவகன்ருர்.

'மல் காக்கும், மணிப் புயத்து
மன்னன் இவன், மழவிடையோன்
வில் காக்கும் வாள் அமருள்
மெலிகின்ருன் என இரங்கி,
எல் காக்கும் முடி விண்ணோர்
படை ஈந்தார் என, வேந்தர்
அல் காக்கை கூகையைக் கண்டு
அஞ்சினவாம் என, அகன்ருர்.'

பொ :—ஒளிவிடும் முடியணிந்த தேவர்கள், 'வலிமை பெற்ற அழகிய தோள்களுடைய சனகன், இடபாரூடனுன சிவபிரானது வில்லின்பொருட்டு (பகைவர் கூடிப் புரியும்) வாட்போரில் தளர்ச்சியடைகின்ருன்' என்று இரக்க முற்றுப் படைகளை அளித்து உதவினர் - என்பதனை அறிந்த பகை

வேந்தர், இராக் காலத்தில் கூகையைக் கண்டு அஞ்சிய காக்கைகள் போலப் பதுங்கி அகன்றார்கள்,

கு :—இனம் பெரியவாயும் வலியவாயும் உள்ள காக்கைக் கூட்டங்கள் கூகைகளைப் பகலில் வெல்லுமாயினும், இரவில், வலியற்ற ஒரு சில கூகைகட்கு அவை யாவும் அஞ்சிப் பதுங்குமாறு போல, பகைவரின் பெருஞ்சேனைகள் சிறிய படைகட்கு இப்போது அஞ்சி ஒளித்தன என்றபடி, 'பகல்வெல்லும் கூகையைக் காக்கை' (குறள் - 481) என்பதனால் 'இராவெல்லும் காக்கையைக் கூகை' என்பது பெறப்படும்; படவே, காலத்தோடு துணைவலியும் கூடியவிடத்து எளியரும் பெரும் பகை வெல்லவல்லர் என்ற முறையில், சனகனது சிறுபடை தேவரளித்த அத்திர சத்திரங்களால் பெரும் பகைக்கூட்டங்களை வென்றது என்றவாறும். (23)

**773.** அன்றுமுத லின்றளவு
மாருமிந்தச் சிலையருகு
சென்றுமிலர் போயொளித்த
தேர்வேந்தர் திரிந்துமிலர்
என்றுமினி மணமில்லை
யென்றிருந்தே மிவனேற்றின்
நன்றுமலர்க் குழற்சீதை
நலம்பழுதா காதென்றான்.

'அன்று முதல் இன்று அளவும்
ஆரும் இந்தச் சிலைஅருகு
சென்றும் இலர்; போய் ஒளித்த
தேர் வேந்தர் திரிந்தும் இலர்;
என்றும் இனி மணம் இல்லை
என்று இருந்தேம்; இவன் ஏற்றின்
நன்று, மலர்க் குழல் சீதை
நலம் பழுது ஆகாது,' என்றான்.

பொ :—அன்று முதல் இன்று வரை எந்த அரசரும் இந்தச் சிவதனுசின் அருகில் சென்றவருமில்லை. ஓடியொளித்த தேர் வீரர்களான அவர்களுள் திரும்பி வந்தவர் எவருமில்லை. இனிச் சீதைக்கு என்றுமே திருமணமும் நிகழாது என்றிருந்தோம், இவ்விராமன் இந்தச் சிவதனுசை நாணேற்றினனாயின், அது

நல்லதாகும்; மலர்மாலை அணிந்த கூந்தலுடைய சீதையின் கன்னிமை யழகும் வீணாகாமற் பயன்படும்.

கு:—'நோற்றனள் நங்கையும் நொய்தின் ஐயன்வில் ஏற்று மேல் இடர்க்கட லேற்றும்' என்று முதலிற் சனகன் கூறிய வாறே, சதானந்தனும் இறுதியிற் கூறி முடித்தான். (24)

**774.** நினைந்துமுனி பகர்ந்தவெலா
நெறியுன்னி யறிவனுந்தன்
புனைந்தசடை முடிதுளக்கிப்
போரேற்றின் முகம்பார்த்தான்
வனைந்தனைய திருமேனி
வள்ளலுமம் மாதவத்தோன்
நினைந்தவெலா நினைந்தந்த
நெடுஞ்சிலையை நோக்கினன்.

'நினைந்து முனி பகர்ந்த எலாம்
நெறி உன்னி, அறிவனும் தன்
புனைந்த சடை முடி துளக்கிப்,
போர்ஏற்றின் முகம் பார்த்தான்;
வனைந்தனைய திருமேனி
வள்ளலும், அம் மாதவத்தோன்
நினைந்த எலாம் நினைந்து, அந்த
நெடும் சிலையை நோக்கினன்.

பொ:—சதானந்தன் யோசித்துக் கூறியவற்றை யெல்லாம் ஞானவானான கோசிகனும் முறைப்படி சிந்தித்து, அழகிய தன் சடை முடியை அசைத்தவனாய் இரணசிங்கமான இராம பிரானது திருமுகத்தை நோக்கலானான். ஓவியத்தில் வரைந் தாற்போலும் திருமேனிப் பொலிவுள்ள அப்பெருமானும், பெருந்தவத்தனான அம்முனிவனது திருவுளக் குறிப்பை யெல்லாம் தானும் அறிந்துகொண்டு, முன்பு கிடந்த அந்தப் பெரிய சிவதனுசின் இடமாகத் தன் பார்வையைச் செலுத்தினான்.

கு:—நினைந்து முனி பகர்ந்தவெலாம் நெறியுன்னி என்றது, தெய்வாமிசம் உள்ளவள் சனகன்மகள் என்பதனையும், அவளைப் பெறுவதிலுள்ள அருமைகளையும், 'என்றும் இனிமணமில்லை யென்றிருந்தேம் இவனேற்றின் நன்று' என்று சதானந்தர் கூறிய

தனையும் உட்கொண்டு. போரேறு என்று இவர் கூறியது போலவே திருமங்கையாரும், 'புட்குழியெம் போரேற்றை' என்றார் விஜயராகவ மூர்த்தியை (பெரிய திருமடல், 117).

மேற்பாட்டில் 'நன்று' என்பதற்கு, 'நன்று' பெரிதாகும்' என்பதனை உட்கொண்டு, வில்வளைத்தல் அரிய பெரிய செயலென்று சதானந்தர் கருதினரென்றும், கோசிகர் அவ்வாறு கருதாததனைக்குறிப்பார் போன்று முடிதுளக்கினர் என்றும் கொள்ளலும் ஆம். (25)

## இராமன் எழுதல்

**775.** பொழிந்தநெய் யாகுதி வாய்வழி பொங்கி
★ எழுந்த கொழுங்கன லென்ன வெழுந்தான்
அழிந்தது வில்லென விண்ணவ ரார்த்தார்
மொழிந்தன ராசிகண் முப்பகை வென்றார்.

பொழிந்த நெய் ஆகுதி வாய்வழி பொங்கி,
எழுந்த கொழுங்கனல் என்ன எழுந்தான்;
'அழிந்தது வில்' என விண்ணவர் ஆர்த்தார்;
மொழிந்தனர் ஆசிகள் முப்பகை வென்றார்.

பொ : ஒருசேரப் பொழிந்த நெய்யாகிய பூர்ணாகுதி வீழ்ந்த தீமுகத்தினின்றும், பொங்கி எழுந்த கொழுங்கனல் போல, (கோசிகமுனிவரது குறிப்பு நோக்கி அறிந்த இராமபிரானும், தன் இருக்கையினின்று கம்பீரமாக, எழுந்து நின்றான். அதனைக் கண்ட தேவரெல்லாம் சிவதனுசு இற்றுவிட்டது என்றே ஆர்ப்பரித்தார்கள். முப்பகைவென்ற முனிவர்கள் இராமனுக்கு வாழ்த்துரை வழங்கினர்.

கு :—தன் வீரக்கனலைத் தூண்டிய முனிவனது குறிப்பு நோக்கத்தை அறிந்ததும், கீழே கிடந்த வில்லை வீற்றிருந்தபடி கண்ணுற்ற இராமபிரான், உடனே எழுந்து நின்ற பெருமித நிலை, முன்னிரண்டடிகளிற் சிறப்பிக்கப் படுகின்றது. வேள்வியிறுதியில் ஒரு சேரப் பொழியப் பெற்ற நெய்யின் பூரணாகுதி, பெருமானது வீரக்கனலைத் தூண்டிய முனிவரது குறிப்பு நோக்கத்துக்கு ஏற்ற உவமையாதல் காண்க. இவ்வாகுதி, மங்களகரமான எல்லா நன்மைகளையும் அளிக்க வல்லதாதல் போல, அவரது திருநோக்கமும் வல்லதாயிற்று என்றபடி. தங்கள் நோக்கம் நிறைவேறத் தொடங்கியதை அறிந்த

விண்ணவரும் முனிவர்களும், முறையே ஆரவாரமும் ஆசிகளும் வழங்கினர் என்க. முப்பகை - காமம் வெகுளி மயக்கம் என்ற உட்பகைகள் (குறள் - 360) 'பொழிந்த நெய்யாகுதி வாய்வழி பொங்கி எழுந்த கொழுங்கனல்' என்பதனோடு, ''நெய்பெய் தீயி னெதிர்கொண்டு'' (106) என்னும் குறுந்தொகையடி இங்கு ஒப்புநோக்கத்தகும். (26)

### காமன் மங்கையர்மேல் கணைதொடுத்தல்

**776.** தூய தவங்க டொடங்கிய தொல்லோன்
ஏயவன் வல்வி லிறுப்பதன் முன்னம்
சேயிழை மங்கையர் சிந்தைதொ றெய்யா
ஆயிரம் வில்லை யனங்க னிறுத்தான்.

**தூய தவங்கள் தொடங்கிய தொல்லோன்**
**ஏயவன், வல் வில் இறுப்பதன் முன்னம்,**
**சேயிழை மங்கையர் சிந்தை தொறு எய்யா,**
**ஆயிரம் வில்லை அனங்கன் இறுத்தான்.**

பொ :—புனிதமான தவங்களைத் தொடங்கி முடித்த பழைமையோனான கோசிகமுனிவனால் ஏவப்பெற்ற இராமபிரான், அவ்வலிய வில்லைக் கையில் எடுத்து இறுப்பதற்குமுன்பே, காமதேவன், செவ்விய அணிகள் பூண்ட மங்கையரின் மனங்கள் தோறும் (மலரம்புகளை) எய்தவண்ணம் மிகப் பல விற்களை முறித்தான்.

கு :—வீற்றிருந்த பெருமான் கம்பீரமாக வில்லை யெடுக்க எழுந்த தோற்றத்தைக் கண்டு, இளமாதரெல்லாம் காமபரவசமாயினர் என்பது கருத்து. தொடங்கிய பெருந்தவங்களை விடாது புரிந்து முடித்து முழுவெற்றியும் பெற்ற முதியோனாமையால், 'தூய தவங்கள் தொடங்கிய தொல்லோன்' என்றும், அவனால் ஏவப்பெற்றவனும் தன்முயற்சியில் வெற்றி வீரனாகத் தடையில்லையாதலின், 'தொல்லோன் ஏயவன் வல்வி லிறுப்பதன் முன்னம்' காமதேவனே விற்கள் பலவற்றை முறித்து நற்குறி காட்டினன் என்றும் கவி கூறினார். (27)

## மாதர்கள் கூற்று 777—780

**777.** காணு நெடுஞ்சிலை கால்வலி தென்பார்
நாணுடை நங்கை நலங்கிளர் செங்கேழ்ப்
பாணி யிவன்படர் செங்கை படாதேல்
வாணுதன் மங்கையும் வாழ்வில ளென்பார்.

'காணும் நெடும் சிலை கால் வலிது!' என்பார்;
'நாண் உடை நங்கை நலம் கிளர் செங்கேழ்ப்
பாணி இவன் படர் செங்கை படாதேல்,
வாள் நுதல் மங்கையும் வாழ்வு இலள்!' என்பார்.

போ:—இங்கே யாவரும் காணக் கிடக்கும் பெரியவில்லின் அடிப்பகுதி வலியதாயிற்றே என்பர் ஒரு சில மாதர்; (இதனை எடுக்கும் ஆற்றல் இல்லாமையால்) இவனது நீண்ட கரங்கள் நாணமிக்க சீதையின் செந்நிறக்கையைப் பற்றுமற் (போமோ?) போமாயின் ஒளிமுகங் கொண்ட அவள், இனி வாழ்வற்றவளே என்பர் சிலர்.

கு:—ஆற்றல் மிக்க அரசர் பலரும் வந்து தோற்றோடிய செயலை அறிந்தவராதலால், இவ்விளங் குமரனும் அத்தகைய னுவனோ என்னும் ஐயம் மேலிட்டு இரங்கிக் கூறினர் ஒருசிலர் என்க. (28)

**778.** கரங்கள் குவித்திரு கண்கள் பனிப்ப
இருங்களி றிச்சிலை யேற்றில னாயின்
நரந்த நறைக்குழ னங்கையு நாமும்
முருங்கெரி யிற்புக மூழ்குது மென்பார்.

கரங்கள் குவித்து, இரு கண்கள் பனிப்ப,
'இரும் களிறு இச் சிலை ஏற்றிலன் ஆயின்
நரந்தம் நறைக் குழல் நங்கையும் நாமும்
முருங்கு எரியில் புக மூழ்குதும்!' என்பார்.

போ:—(ஒருசில மாதர் தங்கள் வழிபடு தெய்வங்களை வேண்டியவண்ணம்) கைகளைக் கூப்பிக்கொண்டு கண்ணீர் வடிய, கரிய ஆண்யானை போன்ற இக்குமரன் இந்தவில்லை நாண் (ஏற்றுவன்) ஏற்றானாயின், கத்தூரிமணம் கமழும் கூந்தலை

யுடைய சீதையும் நாமும் எரித்தழிக்கும் தீயிடையே புக்கு மூழ்குவோம் என்பாராயினர்.

கு :—'நங்கையும் நாமும் முருங்கு எரியில் புக மூழ்குதும்' என்பதனுல் இது கூறியவர் தோழியர் எனவும் 'இது முடியும்; முடியாதேல் இன்னணமாவேம்' எனச் சீதையையும் உளப் படுத்திச் சூளுறவுடன் அத்தோழியர் கூறியதெனவும் கொள்க. நரந்தம் – கத்தூரி, 'நரந்த மரைப்ப நறுஞ்சாந்து மறுக' (மதுரைக் காஞ்சி 553) என்ப. (29)

779. வள்ளன் மணத்தை மகிழ்ந்தன னென்ருல்
கொள்ளென முன்பு கொடுப்பதை யல்லால்
வெள்ள மணைத்தவன் வில்லை யெடுத்திப்
பிள்ளைமு னிட்டது பேதைமை யென்பார்.

"வள்ளல் மணத்தை மகிழ்ந்தனன் என்ருல்,
கொள்" என முன்பு கொடுப்பதை அல்லால்,
வெள்ளம் அணைத்தவன் வில்லை எடுத்து, இப்
பிள்ளை முன் இட்டது பேதைமை!' என்பார்.

பொ :—வள்ளலான இவ்விளங்குமரன் திருமணத்தை விரும்பி வந்தவன் என்று தெரியவந்தபின் (இப் பெண்ணை) 'ஏற்றுக் கொள்க' என (முற்படக்) கொடுப்பதை விட்டு, (கங்கை) வெள்ளத்தைத் தடுத்துக் கட்டியவனது வில்லை எடுத்துவரச் செய்து இளைஞனை இவன்முன் போகட்டது அறிவீனமே என்ருர் (ஒரு சில மாதர்).

கு :—இது முதிய பெண்டிர் சிலர் கூற்று. நமக்கு அருள் புரியவே இச்சுந்தரமூர்த்தி இங்கு வந்துளான் என்பார், 'வள்ளல்' என்றும், வள்ளலுக்கும் வள்ளலாக இக் குமரனுக்குத் தன் கன்னியாரத்தினத்தை அளிக்கத்தவறினன் அரசன் என்பார் 'கொள்ளென முன்பு கொடுப்பதை அல்லால்' என்றும், கங்கைப் பெரு வெள்ளத்தைத் தடுத்தணைத்த பெரியோனுடைய வில்லை இச் சிறுபிள்ளைமுன் போகட்டது அறிவீனமே என்பார் 'வெள்ள மணைத்தவன் வில்லை எடுத்து இப்பிள்ளைமுன் இட்டது பேதைமை' என்றும் கூறினுர், இனி 'வள்ளல்' என்றது சனகனை என்றும், 'வெள்ளை மனத்தவன்' என்று பாடங்கொண்டு, அச் சனகனையே குறிக்கும் என்றும் பொருள் கூறுவாரும் உளர். (30)

780. ஞான முனிக்கொரு நாணிலை யென்பார்
கோனிவ னிற்கொடி யாரிலை யென்பார்
மானவ னிச்சிலை கால்வளை யானேற்
பீன தனத்தவள் பேறில ளென்பார்.

'ஞான முனிக்கு ஒரு நாண் இலை!' என்பார்;
'கோன் இவனில் கொடியார் இலை!' என்பார்;
'மானவன் இச்சிலை கால் வளையானேல்,
பீன தனத்தவள் பேறு இலள்!' என்பார்.

பொ:—ஆன்மஞானியான இச் சதாநந்தமுனிவனுக்குச் சிறிதும் நாணமில்லைபோலும் என்பர் சிலர். இந்த அரசனைக் காட்டிலும் கொடியவர் இல்லை என்பர் சிலர். பெருமையுடைய இவ் விளங்குமரன் இந்த வில்லின் இருமுனைகளையும் வளையாமற் போவானுனல், பருவமங்கையாகிய சீதை மணப்பேறு பெற்றவளில்லை என்பர் சிலர்.

கு:—மாதர் பலர் பலபடியாகப் பேசிய கூற்றுக்கள், இவை, இளைஞர்களை அழைத்துவந்து அவர்களைக் கடினமான சோதனைக்கு உட்படக் கட்டளையிட்டவன் தத்துவஞானம் படைத்த முனிவனேயாயினும் உலகஞானம் சிறிதும் இல்லாதவன் என்ற கருத்தில், 'ஞானமுனிக்கு' என்றும், இதனுல் உலகச் சொல்லுக்குச் சிறிதும் நாணுதவனுனன் என்ற கருத்தில், 'முனிக்கொரு நாணிலை' என்றும், முனிவனைக் குறைகூறுவதினும் நம் அரசனது மனக் கொடுமையைக் கூறுவதே தகும் என்ற கருத்தில் 'கோன் இவனிற் கொடியாரிலை' என்றும், நம் சீதை பாக்கியம் பெற்றவளோ இல்லையோ என்பது இவன் வில்வளைத்தலால் பெறப்படும் என்ற கருத்தில் 'கால்வளையானேல் பீனதனத்தவள் பேறிலள்' என்றும் கூறினுர். பீனம் - பருமை, 'உன்னித் தெழுந்த என் தடமுலைகள் மானிடவர்க்கென்று பேச்சுப்படின்......வாழகில்லேன் கண்டாய்' என்ற ஆண்டாள் திருவாக்கும் இங்கு ஒருபுடை ஒப்புநோக்கத்தகும். (31)

## இராமன் வில்நோக்கி நடத்தல்

781. தோகைய ரின்னன சொல்லிட நல்லோர்
ஓகை விளம்பிட வும்ப ருவப்ப
மாக மடங்கலு மால்விடை யும்பொன்
நாகமு நாகமு நாண நடந்தான்.

தோகையர் இன்னன சொல்லிட, நல்லோர்
ஓகை விளம்பிட, உம்பர் உவப்ப,
மாக மடங்கலும் மால் விடையும் பொன்
நாகமும் நாகமும் நாண, நடந்தான்.

பொ :—மயிலை யொத்த மகளிர் இவை போல்வனவற்றைச் சொல்லாநிற்க, நல்லோரான முனிவர்கள் வாழ்த்துரைகள் வழங்கவும், தேவர்கள் மகிழவும் சிரிய சிங்கமும், பெரிய இடபமும், மேருவும், ஆண்யானையும் வெள்கும்படி நடந்து (வில்லுள்ள இடம் அணுகினன் இராமபிரான்).

கு :—எழுந்துநின்ற இராமபிரானது காம்பீரிய நிலையைச் சிறப்பித்துவந்த கவியரசர், அப்பெருமான் வில்கிடந்தஇடம் நோக்கி நடந்துசென்றதை இப்பாட்டால் வருணிக்கின்றார். 'தீயோர் இறந்துக நூறித்தக்கோர் இடர் துடைத்து' (சுந்தா. பிணிவீட்டு. 81) என்புழிப்போல 'நல்லோர்' என்றது 'சாது சனங்களான' முனிவரை. மாகம் - வான்; ஈண்டு இலக்கணை வழக்கால் உயர்வு குறித்தது; 'வான்றோய் குடி' (குறள் 272 - பரிமே) என்புழிப் போல. (32)

## இராமன் வில்லை எடுத்தல்

**782.** ஆடக மாமலை யன்னது தன்னைத்
தேடரு மாமணி சீதையெ னும்பொற்
சூடக வால்வளை சூட்டிட நீட்டும்
ஏடவிழ் மாலையி தென்னவெ டுத்தான்.

ஆடகம் மா மலை அன்னது தன்னைத்,
'தேட அரு மா மணி சீதை எனும் பொன்
சூடக வால் வளை சூட்டிட நீட்டும்
ஏடு அவிழ் மாலை இது' என்ன எடுத்தான்.

பொ :—பெரிய பொன்மலைபோலும் அந்தச் சிவதனுசை (அணுகிய) இராமபிரான், 'தேடுதற்கரிய கன்னியாரத்னமான சீதை எனப்படும் சூடகவால்வளைகளை அணிந்த நங்கையைத் திருமணத்தில் சூட்டும்பொருட்டு நீட்டுதற்குரிய மலர்ந்த மலர் மாலையே இது' என்று தன் திருக் கைகளால் எளிதாகத் தூக்கியெடுத்தான்.

கு :—'ஆடகமால்வரை' என்பதும் பாடம். பாணிக்கிரகணத்துக்கு முன்பு மணமக்கள் தம்முள் மாலைமாற்றிக்கொள்ளுதல் மரபாதலாலும், அடுத்து நிகழப்போகும் திருமணத்துக்கு அவன் வில்லை வளைத்தலே மூலமாதலாலும், பிராட்டிக்குச் சூட்டுதற்குரிய மாலைபோலவே, பெருமான் அதனை மிக எளிதாக எடுத்தான் என்பது நயம். (33)

### வில் ஒடிதல்

**783.** தடுத்திமை யாம லிருந்தவர் தாளின்
மடுத்தது நாணுதி வைத்தது நோக்கார்
கடுப்பினில் யாரு மறிந்திலர் கையால்
எடுத்தது கண்டன ரிற்றது கேட்டார்.

தடுத்து இமையாமல் இருந்தவர், தாளின்
மடுத்ததும் நாண் நுதி வைத்ததும் நோக்கார்,
கடுப்பினில் யாரும் அறிந்திலர், கையால்
எடுத்தது கண்டனர், இற்றது கேட்டார்.

பொ :—கண் கொட்டுதலைத் தடுத்து இமையாதபடி (நிகழப் போவதைப்) பார்த்துநின்ற அவையோர் யாவரும், இராமபிரான் தன் திருவடியால் அவ்வில்லின் அடிமுனையை மிதித்ததையும், (அதனை வளைத்து) மற்ற முனையில் நாணேற்றியதையும், செயலின் அதிவேகத்தால் காணமாட்டாராயினர்: (ஆயினும்) தன் கையினால் அவ்வில்லை இராமபிரான் எடுத்ததைக் கண்டார்கள்; அது முறிந்து வீழ்ந்த பேரொலியைக் கேட்டார்கள்.

கு :—இற்றது என்பதற்கு, பின்வரும் கேட்டார் என்பதனால், முறிந்து வீழ்ந்த பேரொலி என்பது பொருளாம். அப்பேரொலியையன்றி வில் முறிந்த நிகழ்ச்சியைக் காணாராயினர் என்றும் அது வீழ்ந்து கிடந்ததனையே காணலாயினர் என்றும் கொள்க.

"கல்லை யேற்றலும் கவணினைச் சுழற்றலும் அக்கல்
வல்லை யோட்டலும் ஒருவரும் காண்கிலர் இடிப்பும்
செல்லை யொத்தன சிலைநுதற் பாய்தலும் அன்னான்
எல்லை பாய்ந்திரு ளிரிந்தென வீழ்தலும் கண்டார்"
(தேம்பாவணி. வளன்சனித்த படலம், 29)

என்பதும் இங்கு ஒப்புநோக்கத்தகும். (34)

## வில் முறிந்ததால் எழுந்த ஒலி

784. ஆரிடைப் புகுது நாமென்
★ றமரர்கள் கமலத் தோன்றன்
பேருடை யண்ட கோளம்
பிளந்ததென் றேங்கி னைந்தார்
பாரிடை யுற்ற தன்மை
பகர்வதென் பாரைத் தாங்கி
வேரெனக் கிடந்த நாக
மிடியென வெருவிற் றன்றே.

'ஆர் இடைப் புகுதும் நாம்?' என்று
அமரர்கள், 'கமலத்தோன்தன்
பேர் உடை அண்டகோளம்
பிளந்தது' என்று, ஏங்கி நைந்தார்;
பார் இடை உற்ற தன்மை
பகர்வதுஎன்? பாரைத் தாங்கி
வேர் எனக் கிடந்த நாகம்
இடி என வெருவிற்று அன்றே!

பொ:--(அப்பேரோசை கேட்ட) தேவர்கள் பிரமன் படைத்த பெரிய அண்டகோளமே பிளந்ததென்று கருதி, 'இனி யாரை அடைக்கலம் புகுவோம் நாம்?' என்று ஏங்கி வருந்தினர். விண்ணவர் இவ்வாறுயின் மண்ணிடமாக நிகழ்ந்ததுபற்றி நாம் சொல்லவேண்டுவது யாதுளது? பூமியின்கீழ் அதனைத் தாங்கிக் கொண்டு வேர்போலக் கிடந்த ஆதிசேடனுகிய நாகமும், இடியே தன் மீது தாக்குவது என்று கருதி, அஞ்சுவதாயிற்று.

கு:—விண் மண் பாதலம் என்ற மூவுலகத்தார்க்கும் அச்சம் விளைத்தது, அப் பேரோசை என்றபடி, வில் இற்ற ஒலி, 'தக்கன் வேள்வியில்......முற்றவே மூலகையும் வென்ற மூரிவில், இற்றபே ரொலிகொலன் றிடித்த தீண்டென்ருன்' (எழுச்சிப். 5) 'சிலையை நீயிறுத்த வோசை செவியுறச் சீறிவந்தேன்' (பரசுராமப். 34) 'புரங்கள்வேவத் தனிச்சரந் துரந்தமேரு...... இற்று வீழ்ந்த அன்றெழுந்துயர்ந்த ஓசை' (சுந்தர. 451). 'ஈசன் வில்லிறும் ஒலியும்' (சுந்தர. கிங்கரர்வதை 1.) என்று பின்னரும் ஆசிரியரால் பேசப்பட்டமை நோக்கத்தகும். (35)

**தேவர்களின் மகிழ்ச்சி**

785. பூமழை சொரிந்தார் விண்ணேர்
பொன்மழை பொழிந்த மேகம்
பாமமா கடல்க ளெல்லாம்
பன்மணி தூவி யார்த்த
கோமுனிக் கணங்க ளெல்லாங்
கூறின வாசி கொற்ற
நாமவேற் சனக னின்றெ
னல்வினை பயந்த தென்ருன்.

பூமழை சொரிந்தார் விண்ணேர்;
பொன்மழை பொழிந்த மேகம்;
பாமமா கடல்கள் எல்லாம்
பல் மணி தூவி ஆர்த்த;
கோமுனிக் கணங்கள் எல்லாம்
கூறின ஆசி; 'கொற்ற
நாமம் வேல் சனகன் இன்று என்
நல்வினை பயந்தது என்ருன்.

பொ :—தேவர் மலர்மாரி பொழிந்தார்கள் ; மேகக் கூட்டங்கள் பொன்மாரி பொழிந்தன ; ஒளி பொருந்திய பெருங்கடல்கள் யாவும் பலவகை மணிகளைச் சிதறி ஆரவாரித்தன ; தலைமை பெற்ற முனிவர்கூட்டம் யாவும் வாழ்த்துமொழிகளைக் கூறின ; வெற்றியையும் அச்சந்தரும் வேற்படையையும் உடைய சனகன், யான் முற்பிறப்பிற் செய்த நல்வினை இன்று பயனை அளித்தது என்ருன்.

கு :—பாமம் – ஒளி ; 'பாமமா கடல்' (அரசியல் 7). என்ருர் முன்னரும். இரத்திஞகரமாதலின் – 'பாமமா கடல்களெல்லாம் பன்மணி தூவியார்த்த' என்ருர். (36)

**நகர மாந்தரின் மகிழ்ச்சி 786—790**

786. மாலையு மிழையுஞ் சாந்துஞ்
சுண்ணமும் வாச நெய்யும்
வேலைவெண் முத்தும் பொன்னுங்
காசுநுண் டுகிலும் வீசிப்

பால்வளை யமிர்த ளாய
பல்லியந் துவைப்ப முந்நீர்
ஓல்கிளர்ந் துவாவுற் றென்ன
வொலிநகர் கிளர்ந்த தன்றே.

'மாலையும் இழையும் சாந்தும்
சுண்ணமும் வாச நெய்யும்
வேலை வெண் முத்தும் பொன்னும்
காசும் நுண் துகிலும் வீசிப்
பால் வளை அமிர்து அளாய
பல்இயம் துவைப்ப, முந்நீர்
ஓல் கிளர்ந்து உவா உற்று என்ன,
ஒலி நகர் கிளர்ந்தது அன்றே!

பொ :—அந்த மிதிலைமாநகரம், வெண்சங்கங்களும் அமுத இனிமை கலந்த இசை வாத்தியங்கள் பலவும் ஒலியாநிற்க, மலர் மாலைகளையும் அணிகலன்களையும் சந்தனக் குழம்பையும் வாசனைச் சுண்ணங்களையும் நறுமணமுள்ள தைல வகைகளையும் கடலின் வெண்முத்தையும் பொன்னையும் இரத்தினங்களையும் நுண்ணிய ஆடைகளையும் மக்கள் வழங்கிய செயல்களால், பௌர்ணிமை வந்த அளவில் கடலானது ஒலியுடன் கிளர்ந்தாற்போல ஆரவாரம் மிக்கெழுவதாயிற்று.

கு :—பிராட்டி மணமகனைப் பெற்றதனாலாய மகிழ்ச்சியினால் நகரமாந்தர் அடைந்த குதூகலச் செயல்கள் கூறியவாறு, பௌர்ணமிநாளில் கடல் பொங்கி ஒலித்தல் வில் முறிபட்ட தினத்தில் நகரின் முழக்கத்துக்கு உவமை. ஓல் - என்பது ஓலம் என்பதன் கடைக்குறை. (37)

787. நல்லியன் மகர வீணைத்
தேனுக நகையுந் தோடும்
வில்லிட வாளும் வீச
வேல்கிடந் தனைய நாட்டத்
தெல்லியன் மதிய மன்ன
முகத்திய ரெழிலி தோன்றச்
சொல்லிய பருவ நோக்குந்
தோகையி னாடி னாரே.

நல் இயல் மகர வீணைத் தேன் உக, நகையும் தோடும்
வில் இட, வாளும் வீச, வேல் கிடந்து அனைய நாட்டத்து,
எல் இயல் மதியம் அன்ன முகத்தியர், எழிலி தோன்றச்
சொல்லிய பருவம் நோக்கும் தோகையின், ஆடினரே.

பொ :—வேற்படை கிடந்தாற்போலும் கண்களையும், இரவில் எழும் சந்திரன்போன்ற முகத்தையும் உடைய மங்கையர்கள், குறிப்பிட்ட பருவத்தில் மேகங்கள் தோன்றியதும் மயில்கள் (தோகை விரித்து) ஆடுவதுபோல, நல்லிலக்கணம் அமைந்த மகர யாழின் இசைத் தேன் ஒழுகவும் புன்முறுவலும் காதணியும் ஒளி பரப்பவும் நடனம் புரியலாயினர்.

கு :—பற்களின் ஒளி விடாதுதோன்றலின் 'வில்லிட' என்றும் வயிரக் காதணிகள் விட்டுவிட்டு ஒளிர்தலின் 'வாள்வீச' என்றும், இவற்றால் வில்லையும் வாளையும் வீசிக்கொண்டு மகளிர் ஆடினர் என்பது குறிப்பிக்கப்பட்டதென்றும் உரைநயம் கூறுவதுண்டு. (38)

788. உண்ணற வருந்தி ஞரிற்
சிவந்தொளிர் கருங்கண் மாதர்
புண்ணுறு புலவி நீங்கக்
கொழுநரைப் புல்லிக் கொண்டார்
வெண்ணிற மேக மேன்மேல்
விரிகடல் பருகு மாபோன்
மண்ணிறை வேந்தன் செல்வம்
வறியவர் முகந்து கொண்டார்.

உண் நறவு அருந்தினரின் சிவந்து ஒளிர் கருங்கண் மாதர்,
புண் உறு புலவி நீங்கக் கொழுநரைப் புல்லிக் கொண்டார்;
வெண்ணிற மேகம் மேல் மேல் விரி கடல் பருகுமா போல்,
மண் நிறை வேந்தன் செல்வம் வறியவர் முகந்துகொண்டார்.

பொ ;—பருகற்குரிய மதுவை அருந்தியவர்போலச் செந்நிறத்துடன் விளங்கும் கருங்கண்களையுடைய மகளிர், மனத்தைப் புண்படச் செய்யும் ஊடல் நீங்குமாறு, தம் கணவரைத் தழுவிக் கொண்டனர். அலைகள் மேல் மேல் பரவும் கடலில் வெண்மேகங்கள் இறங்கி நீரைப் பருகுவதுபோல, நிரம்பப்பெற்ற அரசனது உலகச் செல்வங்களை வறியவர்கள் வேண்டியபடி வாரிக்கொண்டு சென்றார்கள்.

கு :—மண்ணிறை செல்வம் – இம்மையில் அறநெறியில் ஈட்டிய பெரும்பொருள்கள். (39)

789. வயிரியர் மதுர கீத
மங்கைய ரமுத கீதம்
செயிரியர் மகர யாழின்
றேம்பிழி தெய்வ கீதம்
பயிர்கிளை வேயின் கீத
மென்றிவை பருகி விண்ணோர்
உயிருடை யுடம்பு மெல்லா
மோவிய மொப்ப நின்றார்.

**வயிரியர் மதுர கீதம், மங்கையர் அமுத கீதம்,**
**செயிரியர் மகர யாழின் தேம் பிழி தெய்வ கீதம்,**
**பயிர் கிளை வேயின் கீதம், என்று இவை பருகி, விண்ணோர்**
**உயிர் உடை உடம்பும் எல்லாம் ஓவியம் ஒப்ப நின்றார்.**

பொ :—இசை பாடுவோரின் இனிய கீதங்களும், மகளிரின் அமுத கீதங்களும், பாணர்கள் மகரயாழினோடொத்துத் தேன் வடிந்தாற்போற் பாடும் தெய்வகீதங்களும், வேய்ங்குழலினின்று ஏழிசைக் கிளைகள் ஒலிக்கும் கீதங்களும் என்ற இவற்றைச் செவியார நுகர்ந்தவண்ணம் தேவர்கள் உயிருள்ள உடல் எல்லாம் சித்திரம்போல் அசைவற நின்றார்கள்.

கு :—செயிரியர் – பாணர், 'செயிரியர் இசைத்தேன் சிந்த' (எழுச்சி-68) என்பர் பின்னும். (40)

790. ஐயன்வில் லிறுத்த வாற்றல்
காணிய வமரர் நாட்டுத்
தையலா ரிழிந்து பாரின்
மகளிரைத் தழுவிக் கொண்டார்
செய்கையின் வடிவி னுடல்
பாடலிற் றெளித றேற்றார்
மையரி நெடுங்க ணோக்க
மிமைத்தலு மயங்கி நின்றார்.

ஐயன் வில் இறுத்த ஆற்றல் காணிய, அமரர் நாட்டுத்
தையலார் இழிந்து பாரின் மகளிரைத் தழுவிக் கொண்டார்:
செய்கையின் வடிவின் ஆடல் பாடலில் தெளிதல் தேற்ருர்:
மை அரி நெடுங்கண் நோக்கம் இமைத்தலும், மயங்கிநின்ருர்.

பொ :—தேவலோகத்து மடந்தையர், இராமபிரான் சிவ தனுசை வளைத்து முறித்த ஆற்றலைத் காணவேண்டி விண்ணி னின்று இறங்கிவந்து, செய்கை வடிவம் ஆடல் பாடல்களில் (தமக்கும் மண்ணுலக மடந்தையர்க்கும்) வேறுபாடு காண முடியாதவர்களாய், இம்மண்ணுலக மங்கையரைத் தழுவிக் கொண்டார்கள். அப்போது (அம்மங்கையரின்) மையிட்டுச் செவ்வரி படர்ந்துள்ள நீண்ட கண் இமைகொட்டி நின்ற அளவில், (இவர் நம்மினத்தவர் அல்லரே என்று) மயங்க லாயினர். (41)

## நகரமாந்தர்கூற்று. 791–792

**791.** தயரதன் புதல்வ னென்பார்
தாமரைக் கண்ண னென்பார்
புயலிவன் மேனி யென்பார்
பூவையும் பொருவு மென்பார்
மயலுடைத் துலக மென்பார்
மானுட னல்ல னென்பார்
கயல்பொரு கடலுள் வைகுங்
கடவுளே காணு மென்பார்.

'தயரதன் புதல்வன்' என்பார்;
'தாமரைக் கண்ணன்' என்பார்;
'புயல் இவன் மேனி' என்பார்;
'பூவையும் பொருவும்' என்பார்;
'மயல் உடைத்து உலகம்' என்பார்;
'மானுடன் அல்லன்' என்பார்;
'கயல் பொரு கடலுள் வைகும்
கடவுளே காணும்!' என்பார்.

பொ :—(உலகாளும்) தசரதச் சக்கரவர்த்தி திருமகன் ஆவன் இவன் என்பாரும், சக்கரவர்த்தி குமாரனுயினும் தாமரை போலும் திருக் கண்கள் உடையவன் (ஆதலால் திருமால் அம்சம்

போலும்) என்பாரும், (ஆம். அஃது உண்மையே) இவன் திருமேனி நிறம் புயல்போலவும் காயாம்பூப்போலவும் உள்ளது என்பாரும், (எவ்வாறாயினும்) மானுடப் பிறவியன் அல்லன் இவன் என்பாரும், உலகியற்கை மயக்கமுடையது (ஆதலால் இவ்வாறு பலபடக்கூறுகிறார்கள்) என்பாரும், ஆனால், கயல் மீன் கண்ணுடைய திருப்பாற்கடலிற் கண்வளரும் தெய்வமே இவன் என் பாரும் (ஆக மக்கள்) பலபடி மொழியலானார்கள். (42)

**792.** நம்பியைக் காண நங்கைக்
காயிர நயனம் வேண்டும்
கொம்பினைக் காணுந் தோறுங்
குரிசிற்கு மன்ன தேயால்
தம்பியைக் காண்மி னென்பார்
தவமுடைத் துலக மென்பார்
இம்பரிந் நகரிற் றந்த
முனிவனை யிறைஞ்சு மென்பார்

**‘நம்பியைக் காண நங்கைக்கு**
**ஆயிரம் நயனம் வேண்டும்,**
**கொம்பினைக் காணும் தோறும்**
**குரிசிற்கும் அன்னதே ஆல்,**
**தம்பியைக் காண்மின்!’ என்பார்;**
**‘தவம் உடைத்து உலகம்’ என்பார்;**
**‘இம்பர் இந் நகரில் தந்த**
**முனிவனை இறைஞ்சும்!’ என்பார்.**

பொ :—இப்பெருமகனைக் காண நம் பிராட்டிக்குக் கண்கள் ஆயிரம் வேண்டும் (என்று சிலர் கூற), பூங்கொம்புபோலும் இவளைக் காணுந்தோறும் (புதிய புதிய வடிவழகே புலப்படுதலால்) ஆயிரமாயிரமாகக் கண்கள் இப்பெருமானுக்கும் வேண்டும் (என்பார்கள்; இது நிற்க அருகிலுள்ள) தம்பியின் வடிவழகைப் பாருங்கள் என்பர் ஒரு சிலர். மற்றும் சிலர், முன் செய்த தவத்தாலேதான் இந்தச் சுந்தரமூர்த்திகளை இவ்வுலகம் உடையதாயிற்று என்பர். (வேறு சிலரோ, பொதுப்படக் கூற வேண்டா) இப் பெருமக்களை இவ்வுலகிலே நம் நகரிடையே கொணர்ந்து (நாம் காண) அளித்துதவிய முனிவரனைச் சிறப்பாக நாம் வணங்குவோம் என்பார்கள்.

கு :—கொம்பினைக் காணுந்தோறும் இமைத்தல் முதலிய இடையீடுகளால் பார்வைத்தடை நேருமன்றே? அவ்வாறு விட்டு விட்டுப் பார்க்குமிடத்து முன்னிலும் புதிய புதிய பொலிவழகே புலப்படுதலால் ஆயிரமாயிரங் கண்கள் இந் நம்பிக்கும் வேண்டும் என்றபடி. பேரழகைப் பருகுவோர்க்கு இமைத்தலும் தடையாம் என்பது—'பெரியவனை மாயவனை......கண்ணிமைத்துக் காண்பார்தங் கண்ணென்ன கண்ணே' என்ற இளங்கோவடிகள் வாக்காலும் (சிலப். ஆய்ச்சியர். படர்க்கைப் பரவல் 2) அறிக. (43)

## சீதையின் நிலை 793—794

**793.** இற்றிவ ணின்ன தாக
மதியொடு மெல்லி நீங்கப்
பெற்றுயிர் பின்னுங் காணு
மாசையாற் சிறிது பெற்ற
சிற்றிடைப் பெரிய கொங்கைச்
சேயரிக் கரிய வாட்கட்
பொற்றொடி மடந்தைக் கப்பா
லுற்றது புகல லுற்றும்.

**இற்று இவண் இன்னது ஆக, மதியொடும் எல்லி நீங்கப் பெற்று, உயிர் பின்னும் காணும் ஆசையால் சிறிது பெற்ற, சிறு இடைப் பெரிய கொங்கைச் சேய் அரிக் கரிய வாள் கண் பொன் தொடி மடந்தைக்கு, அப்பால் உற்றது புகலல் உற்றும்.**

பொ :—சனகராசனது இச்சபையில் இந்நிகழ்ச்சியானது இவ்வாறு நடக்க, சந்திரனோடு இரவு நீங்கப்பெற்று, அவ்விளங் குமரனைப் பின்னும் ஒருமுறை காணவேண்டும் என்ற பெரு விருப்பால் தேய்ந்துவரும் தன்னுயிரைச் சிறிது பெற்றுள்ள—சிற்றிடையையும் பெருங் கொங்கைகளையும் செவ்வரியும் கருமை ஒளியும் கொண்ட கண்களையும் பொன்மயமான வளைக் கைகளையும் உடைய சீதாதேவிக்கு, (கன்னிமாடமாகிய) அவ்விடத்து நேர்ந்ததை இனிக் கூறத் தொடங்கினோம்.

கு :—இதுவரை இராமபிரான் செய்திகளே கூறிவந்தவர், கன்னிமாடத்தருகில் அப்பெருமானைக் கண்டு பெருங் காதலுற்ற பிராட்டியின் நிலைமைகளையும் பத்துக் கவிகளால் கூறுகின்றார். 'அக்குமரனை இன்னும் கண்ணிற் கண்டு அறிந்து உயிரிழக்கவு

மாகுமே கொலாம்' என்று அவள் முன் கூறியவளாதலின், 'உயிர் பின்னும் காணும் ஆசையால் சிறிது பெற்ற' என்றார். (44)

**794.** ஊசலா டுயிரி னோடு
முருகுபூம் பள்ளி நீங்கிப்
பாசிழை மகளிர் சூழப்
போயொரு பளிக்கு மாடக்
காசிரு மரையின் பொய்கைச்
சந்திர காந்த மீன்ற
சீதநீர் தெளித்த மென்பூஞ்
சேக்கையை யரிதிற் சேர்ந்தாள்.

**ஊசல் ஆடு உயிரினோடும் உருகு பூம் பள்ளி நீங்கிப், பாசிழை மகளிர் சூழப் போய், ஒரு பளிக்கு மாடக் காசு இல் தாமரையின் பொய்கைச் சந்திரகாந்தம் ஈன்ற சீத நீர் தெளித்த மென் பூஞ் சேக்கையை, அரிதின் சேர்ந்தாள்.**

பொ :—(சீதாதேவியானவள்) ஊசல்போலப் போவதும் வருவதுமான பிராணனோடும், உடல் உருகுதற்குக் காரணமான மலர்ப்பள்ளியை நீங்கிப் பசும்பொன்னணிகள் பூண்ட சேடியர் சூழ்ந்துவரக் கன்னிமாடத்தைவிட்டுப்போய், குற்றமற்ற தாமரைப் பொய்கையிடையே (அமைந்த) பளிக்குமாடத்திலே, சந்திர காந்தக் கற்கள் வெளிக்கான்றதும் குளிர்ந்துள்ளதுமான நீர் தெளித்த மெல்லிய அணையை அரிதிற் சேர்ந்தாள்.

தாமரையின் பொய்கைப் பளிக்குமாடம் என இயையும். (45)

**சீதையின் ஆற்றாமைக் கூற்றுக்கள். 795–803**

**795.** பெண்ணிவ ணுற்ற தென்னும்
பெருமையா லருமை யான
வண்ணமு மிலைக ளாலே
காட்டலால் வாட்டந் தீர்ந்தேன்
தண்ணறுங் கமலங் காளென்
றளிர்நிற முண்ட கண்ணின்
உண்ணிறங் காட்டி னீரென்
னுயிர்தர வுலோவி னீரே.

"பெண்இவண் உற்றது என்னும் பெருமையால், அருமை ஆன
வண்ணமும் இலைகளாலே காட்டலால், வாட்டம் தீர்ந்தேன்
தண் நறுங் கமலங்காள்! என் தளிர் நிறம் உண்ட கண்ணின்
உள் நிறம் காட்டினீர் என் உயிர்தர உலோவினீரே!"

பொ:—"தண்மையும் மணமுமுள்ள தாமரைக்கொடிகாள்! 'இவ்விடம் விரகதாபம் தீர அடைந்தவள் (அபலையான) ஒரு பெண்' என்று கருதும் பெருந்தன்மையோடு, அவ்விளங் குமரனது காண்டற்கரிய திருமேனி நிறத்தை நும் இலைகள் மூலம் நீவிர் காட்டி நிற்றலால், என் மன வாட்டம் (ஒருபடியாக) தீரப் பெற்றேன்; (இதனுடன்) எனது தளிர்போலும் நிறத்தைக் கவர்ந்த (அப்பெருமானது) திருக்கண்வண்ணத்தையும் (மலர்களைக் கொண்டு) காட்டினீர்; (இவையெல்லாம் உபகாரச் செயலே) ஆனால் என் உயிர்போன்ற அப் பெருமானை என் முன் தந்து நிறுத்தற்குமட்டும் உலோபஞ் செய்தீர்களே? இஃதென்னே?"

கு:—இராமபிரானது நிறத்தையும் கண்களையும் போலியாகத் தாமரை காட்டிநின்றதைப் புகழ்ந்து, தன் உயிரனைய அவனை அது காட்டத் தவறியதனால் பிராட்டி பழிப்பாளாயினளென்க. 'கண் கை கால் தூய செய்ய மலர்களாச்...சாயற் சாமத் திருமேனி தண்பாசடையாத் தாமரைநீள் வாசத் தடம்போல் வருவானே ஒருநாள் காண வாராயே' என்ற பெரியார் பாசுரமும் (திருவாய். 8-5-1), 'வண்ணநறுந் தாமரை மலரும் வாசக்குவளை நாண்மலரும், புண்ணினெரியும் ஒரு நெஞ்சம் பொதியு மருந்திற் றரும்பொய்காய், கண்ணு முகமும் காட்டுவாய் வடிவும் ஒருகாற் காட்டாயோ, ஒண்ணு மென்னின் அஃதுதவா துலோவினாரும் உயர்ந்தாரோ' (கிஷ்கிந்தா. பம்பைப். 25) என்று ஆசிரியர் பின்னும் கூறுவதும் இங்கு நினைப்பிடத்தகும். இங்கே உயிர் என்றது இராமபிரானை; சீதாபிராட்டியின் உயிரும் ஆம். உலோவுதல்-உலோபஞ்செய்தல், கடும்பற்றுள்ளங் கொள்ளுதல்; 'ஏதும் உலோவாய் காண் நம்பீ' (பெரியாழ்வார் திருமொழி. 2-7-6) என்றார் பெரியாரும். இச்செய்யுளுக்கு, திரு. வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள் எழுதிய விரிவுரை, விளக்கம் தருவதாயிருத்தலால் அவ்விரிவுரையும் இங்கே சேர்க்கப்பட்டுள்ளது.

பொருள்:—"'தாமரைகளே.' "இங்கு வந்தது பெண்" என்று எண்ணுகின்ற (எனவே இரக்கங்கொள்கின்ற) பெருந்தன்மையினால் என் காதலனது அருமையான பச்சைநிறத்தை உங்களுடைய இலைகளினாலே காட்டுகின்றீர்கள்; அவ்வாறு காட்டு

தலால், யான் அவனைக் காணாத சோர்வு நீங்கினேன்; எனது செம்மாந்தளிர்போலும் நிறத்தைக் கவர்ந்துகொண்ட அவனுடைய கண்களில் உள்ள சிவப்புநிறத்தை உங்களுடைய பூக்களால் நீங்கள் காட்டிச் சிறிது அருள்செய்தீர்கள்; முழுதும் அருள்செய்து, என் உயிரான அவனைத் தருதற்கு உலோபஞ் செய்தீர்கள்; யாது காரணமோ?''

"இவண் - இவ்விடம், என்னும் - என்று எண்ணும்; 'அன்றறிவா மென்னாது அறஞ்செய்க' என்ற குறளில், 'என்னாது' என்பது, 'என்று கருதாது' எனப் பொருள்படல் காண்க. பெருமை - பெரியாரது தன்மை—குறள் 68-ஆம் அதி. பெருமை. வண்ணமும் என்பதில் உம்மை இசைநிறை. தண் நறும் கமலங்காள் - குளிர்ச்சியாகிய வாசனையுள்ள தாமரைகளே! 'உண்ட', கவர்ந்துகொண்ட என்ற பொருளைக் குறிப்பால் உணர்த்தியது, கண்ணினுண்ணிறம் - கண்ணின் உள் நிறம்—கண்ணில் உள்ள நிறம்; கண்ணுக்குள்ளே உள்ள நிறம் எனலும் ஆம். இவண் உற்றது பெண், என இயைக்க.''

"'அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்'' என்ற சமயத்திலே தன்னை நோக்கிய இராமனது கண்ணழகிலே ஈடுபட்டுக் காதல்கொண்ட சீதை, அக்காதலால் தனது தேகம் தன்னிறமான செம்பொன்னிறம் மாறிப் பைம்பொன்னிறமான பசலை போர்த்ததனால், 'தளிர் நிறம் உண்ட கண்' என்றாள். இராமன் தேக நிறத்துக்கு உவமானமான இலைகளைக் கூறிக் கண்ணிறத்துக்கு உவமானமான பூக்களைக் கூறாது உய்த்துணரவைத்தார்.''

"காணாமற்போன ஒரு பொருளின் சில பாகங்களைக் காட்டியவர்பால் அப்பொருள் முழுதும் இருக்குமென்று கருதி, அதனையிழந்தவர், காட்டியவரை நோக்கி, 'அதன் சில பாகங்களைக் காட்டினீர்: ஆதலால் அது உம்மிடம் இருக்கின்றது; கொடுப்பீராக' என்று வேண்டுதலும், கொடாவிடில், 'கொடாமல் உலோபஞ் செய்தீரே' என்று குறைகூறலும் இயல்பன்றோ? அவ்வாறே, 'சீதை, 'தாமரைகளே! என் உயிர் (ஆன காதலன்) உடைய மெய்ந்நிறமும் கண்ணிறமும் காட்டினீர். ஆதலால், அவ்வுயிர் உம்மிடத்துள்ளது. அதனைக் கொடுத்தல் வேண்டும் என்று இரக்கின்றேன். கொடுக்கின்றிலீர். இவ்வாறு உலோபஞ் செய்யலாமோ?' என்று நொந்து குறைகூறிப் புலம்பினாள் என்ற விரிந்த கருத்தை எவ்வளவு சுருங்கிய சொற்களால் எத்துணை ஆழம்பட அழகாகக் கவி கூறியிருக்கிறார் என்பதை நோக்குக. மேற்கூறியவாறு பொருள் கூறுதலால், 'கண்ணின் உண்ணிறம் காட்டி நீர் என் உயிர்தர உலோவினீரே' என்பதில், 'கண்ணிறங்

காட்டவல்லார் உயிர்தர வல்லாராதல் எங்ஙனம்? இரண்டுக்கும் பொருத்தம் என்னை?' என்று இயல்பாக எழும் சந்தேகம் நிவிர்த்தியாதலும் காண்க.'' (46)

**796.** நாணுலாவு மேருவோடு
★ நாணுலாவு பாணியும்
தூணுலாவு தோளும்வாளி
யூடுலாவு தூணியும்
வாணிலாவி னூலுலாவு
மாலைமார்பு மீளவும்
காணலாகு மாகினாவி
காணலாகு மேகொலாம்.

" நாண் உலாவு மேருவோடு நாண் உலாவு பாணியும்,
தூண் உலாவு தோளும், வாளிஊடு உலாவு தூணியும்,
வாள் நிலாவின் நூல் உலாவும் மாலை மார்பும், மீளவும்
காணல்ஆகும் ஆகின், ஆவி காணல் ஆகுமே கொலாம்!"

பொ: ''(ஆதிசேடனை) நாணையுடைய மேருப்போலும் (கோதண்ட) வில்லோடு அதன் நாணில் உலாவுகின்ற திருக்கையும், தூண்களை ஒத்த தோள்களும், ஊடு செருகப்பெற்ற அம்பறாத் தூணியும், ஒளியுள்ள நிலாப்போலப் பூணூல் அலையும் மாலை அணிந்த திருமார்பும் மறுமுறையும் காணக் கிடைக்குமாயின், என் உயிரை நான் காணுதல் கூடும் (அது கூடுங்கோலோ?)

கு:—இவை காணப் பெறு ஆயின், என் உயிர் இவ்வுடலில் தங்காது என்றபடி. (47)

**797.** விண்டலங் கலந்திலங்கு
திங்களோடு மீதுசூழ்
வண்டலம் பலங்கறங்கு
பங்கியோடும் வார்சிலைக்
கொண்டலொன் றிரண்டுகண்ணின்
மொண்டு கொண்டென் னாவியை
உண்டதுண்டெ னெஞ்சினின்று
முண்டதென்று முண்டரோ.

"விண்தலம் கலந்து இலங்கு
திங்களோடு மீது சூழ்
வண்டு அலம்பு அலங்கல் தங்கு
பங்கியோடும் வார்சிலைக்
கொண்டல் ஒன்று இரண்டு கண்ணின்
மொண்டுகொண்டு என் ஆவியை
உண்டது உண்டு, என்நெஞ்சின் இன்றும்
உண்டு, அது என்றும் உண்டு, அரோ!"

பொ :—"விண்ணிடத்திற் சேர்ந்து விளங்கும் சந்திரனோடும் மேலிடம் சுற்றிவரும் வண்டுகள் ரீங்காரம்செய்யும் மாலைசூடிய மயிர்முடியோடும் கூடி, நீண்ட வில்லைத் தரித்த மேகமொன்று தன் இரு கண்களால் என் ஆவியாகிய நீரை முகந்து பருகிவிட்ட தென்பது உண்மையே, அந்த மேகம் என் மனத்தில் நீங்காமல் இப்போதும் உள்ளது, எப்போதும் அஃது உள்ளதேயாம்."

கு :—'மேகம் ஆவியாலானது' என்ற வழக்கிற்கும் ஏற்பக் 'கொண்டல் என் ஆவியைமொண்டு உண்டது' என்று கூறிய கவி நயம் காணத்தகும்' *(48)*

**798.** பஞ்சரங்கு தீயினாவி
பற்றநீடு கொற்றவில்
வெஞ்சரங்க ணெஞ்சரங்க
வெய்யகாம னெய்யவே
சஞ்சலங்க லந்தபோது
தையலாரை யுய்யவந்
தஞ்சலஞ்ச லென்கிலாத
வாண்மையென்ன வாண்மையே

"பஞ்சு அரங்கு தீயின், ஆவி பற்ற நீடு கொற்ற வில்
வெம் சரங்கள், நெஞ்சு அரங்க வெய்ய காமன் எய்யவே,
சஞ்சலம் கலந்த போது, தையலாரை உய்ய வந்து,
'அஞ்சல்! அஞ்சல்!' என்கிலாத ஆண்மை, என்ன ஆண்மையே?"

பொ :—"கொடுமையுள்ள காமதேவன், பெரிய வெற்றி பெற்ற தன் வில்லால், கொடிய அம்புகளை, பஞ்சுக்கூட்டத்தை அழிக்கும் அக்கினிபோல, என்னுயிரைப் பற்றி நிற்கவும், அதனால் என்மனம் நையவும் பிரயோகித்தலால் துன்புற்றுக் கலங்கும் இப்போது,

உயிர்பிழைக்கும்படி அருகில் வந்து (அபலைகளான) பெண் பாலாரை 'அஞ்சாதீர், அஞ்சாதீர்' என்று அபயமளிக்காத ஆண்மை எத்தகைய ஆண்மையோ?" (49)

799. இளைக்கலாத கொங்கைகா
ளெழுந்துவிம்மி யென்செய்தீர்
முளைக்கலா மதிக்கொழுந்து
போலும்வாண் முகத்தினன்
வளைக்கலாத விற்கையாளி
வள்ளன்மார்பி னுள்ளுறத்
திளைக்கலாகு மாகிலான
செய்தவங்கள் செய்ம்மினே.

"இளைக்கலாத கொங்கைகாள்! எழுந்து விம்மி என் செய்தீர்? முளைக் கலா மதிக் கொழுந்து போலும் வாள் முகத்தினன், வளைக்கலாத வில் கை யாளி, வள்ளல், மார்பின் உள் உறத் திளைக்கல் ஆகும் ஆகில், ஆன செய் தவங்கள் செய்ம்மினே!"

பொ:—'இளைத்து வீழாது பருத்துவரும் கொங்கைகளே! நீர் மேன்மேல் எழுந்து விம்மி வருதலால் என்ன காரியம் சாதித்து விட்டீர்கள்? (மேலிடமாக) உதித்தலில்லாத சந்திரன்போலும் ஒளிமுகத்தையுடையவனும், வளைக்கமுடியாத சிவதனுசைக் கையாண்டு வளைத்தவனும் ஆகிய அப்பிரானுடைய திருமார்பி னுள்ளே இறுகத் தழுவக்கூடும்வழி ஏற்படுமாயின், அதற்கேற்ற படி செய்யத்தக்க தவங்களைச் செய்யுங்கள்."

கு:—நீவிர் வெறுமனே பருத்தெழுந்து விம்முதலால் யாதொரு பயனுமில்லை என்றபடி. (50)

800. எங்குநின் றெழுந்ததிந்த
விந்துவந்தெ னெஞ்சுலாய்
அங்கியென் றனங்கனெய்த
வம்பின்வந்த சிந்தைநோய்
பொங்குகின்ற கொங்கைமேல்
விடம்பொழிந்த தென்னினும்
கங்குல்வந்த திங்களன்
றகங்களங்க மில்லையே.

"எங்கு நின்று எழுந்தது இந்த
இந்து வந்து? என் நெஞ்சு உலாய்
அங்கி என்று அனங்கன் எய்த
அம்பின் வந்த சிந்தை நோய்
பொங்குகின்ற கொங்கைமேல்
விடம் பொழிந்தது என்னினும்
கங்குல்வந்த திங்கள் அன்று,
அகம் களங்கம் இல்லையே!"

பொ:—"என் மனத்திலே உலாவி அவ்விடத்தே நெருப்புப் போல மன்மதன் எய்த அம்பினால் உண்டான மனோவியாதியானது பெரிதும் வெளிப்படும் இடமான என் கொங்கைகள்மேல், விடத்தைப் பொழிந்தது என்றாலும், (இதோ தோன்றுவது)நேற்றிரவில் தோன்றி வருத்திய சந்திரனன்று; (என்னெனில்) இதனிடையே களங்கம் காணப்படவில்லை; இந்தச் சந்திரன் எங்கு நின்று வந்ததோ தெரிந்திலேன்?"

கு:—உரு வெளிப்பாட்டில் பெருமானது முகசந்திரன் தோன்ற அதனால் உண்டான தன் துயரங்களைப் பிராட்டி கூறியவாறு.

(51)

**801.** அடர்ந்துவந் தனங்கனெஞ்
சழன்றுசிந் தும்பெனும்
விடங்குடைந்த மெய்யினின்று
வெந்திடா தெழுந்துவெங்
கடந்துதைந்த காரியானை
யன்னகாளை தாளடைந்
துடன்றொடர்ந்து போனவாவி
வந்தவாறெ னுள்ளமே.

"அடர்ந்து வந்து அனங்கன் நெஞ்சு
அழன்று சிந்தும் அம்பு எனும்
விடம் குடைந்த மெய்யின் நின்று
வெந்திடாது எழுந்து, வெம்
கடம் துதைந்த கார் யானை
அன்ன காளை தாள் அடைந்து
உடன் தொடர்ந்து போன ஆவி,
வந்த ஆறு என்? உள்ளமே!"

பொ:—"என் நெஞ்சமே! காமதேவன் நெருங்கிவந்து மனம் கொதித்து எய்து சிந்தும் அம்பென்னும் விடவெள்ளத்தில் மூழ்கிய உடம்பிலிருந்து வெந்தழியாமல் வெளிப்பட்டுக் கொடிய மதநீர் பெருகும் கார்யானை ஒத்த காளைபோன்ற அப்பெருமானது திருவடிகளைச் சரணடைந்து அவனுடன் தொடர்ந்து சென்ற என்னுயிர், திரும்பி வந்த விதம் என்னையோ?"

கு:—விரகதாபத்தால் உயிர் போனதாகவே கருதப்பட்ட நிலை மாறித் தன் அறிவு வந்தபோது பிராட்டி கூறியவாறு. (52)

**802.** விண்ணுளே யெழுந்தமேக
மார்பினூலின் மின்னெடிம்
மண்ணுளே யிழிந்ததென்ன
வந்துபோன மைந்தனூர்
எண்ணுளே யிருந்தபோதும்
யாவரென்று தேர்கிலேன்
கண்ணுளே யிருந்தபோது
மென்கொல் காண்கிலாதவே.

"விண்ணுளே எழுந்த மேகம், மார்பின் நூலின் மின்னெடு இம்
மண்ணுளே இழிந்தது என்ன, வந்து போன மைந்தனார்,
எண்ணுளே இருந்தபோதும் யாவர் என்று தேர்கிலேன்,
கண்ணுளே இருந்தபோதும் என்கொல் காண்கிலாதவே?"

பொ:—"வானத்தில் தோன்றிய மேகமானது மின்னலோடும் இம்மண்ணுலகில் இறங்கியது என்று சொல்லும்படி, திருமார்பில் அணிந்த முப்புரிநூலுடனே கன்னிமாடத்தின் முன் என்கண் காண வந்துசென்ற அழகனார், என்மனத்துள்ளே நீங்காதிருந்தவராயினும் 'யார் அவர்' என்று தெரிந்துகொள்ள முடியவில்லை. என் கண்ணுக்குள்ளே இருந்தாராயினும், எதிரே காண முடியாதிருப்பது என்னையோ?"

கு:—'காலம் இடங்களால் சேய்மையானவற்றையும் அறிய வல்ல மனம் தன்னுள் இருப்பவரை இன்னார் என்று அறியாமையும், தூரமான பொருளையும் காணவல்ல கண் தன்னுள் இருப்பவரைக் கண்டுகொள்ளாமையும் ஒரு பெருவியப்பே' என்று பிராட்டி கூறியவாறு. (53)

803. பெய்கடற் பிறந்தயல்
பிறக்கொணு மருந்துபெற்
றையபொற் கலத்தொடங்கை
விட்டிருந்த வாதர்போல்
மொய்கிடக்கு மண்ணறேண்
முயங்கிடாது முன்னமே
கைகடக்க விட்டிருந்து
கட்டுரைப்ப தென்கொலோ.

"பெய் கடல் பிறந்து அயல் பிறக்க ஒணு மருந்து பெற்று,
ஐய பொன் கலத்தொடு அங்கை விட்டு இருந்த ஆதர் போல்.
மொய் கிடக்கும் அண்ணல் தோள் முயங்கிடாது, முன்னமே
கை கடக்க விட்டு இருந்து, கட்டுரைப்பது என்கொலோ?"

பொ:—வளங்கள் பெய்யப்பெற்ற பாற்கடலிலே தோன்றி, வேறிடத்தில் உண்டாக முடியாத தேவாமிர்தத்தைத் தம் நல்வினைப் பயனுல் அடைந்தும் (நுகர்ந்து பயன்பெறுமல்), அழகிய பொற்கலசத்தோடு தம் கையிலிருந்து அதனை நழுவவிட்ட அறிவிலிகள் போல, வலிமைமிக்க அப்பெருமானது தோள்கள் (காணப்பெற்றும்), பெற்ற அப்போதே தழுவிப் பயன்பெறுமல், கைநழுவ விட்டொழித்துப் பின் தனியிருந்து பலவாருகக் கூறிப் புலம்புவது எதன்பொருட்டு? (54)

ஒரு சுவடியுள் இதன்பின் பின்வருமாறு ஒரு அதிகப்பாடல் காணப்படுகிறது.

803 (a) என்று சால வேவெ தும்பி யின்ன வின்ன வாறெலாம்
ஒன்ற லாது பன்னி யாவி யூச லாட வாடுவாள்
மன்றல் நாறு மாலை மீளி மான யானை போலமுன்
சென்ற வீதி யூடு பார்வை செல்ல நிற்கு மெல்லையே.

**கவிக்கூற்று**

804. என்றுகொண்டு ணைந்துநைந்
திரங்கிவிம்மி விம்மியே
பொன்றிணிந்த கொங்கைமங்கை
யிடரின்மூழ்கு போழ்தின்வாய்க்

குன்றமன்ன சிலைமுறிந்த
　　கொள்கைகண்டு குளிர்மனத்
தொன்றுமுண்கண் மதிமுகத்
　　தொருத்திசெய்த துரைசெய்வாம்.

என்று கொண்டு, உள் நைந்து நைந்து,
　　இரங்கி விம்மி விம்மியே,
பொன் திணிந்த கொங்கை மங்கை
　　இடரின் மூழ்கு போழ்தின்வாய்,
குன்றம் அன்ன சிலை முறிந்த
　　கொள்கை கண்டு, குளிர் மனத்து
ஒன்றும் உண் கண் மதி முகத்து
　　ஒருத்தி செய்தது, உரை செய்வாம்.

பொ:—(பொன் போலும்) தேமல் செறிந்த தனங்களுடைய பிராட்டி இவ்வாறு கூறி மனம் மிகவும் நைந்து இரங்கிப் பெரிதும் விம்மலுற்றுத் துன்பக்கடலில் அழுந்திநின்ற பொழுதில், குளிர்ந்த மனத்தோடு கூடியவளும் மைதீட்டிய கண்களும் மதிபோலும் முகமும் உடையவளுமான தோழி ஒருத்தி, மலைபோலும் வில் முறிபட்ட செயலை நேரிற் பார்த்துவந்து கூறிய செயலை இனிச் சொல்லுவேன். (55)

## தோழி நீலமாலை வருதல்

805. வடங்களுங் குழைகளும் வான வில்லிடத்
★ தொடர்ந்துபூங் குழல்களுந் துகிலுஞ் சோர்தர
நுடங்கிய மின்னென நொய்தி னெய்தினாள்
நெடுந்தடங் கிடந்தகண் ணீல மாலையே.

வடங்களும் குழைகளும் வான வில் இடத்,
தொடர்ந்து பூங் குழல்களும் துகிலும் சோர்தர,
நுடங்கிய மின் என நொய்தின் எய்தினாள்,
நெடுந்தடம் கிடந்த கண் நீலமாலையே.

பொ:—நீட்சியும் பெருமையுமான கண்களையுடைய நீலமாலை என்ற சேடியானவள், கழுத்தணியான ஆரங்களும் காதணியான குழைகளும் வானவில்லைப் போலப் பலநிற ஒளிகளை வீசவும் பூ அணிந்த கூந்தலும் உடுத்த உடையும் தொடர்ச்சியாகச் சரியவும் துவண்ட மின்னற்கொடிபோல வேகமாக அங்கு ஓடி வந்தாள்.

கு:—வானவில் இடுதல் – இந்திரவில்லின் தன்மையவாய்ப் பலநிற ஒளி வீசுதல், 'திருவிலிட்டுத் திகழ்தரு மேனியன்' (சிலப். 15, 156) என்பர். (56)

## சீதை தோழியை வினுதல்

806. வந்தடி வணங்கிலள் வழங்கு மோதையள்
அந்தமி லுவகைய ளாடிப் பாடினள்
சிந்தையுண் மகிழ்ச்சியும் புகுந்த செய்கையும்
சுந்தரி சொல்லெனத் தொழுது சொல்லுவாள்.

**வந்து அடி வணங்கிலள், வழங்கும் ஓதையள்,**
**அந்தம் இல் உவகையள், ஆடிப் பாடினள்;**
**'சிந்தையுள் மகிழ்ச்சியும் புகுந்த செய்கையும்**
**சுந்தரி! சொல்' எனத், தொழுது சொல்லுவாள்.**

பொ;—(அந்தச் சேடி வழக்கப்படி) வந்ததும் சீதாபிராட்டியின் அடிகளை வீழ்ந்து வணங்கினளில்லை; ஆரவாரஞ்செய்பவளும் எல்லையற்ற மகிழ்ச்சியுடையவளுமாகி ஆடுவதும் பாடுவதுமாயினாள்; (அதுகண்ட பிராட்டி அவளைநோக்கி) 'சுந்தரி! உன் மனமகிழ்ச்சியின் காரணத்தையும் அதற்குக் காரணமாக நிகழ்ந்த செயலையும் சொல்வாயாக' என்று கேட்க (அந்தச் சேடி சீதையை) வணங்கிச் சொல்லலானாள். (57)

## வில் முறிந்ததை நீலமாலை கூறுதல் (807-810)

807. கயரத துரகமாக்
கடலன் கல்வியன்
தயரத னெனும்பெயர்த்
தனிச்சென் னேமியான்
புயல்பொழி தடக்கையான்
புதல்வன் பூங்கணை
மயல்விளை மதனற்கும்
வடிவு மேன்மையான்.

**"கய ரத துரக மாக் கடலன், கல்வியன்,**
**தயரதன் எனும் பெயர்த் தனிச் செல் நேமியான்,**
**புயல் பொழி தடக்கையான் புதல்வன், பூங்கணை**
**மயல் விளை மதனற்கும் வடிவு மேன்மையான்."**

பொ:—''யானை தேர் குதிரைப் படைகளை மிகுதியும் படைத்தவனும், கல்வியிற் பெரியவனும் (செல்வமாகிய) மாரியைப் பொழிகின்ற நீண்ட கையுடையவனும் தசரதன் என்று உலகம் புகழத் தனிச் செங்கோல் செலுத்துபவனுமாகிய சக்கரவர்த்தியின் புத்திரன்; மலரம்புகளால் உலகில் மயல்விளைக்கும் மன்மதனிலும் வடிவழகு மிக்கவன்.''

கு:— குளகம். (58)

**808.** மராமர மிவையென வலிய தோளினன்
அராவணை யமலனென் றயிர்க்கு மாற்றலான்
இராமனென் பதுபெய ரிளைய கோவொடும்
பராவரு முனியொடும் பதிவந் தெய்தினன்

"மராமரம் இவை என வலிய தோளினன்,
அரா அணை அமலன் என்று அயிர்க்கும் ஆற்றலான்,
இராமன் என்பது பெயர், இளைய கோவொடும்
பரா வரு முனியொடும் பதி வந்து எய்தினன்."

பொ:—''மராமரம் என்னும்படி வன்மைபெற்ற தோளுடையவன், ஆதிசேடனாகிய திருவணையில் பள்ளிகொள்ளும் அமலனே என்று ஐயுறக் கூடிய ஆற்றல் படைத்தவன், அவன் பெயர் இராமன் என்பதாம்; அத்தகையவன் தன் தம்பியான இளங்கோவோடும், அளவிட்டுப் புகழ்தற்கும் அரிய முனிவரனோடும் நம் நகரத்துக்கு வந்து சேர்வானாயினன்''. (59)

**809.** பூணியன் மொய்ம்பினன் புனித னெய்தவில்
காணிய வந்தன னென்னக் காவலன்
ஆணையி னடைந்தவில் லதனை யாண்டகை
நாணினி தேற்றின னடுங்கிற் றும்பரே.

"பூண் இயல் மொய்ம்பினன், 'புனிதன் எய்தவில்
காணிய வந்தனன்' என்னக், காவலன்
ஆணையின் அடைந்த வில் அதனை, ஆண் தகை
நாண் இனிது ஏற்றினன், நடுங்கிற்று உம்பரே."

பொ:—வாகுவலயங்களணிந்த தோள்களையுடைய அக்குமாரன், 'புனிதனான சிவபிரான் எய்த வில்லைக் காண வந்துளான்' என்று (கோசிகமுனிவன்) கூற, (நம்) வேந்தன் கட்டளையால்

(உடனே) வந்து சேர்ந்த அந்த வில்லை (வளைத்து) ஆண்மைக் குணமுடைய அக்குமரன் எளிதாக நாணேற்றினான், விண்ணுலகும் நடுங்கியது.

கு :—மொய்ம்பு - தோள் ; 'பூந்தாது மொய்ம்பினவாக' (கலித். 88) என்பது காண்க. (60)

810. மாத்திரை யளவிற்றாண் மடுத்து முன்பயில்
சூத்திர மிதுவெனத் தோளின் வாங்கினான்
ஏத்தின ரிமையவ ரிழிந்த பூமழை
வேத்தவை நடுக்குற முறிந்து வீழ்ந்ததே.

"மாத்திரை அளவில் தாள் மடுத்து, முன் பயில்
சூத்திரம் இது எனத் தோளின் வாங்கினான்;
ஏத்தினர் இமையவர், இழிந்த பூமழை,
வேத்து அவை நடுக்கு உற முறிந்து வீழ்ந்ததே!"

பொ :—ஒரு நொடிப்பொழுதில் (அவ்வில்லின் அடிப் பக்கத்து முனையைத் தன் காலால் மிதித்து அடக்கிக்கொண்டு முன் பழகின இயந்திரம் இஃதென்று (கண்டவர் கருதும்படி அவ்விராமன்) தன் தோள்வலிமையால் அதனை வளைத்து விட்டான். (அப்போது)தேவர்களெல்லாம் புகழ்ந்தார்கள், மலர் மாரி (வானத்தினின்று) பொழிந்தது; அரசவை நடுங்கும்படி (அவ்வில்) இடையே பிளவுபட்டுக் கீழே விழுந்துவிட்டது. (61)

சீதை ஐயம் நீங்குதல்.

811. கோமுனி யுடன்வரு கொண்ட லென்றபின்
தாமரைக் கண்ணினா னென்ற தன்மையால்
ஆமவ னேகொலென் றைய நீங்கினாள்
வாமமே கலையிற வளர்ந்த தல்குலே

கோமுனி உடன் வரு கொண்டல் என்ற பின்,
தாமரைக் கண்ணினான் என்ற தன்மையால்,
'ஆம் அவனேகொல்!' என்று ஐயம் நீங்கினாள்,
வாம மேகலை இற வளர்ந்தது அல்குலே.

பொ :—'முனிவர் தலைவனான கோசிகனுடன் வந்ததோர் 'கொண்டல்' என்று கூறியபின்பு, 'தாமரைக் கண்ணினன்' என்றும் சொன்ன தன்மையால், (கன்னிமாடத்து அருகே கண்ட) அவனே போலும் என்றுதான் கொண்டிருந்த ஐயம் நீங்கப் பெற்றாள். (சீதாதேவி) உடனே அழகிய மேகலாபரணமும் அற்றுப் போகும்படி அவளது இடைப்பக்கம் பருக்கலாயிற்று.

கு :—'கமலம் கண்ணெனும், வில்லொடு மிழிந்ததோர் மேகம் என்னுமால்' (மிதிலைக் காட்சி 53) என்று பிராட்டி முன் கூறியதினின்று கமலக் கண்ணனென்றும் மேகம் போன்றவனென்றும் அவள் அப்பெருமானுருவைக் கண்டவளென்பது பெறப்படுதலால், 'கோமுனியுடன் வரு கொண்டல்', 'தாமரைக் கண்ணன்' என இப்போது அவள் ஒப்புநோக்கித் தெளியலாயினள் என்க. தாமரைக் கண்ணன் – திருமால். 'அராவணையமலனென்றயிர்க்கு மாற்றலான்' என்ற தோழி கூற்றால் இவ்வாறு பிராட்டி கருத இடமுண்டாயிற்று எனலாம். மேகலை இறும்படி அல்குல் வளர்ந்தது என்பது இடைப்பக்கம் பெருத்தலால் என்க. 'இல்லையே நுசுப்பென்பார் உண்டுண்டென்னவும். எனப் பின்கவித் தொடரும் வருதல் காணத்தகும், அல்குல் – அரையிடம்; இடைப்பக்கம்; பெண்குறியன்று, (திருவாய் – 5-1-8; பெரிய திருமொழி 1-7-8; 2-2-8) (62)

## சீதையின் உறுதிப்பாடு

812. இல்லையே நுசுப்பென்பா ருண்டுண் டென்னவும்
மெல்லியன் முலைகளும் விம்ம விம்முவாள்
சொல்லிய குறியினத் தோன்ற லேயவன்
அல்லனே லிறப்பனென் றகத்து ளுன்னினாள்.

இல்லையே நுசுப்பு என்பார் உண்டு உண்டு என்னவும்,
மெல் இயல் முலைகளும் விம்ம விம்முவாள்,
'சொல்லிய குறியின், அத் தோன்றலே அவன்!
அல்லனேல், இறப்பன்!' என்று, அகத்துள் உன்னினாள்.

பொ :—இவளுக்கு இடையுறுப்பு இல்லையென்று சொல்பவர்களே 'உண்டு உண்டு' என்று கூறவும், மெல்லியல்பு வாய்ந்த கொங்கைகள் பெருக்கவும் உடல் பூரிப்பவளான சானகி, 'இவள் சொன்ன அடையாளங்களால் (வில்முறித்த) அவன் (நான் கன்னிமாடத்திருந்து கண்டு காதலித்த) தோன்

றலே;அவ்வாறு இல்லையானால் என் உயிரைவிட்டு விடுவேன், என்று மனத்தில் உறுதிகொண்டாள். (63)

**சனகன் கோசிகனை நோக்கிக் கூறத்தொடங்குதல்**

**813.** ஆசையுற் றயர்பவ ளன்ன ளாயினள்
பாசடைக் கமலத்தோன் படைத்த வில்லிறும்
ஓசையிற் பெரியதோ ருவகை யெய்தியக்
கோசிகற் கொருமொழி சனகன் கூறுவான்.

**ஆசை உற்று அயர்பவள் அன்னள் ஆயினள்,**
**பாசு அடைக் கமலத்தோன் படைத்த வில் இறும்**
**ஓசையின் பெரியது ஓர் உவகை எய்தி, அக்**
**கோசிகற்கு ஒரு மொழி சனகன் கூறுவான்.**

பொ:—காதல் பெருகித் தளர்பவளான சானகி, அவ்வாறான நிலையுடையவளாயினள்; (அதுநிற்க) பச்சிலைகளால் தழைத்த தாமரைமலரில் தங்குபவனான பிரமன் படைத்த வில், இற்று வீழ்ந்த ஓசையினும் பெரியதோர் ஆரவாரத்தைச் செய்து மகிழ்ச்சியுற்று, அந்தக் கோசிக முனிவனை நோக்கி ஒரு வார்த்தையினைச் சனகன் கூறுவானாயினன். (64)

**சனகன் கூறிய மொழி**

**814.** உரைசெயெம் பெருமவுன்
புதல்வன் வேள்விதான்
விரைவினின் றொருபகன்
முடித்தல் வேட்கையோ
முரசெறிந் ததிர்கழன்
முழங்கு தானையவ்
அரசையு மிவ்வழி
யழைத்தல் வேட்கையோ.

**'உரைசெய் எம்பெரும! உன் புதல்வன் வேள்விதான்**
**விரைவின் இன்று ஒருபகல் முடித்தல் வேட்கையோ?**
**முரசு எறிந்து, அதிர் கழல் முழங்கு தானை அவ்**
**அரசையும் இவ் வழி அழைத்தல், வேட்கையோ ?'**

பொ :—எம்பெருமானே! உன் புத்திரனுன இராமனது திருமணவேள்வி 'தாமதமின்றி இன்றைத் தினத்திலே நிறைவேற்றவேண்டுமென்பது விருப்பமா? மணமுரசினை (எங்கும்) அறைவித்து, ஒலியுள்ள வீரக்கழலையும் ஆரவாரமிக்க படைகளையு முடைய அந்தத் தசரதச் சக்கரவர்த்தியையும் இந்நகர்க்கு அழைப்பித்துத் திருமணத்தை நடத்த விருப்பமா (உசிதமானதை அறிந்து சொல்வீராக என்ருன் சனகன்)

கு :—'என்று மினி மணமில்லை யென்றிருந்த' தனக்குப் பேரருள்புரியவே கடவுள்போலத்தோன்றியவனுதலால் 'எம் பெரும!' என்றும், 'அளவில் விஞ்சை வந்தெய்தும்படி' செய்து சக்கரவர்த்தி திருக்குமாரர்களை அழைத்துவந்த ஞானபிதா அம்முனிவன் ஆனதால், 'உன் புதல்வன்' என்றும் கூறினன் சனகன் என்க. (65)

**815.** மல்வலா னவ்வுரை பகர மாதவன்
ஒல்லையி லவனும்வந் துறுத னன்றென
எல்லையி லுவகையா னியைந்த வாறெலாம்
சொல்லுகென் றோலையுந் தூதும் போக்கினுன்.

மல் வலான் அவ் வுரை பகர, மாதவன்
'ஒல்லையில் அவனும் வந்து உறுதல் நன்று' என
எல்லை இல் உவகையான் 'இயைந்த ஆறு எலாம்
சொல்லுக' என்று, ஓலையும் தூதும் போக்கினுன்.

பொ :—மற்போரில் வலிய சனகராசன் அம்மொழிகளைக் கூறக் (கேட்ட) விசுவாமித்திரன், 'விரைவாகவே அந்தத் தசரதனும் இங்கு வந்துசேர்தல் நலமாகும்' என்று தெரிவிக்கவே, எல்லையற்ற மகிழ்ச்சிகொண்ட சனகராசன், 'இங்கே நடந்த செய்திகளையெல்லாம் நேரில் அறிவிப்பீராக' என்று கூறித் திருமண ஓலையையும் தூதுவரையும் அயோத்தி செல்ல விடுத்தான். (66)

கார்முகப் படலம் முற்றிற்று.

# 13. எழுச்சிப் படலம்

மைந்தர்களின் திருமணத்தை முன்னிட்டுத் தசரதன் மிதிலைக்குப் புறப்படுவதைத் தெரிவிக்கும் பகுதியாதலின் இது எழுச்சிப் படலம் எனப் பெயர்பெற்றது.

இப்படலம், 12, 15, 21 என்னும் எண்ணுள்ள ஏடுகளில் "சாற்றிய முரசொலி" என்ற ஒன்பதாம் பாடலிலிருந்தும், சில ஏடுகளில், மிகைப் பாடல்களில் ஒன்றான "சிறந்த வேள்வி" என்றபாடலிலிருந்தும், 19, 41-ஆம் ஏடுகளில் மிகைப்பாடல்களில் ஒன்றான "இலைமுகப் படாத்தவர்" என்ற பாடலிலிருந்தும், தொடங்குகிறது. 3, 4, 19 எண்ணுள்ள ஏடுகளில் மட்டும் இப்படலம் "துகிலிடை மடந்தையர்" என்னும் வரைக்காட்சிப் படலம் 27-ஆம் பாடலோடு முடிகிறது. இவ்வாறு இப்படல அமைப்பு சில ஏடுகளில் பிறழ்ந்துள்ளது.

விசுவாமித்திரர் விருப்பப்படி, சனகனால் ஏவப்பெற்ற தூதர்கள், அயோத்தியை அடைந்து, தசரதனிடம் இராம லக்குமணர்கள் அயோத்தியைவிட்டுப் பிரிந்துசென்றது முதல் வில்லைமுறித்தது வரையுள்ள நிகழ்ச்சிகளைத் தெரிவித்துக் கொண்டு வந்திருந்த ஓலையையும் கொடுத்தனர். அரசன் ஆணையின் வண்ணம் திருமந்திர ஓலைநாயகம் அதனை வாங்கி வாசித்தான். தம் மக்கள் வீரத்தைக் கேட்ட மன்னனுடைய தோள்கள் உவகையால் பூரித்தன.

தசரதன், மணஓலை கொண்டுவந்த தூதர்களுக்கு ஆடையும் பொன்னும் வழங்கினான். 'நம்முடைய நகரமக்களும், சேனைகளும் மிதிலைக்கு முன்னரே செல்க எனப் பறைசாற்றுவிக்க' எனச் சுமந்திரனுக்கு ஆணை வழங்கினான். அங்ஙனமே சுமந்திரன் வள்ளுவரைக் கொண்டு நகரமுழுதும் அறிவித்தான். நகர மக்கள் தங்களை ஒப்பனைசெய்துகொண்டு மணவிழாவிற்குப் புறப் படுகின்ற இன்பக்களிப்போடு மிதிலைக்கு வழிக்கொண்டனர்.

பின்னர், தசரதனுடைய பட்டத்து மங்கையரும், நேயமங்கையரும், தத்தம் சிலதியர் புடைசூழப் புறப்பட்டனர். பல்லாயிர அந்தணர் புடைசூழ வசிட்டன் புறப்பட்டான். பரத சத்துருக் கனர்கள் அவனை வழிக்கொண்டனர்.

எண்ணாயிரம் அந்தணர் இரத்தின கலசம் ஏந்தப் பாவையர் பலர் பல்லாண்டிசைப்பப் பணையும் பேரியும் முதலான பல்வகை

வாத்தியங்கள் முழங்க நல்லோரையில் தசரதன் புறப்பட்டான். அனைவரும் உடன்வர மிதிலைக்கு வழிக்கொண்டு சென்று சந்திர சயிலச்சாரலில் தங்கினர் என்பது இப்படலத்தின் சுருக்க வரலாறு.

வான்மீகத்தில் இவ் வரலாறு பாலகாண்டம் 68-ஆம் சருக்கம் முதல் 69-ஆவது சருக்கம் 7-ஆம் சுலோகம் வரை கூறப் பெற்றுள்ளது. கம்பரும் வான்மீகியுமாகிய இரு பெருங்கவிஞர் களுக்குள் இப்படலத்தைப் பொறுத்த வரையில் குறிப்பிடத்தக்க வேறுபாடு இல்லை. ஆயினும், வான்மீகி, தாம் ஒரு முனிவர் என்பதை மறந்து விடாமல், சனகன் ஓலைவந்ததும் தசரதன் 'வசிட்டர் வாமதேவர் முதலிய முனிவர்களைப் பார்த்து, உங்களுக் கும் சம்மதமானால் புறப்படுவோம் என்றான்' என்கின்றார். மேலும், திருமணத்திற்குப் பட்டத்தரசியர் உரிமைச் சுற்றத்தார் இவர்கள் புறப்பட்டார்கள் என்று சொல்லாமை மட்டுமேயன்றி, காசியபர் வாமதேவர், மார்க்கண்டேயர் முதலிய முனிவர்கள் புறப்பட்டார்கள் என்கின்றார்.

கம்பர் அரண்மனையிற் பழகிய இல்லறத்தாராக இருப்பதால், குலகுருவாகிய வசிட்டர் புறப்பாட்டை மட்டும் கூறி, பட்டத்து மங்கையர், நேயமகளிர்கள் முதலியோர் புறப்பாட்டைத் தெரிவிக்கிறார்.

வான்மீகி அயோத்திக்கும் மிதிலைக்கும் உள்ள தூரம் தூதர்களாயின் மூன்று நாள் வழிநடை, மன்னனாயின் நாலு நாள் வழிநடை என்று கூறுகிறார். கம்பர் இதனைக் குறிக்கா மலே, திருமண வழிநடையை ஓரின்ப நிலைக்களமாகப் படைத்து, நடத்திச் செல்கிறார்.

கம்பர், தசரதன் சென்று தங்கிய இடம் சந்திர சயிலத்தின் அடிவாரம் என்று படைத்துக்கொண்டு, காவியத்தில் காமச் சுவை மிக வேண்டி, வரைக்காட்சி, பூக்கொய்தல், புனலாட்டு உண்டாட்டுகளுக்கு இடந்தந்து, அரசபரிவாரங்களை அவற்றில் ஈடுபடச்செய்து, காப்பியத்தலைவனும் மணமகனுமான இராமன் தந்தையாகிய தசரதமன்னனைச் சனகன் ஊர்ப்புறத்தே வரவேற் றுச் செல்ல அமைத்த அழகு கம்பரது அரண்மனைப் பயிற்சியின் பயனாகும்.

இவ்வண்ணம், கம்பர் காவியச்சுவை கனிய, இப்படலத்தில் காளையர், கன்னியர், கற்புநெறி கடவாத காதலர்கள், அரசியர், சிலதியர், இவர்களின் சிந்தை நிலையைச் சூழலுக்கு ஏற்பப் புனையும் அழகு மிகச் சுவை பயப்பதொன்றாகும்.

---

# 13. எழுச்சிப் படலம்

## சனகன் தூதர்கள் தசரதன் அரண்மனையை அடைதல்.

816. கடுகிய தூதருங் காலிற் காலிற்சென்
றிடிகுரன் முரசதி ரயோத்தி யெய்தினர்
அடியிணை தொழவிட மின்றி மன்னர்தம்
முடியொடு முடிபொரு வாயின் முன்னினர்.

கடுகிய தூதரும், காலில் காலின் சென்று,
இடி குரல் முரசு அதிர் அயோத்தி எய்தினர்,
அடி இணை தொழ இடம் இன்றி மன்னர்தம்
முடியொடு முடி பொரு வாயில் முன்னினர்.

பொ:—விரைந்து சென்ற தூதர்களும், காலால் காற்றைப் போலச் சென்று, இடியின் குரலைப்போல முரசு முழங்குகின்ற அயோத்தி நகரத்தை யடைந்தனர். (அங்ஙனம் சென்றவர்கள்) தசரதனுடைய இரண்டு அடிகளையும் தொழுதற்கு இடம் இல்லாமல் சிற்றரசர்களுடைய முடிகளோடு முடிகள் தாக்கிக்கொள்கின்ற அரண்மனையின் வாயிலை அடைந்தனர்.

கு:—தூதர் எய்தினர்; வாயில் முன்னினர் என முடிக்க. கடுகிய தூதர் – சனக மன்னனால் தூது அனுப்பப்பெற்று விரைந்து சென்ற தூதர்கள். காலின் - காற்றைப்போல. இடிகுரல் முரசு – இடியின் குரல் போன்ற குரலினையுடைய முரசு. மணஞ்சொல்ல வருகின்ற தூதர்களுக்கு ஏற்ப மங்கலமாக முரசு ஒலிக்கின்ற நகரை எய்தினர் என்றார். வீரமும் நியாயமும் தியாகமும் ஆகிய மூவகை முரசுகளில் நியாயமும் தியாகமும் குறிக்கு முரசுகள் நாளும் ஒலித்தல் இயல்பாதலின் அவைகள் ஒலிக்கின்ற அயோத்தி என்றார். இன்றி என்பது இல்லாமையால் என்னும் காரணப் பொருளில் வந்த வினையெச்சம். மன்னர்கள் தசரதனை வணங்க முந்துகின்றமையின் அவர்கள் முடியொடு முடி மோதுகின்றன என்பதாம்.

(1)

### தூதர்கள் தசரதனை வணங்குதல்.

**817.** முகந்தனர் திருவருண் முறையி னெய்தினர்
திகழ்ந்தொளிர் கழலிணை தொழுது செல்வனைப்
புகழ்ந்தன ரரசநின் புதல்வர் போயபின்
நிகழ்ந்ததை யிதுவென நெடிது கூறினர்.

முகந்தனர் திரு அருள், முறையின் எய்தினர்,
திகழ்ந்து ஒளிர் கழல் இணை தொழுது, செல்வனைப்
புகழ்ந்தனர், 'அரச! நின் புதல்வர் போய பின்
நிகழ்ந்ததை இது' என நெடிது கூறினர்.

பொ:—(அரண்மனை வாயிலையடைந்த தூதர்கள்) அரசன் திருவருளைப் பெற்றவர்களாய், அரசவையிற் செல்ல வேண்டிய முறைமைப்படி அரசன் திருமுன்பு அடைந்து, மிக விளங்குகின்ற தசரதச் சக்கரவர்த்தியின் அடிகளிரண்டையும் வணங்கி, அரசச் செல்வம் படைத்தவனாகிய தசரதனைப் புகழ்ந்து, 'அரசரே, நும் புதல்வர்கள் இங்கிருந்து போனபிறகு, நிகழ்ந்த செயல் இதுவாம்' என்று விரித்துக் கூறினர்.

கு:—அரசவையில் அந்நியநாட்டுத் தூதர்கள் வரின் வாயில் காப்பார் அரசனிடம் சென்று 'இந்நாட்டுத் தூதர் வந்திருக்கிறார்' என்று உணர்த்த, அரசன் அவர்களை வரவிடுக என ஆணை தருவான். பின்னர்ச் செல்லுதலே மரபு. ஆதலின், சனகன் தூதர் என்றறிந்ததும், தசரதனருள் வந்தவர்களால் முகந்து கொள்ளக்கூடிய அளவு மிகுதியாயிருந்தது என்பதை விளக்கி நிற்கின்றது 'முகந்தனர்' என்ற சொல்லாட்சி. முறையென்றது அரசவையிற் செல்லும் தூதர்கள் அடக்கத்துடன் நிற்குமுறைமையை யுணர்த்தியது. செல்வனைப் புகழ்ந்து - தூதர்கள் அரசனை வணங்கி எழுந்ததும் அவர்கள் மெய்க்கீர்த்தியைச் சொல்லிப் புகழ்தல் மரபு. (2)

### தூதர் ஓலையைக் கொடுத்தல்

**818.** கூறிய தூதருங் கொணர்ந்த வோலையை
ஈறில்வண் புகழினா யிதுவ தென்றனர்
வேறொரு புலமகன் விரும்பி வாங்கினான்
மாறதிர் கழலினான் வாசி யென்றனன்.

கூறிய தூதரும், கொணர்ந்த ஓலையை,
'ஈறில் வண் புகழினுய்! இது அது' என்றனர்;
வேறு ஒரு புல மகன் விரும்பி வாங்கினுன்;
மாறு அதிர் கழலினுன், 'வாசி!' என்றனன்.

பொ:—அங்ஙனம் கூறிய தூதர்களும், தாம் கொண்டுவந்த ஓலையைக் குறித்துக் காட்டி, முடிவற்ற வளவிய புகழையுடையவனே! 'இவ்வோலை அவ்வோலை' என்று கூறினுர்கள். அவையிலுள்ள வேறு ஒரு அறிஞனுகிய திருமந்திர ஓலை நாயகம் (அரசன் ஆணையின் வண்ணம்) விரும்பி அதனை வாங்கினுன். ஒன்றோடொன்று மாறிமாறி ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த தசரதன் (அவ்வறிஞனைப் பார்த்து) 'வாசிக்க' என்று ஆணை வழங்கினன்.

கு:—கூறிய-(இராமலக்குமணர்கள் அயோத்தியை விட்டுப் பிரிந்துபோனபின் நிகழ்ந்த பல, அதிபல இரு மந்திரங்களைப் பெற்றது; பல தெய்வத்தன்மை வாய்ந்த அம்புகளைப் பெற்றது; தாடகையை வதஞ் செய்தது; விசுவாமித்திரன் செய்த வேள்விக்கு இடையூறு நேராதவண்ணம் காத்தது; சனக மகாராசனது புரோகிதரான சதானந்த முனிவரின் தாயாகிய அகலிகையைச் சாபந்தீர்த்தது; பணயமாக வைத்திருந்த சிவனுடைய வில்லை முறித்தது முதலாகிய கருணையும், தெய்வத் தன்மையும், வீரமும் நிறைந்த செய்கைகளைக்) கூறிய. (3)

பின்வரும் பாடல்கள் 2, 5, 16, 17, 19, 20, 23, 25, 27–29, 41 ஆகிய பிரதிகளில் மிகைப் பாடல்களாகக் காணப்படுகின்றன.

818 (a) ஓது நீதியின் கோசிக மாமுனி யோலை
தாது சேர்தொடைத் தயரதன் காண்கதற் பிரிந்து
போது கானிடைத் தாடகை பொருப்பெனப் புகுந்து
வாது செய்துநின் றிராகவன் வாளியான் மாண்டாள்.

818 (b) சிறந்த வேள்வியோன் றமைத்தன னதுதனைச் சிதைப்பான்
இறந்த தாடகை புதல்வர்க ளிருவர்வந் தெதிர்ந்தார்
மறங்கொள் வெஞ்சிலை யிராகவன் வாளியா லொருவன்
குறைந்து போயினுன் ஒருவன் போய்க் குரைகடற் குளித்தான்.

818 (c) கூட மேவுபோ ரரக்கரை யிளையவன் கொன்றுன்
நீடு வேள்வியுங் குறைபடா வகைநின்று நிரப்பிப்
பாடல் மாமதிக் கவுதமன் பன்னிசா பத்தை
ஆடல் மாமலர்ச் சோலையி லிராகவ னகற்றி.

818 (d) பொருவின் மாமதின் மிதிலையிற் புகுந்துபோ ரிராமன்
மருவு வார்சிலை வளைத்தலிற் சனகன்றன் மகளைத்
தரும தாமதற் கிசைந்தனன் தானிங்கு விரைவின்
வருகெ ளுவெழும் வாசகங் கேட்டுள மகிழ்ந்தான்.

16 என்னும் குறியீடுள்ள சுவடியில் இப்பாடல்கள் நான்கும் 70 முதல் 73 முடிய உள்ள பாடல்களாக உள்ளன. இவை ஆழ்வார் திருநகரிப் பதிப்பில் இல்லை. அடையாற்றுப் பதிப்பிலும் வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் பதிப்பிலும் அதிகப் பாடல்களாகக் காட்டப்பட்டுள்ளன.

இந்நான்கு கவிகளையும் பற்றி 17 என்னும் குறியீடுள்ள சுவடியில் உள்ள குறிப்பு வருமாறு:—

"இராகவன் திருக்கல்யாண அவசரத்துக்கு முன்பு, சனக மகாராசர் ஸ்ரீ ராகவன் தநுர்ப்பங்கம் பண்ணின ஆச்சரியத்தைக் கண்டு, தசரதரைத் திருக்கல்யாணத்துக்கு வரும்படி எழுதிய வாசகம்."

"இக்கவி நாலும் எழுச்சிப் படலத்தில் 920-ஆம் ஆண்டு இராமாயணபட்டர் ஏடு சரிபார்த்து எழுதின புத்தகத்தில் இல்லை. 813-ஆம் ஆண்டு ஆத்தான் திருமாளிகை சுவாமி எழுதின புத்தகத்தில் இருந்தது பார்த்து எழுதினது. இதைச் சங்கத்தில் வித்துவாங்கிஷாள் ஒப்புக்கொண்டு சேர்க்கப்பட்டு எழுதியிருக்குது. அறிய வேண்டியது."

818 (e) பன்னு மாமறை வசிட்டனும் பராவரு முனிக்கும்
அன்னை மார்க்குந்தன் மைந்தர்க்குஞ் சோபன மறிவித்
தின்ன வாசக வோலையங் கிட்டதூ தருக்குச்
சொன்ன மாயிர கோடியுந் தூசுடன் சொரிந்தான்.

19, 25, 29 என்னும் குறியீடுள்ள ஏடுகளில் இப்பாடலுடன் கார்முகப் படலம் முற்றுப்பெற்று, 'இலை முகப்படத்தவர்' என்ற பாடல் எழுச்சிப் படல முதற் பாடலாக அமைந்துள்ளது.

818 (f) மாண்ட பின்னரு மந்திர வேள்வியு மியற்றித்
தூண்ட ரும்பெருஞ் ......... ......... .........
......... ......... ......... ......... .........
......... ......... சனகனு மகட்கொடை நேர்ந்தான்.

818 (g) மன்ன னங்கவர் பெருமகங் காணிய வருவான்
அன்ன வாசிட்ட னந்தண ரரசரா பாலர்
இன்ன ரின்றியே வருகென வெழுதின விச்சொல்
சொன்ன வாசகம் சொற்றெறு மமுதெனச் சொரிந்த.

## இராமன் வீரங்கேட்ட தயரதன் மகிழ்ச்சி

819. இலைமுகப் படத்தவ ரெழுதிக் காட்டிய
தலைமகன் சிலைத்தொழில் செவியிற் சார்தலும்
நிலைமுக வலயங்க ணிமிர்ந்து நீங்கிட
மலையென வளர்ந்தன வயிரத் தோள்களே.

இலை முகப் படத்து, அவர் எழுதிக் காட்டிய
தலை மகன் சிலைத் தொழில் செவியில் சார்தலும்,
நிலை முக வலயங்கள் நிமிர்ந்து நீங்கிட,
மலை என வளர்ந்தன வயிரத் தோள்களே!

பொ :—பனையோலையின் முகப்பாகிற படத்தில், அச்சனகன் எழுதிக் காட்டிய தன் மூத்தகுமாரனுடைய வில்லாற்றலானது தன் செவியிற் பட்டவுடன் தசரதனுடைய வயிரம்போன்ற உறுதியான தோள்கள் தம்மிடம் நிலைபெற்ற தோள் வளைகள் வாய்விண்டு நிமிர்ந்து கழல, மலைபோலப் பூரித்தன.

கு :—பனையோலையினிடத்தைப் படமாக உருவகித்து, 'எழுதிக் காட்டிய' என்றமையின் அத்திருமுகம் ஓவியம்போலக் கண் வழியாக உள்ளத்திற்கு விருந்தாயிற்று என்பதாம். தோன்றியழிதல் மாலைத்தாகிய ஒலியாகக் கழியாமல் எழுதிக் காட்டிய தன் பிள்ளையின் வீரம் ஓலைநாயகம் படிக்கச் செவியிற் சார்ந்தவுடன் தோள் வளை தெறித்துப் போம்படி பூரித்தன என்பது, 'தம்மிற்றம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து மன்னுயிர்க்கெல்லாம் இனி' தாதலை யறிந்த தசரதன் பூரித்தான் என்பதை விளக்கியவாறும். (4)

## தசரதன் வியத்தல்

820. வெற்றிவேன் மன்னவன் றக்கன் வேள்வியில்
கற்றைவார் சடைமுடிக் கணிச்சி வானவன்
முற்றவே ழுலகையும் வென்ற மூரிவில்
இற்றபே ரொலிகொலன் றிடித்த திங்கென்றான்.

வெற்றி வேல் மன்னவன் 'தக்கன் வேள்வியில்
கற்றை வார் சடை முடிக் கணிச்சி வானவன்
முற்ற ஏழுலகையும் வென்ற மூரி வில்
இற்ற பேர் ஒலி கொல் அன்று இடித்தது இங்கு? என்றான்.

பொ:—வெற்றி பொருந்திய வேலை ஏந்திய தசரத மன்னன், 'இங்கு, அன்றைக்கு இடித்த ஒலி, தக்க யாகத்தில் தொகுதியான நீண்ட சடாமுடியினையும் மழு என்னும் ஆயுதத்தையும் உடைய தேவதேவனாகிய சிவபெருமான், ஏழுலகங்களையும் முற்றும் வென்ற வலிய வில்லானது ஒடிந்த பேரொலியோ?' என்று வியந்து கூறினான்.

கு:—வெற்றிவேல் என உடையவனது தன்மை உடைமைப் பொருள்மேல் ஏற்றப் பெற்றது. வெற்றி மன்னவன், வேல் மன்னவன் என இயைத்தலுமாம். (5)

## தூதர்க்கு ஆடையும் அணியும் அளித்தல்

**821.** என்றுரைத் தெதிரெதி ரிடைவி டாதுநேர்
துன்றிய கனைகழற் றூதர் கொள்கெனப்
பொன்றிணி கலன்களுந் தூசும் போக்கினான்
குன்றென வுயரிய குவவுத் தோளினான்.

என்று உரைத்து எதிர் எதிர், இடைவிடாது, 'நேர்
துன்றிய கனை கழல் தூதர் கொள்க' எனப்
பொன் திணி கலன்களும் தூசும் போக்கினான்,
குன்று என உயரிய குவவுத் தோளினான்.

பொ:—மலைபோற் பருத்த குவிந்த தோள்களையுடைய தசரதன், இவ்வாறு மறுமொழிகள் கூறி, நம் முன்னே (நல்லன கூற) வந்தடைந்த ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த தூதர்கள் கொள்வார்களாக என்று, பொன்னாலியன்ற உறுதியான அணிகளையும், ஆடையையும் கொடுப்பித்தான்.

கு:—வீரம் சிறந்த தசரதன் தோள்கள் இயல்பாகவே குன்றென உயர்ந்தும் குவிந்தும் இருக்குமாயினும், இப்போது தன் மகன் வீரம் கேட்ட மகிழ்வால் மேலும் பூரித்தன என்க. என்று எதிர் எதிர் உரைத்து - முற்கூறியவாறு எதிர் எதிராகத் தூதர்களுடன் உரையாடி. போக்கினான் என்ற சொல்லாற்றல், தூதர்கள் ஏற்று ஏற்று மகிழும்படி தன் மகிழ்ச்சிக்கு மட்டில்லாமையால் மிகவும் ஏற்பித்தான் என்பது விளக்கிநின்றது. (6)

### மணமுரசு அறைகவென்றல்

822. வானவன் குலத்தெமர் வரத்தி னுல்வரும்
வேனில்வே ளிருந்தவம் மிதிலை நோக்கிநம்
சேனையு மரசருஞ் செல்க முந்தென
ஆனைமேன் மணமுர சறைகென் றேவினுன்.

'வானவன் குலத்து எமர் வரத்தினுல் வரும்
வேனில் வேள் இருந்த, அம் மிதிலை நோக்கி நம்
சேனையும் அரசரும் செல்க முந்து என
ஆனை மேல் மண முரசு அறைக!' என்று ஏவினுன்.

பொ :—தசரதன், 'சூரியகுலத்திற்றேன்றிய எம் முன்னேர்கள் செய்த புண்ணியப்பயனுகப் பிறந்த மன்மதனை ஒத்த இராமன் இருந்த அந்த மிதிலையைநோக்கி நமது சேனையும், அரசர்களும், முன்னே செல்க என்று, யானையின்மேல் வைத்து மணமுரசடிக்க' என்று (வள்ளுவனை நோக்கி) ஆணை வழங்கினுன்.

கு :—வானவன்-வானத்தையிடமாக்கொண்டு உலாப்போதும் சூரியன். எத்தகைய நன்மைகளையும் 'தம் குலஞ்செய்தவம்' என்று பாராட்டும் தசரதன், ஈண்டும் வானவன் குலத்து எமர் வரத்தினுல் எனப் பாராட்டினன். வேனில் வேள் – மன்மதன். அழகால் தன் மகனைப் பாராட்டியவாறு. வேனில் வேள் உள்ள இடங்களில் எல்லாம் வசந்தனும் கூடவே இருப்பான். அது போல இலக்குவனும் இராமனைப் பிரியாதே இருக்கும் நிலையை உணர்த்தியவாறு. மண முதலிய மங்கல நிகழ்ச்சிகளை வள்ளுவர் யானைமேல் முரசை ஏற்றி அதன் ஒலி மூலம் ஊர்க்கு அறிவித்தல் மரபு. (7)

### வள்ளுவன் பறையறைதல்

823. வாம்பரி விரிதிரைக் கடலை வள்ளுவன்
தேம்பொழி துழாய்முடிச் செங்கண் மாலவன்
ஆம்பரி சுலகெலா மளந்து கொண்டநாள்
சாம்புவன் றிரிந்தெனத் திரிந்து சாற்றினுன்.

வாம் பரி, விரி திரைக் கடலை வள்ளுவன்
தேம் பொழி துழாய் முடிச் செங்கண் மாலவன்
ஆம் பரிசு உலகு எலாம் அளந்து கொண்ட நாள்
சாம்புவன் திரிந்தெனத் திரிந்து சாற்றினுன்.

பொ: தேனைப் பொழிகின்ற துழாய்மாலையை அணிந்த திருமுடியினையும் சிவந்த கண்ணையும் உடைய திருமால் மூன்றுலகங்களும் (அடங்கி) அமையும்படி ஈரடியால் அளந்து கொண்ட காலத்துச், சாம்பவான், பறையறைந்து திரிந்தாற் போலத் திரிந்து வள்ளுவன், தாவிச் செல்லும் குதிரைகளாகிய விரிந்த அலைகளையுடைய படைகளாகிய கடலுக்கு அறிவித்தான்.

கு:—மாலவன் உலகெலாம் அளந்துகொண்டநாள் சாம்பு வன் திரிந்தென வள்ளுவன் திரிந்து கடலைச் சாற்றினான்: என முடிக்க. திருமால் உலகளந்த காலத்து அச்செய்தியை, சாம்பவான் பறையறைந்து உலகுக்கு அறிவித்தமை பின்வரும் பாடலால் விளங்கும்.

''வேத மனைத்துந் தேர்தர வெட்டா வொருமெய்யன்
பூதல முற்று மோரடி வைத்துப் பொலிபோழ்தியான்
மாதிர மெட்டுஞ் சூழ்பறை வைத்தே வரமேரு
மோத விளைத்தே தாளுலை வுற்றேன்''
(கிஷ்கிந்தா. மகேந்திரப், 5)

வாம்பரி - வாவும்பரி. தாவிச் செல்லும் குதிரை. தாவிச் செல்லும் குதிரைகளைக் கடல் அலைகளுக்கு ஒப்புக்கூறுதல் மரபு. குதிரைகளை அலைகளாகக் கூறியவர் கடலெனக் விளங்கியவை படையெனக் கொள்ள வைத்தார். உலகெலாம் ஆம் பரிசு - திருமாலின் திருவடி சம்பந்தத்தாலே உலகெலாம் உய்யும்படி என்றுமாம். 'ஆம்பரி சறிந்து கொண்டு' (திருமாலை. 38.) என்னும் அருளிச் செயற்பகுதியும் இங்கு நோக்கத்தகும். வள்ளுவன் முரசறைந்து சேனைகள் முந்திச் செல்க என அரசன் ஆணையிட்டிருப்பதை அறிவித்தான் என்பதாம். சேனை செல்க எனவே மன்னரும் உடன் செல்க என்பது உபலக் கணத்தாற் பெறப்பட்டது.

5, 12, 15, 16, 21, 28-ஆம் சுவடிகளில் இப்பாடலுடன் கார் முகப்படலம் முற்றுப்பெறுகின்றது. (8)

## முரசொலி கேட்டோர் மகிழ்தல்

824. சாற்றிய முரசொலி செவியிற் சாருமுன்
கோற்றொடி மகளிருங் கோல மைந்தரும்
வேற்றரு குமரரும் வென்றி வேந்தரும்
காற்றெறி கடலெனக் களிப்பி னேங்கினர்.

சாற்றிய முரசு ஒலி செவியில் சாரும் முன்,
கோல் தொடி மகளிரும், கோல மைந்தரும்,
வேல் தரு குமரரும், வென்றி வேந்தரும்,
காற்று எறி கடல் எனக் களிப்பின் ஓங்கினர்.

பொ :—வள்ளுவன் அறைந்த முரசின் ஒலி காதிற்பட்டவுடன், திரட்சியான வளை யணிந்த பெண்களும், அழகிய ஆடவர்களும், வேலை ஏந்திய குமரர்களும், வெற்றி பொருந்திய வேந்தர்கள் பலரும், புயற்காற்றால் மோதப்பட்ட கடலைப் போலக் களிப்பிற் சிறந்தார்கள்.

கு :—கோல் - திரட்சி. தொடியென்பது வளையில் ஒருவகை. மைந்து - வலிமை, மைந்தர் வலிமையையுடையவர்கள். வேல்தரு குமரர் - வீரர்கள். காற்றால் மோதப்பெற்ற கடல் பொங்கி யெழுவதைப் போல இவர் மகிழ்ச்சியால் பொங்கினர் என்பதாம்.

16 என்னும் குறியீடுள்ள சுவடியில் இப்பாடலோடு எழுச்சிப்படலம் தொடங்குகின்றது.

23, 27, 43, சுவடிகளில் கார்முகப்படலம் இப்பாடலுடன் முற்றுப்பெறுகின்றது. (9)

### சேனை செல்லுதல்

**825.** விடைபொரு நடையினன் சேனை வெள்ளமோர்
இடையிலை யுலகினி லென்ன வீண்டிய
கடையுக முடிவினி லெவையுங் கால்படப்
புடைபெயர் கடலென வெழுந்து போயதே.

விடை பொரு நடையினன் சேனை வெள்ளம், ஓர்
இடை இலை உலகினில் என்ன ஈண்டிய,
கடையுக முடிவினில் எவையும் கால் படப்
புடை பெயர் கடல் என எழுந்து போயதே.

பொ :—காளையையொத்த நடையையுடைய தசரதமன்னனுடைய மிக்க படை, உலகத்தில் ஓரிடமும் இல்லை என்னலாம்படி நெருங்கினவாய் ஊழியிறுதியில் எல்லாப்பொருள்களும் ஒருசேர அழிய எழுகின்ற காற்றால் கரைபுரண்டுவருகின்ற கடலைப்போல எழுந்துசென்றது.

கு :—சேனை வெள்ளம், ஈண்டியவாய் யுகக்கடை முடிவினில் எவையும் படக் கால் புடைபெயர் கடல் என எழுந்து போயது என முடிக்க. பெருமிதம்பற்றிக் காளையின் நடை அரசன் நடைக்கு உவமையாயிற்று, இடை - இடம். யுகக்கடை முடிவினில் என மாறுக.

12, 15, 21, 28-ல் இப்பாடலுடன் எழுச்சிப்படலம் தொடங்குகின்றது. (10)

தேரும், யானையும் விளங்குதல்

826. சில்லிட முலகெனச் செறிந்த தேர்கடாம்
புல்லிடு சுடரெனப் பொலிந்த வேந்தரால்
எல்லிடு கதிர்மணி யெறிக்கு மோடையால்
வில்லிடு முகிலெனப் பொலிந்த வேழமே.

**சில் இடம் உலகு எனச் செறிந்த தேர்கள் தாம்,**
**புல்லிடு சுடர் எனப் பொலிந்த வேந்தரால்;**
**எல்லிடு கதிர் மணி எறிக்கும் ஓடையால்,**
**வில்லிடும் முகில் எனப் பொலிந்த வேழமே.**

பொ :—'உலகம் சிறிய இடத்தையுடையது' என்னும்படி நெருங்கியுள்ள தேர்கள், சூரியனைப் போலத் தம்மீது பொருந்தியுள்ள மன்னர்களால் விளங்கின. யானைகள், சூரிய கிரணத்தைப்போல ஒளிசெய்கின்ற இரத்தினங்கள் இழைத்த முகபடாத்தால் மின்னுகின்ற மேகம் போல விளங்கின.

கு :—உலகு சில்லிடம் எனச் செறிந்த தேர்கள் தாம் சுடரெனப் புல்லிடு வேந்தரால் பொலிந்த; வேழம், எல்லிடு கதிர் எறிக்கும் மணி ஓடையால் வில்லிடு முகிலெனப் பொலிந்த: எனக் கூட்டிப் பொருள்காண்க.

சில்லிடம் - சிலவாகிய இடம்; இது சிறிதான இடம் என்னும் பொருளில் வந்தது. தேர் உதயகிரியாகவும், வேந்தர்கள் சூரியர்களாகவும் வேழம் முகிலாகவும் ஓடை மின்னாகவும் உவமை கொள்ள உரைத்தமை சிந்தித்தற்குரியது. (11)

### குடைகளும்—கொடிகளும்

**827.** கால்விரிந் தெழுகுடை கணக்கி லோதிமம்
பால்விரிந் ததுவெனப் பறப்ப போன்றன
மேல்விரிந் தெழுகொடிப் படலை விண்ணெலாம்
தோலுரிந் துகுவன போன்று தோன்றுமால்.

கால் விரிந்து எழு குடை, கணக்கு இல் ஓதிமம்
பால் விரிந்தது எனப், பறப்ப போன்றன ;
மேல் விரிந்து எழு கொடிப் படலை, விண் எலாம்
தோல் உரிந்து உகுவன போன்று தோன்றுமால்.

பொ :—பால் பரந்தாற்போலக் காம்புகளிலிருந்து விரிந்து எழுந்துள்ள வெண்குடைகள், எண்ணற்ற அன்னப்பறவைகள், பறப்பனவற்றை ஒத்தன. விண்ணில் விரிந்து எழுகின்ற கொடிகளின் கூட்டம் விண்முழுதும் தோலுரிந்து வீழ்வனவற்றை ஒத்துத் தோன்றும்.

கு :—பால்விரிந்தது எனக் கால்விரிந்து எழுகுடை கணக்கில் ஓதிமம் பறப்ப போன்றன ; கொடிப்படலை விண் எலாம் தோலுரிந்து உகுவன போன்று தோன்றும் எனக்கூட்டுக. ஆல் - அசை, தோலுரிந்து உகுவன போலும் என்னாது போன்று தோன்றும் என்றது கொடிகளின் துணிகள் காற்றில் அசைவன தோலுரிந்து வீழும் காட்சியைத் தருகின்றனவன்றி ஆகாயத்திற்குத் தோலுரிதல் என்றும் இன்று என்பதை விளக்கி நின்றது.
(12)

### வெண்கொடிகள் வெண்மேகம் போலும் எனல்.

**828.** நுடங்கிய துகிற்கொடி நூழைக் கைம்மலைக்
கடங்கலுழ் சேனையைக் கடலி தாமென
இடம்பட வெங்கணு மெழுந்த வெண்முகில்
தடம்புனல் பருகிடத் தாழ்வ போன்றவே.

நுடங்கிய துகில் கொடி, நூழைக் கைம் மலைக்
கடம் கலுழ் சேனையைக் கடல் இது ஆம் என
இடம்பட எங்கணும் எழுந்த வெண் முகில்
தடம் புனல் பருகிடத் தாழ்வ போன்றவே.

பொ :—அசைந்தாடுதலையுடைய வெண்மையான கொடிகள், உட்டுளையோடு கூடிய துதிக்கையையுடைய மதநீர் ஒழுகுகின்ற யானைச்சேனையை இது ஒரு கடலாம் என்று எண்ணி, எங்கும் இடமில்லை என்னும்படி விண்ணில் எழுந்த வெண்மையான மேகங்கள் மிக்கநீரைக் குடிக்க இறங்குவனபோல இருந்தன.

கு :—கொடி, சேனையை இது கடலாம் என எழுந்த வெண் முகில் தாழ்வ போன்ற எனக் கூட்டுக. நுடங்குதல் - துவண்டு அசைதல். நூழை - உள்துளை. கைம்மலை - கையையுடைமலை போன்ற யானை. குறிப்புமொழி. கடங்கலுழ் கைம்மலைச் சேனை என இயைக்க.

யானை கடலும், கொடிகள் வெண்முகிலுமாம். (13)

### சேனையில் உள்ளவர் அணிந்த ஆபரணங்கள் முதலியவற்றின் செயல்.

829. இழையிடை யிளவெயி லெறிக்கு மவ்வெயில்
தழையிடை நிழல்கெடத் தவழு மத்தழை
மழையிடை யெழில்கெட மலரு மம்மழை
குழைவுற முழங்கிடுங் குழாங்கொள் பேரியே.

இழையிடை இள வெயில் எறிக்கும்; அவ் வெயில்
தழையிடை நிழல் கெடத் தவழும்; அத் தழை
மழையிடை எழில் கெட மலரும்; அம் மழை
குழைவுற முழங்கிடும் குழாம் கொள் பேரியே.

பொ :—(சேனையிலுள்ள மாதரும் மக்களும் அணிந்துள்ள) ஆபரணங்களிலிருந்து இளவெயில் வீசும்; அவ்வெய்யில் மயிற் பீலியானியன்ற குடைகளின் இடையே தோன்றும் நிழல் ஒழியும்படி தவழ்ந்து செல்லும்; அம் மயிற்பீலிக்குடைகள் நீருண்ட மேகத்தின் அழகு அழியும்படி விளங்கித்தோன்றும். கூட்டமான பேரிகள், அம்மேகங்கள் தளர்ச்சியடையும்படி முழங்கும்.

கு :—ஆபரணங்களின் இளவெயில் வீசும். அவ்வெய்யில் மயிற் பீலிக்குடைகளின் நிழல் அழியும் வண்ணம் அந்நிழலில் தவழும். அப்பீலிக்குடைகள் தம் நீலநிறத்தால் மேகங்களின் அழகு கெட அங்கங்கே விளங்கித் தோன்றும்; அம்மேகங்களும் இத்தகைய இனிய பேரொலி எமக்கில்லையே என்று, நாணிக்குழைய முரசக் கூட்டங்கள் முழங்கும் என்பது கருத்து. (14)

குதிரைமீதும் யானைமீதும் மகளிர் ஊர்தல்.

830. மன்னணிப் புரவிகண் மகளி ரூர்வன
அன்னமுந் தியதிரை யாறு போன்றன
பொன்னணிப் புணர்முலைப் புரிமென் கூந்தலார்
மின்னென மடப்பிடி மேகம் போன்றவே.

மன் அணிப் புரவிகள் மகளிர் ஊர்வன
அன்னம் உந்திய திரை ஆறு போன்றன;
பொன்அணிப் புணர் முலைப் புரி மென் கூந்தலார்
மின் என மடப் பிடி மேகம் போன்றவே.

பொ :—மகளிர் ஏறிச் செலுத்துவனவாகிய தலைசிறந்த அணி கலங்களோடு கூடிய குதிரைகள், அன்னப்பறவைகளைச் சுமக்கின்ற அலைகளோடு கூடிய ஆறுகளை ஒத்தன. பொன்னாலாகிய ஆபரணங்களை அணிந்த நெருங்கிய தனங்களையும், புரியாகப் பின்னப் பெற்ற மெல்லிய கூந்தலையும் உடைய பெண்கள் மின்னை ஒப்பாக (அவர்கள் ஏறியிருந்த) இளமையான பெண் யானைகள் மேகத்தை ஒத்தன.

கு :—மன் அணிப்புரவி - தலைசிறந்த அணி செய்யப் பெற்ற குதிரைகள். அன்னம் மகளிர்க்கும், குதிரைகள் அலைக்கும் குதிரைச் சேனை அலைகளையுடைய ஆற்றுக்கும் உவமை. பொன் அணிப் புணர் முலை - பொன்னாலாகிய அணிகளை அணிந்த நெருங்கிய தனங்கள். பொற்றேமலை யுடைய நெருங்கிய தனங்கள் எனலுமாம். மகளிர் பெண்யானைகள் மீது ஊர்தலே மரபு; களிறு ஆணுதலால் கற்பிற்கு இழுக்காதல் நோக்கியும், களிறுமதம்படின் அடக்கியாளும் வன்மை இவர்கட்கு இன்மையானும் என்க. (15)

சேனை செல்லும் வழி

831. இணையடுத் திடையிடை நெருக்க வேழையர்
துணைமுலைக் குங்குமச் சுவடு மாடவர்
மணிவரைப் புயத்துமென் சாந்து மாழ்கிமெல்
அணையெனப் பொலிந்ததக் கடல்செல் லாறரோ.

இணை அடுத்து இடையிடை நெருக்க ஏழையர்
துணை முலைக் குங்குமச் சுவடும் ஆடவர்
மணி வரைப் புயத்து மென் சாந்தும் மாழ்கி, மெல்
அணை எனப் பொலிந்தது அக் கடல்செல் ஆறு, அரோ!

பொ :—மிதிலை நோக்கிச் சேனையாகியகடல் செல்லும் வழி, இடையிடையே, (கூட்டமிகுதியால்) இணைதலைப் பொருந்தி நெருக்குதலால், மகளிரின் இருமுலைகளிலும் அப்பப் பெற்ற குங்குமம் உதிர்தலால் உண்டான சுவடும், ஆண்மக்களின் வயிர மலைபோலும் உறுதியான புயங்களிற் பூசியுலர்ந்த மெல்லிய சந்தனம் உதிர்தலால் உண்டான சுவடும் தம்முட் கலந்து கலவிக்குரிய மெல்லிய அணைபோலப் பொலிந்தது,

கு :—ஆறு இடையிடை, இணையடுத்து நெருக்க, குங்குமச் சுவடும், சாந்தும் மாழ்கி அணை எனப் பொலிந்தது எனக் கூட்டுக. கூட்டமிகுதியால் இடையிடை நெருக்கம் உண்டாக அதனல் ஒருவர் மீது ஒருவர் உராய்தலால், சந்தனமும் குங்குமமும் உதிரக் குங்குமச் சுவடும் சந்தனச் சுவடும் கலந்து, வழி படுக்கைபோல விளங்கிற்று என்பது கருத்து.

சுவடு - அடையாளம். குங்குமச் சுவடும் என்றதற்கு ஏற்ப மென் சாந்தும் என்பதற்கு மெல்லிய சந்தனச் சுவடும் எனப் பொருள் கொள்ளப்பெற்றது. (16)

**மகளிர் கொங்கைகள் அணிபெற்று விளங்குதல்**

**832.** முத்தினுன் முழுநில வெறிக்கு மொய்ம்மணிப்
பத்தியா ளிளவெயில் பரப்பும் பாகினும்
தித்தியா நின்றசொற் சிவந்த வாய்ச்சியர்
உத்தரா சங்கமிட் டொளிக்குங் கூற்றமே.

**முத்தினல் முழு நிலவு எறிக்கும்; மொய்ம் மணிப்**
**பத்தியால் இள வெயில் பரப்பும்; பாகினும்**
**தித்தியாநின்ற சொல் சிவந்த வாய்ச்சியர்**
**உத்தராசங்கம் இட்டு ஒளிக்கும் கூற்றமே.**

பொ :—வெல்லப் பாகைக் காட்டிலும் தித்திக்கும் சொல்லையும் சிவந்த வாயையும் உடைய பெண்களின், மேலாடையைப் பொருந்தி, அதில் ஒளிந்துகொண்டிருக்கும் யமனுகிய கொங்கைகள், தாம் அணிந்துள்ள முத்து மாலைகளால் நிறைமதியின் ஒளியை வீசும் ; நெருங்கிய இரத்தினபரணங்களின் வரிசையால் இளவெயிலைப் பரவவிடும்.

கு :—கூற்றம் முத்தினுன் நிலவெறிக்கும், மணிப்பத்தியான் இளவெயில் பரப்பும் என முடிக்க. கூற்றம்போலும் கொங்கை

யைக் கூற்றமென்றது உருவகம். கூற்றம் உயிர்களை உடலி லிருந்து பிரிக்க ஏதேனும் நோய் முதலிய காரணங்களை ஏறிட் டுக்கொண்டு அதில் மறைந்து நின்று பிரித்தல் போல இக் கூற்றம் மேலாடையில் மறைந்து நின்று வருத்துகின்றது என்ப தாம். உத்தராசங்கம் - மேலாடை. (17)

## மகளிரைத்தழுவி மைந்தர் செல்லுதல்

**833.** வில்லினர் வாளினர் வெறித்த குஞ்சியர்
கல்லினைப் பழித்துயர் கனகத் தோளினர்
வல்லியின் மருங்கினர் மருங்கு மாப்பிடி
புல்லிய களிறென மைந்தர் போயினர்.

**வில்லினர், வாளினர், வெறித்த குஞ்சியர்,**
**கல்லினைப் பழித்து உயர் கனகத் தோளினர்,**
**வல்லியின் மருங்கினர் மருங்கு, மாப் பிடி**
**புல்லிய களிறு என மைந்தர் போயினர்.**

பொ :—மணம் பொருந்திய மயிர்முடியை யுடையவர்களும், மலையைத் தமக்கு ஒப்பாகாது எனத் தாழ்த்தி வன்மையால் உயர்ந்த பொன்னணிகளைப் பூண்ட தோள்களை யுடையவர்களும், வில்லையும், வாளையும் ஏந்தியவர்களுமாகிய மைந்தர்கள், கொடி போன்ற இடையினையுடையவர்களாகிய தத்தம் மனைவிகளின் பக்கத்தில், பெருமை பொருந்திய பெண்யானையைத் தழுவிய ஆண்யானையைப்போலச் சென்றனர். (18)

## மகளிர் சிவிகை செல்லுதல்.

**834.** மன்றலம் புதுமலர் மழையிற் சூழ்ந்தெனத்
துன்றிருங் கூந்தலார் முகங்க டோன்றலால்
ஒன்றலா முழுமதி யூரு மானம்போல்
சென்றன தரளவான் சிவிகை யீட்டமே.

**மன்றல் அம் புதுமலர் மழையின் சூழ்ந்து எனத்**
**துன்று இருங் கூந்தலார் முகங்கள் தோன்றலால்,**
**ஒன்று அலா முழு மதி ஊரும் மானம்போல்,**
**சென்றன தரள வான் சிவிகை ஈட்டமே.**

பொ:—நல்ல மணத்தோடுகூடிய அழகிய புதுமலர்கள் மேகத்திற் சூழ்ந்தாற்போல நெருங்கிய மிக்க கூந்தலையுடைய பெண்களின் முகங்கள் மட்டும் காணப்படுவதால், பலவாகிய நிறைமதிகள் ஏறிச்செல்லுகின்ற வான விமானம்போல, முத்தாணியன்ற பெரிய பல்லக்குக்கூட்டங்கள் சென்றன.

கு:—மலர் மழையிற் சூழ்ந்தது எனத்துன்று கூந்தலார் முகங்கள் தோன்றலால் மதியூரு மானம்போலச் சிவிகையீட்டம் சென்றன எனக் கூட்டுக. மன்றல் - மணம். மழை - மேகம், ஆகுபெயர். மானம் விமானம் என்பதன் முதற்குறை. (19)

## யானைப்படையின் மிகுதி

**835.** மொய்திரைக் கடலென முழங்கி மூக்குடைக்
கைகளிற் றிசைநிலைக் களிற்றை யாய்வன.
மையலுற் றிழிமத மழைய ருமையால்
தொய்யலைக் கடந்தில சூழி யானையே.

மொய் திரைக் கடல் என முழங்கி, மூக்கு உடைக்
கைகளில் திசை நிலைக் களிற்றை ஆய்வன,
மையல் உற்று இழி மத மழை அருமையால்,
தொய்யலைக் கடந்தில, சூழி யானையே.

பொ:—முக படாத்தை அணிந்த யானைகள், ஒழுகுகின்ற மத மாகிற மழை என்றும் நீங்காமையால் (விளைந்த) சேற்றைக்கடந்து கரையேற மாட்டாதனவாய் மயங்கி, நெருங்கிய அலைகளையுடைய கடலைப்போல முழங்கி, மூக்கோடு கூடிய கைகளால் துழாவி, திசையானைகளை ஆராய்கின்றன.

கு:—சூழி யானை, இழி மத மழை அருமையால் தொய்யலைக் கடந்திலவாய் மையலுற்று, கடலென முழங்கிக் கைகளில்களிற்றை யாய்வன எனக் கூட்டுக. சேற்றில் விழுந்து கரையேற மாட்டாமையால் கடல்போல ஒலித்துக் கைகளால் திசைக்களிறுகளைத் துழாவின என்பதாம். யானையின் துதிக்கை மூச்சுவிடுதலும் மண முகர்தலுமாகிய மூக்கின் செயலும், சிறுபொருளையும் பற்றி எடுத்தலாகிய கையின் செயலும் உடைமையின் மூக்குடைக்கை என்று கூறினர். மையல் உற்று இழிமதம் என மதத்திற்கு அடையாக்குவாரும் உளர். தொய்யல் – சேறு நிரம்பிய பள்ளம். சூழி - முக படாம். (20)

## குதிரைகளின் செலவு.

836. சூருடை நிலையெனத் தோய்ந்துந் தோய்கிலா
வாருடை வனமுலை மகளிர் சிந்தைபோல்
தாரொடுஞ் சதியொடுந் தாவு மாயினும்
பாரிடை மிதிக்கில பரியின் பந்தியே.

சூருடை நிலையெனத் தோய்ந்தும் தோய்கிலா
வாருடை வனமுலை மகளிர் சிந்தைபோல்
தாரொடும் சதியொடும் தாவும் ஆயினும்
பாரிடை மிதிக்கில, பரியின் பந்தியே.

பொ:—குதிரையின் வரிசைகள், வெளியில் அன்பர்போலக் காட்டிக்கூடியும், உள்ளன்பு கொள்ளாத கச்சணிந்த அழகிய முலையினையுடைய (விலை) மகளிர் மனம்போலக் கழுத்திலணிந்துள்ள கிண்கிணிமாலையின் ஒலியோடும், அடிவைப்போடும் தாவிச் செல்லுமாயினும், பேயின் அடிகளைப்போலப் பூமியிற் பொருந்தாதனவாகச் சென்றன.

கு:—பரியின்பந்தி, மகளிர் சிந்தைபோல் தாவுமாயினும், சூருடை நிலையெனப் பாரிடை மிதிக்கில எனக் கூட்டுக. இங்ஙனமன்றி, பரியின் பந்தி தாவுமாயினும், சூருடை நிலையென, மகளிர் சிந்தைபோல், பாரிடை மிதிக்கில எனக் கூட்டி, குதிரைக் கூட்டம் கிண்கிணிமாலையோடும், சதியோடும் தாவிச்செல்லுமாயினும், தெய்வத்தன்மைபோலவும், விலைமகளிர் மனம் போலவும் பூமியிற் பொருந்தாமல் சென்றன என உரைகூறுவாரும் உளர். இவ்வுரையில் இரு உவமைகள் ஒருபொருள்கருதி நின்றன எனக் கொள்ளுதல் வேண்டும்.

நிலை - நிற்றற்குரியது என ஐ, கருவிப்பொருளில் வந்தது. நிற்றற்குரியதான கால் என்பது பொருள். பேய்களின் கால்கள் நிலத்தொடு தோயா என்பது மரபு. விலைமகளிர் சிந்தை பெற்ற பொருளளவிற்கு ஏற்பத் தாவிக்கொண்டே இருப்பதுபோலக் குதிரைகளும் ஒரு நிலையில் நில்லாதனவாய்த் தாவின என்பதாம். தார் - கிண்கிணி மாலையின் ஒலி. ஆகுபெயர். சதி - ஒத்த அடிவைப்பினுல் உளதாம் ஓசை. ஆகுபெயர். (21)

### ஊடிய மகளிர் செல்லுதல்.

**837.** ஊடிய மனத்தின ருருத நோக்கினர்
நீடிய வுயிர்ப்பினர் நெறித்த நெற்றியர்
தோடவிழ் கோதையுந் துறந்த கூந்தலர்
ஆடவ ருயிரென வருகு போயினர்.

ஊடிய மனத்தினர், உருத நோக்கினர்,
நீடிய உயிர்ப்பினர், நெறித்த நெற்றியர்,
தோடு அவிழ் கோதையும் துறந்த கூந்தலர்,
ஆடவர் உயிர் என அருகு போயினர்.

பொ:—தம் கணவர்மீது ஊடல்கொண்ட மனத்தையுடையவர்களும், அவர்கள்மீது பொருந்தாத பார்வையையுடையவர்களும், பெருமூச்சு எறிபவர்களும், புருவம் நெறித்தலையுடைய நெற்றியையுடையவர்களும், இதழ் விரியப்பெற்ற மாலையையும் துறந்த கூந்தலையுடையவர்களும், ஆகிய மகளிர்கள் அவ் ஆடவர்கள் உயிர் அருகுசெல்வதைப் போலச் சென்றார்கள்.

கு:—முன்னே ஊடியிருந்த மகளிர், இராமபிரான் திருமணச் செய்திகேட்டு, அவ்வூடல் நீங்கித் தத்தம் கணவரோடு அவர் உயிர்போலச் சென்றனர் என்றவாறு. (22)

### யானைகளின் செலவு

**838.** மாறெனத் தடங்களைப் பொருது மாமரம்
ஊறுபட் டிடவிடை யொடித்துச் சாய்த்துராய்
யாறெனச் சென்றன வருவி பாய்கவுட்
டாறெனக் கன லுமிழ் தறுகண் யானையே.

மாறு எனத் தடங்களைப் பொருது, மாமரம்
ஊறு பட்டிட இடை ஒடித்துச், சாய்த்து, உராய்,
ஆறு எனச் சென்றன, அருவி பாய் கவுள்,
'தாறு' எனக் கனல் உமிழ் தறுகண் யானையே.

பொ:—மதநீர் அருவிபோலப் பாய்கின்ற கன்னத்தையும், அங்குசம் என்றுகூறியவுடன் தீயைக்கக்குகின்ற (கண்களையும் உடைய) அஞ்சாமையோடு கூடிய யானைகள், தமக்குப் பகை

யென்று எண்ணிக் கரைகளை முட்டி யிடித்துப் பெரிய மரங்கள் வருந்த இடையிலே ஒடித்துக் கீழே சாய்த்து, உரசி ஆறுகளைப் போலச் சென்றன.

கு:—'பொருது,' 'ஒடித்து', 'சாய்த்து' 'உராய்', என்னும் வினை யெச்சங்கள் யானைக்கும் ஆற்றிற்கும் பொருள்படும் வகையில் பொதுமையில் நின்றன. கரைகளைக் கொம்பால் மோதியிடித்த லும், பெரிய மரங்களை ஒடித்தலும், சாய்த்தலும், அவற்றில் உரசிக்கொண்டு செல்லலும் களிற்றின் இயல்பு. கரைகளை அலையால் மோதியிடித்தலும், மரங்களை அலைத்து ஒடித்தலும், சாய்த்தலும், உரசிக்கொண்டு செல்லலும் யாறுகளின் இயல்பு. தாறு - விலங்கினங்களைக் குத்திச்செலுத்தும் ஓர்வகை முட்கோல். (குத்துக்கோல்) (23)

## முன்சேனை மிதிலையை அடைதல்

839. உழுந்திட விடமிலை யுலக மெங்கணும்
அழுந்திய வுயிர்க்கெலா மருட்கொம் பாயினான்
எழுந்தில னெழுந்திடைப் படருஞ் சேனையின்
கொழுந்துபோய்க் கொடிமதின் மிதிலை கூடிற்றே

உழுந்து இட இடம் இலை; உலகம் எங்கணும்
அழுந்திய உயிர்க்கு எலாம் அருள் கொம்பு ஆயினான்
எழுந்திலன்; எழுந்து இடைப் படரும் சேனையின்
கொழுந்து போய்க் கொடி மதில் மிதிலை கூடிற்றே.

பொ:—உலகங்கள் எவ்விடத்தும் வசிக்கின்ற உயிர்கட்கு எல்லாம் அருளோடு கூடிய கொழுகொம்பாய் விளங்குகின்ற தசரதன் இன்னும் அயோத்திமாநகரின் அரண்மனையை விட்டு எழுந்தான் அல்லன்; ஓர் உழுந்துகூடப் போட இடமில்லையாம்படி எங்கும் பரவிச்செல்கின்ற அவன் சேனைகளின் தலைப்பானது சென்று கொடிகளால் அலங்கரிக்கப்பெற்ற மதில்சூழ்ந்த மிதிலை நகரைச் சேர்ந்தது.

கு:—அருட்கொம்பு ஆயினான் எழுந்திலன்: சேனையின் கொழுந்து மிதிலை கூடிற்று எனக் கூட்டுக. உழுந்திட இடம் இல்லை, என்றது சேனையின் நெருக்கம் கூறியது. சேனையின் கொழுந்து—முன் சேனை. (24)

### வண்டிகள் செல்லுதல்

840. கண்டவர் மனங்கள்கை கோப்பக் காதலின்
வண்டிமிர் கோதையர் வதன ராசியால்
பண்டிகள் பண்டிகள் பரிசிற் செல்வன
புண்டரீ கத்தடம் போவ போன்றவே.

கண்டவர் மனங்கள் கை கோப்பக் காதலின்
வண்டு இமிர் கோதையர் வதன ராசியால்,
பண்டிகள் பண்டிகள், பரிசில் செல்வன,
புண்டரீகத் தடம் போவ போன்றவே.

பொ :—பார்த்த ஆடவர்களின் மனங்கள் காதன்மையோடு கலக்க, வண்டுகள் ஒலிக்கின்ற கூந்தலையுடைய மகளிர்களின் முகக் கூட்டத்தால், வண்டிகள் தமக்கேயுரிய தனிச் சிறப்போடு செல்வன, தாமரைபூத்த தடாகங்கள் போவனவற்றை ஒத்தன.

கு :—கண்டவர் மனங்கள் காதல் கைகோப்ப என மாறுக. 'முகங்களின் கூட்டத்தால்' எனவே ஒரு வண்டியில் பல மகளிர்கள் ஏறியுள்ளனர். அவர்கள் முகங்கள் பூத்த தாமரைகள்போல விளங்கின. அதனுல் வண்டி பெயருதல் தாமரைத் தடாகமே பெயருவ போன்றன என்பது பெற்றும். பண்டிகள் பண்டிகள் பன்மை பற்றிய அடுக்கு. பரிசில் செல்வன – அசைவும், நடுக்கமுமின்றித் தமக்குரிய சிறப்போடு செல்வன. (25)

### ஒருகாதலியின் கடைக் கண்ணேக்கச் சிறப்பு

841. பாண்டிலின் வைத்தவோர் பாவை தன்னெடும்
ஈண்டிய வன்பின னேகு வானிடைக்
காண்டலு நோக்கிய கடைக்க ணஞ்சனம்
ஆண்டகைக் கினியதோ ரமுத மாயதே.

பாண்டிலின் வைத்த ஓர் பாவை, தன்னெடும்
ஈண்டிய அன்பினன் ஏகுவான் இடைக்
காண்டலும், நோக்கிய கடைக்கண் அஞ்சனம்,
ஆண்டகைக்கு இனியது .ஓர் அமுதம் ஆயதே.

பொ :—வண்டியில் ஏற்றப்பட்ட பாவை போல்வாளாகிய ஓர் பெண், தன்னேடு நெருங்கிய அன்புகொண்டவனுகிச் செல்கின்றவன் ஒருவனை, நடுவழியிற் கண்டவுடன், அவனைப் பார்த்த

கண்ணின் கடையிற் பூசப்பெற்ற மையானது ஆடவர்களிற் சிறந்தவனாகிய அவனுக்கு இனிமைவாய்ந்த அமிர்தம் ஆயிற்று.

கு :—பாவை காண்டலும், நோக்கிய கடைக்கண் அஞ்சனம் (அவ்) ஆண்டகைக்கு அமுதம் ஆயது எனக் கூட்டுக. இங்ஙன மன்றி 'பாவை தன்னொடும் ஈண்டிய அன்பினன் ஏகுவானிடைக் காண்டலும் நோக்கிய அஞ்சனம் ஆண்டகைக்கு அமுதம் ஆயதே' எனக்கூட்டி ஒருத்தியோடு அன்புகொண்டவனாய் அவளை வண்டியி லேற்றிவிட்டு உடன் ஓடி வருகின்றவன் மீது அவள் தன் பார்வை யைச் செலுத்தவும், அவனைப் பார்த்த அவள் கடைக்கண் அஞ்சனம் அவனுக்கு அமுதம் ஆயது என உரைப்பாரும் உளர்.

ஏகுவானை இடையிற் காண்டலும், அவள் நோக்கிய கடைக் கண்ணின் அஞ்சனம் அவனுக்கு அமுதமாயிற்று என உருபுகள் விரித்துப் பொருள் கொள்க.

'பாண்டிலின் வைத்த' என, பிறவினை வாய்பாட்டாற் கூறினமையின் அவள் தன் காதலனைப் பிரியக் கூடாமையாலும், அவனிடம் தெரிவித்துவர மாட்டாமையாலும் வருந்த, தோழியர் அவளை வலிந்து பண்டியில் ஏற்றினராதல் பெறப்படும் அவள் அங்ஙனம் வண்டியில் ஏற்றப்பட்டுச் செல்லும்போது, இடை வழியில் அவள் காதலன் எதிர்ப்பட, அவனை அவள் நோக்கினாள். அவள் கடைக்கண் அஞ்சனம் அவனுக்கு அமுதமாயிற்று என்பதாம். அஞ்சனம் - மை. இது விஷம் என்ற வேறு பொருளும் தருவதாம். அவள் பார்வை காதற் பார்வையாக் இருத்தலின் அவனுக்கு அமுதமாயிற்று என்றார். நஞ்சு அமுத மாயிற்று என்பதாம். குறிப்பிற் குறிப்புணரும் சிறப்பிருத்தலின் அவன் ஆண்தகை எனக் குறிப்பிக்கப் பெறுகின்றான்.

புதையல் முதலியவற்றைக் காண உதவும் மைபோல, அவள் உள்ளத்துப் புதைந்துகிடந்த காதலைப் புலப்படுத்தலின் அஞ்சனம் அமுதமாயிற்று என நயம் கூறுவாரும் உளர்.

அன்றி, 'கடைக்கண் அஞ்சனம்' என்பதற்குக் கடைக் கண்ணாகிய அஞ்சனம் எனப் பொருள்கொண்டு, காதலியின் வெள் விழி கண்ணாடியை ஒப்ப, அதனிடை உள்ள கருவிழி அக்கண்ணாடி யில் இடப்பெற்ற மையை ஒப்ப, காதலன் மந்திரவாதியை ஒப்ப, அவள் கருவிழியாற் கண்டுபிடித்த காதல், மந்திரவாதி மையாற் கண்டுபிடித்த புதையலை ஒத்திருந்தது என அமைதி கூறலும் ஒன்று.

மிதிலைக்குப் போவாருள் ஒருவன் தன் மனைவியோடு போகிறவன் தன் மனைவியை வண்டியில் ஏற்றிவிட்டுத் தான்

ஆட்வர் கூட்டத்தோடும் செல்கின்றான்; இடை இடையே வண்டியிலுள்ள காதலியைச் சந்திக்கிறான்; அவள் இவனை நோக்குகின்றாள்; ஆசைக்குறிப்பு வெளிப்படுகிறது; அதனால் அமுதம்பெற்றவன் போலாகிறான் எனக் கருத்துக் கூறுவாரும் உளர். (26)

பிரிந்த காதலன் பேதுறுதல்

842. பிள்ளைமா னோக்கியைப் பிரிந்து போகின்றான்
அள்ளனீர் மருதவைப் பதனி னன்னமாம்
புள்ளுமென் றாமரைப் பூவு நோக்கினான்
உள்ளமுந் தானுநின் றூச லாடுவான்.

பிள்ளை மான் நோக்கியைப் பிரிந்து போகின்றான்,
அள்ளல் நீர் மருதவைப்பு அதனின், அன்னமாம்
புள்ளும் மென் தாமரைப் பூவும் நோக்கினான்,
உள்ளமும் தானும் நின்று ஊசல் ஆடுவான்.

பொ :—இளமான்போன்ற கண்களையுடைய காதலியைப் பிரிந்து செல்கின்ற ஆடவன் ஒருவன், சேறும் நீரும் நிறைந்த வயலிடங்களில் அன்னப் புள்ளினையும் தாமரைப் பூவினையும் நோக்கி மனமும் தானும் தனித்து நின்று ஊசல்போலத் தடுமாறினான்.

கு :—தாமரைப் பூவையும் அன்னத்தையும் காணவே தன் மனைவியின் பாதமும் நடையழகும் நினைவிற்கு வந்தன. பிரிந்தமையால் அவற்றைக் கண்டு மகிழக் கொடுத்துவைக்கவில்லையே என வருந்தினான் என்க. (27)

சேனை கங்கையாற்றை ஒத்தது எனல்

843. அங்கண் ஞாலத் தரசு மிடைதலால்
★ பொங்கு வெண்குடை சாமரை போர்த்தலால்
கங்கை யாறு கடுத்தது காரெனச்
சங்கு பேரி முழங்கிய தானையே.

அங்கண் ஞாலத்து அரசு மிடைதலால்,
பொங்கு வெண்குடை சாமரை போர்த்தலால்,
கங்கை யாறு கடுத்தது, கார் எனச்
சங்கு பேரி முழங்கிய தானையே.

பொ :—சங்குகளும், பேரிகளும் மேகத்தைப்போல முழங்கிய சேனையானது அழகிய பூமியின் கண்ணுள்ள அரசர்கள் யாவரும் நெருங்குதலாலும், ஒளிமிக்க வெண்கொற்றக் குடைகளும் வெண் சாமரைகளும் நிரம்பியிருத்தலாலும், கங்கையாற்றை ஒத்தது.

கு :—கங்கைக்கரையில் அரசு (மரம்) மிகுதியாதலாலும், வெண்குடைகளும் சாமரைகளும் கங்கையின் வெண்டிரைபோல விளங்குதலாலும் சேனை கங்கையை ஒத்தது என்பதாம். சங்கு பேரிகாரென முழங்கியதானை என, முழங்கிய என்பதுவரையுள்ள சொற்றொடர்களைத் தானைக்கு அடையாக்குக.

'அரசு மிடைந்தவா' எனப் பாடம்கொண்டு, தானை, குடை சாமரை போர்த்தலால், கங்கையாறு கடுத்தது. அரசு மிடைந் தவா! என்ன வியப்பு எனக் கூட்டிப் பொருள் காண்பாரும் உளர்.

(28)

### சேனை போர்க்களத்தை யொத்தது எனல்

844. அமிர்த வஞ்சொ லணங்கனை யாருயிர்
கவருங் கூர்நுதிக் கண்ணெனுங் காலவேல்
குமரர் நெஞ்சு குளிப்ப வழங்கலால்
சமர பூமியு மொத்தது தானையே.

அமிர்த அம் சொல் அணங்கு அனையார் உயிர்
கவரும் கூர்நுதிக் கண் எனும் காலவேல்
குமரர் நெஞ்சு குளிப்ப வழங்கலால்
சமர பூமியும் ஒத்தது தானையே.

பொ :—சேனையானது, அமுதம்போலும் இனிய அழகிய சொற்களையுடைய தெய்வப்பெண்ணையொத்த மகளிரின் (நோக்கப் பட்டார்) உயிரைக் கவரும் கூரிய நுனியோடு கூடிய கண்களாகிற காலனுடைய வேலை, (காதலித்த) இளைஞரின் நெஞ்சில் மூழ்கச் செலுத்துதலால், போர்க்களத்தை ஒத்தது.

கு :—அமிர்த அஞ்சொல் அணங்கனையார் எனவும், தானை சமர பூமியும் ஒத்தது எனவும் இயைக்க. போர்க்களம் வீரர் நெஞ்சுகுளிப்ப வேல் வழங்குவதுபோல, திருமணத்திற்குச் செல்லும் தானையில் உள்ள பெண்கள் கண் எனும் காலவேலைக் காளையர் நெஞ்சிற் பதியச் செலுத்துதலால் தானை சமர பூமி போன்றது என்பதாம்.

(29)

## சேனையின் செறிவு

845. தோண் மிடைந்தன தூண மிடைந்தென ;
வாண் மிடைந்தன வான்மின் மிடைந்தெனத்
தாண் மிடைந்தன தம்மி மிடைந்தென
ஆண் மிடைந்தன வாளி மிடைந்தென.

**தோள் மிடைந்தன, தூணம் மிடைந்து என ;**
**வாள் மிடைந்தன, வான்மின் மிடைந்து எனத் ;**
**தாள் மிடைந்தன, தம்மி மிடைந்து என ;**
**ஆள் மிடைந்தன, ஆளி மிடைந்து என.**

பொ :—தூண்கள் நெருங்கினாற்போலத் தோள்கள் நெருங்கின. வானத்து மின்னல் நெருங்கினாற்போல வாள்கள் செறிந்தன. தாமரைகள் நெருங்கினாற்போலக் கால்கள் நெருங்கின. அத்தி ஆளிகள் செறிந்தாற்போலக் காலாட் படைகள் நெருங்கின.

கு :—தூணம், அம்சாரியை, தம்மி – தாமரை. ஆள்–காலாள். காலாள் – படைவீரராயினும், படையென்ற பொதுமையான் மிடைந்தன என அஃறிணைப் பன்மை முடிபேற்றது. (30)

## இளைஞர் செயல் கூறுவன 846-851

846. வார்கு லாமுலை வைத்தகண் வாங்கிடப்
பேர்கி லாது பிறங்கு முகத்தினான்
தேர்கி லானெறி யந்தரிற் சென்றொரு
மூரி மாமத யானையை முட்டினான்.

வார்குலாம் முலை வைத்த கண் வாங்கிடப்
பேர்கிலாது பிறங்கு முகத்தினான்,
தேர்கிலான் நெறி, அந்தரில் சென்று, ஒரு
மூரி மாமத யானையை முட்டினான்.

பொ :—கச்சணிந்த முலையிலே பதித்த கண்ணைப் பெயர்த்து வாங்கி, பெயராமல், விளங்குகின்ற முகத்தையுடைய காளை யொருவன், வழிதெளியாதவனாய், குருடரைப்போலச் சென்று, ஒப்பற்ற வலிய பெரிய மதயானையை முட்டிக்கொண்டான்.

கு:—வாங்கிட என்னும் செயவெனெச்சத்தை வாங்கிட்டுஎனத் திரித்து பேர்கிலாது என்பதனோடு இயைக்க. முலையில் வைத்த

கண் வாங்காத காளைபோல்வீரன் கடாக்களிற்றின்மேல் கட்படாம் மாதர் முலைமேற்றுகில் என முலைக்கு ஒப்புக்கூறப் பெற்ற களிற்றின்மேற் சென்று முட்டிக்கொண்டான் என்ற நயம் சிந்தித்தற்குரியது. கர்மத்தால் கண் கெடுதல் இயல்பாதலின் அந்தரிற் சென்று என இருமருங்கும் பொருந்திய உவமை தந்தார். (31)

**847.** சுழிகொள் வாம்பரி துள்ளவோர் தோகையாள்
வழுவி வீழலுற் றுளையோர் வள்ளறுன்
எழுவி னீள்புயத் தாலெடுத் தேந்தினுன்
தழுவி நின்றொழி யான்றரை தான்வையான்.

சுழிகொள் வாம்பரி துள்ள, ஓர் தோகையாள்
வழுவி வீழலுற்றுளை, ஓர் வள்ளல்தான்,
எழுவின் நீள்புயத்தால் எடுத்து ஏந்தினுன்,
தழுவி நின்று ஒழியான், தரைதான் வையான்.

பொ :—நல்ல சுழிகளையுடைய தாவுகின்ற குதிரையானது துள்ள. அதனுல் அஞ்சி ஒரு மயிலையொத்த மங்கையானவள் (அதனின்றும்) நழுவி வீழ்ந்தவளை ஒரு வள்ளன்மையுடைய வீரன், கணைய மரத்தையொத்த நீண்ட புயத்தால் வாரி எடுத்துத் தாங்கியவனுய், தரையின்மேல் வையாதவனுய், அவளைத் தழுவிய படியே நின்று, (கீழே) விட்டானலன்.

கு :—குதிரை மேற் செல்கின்ற ஒரு மங்கை, குதிரை துள்ள அதனுல் அவள் நழுவிவிழ அவளைத் தாங்கித் தழுவியபடியே நின்றுன் ஒரு வீரன் என்பது கருத்து. (32)

**848.** துணைத்த தாமரை நோவத் தொடர்ந்திடை
கணைக்க ருங்கணி ஞளையோர் காளைதான்
பணைத்த வெம்முலைப் பாய்மத யானையை
அணைக்க நங்கைக் ககலிட மில்லென்றுன்.

துணைத்த தாமரை நோவத் தொடர்ந்து இடை
கணைக் கருங்கணினுளை, ஓர் காளைதான்,
'பணைத்த வெம்முலைப் பாய்மத யானையை
அணைக்க நம் கைக்கு அகலிடம் இல்' என்றுன்.

பொ:—இரண்டான தாமரை போன்ற கால்கள் வருந்தும்படி, தொடர்ந்து நடந்துவந்து, வருந்துகின்ற அம்புபோன்று கூரிய கரிய கண்களையுடைய பெண்ணொருத்தியைப் பார்த்த, ஒரு காளை, 'பருத்திருக்கின்ற விரும்பத்தக்க முலைகளாகிய மதநீர் ஒழுகும் யானையை அணைக்க நம் கையின்கண் பரந்த இடம்' இல்லை என்று கூறினான். (33)

849. சுழியுங் குஞ்சி மிசைச்சுரும் பார்த்திடப்
பொழியு மாமத யானையிற் போகின்றான்
கழிய கூரிய வென்றொரு காரிகை
விழியை நோக்கித்தன் வேலையு நோக்கினான்.

சுழியும் குஞ்சிமிசைச் சுரும்பு ஆர்த்திடப்,
பொழியும் மாமத யானையின் போகின்றான்,
'கழிய கூரிய!' என்று,ஒரு காரிகை
விழியை நோக்கித் தன் வேலையும் நோக்கினான்.

பொ:—சுருண்டுள்ள தனது மயிரின் மேலுள்ள வண்டுகள் ஆரவாரிக்க, மதநீர் பொழிகின்ற பெரிய யானையைப் போலப் போகின்றவன், 'மிகக் கூர்மையானவை' என்று ஒரு பெண்ணின் விழியையும் பார்த்துத் தனது வேலாயுதத்தையும் பார்த்தான்.

கு:—வேலையும் விழியையும் ஒப்ப நோக்கி இவை மிகமிகக் கூரிய என்று இரண்டிற்கும் பொதுமை தோன்றக் கூறினான் என்க. குஞ்சி – ஆண்பால் தலைமயிர். சுழிதல் - சுழிசுழியாகச் சுருண்டிருத்தல். (34)

850. தரங்க வார்குழற் றாமரைச் சீறடிக்
கருங்கண் வாளுடை யாளையோர் காளைதான்
நெருங்கு பூண்முலை நீள்வளைத் தோளினிர்
மருங்கு லெங்கு மறந்தது நீரென்றான்.

தரங்க வார்குழல் தாமரைச் சீறடிக்
கருங்கண் வாள்உடையாளை, ஓர் காளைதான்,
'நெருங்கு பூண்முலை நீள்வளைத் தோளினிர்!
மருங்குல் எங்கு மறந்தது நீர்?' என்றான்.

பொ:—அலைபோன்ற நீண்ட கூந்தலையும், தாமரைப் பூப் போன்ற சிறிய அடிகளையும், கரிய கண்களாகிய வாளையும் உடைய

பெண்ணொருத்தியைப் பார்த்து, ஒரு காளை, 'அணிகளையுடைய, நெருங்கிய முலைகளையும், வளையல்களையணிந்த நீண்ட தோள்களையும் உடையவரே! நீர் நும் இடையை மறந்தது எங்கே?' என்று வினவினான்.

கு :—அலைகள் சுருண்டு மடிந்திருத்தலின் கூந்தலுக்கு உவமையாயின. (35)

**851.** கூற்றம் போலுங் கொலைக்கண்ணி னாலன்றி
மாற்றம் பேசுகி லாளையோர் வள்ளறான்
ஆற்று நீரிடை யங்கைக ளாலெடுத்
தேற்று வாருமை யாவர்கொ லோவென்றான்.

கூற்றம் போலும் கொலைக்கண்ணினால் அன்றி
மாற்றம் பேசுகிலாளை, ஓர் வள்ளல்தான்,
'ஆற்று நீரிடை அங்கைகளால் எடுத்து
ஏற்றுவார் உமை யாவர்கொலோ?' என்றான்.

பொ :—எமனைப்போலும் கொலைத் தொழிலைச் செய்கின்ற கண்களால் அல்லது வாயால் மறுமொழி பேசாத நங்கையொருத்தியைப் பார்த்து வள்ளன்மையுடைய காளையொருவன், '(வழியிலுள்ள) ஆற்று வெள்ளத்தில் உங்களை அழகிய கைகளால் தூக்கிக் கரையேற்றுவார் யாவரோ?' என்று வினவினான்.

கு :—"பண்டறியேன் கூற்றென்பதனை இனி அறிந்தேன், பெண்தகையாள் பேரமர்க்கட்டு" "கூற்றமோ கண்ணோ" என்ற குறட் கருத்து மனத்தில் நிலவ "கூற்றம் போலும் கொலைக் கண்ணினாலன்றி" எனவும், "கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச் சொற்கள் என்னபயனுமில" என்பதனையுட்கொண்டு "கண்ணினாலன்றி மாற்றம் பேசுகிலாளை" என்றும் கம்பர் கூறினார். நீரிடை அவள் வழுக்கி வீழ்வதற்கு முன்பே வருமுன் காப்போனாகத் தானுண்மையைக் குறிப்பிடுகின்றானாதலின் நொந்தார் உயிர்புரக்குந் தன்மையால் 'வள்ளல்' என்று கவிஞர் குறிக்கின்றார். (36)

### ஒட்டகங்களின் செயல்

**852.** தள்ள ரும்பரந் தாங்கிய வொட்டகம்
தெள்ளு தேங்குழை யாவையுந் தின்கில
உள்ள மென்னத் தம்வாயு முலர்ந்தன
கள்ளுண் மாந்தரிற் கைப்பன தேடியே.

தள்ளஅரும் பரம் தாங்கிய ஒட்டகம்
தெள்ளு தேம்குழை யாவையும் தின்கில,
உள்ளம் என்னத் தம்வாயும் உலர்ந்தன,
கள்ளுண் மாந்தரில் கைப்பன தேடியே.

பொ :—தாங்க முடியாத சுமையைத் தாங்கிய ஒட்டக மானது தெளிந்த இனிய தழைகள் எவற்றையும் தின்னாதனவாய், கைக்கும் வேப்பந்தழை முதலியவற்றைத் தேடிக் கொண்டு சென்று, கள்குடிக்கும் மக்களைப்போல, தமது மனம்போல வாயும் உலர்ந்தன.

கு :—கள் குடிப்பவர்கள் இனிய பொருளை விரும்பாது கைப்புப் பொருளை விரும்பியுண்டல் போல ஒட்டகங்கள் இனிய தழையை உண்ணாதனவாய்க் கசப்புத் தழையை விரும்பி உண்டன என்பதாம். (37)

## பப்பரர் செல்லுதல்

853. அரத்த நோக்கின ரற்றிரண் மேனியர்
பரித்த காவினர் பப்பர ரேகினர்
திருத்து கூடத்திற் றிண்கணை யத்தொடும்
எருத்தி னேந்திய மால்களி றென்னவே.

அரத்த நோக்கினர், அல்திரள் மேனியர்,
பரித்த காவினர், பப்பரர் ஏகினர்,
திருத்து கூடத்தில் திண் கணையத்தொடும்
எருத்தின் ஏந்திய மால்களிறு என்னவே.

பொ :—சிவந்த கண்களை யுடையவர்களும், இருள் திரண்டால் ஒத்த மேனியை யுடையவர்களும், காத் தண்டினைத்தாங்கியவர் களும், ஆகிய பப்பரர்கள், செவ்விதின் அமைக்கும் யானைச் சாலையை, உறுதியான கணையமரத்தோடும், பிடரியில் தாங்கிய மதயானையைப் போலச் சென்றார்கள்.

கு :—தோளில் காத் தண்டைத் தூக்கிய பப்பரர்களுக்குக் கணையமரத்தைத் தூக்கிய யானை உவமை. கா–காத்தண்டு. காத் தண்டாவது இருமுனையிலும் சுமை கோக்கப் பெற்றுள்ள கழி. கணையம் – யானை நிற்குமிடத்தில் யானைகள் ஒன்றோடொன்று முட்டிக் கொள்ளாத வண்ணம் குறுக்காக இடப்படும் மரம். எருத்து - பிடரி. மால் களிறு – மதமயக்கம் பொருந்திய யானை. (38)

இப்பாடலை யடுத்துப் பின்வரும் பாடல் 26–ஆம் ஏட்டில் காணப்படுகின்றது.

எதிர்கொண் டேந்தியோ ரேந்திழை கொங்கைபூண்
அதிர மார்ப மழுந்தத் தழுவினன்
முதிருந் தோண்மலை யோமுலைக் குன்றமோ
அதிக மென்ப தறிகவந் தேனென்றான்.

### பெண்யானையின் மீதிருந்த பெண்கள் செயல்

854. பித்த யானை பிணங்கிப் பிடியிற்கை
வைத்த மேலிருந் தஞ்சிய மங்கைமார்
எய்த்தி டுக்கணுற் றார்புதைத் தாரிரு
கைத்த லங்களிற் கண்ணடங் காமையே.

பித்த யானை பிணங்கிப் பிடியில் கை
வைத்த: மேலிருந்து அஞ்சிய மங்கைமார்,
எய்த்து இடுக்கண் உற்றார், புதைத்தார் இரு
கைத் தலங்களில் கண் அடங்காமையே.

பொ:—பித்தேறிய யானைகள் மாறுபட்டுப் பெண்யானைகளின் மீது துதிக்கையை வைத்தன. அப்பிடிகளின் மேலிருந்து பயந்த – இருகைகளாலும் கண்களைப் புதைத்த – மங்கைமார்கள் தம் கண்கள் தம் கைத்தலங்களில் அடங்காமையால் இளைத்துத் துன்புற்றனர்.

கு:—பிடியின் மேலிருந்த பெண்கள் அஞ்சிக் கண்களைப் புதைத்தனர். கண்கள் கைகளில் அடங்காமையால் இளைத்துப் போயினர். துன்புற்றனர் என்பது கருத்து. (39)

### பிடியின்மேற் சிந்தரும் போதல்

855. வாம மேகலை யாரிடை வாலதி
பூமி தோய்பிடிச் சிந்தரும் போயினர்
காமர் தாமரை நாண்மலர்க் கானத்துள்
ஆமை மேல்வருந் தேரையி னுயரோ.

வாம மேகலையாரிடை, வாலதி
பூமி தோய் பிடிச் சிந்தரும் போயினுர்
காமர் தாமரை நாள்மலர்க் கானத்துள்
ஆமை மேல்வரும் தேரையின் ஆய், அரோ!

பொ :—அழகிய அன்றலர்ந்த தாமரைப் பூங்காட்டில், ஆமை மேல்வரும் தேரையைப்போல. அழகிய மேகலாபரணத்தை யணிந்த பெண்களின் நடுவிலே, வால் பூமியில் தோயப் பெற்ற உத்தம இலக்கணம் உற்ற பெண்யானைமீது சிந்தர்களும் சென்றூர்கள்.

கு :—வாமம் - அழகு. மேகலை – எண்கோவையாக இடுப்பில் அணியும் பொன் மாலை விசேடம். வாலதி - வால். தாமரைக் காடு மகளிர்க்கும் ஆமை பிடிக்கும், தேரை சிந்தர்க்கும் ஒப்பாயின என்க. (40)

### குதிரை ஒருபெண்ணைத் தூக்கிச் செல்லுதல்

856. இம்பர் நாட்டின் றரமல்ல ளீங்கிவள்
உம்பர் கோமகற் கென்கின்ற தொக்குமால்
கம்ப மாவரக் கால்கள் வளைத்தொரு
கொம்ப னுளைக்கொண் டோடுங் குதிரையே.

'இம்பர் நாட்டின் தரம்அல்லள், ஈங்கு, இவள்
உம்பர் கோமகற்கு' என்கின்றது ஒக்கும், ஆல்,
கம்ப மா வரக், கால்கள் வளைத்து ஒரு
கொம்பனுளைக் கொண்டு ஓடும் குதிரையே.

பொ :—யானை தொடர்ந்து ஓடிவர, முன்னங்கால்களை வளைத்துக் கொண்டு, பூங்கொம்பொத்த ஒருத்தியைச் சுமந்து கொண்டு ஓடுகின்ற குதிரையானது, இவ்விடத்து, 'இப்பெண் இவ்வுலகத்தின் தகுதிக்கு ஏற்றவள் அல்லள். தேவர்கள் தலைவனுகிய இந்திரனுக்கு உரியவளாவள்' என்று கூறுவதை ஒக்கும்.

கு :—குதிரை, என்கின்றது ஒக்கும் எனக்கூட்டுக. யானையைக் கண்டு வெகுண்ட குதிரைகள் முதுகின் மீதுள்ள பெண்களைத் தூக்கிக்கொண்டு வேகமாக ஓடுகின்றன. அச்செயல், இவள் இங்குள்ளவர்களின் தரத்தள் அல்லள். தேவேந்திரனுக்கே யுரியவள் என்று சொல்வதை ஒக்கும் என்பது கருத்து. கம்ப மா–யானை. மா – விலங்கு. கம்ப மா – கட்டுத்தறியில் கட்டப்

பெறும் விலங்கு. என்றது வெளிப்படை மொழி. மா என்னும் விலங்கின் பொதுப்பெயர் கம்பம் என்ற அடைமொழியால் பொதுமையினீங்கி யானையை யுணர்த்திற்று. (41)

## மகளிர் மகிழ்ச்சியால் ஓடுதல்.

857. சந்த வார்குழல் சோர்பவை தாங்கலார்
சிந்து மேகலை சிந்தையுஞ் செய்கலார்
எந்தை வில்லிறுத் தானெனு மின்சொலை
மைந்தர் பேச மனங்களித் தோடுவார்.

சந்த வார்குழல் சோர்பவை தாங்கலார்,
சிந்தும் மேகலை சிந்தையும் செய்கலார்,
'எந்தை வில்இறுத்தான் !' எனும் இன்சொலை
மைந்தர் பேச, மனம் களித்து ஓடுவார்.

பொ :—மகளிர், எம் தந்தையாகிய இராமபிரான், சீதைக்குப் பணயமாக வைத்திருந்த வில்லை யொடித்தான் என்கின்ற இனிய சொல்லை வீரர்களாகிய ஆடவர்கள் கூற அதனைக் கேட்டு மனம் மிகமகிழ்ந்து அவிழ்ந்து வீழ்கின்றவாகிய அழகிய நீண்ட கூந்தலைத் தாங்காதவர்களாயும், அறுந்து உதிர்கின்ற மேகலா பரணத்தைப் பற்றிப் பொருட் படுத்தாதவர்களாயும் ஓடுவார்கள்.

கு :—(மடந்தைமார்) களித்து, தாங்கலார், செய்கலார் ஓடுவார் என இயைக்க. சந்தம் – அழகு. வார்குழல்-நீண்ட கூந்தல். (42)

## அந்தணர் மிதிலைக்குச் செல்லுதல்

858. குடையர் குண்டிகை தூக்கினர் குந்திய
நடையர் நாசி புதைத்தகை நாற்றலர்
கடக ளிற்றையுங் காரிகை யாரையும்
அடைய வஞ்சிய வந்தணர் முந்தினர்.

குடையர், குண்டிகை தூக்கினர், குந்திய
நடையர், நாசி புதைத்த கை நாற்றலர்,
கட களிற்றையும் காரிகையாரையும்
அடைய அஞ்சிய அந்தணர் முந்தினர்.

பொ:—கையிற் குடையை யுடையவர்களும், கமண்டலத்தைத் தாங்கியவர்களும், முன்னங்காலால் உந்திச் செல்லும் நடையையுடையவர்களும். மூக்கை மூடிய கையைத் தொங்க விடாதவர்களும், மதயானையையும் மகளிரையும் நெருங்கவும் அஞ்சிய அந்தணப் பெருமக்கள் திருமணங் காண்பதற்காக மிதிலைக்கு முந்திச் சென்றனர்.

கு:—அந்தணர்கள் கையில் எப்போதும் வெண்குடையிருக்கவேண்டுவது விதியாதலின் குடையர் என்றார். குண்டிகை- கமண்டலம்; ஒருவகை நீர்க்கலம். குண்டிகைத் தூக்கினர் எனப் பாடங் கொண்டு கமண்டலம் வைக்கப்பெற்ற உறியையுடையவர்கள் என்பாரும் உளர். குந்திய நடையர் - தம் நடையால் ஓருயிர்க்கும் தீங்கு வாராதபடி முன்னங்காலால் உந்தி நடக்கும் நடையையுடையவர்கள். நாசி புதைத்த கை – பிராணாயாமம் செய்யுங்கையாகிய வலதுகை. அதனை அரையின் கீழே தொங்க விடுதல் மரபன்றாதலின் நாசிபுதைத்த கை நாற்றலர் என்றார். நாற்றலர் –தொங்க விடாதவர்களாய்; யானையை நெருங்கினால் உயிர்க்குத் தீங்காம். மாதரை நெருங்கினால் ஈட்டிய தவமும், புண்ணியப்பயனும், உயிரினும் மேலான ஒழுக்கமும் அழியும். ஆதலின் அவ்விரண்டையும் அடைய அஞ்சினர் என்பதாம். இதனால் அந்தணர் ஒழுக்கம் அறிவிக்கப் பெற்றது. (43)

### உருவெளிப்பாடு கண்டு பெண்கள் கூறியது

**859.** நாறு பூங்குழ னங்கையர் கண்கணீர்
ஊற நேர்வந் துருவு வெளிப்பட
மாறு கொண்டனை வந்தனை யாகில்வந்
தேறு தேரெனக் கைக ளிழிச்சுவார்.

நாறு பூங்குழல் நங்கையர், கண்கள் நீர்
ஊற, நேர்வந்து உருவு வெளிப்பட,
'மாறு கொண்டனை; வந்தனையாகில், வந்து
ஏறு தேர்,'எனக் கைகள் இழிச்சுவார்.

பொ:—மணம் வீசுகின்ற பூவையணிந்த கூந்தலையுடைய பெண்கள், தம் கண்களில் நீர் சுரக்க, நேரேவந்து (தோன்றினாற் போன்ற) உருவெளிப்பாடு கண்டு நோக்கி தம்மோடு ஊடிச் சென்ற மகளிர் வந்துவிட்டதாகவே எண்ணி எம்மோடு 'மாறுபட்டு ஊடிச் சென்றாய்; இப்போது வந்தாயாகில் வா. வந்து தேரில் ஏறு' என்று ஆடவர் தம் கைகளைக் கொடுப்பார்கள்.

கு :—கண்கள் நீர் ஊற - பிரிவால் உண்டான கனிவால் கண்ணீர் கசிய கைகள் இழிச்சுவார்—கைகளைத் தாழ்த்திக் கொடுப்பார்கள். (44)

## படைகளின் ஒலியால் உரை கேளாமை

**860.** குரைத்த தேருங் களிறுங் குதிரையும்
நிரைத்த வார்முர சுங்நெளிங் தெங்கணும்
இரைத்த பேரொலி யாலிடை யாவரும்
உரைத்து ணர்ந்தில ரூமரி னேகினர்.

குரைத்த தேரும், களிறும், குதிரையும்,
நிரைத்த வார்முரசும், நெளிந்து, எங்கணும்
இரைத்த பேர்ஒலியால், இடை யாவரும்
உரைத்து உணர்ந்திலர், ஊமரின் ஏகினர்.

பொ :—ஒலித்த தேர்களும், யானைகளும், குதிரைகளும், வரிசையாக இழுத்துக் கட்டப் பெற்ற வாரினையுடைய முரசும், எவ்விடத்தும் மெல்ல நகர்ந்து இரைத்தலால் உண்டாகிய பேரொலியால், இடையில் எவரும் சொல்லித் தெரிந்தார்கள் இல்லை. ஊமையரைப் போலச் சென்றார்கள்.

கு :—குரைத்த என்பதனைத் தேர், களிறு, குதிரை என ஒவ்வொன்றோடும் ஒட்டுக. நெளிந்து-தேர் முதலியன இடமின்றி நெருங்கிச் செல்லுதலின் நேரே செல்ல இயலாதனவாய், மெல்ல மெல்ல வளைந்து சென்றன என்பதாம். ஊமரின் ஏகினர் என்றது ஊமரைப் போலக் கைச்சாடை காட்டிக் கருத்தறி வித்தனரேயன்றி உரைத்து உணர்ந்திலர் என்றவாறு. (45)

## மகளிர் கூட்டம் செல்லுதல்

**861.** நுட்சி லம்பி வலந்தன நுண்டுகில்
கட்சி லம்பு கருங்குழ லார்குழு
உட்சி லம்பு சிலம்பவொ துங்கலால்
புட்சி லம்பிடு பொய்கையும் போன்றதே.

நுண் சிலம்பி வலந்துஅன நுண்துகில்
கள் சிலம்பு கருங்குழலார் குழு,
உள் சிலம்பு சிலம்ப ஒதுங்கலால்,
புள் சிலம்பிடு பொய்கையும் போன்றதே.

பொ:—சிறிய சிலந்தி பின்னியதுபோன்ற நுண்மையான ஆடைகளையணிந்த வண்டுகள் ஒலிக்கின்ற கரிய கூந்தலையுடைய பெண்களின் கூட்டம், தத்தம் காலிலணிந்துள்ள சிலம்புகளின் உள்ளேயுள்ள பருக்கைக்கற்கள் ஒலிக்க ஒதுங்கி நடத்தலால் பறவைகள் ஒலிக்கின்ற பொய்கையைப் போன்றது.

கு:—குழு பொய்கையும் போன்றது எனமுடிக்க. மெல்லிய ஆடைகளை யணிந்த மகளிர்குழு அலைபரந்த நீர்ப்பரப்பையுடைய பொய்கைக்கு ஒப்பாயிற்று. அவர்கள் சிலம்பொலி பொய்கையில் உள்ள அன்னப்புட்களின் ஒலிக்கு ஒப்பாயிற்று என்பதாம். வலத்தல் - பின்னுதல்; 'சிலம்பி வானூல் வலந்வ' (236) என்பது பெரும்பாணாற்றுப்படை. நெடுநல். 59; பதிற்றுப். 39. 13, 14. அகநா. 111: 5. சீவக. 340. தக்க. 54. என்பனவும் நோக்கத் தகும். கள்–வண்டு: ''கள்ளின மார்த்துண்ணும் வண் கொன்றை யான்'' (திருக்கோவையார் - 295) (46)

**862.** தெண்டி ரைப்பர வைத்திரு வன்னவர்
நுண்டி ரைப்புரை நோக்கிய நோக்கினைக்
கண்டி ரைப்பன வாடவர் கண்களி
வண்டி ரைப்பன வானைம தங்களே.

**தெள்திரைப் பரவைத் திரு அன்னவர்**
**நுண்திரைப் புரை நோக்கிய நோக்கினைக்**
**கண்டு, இரைப்பன ஆடவர் கண் ;களி**
**வண்டு இரைப்பன ஆனை மதங்களே.**

பொ:—தெளிந்த அலைகளோடு கூடிய (பாற்) கடலில் தோன்றிய சீதேவியை யொத்த மகளிர், நுண்ணிய சிவிகைத் திரையி லுள்ள தொளையினூற் பார்க்கின்ற பார்வையைக் கண்டு, காளையர் கண்கள் மோகித்தன ; ஆனையின் மதநீரைக்கண்டு வண்டுகள் ஆரவாரித்தன.

கு:—மகளிர் தமது நிறைந்த அழகு பிறஆடவர் கண்ணிற் படாதபடி சிவிகையில் திரையிட்டுச் செல்கின்றனர். திரையில் துளையால் அவர்கள் கண் வெளிப்படுகின்றது. அதனைக்கண்டு ஆடவர்கண்கள் களித்தன என்பதாம். பரவை - கடல். ஈண்டுப் பாற்கடல். இரைத்தல் - மோகித்தல் (தக்கயாகப்பரணி 129. உரை). (47)

### மகளிர் சிலம்பும், குதிரையும் ஒலித்தல்

**863.** உழைக லித்தன வென்ன வுயிர்த்துணை
நுழைக லிக்கருங் கண்ணியர் நூபுர
இழைக லித்தன வின்னிய மாவெழு
மழைக லித்தன வாசிக லித்தவே.

**உழை கலித்தன என்ன உயிர்த்துணை**
**நுழை கலிக்கரும் கண்ணியர் நூபுர**
**இழை கலித்தன ; இன்னியமா எழு**
**மழை கலித்துளன வாசி கலித்தவே.**

பொ :—ஆடவர்களுடைய உயிரளவும் சென்று நுழையும் வலிமை வாய்ந்த கரிய கண்களையுடைய மகளிரது சிலம்பணி உழையென்னும் பண் ஒலித்தாற்போல ஒலித்தன. அப்பண்ணிற்கு ஒத்த இனிய பக்கவாத்தியமாக வானத்து எழுகின்ற மேகம் ஒலித்தாற்போலக் குதிரைகள் ஒலித்தன.

கு:—நூபுர இழை – சிலம்பாகிய ஆபரணம். இழை - இழைத்துச்செய்யப்படுவதாகிய அணி. வாசி – குதிரை. (48)

### மகளிர் கண்ணைப் பார்த்து ஆடவர் கண்கள் களித்தன எனல்

**864.** மண்க ளிப்ப நடப்பவர் வாணுதல்
உண்க ளிக்கம லங்களி னுள்ளுறை
திண்க ளிச்சிறு தும்பியெ னச்சிலர்
கண்க ளித்தன காமன் களிக்கவே.

**மண் களிப்ப நடப்பவர் வாள்நுதல்**
**உண் களிக் கமலங்களின் உள்ளுறை**
**திண் களிச் சிறுதும்பி எனச், சிலர்**
**கண் களித்தன காமன் களிக்கவே.**

பொ :—உலகு மகிழ ஒழுகுகின்ற மகளிரின் ஒளிபொருந்திய நெற்றியோடு கூடிய முகமாகிய களிப்புப்பொருந்திய தாமரைகளின் உள்ளே உறைகின்ற திண்மையான தேனுண்டு களித்த சிறிய வண்டு என்று, மன்மதன் மகிழ்ச்சியடையுமாறு, சில ஆடவர்கண்களும் களித்தன.

கு:—வாள்நுதல் உண் களிக்கமலம் – ஒளிபொருந்திய நெற்றியை உட்கொண்டிருக்கிற தேனோடு கூடிய தாமரை. என்றது முகத்தை. மகளிர் கண்களைச் சிறுவண்டுகளாகச் சில ஆடவர் கண்கள் களித்தன. ரதியின் கண்களையன்றிப் பிறர் கண்ணைக்கண்டு களியாத மன்மதன் தன்னைப்போல இவர்களும் தத்தம் மகளிர் கண்களைக்கண்டு களித்தலின் ஒழுக்கந்தவறாத அவர்கள் உயர்வுகண்டு களிக்கின்றான் என்பார் 'காமன்களிக் கவே' என்றார்.

இச்செய்யுளுக்கு இங்ஙனமன்றி பூமி மகிழும்படி மெல்ல அடி வைத்து நடக்கின்ற மகளிரின் ஒளிபொருந்திய முகத்தைப் பார்த்து, இவை செழிப்பான தாமரையுள் தங்கிய திண்களிச் சிறுதும்பி என்று காமன் களிக்கச்சிலர் கண்களித்தன எனஉரை கூறுவாரும் உளர்.

மண்களிப்ப நடப்பவர் என்றதற்கு, இத்துணையழகி என்மீது அடிவைத்து நடக்கின்றாளே என்று பூமிகளிப்ப என்றும், பூமியி லுள்ளார் மகிழ என்றும் உரை கூறுவாரும் உளர். (49)

### சுண்ணமும் தூசியும் நிறைதல்

**865.** எண்ண மாத்திர மும்மரி தாமிடை
வண்ண மாத்துவர் வாய்க்கனி வாய்ச்சியர்
திண்ண மாத்தொளிர் செவ்விள நீரிழி
சுண்ண மார்த்தன தூளியு மார்த்தவே.

எண்ண மாத்திரமும் அரிதாம் இடை
வண்ண மாத் துவர் வாய்க் கனி வாய்ச்சியர்
திண்ணம் ஆத்துஒளிர் செவ்விளநீர் இழி
சுண்ணம் ஆர்த்தன ; தூளியும் ஆர்த்தவே.

பொ:—நினைக்கவுங்கூட அரிதாகிய இடையினையும், அழகிய பெரிய பவழம்போன்ற வாயினையும், கனிகளின் சுவைபோன்ற இனிமையான வாய்ச் சொற்களையுமுடைய மகளிரின் (வாரால்) உறுதியாகக் கட்டப்பெற்று விளங்குகின்ற செவ்விளநீர் போன்ற தனங்களிலிருந்து (உலர்ந்து) சிந்திய சுண்ணங்கள் எங்கும் நிறைந்தன. புழுதியும் நிறைந்தன.

கு:—மாத்திரம் – அளவு. வண்ணம் – அழகு. ஆத்து-யாத்து என்பதன் மரூஉ. சேனை செல்வழிகளில் தெருப்புழுதியும்,

கொங்கைகளிலிருந்துதிர்ந்த கலவைச் சுண்ணப்பொடியும் கலந்து பரந்தன என்பதாம். ஆர்த்தன – நிறைந்து பரந்தன. வாய்ச்சியர் – வாயிலிருந்துண்டான சொற்களையுடையவர்களாகிய பெண்கள் என்பதாம். (50)

மகளிரும் ஆடவரும் ஆரவாரத்தோடு வழிச்சேறல்

866. சித்தி ரத்தடந் தேர்மைந்தர் மங்கையர்
உய்த்து ரைப்ப நினைப்ப வுலப்பிலர்
இத்தி றத்தின ரெத்தனை யோபலர்
மொய்த்தி ரைத்து வழிக்கொண்டு முன்னினர்.

சித்திரத் தடம்தேர் மைந்தர், மங்கையர்,
உய்த்து உரைப்ப, நினைப்ப, உலப்பிலர்,
இத்திறத்தினர், எத்தனையோ பலர்,
மொய்த்து இரைத்து வழிக்கொண்டு முன்னினர்.

பொ:—இவ்வளவு என்று ஊகித்து உரைக்கவும் நினைக்கவும் முடியாதவண்ணம் எண்ணற்றவர்களாகிய சித்திர வேலைப்பாடமைந்த விசாலமான தேரின்மீது செல்கின்ற ஆடவர்களும் பெண்களும், இத்தகையவர்கள் எத்தனையோ பலரும் நெருங்கி ஆரவாரித்து, வழியைப்பற்றி நடந்தனர்.

கு:—சித்திரம் – அழகு. ஆடவரும் மகளிரும் பலவாறு ஆரவாரித்துக்கொண்டு வழிநடந்தனர் என்பது கருத்து. (51)

தூளி எழுதல்

867. குசையுறு பரியுந் தேரும்
★ வீரருங் குழுமி யெங்கும்
விசையொடு கடுகப் பொங்கி
வீங்கிய தூளி விம்மிப்
பசையுறு துளியின் றுரைப்
பசுந்தொளை யடைத்த மேகம்
திசைதொறு நின்ற யானை
மதத்தொளை செம்மிற் றன்றே.

குசையுறு பரியும், தேரும், வீரரும், குழுமி, எங்கும்,
விசையொடு கடுகப் பொங்கி, வீங்கிய தூளி விம்மிப்
பசையுறு துளியின் தாரைப் பசுந்தொளை அடைத்த மேகம்;
திசைதொறும் நின்ற யானை மதத்தொளை செம்மிற்று அன்றே.

பொ:—கடிவாளம் பொருந்திய குதிரையும், தேரும், வீரர்களும் கூடி எவ்விடத்தும் வேகமாகச் செல்ல மேலெழுந்து மிக்க புழுதி நிறைந்து, மேகத்தின் ஈரம் பொருந்திய நீர்த்துளியின் தாரைகள் வெளிவருவதற்குரிய பசிய தொளைகளை யடைத்தன. மேலும் எட்டுத்திசைகளிலும் நின்ற திசை யானைகளின் மதநீர் ஒழுகுகின்ற தொளைகளிலும் சென்று தூர்த்தது.

கு:—அன்று, ஏ - அசை. குசை - கடிவாளம். குதிரையும் தேரும் காலாளும் செல்வதால் உண்டான தூசி வானமண்டலத் திற்சென்று மேகத்தின் மழையொழுகும் தொளைகளையும் திசை யானைகளின் மதமொழுகும்தொளைகளையும் தூர்த்தன என்பதாம்.
(52)

மதநீர் வழுக்கில் மகளிரை யழைத்துச் செல்லல்

868. கேடகத் தடக்கை யாலே
கிளரொளி வாளும் பற்றிச்
சூடகத் தளிர்க்கை மற்றைச்
சுடர்மணித் தடக்கை பற்றி
ஆடகத் தோடை யானை
யழிமதத் திழுக்க லாற்றிற்
பாடகக் காலி னாரைப்
பயப்பயக் கொண்டு போனார்.

கேடகத் தடக் கையாலே கிளரொளி வாளும் பற்றிச்,
சூடகத் தளிர்க்கை மற்றைச் சுடர்மணித் தடக்கை பற்றி,
ஆடகத்து ஓடை யானை அழி மதத்து இழுக்கல் ஆற்றில்
பாடகக் காலினாரைப் பயப்பயக் கொண்டு போனார்.

பொ:—பொன்னால் செய்யப்பட்ட முகபடாத்தையணிந்த யானை யின் மிக்கமதத்தால் விளைந்த வழுக்குகின்ற வழியில், பாடகத்தை யணிந்த காலையுடைய தம்முரிமை மகளிரை (வீரர்கள்) கேட கத்தை ஏந்திய பெரிய கையாலே ஒளி விளங்குகின்ற வாளையும்

தாங்கி, மற்ற ஒளிவிடுகின்ற அழகிய (வாளிருந்த) அந்தக்கை யாலே வளையல்களை அணிந்த தளிர்போன்ற கையைப் பிடித்துக் கொண்டு மெல்ல அழைத்துச் சென்றனர்.

கு:—யானை மதநீர்ப்பெருக்கால் வழுக்கல் உள்ள வழியில் வீரர்கள் வலக்கையிலுள்ள வாளை இடக்கையில் கேடகத்தோடு சேர்த்துப் பிடித்துக்கொண்டு, வலக்கையாலே தம் மனைவிமாரின் வளையலணிந்த கையைப்பற்றி மெல்ல அழைத்துச் சென்றனர் என்பதாம். பையப்பைய என்பது பயப்பய என விகாரமாயிற்று. கேடகம் – வாள்வீச்சைத் தடுக்க ஏந்தும் பலகை. தோலுமாம். வீரர் கேடகத்தை இடக்கையிலும், வாளை வடக்கையிலும் ஏந்து தல் மரபு. அழிமதம் - மிக்க மதம். பாடகம் – காலில் அணியப் பெறும் அணிவகையுள் ஒன்று. (53)

**வழிநடையில் மகளிர் நீர்ப்பூக்களைப் பறித்துத் தரவேண்டுதல்**

**869.** செய்களின் மடுவி னன்னீர்ச்
சிறைகளி னிறையப் பூத்த
நெய்தலுங் குமுதப் பூவு
நெகிழ்ந்தசெங் கமலப் போதும்
கைகளு முகமும் வாயுங்
கண்களுங் காட்டக் கண்டு
கொய்தவை தருதி ரென்று
கொழுநரைத் தொழுகின் றுரும்.

செய்களில், மடுவில், நல்நீர்ச் சிறைகளில், நிறையப் பூத்த
நெய்தலும் குமுதப் பூவும் நெகிழ்ந்த செங்கமலப் போதும்,
கைகளும் முகமும் வாயும் கண்களும் காட்டக் கண்டு,
'கொய்துஅவை தருதிர்' என்று, கொழுநரைத் தொழுகின்றுரும்.

பொ:—வயல்களிலும், மடுவிலும், நல்ல நீரைத்தேக்கி வைத் திருக்கின்ற குளங்களிலும் நிறையப் பூத்திருக்கின்ற நெய்தற் பூவும், செவ்வல்லிப்பூவும், மலர்ந்த செந்தாமரைப் பூவும், தமது கைகளையும், முகத்தையும் வாயையும் கண்களையும் காட்ட, அவற்றைப் பார்த்து அவற்றைக் கொய்து தாருங்கள் என்று தத்தம் கணவரை வணங்குகின்றவர்களும் (சென்றுர்கள்)

கு:—கமலப்போது கைகளும் முகமும் காட்ட, குமுதப்பூ வாய் காட்ட, நெய்தற்பூ கண்கள் காட்ட என எதிர் நிரல் நிரையாக இணைத்துப் பொருள் காண்க. நெய்தல் முதலியன தம் உறுப்புக் களை ஒத்தலின் அவற்றைக்கொய்து தாருங்கள் என்று அவற்றின் வீறுகெடுக்கும் நோக்கத்தில் வேண்டுவாராயிற்று என்க.

கண் கை கால் முகம் வாய் ஒக்குமாதலின் இவைகளைக் கொய்யார் எனத்தேறிய மகளிர் அவற்றோடு தமக்குள்ள பகைமை யால் கொய்துதருக எனத்தொழுது வேண்டிக்கொண்டனர் என்பதுமாம். (54)

மகளிர் யானையைக்கண்டு மருண்டார் எனல்

870. பந்தியம் புரவி நின்றும்
பாரிடை யிழிந்தோர் வாசக்
கொந்தள பாரஞ் சோரக்
குலமணிக் கலன்கள் சிந்தச்
சந்தநுண் டுகிலும் வீழத்
தளிர்க்கையா லணைத்துச் சார
வந்தது வேழ மென்ன
மயிலென விரியல் போவார்.

பந்தியம் புரவி நின்றும் பாரிடை இழிந்தோர், வாசக் கொந்தள பாரம் சோரக், குலமணிக் கலன்கள் சிந்தச், சந்த நுண்துகிலும் வீழத் தளிர்க்கையால் அணைத்துச், 'சார வந்தது வேழம்!' என்ன, மயில்என இரியல் போவார்.

பொ:—வரிசையாகச் செல்கின்ற அழகிய குதிரைகளிலிருந்தும், பூமியில் இறங்கிய மகளிர், யானையருகில் வந்தது என்று வாசனை வீசுகின்ற கூந்தற்சுமை அவிழ, கூட்டமாகிய இரத்தினுபரணங் கள் சிதற அழகிய நுண்ணிய ஆடையும் கீழே வீழ (ஆடையை மட்டும்) தளிர்போன்ற கையால் பற்றிக் கொண்டு, மயிலைப்போல நிலைதடுமாறி ஓடினார்கள்.

கு:—பந்தியம் புரவி - குதிரைக் கூடத்திற் கட்டுதற்குரிய குதிரை என்பாரும் உளர். பந்தி - குதிரைலாயம். குலமணி - சிறந்தமணி எனலுமாம். வந்தது என்ன வந்துவிட்டது என்று பிறர்சொல்ல எனலுமாம். (55)

### இரவும் பகலும் ஒருசேர உளவாயின எனல்

**871.** குடையொடு களிறுந் தொங்கற்
குழாங்களுங் கொடியின் காடும்
இடையிடை மயங்கி யெங்கும்
வெளிகரந் திருளைச் செய்யப்
படைகளு முடியும் பூணும்
படர்வெயில் பரப்பிச் செல்ல
இடையொரு கணத்தி னுள்ளே
யிரவுண்டு பகலு முண்டே.

குடையொடு களிறும், தொங்கல் குழாங்களும், கொடியின் காடும், இடைஇடை மயங்கி எங்கும் வெளி கரந்து இருளைச் செய்யப், படைகளும் முடியும் பூணும் படர்வெயில் பரப்பிச் செல்ல, இடைஒரு கணத்தினுள்ளே இரவு உண்டு பகலும் உண்டே!

பொ:—குடைகளும் யானைகளும், மாலைக்கூட்டங்களும், கொடியின் மிகுதியும் இடையிடையே தம்முள் கலந்து எங்கும் ஆகாயம் மறைந்துபோதலால் இருளையுண்டாக்க, ஆயுதங்களும், இரத்தினங்கள் இழைக்கப்பெற்ற கிரீடமும் ஏனைய அணிகளும் பரவிய ஒளியைப் பரப்பிக்கொண்டு செல்ல அந்தச்சேனை செல்லுமிடத்தில் ஒரே கணத்தில் இரவும் உண்டு. பகலும் உண்டு.

கு:—குடை வெயிலை மறைத்தலாலும், யானை மேனியின் கருமையாலும், மாலை, கொடி முதலியன விண்ணை மறைத்து நிற்றலானும் இருளைச்செய்வனவாயின. படை - வேல் வாள் முதலிய ஆயுதங்கள். ஒருகணத்திலேயே இரவும்பகலும் ஒருசேர உள்ளன என்பதாம். (56)

### மகளிரைக் கண்டு ஆடவர் அகலுதல்

**872.** முருக்கிதழ் முத்த மூரன்
முறுவலார் முகங்க ளென்னுந்
திருக்கிளர் கமலப் போதிற்
றீட்டின கிடந்த கூர்வாள்
நெருக்கிடை யறுக்கு நீங்க
ணீங்குமின் னீங்கு மென்றென்
றருக்கனி லொளிரு மேனி
யாடவ ரகலப் போவார்.

'முருக்கு இதழ் முத்தமூரல்
முறுவலார் முகங்கள் என்னும்
திருக்கிளர் கமலப்போதில்
தீட்டின கிடந்த கூர்வாள்
நெருக்கு இடைஅறுக்கும், நீங்கள்
நீங்குமின்! நீங்கும்!' என்று என்று,
அருக்கனில் ஒளிரும் மேனி
ஆடவர் அகலப் போவார்.

பொ:—"கல்யாண முருக்கம்பூவின் இதழை ஒத்த உதட்டையும், வெண்முத்துப்போன்ற பற்களையும், புன்சிரிப்பையும் உடைய மகளிரின் முகங்கள் என்கின்ற அழகுமிக்க தாமரைப் பூவில், கூர்மையான வாள்கள் தீட்டப்பெற்றனவாய்க் கிடந்தன. நெருக்கத்தில் நம்மை அறுத்துவிடும். நீங்கள் நீங்குங்கள் நீங்குங்கள்!" என்று பன்முறை சொல்லிக்கொண்டு சூரியனைப்போல விளங்குகின்ற மேனியையுடைய ஆடவர்கள் வழிவிட்டு விலகுவார்கள்.

கு:—கூர்வாள் என்றது கூரிய வாள்போலும் கண்களை. தீட்டின கிடந்த – பலகால் பார்த்துப் பார்த்துத் தீட்டப்பெற்று கருக்கு ஏறிக் கிடந்தன என்பதாம். நெருங்கிச் செல்லும் ஆடவர்கள் மகளிர் கூட்டத்தைக்கண்டு நாம் நெருக்கிச் செல்லின், தீட்டிக் கிடக்கின்ற வாள்கள் அறுத்துவிடும் விலகுங்கள் விலகுங்கள் என்று சொல்லிக் கொண்டே விலகினர் என்பது கருத்து. இங்ஙனமன்றி, திரளாக இருக்கும் ஆடவர்மீது மகளிர் பார்வை விழவும், அவர்கள் விலகியதை 'எமது கண்கள் நுமது நெருக்கத்தை யூடறுத்துச் செல்லும்' என்று குறிப்பிக்க விலகியதாகக் கற்பித்துக் கூறினர் என்பாரும் உளர். (57)

### நங்கையர் நடக்க மாட்டாது நிற்றல்

873. நீந்தரு நெறியி னுற்ற
நெருக்கினுற் சுருக்குண் டற்றுக்
காந்தின மணியு முத்துஞ்
சிந்தின கலாபஞ் சூழ்ந்த
பாந்தளி னல்கு லார்தம்
பரிபுரம் புலம்பப் பைம்பொன்
பூந்தளி ருறைப்ப மாழ்கிப்
போக்கரி தென்ன நிற்பார்.

நீந்தஅரு நெறியின் உற்ற
நெருக்கினுல் சுருக்குண்டு, அற்றுக்,
காந்தின மணியும் முத்தும்
சிந்தின, கலாபம் சூழ்ந்த
பாந்தளின் அல்குலார்தம்
பரிபுரம் புலம்பப், பைம்பொன்
பூம் தளிர் உறைப்ப, மாழ்கிப்,
'போக்கு அரிது' என்ன நிற்பார்.

பொ:—கடத்தற்கு அரிய வழியில், அடைந்த மக்கள் நெருக்கத்தால், சுருக்கேறி அறுந்து சிந்திக்கிடப்பனவாகிய ஒளிவிடுகின்ற இரத்தினங்களும் முத்துக்களும் மேகலையையணிந்த பாம்பின் படம்போன்ற அல்குலையுடைய பெண்களின் பூவையும் தளிரையும் போன்ற பாதங்களில் உறுத்த பசியபொன்னுல் இயன்ற சிலம்பு வாய்விட்டுப் புலம்ப, அவர்கள் இனிமேற் போகமுடியாது என்று நிற்பார்கள்.

கு:—பெண்கள், அறுந்து வீழ்ந்த மணி முதலாயின காலில் உறுத்த, அதனைக் கண்டு சிலம்பு வருந்திச் சிலம்ப இனிமேல் வழி நடக்க இயலாது என நிற்பார்கள் என்பது கருத்து. நீந்த அருநெறி என்ருர், மக்கள் வெள்ளம் செறிந்து நிற்றலின். சுருக்குண்டு - சுருக்கு வீழ்ந்ததால். கலாபம் - பதினறு கோவையுள்ள மாதரிடையணி. பாந்தள் - பாம்பு. ஈண்டு அதன் படத்திற்கு ஆயிற்று. பைம்பொன் பரிபுரம் என இயைக்க. (58)

## வண்டிக் காளைகள் வெருண்டோடுதல்

874. கொற்றநல் லியங்க ளெங்குங்
கொண்டலிற் றுவைப்பப் பண்டிப்
பெற்றவே றன்னப் புள்ளிற்
பேதையர் வெருவி நீங்க
முற்றுறு பரங்க ளெல்லா
முறைமுறை பாசத் தோடும்
பற்றற வீசி யேகி
யோகியிற் பரிவு தீர்ந்த.

கொற்றநல் இயங்கள் எங்கும் கொண்டலின் துவைப்பப், பண்டிப் பெற்ற ஏறு, அன்னப் புள்ளில் பேதையர் வெருவி நீங்க,

முற்றுறு பரங்கள் எல்லாம் முறைமுறை பாசத்தோடும்
பற்றுஅற வீசி, ஏகி, யோகியில் பரிவு தீர்ந்த.

பொ :—வெற்றி பொருந்திய நல்ல வாச்சியங்கள் மேகத்தைப் போல எவ்விடத்தும் ஒலிக்க, வண்டியில் பூட்டப்பெற்ற காளை கள், அன்னப்பறவையைப்போலப் பேதைப் பருவத்துப் பெண் கள் அஞ்சி அகல, தம்மீது முழுதும் பொருந்தியுள்ள சுமைகள் எல்லாவற்றையும் வரிசை வரிசையாக அப்பாரத்தைக் கட்டிய கயிற்றோடும் தொடர்பற்றுப்போக வீசி, ஓடிச்சென்று, யோகியர் களைப் போலத் துன்பமகன்றன.

கு :—வாத்திய ஒலியால் வண்டியிற் பூட்டப்பெற்ற காளைகள் வெகுள, மகளிர் அன்னப்பறவைகளைப்போல் அஞ்சி அகல, கட்டறுத்துக்கொண்டு சுமைகளைத்தள்ளி ஓடின. அவை பற்றறத் துறக்கும் யோகியரைப் போன்றன என்பதாம். நல்லியங்கள் - நல்ல வாத்தியங்கள். கொண்டல் - மேகம். துவைப்ப - ஒலிக்க. பண்டிப் பெற்ற ஏறு - வண்டியிற் பூட்டப் பெற்ற காளை. பரம் – பாரம், சுமை. பரிவு – துன்பம். (59)

### நீர்நிலையில் யானைகள் துளைதல்

875. காற்செறி வேகப் பாகர்
கார்முக வுண்டை பாரா
வார்ச்சிறைக் கொங்கை யன்ன
கும்பமு மருப்புங் காணப்
பாற்செறி கடலிற் றோன்றும்
பனைக்கைமால் யானை என்ன
நீர்ச்சிறை பற்றி யேரு
நின்றகுன் றனைய வேழம்.

கால்செறி வேகப் பாகர் கார்முக உண்டை பாரா,
வார்ச்சிறைக் கொங்கை அன்ன கும்பமும் மருப்பும் காணப்,
பால்செறி கடலில் தோன்றும் பனைக்கை மால்யானை என்ன,
நீர்ச்சிறை பற்றி ஏரு, நின்ற குன்று அனைய வேழம்.

பொ :—மலையையொத்த யானை, நீர்நிலையில் இறங்கி, பாகர்களின், காற்றை ஒத்த வேகத்தையுடைய வில்லால் எறியப்பட்ட மண் ணுருண்டையையும் பொருட்படுத்தாமல், கச்சாகிய சிறைக்குள் ளிருக்கும் கொங்கைகளைப் போன்ற கும்பமும், கொம்பும் வெளி

யில் தோற்றும்படி, பாற்கடலிற் றோன்றிய பனைபோலும் கையினையுடைய பெரிய ஐராவதம் என்னும் யானையைப்போல கரையேறாது நின்றன.

கு :—வேழம், பற்றி, பாரா, மால்யானையென்ன ஏறாநின்ற எனக் கூட்டுக. பாகர்கால் செறி வேகக் கார்முக உண்டைஎன இயைக்க. நீர்ச்சிறை - குளம். யானைகள் வழியில் நீர்நிலையைக் கண்டதும் அதிலிறங்கிக்கொண்டு, பாகனுடைய வில்லுண்டையடியையும் பொருட்படுத்தாதனவாய், பாற்கடலில் ஐராவதம் போல நின்றன என்பது கருத்து. (60)

## பாணர் விறலியருடன் செல்லுதல்

876. அறலியற் கூந்தற் கண்வா
ளமுதுகு குமுதச் செவ்வாய்
விறலிய ரோடு நல்யாழ்ச்
செயிரியர் புரவி மேலார்
நறைசெவி பெய்வ தென்ன
நைவள வமுதப் பாடல்
முறைமுறை நணுகப் போனார்
கின்னர மிதுன மொப்பார்.

அறல்இயல் கூந்தல், கண்வாள், அமுதுஉகு குமுதச் செவ்வாய்
விறலியரோடு, நல்யாழ்ச் செயிரியர், புரவி மேலார்,
நறைசெவி பெய்வது என்ன நைவள அமுதப் பாடல்
முறைமுறை நணுகப் போனார், கின்னர மிதுனம் ஒப்பார்.

பொ :—கருமணலின் தன்மையைக்கொண்ட கூந்தலையும், வாள் போன்ற கண்ணையும் அமுதம் சிந்துகின்ற செவ்வல்லிமலர் போலும் சிவந்த வாயையும், உடைய விறலியரோடு நல்ல யாழை வாசித்தலில் வல்ல பாணர்கள் குதிரைகள்மீது ஏறிக்கொண்டவர்களாய், கின்னர மிதுனத்தை ஒப்பவர்களாகச் செவியில் தேனை வார்ப்பதுபோல, அமுதம்போன்ற நட்டபாடைப் பண்ணுகிய நைவளம் சேர்ந்த பாடல் அடிக்கடி செவியில் நணுகச் சென்றனர்.

கு :—அறல் - கருமணல். மேடும் பள்ளமுமாக வார்ந்து கிடக்கும் கருமணல் சுருண்ட கூந்தற்கு உவமை. அறலியற் கூந்தல், குமுதச் செவ்வாய் என்பவற்றிற்கியைய கண்வாள் என்பது வாட்கண் என மாற்றியுரைக்கப்பெற்றது.

பாணர்கள் விறலியரோடு குதிரைமீதேறிக்கொண்டு கைவளப் பண்ணை அடிக்கடி பாடிக்கொண்டு சென்றனர் என்பது கருத்து. கின்னர மிதுனம் - இசைவல்ல, குதிரை முகமும் மனித உடலும் உடைய தேவசாதி. எப்போதும் ஆணும் பெண்ணும் இணை பிரியாமையால் மிதுனமாகவே வழங்கப்பெறுவது. (61)

### களிற்றில் மொய்த்தவண்டுகள் பிடியொடும் தொடர்தல்

**877.** அருவிபெய் வரையிற் பொங்கி
யங்குச நிமிர வெங்கும்
இரியலிற் சனங்கள் சிந்து
மிளங்களிச் செங்கண் யானை
விரிசிறைத் தும்பி வேறோர்
வீழ்மதந் தோய்ந்து மாதர்
சுரிகுழல் படிய வொற்றிப்
பிடியொடுந் தொடர்ந்து செல்வ.

அருவிபெய் வரையில் பொங்கி, அங்குசம் நிமிர, எங்கும் இரியலின், சனங்கள் சிந்தும், இளங்களிச் செங்கண் யானை விரிசிறைத் தும்பி, வேறோர் வீழ்மதந் தோய்ந்து, மாதர் சுரிகுழல் படிய ஒற்றிப் பிடியொடும் தொடர்ந்து செல்வ.

பொ :—மலையில் பெய்கின்ற அருவிபோல, சினத்தாற் பொங்கி எழுந்து, அங்குசம் என்னும் ஆயுதம் தன் வளைவு நிமிர்ந்துபோக (பாகர் கட்டுக்கடங்காமல்) எங்கும் ஓடுதலால் மக்களைச் சிதறச் செய்யும் இளமையோடு மதக்களிப்புடைமையாற் சிவந்த கண்களையுடைய யானையின் மேலுள்ள விரிந்த சிறகுகளையுடைய வண்டுகள், பெண்களின் சுருண்ட கூந்தலிலுள்ள வேறொரு விரும்பத்தக்க மதமாகிய கத்தூரியில் மூழ்கித் தோய (விரும்பி நறுமணங்களை) ஆராய்ந்து, அம்மகளிர் ஏறியிருக்கின்ற பெண் யானைகளோடும் தொடர்ந்து செல்வனவாயின.

கு :—இளங் களியானையின் மீதுள்ள வண்டு வேறோர் மதத்தை விரும்பி மகளிர் கூந்தலை யடையப் பெண் யானையைப் பின் தொடர்ந்தன என்பதாம். இங்ஙனம் அன்றி, பாகன் கையி லிருந்த மாவெட்டியை யோங்க, அதனாற் கிளர்ந்தெழுந்து நிலை கெட்டு ஓடுவதனால், எல்லாவிடத்தும் ஜனங்களைச் சிதறவடிக் கின்ற இளமையையும் மதக்களிப்பையும் சிறு கண்ணையும் உடைய யானையினின்று விரிசிறைத்தும்பி, வேறொரு யானையின்

பெருகுகின்ற மதநீரிற் படிந்து மாதரின் நெறிந்த கூந்தலிற் படியுமாறு வேறூர் பெண் யானையைத் தொடர்ந்து செல்வன என்றும் உரை கூறுவார் சிலர்.

வேறூர் வீழ்மதம் என்பதால் யானை மதமல்லாத வேறொன்றான மான்மதம் என்பது பெற்றும். மான்மதம் – கத்தூரி. வீழ்தல் - விரும்புதல்.

வரையிற்பெய் அருவியின் பொங்கி எனவும், மாதர் சுரிகுழல் வேறூர் வீழ்மதம் தோய்ந்து படிய ஒற்றி எனவும், கூட்டுக. (62)

### தசரதனுடைய நேய மங்கையர் செல்லுதல்

**878.** நிறைமதித் தோற்றங் கண்ட
நீனெடுங் கடலிற் றாகி
அறைபறை துவைப்பத் தேரும்
யானையு மாடன் மாவும்
கறைகெழு வேற்க ணாரு
மைந்தருங் கவினி யொல்லை
நெறியிடைப் படர வேந்தன்
நேயமங் கையர்தாஞ் செல்வார்.

நிறைமதித் தோற்றம் கண்ட நீல்நெடும் கடலிற்று ஆகி,
அறைபறை துவைப்பத், தேரும், யானையும், ஆடல் மாவும்,
கறைகெழு வேல்கணாரும், மைந்தரும், கவினி ஒல்லை
நெறியிடைப் படர, வேந்தன் நேய மங்கையர்தாம் செல்வார்.

பொ:—நிறைமதியின் எழுச்சியைக்கண்ட நீலநிறமான கடலின் தன்மையுடையதாகி, அடிக்கப்பெறுகின்ற வாத்தியங்கள் ஒலிக்க, தேரும், யானையும், ஆடல் வன்மைவாய்ந்த குதிரைகளும், குருதிக் கறை படிந்த வேலைப்போலச் சிவந்த வரிசேர்ந்த கண்களையுடைய மகளிரும், காளையரும் அழகுபொருந்தக்கூடி, விரைவாக வழியிற் செல்ல, அரசனுடைய அன்பிற்குரிய பெண்கள் செல்வார்கள்.

கு:—நிறைமதி தோன்றக் கடல்பொங்கி யொலிக்கும் ஆதலின் ஆரவாரிக்கின்ற சேனைகட்கும் ஒப்புக் கூறப்பட்டது. கவினி - அழகுடையதாகி, நிறைமதியின் தோற்றங்கண்ட கடல்போல வாத்தியங்கள் முழங்க நால்வகைப் படையும், மகளிரும் மைந்தரும் முன்னே செல்லத் தசரதச் சக்கரவர்த்தியின் உரிமை மகளிர் சென்றனர் என்பது கருத்து.

(63)

**கைகேசி செல்லுதல்**

879. பொய்கையங் கமலக் கானிற்
பொலிவதோ ரன்ன மென்னக்
கைகயர் வேந்தன் பாவை
கணிகைய ரீட்டம் பொங்கி
ஐயிரு நூறு சூழ்ந்த
வாய்மணிச் சிவிகை தன்மேல்
தெய்வமங் கையரு நாணத்
தேனிசை முரலப் போனாள்.

**பொய்கைஅம் கமலக் கானில், பொலிவதுஓர் அன்னம் என்னக், கைகயர் வேந்தன் பாவை, கணிகையர் ஈட்டம் பொங்கி ஐயிரு நூறு சூழ்ந்த ஆய்மணிச் சிவிகை தன்மேல், தெய்வ மங்கையரும் நாணத், தேன்இசை முரலப் போனாள்.**

பொ :—குளத்திலே மலர்ந்திருக்கிற அழகிய தாமரைக்காட்டில் விளங்குகின்ற ஒப்பற்ற அன்னப்பறவையைப்போல, கேகய மன்னன் பெண்ணாகிய கைகேயி, ஆயிரம் பணிப்பெண்கள் களிப்பாற் பொங்கிப் புடைசூழ ஆராய்ந்தெடுக்கப்பெற்ற இரத்தினங்களால் செய்யப்பெற்ற பல்லக்கின்மீது, தேவப் பெண்களும் வெட்கமடைய வண்டுகள் இசையோடு பொருந்தி ஒலிக்கச் சென்றாள்.

கு :—கணிகையர் - பணிப் பெண்கள். (64)

**கஞ்சுக மாக்கள் கைகேயியைக் காத்துச் செல்லுதல்**

880. காரண மின்றி யேயுங்
கனலெழ விழிக்குங் கண்ணார்
வீரவேத் திரத்தார் தாழ்ந்து
விரிந்தகஞ் சுகத்து மெய்யார்
தாரணி புரவி மேலார்
தலத்துளார் கதித்த சொல்லார்
ஆரணங் கனைய மாத
ரடிமுறை காத்துப் போனார்.

காரணம் இன்றி யேயும் கனல்எழ விழிக்கும் கண்ணர்,
வீர வேத்திரத்தார், தாழ்ந்து விரிந்த கஞ்சுகத்து மெய்யார்,
தாரணி புரவி மேலார், தலத்துளார், கதித்த சொல்லார்,
ஆரணங்கு அனைய மாதர் அடிமுறை காத்துப் போனர்.

பொ:—காரணம் ஒன்றுமில்லாமல் நெருப்புப்பொறி சிதற விழிக்கும் கண்களையுடையவர்களும், வீரம்பொருந்திய பிரப்பங் கோலை ஏந்தியவர்களும், அடிவரையில் தாழ்ந்து பரவிய சட்டையைத் தரித்த உடலையுடையவர்களும், கிங்கிணி மாலையை அணிந்த குதிரைகளின் மேலிருப்பவர்களும், தரையில் நடப்பவர்களும், அதட்டிய சொற்களையுடையவர்களும், தெய்வ மங்கையரை யொத்த மகளிர்கள் கைகேயியின் அடியின் கீழிருந்து முறையாகப் பாதுகாத்துச் சென்றனர். (65)

### சுமித்திரை செல்லுதல்

881. விரிமணித் தார்கள் பூண்ட
வேசரி வெரிநிற் றோன்றும்
அரிமலர்த் தடங்கண் ணல்லா
ராயிரத் திரட்டி சூழக்
குருமணிச் சிவிகை தன்மேற்
கொண்டலின் மின்னி தென்ன
இருவரைப் பயந்த நங்கை
யாழிசை முரலப் போனாள்.

விரிமணித் தார்கள் பூண்ட வேசரி வெரிநில் தோன்றும்
அரிமலர்த் தடங்கண் நல்லார் ஆயிரத்து இரட்டி சூழக்,
குருமணிச் சிவிகை தன்மேல், கொண்டலின் மின் இதுஎன்ன,
இருவரைப் பயந்த நங்கை யாழ்இசை முரலப் போனாள்.

பொ:—வாய் விண்ட கிண்கிணி மாலைகளைப் பூண்ட கோவேறு கழுதைகளின் முதுகிற் றோன்றுகின்ற, செவ்வரி பரந்த தாமரைமலர் போலும் விசாலமாகிய கண்களையுடைய பெண்கள் இரண்டாயிரவர் புடைசூழ, நிறம் பொருந்திய இரத்தினங்கள் இழைக்கப்பெற்ற பல்லக்கின் மேல், மேகத்திலுண்டான மின்னல் இதுவாம் என்று சொல்லும்படி, லக்ஷ்மணன்,

சத்துருக்கனன் ஆகிய இருவரையும் பெற்ற சுமத்ராதேவி, யாழோசை ஒலிக்கச் சென்றாள்.

கு :—வேசரி - கோவேறு கழுதை. இருவர் - இலக்குவன், சத்துருக்கனன் ஆகிய இருவர். (66)

## சுமித்திரையைச் சூழ்ந்து மகளிர் செல்லுதல்

**882.** செங்கையின் மஞ்ஞை யன்னஞ்
சிறுகிளி பூவை பாவை
சங்குறை கழித்த வன்ன
சாமரை முதல தாங்கி
இங்கல தெண்ணுங் காலிவ்
வெழுதிரை வளாகந் தன்னில்
மங்கைய ரில்லை யென்ன
மடந்தையர் மருங்கு போனார்.

செங்கையின் மஞ்ஞை அன்னம் சிறுகிளி பூவை பாவை சங்குஉறை கழித்த அன்ன சாமரை முதல தாங்கி, இங்குஅலது, எண்ணுங்கால், இவ் எழுதிரை வளாகம் தன்னில் மங்கையர் இல்லை என்ன, மடந்தையர் மருங்கு போனார்.

பொ :—ஆயுமிடத்து இந்த ஏழுகடல்களாற் சூழப் பெற்ற உலகத்தில் இவ்வயோத்திக் கண் அல்லாது (வேறுஎங்கும்) பெண்களே இல்லை என்று சொல்லும்படி கணக்கற்ற பெண்கள் தமது சிவந்த கையில், மயில், அன்னம், சிறியகிளிகள், நாகண வாய்ப்புள், பாவைகள், உறையிலிருந்து இப்போதுதான் எடுத்த சங்கினைப் போலும் வெண்மையான சாமரை முதலிய பொருள் களைத் தாங்கிக்கொண்டு, சுமித்திரையின் பக்கலிற் சென்றார்கள்.

கு :—இச் செய்யுளிற் கூறிய மடந்தையர் பாங்கிமார்கள். மயில் முதலியன விளையாட்டுப் பொருள்கள்.

எண்ணுங்கால் இவ் எழுகடல் வளாகந் தன்னில் இங்கு அலது மங்கையர் இல்லை என்ன, மடந்தையர் செங்கையின் மஞ்ஞை முதலியன தாங்கி மருங்கு போனார் எனமுடிக்க. சில பிரதிகளில் இச் செய்யுள் ''வெள்ளெயிற்று'' எனத் தொடங்கும் செய்யுளின் பின் காணப்படுகின்றது. (67)

## கௌசல்யை செல்லுதல்

883. வெள்ளெயிற் றிலவச் செவ்வாய்
முகத்தைவெண் மதிய மென்று
கொள்ளையிற் சுற்று மீன்கள்
குழுமிய வனைய வூர்தி
தெள்ளரி பாண்டி பாணிச்
செயிரிய ரிசைத்தேன் சிந்த
வள்ளலைப் பயந்த நங்கை
வானவர் வணங்கப் போனாள்.

வெள்எயிற்று இலவச் செவ்வாய்
முகத்தை வெண்மதியம் என்று
கொள்ளையில் சுற்றும் மீன்கள்
குழுமிய அனைய ஊர்தி,
தெள்அரி பாண்டி பாணிச்
செயிரியர் இசைத்தேன் சிந்த,
வள்ளலைப் பயந்த நங்கை,
வானவர் வணங்கப், போனாள்.

பொ :—வெண்மையான பற்களையும், செவ்விலவின் இதழ் போலும் சிவந்த வாயையும் உடைய கௌசல்யாதேவியாரின் முகத்தை வெண்மையான நிறைமதி என்று எண்ணி, மிகுதியாக வானமண்டலத்திற் சுற்றிக் கொண்டிருக்கும் நட்சத்திரங்கள் ஒருங்கு கூடினாற் போல ஒளிவிடுகின்ற, சிவிகையாகிய வாகனத்தில், தெளிந்த வண்டின் ஓசைபோலும், தக்கேசிப் பண்ணால் ஆகிய பாட்டில் வல்ல பாணர்கள் இசையாகிய தேனைச் சிந்த இராமபிரானைப் பெற்ற கௌசல்யா தேவியானவள் தேவர்கள் வணங்கச் சென்றாள்.

கு :—கௌசல்யா தேவியின் திருமுகத்தை மதியம் என்று எண்ணி வானில் எங்கும் உள்ள உடுக்கள் ஒருங்கு கூடினாற் போலப் பன்னிற மணிகள் அழுத்திச் செய்யப் பெற்ற சிவிகையின் மேல் கௌசல்யாதேவி சென்றார் என்பதாம். திருமாலின் அவதாரமாகிய சீராமனைப் பெற்ற பெருமையால் வானவர் வணங்கச் சென்றார் என்றார். மீண்டும் அயோத்தியா காண்டத்தில் "சுற்றத்தார் தேவரொடுந் தொழ நின்ற கோசலையைத் தொழுது நோக்கி" என்று கூறுவதும் ஈண்டு ஒப்புநோக்கற்கு உரியது.
(68)

### கூனுங் குறளும் சிந்தரும் செல்லுதல்

**884.** கூனொடு குறளுஞ் சிந்துஞ்
சிலதியர் குழாமுங் கொண்ட
பானிறப் புரவி யன்னப்
புள்ளெனப் பாரிற் செல்லத்
தேனொடு மிஞிறும் வண்டும்
தும்பியும் தொடர்ந்து செல்லப்
பூநிறை கூந்தன் மாதர்
புடைபிடி நடையிற் போனார்.

**கூனொடு குறளும், சிந்தும், சிலதியர் குழாமும் கொண்ட பால்நிறப் புரவி அன்னப் புள்ளனப் பாரில் செல்லத், தேனொடு மிஞிறும் வண்டும் தும்பியும் தொடர்ந்து செல்லப், பூநிறை கூந்தல் மாதர், புடைபிடி நடையில், போனார்.**

பொ :—கூனர்களும், குறளர்களும் சிந்தர்களும், தோழிப் பெண்களின் கூட்டமும், ஆகிய இவற்றை மேற்கொண்ட பால்போலும் நிறத்தையுடைய குதிரை அன்னப்பறவையைப் போலப் பூமியிற் செல்ல, தேன், மிஞிறு, வண்டு தும்பி என்னும் நான்கு சாதி வண்டுகளும் பின்தொடர்ந்து செல்ல, பூக்கள் நிறைந்த கூந்தலையுடைய பெண்கள் பக்கங்களிற் பெண்யானைகளைப் போன்ற நடையோடு நடந்து சென்றனர்.

கு :—பெரிய படையில் கண்ணேறு படாமல் கழிய கூனரும் குறளரும் செல்லுதல் மரபு. கூனர் - முதுகுவளைந்தவர். குறளர் சித்திரக்குள்ளர். சிந்தர்—குறளரைக் காட்டிலும் சிறிது பெரியவர்கள். வண்டும் தேனும் நல் மணத்தே செல்வன. தும்பியும் மிஞிறும் எல்லாமணத்திலும் செல்வன என்பர் நச்சினார்க்கினியர். (சிவக. 893 உரை). (69)

### அறுபதினாயிரம் மனைவிமார்களும் செல்லுதல்

**885.** துப்பினின் மணியிற் பொன்னிற்
சுடர்மர கதத்தின் முத்தின்
ஒப்பற வமைத்த பைம்பூண்
ஓவியம் புகழ வேறி

முப்பதிற் றிரட்டி கொண்ட
வாயிர முகிழ்மென் கொங்கைச்
செப்பருந் திருவி னல்லார்
தேர்மிசைச் சூழப் போனார்.

**துப்பினின் மணியின் பொன்னின் சுடர் மரகதத்தின் முத்தின்
ஒப்புஅற அமைத்த பைம்பூண் ஓவியம் புகழ ஏறி,
முப்பதிற்று இரட்டி கொண்ட ஆயிரம் முகிழ்மென் கொங்கைச்
செப்புஅரும் திருவின் நல்லார், தேர்மிசைச் சூழப் போனார்.**

பொ:—பவழத்தாலும், செம்மணியாலும், பொன்னாலும், ஒளி விடுகின்ற மரகதத்தாலும், முத்தாலும், நிகரில்லையாம்படிச் செய்த பசிய அணிகளோடு கூடிய சிற்பமோ என்று புகழ்ந்து சொல்லும்படியாக, அறுபதினாயிரம் என்ற எண்ணிக்கையைக் கொண்டவர்களும் தாமரை மொட்டுப் போலும் தனங்களை யுடையவர்களும், சொல்லுதற்கு அரிய திருமகளைக் காட்டிலும் அழகுமிக்கவர்களும் ஆகிய மகளிர் தேரின்மீது ஏறிக் கோசலை யைச் சூழச் சென்றனர்.

கு:—துப்பின் முதலியவற்றை, அமைத்த பூணுக்கு அடை யாக்கி, பவழ முதலியவற்றாற் செய்த அணியெனப் பொருள் கொள்க. அன்றி துப்பின் முதலியவற்றால் அமைத்த ஓவியம், பைம்பூண் ஓவியம் எனக்கூட்டி பவழ முதலியவற்றால் கடைந்து செய்யப்பெற்ற ஓவியம். பூண்களையணிந்த ஓவியம் எனக்கோட லும் ஒன்று. பட்டமகிஷியைச் சூழ்ந்து ஏனைய மனைவிமார்கள் செல்லுதல் மரபு. (70)

### வசிட்டன் செல்லுதல்

**886,** செவிவயி னமிர்த கேள்வி
தெவிட்டினார் தேவர் நாவின்
அவிகையி னளிக்கு நீரா
ரையிரு கோடி சூழக்
கவிகையி னீழற் கற்பின்
அருந்ததி கணவன் வெள்ளைச்
சிவிகையி னன்ன மூருந்
திசைமுக னென்னச் சென்றான்.

செவிவயின் அமிர்த கேள்வி தெவிட்டினுர், தேவர் நாவின்
அவி கையின் அளிக்கும் நீரார், ஐயிரு கோடி சூழக்,
கவிகையின் நீழல், கற்பின் அருந்ததி கணவன், வெள்ளேச்
சிவிகையின், அன்னம் ஊரும் திசைமுகன் என்னச், சென்ருன்.

பொ :—கற்பினையுடைய அருந்ததிக்குக் கணவனுகிய வசிட்ட முனிவன், தமது காதில் அமிர்தத்தை யொத்த இனிய வேதங்களை மிகுதியாகக் கேட்டுத் தெவிட்டினவர்களும், தமது கையாலே அவிசைத் தேவர்கள் நாவில் எடுத்தூட்டக் கூடிய மந்திரவலி பெற்றவர்களும், பத்துக் கோடிபேர் புடைசூழ (வெள்ளையான) குடையின் நீழலில், வெண்மையான பல்லக்கில், அன்னத்தை வாகனமாகக் கொண்டு ஊர்ந்து செல்லும் பிரமனைப் போலச் சென்ருன்.

கு :—கற்பின் அருந்ததிக்கணவன், தெவிட்டினுரும், அளிக்கும் நீராருமாகிய (அந்தணர்) ஐயிருகோடி சூழக் கவிகையின் நீழல், வெள்ளேச் சிவிகையின் திசைமுகன் என்னச் சென்ருன் என முடிக்க. கேள்வி – வேதம். சுருதி யென்பதன் தமிழ். வேதம் தெவிட்டினுர் என்றது வேதத்தைப் பலகாலும் கேட்டுக் கேட்டுச் சலித்தவர்கள். ஐயிருகோடி யென்றது பலர் என்ற அளவில் நின்றது. வெள்ளேச் சிவிகையில் செல்லும் வசிட்டனுக்கு வெள்ளையன்னத்திற் செல்லும் நான்முகன், ஊர்தியாலும் தொழிலாலும் ஒப்பு. (71)

### பரத சத்துருக்கனர் செல்லுதல்

**887.** பொருகளி றிவுளி பொற்றேர்
பொலங்கழற் குமரர் முந்நீர்
அருவரை சூழ்ந்த தென்ன
வருகுபின் முன்னுஞ் செல்லத்
திருவளர் மார்பர் தெய்வச்
சிலேயினர் தேரர் வீரர்
இருவரு முனிபின் போன
விருவரு மென்னப் போனுர்.

பொருகளிறு இவுளி பொன்தேர் பொலங்கழல் குமரர், முந்நீர்
அருவரை சூழ்ந்தது என்ன, அருகுபின் முன்னும் செல்லத்,
திருவளர் மார்பர், தெய்வச் சிலேயினர், தேரர், வீரர்,
இருவரும் முனிபின் போன இருவரும் என்னப் போனுர்.

பொ :—ஒன்றோடொன்று பொருகின்ற யானைகளும், குதிரைகளும், பொன்னாலாகிய தேர்களும், பொன்னாலாகிய வீரக்கழலை யணிந்த காலையர்களும், ஆகிய நால்வகைப் படைகளும், யாராலும் கடத்தற்கரிய மலையைக் கடல் சூழ்ந்தாற் போலத் தம் அருகிலே பின்னும் முன்னும் செல்ல, வீரலக்குமி தங்கப் பெற்ற மார்பையுடையவர்களும், தெய்வத்தன்மை பொருந்திய வில்லையுடையவர்களும், தேர்களை யுடையவர்களும் வீரர்களும் ஆகிய பரதசத்துருக்கனர்கள் இருவரும், விசுவாமித்திர முனிவன் பின்னே சென்ற ராமலக்குமணர்களைப் போலச் சென்றார்கள்.

கு :—பொருகளிறு - பகைவரோடு பொருகின்ற யானை எனவுமாம். குமரர் என்றது காலாட்படையை. அருவரை பரத சத்துருக்கனர்களுக்கும், முந்நீர் நால்வகைப் படைகளுக்கும் ஒப்பு. தேரர் - அதிரதர் என்னும் குறிப்பு. விசுவாமித்திர முனிவர்பின் சென்ற ராம லக்குமணர்கட்குத் திருமண வைபவம் நிகழ இருப்பதுபோல இவர்களுக்கும் நிகழ இருக்கிறது என்ற குறிப்பை இவ்வுவமையாற் குறிப்பித்தார் என்க. (72)

## தசரதன் புறப்படுதல்

**888.** நித்திய நியம முற்றி
நேமியான் பாதஞ் சென்னி
வைத்தபின் மறைவ லோர்க்கு
வரம்பறு மணியும் பொன்னும்
பத்தியா னிரையும் பாரும்
பரிவுட னல்கிப் போனான்
முத்தணி வயிரப் பூணான்
மங்கல முகுர்த்த நன்னாள்.

**நித்திய நியமம் முற்றி, நேமியான் பாதம் சென்னி வைத்தபின், மறை வலோர்க்கு வரம்பு அறு மணியும் பொன்னும் பத்தி ஆன் நிரையும் பாரும் பரிவுடன் நல்கிப் போனான், முத்துஅணி வயிரப் பூணான், மங்கல முகுர்த்த நன்னாள்.**

பொ:—முத்துக்களாலும், அழகிய வயிர மணிகளாலும் இயன்ற ஆபரணங்களையுடைய தசரதன், நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு, திருவாழியை யேந்திய திருமாலின் திருவடியைச் சிரத்துக் சூடிக்கொண்டபின், வேதங்களில் வல்ல அந்த

ணர்களுக்கு, எல்லையற்ற மாணிக்கங்களையும் பொன்னையும் வரிசையான பசுக்கூட்டங்களையும், பூமியையும் அன்புடன் அளித்து, புறப்பாட்டிற்கு என்று வகுக்கப்பட்ட மங்களகரமான முகூர்த்தத்தில் சென்றான்.

கு:—பாதம் சென்னி வைத்தலாவது வீழ்ந்து வணங்குதல். அரசர்கள் யாத்திரை புறப்படுவதற்கு முன்பு சுவர்ணதானம், இரத்தினதானம், கோதானம், பூமிதானம் முதலியன செய்தல் மரபு. (73)

### அந்தணர் ஆசிகூற மாதர் பல்லாண்டிசைத்தல்

889\. இருபிறப் பாள ரெண்ணு
யிரர்மணிக் கலச மேந்தி
அருமறை வருக்க மோதி
யறுகுநீர் தெளித்து வாழ்த்தி
வரன்முறை வந்தார் கோடி
மங்கல மழலைச் செவ்வாய்ப்
பருமணிக் கலாபத் தார்பல்
லாண்டிசை பரவப் போனான்.

இரு பிறப்பாளர் எண்ணுயிரர் மணிக் கலசம் ஏந்தி, அருமறை வருக்கம் ஓதி, அறுகுநீர் தெளித்து, வாழ்த்தி, வரன்முறை வந்தார்: கோடி மங்கல மழலைச் செவ்வாய்ப் பருமணிக் கலாபத்தார், பல்லாண்டிசை பரவப் போனான்.

பொ:—எண்ணாயிரம் அந்தணர்கள் இரத்தின கலசத்தைத் தாங்கி அரிய வேதமந்திரங்களின் கூட்டத்தை ஓதிக்கொண்டு, அறுகு இட்டுவைத்த கலசநீரைத் தெளித்து, ஆசிகூறி, முறைப்படி வந்தார்கள். மங்கலமான, மழலைச்சொல்லைப் பேசுகின்ற சிவந்த வாயையும், பருத்த மாணிக்கங்களாலான மேகலையையும் உடைய கோடிபெண்கள் பல்லாண்டை இசையுடன் கூறத் தசரதன் சென்றான்.

கு:—மணிக்கலசம் என்றது - பூரண கலசத்தை: மங்கலத்திற்காகப் பூரண கலசம் எடுத்தல் மரபு. கோடி யென்றது பன்மை குறித்து நின்றது. கலாபம் - பதினாறு கோவையுள்ள மாதரிடையணி. (74)

### மண்டலாதிபர்கள் நெருங்கிச் செல்லுதல்

**890.** கண்டில னென்னை யென்பார்
கண்டன னென்னை யென்பார்
குண்டலம் வீழ்ந்த தென்பார்
குறுகரி தினிச்சென் றென்பார்
உண்டுகொ லெழுச்சி யென்பா
ரொலித்தது சங்க மென்பார்
மண்டல வேந்தர் வந்து
நெருங்கினர் மயங்கி மாதோ.

'கண்டிலன் என்னை' என்பார்;
'கண்டனன் என்னை' என்பார்;
'குண்டலம் வீழ்ந்தது' என்பார்;
'குறுகஅரிது இனிச் சென்று' என்பார்;
'உண்டுகொல் எழுச்சி' என்பார்;
'ஒலித்தது சங்கம்' என்பார்;
மண்டல வேந்தர் வந்து
நெருங்கினர் மயங்கி, மாதோ!

பொ:—மண்டலாதிபர்கள், என்னைத் தயரதன் கண்டிலன் என்பாரும், என்னைக் கண்டனன் என்பாரும் என் குண்டலம் கீழே வீழ்ந்து விட்டது என்பாரும், இனிமேல் சென்று தயரதனை அணுகமுடியாது என்பாரும், சங்கம் ஒலித்தது அதனால் எங்கோ புறப்பாடு இருக்கும் போலும் என்பாரும், ஆகத் தம்முள் மயங்கி வந்து ஒன்று கூடினர்.

கு:—வந்திருந்த மண்டலாதிபர்கள் ஒவ்வொருவரும் இங்ஙனம் கூறிக்கொண்டே வந்து தசரதனை நெருங்கினர் என்பது கருத்து. மாது ஓ அசைகள். (75)

### தயரதன் தேரிற் செல்லுதல்

**891.** பொற்றொடி மகளி ரூரும்
பொலன்கொடார்ப் புரவி வெள்ளம்
சுற்றுறு கமலம் பூத்த
தொடுகடற் றிரையிற் செல்லக்

கொற்றவேன் மன்னர் செங்கைப்
பங்கயக் குழாங்கள் கூம்ப
மற்றொரு கதிரோ னென்ன
மணிநெடுந் தேரிற் போனான்.

பொன்தொடி மகளிர் ஊரும்
பொலன்கொள்தார்ப் புரவி வெள்ளம்
சுற்றுறு கமலம் பூத்த
தொடுகடல் திரையில் செல்லக்,
கொற்றவேல் மன்னர் செங்கைப்
பங்கயக் குழாங்கள் கூம்ப,
மற்றுஒரு கதிரோன் என்ன
மணிநெடும் தேரில் போனான்.

பொ:—பொன்னாலாகிய வளையலையணிந்த பெண்கள் ஊர்கின்ற பொன்னாலாகிய கிண்கிணி மாலையைத் தரித்த குதிரையின் கூட்டம், சுற்றிலும் தாமரைப்பூக்கள் மலர்ந்துள்ள தோண்டப் பெற்றதான கீழ்கடலின் அலைகளைப்போலச் செல்ல, வெற்றி பொருந்திய வேலையேந்திய சிற்றரசர்களின் சிவந்த கைகளாகிய தாமரைக்கூட்டங்கள் குவிய, வேறொரு சூரியனைப்போலத் தசரதன் மணிகள் கட்டிய பெரியதேரில் சென்றான்.

கு:—வெள்ளம் - மிகுதி. கமலம் – தாமரைப்பூ. தாமரை குவியச் செய்தலானும் மண்ணிடைச் செல்லுதலானும் மற்றொரு கதிரோன் என்றார். தொடுகடல் – சகரர்களால் தோண்டப் பெற்ற கடலாகிய கீழ்கடல். (76)

புழுதியின் செயல்

892. ஆர்த்தது விசும்பை முட்டி
மீண்டகன் றிசைக ளெல்லாம்
போர்த்ததங் கொருவர் தம்மை
யொருவர்கட் புலங்கொ ளாமை
தீர்த்தது செறிந்த தோடித்
திரைநெடுங் கடலை யெல்லாம்
தூர்த்தது சகர ரோடு
பகைத்தெனத் தூளி வெள்ளம்.

### மண்டலாதிபர்கள் நெருங்கிச் செல்லுதல்

**890.** கண்டில னென்னை யென்பார்
கண்டன னென்னை யென்பார்
குண்டலம் வீழ்ந்த தென்பார்
குறுகரி தினிச்சென் றென்பார்
உண்டுகொ லெழுச்சி யென்பா
ரொலித்தது சங்க மென்பார்
மண்டல வேந்தர் வந்து
நெருங்கினர் மயங்கி மாதோ.

'கண்டிலன் என்னை' என்பார்;
'கண்டனன் என்னை' என்பார்;
'குண்டலம் வீழ்ந்தது' என்பார்;
'குறுகஅரிது இனிச் சென்று' என்பார்;
'உண்டுகொல் எழுச்சி' என்பார்;
'ஒலித்தது சங்கம்' என்பார்;
மண்டல வேந்தர் வந்து
நெருங்கினர் மயங்கி, மாதோ!

பொ :—மண்டலாதிபர்கள், என்னைத் தயரதன் கண்டிலன் என்பாரும், என்னைக் கண்டனன் என்பாரும் என் குண்டலம் கீழே வீழ்ந்து விட்டது என்பாரும், இனிமேல் சென்று தயரதனை அணுகமுடியாது என்பாரும், சங்கம் ஒலித்தது அதனால் எங்கோ புறப்பாடு இருக்கும் போலும் என்பாரும், ஆகத் தம்முள் மயங்கி வந்து ஒன்று கூடினர்.

கு:—வந்திருந்த மண்டலாதிபர்கள் ஒவ்வொருவரும் இங்ஙனம் கூறிக்கொண்டே வந்து தசரதனை நெருங்கினர் என்பது கருத்து. மாது ஓ அசைகள். (75)

### தயரதன் தேரிற் செல்லுதல்

**891.** பொற்றொடி மகளி ரூரும்
பொலன்கொடார்ப் புரவி வெள்ளம்
சுற்றுறு கமலம் பூத்த
தொடுகடற் றிரையிற் செல்லக்

கொற்றவேன் மன்னர் செங்கைப்
பங்கயக் குழாங்கள் கூம்ப
மற்றொரு கதிரோ னென்ன
மணிநெடுந் தேரிற் போனான்.

பொன்தொடி மகளிர் ஊரும்
பொலன்கொள்தார்ப் புரவி வெள்ளம்
சுற்றுறு கமலம் பூத்த
தொடுகடல் திரையில் செல்லக்,
கொற்றவேல் மன்னர் செங்கைப்
பங்கயக் குழாங்கள் கூம்ப,
மற்றுஒரு கதிரோன் என்ன
மணிநெடும் தேரில் போனான்.

பொ:—பொன்னாலாகிய வளையலையணிந்த பெண்கள் ஊர்கின்ற பொன்னாலாகிய கிண்கிணி மாலையைத் தரித்த குதிரையின் கூட்டம், சுற்றிலும் தாமரைப்பூக்கள் மலர்ந்துள்ள தோண்டப் பெற்றதான கீழ்கடலின் அலைகளைப்போலச் செல்ல, வெற்றி பொருந்திய வேலையேந்திய சிற்றரசர்களின் சிவந்த கைகளாகிய தாமரைக்கூட்டங்கள் குவிய, வேறொரு சூரியனைப்போலத் தசரதன் மணிகள் கட்டிய பெரியதேரில் சென்றான்.

கு:—வெள்ளம் - மிகுதி. கமலம் – தாமரைப்பூ. தாமரை குவியச் செய்தலானும் மண்ணிடைச் செல்லுதலானும் மற்றொரு கதிரோன் என்றார். தொடுகடல் – சகரர்களால் தோண்டப் பெற்ற கடலாகிய கீழ்கடல். (76)

## புழுதியின் செயல்

**892.** ஆர்த்தது விசும்பை முட்டி
மீண்டகன் றிசைக ளெல்லாம்
போர்த்ததங் கொருவர் தம்மை
யொருவர்கட் புலங்கொ ளாமை
தீர்த்தது செறிந்த தோடித்
திரைநெடுங் கடலை யெல்லாம்
தூர்த்தது சகர ரோடு
பகைத்தெனத் தூளி வெள்ளம்.

ஆர்த்தது விசும்பை முட்டி ; மீண்டுஅகன் திசைகள் எல்லாம்
போர்த்தது ; அங்குஒருவர் தம்மை ஒருவர் கண்புலம் கொளாமை
தீர்த்தது ; செறிந்தது ஓடித் ; திரைநெடும் கடலை எல்லாம்
தூர்த்தது, சகரரோடு பகைத்து எனத், தூளி வெள்ளம்.

பொ :—சேனைகள் செல்வதால் உண்டான புழுதிக்கூட்டம் ஆகாயம் எங்கும் நிறைந்ததாக அதனைத் தாக்கி, மீண்டு, அகன்ற திசைகள் எல்லாவற்றையும் மூடியது. அத்திசைகளில் ஒருவரையொருவர் பார்க்க முடியாதபடி தீர்த்துவிட்டது. எங்கும் பரந்து நிறைந்தது ; அலைகளோடு கூடிய கடலை எல்லாம் தோண்டிய சகரர்களோடு பகை கொண்டது போலத் தூர்த்துவிட்டது.

கு :—ஆர்த்தல் - நிறைதல். கண்புலம் கொளாமை - கண்ணாகிய இந்திரியம் பொருள்களைச் சென்றுபற்றிப் புலனை ஏற்றுக் கொள்ளாதபடி ; என்றது பார்க்க முடியாதபடி என்றவாறும். (77)

### ஒலியும் ஒளியும் மிஞ்சுதல்

893\. சங்கமும் பணையுங் கொம்புந்
தாளமுங் காளத் தோடு
மங்கல பேரி செய்த
பேரொலி மழையை யோட்டத்
தொங்கலுங் குடையுந் தோகைப்
பிச்சமுஞ் சுடரை யோட்டத்
திங்கள்வெண் குடைகண் டோடத்
தேவரு மருளச் சென்றான்.

சங்கமும் பணையும் கொம்பும் தாளமும் காளத்தோடு
மங்கல பேரி செய்த பேரொலி மழையை ஓட்டத்,
தொங்கலும் குடையும் தோகைப் பிச்சமும் சுடரை ஓட்டத்,
திங்கள், வெண்குடை கண்டு ஓடத், தேவரும் மருளச், சென்றான்.

பொ :—சங்கும், புல்லாங்குழலும், ஊதுகொம்பும், தாளமும் எக்காளமும், மங்கல பேரிகைகளும் எழுப்பிய பெரிய ஓசையானது மேகத்தின் ஒலியை வென்று துரத்தவும், பூமாலைகளும், குடைகளும், மயிலின் தோகையாற் செய்த பிச்சமும் வெயிலை மறைக்கவும், வெண்கொற்றக் குடையைக் கண்டு சந்திரன் ஓடவும், தேவர்களும் கண்டு மயங்கச் சென்றான்.

கு :—பணை - மூங்கில். ஈண்டு மூங்கிலால் இயன்ற புல்லாங் குழலையுணர்த்திற்று. மங்கல பேரி - மங்கல முழவங்கள். மழை - மேகத்தின் ஒலியாகிய இடி. தொங்கல் - மாலை. பிச்சம் - மயிற் பீலியாற் செய்யப்பெற்ற எடுபிடிவகையுள் ஒன்று. சுடரை ஒட்டு தலாவது - வெயிலை மறைத்தல். வெண்கொற்றக் குடையின் நிறத்தையும், குளிர்ச்சிதரும் பெருமையையும் கண்டு சந்திரன் இக்குணங்கள் நமக்கு இல்லையே என்று ஓடினன் என்பார் வெண்குடை கண்டு திங்கள் ஓட என்றார். (78)

### பலவகை ஓசை எழுதல்

**894.** மந்திர கீத வோதை
வலம்புரி முழங்கு மோதை
அந்தண ராசி யோதை
யார்த்தெழு முரசி னோதை
கந்துகொல் களிற்றி னோதை
கடிகையர் கவிதை யோதை
இந்திர திருவன் செல்ல
வெழுந்தன திசைக ளெல்லாம்.

**மந்திர கீத ஓதை, வலம் புரி முழங்கும் ஓதை,**
**அந்தணர் ஆசி ஓதை, ஆர்த்து எழும் முரசின் ஓதை,**
**கந்துகொல் களிற்றின் ஓதை, கடிகையர் கவிதை ஓதை,**
**இந்திர திருவன் செல்ல எழுந்தன திசைகள் எல்லாம்.**

பொ :—இந்திரனுடைய செல்வம்போன்ற செல்வத்தை யுடையவனாகிய தசரதச் சக்கரவர்த்தி செல்ல, வேத மந்திரங் களாகிய பாட்டோசையும், வலம் புரிச்சங்குகள் முழங்குகின்ற ஓசையும், அந்தணர்களுடைய ஆசீர்வாத ஓசையும், ஆரவாரித் தெழுகின்ற முரச வாத்தியத்தின் ஓசையும், கட்டுத்தறியை முறிக்கின்ற யானைகளின் பிளிற்றோசையும், நாழிகையறிவிப்பார் களுடைய நாழிகைப் பாட்டின் ஓசையும், திசைகள் எங்கும் எழும்பின.

கு ;—மந்திர கீதம் - சாம கானம். நாழிக்கணக்கர், நாழிகை யைப் பாடல் வாயிலாகக் குறிப்பது அரண்மனை வழக்கு ஆதலின் அதனைக் கடிகையர் கவிதை யோதை என்றதாற் குறித்தார் ஆசிரியர். (79)

**புழுதியால் விண்ணும் மண்ணுலகாயிற்று எனல்**

**895.** நோக்கிய திசைக ளெல்லாந்
தன்னையே நோக்கிச் செல்ல
வீக்கிய கழற்கால் வேந்தர்
விரிந்தகைம் மலர்கள் கூம்பத்
தாக்கிய களிறுந் தேரும்
புரவியும் படைஞர் தாளும்
ஆக்கிய தூளி விண்ணு
மண்ணுல காக்கப் போனன்.

**நோக்கிய திசைகள் எல்லாம் தன்னையே நோக்கிச் செல்ல,
வீக்கிய கழல்கால் வேந்தர் விரிந்த கைம்மலர்கள் கூம்பத்,
தாக்கிய களிறும் தேரும் புரவியும் படைஞர் தாளும்
ஆக்கிய தூளி, விண்ணும் மண்ணுலகு ஆக்கப், போனன்.**

பொ :—பார்க்கின்ற திசைகள் யாவும் தன்னையே பார்த்துக் கொண்டு செல்ல, (அதனல்) இறுகக் கட்டிய வீரக்கழலை யணிந்த காலையுடைய மன்னர்களின் விரிந்த கைகளாகிய தாமரைகள் (தான் பார்க்குந்தோறும்) குவியவும், ஒன்ருே டொன்று மோதிக்கொண்டு செல்கின்ற யானைகளும், தேர்களும், குதிரைகளும், காலாள்களுமாகிய இவைகளால் விளைந்த புழுதி யானது விண்ணுலகத்தையும் மண்ணுலகாக்கவும் சென்ருன்.

கு :—நோக்கிய - (தசரதன்) நோக்கிய; திசைகளெல்லாம் தன்னையே நோக்கிச் செல்லுதலாவது - தயரதன் எந்தப்பக்கம் திரும்பினுலும், அந்தப் பக்கத்திலுள்ளவர் தன்னையே (தசர தனையே) பார்த்துக்கொண்டு செல்ல என்பதாம். அங்ஙனம் இவன் செல்லும்போது இவன் கண்பார்வை வீழ்ந்த பக்கத் தில் வருகிற மன்னர்கள் சமயம் பார்த்திருந்தவர்களாதலின் கைகூப்பி வணங்குகின்றனர் என்பது கருத்து. (80)

**உடன் சென்ற சேனையின் மிகுதி**

**896.** வீரருங் களிறுந் தேரும்
புரவியு மிடைந்த சேனை
பேர்விட மில்லை மற்ருே
ருலகில்லை பெயர்க்க லாகா

நீருடை யாடை யாளு
நெளித்தனண் முதுகை யென்றால்
பார்பொறை நீக்கி னனென்
றுரைத்ததெப் பரிசு மன்னே.

வீரரும் களிறும் தேரும் புரவியும் மிடைந்த சேனை
பேர்விடம் இல்லை, மற்றோர் உலகில்லை, பெயர்க்கலாகா,
நீருடை ஆடை யாளும், நெளித்தனள் முதுகை என்றால்,
'பார்பொறை நீக்கினன்' என்று உரைத்தது எப்பரிசு மன்னே ?

பொ:—வீரர்களும், யானையும் தேரும், குதிரையும் நெருங்கிய சேனைகட்கு, பெயர்ந்து செல்லவும் இடம் இல்லை. (மாற்றி வைக்கலாம் என்றாலோ) வேறொரு வெற்றுலகமுமில்லை ஆதலின் பெயர்த்து வைத்தல் முடியாத காரியம். (ஆதலால்) கடலாகிய நீரை ஆடையாக உடைய பூமிதேவியும் (பாரந்தாங்காது) முதுகை நெளித்துக்கொடுத்தாள் என்றால், தசரதசக்கரவர்த்தி பூமியின் பாரத்தைநீக்கி ஆண்டான் என்று சொன்னது எப்படிப் பொருந்துவதாம்.

கு:—நால்வகைப் படைகளும் அசைந்து கொடுக்கவும் இடமில்லை, மாற்றிவைக்க மற்றோர் உலகமில்லை. ஆதலால் பாரந் தாங்காது பூமி நெளித்தாள் என்றால் அரசன் பூபாரந்தீர்த்தான் என்றல் எவ்வாறு பொருந்துவதாம் என்பது கருத்து. (81)

### தசரதன் சந்திர சயிலத்தின் சாரலில் தங்குதல்

**897.** இன்னணா மேகி மன்னன்
யோசனை யிரண்டு சென்றான்
பொன்வரை போலு மிந்து
சயிலத்தின் சாரல் புக்கான்
வன்மதக் களிறு மாதர்
கொங்கையு மார னம்பும்
தென்வரைச் சாந்து நாறுஞ்
சேனையு மிறுத்த தன்றே.

இன்னணம் ஏகி மன்னன் யோசனை இரண்டு சென்றான்,
பொன்வரை போலும் இந்து சயிலத்தின் சாரல் புக்கான்;
வல்மதக் களிறும் மாதர் கொங்கையும் மாரன் அம்பும்
தென்வரைச் சாந்தும் நாறும் சேனையும் இறுத்தது அன்றே.

பொ :—இவ்வாருகச் சென்று தசரதன் இரண்டு யோசனே தூரம் சென்ருன். மேருமலேயை யொத்த சந்திர சயிலத்தின் சாரலே யடைந்தான். வலிய மதநீர் ஒழுகுகின்ற யானேயும், மங்கையர் கொங்கையும் மன்மதன் பாணங்களாகிய மலர்களும் பொதிய மலேச்சந்தனமும் சேர்ந்து மணக்கின்ற அவன் சேனேயும் அச்சாரலில் தங்கிற்று.

கு :—வன்மதக் களிறு நாறுதலாவது மதமணம் வீசுதல். மாதர் கொங்கை நாறுதலாவது அவற்றில் அப்பப் பெற்ற களப கத்தூரிகள் மணத்தல். அன்று, ஏ அசை.

இங்ஙனமன்றி 'மன்மதக் களிறும்' எனப் பாடங்கொண்டு; மன்மதனுடைய யானேயாகிய இருளேப்போன்ற கரிய கூந்தலும், கொங்கையும் முறையே மலராலும் சந்தனத்தாலும் மணக்கின்ற சேனே எனப் பொருள் கூறுவாரும் உளர். (82)

எழுச்சிப் படலம் முற்றிற்று.

# 14. வரைக்காட்சிப் படலம்

மிதிலைக்காட்சி, கார்முகப் படலங்கள் போலவே பின்வரும் படலங்களுட் பலவும், பெருங்காப்பிய இலக்கணத்திற்கு ஏற்பக் கம்பநாடர் 'புதுவதுபுனைந்து' கொண்டனவாகும். அவற்றுள் வரைக்காட்சி யென்பது, மிதிலாபுரியை அடுத்திருந்த சந்திர சயிலமென்ற மலையின் வளங்களை அயோத்தி மக்கள் கண்ட செயலாம். இம்மலையின் பெயரும் புனைந்து கொள்ளப்பட்டதே. முதனூலில் இம்மலையேனும் பெயரேனும் கூறப்படவில்லை. வான்மீகர் கூறியதெல்லாம் இருடிகளுடனும் சதுரங்க சேனைகளுடனும் மிக விரைவாக சீதா கல்யாணம் குறித்து, தசரதர் புறப்பட்ட வரலாறேயாம். இதுபற்றி அம்முனிவர் கூறுவது :—

'அவர் நான்குநாள் பிரயாணம் செய்து ஐந்தாநாள் மிதிலாபுரி போய்ச் சேர்ந்தார். சனக மன்னரும் (அவர் வருகை கேட்டுப்) பெருமகிழ்ச்சியுற்று அவரைக் கண்டு, காணிக்கை செலுத்தினர்.' என்ற கருத்தமைந்த பாடல் (69-8) ஒன்றேயாகும்.

வான்மீகத்திற் கூறப்பட்டபடியே, கம்பரது கதைக் கூறுகளாகப் பெரும்பாலும் அமைந்தவை, அவதாரம், கையடை, அகலிகைப் படலங்களும் கோலங்காண் படலம், கடிமணப் படலம், பரசுராமப் படலங்களுமே. இவற்றிலும் முதனூலோடு வேறுபட்ட கதைப் பகுதிகள் உண்டு. இவையல்லாத படலங்கள் யாவும், கம்பநாடரது விரிந்த கற்பனைக் களஞ்சியத்தினின்று படைத்த அமுத உணவுகளே எனலாம். ஏழு நிலைகளமைந்த இராமாயணத் திருமாளிகையிலே-செய்குன்றுகளையும் பூஞ்சோலைகளையும் நீர்வாவிகளையும் முகப்பிற்கொண்ட—முதல்நிலையே இப்பாலகாண்டம். இதனுளமைந்த இவ்வரைக்காட்சி எழுபத்தேழு பாடல்கள் கொண்டது. இப்பாடல்கள் பெரும்பாலனவும் படிப்போருள்ளங்களைக் கவரக்கூடியன. தசரதரின் சேனைகளும் மன்னர்களும் மற்ற மாந்தர்களும் தத்தம் மகளிருடன் பெருமகிழ்ச்சி கொண்டு மிதிலையையடுத்த சந்திரசயிலத்தின் தாழ்வரைக்கு வந்து தங்கலாயினர். முதலில் மகளிர் ஏறிவந்த யானைகள் மரங்களிற் கட்டப்படுகின்றன. அப்போது அம்மகளிர் வேழங்களினின்று இறங்கும் நிலையை இப்படலத்தின் முகப்புப் பாடலாக வைத்து—

**'பூவை வாய்ச்சியர் முலைசிலர் புயத்தொடும் பூட்டத்**
**தேவ தாரத்தும் சந்தினும் பூட்டின சிலமா'**

என்று தொடங்குகின்றார் கம்பநாடர். ஆடவர்கள் தம் இரு புயங்களாலும் அணைத்த வண்ணம் அவ் யானைகளினின்றும் தம் மகளிரை இறக்கியபின் அவை மரங்களிற் கட்டப்பட்டன என்று கூறியதிலுள்ள அற்புத நயங்களை அறிந்து மகிழாத அறிஞர் யாவர்? பின் மதவேழங்கள் சிலவற்றின் செயல்கள் வருணிக்கப் படுகின்றன. இவற்றுள், மதக் களிறுகள் (சில சூழ்ச்சி செய்து) தாம் கட்டப்பெற்ற மரங்களை வேரொடு பிடுங்கிக்கொண்டு ஓடுவதற்கு, கரிகாற் பெருவளத்தான் போன்றார் செயல்களை உள்ளத்துக்கொண்டு கவியரசர் பாடியதும் (2) இரண்டு மருத மரங்களிடையே தன்னைக் கட்டிய உரலோடு இணைந்து அம்மரங் களை முறித்துக்கொண்டு அவற்றுடன் தவழ்ந்துசென்ற கண்ண பிரான் செயலை, பின்னங் கால்களைக் கட்டிய தறியோடும் இரட்டை மராமரங்களினிடையே அவற்றை முறித்தபடி ஓடிய மத யானைக்கு உவமித்ததும் (3) அற்புதம் வாய்ந்தவை. இவ் விடங்களிலெல்லாம் சங்கச் செய்யுட் பகுதிகள் கம்ப நாடர்க்குத் தக்க துணையாகத் திகழ்கின்றன. அச்சங்கத்துச் சான்றோர் வாக்குக்களில் அருமையான சிலவும் வேறிடங்களில் அவரால் எடுத்தாளப்படுதல் காணலாம். ஏழிலைப்பாலை மரமானது தன் மதமணம் நாறுவதை யறிந்த மதவெறியுற்ற யானையொன்று அதனைத் தன் இனமாகக் கருதிக் காலால் தேய்த்துச் சின்ன பின்னப்படுத்தியதும் (6) யானைத் தலைவனை யூதபதியாகச் சந்திரசயிலத்தைச் சிறப்பித்ததும் (7) பிடிபட்ட புது வேழங்களை இசைபாடிப் பாகர் பழக்குதலும் (76) அறிந்து மகிழத்தக்கன. மலைக்காற்றுத் தம் கொண்டைகளில் வீச மக்கள் உல்லாசமாகத் திரிதலும் (24) பூத்தவேங்கையைச் சோதிடராகக் கூறுதலும் (33) யானை மேலேறி உலாப்போந்த மகளிர், பின் தத்தம் பட மாடங்களிலே புக்கதற்குத் தாமரை மலரை நீங்கித் தம் மனை யிடம் புக்க திருமகளை உவமித்ததும் (12) முன்னூல் வழக்கு களோடு பெரிதும் ஒத்துள்ளமை குறிப்பிடத்தக்கன. இவ்வாறே தேர் குதிரைப் படைகளின் செய்திகளும் சிறப்பிக்கப்படுகின்றன. அவற்றுள் குதிரைகட்கு ஞானயோகியரை ஒப்பிட்டிருப்பது அறிந்துகொள்ளற்பாலதாம். வற்றிய மலையாறுகள் ஊற்று நீரால் உலகூட்டுவதற்குக் குமணவள்ளல் போன்றார் செயல்களை உட்கொண்டு ஆசிரியர் உவமிக்கின்றார் (23). பலவகை இசை வகைகள் இன்பமூட்டுகின்றன. மற்றும் பல மலைவளங்களும் மலைமக்களின் இயல்பும் வழக்க வொழுக்கங்களும் ஆடவர்மகளி ரின் இன்ப விளையாட்டுக்களும் கற்போருள்ளங்களைக் கொள்ளை கொள்வனவாகும். வேற்றுப்பொருள் வைப்பணிகளாக, நீதி களையும் உலகியல்புகளையும் புலவர்பெருமான் காட்டிப் போதல் அறியத்தக்கது. அவர்காலத்து வடநூல்காப்பிய வழக்குக்

களுக்கும் சூழ்நிலைகட்கும் ஏற்ப, உயர்வு நவிற்சியாகவும் சிலேடை மடக்கு முதலிய சொல்லணிகளாகவும் பாடப்பெற்றவை பல. மாகம் என்ற சிசுபாலவதம் முதலிய வடநூல்களிலும் வரைக் காட்சி முதலியவை இவர் வருணித்த முறையே உள்ளன என்பர். இப்படலத்தில், குறிஞ்சிநிலத்துக்குரிய தமிழ்வழக்குகளைப் பெரிதும் தழுவியுள்ளார் நம் புலவர்பிரான். இக்காட்சிகள் யாவும் முடிந்தபின் மாலைப்பொழுதும் அதன்பின் இரவும் சிறப் பிக்கப்படுகின்றன. நகரத்திற்குரியவை யெல்லாமமைந்த அந்தப் பாடியிலே தத்தம் படமாடங்களில் மக்களெல்லாம் அடங்கி ஒடுங்கினர்.

---

# 14. வரைக்காட்சிப் படலம்*

வேழங்களினின்றும் மகளிர் இறங்க அவை பிணிக்கப்படல்

898. கோவை யார்வடக் கொழுங்குவ
★ டொடிதர நிவந்த
ஆவி வேட்டன வரிசிலை
யனங்கன்மேற் கொண்ட
பூவை வாய்ச்சியர் முலைசிலர்
புயத்தொடும் பூட்டத்
தேவ தாரத்துஞ் சந்தினும்
பூட்டின சிலமா.

கோவை ஆர் வட, கொழும் குவடு ஒடிதர, நிவந்த, ஆவி வேட்டன, வரி சிலை அனங்கன் மேல் கொண்ட, பூவை வாய்ச்சியர் முலை, சிலர் புயத்தொடும் பூட்ட, தேவதாரத்தும் சந்தினும் பூட்டின சில மா.

பொ:—பூவை என்ற புள்ளின் (குரல் போலத்) தீஞ்சொற்கள் பேசும் மகளிரின்—முத்து முதலிய மணிவடங்களை அணிந்தனவும் வடதிசையிலுள்ள கொழுத்த மேருமலையும் தோற்கும்படி எழுச்சி பெற்றனவும், (காதலரான) ஆடவரின் உயிர்களைக் கொள்ளை கொள்ள விரும்பியனவும், காமனது கட்டமைந்த கருப்புவில்மேல் எழுதப்பெற்றனவும் ஆகிய—கொங்கைகள் ஆடவர் சிலரின் புயங்களிற் பூட்டி நிற்க, (சந்திர சயிலத்திலுள்ள) தேவதாரு மரத்தினும் சந்தன மரத்தினும் பூட்டப்பெற்றன சில யானைகள்.

கு:—யானைகளின்மேல் ஏறி வந்த மகளிரை ஆடவர் சிலர் தம் புயங்களில் தாங்கியபடி கீழேயிறக்க அவ்யானைகள் மலையிலுள்ள மரங்களிற் கட்டப்பெற்றன என்பது கருத்து.

இதனில், மகளிரின் கொங்கைகளை யானைகள் போலவும் அவை பெரிய மரங்களிற் கட்டப்பெற்றபோது, ஆடவர் தம் புயங்களில் அக் கொங்கைகளுடன் தாங்கி யிறக்கியதன்மை, அவ்

* இது 'வரைகாண் படலம்' (33) எனவும், 'சந்திரசைலப் படலம்' (5, 12, 13, 16—18, 20—22, 24, 28, 35, 40, 41) எனவும் காணப்படுகின்றது. இப் படல முடிவில் 'சந்திரவிசாலப் படலம் முற்றும்' என்று 22-ஆம் பிரதியில் வரையப்பட்டுளது.

வாடவர் புயங்களான கட்டுத்தறிகளில் கொங்கை யானைகள் பூட்டப்பட்டனபோலவும் இருந்தன என்று—சிலேடை நயம் பெற முன்னிரண்டடிகளிற் கூறப்படுகின்றது. அச்சிலேடையில் கொங்கைக்குரிய அடைமொழிப் பொருள்கள் மேலே கூறப் பட்டன. இனி யானைக்கும் சிலேடை வகையாக அவ்வடைகள் பொருந்துமாறு அமைந்துள்ளன.

வான் அளாவிய ஆலமரத்தின் செழித்த கிளைகள் முறியும்படி எழுச்சி பெற்று: நின்றனவும் நீர்வேட்கையால் பொய்கை களை அவாவி நின்றனவும், கட்டமைந்த வில்லையுடைய காமன் போன்ற ஆடவரைத் தம் மேலிடமாகக் கொண்டனவும் என்பது. கோவை—முத்து முதலிய மணிவடங்கள், ஆகாயத்தை எனவும், வடம்—மாலை, ஆல்மரம் எனவும் வரிசிலை அனங்கன்—காமனது கட்டமைந்த வில்லாகிய தொய்யிலை, கட்டமைந்த காமன்போன்ற ஆடவரை எனவும் பொருள் கொள்க.

கொங்கைகளில் தொய்யிலாகக் கரும்பு வில்லை எழுதல் மரபு. (கலித். நெய்தல், 25 உரை). (மூலை) புயத்தொடும்பூட்ட— (கொங்கை) புயங்களாகிய கட்டுத்தறிகளுடன் இணைய என்ற வாறு. தேவதாரு சந்தன மரங்கள், அணைத்த ஆடவரின் இரு புயங்கட்கும் உவமை. அம்மரங்களிற் கட்டப்பெற்று அவற்றின் தழை குழைகளை நுகர்ந்து யானைகள் இன்புறுமாறே, புயங்களில் இணைந்து கொங்கைகள் இன்புறலாயின என்பது குறிப்பு. வரிசிலையனங்கன்—அனங்கனது வரிசிலை என மாறுக; பின் முன்னாகத் தொக்க ஆறும் வேற்றுமைத் தொகை. (குறள்—476) பூவைவாய்ச்சியர்—பூவை போன்ற சொல்லினிமையுடையவர். குவடு- திரட்சி (பிங்) ஆகுபெயரால் இங்கு அடிமரத்தை யுணர்த் திற்று. (1)

## மதக்களிற்றின் செயல்

899. நேரொ டுங்கலிற் பகையினை
நீதியால் வெல்லும்
சோர்வி டம்பெறு வுணர்வினன்
சூழ்ச்சியே போலக்
காரொ டுந்தொடர் கவட்டெழின்
மராமரக் குவட்டை
வேரொ டுங்கொடு கிரியென
நடந்ததோர் வேழம்.

நேர் ஒடுங்கலில் பகையினை நீதியால் வெல்லும்
சோர்வு இடம்பெறு உணர்வினன் சூழ்ச்சியே போலக்,
காரொடும் தொடர் கவட்டு எழில் மராமரக் குவட்டை
வேரொடும் கொடு கிரி என நடந்தது ஓர் வேழம்.

பொ:—(பகைவேந்தன்) முன்பு தான் (அகப்பட்டு) ஒடுங்க நேர்ந்தமையால், அப்பகைவனை உபாய நெறியொன்றால் வெல்லும் மனத்தளர்ச்சியற்ற பேருணர்வினனான அரசனது தந்திரச்செயல்போல, மேக மண்டலத்தை அளாவி நிற்கும் கிளைகள் கொண்ட அழகிய மராமரத்தின் திரண்ட அடிமரத்தை வேரொடும் பறித்துக் கொண்டு மலைபோல நடந்து சென்றது ஓர் யானை.

கு:—கட்டிய மராமரத்தினின்று தன்னை விடுவிக்க எண்ணிய வேழமொன்று, தன் சூழ்ச்சித்திறனால் அப்பெரு மர முழுதையுமே வேரொடு சாய்த்து இழுத்துச் சென்றதென்றும், இது தன்னைப் போரில் அகப்படுத்திய பகையரசனிடமிருந்து விடுவிக்கவேண்டி உபாய நெறியொன்றைக் கையாண்ட தளரா ஊக்கமுடையானது செயல் போலும் என்றும் உவமை நயம்பெறக் கூறப்படுதல் காண்க.

இது, ''பிறர் பிணியகத்திருந்து...நுண்ணிதின் உணர நாடி... உருகெழுதாயம் ஊழின் எய்திய'' கரிகாற் பெருவளத்தானும், மாந்தரஞ்சேரலிரும்பொறையும் போன்றார் அருஞ்செயல்களை உட்கொண்டு கூறியதாகும். அவ்விருவர்க்கும் யானைகளை உவமித்து, அவை பிறர் அகப்படுத்திய குழிகள் தூரக் குத்தி மிதித்து நிரப்பித் தம்மினஞ் சேர்ந்தவாற்றைக் குறிப்பிட்டிருத்தல் இங்கு அறியத்தக்கது. (பட்டினப்பாலை, 222-5; புறநானூறு, 17).
(2)

## மதவேழம் கண்ணனை நிகர்த்தல்

**900.** திரண்ட தாணெடுஞ் செறிபணை
மருதிடை யொடியப்
புரண்டு பின்வரு முரலொடு
போனவன் போல
உருண்டு காரொடர் பிறகிடு
தறியொடு மொருங்கே
இரண்டு மாமர மிடையிற
நடந்ததோ ரியானை.

திரண்ட தாள் நெடுஞ் செறி பணை மருது இடை ஒடியப்
புரண்டு பின் வரும் உரலொடு போனவன் போல,
உருண்டு கால் தொடர் பிறகிடு தறியொடும் ஒருங்கே
இரண்டு மாமரம் இடை இற நடந்தது ஓர் யானை.

போ:—திரண்ட அடிப்பகுதியையும் நீண்டுசெறிந்த கிளைகளையு முடைய இரட்டை மருத மரங்கள் நடுவில் முறிந்து விழும்படி, புரண்டுகொண்டு தன் பின்னே வருகின்ற உரலுடன் அம்மரங் களினிடையே தவழ்ந்து சென்ற கண்ணபிரானைப்போல, ஒரு யானையானது, உருண்ட வண்ணம் தன் பின்னங்கால்களைத் தொடர்ந்து வரும் கட்டுத்தறியோடும் இரண்டு மாமரங்களின் இடையே அவை ஒரு சேர முறிந்து விழும்படி நடந்துசென்றது.

கு:—'மத்துறு தயிர் வெண்ணெய் களவினில்' தாயான யசோதையாரால் உரலிற் கட்டப்பெற்ற கண்ணபிரான் அவ்வுர லோடு அருகிலிருந்த இரட்டை மருத மரங்களிடையே செல்ல அம்மரங்கள் முறிந்து வீழ்ந்தன என்பது சரிதம். இதனை இரட்டை மாமரங்களிடையே தன் கட்டுத்தறியுடன் அம்மரங்கள் முறிந்து விழும்படி நடந்து சென்ற யானைக்கு உவமித்தார். 'எழில் யானை, மல்லரை மறஞ்சாய்த்த மால் போல்.........கலந்தியலும் நாட' என்று, இவ்வாறே, வேறு நிகழ்ச்சி யொன்றற்கும் அப்பிரானை யானையுடன் உவமித் திருத்தல் காண்க. (கலித்-52. வரி 5-6) (3)

## ஒரு வேழம் மந்திரிக்கடங்கா மன்னனை நிகர்த்தல்

901. கதங்கொள் சீற்றத்தை யாற்றுவா
னினியன கழறிப்
பதங்கொள் பாகனு மந்திரி
யொத்தனன் பன்னூல்
விதங்க ளாலவன் மெல்லென
மெல்லென விளம்பும்
இதங்கள் கொள்கிலா விறைவனை
யொத்ததோ ரியானை,

**கதம் கொள் சீற்றத்தை ஆற்றுவான் இனியன கழறிப்**
**பதம் கொள் பாகனும் மந்திரி ஒத்தனன்; பல்நூல்**
**விதங்களால் அவன் மெல்லென மெல்லென விளம்பும்**
**இதங்கள் கொள்கிலா இறைவனை ஒத்தது ஓர் யானை.**

பொ :—(ஒரு யானை) கறுவைத்தற்குக் காரணமான அதன் பெருஞ்சினத்தைத் தணிக்கவேண்டி, இனிமையான வார்த்தைகளைக் கூறி, (பக்குவமாக அதனை) வசப்படுத்த முயலும் பாகனும், (மாறான வழியிற் செல்லும் தன் அரசனை வசப்படுத்த முயலும்) மந்திரியை ஒத்திருந்தான்; (ஆனால் அதனை ஏற்காது வெறி கொண்ட அவ் யானை) பல நூலறிவின் முறைக்கு ஏற்ப அந்த மந்திரி (மன்னன் மனங்கொள்ளும்படி) மெல்ல மெல்லச் சொல்லுகின்ற நன்மைபயக்குஞ் சொற்களைச் செவிகொடுத்துக் கேட்காத அரசனை ஒப்ப (அடங்காதது) ஆயிற்று.

கு :—' மதக்களிறு வலியாக், கதந்தலையுறியக் கந்தோடார்த்து, சாமகீத ஓசையிற்றணிக்கும் நூலறிபாகரொடு' என்றார் பிறரும். (பெருங். 1. 44, 61-4) இராவணன் சச்சந்தன் போன்றார் வரலாறுகள் இங்கு ஒப்பிடத்தக்கன. (4)

### ஓர் மதகளிற்றின் செயல்

**902.** மாறு காண்கில தாய்நின்று
மழையென முழங்கும்
தாறு பாய்கரி வனகரி
தண்டத்தைத் தடவிப்
பாறு பின்செலக் காலெனச்
செல்வது பண்டோர்
ஆறு போகிய வாறுபோ
மாறுபோன் றதுவே.

மாறு காண்கிலதாய் நின்று, மழை என முழங்கும்,
தாறு பாய் கரி வன கரி தண்டத்தைத் தடவிப்,
பாறு பின் செலக் கால் எனச் செல்வது, பண்டு ஓர்
ஆறு போகிய ஆறு போம் ஆறு போன்றதுவே.

பொ :—(தனக்கு) ஒரு பகையைக் காணப்பெறாமலிருப்பதனால் மேகம்போல இடித்தொலிக்கின்றதும் (அது பற்றிப் பாகனது) இருப்பு முட்கோலால் குத்தப்பெற்றதுமான (சேனையைச் சார்ந்த) ஓர் யானை, காட்டு யானைகள் சென்ற ஒரு வழியைப் பின் பற்றிப் பருந்துகள் பின் தொடர்ந்துவரக் காற்றைப்போல விரைந்து செல்வது, முன்பு நதி சென்ற வழியே செல்லும் மற்றோர் ஆற்றை ஒத்தது.

கு :—தனக்கு ஒரு பகையைக் காணப் பெருமையால், காட்டானைகள் கூட்டமாகச் செல்லும் பெருவழியில் அவற்றின் மோப்பத்தையுணர்ந்த (சேனை) வேழமொன்று, அவை பகையினம் என்று கருதிப் பாகற்கும் அடங்காமல் மதங்கொண்டு அவ்யானைக் கூட்டம் சென்ற வழியே தனிவழியை யுண்டாக்கிக்கொண்டு விரைந்து சென்றதென்றும், அச்செயல், பழமையான பெருநதி செல்லும் வழியை நாடியவண்ணம் மற்றோர் சிற்றாறு பெருக்கெடுத்துச்செல்வது போன்றுளதென்றும் கூறினர்.

தண்டம்-யானை செல்வழி. தடவி - ஆராய்ந்து கண்டு, 'பாறு பின்செல' என்றது, சேனையான யானையின் வேகத்தாற் பறவைகள் சிதறுண்ணுதலாலும், எதிர்ந்த பிராணிகளைக் கொன்று செல்வதனுல் அவற்றின் இறைச்சி வேட்கையாலும் என்க. (5)

ஏழிலைப்பாலைமரத்தை ஒரு யானை அழித்தல்

**903.** பாத்த யானையின் பதங்களிற்
படுமத நாறக்
காத்த வங்குச நிமிர்ந்திடக்
கால்பிடித் தோடிப்
பூத்த வேழிலைப் பாலையைப்
பொடிப்பொடி யாகக்
காத்தி ரங்களாற் றலத்தொடுந்
தேய்த்ததோர் களிறு.

பாத்த யானையின் பதங்களில், படு மதம் நாறக்,
காத்த அங்குசம் நிமிர்ந்திடக், கால் பிடித்து ஓடிப்,
பூத்த ஏழிலைப்பாலையைப் பொடிப் பொடி யாகக்
காத்திரங்களால் தலத்தொடும் தேய்த்தது ஓர் களிறு.

பொ :—(அணி அணியாகப்) பகுக்கப்பட்ட யானை உள்ள இடங்களில் தோற்றும் மதநீரினது மணம் போன்று (ஏழிலைப் பாலையிலிருந்து) நாற்றம் வீசியதனல், (அதனைத் தாங்கமாட்டாத) ஒரு யானை, (தன்னைத்) தடுக்கின்ற பாகன் கையங்குசமானது நிமிர்ந்து விடும்படி அந்த நாற்றம் வந்த வழியே பற்றிக்கொண்டு ஓடிப்போய், அம்மணம் வீசுதற்குக் காரணமான, பூக்கள் பூத்த ஏழிலைப்பாலை மரத்தைச் சிறுசிறு தூள்களாகும்படி தன்முன்னங் கால்களால் தரையோடு தேய்த்துவிட்டது.

கு :—மோப்பத்தால் வேறு மதமணம் வீசுவதறிந்த யானை யொன்று அம் மணத்தை வீசிய ஏழிலைப் பாலை மரத்தை யானை யென வெறியால் மயங்கிச் சினங்கொண்டு அதனைப் பொடிபடக் காலால் தேய்த்தது என்பதாம். ஏழிலைப் பாலை - ஏழு நிரையாக அடுக்கிய நீண்ட இலைகளையுடைய பாலை என்பர் பரிமேலழகர். (பரிபா - 21-13) 'சப்தபர்ணி' என்பது வடமொழி வழக்கு. இதன் பூ, யானையின் மதநாற்றமுடையதாம். காத்திரம் - யானை யின் முன்னங்கால். (6)

## மலை யூதத் தலைவனை ஒத்தல்

904. அலகில் யானைக ளனேகமு
மவற்றிடை மிடைந்த
திலக வாணுதற் பிடிகளுங்
குருளையுஞ் செறிந்த
உலவை நீள்வனத் தூதமே
யொத்தவவ் வூதத்
தலைவ னேயொத்துப் பொலிந்தது
சந்திர சயிலம்.

அலகு இல் யானைகள் அனேகமும், அவற்றிடை மிடைந்த திலக வாள் நுதல் பிடிகளும், குருளையும், செறிந்த உலவை நீள் வனத்து, ஊதமே ஒத்த: அவ் ஊதத் தலைவனே ஒத்துப் பொலிந்தது சந்திரசயிலம்.

பொ :—(உருவம் வலிமைகளை) அளவிட முடியாத ஆண் யானைகள் பலவும் அவற்றினிடையே நெருங்கியுள்ளனவும் சிந்துரத் திலகம் தீட்டிய ஒள்ளிய நெற்றியுடையனவுமான பெண் யானைகளும் யானைக்கன்றுகளும், செறிந்த மரங்களுடைய அந்த நீண்ட வனத்திலே வாழும் காட்டு யானைகளின் கூட்டத்தை ஒத்திருந்தன; (அவற்றையடுத்து விளங்கிய) சந்திர சயிலமானது அவ் யானைக் கூட்டத்தின் தலைவனை ஒத்து விளங்கியது.

கு :—உலவை=மரச்செறிவு (பிங்கலந்தை) யூதம் - காட்டி யானைகளின் கூட்டம். யூதத்தலைவன் - தலைமை வகித்து அவற்றை நடத்திக்கொண்டு முன்செல்லும் பேரியானை; இதனை 'யூதபதி' என்பர். சேனையிலுள்ள யானைகள் சந்திரசைலத்தருகில் இருந்த தோற்றம், யூதமும் யூதபதியும் போன்றிருந்தது என்பது கருத்து. காட்டியானைகள் கூடிக்கொண்டு தம் யூதபதியான பேரியானை

யில்லாமல் வெளியே இயங்கா வாதலாலும் சேனை யானைகட்கு அத்தகைய தலைவன் இல்லாமையாலும் பெரிதாகத் தோற்றும் சந்திரசயிலத்தை யூதபதியாகச் சிறப்பித்தார். இதனால்,அம்மலைப் பக்கத்திருந்த சேனையானைகள் பெரியமலையை யடுத்த சிறு சிறு குன்றுகள் போலிருந்தன என்பது குறிக்கப்பட்டதாயிற்று. (7)

## தேரின் வருணனை

**905.** தெருண்ட மேலவர் சிறியவர்ச்
சேரினு மவர்தம்
மருண்ட தன்மையை மாற்றுவ
ரெனுமிது வழக்கே
உருண்ட வாய்தொறும் பொன்னுரு
ளுரைத்துரைத் தோடி
இருண்ட கல்லையுந் தந்நிற
மாக்கிய விரதம்.

தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினும் அவர்தம்
மருண்ட தன்மையை மாற்றுவர் எனும் இது வழக்கே!
உருண்ட வாய் தொறும் பொன் உருள் உரைத்து உரைத்து ஓடி,
இருண்ட கல்லையும் தம் நிறம் ஆக்கிய இரதம்.

பொ :—தெளிந்த அறிவுடைய பெரியோர், சிறியவர்களைச் சேர்ந்திருந்தாலும் அறிவுத் தெளிவில்லாமல் மருட்சியுற்ற அவர்களின் தன்மையை மாற்றுவர் என்ற சொல் உலகியல்பானதே யாகும். (என்னெனில்) இரதங்கள், பொன்னாலியன்ற சக்கரங்கள் உருண்டு சென்ற இடந்தோறும் தம் பொன்னை உரைத்துக் கொண்டே ஓடிச் செல்வதனால், கருநிறம் பொருந்திய பாறைக் கற்களையும் தம் பொன்னிறமுடையவாகவே செய்யலாயின.

கு :—இது வேற்றுப்பொருள்வைப்பணி. சேரினும் என்ற உம்மை அவர் சேரார் என்பது குறிக்கும். (8)

## மகளிரின் சிவந்த வாய்கள்

**906.** கொவ்வை நோக்கிய வாய்களை
யிந்திர கோபம்
கவ்வி நோக்கின வென்றுகொல்
காட்டின மயில்கள்

நவ்வி நோக்கியர் நலங்கொண்மே
கலைபொலஞ் சாயற்
செவ்வி நோக்கின திரிவன
போல்வன திரிந்த.

கொவ்வை நோக்கிய வாய்களை இந்திரகோபம்
கவ்வி நோக்கின என்று கொல்! காட்டு இனமயில்கள்,
நவ்வி நோக்கியர் நலம் கொள் மேகலை பொலம் சாயல்
செவ்வி நோக்கின, திரிவன போல்வன திரிந்த.

பொ :—காட்டில் வாழும் மயிலினங்கள் மான்போன்ற விழியினரான மகளிரது கோவைப்பழம்போலும் வாய்களை இந்திரகோபங்கள் கவ்வியவண்ணம் தம்மைப் பார்க்கின்றன என்று கருதியதனாற் போலும், அழகிய மேகலாபரணத்தை யணிந்த அம்மகளிரின் சிறந்த சாயலழகை நோக்கித் திரிவனபோல (பாசாங்கு செய்து) திரிவனவாயின.

கு :—மகளிரின் அதரங்கட்கு உவமையான இந்திரகோபம் தமக்கு உணவாகக் கூடியதாதலின் அவரதரங்களை அக்கோபங்கள் அடைக்கலம்புக்குப் பற்றி நிற்பனவாகக் கருதி, அவற்றையுண்ணவும் வகையின்றி மகளிரின் சாயலிலீடுபட்டுத் திரிவனபோலத் திரியலாயின என்க.

இந்திரகோபம் - மழைக்காலத்து மணற்பாங்கான இடங்களில் தோன்றும் செம்பட்டுப்பூச்சி. இது மகளிரின் அதரத்துக்கு உவமை. (9)

மகளிர் மரநிழலில் தங்குதல்

**907.** உய்க்கும் வாசிக ளிழிந்திள
வன்னத்தி ஞெதுங்கி
மெய்க்க லாபமுங் குழைகளு
மிழைகளும் விளங்கத்
தொக்க மென்மர நிழல்படத்
துவன்றிய சூழல்
புக்க மங்கையர் பூத்தகொம்
பாமெனப் பொலிந்தார்.

உய்க்கும் வாசிகள் இழிந்து, இள அன்னத்தின் ஒதுங்கி,
மெய்க் கலாபமும் குழைகளும் இழைகளும் விளங்கத்,
தொக்க மெல் மர நிழல்படத் துவன்றிய சூழல்
புக்க மங்கையர், பூத்த கொம்பு ஆம் எனப் பொலிந்தார்.

பொ :—செலுத்திய குதிரைகளினின்றும் இறங்கி, இள அன்னங்கள்போல மெல்ல நடந்து, செறிந்த இள மரங்களின் நிழல் அமைந்த பொழிலிடமாகப் போய்ச் சேர்ந்த மகளிர் தம் மேனிகளில் இடையணிகளும் காதணிகளும் ஏனை அணிகலன்களும் விளங்குவதனால் (மலர்கள் நிறையப்) பூத்துள்ள கொம்புகள் என்னும்படி திகழலானார்கள்.

கு :—இளமரமாதலின் அதன்கீழ் நின்ற மகளிர் அணிந்த அணிகலன்களின் பொலிவால், அம் மரத்தின் கீழே படியும் பூத்த கொம்பு போலத் தோன்றினர் என்க. கலாபம் - பதினறுகோவையுள்ள அரையணி. (10)

மகளிர் பளிக்குப் பாறையில் உறங்குதல்

908. தளங்கொ டாமரை யெனத்தளி
ரடியினு முகத்தும்
வளங்கொண் மாலேவண் டலமர
வழிவருந் தினராய்
விளங்கு தம்முருப் பளிங்கிடை
வெளிப்பட வேருேர்
துளங்கு பாறையிற் ருேழிய
ரயிர்த்திடத் துயின்ருர்.

தளம் கொள் தாமரை எனத் தளிர் அடியினும் முகத்தும்
வளம் கொள் மாலேவண்டு அலமர, வழி வருந்தினராய்,
விளங்கு தம் உருப் பளிங்குஇடை வெளிப்பட, வேறு ஓர்
துளங்கு பாறையில், தோழியர் அயிர்த்திடத், துயின்ருர்.

பொ :—(பொழில்புக்க அம்மங்கையர்) வழிவந்த சோர்வால் வருந்தினராய்ச் செழித்த வண்டினங்கள் இதழுள்ள தாமரை மலர் என்று கருதி, தளிர்போலும் அடியிலும் முகத்திலும் சுழன்று கொண்டிருக்க ஒளிர்கின்ற அவருருவம் வேறு பளிக்குப் பாறையொன்றில் வெளிப்படுதலால், தோழியர் அதனைத் தம் தலைவியின்

உருவமோ என்று ஐயுறும்படி வேறூர் விளக்கமுற்ற பளிங்குப் பாறைமேல் படுத்து உறங்கினர்.

கு :—தோழியர் காண்கின்ற பளிங்கினும் மகளிர் துயின்ற பளிங்குப்பாறை வேறுதலின் 'வேறூர் பாறை' எனப்பட்டது. தம் தலைவியரைத் தேடிவந்த தோழியர் அவர் உறங்குமிடங் காணமுடியாதவாறு, பளிங்குப் பாறைகள் மயக்கின என்றபடி. (11)

## மகளிர் குடில்களிற் புகுதல்

**909.** பிடிபுக் காயிடை மின்னொடும்
பிறங்கிய மேகம்
படிபுக் காலெனப் படிதரப்
பரிபுரம் புலம்பத்
துடிபுக் காயிடைத் திருமக
டாமரை துறந்து
குடிபுக் காலெனக் குடில்புக்கார்
கொடியன்ன மடவார்.

பிடிபுக்கு, ஆயிடை, மின்னொடும் பிறங்கிய மேகம்
படி புக்காலெனப் படிதரப், பரிபுரம் புலம்பத்,
துடிபுக்கு ஆ இடைத் திருமகள் தாமரை துறந்து
குடிபுக்கால் எனக், குடில் புக்கார் கொடி அன்ன மடவார்.

பொ:—மின்னலொடு விளங்கிய மேகங்கள் நிலத்திற்புகுந்தவை போலப் பிடிகள் அந்தச் சயிலத்தருகே பூமியிற் படிந்து நிற்க, பூங்கொடி போன்ற மகளிர் பாதச் சிலம்புகள் ஒலிக்கவும் அடிகள் துடித்தல் கொள்ளவும் அவற்றினின்றும் இறங்கி, அவ்விடத்தி னின்றும் இலக்குமிதேவி தாமரை மலரை விட்டுக் குடிபுகுந்தாற் போல (நடந்து), தத்தமக்கமைந்த, விடுதிகளிற் குடிபுகுந்தார்கள்.

கு :—மகளிரைத் தாங்கிய பிடிகட்கு மின்னல் விளங்கும் மேகம் உவமை. மகளிர் ஏறிச் செல்வது பெண்யானையே யாத லின் 'பிடிபுக்கு' என்றார். அவர்கள் கீழிறங்க வேண்டிப்பிடிகள் பூமியிற் படிந்து நின்றமையின் 'படிபுக்காலெனப் படிதர' எனப் பட்டது. புலம்ப, (துடி) புக்கு என்ற வினை யெச்சங்கள், குடில் புக்கார் என்பதனோடு இயையும். துடி - முதனிலைத் தொழிற் பெயர் ; துடித்தல்கொண்டு என்றபடி. இளம் பூங்கொடிபோன்ற

வராதலின், இறங்குங்கால் மகளிர் பாதங்கள் துடித்தல் புக்கன என்க. 'கடவாரணத்திலும் கங்காசலத்திலும் கமலாசனந்தன்னி லும்......திருமாது மாறுதிருப்பள்' (குமரேச சதகம்-35) என்ப ராதலின், அத் திருவனைய மங்கையர் யானையினின்று இறங்கி வேற்றிடஞ் சென்றதற்கு, தாமரை மலர் நீங்கிய திருமகள் ஏற் புடைய உவமையாதல் காண்க. இனி, 'துடிபுக்கா இடைத் திருமகள்' என்பது பாடமாயின் - துடி உவமையாகாத இடை யுடைய திருமகள் என்க. ஈண்டுப் புகா என்பது புக்கா என இடையொற்று மிக்கதாம். (12)

## குதிரைகளைக் கூடத்திற் கட்டுதல்

910. உண்ணமுத மூட்டியிளை
★ யோர்நகர் கொணர்ந்த
துண்ணெனு முழக்கின
துருக்கர்தர வந்த
மண்மகடன் மார்பினணி
வன்னசர மென்னப்
பண்ணியல் வயப்பரிகள்
பந்தியி னிரைத்தார்.

உண் அமுதம் ஊட்டி இளையோர் நகர் கொணர்ந்த,
துண் எனும் முழக்கின, துருக்கர் தர வந்த,
மண்மகள் தன் மார்பின் அணி வன்ன சரம் என்னப்
பண் இயல் வயப் பரிகள், பந்தியின் நிரைத்தார்.

பொ :—உண்டற்குரிய இனியவுணவை வாயினுள் ஊட்டி இளைஞர்களால் நகரிற் கொணரப்பட்டனவும், திடுக்கிடக்கூடிய கனைப்பொலியுடையனவும் துருக்கர் தர வந்தனவுமான அலங் காரம் அமைந்த வலிய குதிரைகளை, பூமகளின் மார்பிலணிந்த பல நிறமுள்ள நவமணிமாலைபோல, குதிரைக் கூடத்தில் ஒழுங்குறக் கட்டினார்கள்.

கு :—துருக்கர் - சோனகர் (அரபு நாட்டவர்), இவர்கள் குதிரைகளைப் பிடித்துப் பழக்கி வளர்ப்பதும் அவற்றை வெளி நாடுகளில் விற்பதும் பெருவழக்கு. 'எனையோர் நகர்' என்ற பாடத்துக்கு எத்தனையோ வெளிநாட்டு நகரங்கள் என்பது பொருள். 'எத்துணையோர் பரிபாடலும்' (இறை - களவியல்

உரை) 'எத்தனையோர் போதுமாய்' (சிறிய திருமடல் 25) என்ற பழைய வழக்குப்போல எனையோர் நகர் எனப்பட்டது.) (13)

## சேனைகட்கு வேண்டுவன செய்யப்படுதல்

**911.** நீர்திரை நிரைத்தவென நீடிரை நிரைத்தார்
ஆர்கலி நிரைத்தவென வாவண நிரைத்தார்
கார்நிரை யெனக்களிறு காவிடை நிரைத்தார்
மாருத நிரைத்தவென வாசிக ணிரைத்தார்.

நீர் திரை நிரைத்த என நீள் திரை நிரைத்தார் :
ஆர்கலி நிரைத்த என ஆவணம் நிரைத்தார் :
கார் நிரை எனக் களிறு கா இடை நிரைத்தார் ;
மாருதம் நிரைத்த என வாசிகள் நிரைத்தார்.

பொ :—கடனீரின் அலைகளை ஒழுங்காக அமைத்தாற்போல நீண்ட சுற்றுத் திரைகளை வரிசையாக அமைத்தார்கள். கடல்கள் ஒழுங்குற அமைக்கப்பட்டன போலக் கடைவீதிகளை நிரைத்தனர். மேகங்களின் இனங்கள் என்னும்படி யானையினத்தைப் பொழிலிடத்தே நிரைத்தனர். காற்றுக்களையே ஒழுங்காக நிறுவினாற் போலக் குதிரைகளை வரிசையாகக் கட்டினர்.

கு :—நீள் திரை - பாடியைச் சூழவும் படமாடங்களைச் சூழவும் கட்டிய நீண்ட சீலைத்திரை. தனித்தனி தங்கியிருப்பதற்குப் படமாடங்கள் கட்டப்படுதலும் வேண்டிய பண்டங்களை வாங்குவதற்குக் கடைவீதிகள் அமைத்தலும் ஆகிய அவ்விரண்டும் சேனைகட்கு இன்றியமையாதன என்க. (14)

## அரசமாளிகையை அறிந்து சேர்தல்

**912.** நடிக்குமயி லென்னவரு
நவ்விவிழி யாரும்
வடிக்குமயில் வீரரு
மயங்கினர் திரிந்தார்
இடிக்குமுர சக்குரலி
னெங்குமுரல் சங்கின்
கொடிக்களி னுணர்ந்தரசர்
கோநக ரடைந்தார்.

நடிக்கும் மயில் என்ன வரும் நவ்வி விழியாரும்,
வடிக்கும் அயில் வீரரும், மயங்கினர் திரிந்தார்;
இடிக்கும் முரசக் குரலின், எங்கும் முரல் சங்கின்,
கொடிக்களின், உணர்ந்து, அரசர் கோநகர் அடைந்தார்.

பொ :—ஆடுகின்ற மயிலைப்போல வரும் மான்விழி மங்கைமாரும், வடித்துக் கூராக்கிய வேற்படை யேந்திய வீரரும் மயங்கிய வண்ணம் திரியலாயினர். ஒலிக்கின்ற மங்கல முரசுகளின் முழக்காலும் எங்கணும் ஒலியெழும் சங்கநாதங்களாலும் கொடிகளாலும் (அடையாளங் கண்டு) சக்கரவர்த்தி தங்கிய அரச மாளிகையை அடையலானார்.

கு :—படமாடங்கள் பலவும் ஒரு தன்மையில் அமைந்திருந்ததனால் வேற்றுமை தெரியாமல் மயங்கி, முரசு சங்கு கொடிகளால் அரசன் தங்கிய மாடம் இஃதென்று அறியலாயினர் என்பதாம். ஒவ்வொரு படமாடமும் அரசமாளிகை போன்றிருந்தது என்றபடி. (15)

## தூசியைத் துடைத்தல்

913. மிதிக்கநிமிர் தூளியின்
விளக்கமறு மெய்யைச்
சுதைக்கணுரை யைப்பொருவு
தூசுகொடு தூய்தாய்
உதிர்த்தன ரிளங்குமர
ரோவியரி னோவம்
புதுக்கின ரெனத்தருண
மங்கையர் பொலிந்தார்.

மிதிக்க நிமிர் தூளியின் விளக்கம் அறும் மெய்யைச்,
சுதைக்கண் நுரையைப் பொருவும் தூசுகொடு தூய்துஆய்
உதிர்த்தனர் இளங்குமரர் : ஓவியரின் ஓவம்
புதுக்கினர் எனத் தருண மங்கையர் பொலிந்தார்.

பொ :—யானை முதலியவை மிதித்துச் செல்வதினின்று மேலெழுந்த தூளியால் விளக்கமற்று அழகு மழுங்கிய மனைவியரின் மேனியை, அவர் கணவரான இளங்குமரர்கள், பாலின் நுரையை ஒத்த ஆடையைக் கொண்டு சுத்தமாகப் (படிந்த தூசி

யைத் துடைத்துப்) போக்கினர்; அதனுல் இளமையுடைய அம் மங்கைமார், சித்திரகாரரின் இனிய ஓவியத்தை (மாசுதீரப்) புதுப்பித்தார் என்னும்படி திகழ்ந்தார்கள். (16)

### அரசர்கள் படமாடஞ் சேர்தல்

914. தாளுயர் தடக்கிரி யிழிந்துதரை சேருங்
கோளரியெ னக்கரிகள் கொற்றவ ரிழிந்தார்
பாலைவிரி யொத்துலவு சாமரை படப்போய்
வாளெழ நிரைத்தபட மாடமவை புக்கார்.

தாள் உயர் தடக் கிரி இழிந்து தரை சேரும்
கோளரி எனக், கரிகள் கொற்றவர் இழிந்தார்,
பாலை விரி ஒத்து உலவு சாமரை படப் போய்,
வாள்எழ நிரைத்த பட மாடம் அவை புக்கார்.

பொ:—வெற்றியுடைய அரசர்கள் தாழ்வரை உயர்ந்துள்ள பெருமலையினின்றும் இறங்கி நிலத்தைச் சேரும் வலிய சிங்கத்தைப்போல யானைகளினின்றும் கீழிறங்கியவராய், விரிந்த தம் இருபுயத்தருகிலும் விரிபாலையை ஒத்துச் சாமரைகள் வீசும்படி சென்று, ஒளியெழ ஒழுங்காக நிரைத்த கூடாரங்களில் தங்கினர்.

கு:—மலை, யானைக்கும் கொற்றவர் சிங்கத்துக்கும் படமாடம் மலையடிவாரத்தமைந்த குகைக்கும் உவமைகள். (17)

### படமாடத்தில் மங்கையர் முகங்களின் காட்சி

915. தூசிநெடு வெண்பட
முடைக்குடில்க டோறும்
வாசமலர் மங்கையர்
முகங்கண் மழைவானின்
மாசின்மதி யின்கதிர்
வழங்குநிழ லெங்கும்
வீசுதிரை வெண்புனல்
விழுங்கியது போலும்.

தூசினெடு வெண் படம் உடைக் குடில்கள் தோறும்,
வாச மலர் மங்கையர் முகங்கள், மழை வானின்
மாசு இல் மதியின் கதிர் வழங்கு நிழல் எங்கும்
வீசு திரை வெண் புனல் விழுங்கியது போலும்.

பொ :—வெண்மையான நீண்ட துகில்களாகிய படமாடங்கள் தோறும் தோன்றும் மணமலரணிந்த மகளிர் முகங்கள், மேகந் தங்கும் வானிலுள்ள மறுவற்ற சந்திரகிரணங்களின் சாயைகளை அலைவீசும் வெண்மையான நீரானது தன்னுட்கொண்டது போல்வதாகும்.

கு :—வெண்துகிலால் அமைந்த குடில்கடோறும் மகளிர் முகங்கள் பொலிதல் சந்திரனது பிரதிபிம்பங்கள் புனலில் தோன்றுவதை ஒத்தது என்பது கருத்து. (18)

### புழுதியாடிய யானையின் தோற்றம்

916. மண்ணுற விழுந்துநெடு
வானுற வெழுந்து
கண்ணுதல் பொருந்தவரு
கண்ணனில் வருங்கார்
உண்ணிற நறும்பொடியை
வீசியொரு பாகம்
வெண்ணிற நறும்பொடி
புனைந்தமத வேழம்.

மண் உற விழுந்து நெடு வான் உற எழுந்து,
கண்நுதல் பொருந்தவரு கண்ணனில் வரும்; கார்
உண்நிறம் நறும் பொடியை வீசி, ஒரு பாகம்
வெண்நிற நறும் பொடி புனைந்த மத வேழம்.

பொ :—பூமியில் புழுதிபடியும்படி விழுந்து மேலிடமாக நிமிர்ந்தெழுந்து, தன் கருநிறம், உண்ட மணங்கமழும் பொடியை ஒரு பக்கம் கையால் வீசிப் போக்கி (அவ்) வெண்ணிறமுள்ள நறும்பொடியை மற்றொரு பக்கம் மட்டும் கொண்டிருந்த யானை, சிவபிரான் தன்னிடம் பொருந்த வருகின்ற திருமாலைப் போல வரும்.

கு :—"சடைமுடியன் தனியொருகூ றமர்ந்துறையும் உடம்புடையான் (திருவாய். 4-8-10) 'வலத்தனன் திரிபுரமெரித்தவன்' (ஷி 1-3-9) என்பவற்றால் சிவபிரானைத் தன் வலப்பக்கத்தே உடையவன் திருமால் என்பது அறிக. மேனியிற்படிந்த பொடியை ஒரு பக்கம் நீக்கி ஓர்பால் மட்டும் அணிந்திருந்த யானை, சங்கர நாராயணத் திருக்கோலம் போலத் தோன்றியது என்பது கருத்து. கண்ணன் – திருமால். (19)

## புழுதியை உதறிவிட்ட குதிரைகள்

**917.** தீயவரொ டொன்றிய திறத்தரு நலத்தோர்
ஆயவரை யந்நிலை யறிந்தனர் துறந்தாங்
கேயவரு நுண்பொடி படிந்துட னெழுந்தொண்
பாய்பரி விரைந்துதறி நின்றன பரந்தே.

தீயவரொடு ஒன்றிய திறத்து அரு நலத்தோர்
ஆயவரை அந்நிலை அறிந்தனர் துறந்தாங்கு,
ஏய வரும் நுண் பொடி படிந்து உடன் எழுந்து ஒண்
பாய் பரி விரைந்து உதறிநின்றன பரந்தே,

பொ :—தீய குணத்தவரோடு ஆராயாது நட்புக்கொண்ட அரிய திறமையுடைய நல்லோர், அந்தத் தீயவரைத் தீச்செயல் புரிந்த அவ்வளவிலே அறிந்துகொண்டு கைவிட்டாற் போல, பாய்ந்தோடும் ஒள்ளிய குதிரைகள் தம் உடலிற் பொருந்த நுண்ணிய புழுதிகளிற் புரண்டு உடனே எழுந்து புழுதி படிந்ததற் கிரங்கி விரைந்து உதறிவிட்டுப் பரவிநின்றன.

கு :—வழிவந்த இளைப்பைப் போக்கவேண்டிக் குதிரைகள் புழுதிபடிந்த இடங்களிலே புரளுதலும், இளைப்பு நீங்கியதும், அவை, மேற்படிந்த புழுதிகளை உதறி எழுதலும் இயல்பு. இது தீய நட்பினத்தை நல்லோர் அறநீக்கி விடுதற்கு உவமை. (20)

## கட்டை யறுத்துச் சென்ற குதிரைகள்

**918.** மும்மைபுரி வன்கயிறு
கொய்துசெயன் மொய்ம்பால்
தம்மையு முணர்ந்துதரை
கண்டுவிரை கின்ற

அம்மையினெ டிம்மையை
யறிந்துநெறி செல்லும்
செம்மையவ ரென்னநனி
சென்றன துரங்கம்.

மும்மை புரி வன் கயிறு கொய்து, செயல் மொய்ம்பால்,
தம்மையும் உணர்ந்து, தரை கண்டு, விரைகின்ற
அம்மையினெடு இம்மையை அறிந்து நெறி செல்லும்,
செம்மையவர் என்ன, நனி சென்றன துரங்கம்.

பொ:—மூவகையாக அமைந்த பிணிப்புக்களையும் கழித்துக் கொண்டு, செயற்கரிய தவயோகங்களின் வலிமையால், தம் இயல்புகளை உணர்ந்து, (மேம்பட்ட நிலத்திலுள்ள) பரம்பொருளின் நிலையையும் கண்டு, இம்மை மறுமைகளின் தன்மைகளை அறிந்து வீட்டுநெறியே விரைந்து செல்லும் உத்தம யோகியரைப் போல, முப்புரியாக அமைந்த வலியகட்டுக் கயிற்றை விடுவித்துக் கொண்டு ஐங்கதிகளில் பழகிய தம்நிலைமையையுமறிந்து ஏற்றிழிவான நிலத்தினியல்புணர்ந்து இலக்கையடைய விரைகின்ற குதிரைகளும் மிக ஒழுங்காக (அங்கு) வருவனவாயின.

கு:—ஞானயோகியர் பரகதியடைதற்குரிய நெறியில் விரைந்து செல்லும் முறை போன்றிருந்தது குதிரைகளின் நேர்மையான செலவு என்றபடி. ஈண்டு உத்தம ஆன்மா அறிதற்குரிய ஐவகை நிலைகளும் கூறப்படுகின்றன. அவை—வினைத் தடையாகிய விரோதி நிலையும், அத்தடையை நீக்கும் உபாயநிலையும், அவ்வுபாயத்தை மேற்கொள்ளும் ஆன்மநிலையும், அது நாடும் பரமான்மநிலையும் முடிவிலடையும் வீடுபேறுமாம். வன்கயிறு என்பது வினைத்தடையையும், செயல் மொய்ம்பால் என்பது உபாயத்தையும், தம்மையும் உணர்ந்து என்பது ஆன்ம இயல்பையும், தரைகண்டு என்பது பரமான்ம இயல்பையும் நெறிசெல்லும் என்பது புருடார்த்தத்தையும் குறிக்கும். இவற்றை 'அர்த்த பஞ்சகம்' என்ப. இவற்றின் அறிவுகொண்டே தவயோகியரான பரமஞானியர் வீடுபெறுதற்குரியர் என்பது நூற்றுணிபு. குதிரையின் ஐங்கதி - ஞானிகளின் அர்த்த பஞ்சகம்.

மிக்க விறைநிலையு மெய்யா முயிர்நிலையுந்
தக்க நெறியுந் தடையாகித்—தொக்கியலும்
ஊழ்வினையும் வாழ்வினையு மோதுங் குருகையர் கோன்
யாழினிசை வேதத் தியல்.

(திருவாய்மொழித் தனியன்)

இனி, 'தரைகண்டு' என்பதனுள் 'தரை' என்பது ஆரு தாரங்கட்கும் மேல் நிலமான பிரமரந்திரத்தை. இது பரம் பொருள் தங்குந்தானமாகும், சடாதாரங்களும் பிரமரந்திரமும் நிலம்' என்றும் வழங்கப்பெறும். 'ஏழாம் நன்னிலங் கடந்த ஏகநாயகன்' என்றார் பின்னோரும் (கைவல்ய நவநீதம்). அந் நிலத்தைக் 'கண்டு' என்பது, அப்பிரமரந்திரத்திலுள்ள இறைவ னிலையை உணர்ந்து என்றபடி. இனி, வாசி என்பது குதிரைக் கும், யோகத்துக்கு அடிப்படையான பிராணாயாம உயிர்ப்புக்கும் பொதுப் பெயராதலின், அவ்வொப்புமை பற்றி 'நனிசென்றன துரங்கம்' எனப்பட்டது. குதிரைகட்குப் பஞ்சதாரைகளாகிய கதிவகை கூறப்படுதற்கு ஏற்ப, ஞானயோகியரான முமுட்சுக் களுக்கு அர்த்தபஞ்சக ஞானம் கூறப்பட்டிருத்தல் ஒப்பிடத் தக்கது. 'விரைகின்ற' என்ற பெயரெச்சம் 'செம்மையவர்' என்பதனுடன் இயையும். மும்மைபுரி வன்கயிறு - முப்புரியாக அமைந்த திண்ணிய கயிறு; ஆணவம் கன்மம் மாயை என்ற மும்மலங்கள் எனச் சிலேடைப் பொருள் காண்க. 'சென்றன'- வருவன; 'செல் விருந்தோம்பி' (குறள் 86) என்பதைப் போல. (21)

### திரைகளினிடையே மகளிர் கண்கள் பிறழ்தல்

919. விழுந்தபனி யன்னதிரை
வீசுபுரை தோறுங்
கழுங்குபயின் மங்கையர்
கருங்கண்மிளிர் கின்ற
தழுங்குகழி சிந்திய
தரம்பயி றரங்கத்
தெழுந்திடை பிறழ்ந்தொளிர்
கொழுங்கயல்க ளென்ன.

**விழுந்த பனி அன்ன திரை வீசுபுரை தோறும்,**
**கழங்கு பயில் மங்கையர் கருங்கண் மிளிர்கின்ற;**
**தழங்கு கழி சிந்திய தரம் பயில் தரங்கத்து**
**எழுந்து இடை பிறழ்ந்து ஒளிர் கொழுங்கயல்கள் என்ன.**

**பொ :**—கழிகளினின்று எழும்பித் தரந்தரமாக நின்று சிந்திய ஒலிக்கும் - அலைகளினின்று எழுந்து இடையிடையே பிறழ்ந்து ஒளிரும் கொழுத்த கயல் மீன்கள் என்று சொல்லும்படி, கீழ் வீழ்ந்த பனிப் படலத்தை யொத்த திரைச் சீலைகள் (காற்றால்)

தாக்கப்படும் புரையிடங்களிலெல்லாம் கழங்காடுதல் புரியும் மாதர்களின் கரிய கண்கள் பிறழ்கின்றன.

கு:—அலைகின்ற திரைச் சீலைக்கு அலைகளும் அவற்றிடைப் பிறழும் மகளிர்கண்களுக்கு அலையிற் பிறழும் கயல் மீன்களும் உவமைகளாகும். புரை - வசிக்குமிடம் (மலைநாட்டு வழக்கு), ஈண்டுப் படமாடம் என்க. (22)

## ஆற்றில் ஊற்றுநீர் தோன்றுதல்

**920.** வெள்ளநெடு வாரியுற வீசியில வேனும்
கிள்ளவெழு கின்றபுனல் கேளிரின் விரும்பித்
தெள்ளுபுன லாறுசிறி தேயுதவு கின்ற
உள்ளதும ருதுதவு வள்ளலையு மொத்த.

வெள்ளம் நெடு வாரி உற வீசி இலவேனும்,
கிள்ள எழுகின்ற புனல், கேளிரின் விரும்பித்
தெள்ளு புனல் ஆறு சிறிதே உதவுகின்ற,
உள்ளது மருது உதவு வள்ளலையும் ஒத்த.

போ:—தெளிந்த நீருள்ள நதிகள் வெள்ளமாகிய பெருஞ் செல்வத்தை வீசிக் கொண்டிராமற் போயினும் தோண்டுந்தோறும் ஊற்றாக எழுகின்ற புனலைச் சிறிது சிறிதாக உதவுவனவாயின. (அச்செயல்) செல்வமுள்ளபோது வேண்டியவர்க்கு வேண்டியபடி அளித்து அது வறண்ட காலத்தும் தன்னிடமுள்ள பொருளைக் கேட்போர்க்கு மறாமல் உறவினரைப் போல விரும்பி அவர்கட்கு அளிக்கும் வள்ளல்களை ஒத்து இருந்தன.

கு:—இதனுட் கண்ட உவமை குமணவள்ளல் போல்வார் வரலாற்றை உட்கொண்டு கூறியதாகும். 'ஆறுபெருக்கற் றருந்திடர்தான் பட்டாலும், ஊறலமை யாதோ உலகாற்றத் - தேற - வறியைநீ யானாலும் என் கலியை மாற்றச் சிறியையோ சீர்க்குமணா செப்பு.' என்ற பழம்பாடல் முதலியவற்றாலும் அறிக. (தமிழ் நாவலர் சரிதை-17.) (23)

## ஆடவர் படமாடங்களிற் புகுதல்

**921.** துன்றிநெறி பங்கிக
டுளங்கவழ லோடும்
மின்றிரிவ வென்னமணி
யாரமிளிர் மார்பர்

மன்றன்மண நாறுபட
மாடநுழை கின்றார்
குன்றின்முழை தோறுநுழை
கோளரிக ளொத்தார்.

துன்றி நெறி பங்கிகள் துளங்க, அழலோடும்
மின் திரிவ என்ன மணி ஆரம் மிளிர் மார்பர்,
மன்றல் மணம் நாறு படமாடம் நுழைகின்றார்,
குன்றின் முழை தோறும் நுழை கோளரிகள் ஒத்தார்.

பொ :—நெருங்கிப் பொதிந்த தலைமயிர்கள் காற்றால் அசையத் தீயோடு மின்னல்கள் திரிவன என்னும்படி நவமணி மாலைகள் விளங்கும் மார்பினையுடைய வீரர்கள், புதுமணம் வீசுகின்ற தத்தமக்குரிய கூடாரங்களில் புகுகின்றவராய், மலைக் குகைகளிற் புகுகின்ற கொல்லுமியல்புடைய சிங்கங்களை ஒப்பாராயினர்.

கு :—'நெறிபங்கிகள் துளங்க' என்றது 'கொண்டைமேற் காற்றடிக்க' என்பதொரு வழக்குப் பற்றி வந்தது. மலைக்காற்று வீசலின் 'பங்கிகள் துளங்க' என்றார். 'மெல்லியல் விறலி......... நின் விரைவளர் கூந்தல் வரைவளியுளர' (புறநா. 136) என்றார் சான்றோரும். மயிர் வளியால் துளங்குதல் உல்லாசக் குறிப்பு. படமாடங்களிற் புகுகின்ற வீரர்க்குக் குகையுட்புகும் சிங்கம் உவமை.

பங்கி = ஆண் மக்கள் தலைமயிர். பங்கி துளங்கல் சிங்கத்தின் பிடரிமயிர் சிலிர்த்தல் போலாம். (24)

## யானைகள் நீரைக் கலக்குதல்

**922.** நெருங்கயி லெயிற்றிணைய செம்மயிரி னெற்றிப்
பொருங்குலிக மப்பியன போர்மணிக ளார்ப்பப்
பெருங்களி றலைப்புனல் கலக்குவன பெட்கும்
கருங்கடல் கலக்குமது கைடவரை யொத்த.

நெருங்கு அயில் எயிறு இணைய, செம்மயிரின் நெற்றிப்,
பொரும் குலிகம் அப்பியன, போர் மணிகள் ஆர்ப்ப,
பெருங் களிறு அலைப் புனல் கலக்குவன, பெட்கும்
கருங் கடல் கலக்கும் மதுகைடவரை ஒத்த.

பொ :—கூரியவாய் நெருங்கும் இரட்டை மருப்புடையனவும் செம்மயிர் உள்ள நெற்றியில் மிகுதியும் இங்குலிகம் அப்பியுள்ளனவுமான யானைகள், மாறுபட மணிகள் ஒலிக்க அலைகளையுடைய பொய்கைநீரைக் கலக்குபவை (யாவராலும்) விரும்பப்படும் கரிய கடலைக் கலக்கிய மதுகைடப அசுரர்களை ஒத்தன.

கு :—அயில் - வேலாயுதமுமாம். பொருங்குலிகம் என்பதில் பொருதல் - பொருந்துதல்; 'பொய் பொருமுடங்குகை' (சிலப். 15-50.) எனக் காண்க.

மதுகைடபர் என்ற அசுரர்கள், திருமாலருளால் பிரமன் படைப்புத் தொழிலை நடத்திக் கொண்டிருக்கையில், பிரமனிடமிருந்த வேதங்களைப் பறித்துக்கொண்டு பாதலஞ் செல்ல, அதனால் அவை பெறுமாறு தேவர்கள் திருமாலை வேண்ட, அவர், குதிரை முகமுள்ள உருவத்துடன் சென்று வேதங்களை உயர்ந்த பண்ணிற்பாட, அதுகேட்ட மதுகைடவர்கள், கவர்ந்த வேதங்களை ஒருபுறத்தில் வைத்து விட்டுக் கீதம் வந்த வழியே வர, அப்போது வேதங்களை மீட்டுப் பிரமனுக்கு அன்னவுருவெடுத்து உபதேசித்தார் என்றும், கவர்ந்த பின்னர் வேதங்களைக் காணுமையால் அவ்வசுரர்கள் கடலைக் கலக்கத் திருமாலால் அவர்கள் உபாயத்தினிற் கொல்லப்பட்டனரென்றும் புராணம் கூறும். (25)

### மதயானைகள் நீர்நிலைகளை விடாமை

**923.** ஒக்கநெறி யுய்ப்பவ ருரைத்தகுறி கொள்ளா
பக்கமின மொய்த்தய லலைக்கநனி பாரா
மைக்கரிம தத்தவிலை மாதர்கலை யல்குற்
புக்கவரை யொத்தனபு னற்சிறைக ளேரு.

ஒக்க நெறி உய்ப்பவர் உரைத்த குறி கொள்ளா,
பக்கம் இனம் மொய்த்து அயல் அலைக்க நனி பாரா,
மைக் கரி மதத்த, விலைமாதர் கலை அல்குல்
புக்கவரை ஒத்தன, புனல் சிறைகள் ஏரு.

பொ :—தம்மைத் தக்கவாறு செலுத்தும் பாகரின் குறிப்புச் சொற்களை ஏற்றுக்கொள்ளாதனவும், பக்கங்களில் துணைப் பாகர்கள் கூடியிருந்து வேற்றிடஞ் செல்லவொட்டாமல் வருத்தித் தடுக்கவும் சிறிதும் கவனியாமல் நீர்நிலைகளினின்று கரையேருதனவுமான மதங்கொண்ட கரிய யானைகள் மேற்பட்ட நிலை

யிலிருந்து தம்மையாள வல்லவர்களின் நன்மொழிகளை ஏற்காமலும், பக்கத்துள்ள இனத்தார் தடுத்து வருத்தவும் பொருட்படுத்தாது (காம வெள்ளத்தினின்று கரையேறுமலும்) கணிகையரது அல்குற்றடத்திற் புகுந்து மீளாத காமுகரை ஒத்தன.

கு :—புனற்சிறை – புனல் கட்டப் பெறும் நீர் நிலைகள். (26)

### பாடிநகர் கடலை ஒத்திருத்தல்

**924.** துகிலிடை மடந்தையரொ டாடவர் துவன்றிப்
பகலிடைய வட்டிலின் மடுத்தெரி பரப்பும்
அகிலிடு கொழும்புகை யழுங்கலின் முழங்கா
முகில்படு நெடுங்கடலை யொத்துளதம் மூதூர்.

துகில் இடை மடந்தையரொடு ஆடவர் துவன்றிப்,
பகல் இடைய, அட்டிலில் மடுத்து, எரி பரப்பும்
அகில் இடு கொழும்புகை அழுங்கலின், முழங்கா
முகில் படு நெடும் கடலை ஒத்துளது அம் மூதூர்.*

பொ :—ஆடையணிந்த இடையுடைய மகளிருடன் ஆண் மக்களும் நெருங்கிச் சூரியனொளியும் மழுங்கும்படி மடைப்பள்ளி அடுப்புக்களில் இட்டு எரிமூட்டும் அகிற்கட்டைகளின் கொழுத்த புகைகள் செறிவதனுல், இடி இடித்தலில்லாத மேகங்கள் தங்கப் பெற்ற பெரிய கடலை ஒப்பதாயிற்று, பழைய நகர் போன்ற அப் பாடிநகர்.

கு :—இனி, வட்டில் என்று பிரித்து வட்டில் போன்ற வடிவமுள்ள தூபமுட்டி என்று பொருள் கூறுவதுமுண்டு, பழைமையான நகர்க்கு அமைந்தவை யாவும் உடையதாதலின், மூதூர் என்று ஆகுபெயராற் கூறினுர். (27)

### பாடிநகர் அமரர் நாடு போன்றிருத்தல்

**925.** கமருறு பொருப்பின் வாழும்
★ விஞ்சையர் காண வந்தார்
தமரையு மறியார் நின்று
திகைப்புறு தகைமை சான்ற

*இப்பாடலொடு, 3, 4, 19, 25–ஆம் பிரதிகளில் எழுச்சிப் படலம் முற்றும். 29–ஆம் பிரதியில் சந்திரசைலப் படலம் முற்றும்.

குமரரு மங்கை மாருங்
குழுமலால் வழுவி விண்ணின்
றமரர்நா டிழிந்த தென்னப்
பொலிந்ததவ் வனீக வெள்ளம்.

கமர் உறு பொருப்பின் வாழும் விஞ்சையர் காண வந்தார்,
தமரையும் அறியார் நின்று திகைப்பு உறு தகைமை சான்ற
குமரரும் மங்கைமாரும் குழுமலால், வழுவி விண்ணின்று
அமரர் நாடு இழிந்தது என்னப்பொலிந்தது அவ்அனீகவெள்ளம்.*

பொ:—(அச் சேனைகள் தங்கிய பாடியைக்) காண வந்த—பிளவுகளுடைய மலைகளில் வாழும்—வித்தியாதரர்களும், தம் இனத்தவரை வேறுபாடறியாமல் திகைப்புறுதற்குக் காரணமான அழகு மிக்க இளைஞரான ஆடவர்களும் மகளிரும் கூடியிருத்தலால் அங்குள்ள சேனைகளின் பெருக்கு தேவலோகமே விண்ணினின்று கீழே நழுவி விழுந்ததோ என்னும்படி விளங்கிற்று.

கு:—பேரழகு படைத்த சேனைமாந்தரைக் கண்டு தேவ கணத்தாரும் வியந்து மயங்கி நின்றனரென்பதாம். வித்தியா தரர் – மலைகளில் வாழும் தேவகணத்தாருள் ஒரு சாரார்.

அன்பொத்த இவ்விருவராக இருத்தல் விஞ்சையர் இயல்பு: அவ்வாறே இருந்த குமரரையும் மங்கையரையும் கண்டு தம்மை அறியாது திகைத்தனர் என்க. (28)

### மகளிர் திரிதல்

926. வெயினிறங் குறையச் சோதி
மின்னிழல் பரப்ப முன்னம்
துயிலுணர் செவ்வி யாருந்
துனியுறு முனிவி னாரும்
குயிலொடு மினிது பேசிச்
சிலம்பொடு மினிது கூவி
மயிலினந் திரிவ வென்னத்
திரிந்தனர் மகளி ரெல்லாம்.

*3, 4, 19, 25, 29-ஆம் பிரதிகளில் இப் பாடல் முதல் வரைக் காட்சிப் படலம் தொடங்குகிறது.

வெயில் நிறம் குறையச் சோதி மின் நிழல் பரப்ப, முன்னம்
துயில் உணர் செவ்வியாரும், துனியுறு முனிவினரும்,
குயிலொடும் இனிது பேசிச், சிலம்பொடும் இனிது கூவி,
மயிலினம் திரிவ என்னத், திரிந்தனர் மகளிர் எல்லாம்.

பொ :—விழித்தெழுங் காலத்துக்கு முன்பே துயில் நீங்கிய அழகுடையவரும் நீண்ட புலவியால் துயிலாத மகளிரும் (மலைச் சார்பிலுள்ள) குயில்களோடும் இனிமையாகப் பேசியும் மலை எதிரொலிக்க நன்கு கூவியும் மயிற்கூட்டங்கள் திரிவனபோல— வெயிலின் ஒளியும் தமக்கு முன் ஒளி மழுங்கும்படி புனைந்த அணிகளின் சோதி மின்னலொத்த நிழலைப் பரப்பத் திரிந்தார்கள்.

கு :—சிலம்பொடும் இனிது கூவி எதிரொலியுண்டாக்கி மகிழ்தல் மலைமகளிர் வழக்கு. (29)

ஆடவர் திரிதல்

927. தாளிணை கழல்க ளார்ப்பத்
தாரிடை யளிக ளார்ப்ப
வாள்புடை யிலங்கச் செங்கேழ்
மணியணி வலய மின்னத்
தோளென வுயர்ந்த குன்றின்
சூழல்க ளினிது நோக்கி
வாளரி திரிவ வென்னத்
திரிந்தனர் மைந்த ரெல்லாம்.

தாள் இணை கழல்கள் ஆர்ப்பத், தார் இடை அளிகள் ஆர்ப்ப,
வாள் புடை இலங்கச், செங்கேழ் மணி அணி வலயம் மின்னத்,
தோள் என உயர்ந்த குன்றின் சூழல்கள் இனிது நோக்கி,
வாள் அரி திரிவ என்னத் திரிந்தனர் மைந்தர் எல்லாம்.*

பொ :—வீரர்களான ஆடவரெல்லாம் அடிகளிரண்டினும் வீரக்கழல்கள் ஆரவாரிக்கவும், அணிந்த மலர்மாலைகளில் (தேனை நாடி) வண்டுகள் ஆர்க்கவும், (கச்சிற்கட்டிய) வாளாயுதங்கள் பக்கத்து விளங்கவும், செந்நிறமுள்ள மணிகள் பதித்துச் செய்யப்பட்ட அழகிய தோள்வலயங்கள் மிளிரவும், தம் தோள்களைப்

*17, 18, 40-ஆம் பிரதிகளில் இப்பாடலுடன் சந்திரசைலப் படலம் முற்றுப் பெற்று, 'சுற்றிய' என்ற பாடல் முதல் வரைக் காட்சிப் படலம் தொடங்குகிறது.

போல உயர்ந்த அம்மலையின் சுற்றிடங்களை நன்கு காண்பவராய் ஒள்ளிய சிங்கங்கள் திரிவனபோல உலாவலானார்கள். (30)

**கவிக்கூற்று**

**928.** சுற்றிய கடல்க ளெல்லாஞ்
சுடர்மணிக் கனகக் குன்றைப்
பற்றிய வளைந்த வென்னப்
பரந்துவந் திறுத்த சேனை
கொற்றவர் தேவி மார்கண்
மைந்தர்கள் கொம்ப னார்வந்
துற்றவர் காண லுற்ற
மலைநிலை யுரைத்து மன்றே.

**சுற்றிய கடல்கள் எல்லாம் சுடர் மணிக் கனகக் குன்றைப் பற்றிய வளைந்த என்னப், பரந்துவந்து இறுத்த சேனை, கொற்றவர், தேவிமார்கள், மைந்தர்கள், கொம்பு அனார், வந்து, உற்றவர் காணல் உற்ற மலை நிலை உரைத்தும் அன்றே.**

பொ :—உலகைச் சூழ்ந்துள்ள கடல்கள் யாவும், ஒளிவிடும் மணிகளுடைய பொன்மலையைக் கவரும்பொருட்டு வளைத்தன என்று சொல்லும்படி (அந்தச் சயிலத்தின்) இடங்களில் பரவி வந்து தங்கிய சேனைகளும் அரசர்களும் அரசியரும் அரசிளங் குமரரும் அரசிளங்குமரிகளுமாகிய அங்கு வந்து சேர்ந்தவர்கள் காணுதற்கு அமைந்த அந்தச் சயிலத்தின் இயல்புகளை இனிச் சொல்லுவோம். (31)

**சந்திரசைலத்தின் வருணனை (929-942)**

**929.** பம்புதேன் மிஞிறு தும்பி
பரந்திசை பாடி யாட
உம்பர்வா னகத்து நின்ற
வொளிதரு தருவி னேங்கும்
கொம்புகள் பனைக்கை நீட்டிக்
குழையொடு மொடித்துக் கோட்டுத்
தும்பிக ளுயிரே யன்ன
துணைமடப் பிடிக்கு நல்கும்.

பம்பு தேன், மிஞிறு, தும்பி, பரந்து இசை பாடி ஆட
உம்பர் வானகத்து நின்ற ஒளி தரு தருவின் ஓங்கும்
கொம்புகள், பணைக் கை நீட்டிக், குழையொடும் ஒடித்துக், கோட்டுத்
தும்பிகள், உயிரே அன்ன துணை மடப் பிடிக்கு நல்கும்.

பொ :—தந்தங்களுடைய ஆண்யானைகள் நெருங்கிய தேன் மிஞிறு தும்பி என்ற வண்டினங்கள் பரந்து பண்களைப் பாடிப் பறக்க மேலதாகிய வானுலகத்தில் ஓங்கிய ஒளிவிடும் கற்பக தருவின் உயர்ந்த கிளைகளைத் தம் பனைமரம் போலும் கைகளை நீட்டிக்குழைகளோடு முறித்துத் தம் உயிரையொத்த மடப்பத்தை யுடைய பெண்யானைக்கு அளிப்பனவாம்.

கு :—தேன் - தேனீ; மிஞிறு – வரிவண்டு; தும்பி - கருவண்டு என்க. தேன் முதலியவை வண்டினங்கள்; "மங்கை நல்லவர் கண்ணும் மனமும் போன், றெங்கும் ஓடி யிடறுஞ் சுரும்புகாள், வண்டுகாள் மகிழ் தேனினங்காள் மது, உண்டு தேக்கிடும் ஒண் மிஞிற்றிட்டங்காள்" என்னும் சிந்தாமணிப் பாட்டும் (892) அதற்கு நச்சினார்க்கினியர் வரைந்த உரையும் இங்கு நோக்கத் தகும். 'வரிஞிமிறூர்ப்ப இருந்தும்பியியையூத' (கலித்-நெய்தல்-10), 'பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறு' (கலித் 11.)

பெருகு மதவேழம் மாப்பிடிக்கு முன்னின்
றிருகண் இளமூங்கில் வாங்கி—அருகிருந்த
தேன்கலந்து நீட்டுந் திருவேங்கடங் கண்டீர்
வான்கலந்த வண்ணன் வரை. (பூதத்தார் அந்தாதி-75)

சந்தனப்பூம் பைந்தழையைச் செந்தேனில் தோய்த்தியானை
மந்த மடப்பிடியின் வாய்க்கொடுப்ப—வந்ததன்
கண்களிக்கத் தான்களிக்கும் ஈங்கோயே தேங்காதே
விண்களிக்க நஞ்சுண்டான் வெற்பு.
(ஈங்கோய்மலையெழுபது - 38)

என்பதனால் யானைகள் தம் பிடிகளிடம் பேரன்புடையன என்க. ஐயறிவுடையனவே அத்தகையவாயின் ஆறறிவுடைய மக்களின் பேரன்பு கூறவேண்டுமோ என்பது குறிப்பு. (32)

**930.** பண்மலர் பவளச் செவ்வாய்ப்
பனிமலர்க் குவளை யன்ன
கண்மலர் கொடிச்சி மார்க்குக்
கணித்தொழில் புரியும் வேங்கை

உண்மலர் வெறுத்த தும்பி
புதியதே னுதவு நாகத்
தண்மல ரென்று வானத்
தாரகை தாவு மன்றே.

**பண் மலர் பவளச் செவ்வாய்ப், பனி மலர்க் குவளை அன்ன,**
**கண் மலர், கொடிச்சிமார்க்குக் கணித் தொழில் புரியும் வேங்கை**
**உண் மலர் வெறுத்த தும்பி, புதிய தேன் உதவும் நாகத்**
**தண் மலர் என்று வானத் தாரகை தாவும் அன்றே.**

பொ :—பண்ணிசை தோற்றும் பவளம்போன்ற செவ்வாயினையும், குளிர்ந்த குவளைமலர்போலும் கண்களையுமுடைய குறிஞ்சிநில மகளிர்க்குச் சோதிடத் தொழில் புரிந்துவரும் வேங்கையின் தேனை உட்கொண்ட மலர்கள்மீது வெறுப்புற்ற கருவண்டுகள் புதிய தேனைத் தரும் சுரபுன்னைமலரென்று கருதி விண்ணிடமாக விளங்கும் நட்சத்திரங்கள்மேலே தாவாநின்றன.

கு :—பனிக் குவளை மலர் எனக் கூட்டுக. கொடிச்சிமார்—குறிஞ்சிநில மகளிர். மலைமரமான வேங்கை நன்னாளில் மலர்தலும் அந்நாளில் மலைமகளிர் மணம் புரிதலும், அது பூத்தபோது மகளிர் தினைப்புனங்கொய்யத் தொடங்குதலும் வழக்காதலால் ‘இன்ன நாளில் இது செய்க’ என்னும் சோதிடரை ஒப்பதாயிற்று. ‘பன்னாளும் நின்றவிடத்துங் கனிவேங்கை, நன்னாளே நாடி மலர்தலால்’ (பழமொழி - 120) எனவும் ‘வேங்கையும் ஒள்ளிணர் விரிந்தன நெடுவெண் டிங்களும் ஊர்கொண்டன்றே’ எனவும், (அகநா-2) ‘புனவேங்கை தினைப்புனங் கொய்கவென்று......தன் கள்வாய் சொரிய நின்று சோதிடங்கொண்டு’ (திருக்கோவை - 138.) எனவும் வரும் சான்றோர் பாடற் பகுதிகள் காண்க. வண்டு புதுமலரே நாடுவது இயல்பாதலால் வேங்கைப் பூவை வெறுத்துச் சுரபுன்னையை நாடுவதாயிற்று. ‘புது மலர் தேடும் வண்டேபோல்’ (கலித் - 26) என்ப. (33)

931. மீனெனும் பிடிக ளோடும்
விளங்கும்வெண் மதிநல் வேழம்
கூனல்வான் கோடு நீட்டிக்
குத்திடக் குமுறிப் பாயும்

தேனுகு மடையை மாற்றிச்
செந்திணைக் குறவர் முந்தி
வானநீ ராறு பாய்ச்சி
யைவனம் வளர்ப்பர் மாதோ.

**மீன் எனும் பிடிகளோடும், விளங்கும் வெண்மதி நல் வேழம்,
கூனல்வான் கோடு நீட்டிக் குத்திடக், குமுறிப் பாயும்
தேன் உகு மடையை மாற்றிச், செந்திணைக் குறவர் முந்தி
வான நீர் ஆறு பாய்ச்சி, ஐவனம் வளர்ப்பர் மாதோ!**

**பொ** :—நட்சத்திரங்களாகிய பெண்யானைகளுடன் விளங்கும் வெண்ணிறமுள்ள சந்திரனாகிய சிறந்த யானை வளைவும் அழகு முள்ள வெண்கொம்புகளை நீட்டிக் குத்தியதனால் பேரொலியுடன் பாயும் தேனினது மடையை மறித்தவராய்ச் செந்திணைக் கொல்லை யுடைய மலைவாசிகளான குறவர்கள் முற்பட ஆகாய கங்கையை ஆங்குப் பாயச் செய்து வளரச் செய்வார்கள்.

கு :—தினை புன்செய்ப் பயிராதலின், தேன்வெள்ளத்தால் அது விளைவதற்கு முன் அதனை மறித்து உலர்ந்த ஐவன வெண் ணெல்லை ஆற்றுநீர் கொண்டு மாற்றி விளைவிப்பாராயினர் என் பதும், ஆகவே, நன்செய்யோடு புன்செய்யாகிய இருவகை நிலத் துப் பயனும் கொள்வர் மலைமக்கள் என்பதும் கூறியதாயிற்று. 'ஐவன வெண்ணெல் அறையுரலுட் பெய்திடுவாம்' (கலித்-43) என்பதனால், ஐவனம் என்பது மலையிற் பயிராகும் வெண்ணெல் வகையாம் என்றறிக. 'தேனுகு மடை' என்றதனால் தேனிறால் என்பது பெறப்படும். (34)

**932.** குப்புறற் கருமை யாலக்
குலவரைச் சாரல் வைகி
ஒப்புறத் துளங்கு கின்ற
வுடுபதி யாடி யின்கண்
இப்புறத் தேயுங் காண்பார்
குறத்திய ரியைந்த கோலம்
அப்புறத் தேயுங் காண்பா
ரரம்பைய ரழகு மாதோ.

குப்புறற்கு அருமையால் அக் குலவரைச் சாரல் வைகி
ஒப்புறத் துளங்குகின்ற உடுபதி ஆடியின்கண்,
இப்புறத்தேயும் காண்பார் குறத்தியர் இயைந்த கோலம்,
அப்புறத்தேயும் காண்பார் அரம்பையர் அழகு மாதோ.

பொ :—கடந்து செல்வதற்கு இயலாமையால் ஓங்கியுள்ள அந்த மலையின் சாரலாகிய ஒருசாரிடத்துத் தங்கி, (இருபுறமும்) ஒருபடியாக விளங்கும் சந்திரனாகிய கண்ணாடியிலே, மலைமகளிர் தமக்கேற்றபடி அணிந்த கோலங்களை (மண்ணுலகான) இப்புறத்திலும், தேவர்மகளிர் தம் அழகினை (வானுலகான) அப்புறத்திலும் காண்பாராயினர்.

கு :—நட்சத்திரங்கள் இருபத்தேழினுக்கும் நாயகன் என்பவாகலின் சந்திரன் உடுபதி எனப்பட்டான். (உடு - நட்சத்திரம்) ஒருபுறமே நிழல் காட்டும் கண்ணாடி போன்றதன்றென்பார் 'இப்புறத்தேயுங்காண்பார்...அப்புறத்தேயுங்காண்பார்' என்றார். சந்திர சயிலம் என்ற பெயர்க்காரணம் புலப்பட, 'அக் குலவரைச் சாரல் வைகி...துளங்குகின்ற உடுபதி' எனக் கற்பிக்கப்பட்டது. (35)

933. உதியுறு துருத்தி யூது
முலையுறு தீயும் வாயின்
அதிவிட நீரு நெய்யு
முண்கிலா தாவி யுண்ணும்
கொதிநுனை வேற்கண் மாதர்
குறத்தியர் நுதலி னோடு
மதியினை வாங்கி யொப்புக்
காண்குவர் குறவர் மன்னோ.

உதி உறு துருத்தி ஊதும் உலை உறு தீயும், வாயின்
அதி விட நீரும், நெய்யும், உண்கிலாது, ஆவி உண்ணும்
கொதி நுனை வேல் கண் மாதர் குறத்தியர் நுதலினோடு,
மதியினை வாங்கி ஒப்புக் காண்குவர் குறவர் மன்னோ!

பொ :—(காற்றுத்) தோன்றுதல் பொருந்திய துருத்தியால் ஊதப்படும் கொல்லனுலையில் பொருந்திய தீயையும், (ஆயுத) அலகிலே ஊட்டப்படும் கொடிய விடநீரையும் தயிலத்தையும் கொள்ளாமலே (காதலித்த ஆடவரின்) உயிரைக் கொள்ளவல்ல-சீறும் முனையுள்ள வேலாயுதத்தைப் போன்ற-கண்களுடைய

அழகிய மலைமகளிரின் நெற்றியோடு மலைவாழ்குறவர்கள் (அம் மலையில் செல்ல வியலாமல் தடைபெற்ற) சந்திரனை எடுத்து ஒப்பிட்டுப் பார்ப்பார்கள்.

கு:—நுதலுக்குப் பிறையே உவமையாதலால் மதி என்றது பிறைச் சந்திரனை. தீயிற் காய்ச்சி அடிக்கப்படுதலும், உயிரைத் தவறுமற் கொல்லுதற்காக நஞ்சூட்டப்படுதலும், துருப்பிடியா திருக்க நெய்பூசப்படுதலும் உடைய வேல்போலன்றி, அவை யொன்றும் இல்லாமலே ஆடவருயிரை உண்ணவல்லன மகளிர் கண்கள் என்பது முன்னிரண்டடிகளின் கருத்து. (36)

934. பேணுதற் கரிய கோலக்
குருளையம் பிடிக ளீன்ற
காணுதற் கினிய வேழக்
கன்றொடு களிக்கு முன்றில்
கோணுதற் குரிய திங்கட்
குழவியுங் குறவர் தங்கள்
வாணுதற் கொடிச்சி மாதர்
மகவொடு தவழு மாதோ.

பேணுதற்கு அரிய கோலக் குருளை அம், பிடிகள் ஈன்ற காணுதற்கு இனிய வேழக் கன்றொடு களிக்கும் முன்றில் கோணுதற்கு உரிய திங்கள் குழவியும், குறவர் தங்கள் வாள் நுதல் கொடிச்சி மாதர் மகவொடு தவழும் மாதோ!

பொ:—அழகிய பெண்யானைகள் ஈன்ற காண்டற்கினிய யானைக்கன்றுகள், பேணி வளர்த்தற்கு அரிய பன்றிக் குட்டிகளுடனே விளையாடும் குடிலின் முன்னிடங்களிலே வளையுந் தன்மை கொண்ட இளஞ் சந்திரனும் ஒளி தங்கிய நுதலையுடைய குறவர் மகளிரின் குழந்தைகளோடு தவழும் (அம் மலையில்)

கு:—கோலக்குருளை - பன்றிக்குட்டி. பொது நோக்கில் மலைப்பன்றிக் குட்டியும் யானைக் கன்றும் ஒப்புமையுடையன வாம். களிறு என்பது யானைக்கும் பன்றிக்கும் ஆண்பாற் பெயராதலும் இவ்வொப்புமை பற்றியே என்க (தொல்-மரபியல்-34) பழக்கி வளர்த்தற்குரியன வாகாமையின் 'பேணுதற்கரிய கோலக் குருளை' எனப்பட்டது. (37)

935. அஞ்சனக் கிரியி னன்ன
வழிகவுள் யானை கொன்ற
வெஞ்சினத் தரியின் றிண்காற்
சுவட்டொடு விஞ்சை வேந்தர்
குஞ்சியந் தலத்து நீலக்
குலமணித் தலத்து மாதர்
பஞ்சியங் கமலம் பூத்த
பசுஞ்சுவ டுடைத்து மன்னோ.

அஞ்சனக் கிரியின் அன்ன அழி கவுள் யானை கொன்ற
வெம் சினத்து அரியின் திண் கால் சுவட்டொடு, விஞ்சை வேந்தர்
குஞ்சி அம் தலத்தும், நீலக் குல மணித்தலத்தும், மாதர்
பஞ்சி அம் கமலம் பூத்த பசுஞ்சுவடு உடைத்து மன்னோ!

பொ :—(சந்திர சயிலமானது) கரிய மலை போன்றதும் மதநீர் ஒழுகும் கன்னமுடையதுமான யானையை (ப்போரிற்) கொன்ற சிங்கத்தின் குருதிதோய்ந்த கால்கள் பட்ட திண்ணிய அடித் தடங்களையும், வித்தியாதர அரசரின் அழகிய மயிர்முடியுள்ள தலையினும், உயர்ந்த நிலமணிப் பாறைகளிலும் அவர் தேவியரின் செம்பஞ்சூட்டிய அடித்தாமரைகள் படுதலா லுண்டான மெல்லிய அடித்தடங்களையும் உடைத்தாயிருந்தது.

கு :—யானையொடு பொருது கொன்ற சிங்கங்களின் வலிய அடிச்சுவடு படுதலால் ஒருபுறம் அச்சக் குறிகளும், ஊடற் காலத்துப் பணிந்த நாயகரின் குஞ்சியினும் நிலமணிப்பாறை களிலும் அவர் மகளிரின் மெல்லிய காற்சுவடுபடுதலால் ஒரு புறம் இன்பக் குறிகளும் அம்மலை உடையதாயிருந்த தென்றபடி, (38)

936. செங்கய லனைய நாட்டஞ்
செவியுற முறுவ ரோன்று
பொங்கிருங் கூந்தல் சோரா
புருவங்க ணெரியா பூவின்
அங்கையு மிடறுங் கூட்டி
நரம்புளர்ந் தமுத மூறும்
மங்கையர் பாடல் கேட்டுக்
கின்னர மயங்கு மாதோ.

செங்கயல் அனைய நாட்டம் செவி உரு, முறுவல் தோன்ரு,
பொங்கு இருங் கூந்தல் சோரா, புருவங்கள் நெரியா, பூவின்
அம் கையும் மிடறும் கூட்டி, நரம்பு உளர்ந்து, அமுதம் ஊறும்
மங்கையர் பாடல் கேட்டுக், கின்னரம் மயங்கும் மாதோ!

பொ:—அழகிய கயல்மீன்களை யொத்த கண்கள் காதுவரை சென்று மீளாதனவும், முறுவலாற் பற்கள் வெளித் தோன்ரு தனவும் மிகத்திரண்ட கூந்தல் முடிப்புக் குலைந்து விழாதனவும் புருவங்கள் வளைந்து தோன்ருதனவும் (ஆகி) தாமரை மலர் போலும் அங்கையையும் குரலையும் ஒருவழிப்படுத்தி நரம்பைத் துழாவி (அதனல் உண்டாம்) அமுதம்போல் இனிமை தோற்றும் மடந்தையரின் இன்னிசையைக் கேட்டுக் கின்னரப்புட்களும் திகைத்து நிற்கும்.

கு:—கின்னரம் - இசையறிவதோர் புள்ளினம். ஆணும் பெண்ணுஞ் சேர்ந்து வாழ்வன வாதலால் கின்னர மிதுனம் என்றும் வழங்கும். தேவசாதியினர் என்று கூறுவதுமுண்டு (எழுச்சி-61). அங்கசேட்டைகளின்றிப் பாடுதலே, கீதம் வல்லார் கைக்கொள்ள வேண்டிய முறை என்பர். இதனை,

"கண்ணிமையா கண்டந் துடியா கொடிறசையா
பண்ணளவும் வாய்தோன்ரு பற்றெரியா - எண்ணிலிவை
கள்ளார் நறுந்தெரியற் கைதவனே கந்தருவர்
உள்ளாளப் பாட லுணர்" (இசைமரபு)

என்ற பாடலால் அறிக. தும்புரு வீணையின் இசைக் கேற்பப் பாடவேண்டுதலின் 'அங்கையு மிடறுங் கூட்டி நரம்பளைந்து' என்ருர். (39)

**937.** கள்ளவிழ் கோதை மாதர்
காதொடு முறவு செய்யும்
கொள்ளைவாட் கண்ணி ஞர்தங்
குங்குமக் குழம்பு தங்கும்
தெள்ளிய பளிக்குப் பாறைத்
தெளிசுனை மணியிற் செய்த
வள்ளமு நறவு மென்ன
வரம்பில பொலியு மன்ளே.

கள் அவிழ் கோதை மாதர் காதொடும் உறவு செய்யும்
கொள்ளை வாள் கண்ணினூர்தம் குங்குமக் குழம்பு தங்கும்
தெள்ளிய பளிக்குப் பாறைத் தெளி சுனை, மணியில் செய்த
வள்ளமும் நறவும் என்ன வரம்பு இல பொலியும் மன்னே!

பொ :—காதோடும் உறவு செய்வனவும், ஆடவருயிரைக் கொள்ளைகொள்வனவுமாகிய கண்களை யுடையவரும் தேன் சொரியும் மாலையணிந்தவருமான மாதர்களுடைய குங்குமச்சேறு தங்கிய, தெள்ளிய நிறமுள்ள பளிங்குப் பாறை கொண்ட- தெளிந்த சுனைகள் மிகப் பலவாக வுள்ளவை, செம்மணியால் இயன்ற கிண்ணங்களும் கள்ளும் போல மிகுதியாக விளங்கா நின்றன.

கு :—குங்குமக் குழம்பு பூசிய மாதர் தோய்தலால் பளிக்குப் பாறையும் அதனகத்துச் சுனைநீரும் செந்நிறமாயின. (40)

938\. ஆடவ ராவி சோர
வஞ்சன வாரி சோர
ஊடலிற் சிவந்த நாட்டத்
தும்பர்த மரம்பை மாதர்
தோடவிழ் கோதை நின்றுந்
துறந்தமந் தார மாலை
வாடல நறவ ருது
வயின்வயின் வயங்கு மாதோ.

ஆடவர், ஆவி சோர, அஞ்சனம் வாரி சோர,
ஊடலில் சிவந்த நாட்டத்து உம்பர்தம் அரம்பை மாதர்,
தோடு அவிழ் கோதை நின்றும் துறந்த மந்தார மாலை,
வாடல நறவு அருது வயின் வயின் வயங்கும் மாதோ!

பொ :—தம் கணவரின் உயிர்கள் வருந்தித் தளரும்படி, தீட்டிய மையுடனே கண்ணீர் பெருகுமாறு புலவியால் செந்நிறங் கொண்ட கண்களையுடைய தேவர்களின் மகளிர், தம் முடியி னின்று கழற்றி யெறிந்த இதழ்கள் விரிந்த மந்தார மாலைகள் வாடாதனவாகித் தேனொழுக்கு நீங்காமல் அவ்வவ் விடங்களிலே விளங்குவனவாகும்.

கு :—'என்றும் புலராது யாணர்நாட் செல்லுகினும், நின் றலர்ந்து தேன் பிலிற்றும் நீர்மை' கொண்ட தெய்வமலர்களா

தலின், 'மந்தாரமாலை வாடல நறவு அருது...வயங்கும்' எனப் பட்டது. இதனால் அம்மலை தேவர்கள் விரும்பி இன்பம் நுகரும் இடம் என்பதாயிற்று. (41)

**939.** மாந்தளி ரனைய மேனிக்
குறத்தியர் மாலை சூட்டிக்
கூந்தலங் கமுகின் பாளை
குழலினோ டொப்புக் காண்பார்
ஏந்திழை யரம்பை மாத
ரெரிமணிக் கடகம் வாங்கிக்
காந்தளம் போதிற் பெய்து
கைகளோ டொப்புக் காண்பார்.

மாந்தளிர் அனைய மேனிக் குறத்தியர் மாலை சூட்டிக்
கூந்தல் அம் கமுகின் பாளை குழலினோடு ஒப்புக் காண்பார்;
ஏந்திழை அரம்பை மாதர் எரி மணிக் கடகம் வாங்கிக்
காந்தள் அம் போதில் பெய்து கைகளோடு ஒப்புக் காண்பார்.

பொ :—மாந்தளிர்போலும் உடல் நிறங்கொண்ட மலைமகளிர் மலர்மாலைகளை அணிந்துகொண்டு பின்பு கூந்தற் கமுகின் பாளைகளைத் தம் கூந்தலோடு வைத்து உவமை காண்பார்கள், அணிகள் பூண்ட தேவமகளிர் ஒளிரும் மணிக் கடகங்களைக் கழற்றிக் காந்தள் மலர்களிலே அவற்றை அணிந்து பின் தம் கைகளுடனே ஒப்புக் காண்பார்கள்.

கு :—இதனால் அம்மலைமீதுள்ள மரஞ் செடிகளிலே, அழகிய மாதர்கள் உறுப்புக்கட்கு உவமையாகவுள்ளனவும் உள என்பதாயிற்று. (42)

**940.** சரம்பயில் சாப மன்ன
புருவங்க டம்மி னுட
நரம்பினோ டினிது பாடி
நாடக மயிலொ டாடும்
அரம்பையர் வெறுத்து நீத்த
வவிர்மணிக் கோவை யாரம்
மரம்பயில் கடுவன் பூண
மந்திகண் டுவக்கு மாதோ.

சரம் பயில் சாபம் அன்ன புருவங்கள் தம்மின் ஆட,
நரம்பினேடு இனிது பாடி நாடகம் மயிலொடு ஆடும்,
அரம்பையர் வெறுத்து நீத்த, அவிர் மணிக் கோவை ஆரம்,
மரம் பயில் கடுவன் பூண, மந்தி கண்டு உவக்கும் மாதோ.

பொ :—அம்பு பொருந்திய வில்லைப் போன்ற புருவங்களானவை தம்மிலே ஆடா நிற்க, யாழ் நரம்பினேடு இசைய இனிமையாகப் பாடி மயில்களோடு ஒப்ப நடனமாடுகின்ற தெய்வ மகளிர் ஊடலால் கழற்றி யெறிந்த ஒளிரும் நவமணி மாலைகளையும் முத்தாரங்களையும், மரங்களிற் பழகுகின்ற ஆண் குரங்குகள் தமக்கு அணிய அணிந்து கொண்ட பெண் குரங்குகள் (அவ்வணியழகைக்) கண்டு மகிழாநிற்கும்.

கு :—வெறுத்து நீத்த அலங்காரப் பொருள்கள் யாவும் விலங்குகள் அணிந்து மகிழ்தற்குரிய வாயின என்பது கருத்து, இதனல், ஊடற் குறிகள் ஒரு புறமும் கூடற் குறிகள் ஒரு புறமும் நிகழும் இடம் அம்மலை என்பதாயிற்று. கடுவன் - ஆண் குரங்கு. 'மண் சூழ்ப்பந் தாவென்று மந்திகடுவற் குரைப்ப' என்றுர் பின்னேரும் (திருவேங்கடமாலை 25). (43)

941. சாந்துயர் தடங்க டோறுந்
தாதுரா கத்திற் சார்ந்த
கூந்தலம் பிடிக ளெல்லாங்
குங்கும மணிந்த போலும்
காந்தின மணியின் சோதி
கதிரொடுங் கலந்து வீசச்
சேந்துவா னகமெப் போதுஞ்
செக்கரை யொக்கு மன்றே.

சாந்து உயர் தடங்கள் தோறும், தாதுராகத்தில் சார்ந்த
கூந்தல் அம் பிடிகள் எல்லாம் குங்குமம் அணிந்த போலும்;
காந்து இன மணியின் சோதி கதிரொடும் கலந்து வீசச்
சேந்து வானகம் எப்போதும் செக்கரை ஒக்கும் அன்றே !

பொ :—சந்தன மரங்கள் ஓங்கப் பெற்ற மலையிடங்களில் எல்லாம், செங்காவிக் கற்களின் செந்நிறஞ் சேர்ந்து பொருந்திய புறமயிருள்ள பெண் யானைகள் யாவும், குங்குமக் குழம்பு அப்பியவற்றை ஒத்துள்ளன; ஒளிர்கின்ற பதுமராக இனங்களின் சோதியானது சூரிய கிரணங்களோடு சேர்ந்து வீசுதலாலே, ஆகாய

மானது எப்போதும் செந்நிறமடைந்து செவ்வானத்தை ஒப்பதாயிருக்கும்.

கு ;—மாலைக் காலத்தன்றித் தோன்றாத செவ்வானம் மலையிலுள்ள பதுமராக மணியொளிகள், சூரிய கிரணங்களுடன் மேலிடமெங்கும் பரத்தலால். பகற்காலத்தினும் தோன்றுவதாயிற்று என்பதாம், தாதுராகம் - காவிக்கல்லின் செந்நிறம். (44)

**942.** நிலமகட் கணிக ளென்ன
நிரைகதிர் முத்தஞ் சிந்தி
மலைமகள் கொழுநன் சென்னி
வந்துவீழ் கங்கை மான
அலகில்பொன் னலம்பி யோடிச்
சாந்துசே ரருவி மாலை
உலகளந் தவன்றன் மார்பி
னுத்தரீ கத்தை யொத்த.

நிலமகட்கு அணிகள் என்ன நிரை கதிர் முத்தம் சிந்தி,
மலைமகள் கொழுநன் சென்னி வந்து வீழ் கங்கை மான,
அலகில் பொன் அலம்பி ஓடிச் சாந்து சேர் அருவி மாலை,
உலகு அளந்தவன் தன் மார்பின் உத்தரீகத்தை ஒத்த.

பொ :—பூமி தேவிக்கு அணிகளென்னும்படி ஒழுங்காக ஒளிர் முத்துக்களைச் சிதறி, உமாதேவியின் நாயகனான சிவபிரானது முடியிடமாக வந்து வீழ்கின்ற கங்கையை ஒப்ப, (வெண்ணிறத்துடன்) அளவற்ற பொன்னைக் கொழித்துக்கொண்டு பெருகி சந்தன மரங்களொடு பொருந்திய மலையருவியின் வரிசை, இவ்வுலகை அளந்தருளின திருமாலின் மார்பிலணிந்த உத்தரீயத்தை ஒப்பதாயிற்று.

கு :—அருவி வெண்ணிறங்கொண்டு வீழ்தலால் உத்தரீயத்துக் கொப்பாயிற்று என்க. (45)

அம்மலையிற் கண்ட பல நிகழ்ச்சிகள் 943—951

**943.** கோடுலா நாகப் போதோ
டிலவங்க மலருங் கூட்டிச்
சூடுவார் களிவண் டோச்சித்
தூநறுந் தேறல் கொள்வார்

கேடிலா மகர யாழிற்
கின்னர மிதுனம் பாடும்
பாடலா லூட னீங்கும்
பரிமுக மாக்கள் கண்டார்.

கோடு உலாம் நாகப்போதோடு இலவங்கமலரும் கூட்டிச்
சூடு வார், களி வண்டு ஓச்சித் தூ நறும் தேறல் கொள்வார்,
கேடு இல மகரயாழின் கின்னரமிதுனம் பாடும்
பாடலால் ஊடல் நீங்கும் பரிமுகமாக்கள் கண்டார்.

பொ:—கொம்புகளிற் பூத்த சுரபுன்னைமலர்களோடு இலவங்க மலரையும் இணைத்து அணிபவர்களான அம் மலைவாணர்கள்: மதுக்களிப்புள்ள வண்டுகளை ஓட்டிவிட்டுத் தூயமணம் பொருந்திய மதுக்களைப் பருகுபவராயினர். (அதனுடன்) குற்றமற்ற மகரவீணையோடு கூடி, ஆண் பெண் பாலார்களான கின்னரர்கள் பாடும் கீதவினிமையால் தாங்கொண்ட ஊடல்நீங்குகின்ற குதிரை முகங்கொண்ட தெய்வமக்களையும், அவர்கள் காண்பாராயினர்.

கு:—பூக்கொய்து சூடுதலும் மணமுள்ள மதுக்களைப் பருகுதலும் இனிய பாடலைக் கேட்டலும் தேவசாதியினர் செய்கைகளைக்கண்டு மகிழ்தலுமாக இவ்வகையால் ஆங்குச்சென்ற மக்கள் மகிழ்ச்சி அடையலாயினர் என்றவாறு. கின்னர மிதுனம் - ஆண் பெண்களாகக் கூடிவாழ்பவரும் இசை வல்லவருமான தேவகணத்தார். பரிமுகமாதர் – குதிரை முகமும் மனித உடலும்கொண்ட தேவசாதிப் பெண்பாலார். 'பளிக்கறைச் சில பரிமுக மாக்களைப் பாராய்' என்பர் சித்திர கூடப்படலத்தும் (11). (46)

944. பெருங்களிப் புற்ற மைந்தர்
பேரெழி லாகத் தோடும்
பொருந்துணைக் கொங்கை யன்ன
பொருவில்கோங் கரும்பின் மாடே
மருங்கெனக் குழையுங் கொம்பின்
மடப்பெடை வண்டுந் தங்கள்
கருங்குழற் களிக்கும் வண்டுங்
கடிமணம் புணரக் கண்டார்.

பெருங் களிப்பு உற்ற மைந்தர்
பேர்எழில் ஆகத்தோடும்
பொரும் துணைக் கொங்கை அன்ன
பொருவு இல் கோங்கு அரும்பின்மாடே,
மருங்கு எனக் குழையும் கொம்பின்
மடப் பெடை வண்டும், தங்கள்
கருங்குழல் களிக்கும் வண்டும்,
கடிமணம் புணரக் கண்டார்.

பொ :—பெரும் மகிழ்ச்சியுற்ற இளைஞரான ஆடவரின் மிக்க அழகுடைய மார்பிலே தாக்கும் இரட்டையான தனங்களை ஒத்த, வேறு உவமையில்லாத கோங்கரும்புகளிடத்து, மகளிரின் இடை போலத் துவளும் பூங்கொம்பில் தங்கும் இளம் பெண்வண்டு களும் தம் கருங்கூந்தலில் படிந்து களிக்கும் ஆண்வண்டுகளும் புதுமணஞ்செய்துகொள்ள (மக்கள்) கண்டார்கள்.

கு :—மலையிலே பூச்சூடிக் கள்ளுண்டு களித்த மக்கள் வண்டுகள் கடிமணம்புணர்தலையும் கண்டார்கள் என்பதனால் சீதா கல்யாணத்துக்கு முன்நிகழும் மகிழ்ச்சிச் செயல்கள் பலவும், சந்திரசயிலத்திடமாகவும் நிகழலாயின என்பது குறித்தவாறு. இங்கு நிகழும் கடிமணம், கலவிக்குறியமைந்த ஆண்பெண்பாலா ரின் உறுப்புக்களையொத்த இடங்களிலே நிகழலாயிற்று என்ற குறிப்பு, இப்பாட்டின் முதன் மூன்றடிகளிலே தொனித்தலும் காண்க. (47)

945. படிகத்தின் றலமென் றெண்ணிப்
படர்சுனை முடுகிப் புக்க
சுடிகைப்பூங் கமல மன்ன
சுடர்மதி முகத்தி னுர்தம்
வடகத்தோ டுடுத்த தூசு
மாசினீர் நனைப்ப நோக்கிக்
கடகக்கை மறித்துத் தம்மில்
கருங்கழல் வீரர் நக்கார்.

படிகத்தின் தலம் என்று எண்ணிப், படர் சுனை முடுகிப் புக்க சுடிகைப் பூம் கமலம் அன்ன சுடர் மதி முகத்தினுர் தம் வடகத்தோடு உடுத்த தூசும் மாசு இல் நீர் நனைப்ப, நோக்கி கடகக் கை மறித்துத் தம்மில், கருங்கழல் வீரர் நக்கார்.

பொ :—பரவிய நீர்ச்சுனையைப் படிகக்கற்கள் படுத்த இட மென்று மாருகக்கருதி விரைந்துசென்ற-சுட்டியணிந்த அழகிய தாமரை மலர்போன்ற மதிமுகமுடைய - மகளிரின் மேலாடை யோடு உடுத்த சிலேயையும் களங்கமற்ற நீர் நனேக்க, அதனை நோக்கிக் கடகமணிந்த கைகளை மறித்துநின்று பெரிய கழலணிந்த வீரர்கள் தங்களுக்குள் நகைக்கலானுர்கள்.

கு :—பளிங்குத் தலத்துக்கும் சுனேத்தலத்துக்கும் வேறுபாடு தோன்ருமையால் மாதர் மயங்கினராக, வீரர் தம்முள் நக்கார். (48)

946. பூவணே பலவுங் கண்டார்
பொன்னரி மாலே கண்டார்
மேவருங் கோப மன்ன
வெள்ளிலேத் தம்பல் கண்டார்
ஆவியி னினிய கொண்கர்ப்
பிரிந்தறி வழிந்த விஞ்சைப்
பாவையர் வைகத் தீய்ந்த
பல்லவ சயனங் கண்டார்.

பூ அணே பலவும் கண்டார்; பொன் அரி மாலே கண்டார்;
மேவரும் கோபம் அன்ன வெள்ளிலேத் தம்பல் கண்டார்;
ஆவியின் இனிய கொண்கர்ப் பிரிந்து அறிவு அழிந்த விஞ்சைப்;
பாவையர் வைகத் தீய்ந்த பல்லவசயனம் கண்டார்.

பொ :—(அங்குள்ள மக்கள்) மலர்ப்படுக்கை பலவற்றையும் பார்த்தனர்; (புலவியால் எறிந்து போகட்ட) பொன்னரிமாலே களேக் கண்டனர்; (கலவியில்) விரும்பத்தகும் இந்திர கோபத்தை ஒத்த துப்பிய வெற்றிலேத் தம்பலத்தைக் கண்டனர். உயிரினும் இனியரான கணவரைப் பிரிந்து மதியிழந்த வித்தியாதர மகளிர் தங்குவதனல் தீய்ந்துபோன தளிர்ப் படுக்கைகளேயும் பார்த்தனர்.

கு :—இவை வெவ்வேறிடங்களில் அமைந்திருந்த வரைக்காட்சி களாதலின் 'கண்டனர் கண்டனர்' எனத் தனித்தனி கூறினுர். (49)

947. பானலங் கண்க ளாடப்
பவளவாய் முறுவ லாடப்
பீனவெம் முலேயி னிட்ட
பெருவிலே யார மாடத்

தேன்முரன் றளகத் தாடத்
திருமணிக் குழைக ளாட
வானவர் மகளி ராடும்
வாசநா றூசல் கண்டார்.

பானல் அம் கண்கள் ஆடப், பவளவாய் முறுவல் ஆடப்,
பீன வெம் முலையின் இட்ட பெருவிலை ஆரம் ஆடத்,
தேன் முரன்று அளகத்து ஆடத், திரு மணிக் குழைகள் ஆட,
வானவர் மகளிர் ஆடும் வாசம் நாறு ஊசல் கண்டார்.

பொ :—கருங்குவளை மலர்போலும் கண்கள் பிறழவும் பவளம் போன்ற தம் வாயிலே புன்முறுவல் தோற்றவும், பருத்துள்ளனவும் விரும்பத்தக்கனவுமான தனங்களிலே அணிந்த பெருவிலை பெற்ற முத்தாரங்கள் அசையவும், தேன் வண்டுகள் கூந்தலிலே ஒலித்துக்கொண்டு சுழலவும் அழகிய மணிகளிழைத்த குழைகள் (செவியிடமாக) அசையவும் தேவமாதர்கள் ஆடுகின்ற பரிமளம் வீசும் ஊசல்களையும் பார்த்தார்கள்.

கு :—சொற்பொருட் பின்வரு நிலையணி. (50)

948. சுந்தர வான மாதர்
துவரிதழ்ப் பவள வாயும்
அந்தமில் சுரும்பும் தேனு
மிஞிறுமுண் டல்குல் விற்கும்
பைந்தொடி மகளிர் கைத்தோர்
பசையில்லை யென்ன விட்ட
மைந்தரி னீத்த தீந்தேன்
வள்ளங்கள் பலவுங் கண்டார்.

சுந்தர வான மாதர் துவர் இதழ்ப் பவள வாயும்,
அந்தம் இல் சுரும்பும், தேனும், மிஞிறும், உண்டு, அல்குல் விற்கும்
பைந்தொடி மகளிர் கைத்து ஓர் பசை இல்லை என்ன விட்ட
மைந்தரின் நீத்த, தீம் தேன் வள்ளங்கள் பலவும் கண்டார்.

பொ :—தம் அல்குலை விலைக்கு விற்கின்ற பசிய தொடிகள் அணிந்த மாதர்கள் (உள்ள செல்வத்தை யெல்லாம் பறித்துக் கொண்டு) கையதான பயன் வேறில்லை எனக் கருதிக் கைவிட்ட ஆடவரைப்போல, அழகிய தேவ மடந்தையரின் சிவந்த இதழ்

களுடன் கூடிய பவளம்போன்ற வாயும் வரம்பில்லாத சுரும்பு, தேன், மிஞிறுகளான வண்டினங்களும் பருகிக் கைவிட்ட இனிய மதுவார்ந்த (வெறுங்) கிண்ணங்கள் பலவற்றையும் பார்த்தார் கள்.

கு :—வாயும் சுரும்பும் தேனும் மிஞிறும் உண்டு நீத்த வள்ளம் என இயையும், சுரும்பு முதலியன வண்டினங்கள் என்பதுமேல் 32-ஆம் பாடல் உரையாலும் அறிக. (51)

**949.** அற்பக லாக்குஞ் சோதிப்
பளிக்கறை யமளிப் பாங்கர்
மற்பக மலர்ந்த திண்டோள்
வானவர் மணந்த கோல
விற்பகை நுதலி ஞர்தங்
கலவியின் வெறுத்து நீத்த
கற்பக மீன்ற மாலை
கலனெடுங் கிடப்பக் கண்டார்.

அல் பகல் ஆக்கும் சோதிப் பளிங்கு அறை அமளிப் பாங்கர்,
மல் பக மலர்ந்த திண் தோள் வானவர் மணந்த கோல
வில் பகை நுதலினர், தம் கலவியின் வெறுத்து நீத்த
கற்பகம் ஈன்ற மாலை கலனெடும் கிடப்பக் கண்டார்.

பொ :—இருளையும் பகலாக்கவல்ல சோதியுள்ள பளிங்கறை களில் அமைந்த படுக்கையறையில் மல்லரும் தோற்றோடும்படி அகன்ற திண்ணிய தோள்களுள்ள தேவர்களால் கூடப்பெற்ற வரும் வில்லோடு உவமையிற் பகைக்கின்ற நெற்றியுடையவருமான தெய்வமகளிர் தம்புணர்ச்சிக் காலத்தில் (அதற்கிடையூறு விளைத் தலால்) வெறுப்போடு கழற்றியெறிந்த கற்பக மலர்களாலியன்ற மாலைகள் அணிகலங்களோடு வீழ்ந்து கிடப்பவற்றைக் கண்டார் கள்.

கு :—வில்பகை நுதலினர் - வில்லோடு உவமையில் வேறு படும் நெற்றியர்; 'வில்லொக்கும் நுதலென்றாலும்' என்பர் பின்னும். (ஆரணிய-மாரீசன் வதைப்-74.) (52)

**950.** கையென மலர வேண்டி
யரும்பிய காந்த ணோக்கிப்
பையர விதுவென் றஞ்சிப்
படைக்கண்கள் புதைக்கின் றாரும்
நெய்தவழ் வயிரப் பாறை
நிழலிடைத் தோன்றும் போதைக்
கொய்திவை தருதி ரென்று
கொழுநரைத் தொழுகின் றாரும்.

கை என மலரவேண்டி
அரும்பிய காந்தள் நோக்கிப்,
'பை அரவு இது' என்று அஞ்சிப்
படைக் கண்கள் புதைக்கின்றாரும்,
நெய் தவழ் வயிரப் பாறை
நிழலிடைத் தோன்றும் போதைக்,
'கொய்து இவை தருதிர்' என்று
கொழுநரைத் தொழுகின்றாரும்.

பொ :—(மகளிர்) கைபோல மலரவிரும்பி அரும்பிய காந்தளைக் கண்டு, 'இது பையரவு' என்றஞ்சித் தம் வேலாயுதம் போலும் கண்களைக் கைகளால் மூடிக்கொள்பவரும், வெண்ணெய்போல் விளங்கும் வயிரப்பாறைகளின் ஒளியில் தோன்றுகின்ற பிரதி விம்பமலரை (உண்மையான மலரென்று கருதியதால்) 'இந்தப் பூவைப் பறித்துத் தாருங்கள்' என்று தம் கணவரைத் தொழுகின்ற பெண்டிரும்.

கு :—காந்தள் மலர் படமெடுத்த பாம்புபோலத் தோன்றுதலை- 'வாளெயிற் றரவம்போல வான்றலைதோன்ற வார்ந்த, தாளுடைக் கோடல்' என்றார் கார்காலப் படலத்தும் (27). (53)

**951.** பின்னங்க ளுகிரிற் செய்து
பிண்டியந் தளிர்கைக் கொண்ட
சின்னங்கள் முலையி னப்பித்
தேமலர் கொய்கின் றாரும்
வன்னங்கள் பலவுந் தோன்ற
மணியொளிர் மலையி னில்லா
அன்னங்கள் புகுந்த வென்ன
வகன்சுனை குடைகின் றாரும்.

பின்னங்கள் உகிரிற் செய்து, பிண்டி அம் தளிர் கைக் கொண்ட
சின்னங்கள் முலையின் அப்பித், தேமலர் கொய்கின்றாரும்:
வன்னங்கள் பலவும் தோன்ற மணி ஒளிர் மலையில் நில்லா
அன்னங்கள் புகுந்த என்ன, அகன் சுனை குடைகின்றாரும்.

பொ:—அசோகின் அழகிய தளிர்களைத் தம் நகங்களால் (பல் வகையுருவுள்ள) துண்டங்களாகக் கிள்ளிக் கைக்கொண்ட (அச்) சின்னங்களைத் தம் முலைகளிடம் அழகுறப் பொருத்தி, தேனுடைய மலர்களைப் பறிப்பவரும், பல்வகை வண்ணங்களும் தோன்றும்படி இரத்தினங்கள் ஒளிரும் மலையிலே நிலைபெற்று வாழாத அன்னங்கள் (இப்போது) புகுந்தன என்று காண்போர் கருதும்படி அகன்ற சுனைகளிலே முழுகுபவரும் (ஆயினர் அந்தச் சேனையுடன் சென்ற மாதர்கள்)

கு:—தளிர் முறிகளைத் தம் தனங்களில் அப்பி அலங்கரித்துக் கொள்ளுதல் மகளிர் இயல்பு என்பதனை—'பொறிப்பூம் புன்கின் எழிற்றகை ஒண்முறி, சுணங்கணி வனமுலை யணங்கு கொளத் திமிரி' (நற்-9) என்பதனுலறிக. முன்பாடலிலும் இப்பாடலிலும் உம்மைகளால் முடித்துப் பயனில கூறுதது, 'இவர் போலப் பல செயல்களைப் புரிபவர்களையும் கண்டு கொள்க' என்பது குறித்தற்கு; 'ஆவிறையும் ஈயீறிகரமும்' (நன்னூல். பத. 20) என இக்கருத்தே பெற வைத்துள்ளமை ஒப்பிடுக. (54)

## அம் மலையின் வருணனை (952—960)

952. ஈனு மாழை யிளந்தளி ரேயொளி
★ ஈனு மாழை யிளந்தளி ரேயிடை
மானும் வேழமு நாகமு மாதர்தோள்
மானும் வேழமு நாகமு மாடெலாம்.

ஈனும் மாழை இளந்தளிர் ஏய் ஒளி,
ஈனும் மாழை இளந்தளிர் ஏ இடை,
மானும், வேழமும், நாகமும், மாதர் தோள்
மானும் வேழமும், நாகமும், மாடு எலாம்.

பொ:—அம்மலையின் நடுவிடமான இவ்விடத்தும் மாமரத்தின் இளந்தளிரை ஒத்த ஒளியைத்தரும் பொன்னின் மெல்லிய தகடுகளேயாம். அம்மலைப்பக்கமெல்லாம் மான்களும் யானைகளும் பாம்புகளும் மகளிரின் தோளையொத்த மூங்கில்களும் சுரபுன்னை மரங்களும் ஆகும்.

கு :—இப்படலத்துள் மடக்கணியான யமகப் பாடல்கள் இதுமுதல் ஒன்பது கவிகள்வரை கூறப்படுகின்றன. வரைக் காட்சியில் இத்தகை அணியமைந்த பாடல்களைச் சிசுபாலவதம் போலும் வடமொழிக் காவியங்களிலும் காணலாம் என்பர். (55)

953. திமிர மாவுடற் குங்குமச் சேதகம்
திமிர மாவொடுஞ் சந்தொடுந் தேய்க்குமால்
அமர மாதரை யொத்தொளி ரஞ்சொலார்
அமர மாதரை யொத்ததவ் வானமே.

**திமிர மா, உடல் குங்குமச் சேதகம்**
**திமிர, மாவொடும், சந்தொடும், தேய்க்குமால்;**
**அமர மாதரை ஒத்து ஒளிர் அம் சொலார்**
**அமர, மாதரை, ஒத்தது அவ் வானமே.**

பொ :—இருள்போன்ற கருநிறமுள்ள யானைகள், தம் உடலிலே மாதர்கள் பூசிய குங்குமச் சேறு நிரம்பியதனல் அச்சேறு நீங்கும் படி மாமரத்திலும் சந்தன மரத்திலும் தம்முடம்பைத் தேய்க்கும்; அவ்விடங்களில் தேவமாதரை ஒப்பவிளங்கிய இனிய சொல்லை யுடைய மகளிர் பொருந்தியிருத்தலால் (அந்தப்) பெருமலைநிலம், தேவர் பெண்டிர் தங்கும் அந்த விண்ணுலகமே ஒத்தது.

கு :—திமிரமா - காட்டுப் பன்றியும் ஆம். 'இருள் துணிந்தன்ன வேனம்' என்பர் (மலைபடு, 246). மாதர் ஆடும் குங்குமச் சேறு படிந்த நீரில் மூழ்கிக் கிடத்தலால், அச்சேறு தம்மேற் படிந்ததை நீக்க வேண்டி தேய்க்கலாயின என்க. (56)

954. பேர வாவொடு மாசுணம் பேரவே
பேர வாவொடு மாசுணம் பேரவே
ஆர வாரத்தி னோடு மருவியே
ஆர வாரத்தி னோடு மருவியே.

**பேர் அவாவொடு மாசுணம் பேரவே**
**பேர ஆவொடு மாசுணம் பேரவே**
**ஆர வாரத்தினோடு மருவியே,**
**ஆர ஆரத்தின் ஓடும் அருவியே.**

பொ :—(இரையைப்) பெரிதும் விரும்பிப் பெரும் பாம்புகள் தம் இருப்பிடம் விட்டு நகர்வதனுல் பெரியவான காட்டுப் பசுக்கள் தம் இடம் நீங்கி ஓட, அதனுல் பெரிய தூள்கள் எழுந்து பறக்கின்றன. மலையருவிகள் முத்துக்களோடு பெரிதுங் கலந்து பேரொலியுடன் (அங்கே) ஓடுவனவாகும்.

கு :—இனி, மாசுணம் பேர்வதனுல் மூங்கில்கள் வேரற்று விழ அதற்கு அஞ்சிக் காட்டுப்பசுக்கள் ஓட, அவ்வோட்டத்தால் தூளிகள் பேர்வன என்று பொருள் கூறலுமாம். ஈண்டு வேய் என்பது கடைக்குறை. (57)

955. புகலும் வாளரிக் கண்ணியர் பொற்புயம்
புகலும் வாளரிக் கண்ணியர் பூண்முலை
அகிலு மாரமு மாரவங் கோங்குமே
அகிலு மாரமு மாரவங் கோங்குமே.

புகலும் வாள் அரிக் கண்ணியர் பொன் புயம்
புகலும் வாள் அரிக் கண்ணியர் பூண் முலை,
அகிலும் ஆரமும் ஆர, அங்கு ஓங்குமே,
அகிலும், ஆரமும், மாரவம், கோங்குமே.

பொ :—விரும்பத்தகும் ஒளியுள்ள வண்டுகளையுடைய முடிமாலை யணிந்த ஆடவரது புயங்களிலே, வாள் போலும் இரேகை பரந்த கண்களையுடைய பெண்களது பூணணிந்த முலைகள் புக்க வளவில் அகிற்குழம்பும் சந்தனக்குழம்பும் நிறைந்து (அங்குள்ள) அகில், சந்தனம், மரவம் கோங்கு மரங்களிலும் அவற்றின் மணம் பரிமளிக்கின்றன.

கு :—வாள் அரிக் கண்ணியர் - ஒளி பொருந்திய பொன்னரி மாலை யணிந்தவர் எனினுமாம். மரவம் - குங்கும மரம்; மாரவம் என நீட்டல் விகாரம் பெற்றது. (58)

956. துன்ன ரம்பை நிரம்பிய தொல்வரை
துன்ன ரம்பைய ரூருவிற் றூேன்றுமால்
இன்ன ரம்பயில் கீதங்க ளென்னலாம்
இன்ன ரம்பயில் கின்றன ரேழைமார்.

துன் அரம்பை நிரம்பிய தொல்வரை
துன் அரம்பையர் ஊருவில் தோன்றுமால் :
கின்னரம் பயில் கீதங்கள் என்னலாம்
கின்னரம் பயில்கின்றனர் ஏழைமார்.

பொ :—அந்தப் பழைய மலையில் நிரம்ப வளர்ந்த வாழைகள் ஆங்கு வந்துள்ள தேவமகளிரின் தொடைபோலத் தோன்றுவனவாம். மாதர்கள் கின்னர தேவகணம் பாடுகின்ற இன்னோசையே என்னும்படி, அவ்விடத்தில் இனிய யாழ்நரம்பைத் தடவி வாசித்துப் பண்களின் சுவையை நுகர்வாராயினர்.

கு :—கின்னரம் - கின்னரமிதுனம் என்ற புள்ளினமுமாம். கின்னரம் பயிலுதல் – ஒருவகை யாழினை வாசித்தல், (59)

957. ஊறு மாகட மாவுற வூங்கெலாம்
ஊறு மாகட மாமத மோடுமே
ஆறு சேர்வன மாவரை யாடுமே.
ஆறு சேர்வன மாவரை யாடுமே.

ஊறு மாகட மா உற ஊங்கெலாம்
ஊறு மாகட மாமதம் ஓடுமே :
ஆறு சேர்வன மா, வரை ஆடுமே,
ஆறு சேர்வன மாவரை ஆடுமே.

பொ :—மலையிடங்களிலெல்லாம் பெரிய காட்டுப் பசுக்களும் செல்லவியலாது துன்பமுறும்படி ஊறுகின்ற யானையின் மதம் ஓடுகின்றன. வழியிற் செல்கின்ற காட்டு விலங்குகளும் மலையாடும் அம்மதப் பெருக்கான ஆற்றில் சேர்வனவாய் அம்மலையில் மெல்ல இயங்குவனவாம்.

கு :—கடமா - காட்டா; மரையா என்ப, (நாலடி - 300) (60)

958. கல்லி யங்கு கருங்குற மங்கையர்
கல்லி யங்ககழ் காமர் கிழங்கெடா
வல்லி யங்க ணெருங்கு மருங்கெலாம்
வல்லி யங்க ணெருங்கி மயங்குமே.

கல் இயங்கு கரும் குறமங்கையர்
கல்லி அங்கு அகழ் காமர் கிழங்கு எடா,
வல்லியங்கள் நெருங்கும் மருங்கு எலாம்,
வல் இயங்கள் நெருங்கி மயங்குமே.

பொ :—மலையில் வாழ்கின்ற கரிய குறத்தியர் அங்கு வெட்டித் தோண்டி அழகிய கிழங்குகளை எடாதபடி புலிகள் நெருங்கி வாழ்கின்ற மலைப் பக்கங்களிலெல்லாம் வலிய பறைகள் மிக்கு ஒலிக்கும்.

கு :—வல்லி அங்கண் நெருங்கும் மருங்கு எனப் பிரித்து-(கிழங்கு எடாதபடி) கொடிகள் நெருங்கும் அழகிய இடங்களிலெல்லாம் என்று பொருள் கூறலுமாம். (61)

959. கோளி பங்கய மூழ்கக் குளிர்கயம்
கோளி பங்கய மூழ்கக் குலைந்தவால்
ஆளி பொங்கு மரம்பைய ரோதியே
ஆளி பொங்கு மரம்பைய ரோதியே.

கோள் இபம் கயம் மூழ்கக், குளிர் கயம்
கோளி பங்கயம் ஊழ்க்கக் குலைந்த ஆல்;
ஆளி பொங்கும் மரம் பையர் ஓதியே
ஆளி பொங்கும் அரம்பையர் ஓதியே.

பொ :—குளிர்ந்த நீர்நிலைகளில் வலிமையுள்ள யானைகளும் அவற்றின் கன்றுகளும் மூழ்குதலால் (பூவாதுகாய்க்கும்) ஆல் முதலிய மரங்களும் தாமரைக் கொடிகளும் நலங்கெட்டுக் குலைந்தன. சிங்கங்கள் சிறியெழும், மரங்களைப் பக்கத்துடைய மலையில் பொருந்திய தேவமாதர் கூந்தலில் வண்டுகள் மகிழ்ச்சியுடன் தங்குவன.

கு :—ஊழ்க - நலங்கெட; குகரச் சாரியை பெற்றது. மூழ்க என்று பாடங்கொண்டு முழுக்க எனினுமாம். பயல் என்ற சொல் முதலினும் கடையினும் போலி பெற்றுப் பையர் என நின்றது. பயல் - பாதி, பக்கம். '' பொருப்பரசி பயலன் ' (திருக்கோவை-240) என்ப. அளி - ஆளி என நீண்டது; ஆளகத்தினேடு என் புழிப்போல (அயோத்-மந்திரப். 56) (62)

960. ஆக மாலேய மாகவு ளாள்பொலி
வாக மாலேய னின்றென லாகுமால்
மேக மாலே மிடைந்தன மேலெலா
மேக மாலே கிடந்தது கீழெலாம்.

ஆகம் ஆலேயம் ஆக உளாள் பொலிவு
ஆக, மால் அயல் நின்றெனல் ஆகுமால்;
மேக மாலே மிடைந்தன மேல் எலாம்,
ஏக மாலே கிடந்தது கீழ் எலாம்.

பொ :—(அம்மலேயில்) மேக வரிசைகள் மேலிடமெங்கும் நெருங்கி யிருக்கக் கீழிட மெல்லாம் ஒரே மாலேத் திரளாகக் கிடக்கும் (அம்மலேயின்) காட்சி, திருமாலின் திருமேனியே ஆலய மாகத் தங்கியிருக்கப் பெற்ற திருமகள் பொலிந்து விளங்கத் திருமால் பக்கத்தில் நின்றது போல இருந்தது.

கு :—பூமாலேகள் கீழே கிடப்பவை, சேனே மகளிரும் தேவ மகளிரும் அணிய வைத்திருப்பன. மேகம் சூழ்ந்த மலே திருமாலுக்கும் மாலேகள் திருமகளுக்கும் உவமிக்கப்பட்டன. (63)

ஆடவரும் பெண்டிரும் விளேயாடுதல்

961. பொங்கு தேனுகர் பூமிஞி றுமெென
எங்கு மாதரு மைந்தரு மீண்டியத்
துங்க மால்வரைச் சூழல்கள் யாவையும்
தங்கி நீங்கலர் தாமினி தாடுவார்.

பொங்கு தேன் நுகர் பூ மிஞிறு ஆம் என,
எங்கும் மாதரும் மைந்தரும் ஈண்டி, அத்
துங்க மால் வரைச் சூழல்கள் யாவையும்
தங்கி, நீங்கலர், தாம் இனிது ஆடுவார்.

பொ :—பெருகும் தேனேப் பருகவரும் பூவில் மொய்க்கும் வண்டுகள் போல எல்லாவிடத்தும் ஆடவரும் மகளிரும் நெருங்கி, ஓங்கிப் பெரிதான அம்மலேச் சாரல்களிலெல்லாம் தங்கி, அம் மலேயை விட்டு நீங்க மனமில்லாதவராய் இனிதாக விளேயாடலா யினர். (64)

அனைவரும் மலைவளத்தில் ஈடுபட்டிருத்தல்

962. இறக்க மென்பதை யெண்ணில ரெண்ணுங்கால்
பிறக்கு மென்பதோர் பீழைய தாதலால்
துறக்க மெய்திய தூயவ ரேயென
மறக்க கிற்றில ரன்னதன் மாண்பெலாம்.

இறக்கம் என்பதை எண்ணிலர், எண்ணுங்கால்
பிறக்கும் என்பதோர் பீழையது ஆதலால்;
துறக்கம் எய்திய தூயவரே என,
மறக்ககிற்றிலர் அன்னதன் மாண்பு எலாம்.

பொ :—(அவ்வாடவரும் மகளிரும்) அம்மலையை விட்டு இறங்குதலை நினைத்தால், அது துன்பத்தை உண்டாக்கும் என்பதாகிய ஓர் காரணத்தால் (அதனை மனத்தாலும்) நினையாதவரானார்கள், (அன்றியும்) விண்ணுலக வின்பத்தை நுகர்கின்ற சான்றோர் போல அம்மலையின் (வளமுதலிய) மாட்சிகளை யெல்லாம் மறக்க இயலாதவரும் ஆயினர்.

கு ;—பிறக்கும் - பிறப்பிக்கும்; 'குடிபொன்றி' (குறள்-171) என்புழிப் போலத் தன்வினை பிறவினைப் பொருளது. (65)

அந்தி மாலை வருணனை

963. மஞ்சார் மலைவா ரணமொத்தது
★ வானி னோடும்
வெஞ்சாயை யுடைக்கதி ரங்கதன்
மீது பாயும்
பஞ்சா னனமொத்தது மற்றது
பாய வேறும்
செஞ்சோரி யெனப்பொலி வுற்றது
செக்கர் வானம்.

மஞ்சு ஆர் மலை வாரணம் ஒத்தது ; வானின் ஓடும்
வெம் சாயை உடைக் கதிர் அங்கு அதன் மீது பாயும்
பஞ்சானனம் ஒத்தது; மற்று அது பாய ஏறும்
செஞ்சோரி எனப் பொலிவுற்றது செக்கர் வானம்.

பொ :—மேகந்தங்கப் பெற்ற அம்மலையானது யானையைப் போன்றுளது; விண்ணிடமாக விரையும் வெய்ய கிரணம் உடைய சூரியன் அந்த யானை மீது பாய்கின்ற சிங்கம் போன்றுளது. அந்தச் சிங்கம் (யானை மீது) பாய்ந்ததனுல் எழுகின்ற செந்நிற முள்ள இரத்தம் போல விளங்கியது செவ்வானம்.

கு :—பஞ்சானனம் – சிங்கம். (66)

அந்தியில் சந்திர சைலத்தின் தோற்றம் 964—965

**964.** திணியார் சினைமா மரமியாவையுஞ்
செக்கர் பாயத்
தணியாத நறுந்தளி ரீன்றன
போன்று தாழ
அணியா ரொளிவந்து நிரம்பலி
னங்க மெங்கும்
மணியா லியன்ற மலையொத்ததம்
மாசில் குன்றம்.

திணி ஆர் சினை மா மரம் யாவையும், செக்கர் பாயத்,
தணியாத நறும் தளிர் ஈன்றன போன்று தாழ,
அணி ஆர் ஒளி வந்து நிரம்பலின், அங்கம் எங்கும்
மணியால் இயன்ற மலை ஒத்தது அம் மாசு இல் குன்றம்.

பொ :—வலிய கிளைகள் கொண்ட பெருமரங்கள் யாவும் (அச்) செவ்வானத்தின் சோதி வீசுவதனுல் குறைவற்ற சிறந்த தளிர்கள் தழைத்தன போல விளங்க, தன்னிடமெல்லாம் அழகிய அந்தச் செந்நிற ஒளிவந்து நிறைதலால் குற்றமற்ற அந்த மலை செம்மணி களால் இழைக்கப் பெற்ற குன்றத்தை ஒப்பதாயிற்று. (67)

**965.** கண்ணுக் கினிதாகி விளங்கிய
காட்சி யாலும்
எண்ணற் கரிதாகி யிலங்கு
சிரங்க ளாலும்
வண்ணக் கொழுஞ்சந் தனச்சேதக
மார்ப ணிந்த
அண்ணற் கரியோன் றனை யொத்ததவ்
வாசில் குன்றம்.

கண்ணுக்கு இனிது ஆகி விளங்கிய காட்சியாலும்,
எண்ணற்கு அரிது ஆகி இலங்கு சிரங்களாலும்,
வண்ணம் கொழும் சந்தனச் சேதகம் மார்பு அணிந்த
அண்ணல் கரியோன்தனை ஒத்தது அவ் ஆசு இல் குன்றம்.

பொ :—கண்களுக்கு இனியதாய் விளங்கிய காட்சியினாலும் எண்ணற்கு அரிதாமாறு ஆயிரக்கணக்கில் விளங்கும் சிகரங்களாலும் – அழகிய நிறங் கொண்டதாய் வளமுற்ற சந்தனக் குழம்பைத் தன் மார்பிலணிந்த தலைமையோனை திருமாலை அந்த மறுவற்ற குன்றம் ஒத்திருந்தது.

கு :—'பெய்துளவத் தாரார் முடியாயிரம்' (சடகோப ரந்தாதி) என்றதனால் திருமாலுக்கும் ஆயிரம் முடியுடைமை அறியப் படும். (68)

### சேனைகள் மலையடிவாரத்தில் தங்குதல்

**966.** ஊனும் முயிரு மனையா
 ரொருவர்க் கொருவர்
தேனும் மிஞிறுஞ் சிறுதும்பியும்
 பம்பி யார்ப்ப
யானை யினமும் பிடியும்மிக
 லாளி யேறும்
மானுங் கலையும் மெனமால்வரை
 வந்தி ழிந்தார்.

ஊனும் உயிரும் அனையார் ஒருவர்க்கு ஒருவர்,
தேனும் மிஞிறும் சிறு தும்பியும் பம்பி ஆர்ப்ப,
யானை இனமும் பிடியும், இகல் ஆளி ஏறும்,
மானும் கலையும் என மால் வரை வந்து இழிந்தார்.

பொ :—ஒருவர்க் கொருவர் உடலும் உயிரும் போல்வாராய் ஒன்றிய ஆடவரும் மகளிரும் யானையினமும் பிடியினமும் போலவும், வலிமையுள்ள (பெண் சிங்கங்களோடு கூடிய) ஆண் சிங்கங்கள்போலவும், பெண்மான்களும் கலைமான்களும் போலவும் தேன், மிஞிறு, சிறுதும்பி என்ற வண்டினங்கள் செறிந்தொலிக்க அந்தச் சந்திர சைலத் தாழ்வரையில் வந்து சேர்ந்தார்கள்.

கு :—ஆணும் பெண்ணுமாகக் கூறப்படுதற்கேற்ப, 'ஆளி யேறும்' என்பதற்குப் பெண் சிங்கங்களோடு கூடிய ஆண்

சிங்கங்கள் என உரை விரிக்கலாயிற்று. ஊனும் தேனும் எனச் சந்தம் நோக்கி மகர ஒற்று மிக்கது. (69)

## இருள் பரத்தல்

967. கால்வா னகத்தே ருடைவெய்யவன்
காய்க டுங்கட்
கோன்மாய் கதிர்ப்புல் லுளைக்கொல்சினக்
கோள ரிம்மா
மேல்பான் மலையிற் புகவீங்கிருள்
வேறி ருந்த
மால்யானை யீட்டம் மெனவந்து
பரந்த தன்றே.

கால் வானகத் தேர் உடை வெய்யவன் காய் கடும் கண், கோல் மாய் கதிர்ப் புல் உளைக் கொல் சினக் கோளரிம்மா மேல்பால் மலையில் புக, வீங்கு இருள் வேறு இருந்த மால் யானை ஈட்டம் என வந்து பரந்தது அன்றே.*

பொ :—ஆகாயத்திடம் உலாவும் ஒற்றையாழித் தேருடைய சூரியனாகிய எரிக்கவல்ல கொடுங்கண்களையும் எய்யும் அம்பு மறைந்துவிடுதற்கு இடமான கிரணங்களாகிய புல்லிய புறமயிர் களையும் கொல்லவல்ல சினத்தையுமுடைய சிங்கமானது மேலைத் திசையில் உள்ள அத்தகிரியிற் புகுந்ததனால் மிக்க இருளானது தனியாகப் பதுங்கிக் கிடந்த பெரிய யானைகளின் கூட்டம் போல் வந்து பரவிற்று.

கு :—வெய்யவனாகிய அரிமா என்க, ஈண்டு சூரியனைச் சிங்க வேறு என்றதற்கேற்ப, 'கால்வானகத் தேருடை' எனவும் 'கோல்மாய் கதிர்ப் புல்லுளை' எனவும் சிலேடை நயம் பெற வைத்தார். சிங்கத்துக்கு உரித்தாம் போது, காலிலும் வாலிலும் நகத்திலும் அழகுடைய எனவும், எய்யும் அம்புகளை மறைக்கும் புல்லிய புறமயிர்ச் செறிவுடைய எனவும் பொருளாம். உவமையும் உருவகமும் கலந்து வந்தன. கோளரிம்மா, மகரம் விரித்தல், (70)

*24–ஆம் பிரதியில் இப்பாடலுடன் வரைக் காட்சிப் படலம் முற்றுப்பெற்று 'மந்தாரமுந்து' என்ற அடுத்த பாடலில் மலர் கொய் படலம் தொடங்கப் பெறுகிறது.

### விளக்கேற்றல்

968. மந்தார முந்து மகரந்த
மணங்கு லாவும்
அந்தா ரரசர்க் கரசன்ற
னனீக வெள்ளம்
நந்தா தொலிக்கு நரலைப்பெரு
வேலை யெல்லாம்
செந்தா மரைபூத் தெனத்தீப
மெடுத்த தன்றே.

**மந்தாரம் உந்து மகரந்த மணம் குலாவும்
அம் தார் அரசர்க்கு அரசன்தன் அனீக வெள்ளம்,
நந்தாது ஒலிக்கும் நரலைப் பெருவேலை எல்லாம்
செந்தாமரை பூத்தது எனத், தீபம் எடுத்தது அன்றே.***

பொ :—மந்தார மலர்கள் சொரியும் தேனது மணங்கமழப் பெற்ற அழகிய மாலை யணிந்த தசரத சக்கரவர்த்தியின் சேனைக் கடல், குறையாமல் ஒலிக்கும் பெரு முழக்கத்தையுடைய பெருங் கடலிட முழுதும் செந்தாமரை பூத்தாற்போல, தீபங்களை ஏற்றி வைத்தது.

கு :—இந்திரனுக்கு உதவியாகச் சென்று சம்பராசுரனை வென்றவனுதலின், அவ்விந்திரனுக்குரிய மந்தாரம் என்ற தெய்வத்தருமலர் தசரதற்கும் கூறப்பட்டது. ''மந்தாரமுந்து மகரந்த மணந்த'' (சுந்தர-கடல்தாவு. 75) எனப் பின்னும் இத்தொடர் பயின்றமை காண்க. . வேலை செந்தாமரை பூத்தென அனீக வெள்ளம் தீப மெடுத்தது என்க. (71)

### சந்திரன் தோற்றம்

969. தண்ணற் கடலிற் றளிசிந்து
தரங்க நீங்கி
விண்ணிற் சுடர்வெண் மதிவந்தது
மீன்கள் சூழ

*1, 3, 4, 6, 15, 19, 23, 25, 29, 43-ஆம் பிரதிகளில் இப் பாடலுடன் வரைக் காட்சிப் படலம் முற்றுப் பெறுகிறது.

வண்ணக் கதிர்வெண் ணிலவின்றிரள்
வாலு கத்தூ
டொண்ணித் திலமீன் றுளிர்வால்வளை
யூர்வ தொத்தே,

தண் நல் கடலில் தளி சிந்து தரங்கம் நீங்கி,
விண்ணில் சுடர் வெண்மதி வந்தது, மீன்கள் சூழ,
வண்ணக் கதிர் வெண் நிலவின் திரள் வாலுகத்தூடு
ஒள் நித்திலம் ஈன்று ஒளிர் வால் வளை ஊர்வது ஒத்தே.*

பொ :—அழகிய வெண்ணிறக் கதிர்களை உடைய நிலவு போன்ற வெண்மணற்குவியலிடையே நன்னிறமுள்ள முத்துக் களைப் பெற்று விளங்கும் வெள்ளிய சங்கங்கள் சஞ்சரிப்பது போன்று, குளிர்ந்து அழகிய கடலிலே திவலைகளை வீசும் அலைகளி னின்று வெளிப்பட்டு ஒளிதிகழும் வெண்ணிறமுள்ள சந்திரன் நட்சத்திரங்கள் தன்னைச் சூழ்ந்திருக்க விண்ணிலே வந்து விளங்குவதாயிற்று.

கு :—வெண் முத்துக்களை வெண்மணற்குவியலிடை ஈன்று ஊரும் சங்கு, நட்சத்திரங்களுடன் விண்ணிடையே ஊர்ந்து தோன்றும் சந்திரனுக்கு உவமை. (72)

## நிலவில் மகளிர் மகிழ்தல்

970. மீனுறு வேலை யொருவெண்மதி
யீனும் வேலை
நோனு ததனை நுவலற்கருங்
கோடி வெள்ளம்
வானு டியரிற் பொலிமாதர்
முகங்க ளென்னும்
ஆனு மதியங்கண் மலர்ந்த
தனிக வேலை.

*1, 3, 4, 6, 15, 19, 25, 29–ஆம் பிரதிகளில் இப்பாடலுடன் உண்டாட்டுப் படலம் தொடங்கப்படுகிறது. 29–ஆம் பிரதியில், 'பூக்கொய் படலம்' 'நீர் விளையாட்டுப் படலம்' என்ற தலைப்பின்றி உண்டாட்டுப் படலத் தொடர்ச்சி யாகவே வரையப்பட்டுள்ளது.

23; 43–ஆம் பிரதிகளில் இப்பாடல் மலர் கொய் படலத்து முதற் பாடலாக அமைந்துள்ளது.

மீன் நாறு வேலை ஒரு வெண் மதி ஈனும் வேலை,
நோனாது அதனை, நுவலற்கு அருங் கோடி வெள்ளம்
வான் நாடியரில் பொலி மாதர் முகங்கள் என்னும்
ஆனா மதியங்கள் மலர்ந்தது அனீக வேலை.

பொ:—மச்சங்களின் புலால் நாற்றம் வீசும் கடலானது வெண்ணிறமுள்ளதொரு சந்திரனைப் பெறுங் காலத்தில், அச்செயற்குப் பொறுக்காமல், சேனா சமுத்திரமானது - தேவலோக மகளிரைப்போல விளங்கும் மாதர்களுடைய முகங்கள் எனப்படும் அளவிடற்கரிய கோடி வெள்ளக்கணக்கான கலைக்குறைவு இல்லாத பூரண சந்திரர்களைப் பெற்றது. (73)

## பல்வகைப் பண்ணொலிகள்

971. மண்ணும் முழவின் னொலிமங்கையர்
பாட லோதை
பண்ணுங் நரம்பிற் பகையாவியற்
பாணி யோதை
கண்ணும் முடைவே யிசைகண்ணுள
ராட ரோறும்
விண்ணும் மருளும் படிவிம்மி
யெழுந்த வன்றே.

மண்ணும் முழவின் ஒலி, மங்கையர் பாடல் ஓதை;
பண்ணும் நரம்பில் பகையா இயல் பாணி ஓதை,
கண்ணும் உடை வேய் இசை, கண்ணுளர் ஆடல் தோறும்,
விண்ணும் மருளும்படி, விம்மி எழுந்த அன்றே.

பொ:—கூத்து நிகழ்த்துவோர் இடங்களில் எல்லாம் மார்ச்சனை பூசிய மத்தள வோசையும் மாதர்களின் பாடலோசையும் சுருதி இலயம்பெற வீக்கப்படும் பகையாத இயல்பமைந்த யாழ் நரம்பின் இசையும் தாளவோசையும் கண்களுள்ள புல்லாங்குழலின் ஓசையும் விண்ணுலகத்தவரும் திகைப்பு அடையும்படி மிகுதியாகத் தோன்றின.

கு:—நரம்பிற் பகையாமை இணை கிளை பகை நட்பு ஆன நரம்புகளுள், பகை நரம்பு படாமை. (74)

## மாதர் கோலங் கொள்ளல்

972. மணியின் னணிநீக்கி வயங்கொளி
முத்தம் வாங்கி
அணியும் முலையா ரகிலாவி
புலர்த்து நல்லார்
தணியும் மதுமல் லிகைத்தாமம்
வெறுத்து வாசம்
திணியும் மிதழ்ப்பித் திகைக்கத்திகை
சேர்த்து வாரும்.

மணியின் அணி நீக்கி, வயங்கு ஒளி முத்தம் வாங்கி
அணியும் முலையார், அகில் ஆவி புலர்த்தும் நல்லார்,
தணியும் மது மல்லிகைத் தாமம் வெறுத்து, வாசம்
திணியும் இதழ்ப் பித்திகைக் கத்திகை சேர்த்துவாரும்.

பொ:—இரத்தின அணிகளைக் களைந்துவிட்டு ஒளி விளங்கும் முத்துமாலையைத் தோழியரிடமிருந்து பெற்றுத் தனங்களின்மீது அணிபவராயும், அகிற்புகையால் கூந்தலை உலர்த்துபவராயும் உள்ள மகளிர் (வெப்பந்) தணியும் மதுவுள்ள மல்லிகை மாலையில் வெறுப்புடையராய் மணஞ்செறியும் கருமுகை மாலையை அணிவாராயினர்.

கு:—கத்திகை - மாலை. இரத்தினமாலை, பருமன் ஒளி மிகுதிகளாலும், பகலிலணிந்த முல்லைமாலை மணங் குறைதலாலும் இலேசான முத்தாரமும் மணமிக்க பித்திகை மாலையும் இரவுக்கு உரிய கோலமாகக் கொண்டனர் மகளிர் என்க. இரவு வேளைக்கென்று மகளிர்ஆடையாபரண மணிதலை "இரவிற்கோர் கோலங் கொடியிடையார்தாங் கொள்ள" (சிலப்-9, 3-4) என்பதனால் அறிக. ஈற்றில் 'ஆயினர்' என ஒரு சொல் வருவிக்க. (75)

## பல்வகையொலி மிகல்

973. புதுக்கொண்ட வேழம் பிணிப்போர்புனை
பாட லோதை
மதுக்கொண்ட மாந்தர் மடவாரின்
மிழற்று மோதை

பொதுப்பெண்டி ரல்குற் புனைமேகலைப்
பூச லோதை
கதக்கொண்ட யானை களியாற்களிக்
கின்ற வோதை.

புதுக் கொண்ட வேழம் பிணிப்போர் புனை பாடல் ஓதை,
மதுக் கொண்ட மாந்தர் மடவாரின் மிழற்றும் ஓதை,
பொதுப்பெண்டிர் அல்குல் புனை மேகலைப் பூசல் ஓதை,
கதக்கொண்ட யானை களியால் களிக்கின்ற ஓதை.

பொ :—(அம்மலையிடத்தில்) புதுமையாகப் பிடித்து வந்த யானைகளைக் கட்டுபவர் கற்பித்துப் பாடும் பாட்டின் ஓசையும், மதுவுண்ட ஆடவர் மகளிரிடம் (காமக்குறிப்புத் தோன்றக்)கூறும் இனிய பேச்சொலியும் கணிகையர் இடையில் அணிந்துள்ள மேகலைகளின் ஓசையும் மதவெறிகொண்ட யானைகள் அம்மதக் களிப்பால் வீறிடும் ஓசையும் (அங்கு எழலாயின).

கு :—'பிடியொடு போந்த பெருங்களிற் றெருத்தலை, வீரிய இளையவர் வாரியுள் வளைஇ......சாமகீத ஓசையிற் றணிக்கும் நூலறி பாகர்' (பெருங் - 1:44, 59-64) என்பதனால், பிணிப்புண்ட வேழத்தின் மதந்தணியப் பாகர் பாடுதல் மரபு என்பது விளங் கும். (76)

### இரவு நீங்கல்

**974.** உண்ணு வமுதன்ன கலைப்பொரு
ளுள்ள துண்டும்
பெண்ணா ரமுதம் மனையார்மனத்
தூடல் பேர்த்தும்
பண்ணார்ந்த பாடல் செவிமாந்திப்
பயன்கொ ளாடல்
கண்ணா னனிதுய்க் கவுங்கங்குல்
கழிந்த தன்றே.

உண்ணு அமுது அன்ன கலைப் பொருள் உள்ளது உண்டும்,
பெண் ஆர் அமுதம் அனையார் மனத்து ஊடல் பேர்த்தும்,
பண் ஆர்ந்த பாடல் செவி மாந்திப், பயன் கொள் ஆடல்
கண்ணால் நனி துய்க்கவும், கங்குல் கழிந்தது அன்றே.

பொ :—வாயால் உண்ணப்படாத அமுதத்தை ஒத்த – கலையின் பொருள் நுட்பங்களாக உள்ளதை நேரில் அனுபவித்தலாலும் பெண்களுள் கிடைத்தற்கரிய தேவாமுதத்தை யொத்தவர்களின் உள்ளத்து ஊடலைப் போக்குவதனுலும் இசைக்கு அமைந்த கிதங்களைக் காதாரக்கேட்டு, அக்கிதப் பொருளைக் கொண்ட அபிநய நடனத்தைத் தம் கண்களால் மிகுதியாய் அனுபவித்தலாலும் அன்றிரவு (அச்சேனை மக்கட்கு) நீங்கியது. (77)

வரைக்காட்சிப் படலம் முற்றிற்று.

# 15. பூக்கொய் படலம்*

இரவு நீங்கிச் சூரிய உதயம் ஆனது. ஆடவரும் மகளிரும் அடுத்துள்ள சோணை யாற்றங் கரையை அடைந்து அதன் பக்கத் தமைந்த பூஞ்சோலைகளை நாடுவாராயினர். அங்கே மாந்தரும் மகளிரும் பூக்கொய்து விளையாடிய செயல்கள் 39-பாடல்களால் மிக அழகாகச் சிறப்பிக்கப்படுகின்றன. வரைக் காட்சியிற் போலவே, சங்கநூற் கருத்துக்கள் பலவற்றையும் இப்படலத்தும் காணலாம். (4, 14). பூக்கொய்தலும் கொய்தவற்றை அழகுறத் தொடுத்து அணிதலும் தென்னுட்டாருக்கே சிறப்பாக உரியன. 'நம் படை வீரர்கள் தென்னுட்டாரைப் போலத் தலைக் கணியாகப் பூக்களைச் சூடுகின்றனர்' என்று குறிப்பித்தனர் வான்மீகி முனிவரும். பூக்கொய்யுங் காலத்தில் ஆடவரும் மகளிரும் கூடி ஊடல் கூடற் குறிப்புக்களால் மகிழ்ச்சியுற்று விளையாடுவது பற்றிக் கம்பர் கூறும் பாடல்கள் பலவாகும். இவற்றில் பொருட் புறத்தவாய் நுணுகியறியக் கூடிய (இறைச்சியாகிய) தொனிப் பொருள்கள் உள்ளுற அமைந்து திகழ்தலைக் காணலாம். இவை யாவும் கற்ருரே அறிந்து இன்பமடையக் கூடியவை. வள்ளுவனுர், காமத்துப் பாலிற் கூறிய புலவி நுணுக்கமான குறள்கள் போலவே, கம்ப நாடர் பாடியிருப்பவை பொருள் நுட்பம் செறிந்து விளங்குவன. இவ்வாறே மைந்தரும் மகளிரும் இன்ப விளையாட்டிலே நெடுநேரம் கழித்துப் பின் அதனில் வெறுப் புற்றவராய் நீர் விளையாட்டை மேற்கொள்ளலாயினர் என்று இப் படலம் முடிவுறுகின்றது.

---

* இது, 23, 43, 44–ஆம் சுவடிகளில் 'மலர்கொய் படலம்' என்று காணப் படுகிறது.

# 15. பூக்கொய் படலம்

## சூரியன் உதித்தல்

975. மீனுடை யெயிற்றுக் கங்குற்
★ கனகனை வெகுண்டு வெய்ய
கானுடைக் கதிர்க ளென்னு
மாயிரங் கரங்க ளோச்சித்
தானுடை யுதய மென்னுந்
தமனியத் தறியி னின்று
மானுட மடங்க லென்னத்
தோன்றினன் வயங்கு வெய்யோன்.

**மீன் உடை எயிற்றுக் கங்குல் கனகனை வெகுண்டு, வெய்ய கான் உடைக் கதிர்கள் என்னும் ஆயிரம் கரங்கள் ஓச்சித், தான் உடை உதயம் என்னும் தமனியத் தறியில் நின்று, மானுட மடங்கல் என்னத் தோன்றினன் வயங்கு வெய்யோன்.**

பொ :—நட்சத்திரங்களாகிய பற்களையுடைய இரவாகிய இரணியனைச் சினந்து வெப்பமும் அடர்ச்சியும் உள்ள கிரணங்களான ஆயிரங் கைகளையும் மேலெழ எடுத்துத் தான் தோன்றுதற்கு இடமான உதயகிரி என்ற பொற்றூணிலிருந்து, நரசிங்க மூர்த்தி போல, விளங்குகின்ற சூரியன் உதயமானான்.

கு :—'ஆயிர நாமச் சிங்கம் மணத் தொழில் செய்த திறம்' என இனிக் கூறப்படுதற் கேற்ப நரசிங்கத்தின் தோற்றத்தைச் சூரிய உதயத்துக்கு உவமித்தது ஒரு வகையிற் பொருத்த மெனலாம். கான் - காடு; ஈண்டு செறிவு. 'கானுடைக் கழனிச் செந்நெற் கதிர்' (சீவக-முத்தி-303) என்ப. (1)

## தசரத மன்னன் சேனையோடு சோணையாற்றை யடைதல்

976. முறையெலா முடித்த பின்னர்
மன்னனு மூரித் தேர்மேல்
இறையெலாம் வணங்கப் போனா
னெழுந்துடன் சேனை வெள்ளம்

குறையெலாஞ் சோலையாகிக்
குழியெலாங் கழுநீ ராகித்
துறையெலாங் கமலமான
சோணையா றடைந்த தன்றே.

முறை எலாம் முடித்த பின்னர்,
மன்னனும் மூரித் தேர்மேல்
இறை எலாம் வணங்கப் போனான்;
எழுந்து உடன் சேனை வெள்ளம்
குறை எலாம் சோலை ஆகி,
குழி எலாம் கழுநீர் ஆகி,
துறை எலாம் கமலம் ஆன,
சோணையாறு அடைந்தது அன்றே.

பொ:—காலைக் கடமைகளையெல்லாம் செய்து முடித்தபின் தசரத சக்கரவர்த்தியும் பெரிய இரதத்தின்மேல் அரசரெல்லாம் தன்னடி வணங்கி நிற்கப் புறப்பட்டான். சேனைத் தொகுதி, அவனுடன் புறப்பட்டு, ஆற்றிடைக் குறையாவும் சோலையாகவும் பள்ளமுள்ள இடங்கள் யாவும் செங்கழுநீர்க் கொடிகளுடைய தாகவும், நீர்த்துறைகள் யாவும் தாமரைக் கொடிகளுடைய தாகவும், இருந்த சோணையாற்றை அடைந்தது.

கு:—சோணை, பாடலிபுரத்தருகே கங்கையிற் கலக்கும் ஓர் பெரிய கிளைநதி. (2)

### அனைவரும் சோலை சேர்தல்

977. அடைந்தவ ணிறுத்த பின்ன
ரருக்கனு மும்பர்ச் சார
மடந்தையர் குழாங்க ளோடு
மன்னரு மைந்தர் தாமும்
குடைந்துவண் டுறையு மென்பூக்
கொய்தினி தாட மைதீர்
தடங்களு மடுவுஞ் சூழ்ந்த
தண்ணறுஞ் சோலை சார்ந்தார்.

அடைந்து அவண் இறுத்த பின்னர்,
அருக்கனும் உம்பர்ச் சார,
மடந்தையர் குழாங்களோடு,
மன்னரும், மைந்தர் தாமும்,
குடைந்து வண்டு உறையும் மென்பூக்
கொய்து இனிது ஆட, மைதீர்
தடங்களும் மடுவும் சூழ்ந்த
தண் நறும் சோலை சார்ந்தார்.

பொ :—அச் சோணையாற்றங் கரையில் (சேனை யாவும்) தங்கிய பின்னர், சூரியனும் விண்ணின் உச்சியிடம் சார, அரசரும் அரசிளங் குமரர்களும் தத்தம் தேவியருடனே வண்டுகள் கிண்டிக் கொண்டு தங்கும் மெல்லிய பூக்களைக் கொய்து பின் நீரில் ஆடுதற் கேற்ற குற்றமற்ற தடாகங்களும் மடுக்களும் சூழப்பெற்றுள்ள குளிர்ச்சியும் மணமுமமைந்த சோலைகளைச் சார்ந்தார்கள்.

கு :—'மைதீர் தடங்களும் மடுவும்' என்றது மகளிர் நீராடு தற்கும் ஏற்றவாயிருந்தன என்றபடி. தடம் - அகன்ற நீர்நிலை. மடு - ஆழ்ந்து சிறிதான நீர் நிலை. (3)

### மாதர் சோலை சார்தல்

**978**. திண்சிலை புருவ மாகச்
சேயரிக் கருங்க ணம்பால்
புண்சில செய்வ ரென்று
போவன போன்ற மஞ்ஞை
பண்சிலம் பளிக ளார்ப்ப
நாணினற் பறந்த போன்ற
ஒண்சிலம் பார்ப்ப மாத
ரொதுங்குதோ றொதுங்கு மன்னம்.

திண் சிலை புருவம் ஆகச்,
சேய் அரிக் கருங்கண் அம்பால்
புண் சில செய்வர் என்று
போவன போன்ற மஞ்ஞை ;
பண் சிலம்பு அளிகள் ஆர்ப்ப,
நாணினல் பறந்த போன்ற,
ஒண் சிலம்பு ஆர்ப்ப மாதர்
ஒதுங்குதோறு ஒதுங்கும் அன்னம்.

பொ:—(சோலைபுக்க மாதர்களைக் கண்டு அப்பாற் சென்ற) மயில்கள், புருவங்கள் வலியவில்லாக செவ்வரியும் கருமையு முடைய கண்களாகிய அம்புகளைக் கொண்டு புண்கள் சில உண்டாக்கி நம்மைத் துன்புறுத்துவர் என்று நினைத்துச் செல்வன வற்றை ஒத்திருந்தன; அந்த மகளிர் ஒள்ளிய காற்சிலம் பொலிக்க நடந்து போம் போதெல்லாம், இசை பாடும் வண்டுகள் ஆரவாரிக்க வெட்கி விலகும் அன்னங்கள் (நடையழகில் அம் மகளிர்க்குத் தோற்றதனால் உண்டான) நாணினால் பறந்து அப் பாற் செல்வதனை ஒத்திருந்தன.

கு:—மயில்கள் அம்புகளால் எய்யப்படுதலின் 'கருங் கணம் பாற் புண்சில செய்வர்' எனப்பட்டது, 'ஏவுறு மஞ்ஞையி னடுங்கி' என்றார் சான்றோரும் (முல்லைப் பாட்டு-64). மாதரின் சிலம்பொலியால் அவரைத் தம் இனமென்று எண்ணி, அவர் ஒதுங்குமிடமெல்லாம் ஒதுங்கிச் செல்லும் அன்னங்கள், பின் அவர் நடையழகுக்குத் தோற்றதனால், நாணிட வெளியேறு வனபோலப் பறக்கலாயின என்பது கருத்து. அன்னத்தின் ஒலி சிலம்பொலி போலும் என்பது 'சிலம்பி னன்னம் நின்றிரங்கும்' (கையடை -21) என்பதனாற் காண்க. (4)

### தோழியருடன் மகளிர் ஆடல்

979. செம்பொன்செய் சுருளுஞ் தெய்வக்
குழைகளுஞ் சேர்ந்து மின்னப்
பம்புதே னலம்ப வொல்கிப்
பண்ணையி னாட னோக்கிக்
கொம்பொடுங் கொடிய னாரைக்
குறித்தறிந் துணர்த றேற்றார்
வம்பவி ழலங்கன் மார்பின்
மைந்தரு மயங்கி நின்றார்.

செம்பொன் செய் சுருளும் தெய்வக்
குழைகளும் சேர்ந்து மின்னப்,
பம்பு தேன் அலம்ப ஒல்கிப்,
பண்ணையின் ஆடல் நோக்கிக்,
கொம்பொடும் கொடி அனாரைக்
குறித்து அறிந்து உணர்தல் தேற்றார் ;
வம்பு அவிழ் அலங்கல் மார்பின்
மைந்தரும் மயங்கி நின்றார்.

பொ :—செம்பொன்னாலியன்ற ஓலை யென்னும் காதணிகளும் தெய்வத்தன்மை வாய்ந்த குழை என்னும் காதணிகளும் ஒன்று சேர்ந்து ஒளி வீசவும், நிரம்பி மொய்க்கும் வண்டுகள் ஒலிக்கவும், அசைந்து தோழியர் கூட்டத்தோடு ஆடும் மகளிர் விளையாட்டை நோக்கி, மணங்கமழும் மாலை யணிந்த மார்பையுடைய ஆடவரும் பூங்கொடி போன்ற அந்த மகளிரைப் பூங்கொம்புகளோடு வேறு பாடு அறிந்து கொள்ள மாட்டாதாராய் மயங்கி நின்றார்.

கு :—சுருள் - மலராது குவிந்த நிலையிலுள்ள தளிர்; ஓலை என்ற காதணி. குழை - பெருந்தளிர்; குண்டலம் எனச் சிலேடை நயம் காண்க. பூங்கொம் பிவை, மகளி ரிவர் என்ற வேறு பாடு அறிய இடமில்லை யாயிற்று என்பதாம். (5)

## குயில்களின் நாணம்

980. பாசிழைப் பரவை யல்குற்
பண்டரு கிளவி தண்டேன்
மூசிய கூந்தன் மாதர்
மொய்த்தபே ரமலை கேட்டுக்
கூசின வல்ல பேச
நாணின குயில்க ளெல்லாம்
வாசகம் வல்லார் முன்னின்
றியாவர்வாய் திறக்க வல்லார்.

பாசு இழைப் பரவை அல்குல்
பண் தரு கிளவி தண் தேன்
மூசிய கூந்தல் மாதர்
மொய்த்த பேர் அமலை கேட்டுக்,
கூசின அல்ல, பேச
நாணின குயில்கள் எல்லாம்,
வாசகம் வல்லார் முன் நின்று
யாவர் வாய் திறக்க வல்லார் ?

பொ :—குயில்கள் யாவும், பசும்பொனாலியன்ற அணிகள் பூண்ட பரந்த அரையிடத்தையும் இசை போன்ற இன் சொற்களையும் தண்ணிய மதுவார்ந்த கூந்தலையும் உடைய மகளிர் நெருங்கி வந்த பேரொலியைக் கேட்டு அச்சங் கொண்டதனால் வாய் மூடியன வல்ல; (மற்று) அவர் முன் பேசுதற்கு வெள்கி

வாய் மூடியிருந்தன; நன்கு பேசவல்லவர்கள் முன்னிலையில் வாய் திறக்க வல்லார் யாவர் ?

கு :—'குயில்கள் கூசின வல்ல, பேச நாணின' என்ற சிறப்புப் பொருளை, ஈற்றடி பொதுப் பொருளாற் சாதித்தலால் இது வேற்றுப் பொருள் வைப்பணி. (6)

### மகளிர் கொம்புகளை வளைத்துப் பூக்கொய்தல்

981. நஞ்சினுங் கொடிய நாட்ட
மமுதென நயந்து நோக்கிச்
செஞ்செவே கமலக் கையாற்
றீண்டலு நீண்ட கொம்பர்
தஞ்சிலம் படியின் மென்பூச்
சொரிந்துடன் றாழ்ந்த வென்றால்
வஞ்சிபோன் மருங்கு லார்மாட்
டியாவரே வணங்க லாதார்.

நஞ்சினும் கொடிய நாட்டம்
அமுது என நயந்து நோக்கிச்,
செஞ்செவே கமலக் கையால்
தீண்டலும், நீண்ட கொம்பர்
தம் சிலம்பு அடியில் மென்பூச்
சொரிந்து உடன் தாழ்ந்த என்றால்,
வஞ்சிபோல் மருங்குலார் மாட்டு
யாவரே வணங்கலாதார் ?

பொ :—நஞ்சினைக் காட்டிலும் கொடுமையுள்ள கண்களோடு, அமுதம் போல விரும்பிப் பார்த்து, தம் தாமரைமலரனைய கையால் செவ்வனே பிடித்துத் தாழ்த்தியதும், நீண்டு வளர்ந்த கொம்புகள் அம்மகளிருடைய சிலம்பணிந்த பாதங்களில் மெல்லிய மலர்களைச் சொரிந்த வண்ணம் தாழ்ந்து நின்றன என்றால், வஞ்சிக் கொடி போலும் நுணுகிய இடையுள்ள மகளிரிடத்து வணங்காமல் நிற்பவர் யாவருளர் ?

கு :—கொடுமையும் இனிமையும் ஒருங்குடைமையால், இன் சொல்லுக்கு இணங்காதவரை ஒறுக்கவும் வல்லன என்பார், 'நஞ்சினுங் கொடிய நாட்ட மமுதென நயந்து நோக்கி' என்றார். (7)

## ஆடவர்தோள் ஏறி மகளிர் பூக்கொய்தல்

982. அம்புயத் தணங்கி னன்னு
ரம்மலர்க் கைகள் டீண்ட
வம்பிய லலங்கற் பங்கி
வாளரி மருளுங் கோளார்
தம்புய வரைகள் வந்து
தாழ்வன தளிர்த்த மென்பூங்
கொம்புக டாழு மென்றல்
கூறலாந் தகைமைத் தொன்றோ.

அம்புயத்து அணங்கின் அன்னார்
அம்மலர்க் கைகள் தீண்ட,
வம்பு இயல் அலங்கல் பங்கி
வாள் அரி மருளும் கோளார்,
தம் புயவரைகள் வந்து
தாழ்வன; தளிர்த்த மென்பூங்
கொம்புகள் தாழும் என்றல்
கூறல் ஆம் தகைமைத்து ஒன்றோ?

பொ :—தாமரையில் வீற்றிருக்குந் திருமகளை ஒத்த அம் மகளிரின் மலர் போலும் கைகள் தீண்டும்படி மணம் பொருந்திய மாலை யணிந்த மயிர் முடியினையும் காந்தியுள்ள சிங்கங்களும் மருளும் வலியையுமுடைய ஆடவரின் வலிய புயமலைகளே வந்து வணங்கி நிற்பன வாயின (இவ்வாறும்போது) தளிர்த்த மெல்லிய பூங் கொம்புகள்( அம்மகளிர் கைபடுவதனால்) தாழ்ந்து நிற்கும் என்று பாராட்டுதல் சிறப்பாகக் கூறவேண்டியதொரு பொருளாமோ?

கு :—வலிய புயவரைகளே தாழும்போது மலையிலுள்ள பூங் கொம்புகள் தாழத் தடை என்னை? என்றவாறு; புயவரைகள் வந்து தாழ்வன என்றது, மகளிரின் கைக்கெட்டாத பூங்கொம்பு கள் எட்டும்படி அவர் கணவர் புயங்கள் வளைத்தற் கெளிதாகத் தாழ்ந்து அவரைத் தாங்கி நின்றன என்றபடி. (8)

### மகளிர் முகங்களை வண்டுகள் சூழ்தல்

983. நதியினுங் குளத்தும் பூவா
நளினங்கள் குவளை யோடு
மதிநுதல் வல்லி பூப்ப
நோக்கிய மழலைத் தும்பி
அதிசய மெய்திப் புக்கு
வீழ்ந்தன வலைக்கப் போகா
புதியன கண்ட போழ்து
விடுவரோ புதுமை பார்ப்பார்.

நதியினும் குளத்தும் பூவா
நளினங்கள், குவளையோடு,
மதிநுதல் வல்லி பூப்ப
நோக்கிய மழலைத் தும்பி,
அதிசயம் எய்திப் புக்கு
வீழ்ந்தன, அலைக்கப் போகா;
புதியன கண்ட போழ்து
விடுவரோ புதுமை பார்ப்பார்?

பொ:—பிறைபோலும் நெற்றியுள்ள மகளிராகிய பூங்கொடிகள் ஆறுகளிலும் குளங்களிலும் மலராத தாமரை மலர்களைக் குவளை மலருடனே தம்மிடத்து மலரச்செய்து நிற்க அதனைக்கண்ட இன்னோசையுள்ள வண்டுகள் வியப்பையடைந்து புகுந்து மொய்த்தனவாய்க், கைகளால் ஓட்டவும் போகாவாயின; புதிய காட்சிகளைக் காண்பதில் விருப்பமுள்ளவர்கள் அப்புதுமைகளைக் காண நேர்வராயின் விட்டு நீங்குவார்களோ?

22 ஆம் பிரதியில், இப்பாடலின் பின்னுள்ள இப்படலத்துப்பாடல்கள் காணப்படவில்லை. (9)

### பூங்கொம்புகள்

984. உலந்தரு வயிரத் திண்டோ
ளொழுகிவா ளொளிகொண் மேனி
மலர்ந்தபூந் தொடையன் மாலை
மைந்தர்பான் மயிலி னன்னார்

கலந்தவர் போல வொல்கி
யொசிந்தன சிலகை வாராப்
புலந்தவர் போல நின்று
வளைகில பூத்த கொம்பர்.

உலம் தரு வயிரம் திண் தோள்,
ஒழுகி வாள் ஒளி கொள் மேனி,
மலர்ந்த பூம் தொடையல் மாலை,
மைந்தர்பால், மயிலின் அன்னார்
கலந்தவர் போல ஒல்கி
ஒசிந்தன, சில கை வாராப்,
புலந்தவர் போல நின்று,
வளைகில பூத்த கொம்பர்.

பொ :—திரண்ட கல்லையொத்த உறுதியான திண்ணிய தோள்களையும் ஒழுங்காக அமையப்பெற்று மிக்க ஒளியைக்கொண்ட மேனியையும் மலர்ந்த பூக்களால் தொடுக்கப்பட்ட மாலையையும் உடைய ஆடவரிடத்தில் கலந்தவர்களான மயிலொத்த சாயலுள்ள மகளிர் போலச் சில பூத்த கொம்புகள் மெலிந்து துவண்டன. (சில) கொம்புகள் கைக்கு எட்டாதனவாகி ஊடல் கொண்டவர் போல (வசப்படாமல் விலகி) நின்று வளையாதவை ஆயின. (10)

### மகளிர் பூங்கொடிகளை அலங்கரித்தல்

985. பூவெலாங் கொய்து கொள்ளப்
பொலிவில துவள நோக்கி
யாவையாங் கணவர் கண்ணுக்
கழகில விவையென் றெண்ணிக்
கோவையும் வடமு நாணுங்
குழைகளுங் குழையப் பூட்டிப்
பாவையர் பணிமென் கொம்பை
நோக்கினர் பரிந்து நிற்பார்.

பூ எலாம் கொய்து கொள்ளப்
பொலிவு இல துவள நோக்கி,
'யாவையாம் கணவர் கண்ணுக்கு?
அழகு இல இவை என்று எண்ணிக்,

கோவையும், வடமும், நாணும்,
குழைகளும், குழையப் பூட்டிப்,
பாவையர் பணிமென் கொம்பை
நோக்கினர் பரிந்து நிற்பார்.

பொ :—(மலர் நிறைந்தபோது அழகு பெற்றிருந்த பூங்கொம்புகள்) தம்மிடமுள்ள மலர்களெல்லாம் கொய்து கொண்டதனால் பொலிவிழந்து துவண்டு நிற்றலைக்கண்டு பதுமைபோன்ற மகளிர் 'இந்தப் பூங்கொம்புகள் தம் கணவர் காட்சிக்கு எவ்வாறுதோற்றும்? (அழகில்லாதனவாயிருக்கும்) என்று சிந்தித்தவராய் (தாம் அணிந்திருந்த) மணிமாலைகளையும் முத்து வடங்களையும் அரை நாணையும் காதணிகளையும் அவை துவளும்படி அணிந்து (பின்) தாழ்ந்து நின்ற மெல்லிய அக்கொம்புகளை விரும்பிப் பார்த்த வண்ணமாய் நிற்பர். (11)

மகளிர் கூந்தலில் வண்டு மொய்த்தல்

936. துறும்போதி னிற்றேன் றுவைத்துண்டுழ
☆ றும்பி யீட்டம்
நறுங்கோதை யோடு நனைசின்னமு
நீத்த நல்லார்
வெறுங்கூந்தன் மொய்க்கின் றனவேண்டல
வேண்டு போதும்
உறும்போக மெல்லா நலனுள்வழி
யுண்ப ரன்றே.

துறும் போதினில் தேன் துவைத்து உண்டு உழல்
தும்பி ஈட்டம்,
நறும் கோதையோடு நனை சின்னமும்
நீத்த நல்லார்'
வெறும் கூந்தல் மொய்க்கின்றன ; வேண்டல
வேண்டு போதும் ;
உறும் போகம் எல்லாம் நலன் உள்வழி
உண்பர் அன்றே ?

பொ :—செறிந்துள்ள மலர்களிலே திளைத்துத் தேனைப்பருகும் வண்டுக்கூட்டங்கள் மணமாலைகளோடு, தேன் கசிவு பெற்ற விடு பூக்களையும் நீக்கிய மாதர்களின் வெறுமையான கூந்தலில் மொய்ப்

பனவாயின' தாம் (இதுவரை) விரும்பி வந்த மலர்களையும் விரும்பினவல்ல; நல்ல தன்மைகள் நிரம்பியுள்ளவிடத்தில் அடையத்தக்க இன்பங்களை யெல்லாம் (யாவரும்) அனுபவிப்பார்களல்லவா ?

கு :—வெறுங்கூந்தலில் வண்டுகள் மொய்ப்பது, அவற்றின் இயற்கை மணம் தம்மைப்பெரிதும் கவர்ந்ததனால் என்க. 'அரிவை கூந்தலின், நறியவுமுளவோ நீயறியும் பூவே' என்பர் சான்றோரும். (குறுந்தொகை - 2) வேற்றுப்பொருள் வைப்பணி. நனை சின்னம்–தேன் கசிந்த விடுதிப்பூ. (12)

## ஒரு நங்கையின் புலவி

**987.** மெய்ப்போதி னங்கைக் கிணையொப்பவள்
வெண்ப ளிங்கில்
பொய்ப்போது தாங்கிப் பொலிகின்றதன்
மேனி நோக்கி
இப்பாவை யெங்கோற் குயிரன்னவ
ளென்ன வுன்னிக்
கைப்போதி னோடு நெடுங்கண்பனி
சோர நின்றாள்.

மெய்ப்போதின் நங்கைக்கு இணை ஒப்பவள்,
வெண் பளிங்கில்
பொய்ப்போது தாங்கிப் பொலிகின்றதன்
மேனி நோக்கி,
'இப்பாவை எம்கோற்கு உயிர் அன்னவள்'
என்ன உன்னிக்
கைப்போதினோடு நெடும் கண் பனி
சோர நின்றாள்.

பொ :—மேனியழகால் தாமரையில் வாழும் திருமகளுக்கு ஒப்பான ஒருத்தி. வெண்பளிங்குப் பாறையில் (கையில் மலரைத் தாங்கியபடி விளங்கும்) தன் மேனியின் பொய்யான தன் சாயலைப் பார்த்து 'இந்தப் பெண் நம் கணவற்கு உயிர்போல் அன்புக்குரியள் ஆவள்' என்று கருதித் தன் நீண்ட கண்களினின்று நீர்பெருகக் கையில் ஏந்திய மலருடனே நின்றாள்,

கு :—வெண்ணிறப் பளிங்குப் பாறையில் கைப்போதுடன் தன் உருவே தோன்ற, அதனைத் தன் மனைவியென்று கருதி அன்பு காட்டிநின்ற கணவனது செயலைப்பார்த்து, ஒருத்தி தன்காதலன் வேற்றிடத்துக் காதல் செலுத்துபவனாகக் கருதியதனால் துயருற்றாள் என்பது கருத்து. (13)

## ஒரு பெண் அழுத காரணம்

988. கோளுண்ட திங்கண் முகத்தாளொரு
கொம்பொர் மன்னன்
தோளுண்ட மாலையொரு தோகையைச்
சூட்ட நோக்கித்
தாளுண்ட கச்சிற் றகையுண்ட
முலைக்கண் மீது
வாளுண்ட கண்ணீர் மழையுண்டென
வார நின்றாள்.

கோளுண்ட திங்கள் முகத்தாள் ஒரு
கொம்பு, ஓர் மன்னன்
தோளுண்ட மாலை ஒரு தோகையைச்
சூட்ட நோக்கித்,
தாளுண்ட கச்சில் தகையுண்ட
முலைக் கண் மீது
வாளுண்ட கண்நீர் மழை யுண்டென
வார நின்றாள்.

பொ :—மேகஞ்சூழ்ந்த சந்திரனை ஒத்த முகத்தையுடைய பூங்கொம்பு போன்ற ஒருத்தி, அரசனொருவன் தன் தோள்களில் அணிந்திருந்த மாலையை(க் கழற்றி) மயில் போன்றாளொருத்திக்கு அணிய (அதனைக்) கண்டு கடை முடிப்புள்ள கச்சால் பிணிப்புண்ட முலைகளின் கண்களில் ஒளிகொண்ட தன் விழிகளிலிருந்து மழை பொழிவதுபோல நீர்பெருகும்படி நின்றாள்.

கு :—ஓர் அரசன் தன் தேவிக்குத் தன்மாலை சூட்டியது கண்டு, தனக்கு அவ்வாறு தன் கணவன் காதல் காட்டாததை நினைந்து கண்ணீர் வடித்தாள் என்றேனும், தன் மனைவியர் இருவருள் ஒருத்திக்கு மாலை சூட்டிய மன்னனொருவன், தன் மற்ற மனைவிக்கும் அது புரியாமற் போனதால் அவள் கண்ணீர் பெருக்கினாள் என்றே

னும் இப்பாடற்கருத்தாகக் கொள்க. கோள் - மேகம்; 'மின்னொ டோர் கோளொடு குளிர்மதி வந்து வீழ்ந்தென' (சிந்தாமணி, 320, உரை) என்பது காண்க. (14)

### மனைவி காணுமாறு ஒரு மன்னன் மறைதல்

989. மயில்போல் வருவாண் மனங்காணிய
காதன் மன்னன்
செயிர்தீர் மலர்க்காவினோர் மாதவிச்
சூழல் சேரப்
பயில்வா ளிறைபண்டு பிரிந்தறி
யாள்ப தைத்தாள்
உயிர்நாடி யொல்கு முடல்போ
லலமந் துழன்றாள்.

மயில் போல் வருவாள் மனம் காணிய, காதல் மன்னன் செயிர் தீர் மலர்க் காவின் ஓர் மாதவிச் சூழல் சேரப், பயில்வாள் இறை பண்டு பிரிந்து அறியாள் பதைத்தாள், உயிர் நாடி ஒல்கும் உடல் போல் அலமந்து உழன்றாள்.

பொ :—தன் தேவியை விட்டுப் பிரியாத காதல் மிக்க அரசன் ஒருவன், மயில்போலத் தன்னிடம் வரும் அவளது மனநிலையைச் சோதித்தறியுமாறு குற்றமற்ற அந்தப் பூஞ்சோலையிலுள்ள குருக்கத்திபடர்ந்த பந்தலில் சென்று மறைந்து நிற்க, தன் கணவனை நீங்காது பழகி வருபவளும் முன்பு சிறிதும் பிரிந்தறியாதவளுமான அத்தேவி காதலனைக் காணமல் தவித்து, தன் உரிய உயிரைத் தேடும் உடலேபோல மனஞ் சுழன்று வருந்தலானாள்.

கு :—தனியுடல் பிரிந்த தன் உயிரைத்தேடுதல் கூடாமையின் நின்ற நிலையில் தளர்ச்சி யுற்றாள் தலைவி என்பார், உயிர்நாடி ஒல்கும் உடல்போல்' என்றார். இல்பொரு ளுவமை. ( 15)

### ஒரு பெண் குயிலிடம் மலர் வேண்டுதல்

990. மைதாழ் கருங்கண்கள் சிவப்புற
வந்து தோன்ற
நெய்தாவும் வேலா னெடுநெஞ்சு
புலந்து நின்றாள்

எய்தாது நின்ற மலர்நோக்கி
யெனக்கி தீண்டக்
கொய்தீதி யென்றோர் குயிலைக்கரங்
கூப்பி நின்றாள்.

மை தாழ் கருங் கண்கள் சிவப்பு உற வந்து தோன்ற,
நெய் தாவும் வேலானொடு நெஞ்சு புலந்து நின்றாள்,
எய்தாது நின்ற மலர் நோக்கி, 'எனக்கு இது ஈண்டக்
கொய்து ஈதி!' என்று ஓர் குயிலைக் கரம் கூப்பி நின்றாள்.

பொ:—நெய் பூசப்பெற்ற வேற்படையுடைய கணவனொடு ஊடற் பிணக்கங்கொண்ட மாதொருத்தி (அவன் முன்னிலையில்) மையுண்ட கண்கள் செந்நிறங்கொள்ள வந்து தோன்றி, தனக்கு எட்டாதிருந்த (கொம்பிலுள்ள) மலரைப் பார்த்து (அதனிட முள்ள விருப்பால்) 'இதனை எனக்கு விரைந்து பறித்துத் தருக' என்று (அங்கிருந்த) குயிலைக் கைதொழுது வேண்டி நின்றாள்.

கு:—தன் வேண்டுகோளை நிறைவேற்றக் கூடாதது என்று அறிந்திருந்தும், குயிலை வேண்டியது, காதல் காட்டித் 'தன் கணவனே அது செய்க' என்ற புலவி நீக்கக் குறிப்பாகும். (16)

## புலவி நுணுக்கம்

**991.** செம்மாந்த தெங்கின் னிளநீரையோர்
செம்ம னோக்கி
அம்மாவிவை மங்கையர் கொங்கைக
ளாகு மென்ன
எம்மாதர் கொங்கைக் கிவையொப்பன
வென்றொ ரேழை
விம்மா வெதும்பா வெயராமுகம்
வெய்து யிர்த்தாள்.

செம்மாந்த தெங்கின் இளநீரை ஓர் செம்மல் நோக்கி
'அம்மா! இவை மங்கையர் கொங்கைகள் ஆகும்' என்ன,
'எம்மாதர் கொங்கைக்கு இவை ஒப்பன ?' என்று, ஓர் ஏழை
விம்மா, வெதும்பா, வெயரா முகம், வெய்து உயிர்த்தாள்.

பொ:—மேலெழுந்து வளர்ந்த தென்னையின் இளநீரை ஒரு தலைவன் பார்த்து, 'அம்மா! இவ்விளநீர்கள் மகளிரின் தனங்கள்,

போலத் தோன்றுகின்றன' என்று கூற, அது கேட்ட பேதைமையுடைய அவன் மனைவி, இந்த இளநீர்கள் எந்த மாதர் கொங்கைக்கு ஒப்பாவன? என்று கூறித் தேம்பிஅழுது உடல் வெதும்பி முகம் வெயர்த்துப் பெருமூச் செறிந்தாள். (17)

### கண்புதைத்தல்

992. போரென்ன வீங்கும் பொருப்பன்ன
பொலங்கொ டிண்டோள்
மாரன் னனையான் மலர்கொய்திருந்
தானை வந்தோர்
காரன்ன கூந்தற் குயிலன்னவள்
கண்பு தைப்ப
ஆரென்ன லோடு மனலென்ன
வயிர்த் துயிர்த்தாள்.

**போர் என்ன வீங்கும் பொருப்பு அன்ன**
**பொலம் கொள் திண் தோள்**
**மாரன் அனையான், மலர் கொய்து**
**இருந்தானை, வந்து ஓர்**
**கார் அன்ன கூந்தல் குயில் அன்னவள்**
**கண் புதைப்ப,**
**'ஆர்?' என்னலோடும், அனல் என்ன**
**அயிர்த்து உயிர்த்தாள்.**

பொ:—'போர்' என்று கூறு மாத்திரையில் மலையைப்போலப் பூரிக்கும் அழகும் திண்மையுமுடைய தோளையுடையவனும் மன்மதனை யொத்தவனுமாய்ப் பூக்கொய்து கொண்டிருந்த தன் கணவனை மேகமொத்த கூந்தலையுடையவளும் குயிலொத்த இன்மொழியினளுமான ஒருத்தி (அவனறியாது நெருங்கி) வந்து கண்களை(க் கைகளால்) மூடினளாக (அப்போது அவன்) 'யார்?' என்று கேட்டவுடன் ஐயுற்று, அவள் அனலைப்போலப் பெருமூச்சு விடலானாள்.

கு,—தன் கண்களை மூடியவர் இன்னாரென்பது அறியாமல் யாரென்று கேட்ட தலைவனது கூற்றுக்கு, வேறு பெண்ணை

நினைத்து அவன் உசாவியதாகக் கொண்டு தலைவி ஊடியதனாற் புலவி நுணுக்க மாயிற்று. 'போரெனிற் புகலும் புனைகழன் மறவர்' (புறநா, 31) என்பராகலின், 'போரென்ன வீங்கும்......... திண்டோள்' என்றார். (18)

மனைவியர்க்கு மலரைக் கொடாது ஒரு மன்னன் நிற்றல்

993. ஊற்றார் நறைநாண் மலர்மாத
ரொருங்கு வாசச்
சேற்றால் விளையாத செந்தாமரைக்
கைக ணீட்டி
ஏற்றார்க் குதவா னிடையேந்தின
னின்றொ ழிந்தான்
மாற்றா னுதவான் கடுவச்சையன்
போலொர் மன்னன்.

ஊற்று ஆர் நறை நாள் மலர், மாதர் ஒருங்கு வாசச்
சேற்றால் விளையாத செந்தாமரைக் கைகள் நீட்டி,
ஏற்றார்க்கு உதவான் இடை ஏந்தினன் நின்று ஒழிந்தான்,
மாற்றான், உதவான், கடுவச்சையன் போல், ஓர் மன்னன்.

பொ:—ஓர் அரசன் சேற்றில் தோன்றாதனவான மணம் பொருந்திய செந்தாமரைகள் போலும் தம் கைகளை நீட்டித் தேனூற்றுள்ள புதிய மலர்களை விரும்பிக் கேட்ட தன்தேவியர்க்குக் கொடாமல் தானே (அவற்றைத்) தாங்கியவனாகித் தன்பால் வந்திரந்தவர்க்கு மறுக்காமலும் கொடாமலும், கொடிய உலோபியைப்போல நின்றுவிட்டான்.

கு:—இருவர்க்கும் சமமாகக் கொடுப்பினும் ஒருவர்க்குத் தாழக் கொடுப்பினும் விளைவது மனத்துயரே என்பது உணர்ந்தவனாதலால், தலைவன் செய்வதறியாமல் உலோபத்தனமே காட்ட நேர்ந்தது என்க. 'மாதர் ஒருங்கு கைகள் நீட்டி ஏற்றாரை' என்றதனால், நீட்டியவர் ஒருவர்க்கு மேற்பட்டவர் என்பது பெறப்படும். 'மைக்கொண்ட கண்ணாளெதிர் மாற்றவள் பேர் விளம்ப' என்ற அடுத்த செய்யுளால் தலைவற்கு இருவர் தேவியர் கூறப்படுதலும் ஒப்பிடத்தகும். வச்சையன் – உலோபத் தன்மையுள்ளவன். ஒருங்கு நீட்ட, நின்றொழிந்தான் என இயையும். (19)

### மாற்றவள் பெயர் கூறக் கேட்டு வருந்துதல்

994. தைக்கின்ற வேனேக் கினடன்னுயி
ரன்ன மன்னன்
மைக்கொண்ட கண்ணு ளெதிர்மாற்றவள்
பேர்வி ளம்ப
மெய்க்கொண்ட நாணந் தலைக்கொண்டு
வெதும்பி மென்பூக்
கைக்கொண்டு மோந்தா ளுயிர்ப்புண்டு
கரிந்த தன்றே.

தைக்கின்ற வேல் நோக்கினள், தன் உயிர் அன்ன மன்னன்,
மைக்கொண்ட கண்ணுள் எதிர், மாற்றவள் பேர் விளம்ப,
மெய்க்கொண்ட நாணம் தலைக்கொண்டு, வெதும்பி, மென்பூக்
கைக்கொண்டு மோந்தாள், உயிர்ப்புண்டு கரிந்தது அன்றே.

பொ:—தைக்கின்ற வேற்படை போலும் கண்களையுடைய ஒருத்தி தன் உயிரை ஒத்த தலைவன் தன்னெதிரே மாற்றாள் பெயரை (அயர்ச்சியால்) கூறினனாக, உண்மையான நாணம் அதனால் மிகப் பெற்று உடல் வெதும்பித் தான் கொய்திட்ட மெல்லிய பூவைக் கையிற் கொண்டு மோந்தாள். (இவளது) பெருமூச்சுப் பட்டதனால் அப்பூக் கரிந்துபோயிற்று.

கு:—கொய்த பூவினை மோந்து இயற்கையைக் கெடுக்காமல் சூடுதலே மரபு; அதனைத் தலைவி மோந்ததும் அதனால் அது கரிந்து காட்டியதும்-மானம் சினங்களா லானவை என்பார் 'மென்பூ...மோந்தாள்...கரிந்தது' என்றார், 'மோயினள் உயிர்த்த காலைமா மலர்...அணியழி தோற்றம்' (அகம்-23) என்றார் சான்றோரும். மைக் கொண்ட கண்ணுள் என்ற தொடர் சுட்டு மாத்திரையாய் 'அவள்' என்னும் பொருள் தந்து நின்றது. (20)

### ஓர் அரசன் மதயானைபோல் திரிதல்

995. திண்டோ ளரசன் னொருவன்குலத்
தேவி மார்தம்
ஒண்டா மரைவாண் முகத்துண்மிளி
ருண்க ணெல்லாம்

கண்டா தரிப்பத் திரிவான்மதங்
கவ்வி யுண்ண
வண்டா தரிக்கத் திரிமாமத
யானை யொத்தான்.

திண் தோள் அரசன் ஒருவன், குலத் தேவிமார்தம்
ஒண் தாமரை வாள் முகத்துள் மிளிர் உண்கண் எல்லாம்
கண்டு ஆதரிப்பத் திரிவான், மதம் கவ்வி உண்ண
வண்டு ஆதரிக்கத் திரி மா மத யானை ஒத்தான்.

பொ :—தன் தேவியர்களுடைய ஒள்ளிய தாமரை போலும் ஒளி முகங்களில் பிறழும் மைதீட்டிய கண்கள் யாவும் (தன் பேர் அழகினைக்) கண்டு விருப்பங் கொள்ளும்படி திரிபவனான வலிய தோளினையுடைய அரசனொருவன் தன்மத நீரைக் கவ்வியுண்ணும் பொருட்டு வண்டுகள் விரும்புமாறு திரிகின்ற மதம் கொண்ட பெரிய யானையை ஒத்துத் தோன்றினான். (21)

ஒத்த பங்கு பெற்ற மனைவியர் ஊடல்

**996.** சந்திக் கலாவெண் மதிவாணுத
லாட னக்கும்
வந்திக்க லாகு மடவாட்கும்
வகுத்து நல்கி
நிந்திக்க லாகா வுருவத்தின
னிற்ப மென்பூச்
சிந்திக் கலாப மயிலிற்கண்
சிவந்து போனார்.

சந்திக் கலா வெண் மதி வாள் நுதலாள் தனக்கும்,
வந்திக்கல் ஆகும் மடவாட்கும், வகுத்து நல்கி,
நிந்திக்கல் ஆகா உருவத்தினன் நிற்ப, மென் பூச்
சிந்திக், கலாப மயிலின், கண் சிவந்து போனார்.

பொ:—பழிப்பதற்கு இடமில்லாத கட்டழகுள்ள ஓரரசன் மாலைப் போதில் தோற்றும் கலைகள் சில கொண்ட வெண்மதி போலும் ஒளி நுதலாளாகிய தன் தேவி யொருத்திக்கும், யாவரும் துதிக்கத்தகும் கட்டழகுள்ள மற்றொரு தேவிக்கும் (கொய்த மலர்களைச் சமமாகப்) பகிர்ந்து தந்து நின்ற நிலையில் (அவன் தந்த) மெல்லிய அம்மலர்களைக் கீழே சிந்திவிட்டுக் கண்கள் சினத்

தாற் சிவந்து தோகையுடைய மயில்கள் போல (முன்னிற்கவும் மனமின்றிப்) போய்விட்டனர். (22)

### ஒருத்தி மலர் தேடுவதுபோல் கணவனைத் தேடித் திரிதல்

**997.** வந்தெங் குந்தன் மன்னுயி
★ ரேயோ பிறிதொன்றோ
கந்தந் துன்றுஞ் சோர்குழல்
காணாள் கலைபேணாள்
அந்தந் தோறு மற்றுகு
முத்த மவைபாராள்
சிந்துஞ் சந்தத் தேமலர்
நாடித் திரிவாளும்.

**வந்து எங்கும், தன் மன் உயிரேயோ? பிறிது ஒன்றோ? கந்தம் துன்றும் சோர் குழல் காணாள், கலை பேணாள், அந்தம் தோறும் அற்று உகும் முத்தம் அவை பாராள், சிந்தும் சந்தத் தேம் மலர் நாடித் திரிவாளும்.**

பொ:—மணம் நிரம்பிய அவிழ்ந்த கூந்தலைக் குறிக் கொண்டு பார்க்காமலும் அரையாடை நெகிழ்ந்ததைப் பொருட்படுத்தாமலும் கொக்குவாய் தோறும் முத்துக்கள் அற்றுச் சிதறுதலை மதியாமலும் (தேடுவது) தன் உடலில் தங்கும் உயிரையோ அன்றி வேறு ஒரு சிறந்த பொருளையோ (என்று கண்டார் கருதும்படி) அச்சோலையிட மெல்லாம் சென்று தேன் சிந்தும் அழகிய மலர் களை நாடித் திரிபவளும்.

கு:—மணமுள்ள மலர்களை நாடுபவள் போல்கின்றவளாயினும் தன் உயிரனைய நாயகன் யாரிடம் பிணிப்புண்டானென்று ஆராய்வதே அவள் குறிக்கோள் என்பது ' தன் மன்னுயிரேயோ பிறிதொன்றோ ' என்ற சொற் போக்கால் உய்த்துணரப்படும். (23)

### ஒரு பெண் கிள்ளையை அனுப்பித் தொடர்தல்

**998.** யாமொழக் குஞ்சொற் பொன்னனை
யாளோ ரிகன்மன்னன்
தாழத் தாழா டாழ்ந்த
மனத்தா டளர்கின்றாள்

ஆழத் துள்ளுங் கள்ள
நினைப்பா ளவனின்ற
சூழற் கேதன் கிள்ளையை
யேவித் தொடர்வாளும்.

யாழ் ஒக்கும் சொல் பொன் அனையாள், ஓர் இகல் மன்னன்
தாழத் தாழாள், தாழ்ந்த மனத்தாள், தளர்கின்றாள்,
ஆழத் துள்ளும் கள்ள நினைப்பாள், அவன் நின்ற
சூழற்கே தன் கிள்ளையை ஏவித் தொடர்வாளும்.

பொ :—யாழிசை யொத்த இன்சொல்லுடையவளும் திருமகள் போன்றவளுமான ஒருத்தி, ஒப்பற்ற வலிமையுள்ள தன் நாயகனான அரசன் தன்னை வணங்கவும் (முதலில் அதற்கு) இணங்காதவளா யிருந்து (பின் அவளூடல் தணியாமையால் கணவன் பிரிந்து போய் விடவும்) இளகிய மனமுடையவளாய், மிகத் தளர்ந்து, ஆழ்ந்து சிந்திக்கும் வஞ்சக எண்ணத்தவளாய், தன் கணவன் நிற்கின்ற இடத்துக்கே தன் கைக்கிளியை முன்னதாக ஏவி, பின் அதனைத் தொடர்பவள் போலச் செல்லுகின்றவளும்.

கு :—முதலில் இணங்காதவள் தலைவன் பிரிந்ததும் பின் இரங் கியதன் காரணம், வேறு தேவியர் பால் அவன் காதல் மிகுவனோ என்ற அச்சமேயாம். அவ்வச்சம் நீங்கத்தன் ஆழ்ந்த சிந்தையில் சூழ்ச்சியெண்ணியவளாய்த் தன் கிளியை அவனுள்ள இடம் விட்டு அதனைத் தேடிச் செல்பவள்போல அவனைத் தொடரலானா ளென்க. (24)

### ஒரு தலைவன் மாதவிப் பந்தரை இரத்தல்

**999.** அந்தா ராகத் தைங்கணை
நூறு யிரமாகச்
சிந்தா நின்ற சிந்தையி
னன்செய் குவதோரான்
மந்தா ரங்கொண் டீகுதி
யோமா தவியென்றோர்
சந்தார் கொங்கைத் தாழ்குழ
லாள்பாற் றளர்வானும்.

அம் தார் ஆகத்து, ஐங்கணை நூறு ஆயிரம் ஆகச்
சிந்தா நின்ற சிந்தையினான், செய்குவது ஓரான்,
'மந்தாரம் கொண்டு ஈகுதியோ? மாதவி!' என்று, ஓர்
சந்து ஆர் கொங்கைத் தாழ் குழலாள்பால் தளர்வானும்.

பொ:—அழகிய மாலை யணிந்த மார்பிலே காமதேவனது ஐங் கணைகளும் நூறாயிரக்கணக்கில் எய்யப்பட்டு விழ அதனால் நொந்த சிந்தையனான ஒரு மன்னவன் செய்யுஞ் செயல் அறியாத வனாய் (பூத்துப் படர்ந்த குருக்கத்திப் பந்தரை நோக்கி) 'மாத வியே மந்தாரத்தை நீ கொணர்ந்து தரவல்லையோ' என்று சொல்லி, சந்தனக் குழம்பணிந்த தனங்களையும் நீண்ட கூந்தலையு முடைய தலைவிபால் (மோகங் கொண்டு) தளர்ச்சியடைவானா யினன்.

கு:—பஞ்ச பாணங்களும் ஒரு சேரப் பாயப் பெற்றவன் என்ப தனால், அவற்றின் அவத்தைகளான மோக முதலியவற்றால் தாக்கப் பெற்றவன் தலைவன் என்பதாயிற்று. மாதவிப் பந்தர், காதலிருவர் கூடிக் களித்தற் கேற்ற தனியிட மாதலின், தான் விரும்பியவளை அங்கே கூடவிரும்பி மேற்குறித்தவாறு கூறு கின்றான் தலைவன். 'கிடைத்தற்கரிய தெய்வ மலரான மந்தா ரத்தை அங்கே கொணர்ந்து தரவல்லையோ' என்று அவன் கூறியது, தெய்வமலரான மந்தார மலர் போன்றவளைத் தர வல்லையோ? என்றபடி; உவமையாகுபெயர். கோவலன் கணி கைக்கு மாதவி என்ற பெயர் வழக்குண்மையும் ஒப்பிடுக. இனி மந்தார மாலை என்ற பெண் பெயரின் கடைக்குறை எனினுமாம். சீதா தேவியின் தோழி ஒருத்திக்கு 'நீலமாலை' என்ற பெயர் கற்பிக்கப்பட்டதும் இங்கே நினைக்கத் தகும். மந்தார மலரின் தெய்வத்தன்மையை 'மந்தார மாலை, வாடல நறவுாுது வயின் வயின் வயங்குமாதோ' (வரைக்காட்சி-41) என்பதனாலும் அறிக. 'தாழ் குழலாள் பால் தளர்வானும்' எனப் பின்வரும் தொடரும் தன்னால் காதலிக்கப்பட்ட ஒருத்தியைக் குறிக்கின்றான் தலைவன் என்பதனைப் புலப்படுத்துதல் காணலாம். அத்தகையவளை அதி மோகத்தாற் கூடுதற்கு மாதவிப் பந்தரை நினைக்கலாயினன் அத் தலைவன். பதுமையாரை அடைய விரும்பிய சீவகன் மாதவிப் பந்தரை அடைந்ததும், அவளை அங்கே கண்டு கூடியதும் ஈண்டுக் குறிப்பிடற்குரியன. (25)

**ஊடினுள் ஒருத்தி கண்ணடி பார்த்து வருந்தல்**

1000. நாடிக் கொண்டாள் குற்ற
நயந்தாண் முனிவாருள்
ஊடிக் காணக் காட்டு
நலத்தா ளுடனில்லாள்
தேடித் தேடிச் சேர்த்த
செழும்பூ நறுமாலே
சூடிச் சூடிக் கண்ணடி
நோக்கித் துவள்வாளும்.

நாடிக் கொண்டாள், குற்றம் நயந்தாள், முனிவு ஆருள்,
ஊடிக் காணக் காட்டும் நலத்தாள், உடன் நில்லாள்,
தேடித் தேடிச் சேர்த்த செழும்பூ நறுமாலே
சூடிச் சூடிக், கண்ணடி நோக்கித், துவள்வாளும்.

பொ :—(தன் கணவன் மீது) குற்றத்தை வேண்டு மென்று விரும்பித் தேடிக் கற்பித்துக் கொண்டவளாய் (அதனுல்) முனிவு ஆருமல் மனப்பிணக்கால் தன் ஊடலே அவன் காணக் காட்டி நின்ற அழகுடையா ளொருத்தி அவ்வூடற் காலத்து நில்லாத வளாய் பலவிடங்களிலுஞ் சென்று, தான் தேடிச் சேர்த்த செழித்த மலர்களைக் கொண்டு தொடுத்த மணமாலைகளை அடிக் கடி சூடிக் கொண்டு கண்ணுடியிலே அழகு பார்த்து, அதனை நுகரக் கணவன் வாராமையால் வாடுகின்றவளும்.

கு :—ஊடினவள் பின் அவன் வலிய வருதற்குச் செய்த கோலங்களாலும் வாராமையால் வருந்தலாயினள் என்பதாம். இனிக் குற்றமே தன் கணவன்பால் காண விரும்புபவளான ஒருத்தி வேண்டுமென்று அதனை அவன்பாற் கற்பித்துக் கொண் டவளாய் என்று முதலடிக்குப் பொருள் கூறினுமாம். (26)

**ஒரு பெண் விறலியிடம் அணிகளைக் கழற்றிக் கொடுத்தல்**

1001. மறலிக் கூனும் வன்கதிர்
வேலா னிடையேவங்
துறவிக் கோலம் பெற்றில
தென்று லுடன்வாழ்விப்

பிறவிக் கேலா தென்செய்வ
திப்பே ரணியென்ஞு
விறலிக் கீவா ளொத்திழை
யெல்லாம் விடுவாளும்.

'மறலிக்கு ஊண் ஆம் வன்கதிர் வேலான் இடையே வந்து உற இக் கோலம் பெற்றிலது என்றால், உடன் வாழ்வு இப் பிறவிக்கு ஏலாது: என் செய்வது இப்பேர் அணி?' என்ஞு, விறலிக்கு ஈவாள் ஒத்து, இழை எல்லாம் விடுவாளும்.

பொ:—கூற்றுக்கு உணவு தேடித் தரும் வலிமையும் ஒளியு முள்ள வேற்படைதாங்கிய 'என் கணவன் என்பால் வந்து பொருந்துமாறு இவ்வலங்காரம் பேறு பெறவில்லை என்று நேர்ந்து விட்டதனால் இப்பிறவிக்கு அவனுடன் வாழ்வு இனி ஏலாததாம் இப் பெருங்கோலம் என்ன பயன் இனி விளைப்பது' என்று, தன் விறலிக்குக் கழற்றிக் கொடுப்பவளைப் போலக் கொண்ட கோலத்துக் குரிய அணிகளையெல்லாம் கொடுத்து விடுவாளும்.

கு:—கழற்றிய அணிகளைச் சேடியான தன்விறலி கையிற் கொடுத்தது, அத்தகைய அணிகலப் பரிசு பெறுதற்குரிய அவ் வாடல்மகளுக்கே அவற்றை ஈந்ததுபோலாயிற்று என்பதாம், (27)

### ஒரு பெண் ஒளிந்த கிளிக்காக ஒசிந்து வருந்தல்

**1002.** வம்பிற் பொங்குங் கொங்கை
சுமக்கும் வலியின்றிக்
கம்பிக் கின்ற நுண்ணிடை
நோவக் கசிவாளும்
பைம்பொற் கிண்ணம் மெல்விர
ருங்கிப் பயில்கின்ற
கொம்பிற் கிள்ளைப் பிள்ளை
யொளிப்பக் குழைவாளும்.

வம்பில் பொங்கும் கொங்கை சுமக்கும் வலி இன்றிக் கம்பிக் கின்ற நுண் இடை நோவக் கசிவாளும், பைம்பொன் கிண்ணம் மெல் விரல் தாங்கிப், பயில்கின்ற கொம்பில் கிள்ளைப் பிள்ளை ஒளிப்பக், குழைவாளும்.

பொ :—கச்சினின்றும் மேலெழுகின்ற தன் தனங்களைப் பொறுக்கவல்ல வலிமையில்லாமல் நடுங்குகின்ற நுணுகிய இடை வருந்தத் தளர்பவளும், செறிந்த மரக்கொம்பரிலே தான் வளர்க்கின்ற கிளிப்பிள்ளை ஒளிந்துகொள்ளவே அதனைத் தேடிய வண்ணம் பசும்பொன்னாற் செய்த கிண்ணத்தைத் தன் மெல்லிய விரல்களில் தாங்கிக் கொண்டு ஒசிந்து வருந்துபவளும். (28)

## அன்னத்திற்கு ஆடை அளித்தல்

1003. தன்னைக் கண்டாண் மென்னடை
கண்டா டமரேபோல்
துன்னக் கண்டா டோழமை
யென்று டுணையென்றாள்
உன்னைக் கண்டா ரெள்ளுவர்
பொல்லா துடுநீயென்
றன்னக் கன்னிக் காடை
யளிப்பா னமைவாளும்.

தன்னைக் கண்டாள் மெல் நடை கண்டாள், தமரேபோல் துன்னக் கண்டாள், 'தோழமை' என்றாள், 'துணை' என்றாள், 'உன்னைக் கண்டார் எள்ளுவர்; பொல்லாது; உடு நீ!' என்று, அன்னக் கன்னிக்கு ஆடை அளிப்பான் அமைவாளும்.

பொ :—இளமையான அன்னப்பேடையைக் கண்ட ஒரு நங்கை, தன் நடை இயல்பைப் பார்த்தாள், அதன் மெல்லிய நடை யழகையும் பார்த்தாள், தன் உறவினர் போல் தன்பால் அது நெருங்குவதைப் பார்த்தாள், 'நீ என் தோழியாவாய்' என்றாள், 'துணையும் ஆவாய்' என்றாள் (பின், இத்தகைய தோழியும் துணையுமான நீ) நாணமற்று ஆடையின்றி யிருத்தலைப் பிறர் காண்பாராயின் இகழ்வார்கள், அது நல்லதுமன்று என்று சொல்லி அவ்வன்னப் பேடைக்கு ஆடை கொடுக்க அமைபவளும்.

கு :—இங்கு, 'முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்' அளித்த வள்ளல்களின் வரலாறு நினையத்தகும். 'அஞ்சல் மடவனமே உன்றனணி நடையும், வஞ்சியனையார் மணி நடையும்-விஞ்சியது காணப்பிடித்தது காண்' என்ற புகழேந்தியார் வாக்கும் ஒப்பிடத்தகும், தோழமை என்ற பண்புச்சொல் பண்

பியை உணர்த்தியது, 'தோழமை யென்றவர் சொல்லிய சொல்' (குகப் படலம்-15.) என்று பின் கூறுதலும் காண்க, (29)

## ஒரு பெண், மயிலுக்கு அஞ்சியும் நாணியும் மறைதல்

**1004.** பாகொக் குஞ்சொன் னுண்கலை
யாடன் படரல்குல்
ஆகக் கண்டோ ராடர
வாமென் றயனண்ணும்
தோகைக் கஞ்சிக் கொம்பி
ஞெதுங்கித் துணரீன்ற
சாகைத் தன்கைக் கண்கள்
புதைத்துத் தளர்வாளும்.

பாகு ஒக்கும் சொல் நுண் கலையாள், தன் படர் அல்குல் ஆகக் கண்டு, ஓர் ஆடு அரவு ஆம் என்று, அயல் நண்ணும் தோகைக்கு அஞ்சிக், கொம்பின் ஒதுங்கித், துணர் ஈன்ற சாகைத் தன்கைக் கண்கள் புதைத்துத், தளர்வாளும்.

பொ:—பாகுபோலும் மதுர மொழியையுடைய மெல்லிய ஆடை அணிந்திருந்த ஒருத்தி, தன் பரந்த அரையிடத்தை முழுதும் பார்த்து,(இது)படமெடுத்தாடும் ஓர் பாம்பாகும் என்று பக்கத்து வந்து நெருங்கிய மயிலுக்கு அஞ்சினவளாய், ஒரு பூங்கொம்பிலே பதுங்கி (நாணத்தால்) பூங்கொத்தீன்ற கிளைபோன்ற தன் கைகளால் தன் கண்களை மூடியவண்ணம் சோர்பவளும்.

கு:—'மஞ்ஞை......பாம்பைப் பிடித்துப் படங்கிழித்தாங்கு' (திருக்கோவை 21) என்பதனால் மயிற்குப் பாம்பு பகையாதல் காண்க. அல்குல் - உந்தியின் கீழரையிடம்; 'அணியல்குல் புடைபெயர.........தளர்நடை நடவானோ' (பெரியாழ்வார் - 1-7-8) என ஆண்பாலாரிடத்தும் 'பட்டிசைந்த அல்குலாள்' (தேவா) எனப் பெண்பாலரிடத்தும் இச்சொல் பயில்வதாம். பாம்போ என்று மயங்கி மயில் நெருங்கிவந்தபோது தான் உடுத்த மெல்லிய ஆடை தன் அரையிடத்தை வெளிப்படுத்தியதனால் மயில் அரவென்று நெருங்கிய தறிந்த மங்கை அச்சமும் நாணமும் கொண்டு தன்கண் புதைத்துத் தளர்ந்தாள் என்க. (30)

**மறைந்து தேடி விளையாடுதல்**

**1005.** பொன்னே தேனே பூமக
ளேகா ணெனை யென்னுத்
தன்னே ரில்லா ளங்கொரு
கொய்பூந் தழை மூழ்கி
இன்னே யென்னைக் காணுதி
நீயென் றிகலித் தன்
நன்னீ லக்கண் கையின்
மறைத்து நகுவாளும்.

**'பொன்னே! தேனே! பூமகளே! காண் எனை!' என்னுத்,**
**தன் நேர் இல்லாள், அங்கு ஒரு கொய்பூந் தழை மூழ்கி,**
**'இன்னே என்னைக் காணுதிநீ!' என்று, இகலித், தன்**
**நல் நீலக் கண் கையின் மறைத்து, நகுவாளும்.**

பொ:—தன்னை யொப்பாரை யில்லாத ஒருத்தி 'பொன்போல் பவளே! தேனையொத்த இன்சொல்லாய்! திருமகளனைய பேரழகுடையாய்! (மறைந்து கொள்ளும்) என்னைக் கண்டு பிடிப்பாயாக' என்று தன் தோழியை நோக்கிக் கூறி, அந்தச் சோலையுள் கொய்யும்படி செறிந்துள்ள கொம்பொன்றன் தழைக்குள்ளே மறைந்து கொள்ள (அத்தோழி தன்னைக் கண்டு பிடிக்காமையால் தானே மெல்ல வந்து) 'இப்போது என்னைக் காண்பாயாக' என்று மாறு பட்டுச் சொல்லி அவளது நீலமலர்போலும் கண்களைத் தன் கைகளால் (பின்புறம் நின்று) மூடிச் சிரிப்பவளும்.

கு:—இகலுதல் - விளையாட்டில் தன் வெற்றி கூறி மாறுபடுதல். **(31)**

**ஒருவன் வில்லும் தாமரையும் கைக்கொண்டு திரிதல்**

**1006.** வில்லிற் கோதை நாணுற
மிக்கோ னிகலங்கம்
புல்லிக் கொண்ட தாமரை
மென்பூ மலர்தாங்கி
அல்லிற் கோதை மாதர்
முகப்பே ரரவிந்தச்
செல்வக் கானிற் செங்கதி
ரென்னத் திரிவானும்.

வில்லில் கோதை நாண் உற, மிக்கோன், இகல் அங்கம்
புல்லிக் கொண்ட தாமரை மென்பூ மலர் தாங்கி,
அல்லில் கோதை மாதர் முகப் பேர் அரவிந்தச்
செல்வக் கானில் செங்கதிர் என்னத் திரிவானும்.

பொ:—யாரினும் மேம்பட்ட தலைவனொருவன் தன் வில்லின் நாண்விரல் கவசத்தில் பொருந்த (ஒரு கையில் தாங்கியும்,) வலிமையுள்ள மற்ற (அங்கமான) கையில் எடுத்துக்கொண்ட மெல்லிய தாமரைப் பூவைத் தாங்கிக்கொண்டும் இருள்போற் கரிய கூந்தலுள்ள மகளிரின் முகங்களாகிய வளம்பெற்ற தாமரைக் காட்டில் செங்கதிருள்ள சூரியன் போலத் திரிபவனும்,

கு:—கோதை - வின்ஞாண்படாமல் இடது முன்னங்கையில் அணியும் தோற்கவசம். வில்நாண் கோதையில் உற என மாற்றுக. இகல் அங்கம் - போர் செயற்குரிய வலக்கை. (32)

மனைவியர் பாடலை ஆடவர் கூர்ந்து கேட்டல்

1007. செய்யிற் கொள்ளுந் தெள்ளமு
தச்செஞ் சிலையொன்று
கையிற் பெய்யிற் காமனு
நாணுங் கவினர்தம்
மையற் பேதை மாதர்
மிழற்று மழலைச் சொல்
தெய்வப் பாடல் சொற்கலை
யென்னத் தெரிவாரும்.

செய்யில் கொள்ளும் தெள் அமுதச் செஞ்சிலை ஒன்று
கையில் பெய்யில் காமனும் நாணும் கவினர், தம்
மையல் பேதை மாதர் மிழற்றும் மழலைச் சொல்
தெய்வப் பாடல், சொல் கலை என்னத், தெரிவாரும்.

பொ:—செய்களிலிருந்து வெட்டிக் கொள்ளப்படும் இனிய, இரசத்தையுடைய கரும்பாகிய செந்நிற வில்லொன்றைத் தன் கையிலே கொள்வராயின் மன்மதனும் வெள்குதற்குக் காரணமான அழகுள்ள ஆடவர்கள், மையலூட்டுபவரும் பேதைமைக் குணமுடையவருமான தம் மனைவிமார் கூறுகின்ற மழலைப் பேச்சை அருட்பாடல்களாலாய சொற்சுவை வாய்ந்த கலைகளைப் போல ஆராய்பவரும். (33)

### காமன் ஆயனைப் போலுதல்

1008. சோலைத் தும்பி மென்குழ
லாகத் தொடைமேவும்
கோலைக் கொண்ட மன்மத
வாயன் குறியுய்ப்ப
நீலத் துண்கண் மங்கையர்
சூழல் நிரையாவின்
மாலைப் போதின் மால்விடை
யென்ன வருவாரும்

**சோலைத் தும்பி மென் குழல் ஆகத், தொடை மேவும்**
**கோலைக் கொண்ட மன்மத ஆயன் குறி உய்ப்ப,**
**நீலத்து உண்கண் மங்கையர் சூழல் நிரை ஆவின்,**
**மாலைப் போதின், மால் விடை என்ன வருவாரும்.**

பொ:—சோலைகளிலுள்ள வண்டுகளின் ஒலி மெல்லோசையுள்ள புல்லாங்குழலோசையாக மாலைக் காலத்தில் எய்தற்கு அம்பைத் தொடுத்தல்கொண்ட மன்மதனாகிய இடையன் (வீடு திரும்பற்கு) உரிய அடையாளத்தை (அக் குழலோசையால்) அறிவிக்க, மாலையில் பசுநிரைகளின் நடுவில் பெரிய இடபங்கள் வருவனபோல, கருங்குவளைமலர் போலும் மையுண்ட கண்களையுடைய மங்கையர்கள் சூழலிலே (நடுவில்) வருபவர்களும்.

கு:—மாலைப்போது வந்தஅளவிலே மலர்கொய்யச் சென்றோரனைவரும் பாடி திரும்பிய செய்தி இதனாற் கூறப்படுகின்றது. தொடைமேவுங் கோல் - பூமாலை கட்டிய மேய்க்குங்கோல் எனவும் தொடுத்தெய்யப்படும் ஐங்கணைகள் எனவும்; குறி உய்ப்ப - வீடு திரும்பற்குரிய குழல் ஓசை அடையாளம் தெரிவிக்க, எனவும் கூடுதற்குரிய குறியிடத்திற் செலுத்த எனவும் சிலேடைப் பொருள் கொள்க. (34)

### ஒரு பெண்ணின் புருவக்கடை முனிவரையும் வெல்லும்

1009. ஊக்க முள்ளத் துடைய முனிவரால்
★ காக்க லாவது காமன்கை வில்லெனும்
வாக்கு மாத்திர மல்லது வல்லியில்
பூக்கொய் வாள்புரு வக்கடை போதுமே.

ஊக்கம் உள்ளத்து உடைய முனிவரால்
காக்கல் ஆவது காமன்கை வில், எனும்
வாக்கு மாத்திரம் அல்லது, வல்லியில்
பூக் கொய்வாள் புருவக் கடை போதுமே.

பொ:—'தவம்புரிவதில் உள்ளத்தே ஊக்கங்கொண்ட முனிவர்களால் காமதேவனது கைவில் காக்கப்பெறும் வன்மையுள்ளது' என்று உலகத்தினர் சொல்கின்ற வாய்ச்சொல் மட்டும் பெரியதாக உள்ளதேயன்றி (உண்மையை நோக்குமிடத்து) பூக்கொடிகளினின்றும் மலர்கொய்யும் ஒரு மடந்தையின் புருவத்தின் கடைப் பகுதியே (அம்முனிவரின் ஆற்றலை அழித்தற்குப்) போதியதாம்.

கு:—காமன் கரும்பு வில்லினும் மடந்தையரின் புருவ வில்லின் வலியே முனிவராற்றலையும் மாற்றவல்லது என்பதாம். பற்றற்ற முனிவர்க்கே இத்தகையதாயின் இல்வாழ்வாராகிய மக்கட்கு அது எத்தகையதாமோ என்றபடி. (35)

### ஞானிகளும் காமத்தை வெல்வாரல்லர்

1010. நாறு பூங்குழ னன்னுதல் புன்னைமேல்
ஏறி னுன்மனத் தும்பர்சென் றேறினாள்
ஊறு ஞானத் துயர்ந்தவ ராயினும்
வீறு சேர்முலை மாதரை வெல்வரோ.

நாறு பூங்குழல் நல் நுதல், புன்னைமேல்
ஏறினான் மனத்து உம்பர் சென்று ஏறினாள்:
ஊறு ஞானத்து உயர்ந்தவர் ஆயினும்,
வீறு சேர் முலை மாதரை வெல்வரோ?

பொ:—புன்னைமரத்தின் மேல் (பூக்கொய்ய) ஏறிய தன் கணவனது மனத்திலே, மலர்மணம் வீசும் கூந்தலையும் அழகிய நெற்றியையுமுடைய ஒருத்தி சென்று ஏறிக்கொண்டனள். மேல் மேல் உதிக்கின்ற ஞானத்தால் மேம்பாடு மிகப் பெற்றவராயினும், இறுமாந்தெழும் கொங்கைகளுள்ள மங்கையரை (அவர்கள்) வெல்ல வல்லவர்களோ.

கு:—மலர்கொய்து தரத் தலைவனைத் தலைவி வேண்டியவளேயன்றி மரத்தின்மேல் ஏறிப் பறிக்க அவள் கூறியவள் அல்லள். அங்ஙனமாகவும் அவனை மகிழ்விக்க விரும்பி அவன் உச்சிமரத்தில் ஏறிவிட்டதனால் அவற்கு இடையூறு நேருமோ என்ற அச்சங்

காரணமாகத் தன் காதற் குறிப்பைத் தலைவி காட்டலாயினள் என்பதும், அதனால் தன் மனத்தில் ஏறிய அவளது காமபாரம் தன்னைப் பூக்கொய்ய விடாமல் தகையவே அவன் கீழிறங்கித் தலைவியைக் கலந்தனன் என்பதும் குறிப்புக்கள். 'வீறுசேர் முலைமாதர்' என்பதனால் அக்குறிப்புணர்த்திய உறுப்பும் 'ஞானத்து உயர்ந்தவராயினும்' என்பதனால் மரத்தின் மேலிடத்தை அடைந்தவன் என்பதும் புலப்பட நிற்கின்றன. (36)

ஒருவன் அரும்புகளையும் புதிய தளிர்களையும் கொய்தல்

1011. சினையின் மேலிருந் தானுருத் தேவரால்
வனைய வும்மரி யாள்வனப் பின்றலை
நினைவு நோக்கமு நீக்கலன் கைகளால்
நனையு நாண்முறி யுங்கொய்து நல்கினான்.

சினையின் மேல் இருந்தான், உருத் தேவரால்
வனையவும் அரியாள் வனப்பின் தலை
நினைவும் நோக்கமும் நீக்கலன், கைகளால்
நனையும் நாள் முறியும் கொய்து நல்கினான்.

பொ :—பூக்கிளையின் மேலே இருந்த கணவன் ஒருவன், தேவராலும் எழுதற்கரிய பேரழகுடைய தன் மனைவியிடமே கருத்தும் பார்வையும் நீங்கலனாகி, மலர்களைக் கொய்தற்கு நீட்டிய கைகளாலே பூவரும்புகளையும் புதிய தளிர்களையும் கொய்து கொடுக்கலாயினன் என்க.

கு:—தான்மேற்கொண்ட பூக்கொய்யும் முயற்சியைக் கணவன் மனம் நெகிழவிட்டதனால், அவள் வேண்டாதன செய்வதாக முடிந்தது என்க. (37)

மனைவியின் கோபம் கண்டு ஒருவன் தடுமாறுதல்

1012. வண்டு வாழ்குழ
லாண்முகம் வாடிடத்
தண்டு போற்புயத்
தான்றடு மாறினான்

உண்டு கோபமென்
றுள்ளத் துணர்ந்தவள்
தொண்டை வாயிற்
றுடிப்பொன்று சொல்லவே.

வண்டு வாழ் குழலாள் முகம் வாடிடத்,
தண்டு போல் புயத்தான் தடுமாறினன்,
உண்டு கோபம் என்று உள்ளத்து உணர்ந்து, அவள்
தொண்டை வாயில் துடிப்பு ஒன்று சொல்லவே.

பொ :—பெரியதொரு தண்டுபோன்ற தோளிணையுடையனாய் நின்ற தலைவனொருவன், வண்டுகள் வாழும் கூந்தலுடைய தன் மனைவியின் முகம் வாட்டமுறவும், அவளது கொவ்வைக்கனி போன்ற வாயினில் தோன்றிய துடிப்பானது ஒன்று அறிவிக்கவும், பெருஞ்சினம் இவள் உள்ளத்தே உண்டென்பதனை உணர்ந்தவனாய்த் தடுமாறலானான்.

கு:—மகளிரெல்லாம் தம் கணவருடன் கூடிப் பூக்கொய்து விளையாடி நிற்க, மாலை முதலியன அணிந்து கொள்ளாமலும் பூப்பறித்தலில் தனக்கு உதவாமலும், யாவும் பறிகொடுத்தவன் போல, வெறுந்தறிபோல், தன் கணவன் வந்து நின்றதனால், முகவாட்டமும் வாய் துடித்தலும் நேர்ந்தன எனல் பொருந்தும். 'தண்டுபோற் புயத்தான்' என்பதனால் வேறொருத்திக்கு யாவும் அளித்துவிட்டு வெறுந்தோளனாக வந்தவன் என்பது பெறுதும். வாட, சொல்ல, உணர்ந்து தடுமாறினன் என முடிக்க. (38)

### அனைவரும் புனலாட்டுக்குச் செல்லுதல்

1013. ஏயுந் தன்மைய ரிவ்வகை யாரெலாம்
தூய தண்ணிழற் சோலைத் துறுமலர்
வேயுஞ் செய்கை வெறுத்தனர் வெண்டிரை
பாயுந் தீம்புனற் பண்ணைசென் றெய்தினர்.

ஏயும் தன்மையர் இவ்வகையார் எலாம்,
தூய தண் நிழல் சோலைத் துறு மலர்
வேயும் செய்கை வெறுத்தனர், வெண் திரை
பாயும் தீம் புனல் பண்ணை சென்று எய்தினர்.

பொ :—(பூக்கொய்து ஊடிக்கூடி மகிழ்ந்த) ஆடவரும் மகளிரும் ஆகிய இத்தகையாரெல்லாம் தூய்மையான குளிர்ந்த நிழலைத் தரும் சோலையிலே, நெருங்கிய மலர்களை (ப்பறித்து)ச் சூடுந் தொழிலை (நெடும்போதுவரை செய்ததனால்) வெறுப்படைந்தவராய் வெள்ளிய அலைகள் பாயப்பெற்ற இனிய நீரின்கண்விளையாட்டை (மேற்கொள்ள)ச் சென்றடைந்தனர்.

கு :—ஒரு செய்கை செய்து நெடும்போது கழித்தலில் வெறுப்பே உண்டாகும் என்பார் 'துறுமலர் வேயுஞ் செய்கை வெறுத்தனர்' என்றார். புனற் பண்ணை - நீர்விளையாட்டு. (39)

பூக்கொய் படலம் முற்றிற்று

# 16. நீர்விளையாட்டுப் படலம்

இப்படலம் 33 செய்யுட்களைக் கொண்டது. இது புனல் விளையாட்டுப் படலம் என்று சில பிரதிகளில் காணப்படுகிறது (23, 41). ஆயினும் "நீராடுவான் அமைந்த தோற்றம்", "நீர் குடையுந்தோறும்" "குடைந்து நீராடு மாதர்" "ஆன நீர் விளையாடல்" என இப்படலத்துள் முறையே 2, 11, 12, 32 என்ற எண்கள் கொண்ட செய்யுட்களிற் காணப்படுவதாலும், "புனலாடிய" என்று 30 ஆவது செய்யுளில்மட்டும் காணப்படுவதாலும், அத்தொடரைத் தலைப்பாகக் கொண்டால், புனலாட்டு என்றே கொள்ள வேண்டி வருமாதலாலும், "கங்கை யாடிப் போந்தேன் சோறு தம்மின்" என்ற இடத்துக் கங்கையில் நீராடிப் போந்தேன் என்பதன்றி, விளையாடிப் போந்தேன் என்ற பொருள் இன்றாகலானும், "புனல் விளையாட்டு" என்ற தலைப்பை விடுத்து, "நீர்விளையாட்டுப் படலம்" என்ற தலைப்பே தழுவப்பட்டது.

மிதிலைமாநகரில் வில்லை முரித்து, இராமன் சீதையை மணக்க உரியவன் ஆனான். சனகன் மகிழ்ந்து, இச்செய்தியை ஓர் மண இதழ் மூலம், தயரதனுக்குத் தூதுவர்வாயிலாக அறிவித்தான். தயரதன் செய்தி கண்டு மகிழ்ந்து, அயோத்தியினின்றும் புறப்பட்டு மிதிலையை அடைந்த செய்தி, வான்மீக இராமாயணத்துப் பாலகாண்டம் 68, 69-ஆவது சருக்கங்களிற் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது. கம்பரது காப்பியத்தில், தயரதன் தன் அமைச்சர் முதலிய மந்திரச் சுற்றங்களுடனும், மனைவி மக்கள் உறவினருடனும், யானை குதிரை தேர் காலாள் முதலிய நால் வகைப் படைகளுடனும், புறப்பட்டதிலிருந்து, மிதிலை நகர்ப் புறத்தில் சனகனால் எதிர்கொள்ளப்பட்டது வரை கூறப்பட்டுள்ளது, இந் நிகழ்ச்சிகளைப் பதின்மூன்றுவது எழுச்சிப் படலம் முதல் 18-ஆவது எதிர்கொள் படலம் முடிய, ஆறு படலங்களில் 300 செய்யுட்களில் விரிவாகக் காணலாம். இப்படலச் செய்திகள் வான்மீகத்திற் காணப்படவில்லை. முன்னர் மிதிலைக்காட்சி, வரைக்காட்சி முதலிய படலங்கள் போன்றும், பின்னர்க் காணப்பெறும் இரணியன்வதைப் படலம், மாயாசனகப் படலம் போன்றும், இப்படலமும் கம்பர் தாமாகவே அமைத்துக் கொண்டதாகும். இவற்றுள் தாமியற்றிய பெருங் காப்பியத்திற்கு இன்றியமையாத மலைக் காட்சி, நீர்விளையாட்டு, ஆடவர் பெண்டிரின் பல்வேறு விளையாட்டுகள், கதிர்மதிகளின் தோற்றம்

மறைவுகள் முதலிய பல சுவைமிக்க நிகழ்ச்சிகளைச் சிறந்த கற்பனை நயம் தோன்றக் கம்பர் கூறியுள்ளார்.

இனி, பூக்கொய்த மகளிரும் ஆடவரும் நீர்நிலைகளில் இறங்கி விளையாடிய செய்தி, இப்படலத்திற் பேசப்படுகின்றது. ஆடவரும் பெண்டிரும் நீர்நிலைகள் நோக்கி வருதலும், அவர்கள் நீர் நிலைகளிற் புகுதலும், மகளிரது உடலுறுப்புக்களின் வனப்பும், முதல் மூன்று செய்யுட்களிற் காணலாம். 4 முதல் 11-ஆவது செய்யுள் இறுதியாக உள்ள பாடல்கள், மாதர்களின் பல்வேறு விளையாடல்களைக் கூறும். நீர்நிலையிற் காணப்பட்ட மகளிரின் காட்சி 15 முதல் 17 வரையில் உள்ள செய்யுட்களிலும், நீராடிய பெண்களின் பல்வேறு நிலைகள் அவற்றை அடுத்து வரும் எட்டுச் செய்யுட்களிலும் நயம்படக் கூறப்பட்டுள்ளன ஆடவரும் மகளிரும் நீராடிக் கரையேறிய பின்னர்ப் பொய்கை பொலிவிழந்த நிலை 31-ஆவது பாடலிலும், ஞாயிற்றின் மறைவும், திங்களின் தோற்றமும் முறையே இறுதியிரண்டு செய்யுட்களிலும் கூறப்பட்டுள்ளன. பொய்கையை மகளிர்க்குக் கொழுநனாகக் கூறிய பகுதி படித்து இன்புறற்பாலது.

இதிற் காணப்படுவது போன்ற நீர்விளையாட்டைப் பரிபாடல், சிந்தாமணி, பெருங்கதை முதலிய நூல்களிலும் காணலாம். அவற்றில் காணப்பெறும் பல கருத்துக்களை இப்படலத்தும் காண்டல் கூடும். கம்பர் அவற்றைப் பொன்னேபோல் போற்றிய செய்தி அறிந்து மகிழத்தக்கது. உதாரணமாகப் புனல் விளையாட்டில் சுண்ணமும் கோதையும் வீசுதலைச் சிந்தாமணியிலும், கோதைகொண்டோச்சுதலைப் பெருங்கதை, பரிபாடல்களிலும் காணலாம். மற்றும் நீராடுகையில் வாய் விளர்த்தலும், கண்கள் சிவப்பேறுதலும் நிகழும் என்பர் கம்பர். இக்கருத்தைக் "கருங்கண் சிவப்பக் கனிவாய் விளர்ப்பக் கண்ணாரளிபின் வருங் கண் மலைமலர் சூட்டவற்றோ மற்றவ் வான்சுனையே" (70) என்று சிலேடை நயம்படத் தோழி கூறுவதைத் திருக்கோவைச் செய்யுளிற் காணலாம். இப்படலம் 25-ஆவது பாடலில் திருமகளை, இனிய நீரைத் துதிக்கையில் முகந்து ஓர் யானை யரசு நீராட்டியது போல் ஓர் மன்னன் தன் கையினால் நீரை முகந்து, தன் மனைவியின் கூந்தலில் இறைத்ததாகக் கூறப்பட்டுள்ளது. இக் கருத்து, குறிஞ்சிக் கலி 8-ஆவது பாட்டில் அமைந்திருப்பது அறிந்து மகிழத்தகும்.

---

# 16. நீர்விளையாட்டுப் படலம்

## ஆடவரும் மகளிரும் தடங்கள் நோக்கி வருதல்

1014. புனைமலர்த் தடங்க ணோக்கிப்
★ பூசல்வண் டார்த்துப் பொங்க
வினையறு துறக்க நாட்டு
விண்ணவர் கணமு நாண
அனகரு மணங்க னாரு
மம்மலர்ச் சோலை நின்று
வனகரி பிடிக ளோடும்
வருவன போல வந்தார்.

புனை மலர்த் தடங்கள் நோக்கிப், பூசல் வண்டு ஆர்த்துப் பொங்க, வினை அறு துறக்க நாட்டு விண்ணவர் கணமும் நாண, அனகரும் அணங்கு அனாரும், அம் மலர்ச் சோலை நின்றும், வன கரி பிடிகளோடும் வருவன போல, வந்தார்.

பொ:—குற்றமற்ற ஆடவரும் தெய்வ மகளிரை யொத்த மாதரும், வினை நீங்குதலால் எய்தக் கூடிய விண்ணுலகில் உள்ள தேவர் கூட்டமும் வெட்கமுறும்படி, மணம் நிறைந்த மலர்ச் சோலையிலிருந்து வண்டுகள் ஒலித்து மகிழ்வுகொண்டெழ, அணியாக அமைந்த மலர்கள் நிறைந்த குளங்களை நோக்கிக் காட்டு யானைகள் தத்தம் பெண்யானைகளோடு வருவனவற்றை ஒத்து வந்தார்கள்.

கு :—புனைமலர் – அணியத்தக்க மலருமாம். வினையறு துறக்க நாடு, துறக்கத்திற் செல்பவரின் வினையறுதலாகிய தொழிலைத் துறக்கத்தின் மேல் வைத்துக் கூறினர்.

5, 12, 13, 20-ஆம் பிரதிகளில் இப்பாடலுடன் பூக்கொய் படலம் முற்றுப் பெறுகிறது. (1)

### மகளிர் நீர்நிலைகளிற் புகுதல்

1015. அங்கவர் பண்ணை நன்னீ
ராடுவா னமைந்த தோற்றம்
கங்கைவார் சடையோ னன்ன
மாமுனி கனல மேனாள்
மங்கைமார் கூட்டத் தோடும்
வானவர்க் கிறைவன் செல்வம்
பொங்குபாற் கடலிற் செல்லும்
தோற்றமே போன்ற தன்றே.

**அங்கு அவர் பண்ணை நல் நீர் ஆடுவான் அமைந்த தோற்றம், கங்கைவார் சடையோன் அன்ன மாமுனி கனல, மேல் நாள், மங்கைமார் கூட்டத்தோடும், வானவர்க்கு இறைவன் செல்வம், பொங்கு பாற்கடலிற் செல்லும் தோற்றமே போன்றது அன்று ஏ.**

பொ :—காணப் பெற்ற குளங்களில் ஆடவரும் மகளிரும் விளையாட்டாக நீராடுதற்குப் பொருந்திய காட்சியானது, கங்கை பெருகாநின்ற சடைமுடியையுடைய சிவபெருமானை ஒத்த, பெரிய முனிவனாகிய துருவாசன் முன்னாளில் வெகுளுதலால், விண்ணுலகின் இறைவனான இந்திரனது செல்வமானது, அர மகளிர் கூட்டத்துடன் அலைகள் பொங்கி எழுகின்ற திருப்பாற் கடலில் புகுந்த காட்சியை ஒத்திருந்தது.

கு :— பண்ணை – விளையாட்டு. "கெடவரல் பண்ணையா யிரண்டும் விளையாட்டு." (தொல் உரியியல் 23) "மன்றலங் தோழிமாருள் வனத்திடைப் பண்ணையாட" (சிந்தா-1579). கங்கை பெருகும் சடை. "கங்கைவார் சடைக் கரந்தார்க்கு" என்பது திருமுறை. (6, 95, 10). கனலுதல்-வெகுண்டு கூறிய வெம்மொழியை யுணர்த்திநின்றது. மடவார் நீரில் மூழ்கியது, தெய்வ மங்கையர், முனிவர் கடுமொழியால் பாற்கடலில் மறைந்தமை போன்றது என்பது கருத்து. (2)

### மகளிரின் முகங்களும் கண்களும்

1016. மையவாங் குவளை யெல்லா
மாதர்கள் மலர்க்கண் பூத்த
கையவா முருவத் தார்தங்
கண்மலர் குவளை பூத்த

செய்யதா மரைக ளெல்லாந்
தெரிவையர் முகங்கள் பூத்த
தையலார் முகங்கள் செய்ய
தாமரை பூத்த வன்றே.

**மைய ஆம் குவளை எல்லாம் மாதர்கள் மலர்க் கண் பூத்த, கைய ஆம் உருவத்தார் தம் கண் மலர் குவளை பூத்த, செய்ய தாமரைகள் எல்லாம் தெரிவையர் முகங்கள் பூத்த, தையலார் முகங்கள் செய்ய தாமரை பூத்த அன்றே.**

பொ:—கரிய நிறமுள்ளனவாகிய நீலமலர்கள் எல்லாம் அம் மாதர்களுடைய கண்மலர்கள் போலப் பூத்தன. உடலுறுப் பிலக்கணத்தின் ஒழுங்குக்கேற்ப அமைந்த உருவத்தையுடைய மகளிரின் கண்கள் மலர்ந்த நீலமலர்களைப் போல விளங்கின. சிவந்த தாமரைகள் எல்லாம் அம்மகளிரின் முகங்கள் போலப் பூத்தன. அந்த நங்கைமாருடைய முகங்கள் செந்தாமரைமலர் களைப் போன்று ஒளிசெய்தன.

கு :—மை அவாம் என்று பிரித்து அஞ்சனமையும் நிறச் சிறப் பான் விரும்பும்படியான என்றும் கொள்ளலாம். கை-ஒழுங்கு; இங்கே உடலுறுப் பிலக்கண முறை என்று கொள்க. இனி, கை என்பதற்கு ஒழுக்கம் என்று கொண்டு ஒழுக்கத்தை விரும்பும் அழகிய மாதரின் கண் என்றும், ஒழுக்கம் விரும்பும் உருவத்தார் கண் என்றும் கொள்ளலுமாம். கை - ஒழுக்கம்; 'கைவளர் கரும் புடைக் கடவுள்,' (சிந்தா - 1263) என்னும் தொடர்க்கு "இல்வாழ்க்கை வளர்தற்குக் காரணமான கரும்பு என்று உரை கூறுவர் நச்சினார்க்கினியர். 'கைவளர் மயிலனை வலஞ் செய்து காப்பு மிட்டார்" என்று கம்பரும் கூறுவர். (கோலங்காண் 18). "கையறியா மாக்கள்" (நால-163) என்ற இடத்தும், கை என்பது ஒழுக்கம் எனப்பொருள்படுதல் காண்க. புறத் தழகு மட்டும் மகளிர்க்குப் போதாது, நற்பண்புகளும் ஒழுக்கமும் வேண்டும் என்று கம்பர் பல்லிடங்களிலும் கூறுவர். "பண்க ளாற் கிளவி செய்து" எனத் தொடங்கும் பாடலில் "எண்களால் அளவா மானக் குணம் தொகுத்தியற்றினாளை" (மாயாசனக. 5) என்றும், "குணங்களை யென் கூறுவது கொம்பினைச் சேர்ந்தவை யுய்யப் பிணங்குவன அழகிவளைத் தவம் செய்து பெற்றதுகாண்" (கார்முகப். 18) என்ற இடங்களைக் காண்க. இப்படலத்துப் பொதுத் தலத்து மகளிர் நீர்விளையாட்டைக் கூறுமிடத்தும் மகளிர் தத்தம் கணவன்மாரொடும் விளையாட்டுகள் நிகழ்த்திய தாகவே கூறுதல் அறிந்து இன்புறத்தக்கது. இவை கொண்டு கை

அவாம் என்பதற்குச் சிறந்த ஒழுக்கம் விரும்புகின்ற பேரழகு வாய்ந்த மகளிர் என்று கூறுதல் பொருத்தமாவதை அறியலாம். உடலுறுப் பிலக்கணச் சிறப்பிற்கேற்பவே உயரிய குணங்களும் அமையும் என்று அறிஞர் கூறுவர். இனி, உருவத்தார் தங்கைய வாம் கண் மலர் என்று கொண்டு, அழகிய (மகளிரது) குடங்கை அளவினதாகிய கண்கள் என்றும் கூறலாம். "ஒல்கிப் போய் மாடம் சேர்ந்தார் ஒருதடங் குடங்கைக் கண்ணார்" (2535) என்பது சிந்தாமணி. உவமையாகத்தக்க பிற பொருள்களின்மையின் இவ்வாறு ஒன்றற்கொன்று உவமை கூறினர். "நீலம் கண்ணென மலர்ந்த சுனை" (அகம் 38); "கண் போல் மலர்ந்த காமர் சுனைமலர்" (திருமுருகு. 75) என்பன காண்க. (3)

## மாதர்களின் புனல் விளையாட்டு 1017—1024

**1017.** தாளையேய் கமலத் தாளின்
மார்புறத் தழுவு வாரும்
தோளையே பற்றி வெற்றித்
திருவெனத் தோன்று வாரும்
பாளையே விரிந்த தென்னப்
பரந்தநீ ருந்து வாரும்
வாளைமீ னுகள வஞ்சி
மைந்தரைத் தழுவு வாரும்.

தாளை ஏய் கமலத் தாளின் மார்பு உறத் தழுவுவாரும், தோளையே பற்றி வெற்றித் திரு எனத் தோன்றுவாரும், பாளையே விரிந்தது என்னப் பரந்த நீர் உந்துவாரும், வாளை மீன் உகள அஞ்சி மைந்தரைத் தழுவுவாரும்.

பொ:—தண்டுடன் கூடிய தாமரைமலரில் வீற்றிருக்கும் திருமகள் போலத், தமது கணவன்மாருடைய மார்பை அழுந்தத் தழுவி நிற்பவரும், (தமது) கணவருடைய தோள்களையே பற்றிக் கொண்டு வெற்றிக்குரிய வீரமகளைப் போன்று காணப்படுபவரும், (கமுகினது) பாளை விரிந்தாற்போலப் பரந்த நீரை எற்றுவாரும், வாளை மீன்கள் பிறழப் பயந்து தமது கணவன்மாரைத் தழுவு வாரும்.

கு:—நீரிடைக் கணவரது மார்பைத் தழுவிநின்ற மகளிர், பாற் கடலில் திருமாலின் மார்பைத் தழுவிநின்ற திருமகளையும், கணவரது புயங்களைப்பற்றி நின்ற மகளிர், வெற்றித் திருவையும்,

ஒத்து விளங்கினர் என்பது கருத்து. பாளை கையால் உந்தப்படும் நீருக்கு உவமை. (4)

தழுவுவாரும், இறைக்கின்றாரும், உளைகின்றாரும், விழைவாரும், சார்கின்றாரும், துடிக்கின்றாரும் ஆயினர் எனப் பின்வரும் பாடல்களோடு கூட்டி முடிக்க.

1018. வண்டுணக் கமழுஞ் சுண்ணம்
வாசநெய் நானத் தோடும்
கொண்டெதிர் வீசு வாரும்
கோதைகொண் டோச்சு வாரும்
தொண்டைவாய்ப் பெய்து தூநீர்
கொழுநர்மேற் றூகின் றாரும்
புண்டரீ கக்கை கூப்பிப்
புனன்முகந் திறைக்கின் றாரும்.

**வண்டு உணக் கமழும் சுண்ணம் வாச நெய் நானத்தோடும் கொண்டு எதிர் வீசுவாரும், கோதை கொண்டு ஓச்சுவாரும், தொண்டை வாய்ப் பெய்து தூநீர் கொழுநர்மேல் தூகின்றாரும், புண்டரீகக் கை கூப்பிப் புனல் முகந்து இறைக்கின்றாரும்.**

பொ:— வண்டுகள் உண்ணுமாறு நறுமணம் வீசுகின்ற சுண்ணப்பொடியையும் மணம் ஊட்டப்பெற்ற தைலத்தையும் கத்தூரியுடன் கையிற் கொண்டு ஒருவர்மேல் ஒருவர் எறிவாரும், மலர்மாலைகளைக் கொண்டு, வீசுவாரும், கொவ்வைக்கனி போன்ற வாயினில் நீரைப்பெய்து கொண்டு, களங்கமற்ற நீரைக் கணவர் மீது கொப்பளிப்பவரும், தாமரை மலர்போன்ற (தமது) கைகளை ஒருவகையாகக் குவித்து நீரை முகந்து சொரிகின்றவரும்.

கு:—புனல் விளையாட்டிற் சுண்ணமும் கோதையும் வீசுதலைக் "கண்ணிகொண்டெறிய வஞ்சிக் கால்தளர்ந்தசைந்து சோர்வார், சுண்ணமும் சாந்தும் வீழத் தொழுதனர் இரந்து நிற்பார், ஒண் மலர்மாலை யோச்ச" (சிந்தா-2659) என்ற செய்யுட் கொண்டுணரலாம், கோதைகொண்டோச்சல், "ஒள்ளிழை கோதை கோலாக யாத்து" என்ற பரிபாடலிலும். (9. 39-40) கலித்தொகையிலும் (67; 6; 128, 18-19) காணலாம். தொண்டை என்பதற்கு யானைத் துதிக்கை என்று கொண்டு துதிக்கை போன்ற கருவியில் நீர் முகந்து என்று கூறுதல் பொருத்தமாகவில்லை. தொண்டைவாய்ப் பெய்து தூநீர் தூவுதல்,

"ஒப்ப ருந்தனி யொருமகள் ஒருவன்றன் முகத்துத்
துப்பை வென்றசெந் துவரிதழ்ச் செய்யவாய்த் தூநீர்
கொப்ப ளித்தனள் ஆம்பலந் தேனெனக் குடித்தான்"
(திருவிளை. தருமிக்கு-59)

என்ற செய்யுளிலும் காண்க. (5)

**1019.** மின்னொத்த விடையி னாரும்
வேலொத்த விழியி னாரும்
சின்னத்தி னளக பந்தி
திருமுக மறைப்ப நீக்கி
அன்னத்தை வருக வென்னோ
டாடவென் றழைக்கின் றாரும்
பொன்னொத்த முலையின் வந்து
பூவொத்த வுளைகின் றாரும்.

மின் ஒத்த இடையினாரும், வேல் ஒத்த விழியினாரும்,
சின்னத்தின் அளக பந்தி, திருமுகம் மறைப்ப நீக்கி,
அன்னத்தை 'வருக என்னோடு ஆட' என்று அழைக்கின்றாரும்,
பொன் ஒத்த முலையின் வந்து பூ ஒத்த, உளைகின்றாரும்.

பொ;—மின்னலையொத்த இடையினையுடையவரும், வேல் போன்ற விழியினருமாகிய மகளிர் விடுபூவையணிந்த மயிர்க் கற்றை (நீரிடை மூழ்கி எழுந்தபோது) தமது அழகிய முகத்தை மறைத்ததாக (அதனைக் கையால்) விலக்கி (அருகில் இருந்த) அன்னப்புள்ளை (ப் பார்த்து)த் தன்னுடன் விளையாட வருமாறு அழைக்கின்றவரும், (தேமல் படர்ந்து) பொன்னை ஒத்து விளங் கும் தனங்களின் மீது மலர்கள்பட (அவற்றையும் பொறுக்கமாட் டாது) வருந்துகின்றவர்களும்.

கு:—சின்னம் - விடுபூ. இது சின்னப்பூ எனவும் வழங்கும். விடுபூவணிந்து மகளிர் நீராடுதல் மரபு. "சின்னப்பூ அணிந்த குஞ்சி" (சிந்தா. 2251). நீர்ப் பூக்கள் தனங்கள்மீது படினும் பொறார் என்று மகளிரின் மென்மையை விளக்கினர். (6)

**1020.** பண்ணுள பவளந் தொண்டை
பங்கயம் பூத்த தன்ன
வண்ணவாய் குவளை வாட்கண்
மருங்கிலாக் கரும்பி னன்னார்

உண்ணிறை கயலை நோக்கி
யோடுநீர்த் தடங்கட் கெல்லாம்
கண்ணுள வாங்கொ லென்று
கணவரை வினவு வாரும்.

பண் உள பவளம் தொண்டை
பங்கயம் பூத்தது அன்ன,
வண்ண வாய் குவளை வாள் கண்
மருங்கு இலாக் கரும்பின் அன்னார்,
உள் நிறை கயலை நோக்கி,
'ஓடும் நீர்த் தடங்கட்கு எல்லாம்
கண் உள ஆம் கொல்', என்று,
கணவரை வினவுவாரும்.

பொ :—பண் நிறைந்ததும், தாமரை, பவளத்தையும் கொவ்வைக் கனியையும் தன்பாற்கொண்டு மலர்ந்தாற் போன்றதுமான அழகிய வாயினையும், நீலமலரையும் வாளையும் ஒத்த கண்களையுமுடைய இடையிலாத கரும்பை நிகர்த்த மகளிர், நீருள்ளே நிறைந்துநின்ற கெண்டைமீன்களைப் பார்த்து, "அலை வீசுகின்ற நீரையுடைய குளங்கட்கெல்லாம் கண்கள் உள்ளனவோ" என்று கணவர்களைக் கேட்கின்றார்களும்.

கு:—முதலிரண்டு வரிகள் இல்பொருள் உவமை. "இனமலர்க் குவளைப் பொற்பூ, விழைதரு கமலவட்டத் திடைவிராய்ப் பூத்ததே போல்" (சிந்தா. 2130) என்றாற்போல. மகளிர்மொழி பண் போன்றதென்று கூறுதல் வழக்கு. கரும்பு மகளிர்க்கு உவமை; 'கணவற்கு மெய்ம் முழுதும் இனிதாயிருத்தலின்,' (சிந்தா. 2453. நச். உரை). (7)

1021. தேனகு நறவ மாலைச்
செறிகுழற் றெய்வ மன்னாள்
தானுடைக் கனக மேனி
தடத்திடைத் தோன்ற நோக்கி
நானக நகுகின் றாளிந்
நன்னுத லாழி யாமென்
றூனமின் முலையி னார
முளங்குளிர்ந் துதவு வாளும்.

தேன் நகு நறவ மாலைச்
செறி குழல் தெய்வம் அன்னாள்,
தான் உடைக் கனக மேனி,
தடத்து இடை தோன்ற நோக்கி,
'நான் நக நகுகின்றாள் இந்
நல் நுதல் தோழியாம்' என்று,
ஊனம் இல் முலையின் ஆரம்,
உளம் குளிர்ந்து உதவுவாளும்.

போ:—வண்டுகள் களிப்பதற்குக் காரணமான தேன்நிறைந்த பூமாலையை அணிந்த அடர்ந்த கூந்தலையுடைய தெய்வமகளை ஒத்த ஓர் மங்கை, தனக்கமைந்த பொன் (போன்ற) உடல் குளத்துநீரில் (நிழலாகக்) காணப்பட (அதனைப்) பார்த்து, (அந்த உருவத்தை அங்கேயுள்ள ஓர் பெண்ணின் உருவம் எனக் கருதி, இங்கே தோன்றும்) 'இந்த அழகான நெற்றியுடைய பெண், நான் நகைக்கும்போது (தானும்) நகைக்கின்றாளாதலின் (எனது) தோழியாவள்' எனச் சொல்லி மனமகிழ்ந்து, எவ்வகையான இலக்கணக் குறைவுமில்லாத தனங்களின்மீது (தான் அணிந்துள்ள) முத்துமாலையை(க் கழற்றி)த் தருபவளும்.

கு:—நீரில் தனது நிழலைக்கண்ட ஒருத்தி, தான் சிரிக்கும்போது அந்நிழலும் சிரித்தவண்ணமாக நிற்றலாலும் நண்பருள் ஒருவர் மகிழ்வெய்தியபோது மற்றவரும் மகிழ்வது இயல்பாதலாலும், அந்த நிழலுருவைத் தனது தோழியாகக்கொண்டு, தனது முத்து மாலையை அவ்வுருவத்துக்கு மனமகிழ்ந்தளித்தாள் என்க. தேன் ஒருவகை வண்டு; "தேனும் வண்டுமிசைப் புலம்ப" என்பது சிந்தாமணி. (349.) இது நல்ல மணத்தே செல்லும் என்றும் இதற்கு ஊற்றறிவு முதலிய ஐந்தறிவும் உண்டென்றும் கூறுவர் நச்சினார்க்கினியர் (சிந்தா. 892). (8)

1022. குண்டலங் திருவில் வீசக்
குலமணி யார மின்ன
விண்டொடர் வரையின் வைகு
மென்மயிற் கணங்கள் போல
வண்டுளர் கோதை மாதர்
மைந்தர்தம் வயிரத் திண்டோள்
தண்டுகள் தழுவும் ஆசை
யாற்கரை சார்கின் றாரும்.

குண்டலம் திருவில் வீசக்,
குல மணி ஆரம் மின்ன,
விண் தொடர் வரையின் வைகும்
மெல் மயில் கணங்கள் போல,
வண்டு உளர் கோதை மாதர்,
மைந்தர்தம் வயிரத் திண் தோள்
தண்டுகள் தழுவும் ஆசையால்
கரை சார்கின்றாரும்.

பொ :—வண்டுகள் (தேன் பருகுவதற்குச்) சுழன்று கிண்டு கின்ற பூமாலை (அணிந்த) மாதர்கள், (தமது செவியில் அணிந்த) குண்டலங்கள் அழகிய ஒளியை வீசவும், சிறந்த இரத்தி னங்கள் கோத்துச்செய்த மாலைகள் (மார்பில்) ஒளிவிடவும், வானத்தைத் தீண்டுகின்ற மலையில் தங்கும் மெல்லிய மயிற் கூட்டங்கள் போலத் தத்தம் ஆடவருடைய திண்ணிய தோள்க ளாகிய வயிரத்தண்டுகளைத் தழுவி மகிழும் ஆசையால், (வாவியின்) கரையை நோக்கிச் செல்பவர்களும்.

கு :—தோளைத் தண்டு என்று கூறுவது உலகவழக்கு. மயில் கள் குறிஞ்சிநிலப் பறவைகள் ஆகலின் 'வரையின் வைகும் மயில்' என்றார். ''மலைக்குல மயிலென மடந்தை'' (வாலி. 14) என்றது காண்க. இங்கு மைந்தர் தம் வயிரத்திண்டோளை மலைகளுக்கும் மகளிரை மயிற்கணத்துக்கும் உவமித்தார். மயில்கள் வரைகளில் வைகுவது போன்று மயில்போன்ற சாயலையுடைய மகளிர் தத்தம் கணவன்மாரது மலைபோன்ற தோள்களில் பொருந்த விழைந் தனர் என்பது குறிப்பு. ஓர் ஆடவன் மந்தர மலையைப்போன்று மாதர்குழாம் புடைசூழ நின்றான் என்று இப்படலம் 12-ஆம் பாடலிற் கூறுவதும், ''தோளையே பற்றி வெற்றித் திருவெனத் தோன்றுவாரும்'' (-4) என்று கூறுவதும் இங்கே ஒப்பு நோக்கத்தகும். (9)

**1023.** அங்கிடை யுற்ற குற்றம்
யாவதென் றறித றேற்றும்
செங்கய லனைய நாட்டஞ்
சிவப்புறச் சீறிப் போன

மங்கையோர் கமலச் சூழல்
மறைந்தனண் மறைய மைந்தன்
பங்கய முகமென் றோரா
தையுற்றுப் பார்க்கின் றானும்.

'அங்கு இடை உற்ற குற்றம்
யாவது', என்று, அறிதல் தேற்றாம்,
செம் கயல் அனைய நாட்டம்
சிவப்பு உறச் சீறிப் போன
மங்கை, ஓர் கமலச் சூழல்
மறைந்தனள், மறைய, மைந்தன்
பங்கயம் முகம் என்று ஓராது,
ஐயுற்றுப் பார்க்கின்றானும்.

பொ :—அவ்விடத்தில் நிகழ்ந்த (நீர்விளையாட்டின்) இடையில் நேர்ந்த குற்றம் இன்னதெனத் தெளிவாக அறியேம். செங்கயல்களை ஒத்த கண்கள் முழுவதும் செந்நிறமாகும்படி சினங்கொண்டு சென்ற ஓர் தலைவி, ஒப்பற்ற தாமரைமலர்கள் நிறைந்த ஓரிடத்தில் மறைந்திருந்தனள். (அவ்வாறு) அவள் மறைந்திருக்க, அவளுடைய தலைவன் தாமரை (இது தலைவியின்) முகம் (இது) என உணர இயலாதவனாய் ஐயங்கொண்டு பார்க்கின்றவனும்.

கு :—யாவது - யாதென்னும் வினைச்சொல் இடையே வகர வுயிர்மெய் பெற்று வந்தது, (தொல். எழுத். 172). நாட்டம் - கண்; பொருள்களை நாடுதலின் கண்ணுக்குக் காரணக் குறி. இச்செய்யுட் கருத்தை,

"கரும்பு போல்மொழி யாளொரு காரிகை வதனம்
சுரும்பு சூழ்கம லங்களுட் கமலமாய்த் தோன்ற
விரும்பு காதல னையுற்று மெலிந்தனன் மெல்ல
அரும்பு முல்லைகண் டையத்தி னீங்கிச்சென் றணைந்தான்"
(திருவிளை. தருமிக்கு. 54)

என்ற செய்யுளிலும் விளங்கக் காணலாம். (10)

**1024.** பொற்றொடி தளிர்க்கைச் சங்கம்
வண்டொடு புலம்பி யார்ப்ப
எற்றிநீர் குடையுந் தோறு
மேந்துபே ரல்கு னின்றும்

கற்றைமே கலைக ணீங்கிச்
சீறடி கௌவக் காலிற்
சுற்றிய தரவ மென்று
துணுக்கத்தாற் றுடிக்கின் ருரும்.

பொன் தொடி தளிர்க்கைச் சங்கம்
வண்டொடு புலம்பி ஆர்ப்ப,
எற்றி நீர் குடையும் தோறும்,
ஏந்து பேர் அல்குல் நின்றும்,
கற்றை மேகலைகள் நீங்கிச்
சீறடி கௌவக், 'காலிற்
சுற்றியது அரவம்' என்று,
துணுக்கத்தால் துடிக்கின்ருரும்.

பொ:—(மாந்) தளிர் போன்ற கைகளில் அணியப்பெற்ற பொன்னுற்செய்த தொடிகளும், சங்கு வளையல்களும், (தரித்துள்ள பூமாலைகளில் மொய்க்கும்) வண்டுகளின் ஒலியுடனே மாறு கொண்டு) ஒலித்து ஆரவாரம் செய்ய, நீரை உந்தி மூழ்குந் தோறும் உயர்ந்த பருத்த நிதம்பங்களிலிருந்து தொகுதியான (பலகோவைகளாகவுள்ள) மேகலை (என்ற இடையணிகள்) நழுவி வீழ்ந்து (தமது) சிறிய அடிகளைச் சூழ்ந்துகொள்ள, (தமது) கால்களிற் பாம்பு சுற்றிக்கொண்டது என்றெண்ணி அச்சத்தால் நடுங்குகின்றவர்களும்,

கு:—இப்படலம் நான்காவது பாடல் முதல், தழுவுவாரும் எனத் தொடங்கி வந்த உம்மீற் றுயர்திணைச் சொற்களை இச் செய்யுள்வரையிற் கூட்டி "ஆயினர்" என வினைமுடிவு செய்க. தொடி - வளைவகை; இது வளையல்கட்குக் காவலாக இருப்பது (சிந்தா. 469). வண்டு - வளை என்று பொருள் கொண்டால் பிற வளையல்களோடு என்று பொருள் விரிக்க. 'கைவண்டும் கண் வண்டும் ஓட" என்பது ஆதியுலா (98). நீரில் மூழ்கையில் இடையில் அணிந்த மேகலைகள் நழுவிக் காலிற் சுற்றத் தம்மைப் பாம்பு கௌவியது என்று கருதி மகளிர் அஞ்சினர் என்பது கருத்து.

பெரும்பான்மையான ஏடுகளில்'சுற்றிய நாகம்'என்ற பாடமே காணப்படுகிறது. 'சுற்றியதரவம்' என்றபாடம் 28 என்னும் குறியீடுள்ள சுவடி ஒன்றில் மட்டும் கண்டது. இச்சுவடி பிழை யற்றது, நல்ல பாடங்களையுடையது, ஆதலாலும் ஓசை நயம் உடைமையாலும் சுற்றியதரவம் என்ற பாடம் கொள்ளலாயிற்று.
(11)

## மகளிர் சூழநின்ற ஆடவன் தோற்றம் (1025-1027)

**1025.** குடைந்துநீ ராடு மாதர்
குழாம்புடை சூழ வாழித்
தடம்புயம் பொலிய வாண்டோர்
தார்கெழு வேந்த னின்றான்
கடைந்தநா ளமிழ்தி னோடுங்
கடலிடை வந்து தோன்றும்
மடந்தைமார் சூழ நின்ற
மந்தரம் போல மாதோ.

குடைந்து நீராடும் மாதர் குழாம் புடை சூழ, ஆழித்
தடம் புயம் பொலிய, ஆண்டு ஓர் தார் கெழு வேந்தன் நின்றான்;
கடைந்த நாள் அமிழ்தினோடும் கடலிடை வந்து தோன்றும்,
மடந்தைமார் சூழ நின்ற மந்தரம் போல மாதோ.

பொ :—நீரில் துளைந்து விளையாடுகின்ற மகளிர்கூட்டம் தன் அருகிற் சூழ்ந்து நிற்க, தோள்வளையை அணிந்த பெரிய தோள்கள் விளங்கித் தோன்றுமாறு, ஒரு மாலையணிந்த மன்னன், (பாலாழி) கடைந்த நாளில் அமிழ்துடன் அந்தக் கடலிடை வந்து தோன்றிய (தேவ) மாதர் தன்னைச் சூழ (ஓங்கி) நின்ற மந்தர மலையைப் போல அந் நீர்நிலையில் நின்றான்.

கு :—துருவாச முனிவனது கடுஞ் சொல்லால் இந்திரன் இழந்த பொருள் அனைத்தினையும் மீட்பதற்காகப் பாலாழி கடைந்த வரலாறு இங்கே குறிக்கப்பட்டது. ஆழி - வட்ட வடிவு; தோள்வளைக்குப் பண்பாகுபெயர். நீர்நிலைக்குப் பாற் கடலும், நீர்நிலைக்கண் தோன்றும் தலைவனுக்கு மந்தரமலையும், அத்தலைவனைச் சூழ்ந்து நின்ற மகளிர்க்கு அரம்பையரும் உவமை. 1015-ஆவது செய்யுளில் நீருள் மூழ்கிய மகளிர்க்கு, முன் துருவாசர் வெகுண்டு கூறிய மொழியால் கடலுள் மூழ்கிய தெய்வ மகளிரை உவமித்தவர், இங்கு நீராடி நின்ற மகளிர்க்குத் திருப்பாற்கடலினின்று மீண்டெழுந்த தெய்வ மங்கையரை உவமித்தமை நோக்கத்தகும். (12)

**1026.** தொடியுலாங் கமலச் செங்கைத்
தூநகைத் துவர்த்த செவ்வாய்க்
கொடியுலா மருங்குலார்தங்
குழாத்தொரு கொண்ட னின்ருன்
கடியுலாங் கமல வேலிக்
கண்ணகன் கானி யாற்றுப்
பிடியெலாஞ் சூழ நின்ற
பெய்மத யானை யொத்தான்.

தொடி உலாம் கமலச் செம் கைத்,
தூ நகைத் துவர்த்த செவ்வாய்,
கொடி உலாம் மருங்குலார்தம்
குழாத்து, ஒரு கொண்டல் நின்ருன்,
கடி உலாம் கமல வேலிக்
கண் அகன் கானியாற்றுப்
பிடி எலாம் சூழ நின்ற
பெய் மத யானை ஒத்தான்.

பொ :—வளை அசையும்படியான தாமரை போன்ற சிவந்த கைகளையும், வஞ்சமற்ற புன்முறுவலுடன் கூடிய பவளத்தின் தன்மை கொண்ட சிவந்த வாயினையும், மின்னற்கொடி போன்ற இடையினையுமுடைய மகளிர் கூட்டத்தில், மேகம் போன்று நின்ற ஒருவன், நறுமணம் தங்கிய தாமரை வேலியாக அமைந்த இடமகன்ற காட்டாற்றில் பெண் யானைகள் பல சூழ்ந்து நிற்கப் பெற்ற மும்மதம் ஒழுக விடுகின்ற ஆண்யானையொத்து விளங்கினன்.

கு :—கொண்டல் என்றதற் கேற்பக் கொடி, மின்னற்கொடி எனக் கொள்ளப்பட்டது. கொடி - பூங்கொடியுமாம். கமல வேலி என்றதனுல் மருத நிலத்தின் வளம் கூறப்பட்டது. ஓர் ஆடவன் மகளிர் சூழ ஆற்றின் நடுவில் நின்றது காட்டாற்றிற் பிடிகள் சூழக் களிறு நின்றதை ஒத்திருந்தது என்பது கருத்து. (13)

**1027.** கானமா மயில்க ளெல்லாங்
களிகெடக் களிக்குஞ் சாயல்
சோனைவார் குழலி ஞர்தங்
குழாத்தொரு தோன்ற னின்ருன்

வானயா றதனை நண்ணி
வயின்வயின் வயங்கித் தோன்றும்
மீனெலாஞ் சூழ நின்ற
விரிகதிர்த் திங்க ளொத்தான்.

கான மா மயில்கள் எல்லாம்
களி கெடக் களிக்கும் சாயல்,
சோனை வார் குழலினார்தம்
குழாத்து, ஒரு தோன்றல் நின்றான்,
வான யாறதனை நண்ணி,
வயின் வயின் வயங்கித் தோன்றும்,
மீன் எலாம் சூழ நின்ற,
விரி கதிர்த் திங்கள் ஒத்தான்.

பொ :--காட்டில் வாழும் கரிய மயில்களெல்லாம் செருக்கழியும்படி தருக்குகின்ற சாயலையும் சோனை மழை (கார்மேகம்) போன்ற நீண்ட கூந்தலையுமுடைய மகளிரது குழுவில் நின்ற தோன்றல் ஒருவன், ஆகாய கங்கையினை அணுகி விண்ணிற் பல இடங்களிலும் காணப்படுகின்ற உடுக்கள் எல்லாம் சூழும்படி நிலைபெற்ற பரந்த ஒளித்தொகுதியையுடைய மதியை ஒத்து விளங்கினான்,

கு :—மகளிர் சூழ நின்ற சிறந்த தோற்றமுடையானொருவன், உடுக்கள் சூழ நின்ற சந்திரனை ஒத்து விளங்கினான் என்க. சோனை - விடாமழை ; ''சோனை வார்குழ லரக்கியர்'' (ஊர்தேடு 26). வானயாறு - ஆகாய கங்கை; ''வானயாறு தம் மரமியத் தலந்தொறு மடுத்த'' என்றதும் காண்க (ஊர்தேடு.5). மீன் தொகுதிகள் மகளிர்க்கும் திங்கள் தோன்றற்கும் உவமை. மீன்கள் சூழ்ந்தமதி, ''பன்மீன் நடுவட் பான்மதி போல'' (சிறுபாண் 219) என்று பேசப்பட்டதும் காண்க. வயின் வயின் - இடந்தோறும். ''வாடல நறவுறுது வயின் வயின் வயங்கும்'' என்றார் வரைக்காட்சிப் படலத்தும் (14.) (14)

மகளிர் இடையே நின்ற ஓர் தலைவியின் தோற்றம்

**1028.** மேவலாந் தகைமைத் தல்லால்
வேழவிற் றடக்கை வீரற்
கேவெலாங் காட்டு கின்ற
விணைநெடுங் கண்ணொ ரேழை

பாவைமார் பரந்த கோலப்
பண்ணையிற் பொலிவாள் வண்ணப்
பூவெலா மலர்ந்த பொய்கைத்
தாமரை பொலிவ போன்ருள்.

மேவல் ஆம் தகைமைத்து அல்லால்,
வேழ வில் தடக்கை வீரற்கு,
ஏ எலாம் காட்டுகின்ற
இணை நெடுங்கண் ஓர் ஏழை,
பாவைமார் பரந்த கோலப்
பண்ணையில் பொலிவாள், வண்ணப்
பூ எலாம் மலர்ந்த பொய்கைத்
தாமரை பொலிவ போன்ருள்.

**பொ :**—விரும்பப் பெறுந்தன்மை பெற்றிருப்பதுமட்டுமன்றிக் கரும்புவில்லையுடைய உருவிலியாகிய வேளுக்கு, அவனது ஐந்து அம்புகளின் தொழில் வரிசைகள் எல்லாம் காட்டுகின்ற, ஒன்றை ஒன்று ஒத்து ஒளிர்கின்ற நீண்ட கண்களையுடைய ஒருத்தி, பாவைமாரது விரிந்த அழகிய குழுவிற் பொலிபவள், நிறத்தால் அழகு பெற்ற தாமரைமலர்கள் எல்லாம் அலர்ந்த பொய்கையில் ஒரு உயர்ந்த தாமரைமலர் விளங்குவதை ஒத்திருந்தாள்.

**கு :**—' பூவெனப் படுவது பொறிவாழ் பூவே ' என்ப ஆகலின், பல தாமரை மலர்களின் நடுவே மலர்ந்த ஒரு சிறந்த தாமரை மலர் போன்று, மகளிர்நடுவில் இவள் விளங்கினள் என்க. " குளனணி தாமரைக் கொழு மலர் நாப்பண், ஒரு தனி யோங்கிய திருமலர் போன்று " (மணிமே. 15, 76–77) என்றது காண்க. ஏ எலாம் காட்டுகின்ற என்பதன் கருத்து மாரன் எய்யும் ஐந்துமலர்க் கணைகளும் புரியும் அரிய செயல்களை எல்லாம் இவ்விழிகள் புரியும் என்றவாறு. அருவமாகிய மனத்தையும் எய்யவல்ல மன்மத னுக்கும் அம்பின் வன்மையெல்லாம் காட்டும் என ஓர் பெண்ணின் கண்களை வியந்து கூறினர். ஏ-அம்பு; மன்மதனை வீரன் என்ருர், அவன் வயப்படாதார் எவரும் இல்லையாகலின், அவன் கணையின் வன்மையால் ஈசனும் நுதல் விழி திறக்க நேர்ந் தமை அறிக. உருவுடன் இயைந்த போது சிவபிரானை வென் றதும் உருவிலியாகியும் உலகத்தாரை வயப்படுத்துவதும் நோக்கி வீரன் என்று கோடலும் பொருந்தும். வேறுவமை கூறற்கில்லை யாகலின் ஒரு விழிக்கு மற்ரெரு விழியை உவமித்தார். 'இழைக்கு

நுண்ணிய மருங்குலாள் இணை நெடுங் கண்கள்' (சுந்தர. காட்சி. 6) என்பர் பின்னும். பொலிவாள் போன்ருள் எனக் கூட்டுக. (15)

நீரிடைத் தோன்றும் மங்கை முகம்

**1029**, மிடலுடைக் கொடிய வேலே
யென்னவாண் மிளிர்வ வென்னச்
சுடர்முகத் துலாவு கண்ணு
டோகையர் சூழ நின்ருள்
மடலுடைப் போது காட்டும்
வளர்கொடி பலவுஞ் சூழக்
கடலிடைத் தோன்று மென்பூங்
கற்பக வல்லி யொத்தாள்.

மிடல் உடைக் கொடிய வேலே
என்ன, வாள் மிளிர்வ என்னச்,
சுடர் முகத்து உலாவு கண்ணுள்,
தோகையர் சூழ நின்ருள்,
மடல் உடைப் போது காட்டும்
வளர் கொடி பலவும் சூழக்,
கடல் இடைத் தோன்றும் மென்பூங்
கற்பக வல்லி ஒத்தாள்.

பொ :—வன்மை வாய்ந்த கொடிய வேல்கள் என்னுமாறும் பிறழ்கின்ற வாள் என்னுமாறும் ஒளி சிறந்த முகத்தில் உலாவும் கண்ணிணையுடையாள் ஒருத்தி, மகளிர் சூழ நின்றவள், இதழ்களை யுடைய மலர்களை மலர்கின்ற வளர்ச்சியுடைய பலவகைக் கொடி களும் சுற்றும்படி பாலாழியிற்ருேன்றிய மெல்லிய மலர்களை யுடைய கற்பகத்திற் படர்ந்த காமவல்லியை ஒத்து விளங்கினுள்.

கு :—வேல் – கண்ணிற் குவமையாதல் "ஒக்கிய முருகன்வை வேல் ஓரிரண்டனைய கண்ணுள்" (சிந்தா. 1291) என்பதனுலும் அறியலாம், வேல் நேரான நோக்கிற்கும் வாள் பக்கங்களிற் சுழன்று திரிகின்ற நோக்கிற்கும் உவமை என்க. (16)

## நீரில் மூழ்கிய ஓர் பெண்ணின் தோற்றம்

**1030.** தேரிடைக் கொண்ட வல்கு
றெங்கிடைக் கொண்ட கொங்கை
ஆரிடைச் சென்றுங் கொள்ள
வொண்கிலா வழகு கொண்டாள்
வாரிடைத் தனமீ தாட
மூழ்கினுள் வதன மைதீர்
நீரிடைத் தோன்றுங் திங்க
ணிழலெனப் பொலிந்த தன்றே.

தேர் இடைக் கொண்ட அல்குல்,
தெங்கு இடைக் கொண்ட கொங்கை,
ஆர் இடைச் சென்றும் கொள்ள
ஒண்கிலா அழகு கொண்டாள்,
வார் இடைத் தனம் மீது ஆட
மூழ்கினுள் வதனம், மைதீர்
நீர் இடைத் தோன்றும் திங்கள்
நிழல் எனப் பொலிந்தது அன்றே.

பொ :—தேரினிடமிருந்து கொண்ட (புடை பரந்த) அல்குலே யும் தெங்கங்காயினிடமிருந்து வடிவழகையும் (திரட்சியையும்) கொண்ட தனங்களையும் எவரிடமும் சென்று கொள்ள இயலாத அழகையும் கொண்டவளும் கச்சணிந்த தனங்கள் வெளியிலே தோன்றுமாறு மூழ்கினவளுமாகிய ஒரு பெண்ணின் முகமானது களங்கமற்ற நீரிலே காணப்படும் மதியின் மாற்றுருப் போன்று விளங்கிற்று.

கு :—தேர்த்தட்டு, புடை பரப்பால் அல்குற்கு உவமை. '' பனி வென்ருேங்கும் ஓராழித் தட்டுங் கண்ட '' (கிட்கிந்தா. நாட விட்ட 37). மன்னுக வீணைப்படமுங் தேர்த்தட்டும் மதிமயக்கி '' என்பது சிந்தாமணி (173). முதல் அடியை, ' மின்வயின் மருங் குல் கொண்டாள் வேய்வயின் மென்ருேள் கொண்டாள் '' (மாரீசன்-67) என்ற வரிகளுடன் ஒப்பு நோக்குக. பிறரிடமிருந்து கொள்ளவேண்டாதபடி உறுப்பழகெல்லாம் இயல்பாகவே அமைந்தவள் என்று ஓர் பெண்ணைப் புகழ்ந்தவாறு. மைதீர் என்பதை நடுநிலைத்தீவகமாக்கி மைதீர்வதனம் என்றும் இயைக்க லாம். (17)

### வெள்ளம் பரவுதல்

**1031.** மலைக டந்த புயங்கண் மடந்தைமார்
★ கலைக டந்தக லல்குல் கடம்படு
முலைக டந்தமின் முந்தி நெருங்கலால்
நிலைக டந்து பரந்தது நீத்தமே.

மலை கடந்த புயங்கள், மடந்தைமார்
கலை கடந்து அகல் அல்குல், கடம்படு
முலைகள், தந்தமில் முந்தி நெருங்கலால்,
நிலை கடந்து பரந்தது நீத்தமே.

பொ :—ஆடவரது மலைகளை வென்றுயர்ந்த தோள்களும், மகளிரது மேகலையைக் கடந்தகன்ற அல்குல்களும் குடம் (ஒப்பாகாமையால்) அழிதற்குக் காரணமான (மகளிரின்) தனங்களும் ஒன்றோடொன்று முற்பட்டு நெருங்குதலால் வெள்ளம் தன் நிலையை மீறிப் பரவுவதாயிற்று.

கு :—புயங்களும் மகளிரின் சிறப்புறுப்புக்களும் நெருங்குதலால் வெள்ளம் வரம்பு கடந்து பரவலாயிற்று என்பது கருத்து. ஏனைய உறுப்புக்களினும் இக்கூறிய மூன்று உறுப்புக்களும் அளவிற் பருத்தன; ஆதலின் இவற்றை நீத்தம் நிலைகடந்து பரவியதற்கு ஏதுவாக்கினர். நீத்தம் - வெள்ளம்; இங்கே நீரென்னும் மாத்திரையாக நின்றது. (18)

### மகளிர் பொய்கையில் தோய்தல்

**1032.** செய்ய வாய்விளர்ப் பக்கண் சிவப்புற
மெய்ய ராக மழியத் துகினெகத்
தொய்யின் மாமுலை மங்கையர் தோய்தலால்
பொய்கை காதற் கொழுநரும் போன்றதே.

செய்ய வாய் விளர்ப்பக், கண் சிவப்பு உற,
மெய் அராகம் அழியத், துகில் நெகத்,
தொய்யில் மா முலை மங்கையர் தோய்தலால்,
பொய்கை, காதல் கொழுநரும் போன்றதே.

பொ :—(இயல்பாகச்) சிவந்த வாய் வெண்ணிறம் பெறவும் விழிகள் செந்நிறத்தை அடையவும் உடலிற் பூசிய சந்தனம்

சுண்ணம் முதலியன அழியவும் உடுத்த ஆடை நெகிழவும் எழுது வரிக்கோலம் பெற்ற பருத்த தனங்களை யுடைய மகளிர் தோய்த லால் அந் நீர்நிலையானது காதற்கொழுநரையும் போன்றது.

கு :—தோய்தல் - மூழ்குதல், புணர்தல் என இரு பொருளும் உடையது. கணவரைக் கூடுகையில் மகளிர் வாய் வெளுத்தலும் விழிகள் சிவப்பேறுதலும் உடலிற் பூசிய கலவைப் பூச்சு அழி தலும் ஆடை நெகிழ்தலும் இயற்கை. நீராடுங்காலத்தும் மேற் கூறியன நிகழும். "கருங்கண் சிவப்பக் கனிவாய் விளர்ப்பக் கண்ணுரளிபின், வருங்கண் மலைமலர் சூட்டவற்றோ மற்றவ் வான் சுனையே" (திருக்கோவை-70). மெய்யராகம் – உடலிற் பூசிய சந்தனம். சந்தனத்தை அங்கராகம் என்பர் வடநூலார். அச் சொல்லையே மெய்யராகம் எனத் தமிழ்ப்படுத்தினர்போலும்: இவ்வாறு வடசொற்களை ஏற்றபெற்றி தமிழ்ப்படுத்துவது கம்பர் வழக்கம். மகாபார்சுவனைப் பெரும்பக்கன் என்றும், தூமிராட்சனைப் புகைநிறக்கண்ணன் என்றும், எக்ஞவிரோதியை வேள்விப்பகைஞன் என்றும் கூறியுள்ளமை காண்க. தொய்யில்– வரிக்கோலம்; "உதுக்காண் தொய்யில் பொறித்த வழி" (நெய்தற்கலி.27) என்பது கலித்தொகை. (19)

**மகளிர் நீராடுதலால் பொய்கை மீனும் நறுமணம் கமழ்தல்**

**1033.** ஆன தூயவ ரோடுட ஞடிஞர்
ஞான நீரவ ராகுவர் நன்றரோ
தேனு நாவியுந் தேக்ககி லாவியும்
மீனு நாறின வேறினி வேண்டுமோ.

**ஆன தூயவரோடு உடன் ஆடினர்**
**ஞான நீரவர் ஆகுவர் நன்று அரோ,**
**தேனும் நாவியும் தேக்கு அகில் ஆவியும்**
**மீனும் நாறின, வேறு இனி வேண்டுமோ ?**

பொ :—(உள்ளும் புறமும்) தூய்மையான ஞானிகளோடு பழகிய (அறிவிற் குறைந்த) மாக்களும் அறிவு நிரம்பிய தன்மை யுடையவர் ஆவர். (அது போன்றே, மகளிர் நீராடிய குளங் களில் உள்ள) மீன்களும், தேன் மணமும் கத்தூரி மணமும், தேக்கு, அகில் என்றவற்றின் புகை மணமும் வீசலாயின, வேறு எடுத்துக்காட்டும் வேண்டுமோ ?

கு :—நல்லவரோடு இணங்கியவர் அந்நல்லாரின் நற்பண்புகளை எய்தப் பெறுவர் என்னும் பொதுப் பொருள் கொண்டு, புலால் கமழும் மீன்களும் மகளிருடன் (நல்லாருடன்) இணங்கியதால், அன்னரது கூந்தற்கணுள்ள தேன் முதலியவற்றின் நறுமணத்தைப் பெற்றன என்று சிறப்புப் பொருளைத் துணிதலால், இது வேற்றுப் பொருள் வைப்பணியாம். கூட்டுறவால் மாற்றம் எய்துவர் என்ற இச்செய்யுட் கருத்தைப் பின்வரும் செய்யுளடிகளிலும் காணலாம், "கல்லாரே யாயினும் கற்றாரைச் சேர்ந்தொழுகின் நல்லறிவு நாளும் தலைப்படுவர்" (நாலடி 139) "செய்யரைச் சேர்ந்துளாரும் செய்யராய்த் திகழ்வரன்றே" (கோலங் காண். 9); "தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினும் அவர்தம், மருண்ட தன்மையை மாற்றுவர் எனுமிது வழக்கே, உருண்ட வாய் தோறும் பொன்னுருள் உரைத்துரைத் தோடி, இருண்ட கல்லையுந் தன்னிறமாக்கிய இரதம்" (வரைக்காட்சி. 8). என்பன காண்க. (20)

**ஆடவரும் மகளிரும் ஆடிய புனலின் தோற்றம்**

**1034.** மிக்க வேந்தர்த மெய்யழி சாந்தொடும்
புக்க மங்கையர் குங்குமம் போர்த்தலால்
ஒக்க நீல முகிற்றலை யோடிய
செக்கர் வானக மொத்ததத் தீம்புனல்.

**மிக்க வேந்தர்தம் மெய் அழி சாந்தொடும்,**
**புக்க மங்கையர் குங்குமம் போர்த்தலால்,**
**ஒக்க, நீல முகில் தலை ஓடிய,**
**செக்கர் வானகம் ஒத்தது, அத் தீம்புனல்.**

பொ :—தம்மிடம் விளையாடுமாறு வந்த (நற்பண்புகளால்) மேம்பட்ட அரசரது உடலினின்றும் அழியப் பெற்ற சந்தனக் குழம்போடு மங்கையர் (அணிந்திருந்து அழியப் பெற்ற) குங்குமச் சேறும் மூடியதால், அந்த இனிய நீர்ப்பரப்பானது நீல நிறம் தங்கிய மேகத்தினிடத்தில் ஒரு சேரப் பரந்த செவ்வானத்தை ஒத்தது.

கு :—கருமையாகத் தோன்றும் நீரில் செஞ்சந்தனச் சேறும் குங்குமக் குழம்பும் கலந்ததனால், அப்பொய்கைநீர் கரிய முகிலிடைக் காணப் பெறும் செவ்வானம் போன்றது என்பது கருத்து. ஒக்க ஓடிய எனக் கூட்டுக. ஒக்கப் போர்த்தலால் என்று

இணைத்தலுமாம். புக்க மிக்க வேந்தர் என்று கொண்டுகூட்டாகப் பொருள் கொள்ளப்பட்டது. செக்கர் வானம் - செவ்வானம். (21)

### கலவைப் பூச்சு நீங்கப் பெற்ற மகளிரின் தோற்றம்

1035. காக துண்ட நறுங்கல வைக்களி
ஆக முண்ட டங்கலு நீங்கலால்
பாக டர்ந்த பனிக்கனி வாய்ச்சியர்
வேக டஞ்செய் மணியென மின்னினர்.

**காக துண்ட நறும் கலவைக் களி,**
**ஆகம் உண்டது அடங்கலும், நீங்கலால்,**
**பாகு அடர்ந்த, பனிக் கனி வாய்ச்சியர்,**
**வேகடம் செய் மணி என, மின்னினர்.**

பொ:—மேனியிற் பூசிய அகிலுடன் கூடிய நறுமணம் பொருந்திய சந்தனக் குழம்பு முழுவதும் (நீர்விளையாட்டில்) அழிந்ததால், பாகின் இனிமை நிறைந்த குளிர்ந்த கொவ்வைக்கனி போன்ற வாயினையுடைய மகளிர், சாணை பிடிக்கப்பெற்ற செம்மணி போன்று விளங்கினர்.

கு:—உறுப்பின் இயற்கையழகினை மறைத்து நின்ற செஞ்சாந்து முதலியன அழிந்ததனால், அம்மகளிர் சாணைபிடித்த அரதனங்கள் போன்று காணப்பட்டனர் என்பது கருத்து. காகதுண்டம்-அகில்; காக்கையின் மூக்குப்போன்று காணப்படுதலின் அங்ஙனம் கூறப்பட்டது. துண்டம் - மூக்கு. "ஏந் தெழிற்காக துண்டம்" (சூளா. சீய. 105). (22)

### ஒருத்தி தன் காதலனோடு ஊடுதல்

1036. பாய ரித்திற லான்பசுஞ் சாந்தினல்
தூய பொற்புயத் துப்பொதி தூக்குறி
மீய ரித்து விளர்க்கவொர் மெல்லியல்
சேயரிக் கருங் கண்கள் சிவந்தவே.

**பாய் அரித் திறலான், பசுஞ் சாந்தினல்**
**தூய பொன் புயத்துப் பொதி தூக் குறி,**
**மீ அரித்து விளர்க்க, ஒர் மெல்லியல்**
**சேய் அரிக் கரும் கண்கள் சிவந்தவே.**

போ :—ஈரம் செறிந்த சந்தனக் குழம்பினால், பாய்கின்ற சிங்கம் போன்ற வன்மையையுடைய ஓர் ஆண்மகனது பொன் அணிகளை அணிந்த தோள்களிலே (எழுதி) நிறைந்த தூய்மையான கோலத்தை, (நீர் வெள்ளம்) மேலே தீண்டி அழித்ததனால் (புயங்களின் தொய்யிற்கோலம் கலைந்து வெண்ணிறம் அடைய (அது கண்ட) ஒரு பெண்ணினது செவ்வரி பரந்த பெரிய விழிகள் சினத்தாற் சிவந்தன.

கு :—ஒரு வீரனது தோள்களில் ஒருத்தி எழுதிய செஞ்சந்தன வரிக்கோலம் நீர்மோதி அழிய, அவன்தலைவி நோக்கிப் பிறள் ஒருத்தியுடன் கலந்ததால் அஃது அழிந்தது என வெகுண்டு, ஊடிக் கண்சிவக்கப் பெற்றாள் என்றவாறு. பொன்புயம் - அழகிய புயமுமாம். தன் தலைவிதோளேயன்றிப் பிறர்தோள் தோயாமையின் தூய...புயம் என்றார். அரித்தல் - நீர் கழுவிப் பிரித்தல். கருமை - பெருமை; "கருமுகில் சுமந்து" (சிலப். 5, 204); "கருங்கறிமூடை" (சிலப். 14, 210) என்ற இடங்கள் கொண்டறிக. இனிக் கருமையான கண்கள் என்றேகொண்டு, செஞ்சந்தனம் நீங்கி வெண்ணிறம் பெற்றது புயம், கருங்கண்கள் செந்நிறம் உற்றன என்று முரண்படக் கூறிய நயம் காணலாம். (23)

### ஒருத்தியின் காமத்தீயால் நீரும் சுடுதல்

**1037.** கதம்ப நாள்விரை கள்ளவிழ் தாதொடும்
ததும்பு பூந்திரைத் தண்புனல் சுட்டதால்
நிதம்ப பாரத்தொர் நேரிழை காமத்தால்
வெதும்பு வாளுடல் வெப்பம் வெதுப்பவே.

கதம்பம் நாள் விரை கள் அவிழ் தாதொடும்
ததும்பு பூந்திரைத் தண் புனல் சுட்டதால்;
நிதம்ப பாரத்து ஓர் நேரிழை, காமத்தால்
வெதும்புவாள், உடல் வெப்பம் வெதுப்பவே.

போ ;—காமவேகத்தால் கொதிப்புக்கொண்டவளும், நிதம்பச் சுமையைத் தாங்கியவளுமான நேரிய அணிகளையுடைய ஒருபெண்ணினது உடல் வெப்பம் சுடுதலால், புதுமணம் கமழ்கின்ற பல வகைச் சுண்ணமும் தேனும், உதிரும் மகரந்தத்தோடு நிரம்பியுள்ள மலர்கள் நிறைந்த அலைகளுடன் கூடிய (அந் நீர்விளையாட்டு நிகழ்த்திய பொய்கையின்) குளிர்ந்த நீரும் சுட்டது.

கு :—ஒருத்தியிடம் எழுந்த காமத்தீயால் அவள் நீராடிய நீர்த் தடமே வெதும்பிற்று. விரை – நறுமணம் கலந்த தூள். பத்துத் துவரினும் ஐந்து விரையினும்" (சிலப். 6, 76) காமத்தைத் தீயாகக் கூறுவது வழக்கு, "நீங்கிற்றெறூஉம் குறுகுங்காற் றண் ணென்னும், தீயாண்டுப் பெற்ரு ளிவள்" (திருக்குறள். 1104). "நீருட் குளிப்பினும் காமம் சுடுமே" (நாலடி. 90) (24)

### ஒருவன் நீர்முகந்து ஒருத்தியின் கூந்தலில் வீசுதல்

**1038.** தைய லாளையொர் தாரணி தோளினுன்
நெய்கொ ளோதியி னீர்முகந் தெற்றினுன்
செய்ய தாமரைச் செல்வியைத் தீம்புனல்
கையி னுட்டுங் களிற்றர சென்னவே.

தையலாளை ஓர் தார் அணி தோளினுன்,
நெய் கொள் ஓதியின் நீர் முகந்து எற்றினுன்,
செய்ய தாமரைச் செல்வியைத், தீம் புனல்
கையின் ஆட்டும் களிற்றரசு என்னவே.

பொ :—சிவந்த தாமரையில் வீற்றிருக்கும் திருமகளை இனிய நீரை (த் துதிக்கையால்) முகந்து நீராட்டும் அரசுவாப்போலத் தன்னிகரற்ற மாலையணிந்த புயங்களையுடைய ஓர் மன்னன் (தன் கையினுல்) நீரை முகந்து ஒரு பெண்ணின் எண்ணெய் பூசிய கூந்தலிலே சொரிந்தான்.

கு :—ஓர் அரசன் தன் கைகளினுல் நீரை (முகந்து) ஒருத்தி கூந்தலிலே சொரிந்தது யானையரசு தன் துதிக்கையினுல் நீரை மொண்டு திருமகளை நீராட்டுவது போன்றது என்பது கருத்து. முகந்து - மொண்டு; "கார்கோள் முகந்த கமஞ்சூல் மாமழை" (திருமுருகு. 7.) திருமகளை இருபுறமும் நின்று களிறு நீராட்டுதல், "வேழம்பூ நீர் மேற்சொரிதரப் புரிநெகிழ் தாமரை மலரங்கண் வீறெய்தித் திருநயந்திருந்தன்ன" (குறிஞ்சிக் கலி. 8). என்றது கொண்டுணர்க. (25)

### தாமரை மீதிருந்த அன்னத்தின் தோற்றம்

**1039.** சுளியு மென்னடை தோற்க நடந்தவர்
ஒளிகொள் சீறடி யொத்தன வாமென
விளிவு தோன்ற மிதிப்பன போன்றன
நளின மேறின நாகிள வன்னமே.

சுளியும் மெல் நடை தோற்க நடந்தவர்
ஒளி கொள் சீறடி, ஒத்தனவாம் என;
விளிவு தோன்ற, மிதிப்பன போன்றன,
நளினம் ஏறின, நாகு இள அன்னமே.

பொ :—தாமரைமலர்மீது ஏறிய மிக்க இளமை வாய்ந்த அன்னங்கள், (நாம்) மாறுகொண்டு மேற்கொள்கின்ற மெல்லிய நடையும் தோற்றுப்போம்படி நடந்த மகளிரின் ஒளிபொருந்திய சிறிய அடியை ஒத்து நின்றனவாம் என்று (கருதித்) தம் மனத்துள்ள சினம் வெளிப்படுமாறு (அத்தாமரை மலரை) மிதிப்பவற்றை ஒத்திருந்தன.

கு :—தம்முடன் பகைகொண்ட ஒருவற்குத் தீங்கு செய்ய இயலாவிடின் தமது பகைமையைப் போக்கிக்கொள்வதற்கு அவனோடு ஒத்தார்க்குத் தீங்கிழைப்பது உலகியற்கை. அது போன்று தம்மை நடையழகால் வென்ற மகளிர்க்குத் தாம் இயற்றக்கூடிய தீங்கு ஒன்று மின்மையின் அன்னப்பறவைகள் அம்மாதர்களின் அடியிணைகளை ஒத்த தாமரைமலர்களைத் தம் மனத்து ஆத்திரம் தீர மிதிப்பன போலும் என்று தாமரை மலர்களின்மேல் அன்னங்கள் இருப்பதை வருணித்தார். சுளித்தல் - வெகுளுதல். "சுளிமுகக்களிறனான்" (சிந்தா. 298); "கழை காண்டலும் சுளியுங் களியானை" (திருக்கோவை, 111). விளிவு-சினம். "பாவிமேல் விளிவு சரதம் நீங்கலதாம்" (கம்பரா. மீட்சி. 130). (26)

### ஆடவரின் காம வேட்கை

1040. எரிந்த சிந்தைய ரெத்தனை யென்கெனோ
அரிந்த கூருகி ராலழி சாந்துபோய்த்
தெரிந்த கொங்கைகள் செவ்விய நூல்புடை
வரிந்த பொற்கல சங்களை மானவே.

எரிந்த சிந்தையர் எத்தனை என்கெனோ,
அரிந்த கூர் உகிரால் அழி சாந்து போய்த்,
தெரிந்த கொங்கைகள், செவ்விய நூல் புடை
வரிந்த பொன் கலசங்களை மானவே.

பொ :—நீரினால் அழிந்த சந்தனம் மறைய அழகுறச்சீவிய நகக்குறிகளோடு வெளித்தோற்றிய கொங்கைகள் அழகிய நூல்களைப் புறத்தே சுற்றியுள்ள பொன்னாலாகிய கலசங்களை ஒத்திருக்க (அதுகண்டு) உள்ளத்தில் காம வெப்பங்கொண்ட ஆடவர் எத்தனைபேர் என்று சொல்ல யான் வல்லனோ? அல்லன்.

கு :—நீர்விளையாட்டில் கொங்கைகளின்மீது பூசிய சந்தனம் முழுவதும் அழிய, ஆடவர் செய்த நகக்குறிகளோடு கூடிய அவரது தனங்கள், நூல் சுற்றிய பொற்கலசங்கள் போன்று தோன்ற, அவற்றைக் கண்ணுற்ற அளவில் காமவெப்பம் மிக, வருத்தமுற்ற ஆடவர்கள் எண்ணிறந்தவர் என்பது கருத்து. அரிந்த உகிர், கூர் உகிர் எனப் பிரித்துக் கூட்டுக. நகங்களை மிகவும் வளரவிடாமலும் அறவே மழுங்கச் செய்யாமலும் சீர்ப்படுத்திய நிலை இங்கே குறிக்கப்பட்டது. உகிரால் என்பதற்கு உகிரோடு என்று பொருள் கொள்க. உகிர் என்பது நகத்தாற் செய்யப்பட்ட குறிகளைக் குறித்து நின்றது. (27)

ஒருத்தி தன் தோழியின் கண் குறிப்புக்கொண்டு பேசுதல்

**1041.** தாழ நின்ற தகைமலர்க் கையினால்
ஆழி மன்னொரு வன்னுரைத் தானது
வீழி யின்கனி வாயொரு மெல்லியல்
தோழி கண்ணிற் கடைக்கணிற் சொல்லினாள்.

தாழ நின்ற தகை மலர்க் கையினால்,
ஆழி மன் ஒருவன் உரைத்தான், அது,
வீழியின் கனிவாய் ஒரு மெல்லியல்,
தோழி கண்ணில், கடைக்கணில் சொல்லினாள்.

பொ :—ஆணை யாழியைக்கொண்ட அரசன் ஒருவன் (தனது முழந்தாள் அளவும்) நீண்டுநின்ற அழகினையுடைத்தாகிய தாமரை போன்ற கையின் சாடையினால் (தான் கூறவேண்டிய செய்தியைக்) கூறினான். அதற்கு வீழிப்பழம்போன்ற வாயிதழையுடைய மெல்லிய தன்மை வாய்ந்த ஒருத்தி (தன்) தோழியின், கண்வாயிலாகத் தன் கடைக்கண் குறிப்புணர்த்தி மறுமாற்றம் தெரிவித்தனள்.

கு :—ஓர் அரசன் தனது காமவேட்கையைக் குறிப்பித்துத் தான் அம் மங்கையை எய்தற்குரிய இடத்தையும் காலத்தையும்

வினவ, அம் மங்கையும் தன் தோழியைக்கொண்டு கடைக்கண் குறிப்பால் அவ்வரசனுக்கு மறுமொழி தந்தாள் என்பது கருத்து; நாணம் முதலிய நாற்பண்புகளும் நல்ல மகளிர்க்கியல்பாகலின் தான் குறிக்க வேண்டிய செய்தியைத்தான் நேர்முகமாக உணர்த்தாது தோழி வாயிலாகக் குறிப்பால் தெரிவித்தாள். ''காதன்மை கண்ணுளேயடக்கிக் கண் எனும் தூதினால் துணிபொருள் விளக்கி'' (சிந்தா. 1485) என்ற இடத்துத் துணிந்த பொருள் கலவிக்கிசையும் காலமும் இடமும் என்று உரையாசிரியர் கூறியது காண்க. தகை – அழகு; ''தகையாகத் தையலாள்'' (நெய்தற் கலி. 30). இனி மெல்லியலின் தோழி தனது தலைவியின் கருத்துக்கிணங்கத் தனது கடைக்கண் நோக்கால் உரைத்தாள் எனினுமாம். ஆடவன் கைச்சாடை காட்டத் தலைவி கண்ணினால் மறுமொழி தந்தாள் என்பது அவளது பெண்மையியல்பை விளக்கிற்று. (28)

### நீரில் மூழ்கிய தாமரையின் தோற்றம்

1042. தள்ளி யோடி யலைதடு மாறலால்
தெள்ளு நீரின் முழுகுசெந் தாமரை
புள்ளி மானனை யார்முகம் போல்கிலா
துள்ள நாணி யொளிப்பன போன்றவே.

தள்ளி ஓடி அலை தடுமாறலால்,
தெள்ளு நீரின் முழுகு செந்தாமரை,
புள்ளி மான் அனையார் முகம் போல்கிலாது,
உள்ளம் நாணி ஒளிப்பன போன்றவே.

பொ:—முன்பின்னாகச் சென்று அலை தடுமாறுவதால் தள்ளப்பட்டுத் தெளிவான நீரில் மூழ்கிய செந்தாமரைமலர்கள் புள்ளி மான்களை ஒத்த மகளிரது முகங்களை ஒவ்வாமையால் (தம் தாழ்வைக் கருதி) மனம் வெட்கி ஒளிப்பனபோன்றன.

கு:—நீரில் அலைகள் ஏற முழுகும் தாமரைமலர்கள், நீராடு மகளிர் முகத்தின் அழகு தமக்கில்லாமையால் நாணி மறைவன போன்றன. தடுமாறுதல் – போவதும் வருவதுமாதல்; ''இருங்கழி யோதம் போற்றடுமாறி'' (நெய்தற் கலி. 6) என்ற இடத்துக் காண்க. (29)

**நீராட்டின்பின் கரையேறி யாவரும் ஆடையணிகளை அணிதல்**

**1043.** இனைய வெய்த விரும்புன லாடிய
வனைக ருங்கழல் மைந்தரு மாதரும்
அனைய நீர்வறி தாகவந் தேறினர்
புனைந றுந்துகில் பூணொடுந் தாங்கினர்.

இனைய எய்த, இரும் புனல் ஆடிய
வனை கரும் கழல் மைந்தரும் மாதரும்
அனைய நீர் வறிது ஆக, வந்து ஏறினர்,
புனை நறுந் துகில் பூணொடும் தாங்கினர்.

பொ :—இத்தன்மையவான (முற்கூறிய) நிகழ்ச்சிகள் நிகழ, பெரிய நீர்நிலைகளில் விளையாடிய, பூண்ட பெரிய வீரக்கழலை யுடைய ஆடவரும் மகளிரும் அந்த நீர்நிலை (தம்மைப் பிரிதலால்) வெறுமையை அடைய (க் கரைமீது) ஏறியவர்களாய் (த் தாம்) உடுத்தற்குரிய நல்ல ஆடைகளை அணிகளோடும் தரித்தார்கள். (30)

நீராட்டின்பின்னர் நீர்நிலையின் காட்சி

**1044.** மேவி னார்பிரிந் தார்க்கந்த வீங்குநீர்
தாவு தண்மதி தன்னொடுந் தாரகை
ஓவு வானமு முண்ணிறை தாமரைப்
பூவெ லாங்குடி போனதும் போன்றதே.

மேவினர் பிரிந்தார்க்கு, அந்த வீங்கு நீர்,
தாவு தண்மதி தன்னொடும் தாரகை,
ஓவு வானமும், உள் நிறை தாமரைப்
பூ எலாம் குடி போனதும், போன்றதே.

பொ :—வாவியில் விரும்பி ஆடி அதனை நீங்கிக் கரை சேர்ந்த ஆடவர்க்கும் மகளிர்க்கும், அந்தப் பரந்த நீரையுடைய நீர்நிலை, தவழ்கின்ற குளிர்ந்த சந்திரனும் விண்மீன்களும் நீங்கப் பெற்ற விண்ணையும், தன்னிடத்தே நிறைய மலர்ந்திருந்த தாமரை மலர்கள் யாவும் நீங்கப்பெற்ற பொய்கையையும் போன்று விளங்கிற்று.

கு :—கீழ்க் கவியில் கூறிய நீர்நிலை வறிதான நிலையை இங்கு உவமை முகத்தால் விளக்கினர். அந்த ஆடவரும் மகளிரும்

அகன்றதால், மதியும் உடுக்களும் நீங்கிய வானத்தையும், தாமரை மலர்கள் நீங்கிய நீர்நிலையையும் ஒத்துக் காணப்பட்டது அந்த வீங்குநீர் என்பது கருத்து. தாரகை-விண்மீன். ஓவுதல் – ஒழிதல்; ''ஓவுநாள்'' (சுந்தரர். பாண்டிக்கொடுமுடிப்பதிகம்). குடிபோதல் - நீங்குதல். ''ஆவி குடிபோன அவ்வடிவும்'' (சிலப். 20. இறுதி வெண்பா.) என்றது காண்க. தண்மதியும் தாரகையும் முறையே ஆடவர்க்கும் மகளிர்க்கும் உவமை. 1027-ஆவது செய்யுளில் மகளிர் சூழநின்ற ஆடவற்கு மீனெலாஞ்சூழ நின்ற விரிகதிர்த்திங்களை இவ்வாசிரியரே உவமித்தது காண்க. (31)

5-ஆம் பிரதியில் இப்பாடலுடன் நீர்விளையாட்டுப் படலம் முற்றுப்பெற்று, 'மானினேக்கியர்' என்ற பாடல் உண்டாட்டுப் படலத்தின் முதற்பாட்டாக அமைந்துள்ளது.

### சூரியன் மறைதல்

**1045.** மானி னேக்கியர் மைந்தரொ டாடிய
ஆன நீர்விளை யாடலை நோக்கினன்
தானு மன்னது காதலித் தானென
மீன வேலையை வெய்யவ னெய்தினன்.

**மானின் நோக்கியர் மைந்தரொடு ஆடிய,
ஆன நீர்விளையாடலை நோக்கினன்,
தானும் அன்னது காதலித்தான் என,
மீன வேலையை வெய்யவன் எய்தினன்.**

பொ :—மான்போன்ற (மருண்ட) விழியை உடைய மகளிர் ஆடவரோடு நிகழ்த்திய, தக்க நீர்விளையாட்டை நோக்கிய கதிரவன், தானும் அவ்வாறு நீர்விளையாட்டை விரும்பினன் என்று தோன்றும்படி, மீன்கள் நிறைந்த கடலை அடைந்தான்.

கு :—சூரியன் மாலைக்காலத்து மறைந்ததை இவ்வாறு கற்பித்தார். (32)

2, 12, 20, 23, 24, 27, 28, 39, 44 என்ற எண்ணுள்ள சுவடிகளில் இப்பாடலோடு நீர்விளையாட்டுப் படலம் முற்றுப்பெற்று ''ஆற்றல்'' என்று தொடங்கும் பாடல் உண்டாட்டுப்படலத்தின் முதற்பாடலாக உள்ளது.

## சந்திரன் தோற்றம்

1046. ஆற்ற லின்மையி னுலழிந் தேயுந்தம்
வேற்று மன்னர்த மேல்வரும் வேந்தர்போல்
ஏற்று மாதர் முகங்களொ டெங்கணும்
தோற்ற சந்திரன் மீளவுந் தோற்றினன்.

ஆற்றல் இன்மையினுல் அழிந்தேயும், தம்
வேற்று மன்னர்தம் மேல்வரும் வேந்தர்போல்,
ஏற்று, மாதர் முகங்களொடு எங்கணும்
தோற்ற சந்திரன், மீளவும் தோற்றினன்.

பொ:—(தமது பகையரசரை வெல்லும்) வலியின்மையால் தாம் தோல்வியுற்றிருந்தும், தமது மாற்றரசர்மீது (மீண்டும்) போர்செய்ய எழுகின்ற மன்னர் போலவே எல்லா இடத்தும் மகளிர் முகத்துடன் மாறுபட்டு நின்று அவர்கள் முன்பு நிற்க மாட்டாது தோல்வியுற்ற சந்திரன் மீளவும் (அம்முகங்களோடு எதிர்க்குமாறு) உதித்தான்.

கு:—மறைந்தது மகளிர் முகத்துக்குத் தோற்றென்றும், மீண்டும் தோற்றியது அவர்கள் முகங்களோடு பொருவதற்கு என்றும் கூறினர். மேல்வருதல் - மேலே படையெடுத்து வருதல். "மெல்லியான் செவிமுதல் மேல்வந்தான் காலைபோல்" (மருதக் கலி. 5); 'உடன்று மேல்வந்த வம்பமள்ளரை" (புறம். 77) என்ற வரிகளிற் காண்க. (33)

நீர்விளையாட்டுப் படலம் முற்றிற்று

# 17. உண்டாட்டுப் படலம்

இப்படலம், இராமபிரானுடைய திருமணத்திற்காகத் தசரதனோடு சென்ற பரிவாரங்களில், மகளிரும், ஆடவரும் பொழுதுபோம் வரையில் புனலாடி, விண்ணில் மதியெழுந்த வுடன் அனைவரும் கள்ளுண்டு, மகிழ்ந்து கலந்து இன்பம் நுகர் தலை அறிவிப்பது. உண்டு ஆட்டுப் படலம். உண்டு ஆடுதலை அறிவிக்கும் பகுதி. உண்டல் - கள்ளுண்டல். ஆடுதல் – போகம் நுகர்தல்.

இப்படலம், மாலைக்காலம் தொடங்கி இரவுநிகழ்ச்சிகள் பலவற்றையும் அறிவித்தலின் 'மாலைப் படலம், எனவும் சில பிரதிகளிற் குறிக்கப் பெற்றுள்ளது.

இப்படலம், நிலாத் தோற்றத்தில் தொடங்கி நீலா மன்றைந்து கதிரவன் எழுந்தான் 'என்பது வரையுள்ள நிகழ்ச்சிகளை உணர்த்துவதாக அறுபத்தேழு கவிதைகளால் முடிகிறது.

பெருங்காப்பிய இலக்கணத்திற் பேசப் பெற்ற, பூம்பொழில் நுகர்தல், புனல்விளையாடல், தேம்பிழிமதுக்களி, சிறுவரைப் பெறுதல், புலவியிற் புலத்தல், கலவியிற் களித்தல், முதலிய வற்றுள் தேம்பிழி மதுக்களியையும், புலவியிற் புலத்தல், கலவியிற் களித்தல் இவைகளையும், இப்படலம் அறிவிக்கிறது.

கம்பர், தாம் இயற்றிய பெருங்காப்பியத்திற்கு அதன் இலக் கணம் அமையப் படைத்துக் கொண்டவற்றுள் இதுவும் ஒன்று.

பின்னர் மதுவனம் அழித்த படலம் முதலியவற்றுள் கள் ளுண்டல் கூறப்படுமாயினும், அது துன்பக் காலத்து இன்பத் தோற்றமாய் எழுந்ததேயன்றி, இன்பக் காலத்து இன்ப நிகழ்ச்சி அன்றாதலானும், இளவரசு திருமணத்திற்கு எழுந்த குடிகள் இன்பக்களியில் மூழ்குதல் இயல்பாதலானும், இப்படலமே மதுக் களிக்கும் புலவிக்கும் கலவிக்கும் பொருந்துவதாய் இலக்கிய எழிலை மிகுத்துநிற்கின்றது.

இப்படலத்துள், முதல்நான்கு கவிகளால், நிலவு எங்கும் பரவியதால் விளைந்த இன்பம் பேசப்படுகிறது. பின்னர், மகளிர் முத்துப் பந்தரிலும், திரைச் சுற்றிலும், பளிக் கறைகளிலும், காவிலும், பூம்பந்தரிலும் தங்கி, கள்ளைப் பருகியதும், அதனால் விளைந்த மயக்கமும் காம மிகுதியும் காதலர்ப் பெருமையால்

விளைந்த கடுஞ் சினமும், செயல்தடுமாற்றமும், பிறவும் கூறப் படுகின்றன. இடையிடையே, புலவியும் கலவியும் புகலப்படு கின்றன.

கணவன், ஒருத்திக்கு இளையவள் பேரை யிட்டு அழைத்தமை யால் அவனது மறைந்த ஒழுக்கம் வெளிப்பட்டமை பற்றி ஒருத் திக்கு நகையும், மாற்றாள் ஒருத்தி முளைத்தமைக்கு வருத்தமும் விளைந்தன என்றும், தூது அனுப்பிக் கணவனை வரவழைத்தவள் கணவர் அன்பால் தானே வாராது அழைத்துத்தானே வந்தார் எனக் கதவடைத்தாள் என்றும், பொய்யாகச் சோம்பல் முறிப் பாள் போல ஊடிய கணவனைத் தீண்டிப் பொய்யாகத் தூங்கி விழித்தவளாய் 'இப்போது நாழிகை என்ன ?' என்று வினவினுள் என்றும் புலவி மிக நுணுக்கமாகப் பேசப்பட்டுள்ளது.

அங்ஙனமே கலவியும், 'கலவிக்கிடையூறுன கலன்களைக் கழித்து ஒருவருக் கொருவர்' தோலாமல், தம்மை அரம்பையர் என்று ஆடவர் வியக்கத் தமது இள நலத்தை ஆடவர் உண்ணு மாறு நடந்து கொண்டனர் என்று பேசப்பெற்றுள்ளது.

மற்றும், கள்ளினுள் தோன்றும் நிறைமதிக்கு அறிவுறுத்து வாள் கூற்றாக அடைக்கலச் சிறப்பு இத்தகைத் தென்றும், கணவ னுக்குப் பிடிக்காமையால் கள்ளுண்ணு திருந்தாள் என்று கணவன் விரும்பாதவற்றைச் செய்யாமையே கற்புடையாளுக்கு அழகாம் என்றும், எத்துணைத் துன்பம் நேரினும் தலைவன்குற்றங்களை எடுத்துப் பரப்புதல் தலைவிக்கு இயல்பன்று என்றும், பெண்மை யின் பெட்பின் முன் ஆண்மையின் ஆற்றல் நில்லாது என்றும், உயிரும் உணர்வும், அருத்தியும் ஒத்ததே இல்லற வாழ்வு என்றும், அறைபறை அன்ன நீரார் அருமறைக்காகார் என்றும், தன்னையும் துறக்கும் தன்மை காமத்திற்கு உண்டு என்றும், காதலும் வெகு ளியும் மோதினுல் காதலே வாகை சூடும் என்றும், வரும் நீதிகள் பல நேரின மணிகள் போல நிரல்பட அங்கங்கே அமைக்கப் பெற் றுள்ளன. இவ்வண்ணம் இலக்கிய எழிலோடு, இன்ப உறையுளாய் நீதிகளின் வீதியாய், இல்வாழ்க்கையின் எடுத்துக் காட்டாய் இலங்கும் இப்படலத்தை முழுதும் சுவைத்தல் மூதறிவோர் கடன்.

---

# 17. உண்டாட்டுப் படலம்

## நிலவின் வருணனை (1047-1050)

**1047.** வெண்ணிற நறநிறை வெள்ள மென்னவும்
பண்ணிறஞ் செறிந்திடை பரந்த தென்னவும்
உண்ணிறை காமமிக் கொழுகிற் றென்னவும்
தண்ணிறை நெடுநிலாத் தழைத்த தெங்குமே.

வெண்ணிற நறநிறை வெள்ளம் என்னவும்,
பண் நிறம் செறிந்து இடை பரந்தது என்னவும்,
உள் நிறை காமம் மிக்கு ஒழுகிற்று என்னவும்,
தண் நிறை நெடு நிலா தழைத்தது எங்குமே.

பொ :—வெண்மையான கள்ளின் நிறைந்த வெள்ளம் போலவும், இசை உருவங்கொண்டு இடங்கடோறும் பரவியது போலவும், மனத்துள் நிறைந்த காமம் மிகுதியாகிப் பொங்கி வழிந்தது போலவும், குளிர்ச்சி நிறைந்த பெருநிலவானது எங்கும் நிரம்பியது.

கு:—களிப்பை மிகுத்தலால் கள்போலவும், இன்பம் விளைத்தலால் இசைபோலவும், காதல் மிகுத்தலால் காமவொழுக்குப் போலவும் நிலா தழைத்தது என்றார். (1)

**1048.** கலந்தவர்க் கினியதோர் கள்ளு மாய்ப்பிரிந்து
உலந்தவர்க் குயிர்சுடு விடமு மாயுடன்
புலந்தவர்க் குதவிசெய் புதிய தூதுமாய்
மலர்ந்தது நெடுநிலா மதனன் வேண்டவே.

கலந்தவர்க்கு இனியது ஓர் கள்ளுமாய்ப், பிரிந்து
உலந்தவர்க்கு உயிர் சுடு விடமுமாய், உடன்
புலந்தவர்க்கு உதவி செய் புதிய தூதுமாய்,
மலர்ந்தது நெடு நிலா மதனன் வேண்டவே.

பொ :—(மகளிரும் மைந்தருமாகக்) கலந்திருப்பவர்களுக்கு இனிமை பயப்பதான கள்போலக் களிப்பை விளைவிப்பதாயும்

ஒருவரை யொருவர் விட்டுப் பிரிந்து வாடியவர்கட்கு உயிரை வருத்துகின்ற நஞ்சுபோல்வதாயும், கணவருடன் ஊடிய மகளிர்க்கு உதவி செய்யக்கூடிய புதிய தூதுபோல்வதாயும், மிக்க நிலவானது, மன்மதன் விரும்ப எங்கும் பரவிற்று.

கு :—கலந்தவர்க்குக் களிப்பையும், உலந்தவர்க்குத் துன்பத்தையும் தந்த நிலா புலந்தவர்க்குத் துணையாய்க் காம மிகச்செய்து கூட்டுவிக்கின்றது என்பதாம். புலந்தார்க்குத் தூதாவார் பாணரும், பாடினியும், கூத்தரும், இளையரும், கண்டோரும், பாகனும், பாங்கியும், செவிலியும், அறிவரும், காமக் கிழத்தியும் காதற்புதல்வனும், விருந்தும், ஆற்றாமையும் ஆகிய இவர்கள். ஆதலின் நிலா புதிய தூதாயிற்று. வேண்ட - விரும்ப. தனக்கு வெற்றி தேடித் தரும் துணையாதலின் மன்மதன் விரும்புவானாயினன் என்பதாம். (2)

## நிலவு மிகுதியின் விளைவு

**1049.** ஆறெலாங் கங்கையே யாய வாழிதாம்
கூறுபாற் கடலையே யொத்த குன்றெலாம்
ஈறிலான் கயிலையை யியைந்த வென்னினி
வேறியாம் புகல்வது நிலவின் வீக்கமே.

**ஆறு எலாம் கங்கையே ஆய; ஆழிதாம்,**
**கூறு பாற்கடலையே ஒத்த ; குன்று எலாம்,**
**ஈறு இலான் கயிலையை இயைந்த; என் இனி**
**வேறு யாம் புகல்வது நிலவின் வீக்கமே ?**

பொ :—பூமியிலுள்ள ஆறுகள் யாவும் கங்கையாயின கடல்கள் யாவும் புகழ்ந்து கூறப் பெறுகின்ற பாற்கடலை ஒத்தன. மலைகள் யாவும் தமக்கு அழிவே இல்லாதவனாகிய சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருக்கயிலையை ஒத்தன; இனி, யாம் நிலவின் மிகுதியைப் பற்றிக் கூறுவது வேறு என்ன இருக்கிறது.

கு :—நிலவின் வெண்மையால் யமுனை முதலிய ஆறுகள் கங்கையாயின; பிற கடல்கள் பாற்கடலாயின; மலைகள் கயிலையாயின என்பதாம். (3)

### நிலவினுல் உலகம் வெள்ளணி அணிந்ததை ஒத்தமை

1050. எள்ளருந் திசைகளோ
டியாரும் யாவையும்
கொள்ளைவெண் ணிலவினுற்
கோலங் கோடலால்
வள்ளுறை வயிரவாண்
மகர கேதனன்
வெள்ளணி யொத்தது
வேலை ஞாலமே.

எள் அரும் திசைகளோடு, யாரும், யாவையும்,
கொள்ளை வெண்ணிலவினுல் கோலம் கோடலால்,
வள் உறை வயிர வாள் மகரகேதனன்
வெள்ளணி ஒத்தது வேலை ஞாலமே.

பொ :—இகழ்தற்கரிய திசைகளோடு, அவ்வத் திசைகளில் உள்ள எல்லாரும், எல்லாப் பொருளும் மிகுந்த வெண்ணிலவால் வெண்மைநிறத்தைப் பெறுதலால், கடல்புடைசூழ்ந்த உலகம், செறிந்த உறையோடு கூடிய உறுதியான வாளையும் மீன்கொடியையும் உடைய மன்மதன் (தோன்றியமைக்காக) வெள்ளணியணிந்தது போலும்.

கு :—கோலம் கோடலால் உலகம் வெள்ளணி அணிந்தது போலும் என்பது கருத்து. மகப் பெற்று புனிறு தீர்ந்தபின் வெண்மையான ஆடையை யணிதல் மரபு. (4)

### மகளிர் எய்திய இடங்கள்

1051. தயங்குதா ரகைபுரை
தரள நீழலும்
இயங்குதார் மிடைந்தகா
ரெழினிச் சூழலும்
கயங்கள்போன் றொளிர்பளிங்
கடுத்த கானமும்
வயங்குபூம் பந்தரும்
மகளி ரெய்தினுர்.

தயங்கு தாரகை புரை தரள நீழலும்,
இயங்கு தார் மிடைந்த கார் எழினிச் சூழலும்,
கயங்கள் போன்று ஒளிர் பளிங்கு அடுத்த கானமும்,
வயங்கு பூம்பந்தரும், மகளிர் எய்தினர்.

பொ :—விளங்குகின்ற நட்சத்திரங்களை ஒத்த முத்துக்களாலாகிய பந்தரின் நீழலிலும், அசைகின்ற மாலைகள் நெருங்கிய கரிய திரைகள் கட்டிய இடங்களிலும். குளங்களைப் போல விளங்குகின்ற பளிங்குக் கற்கள் பதித்த காடுகளிலும், விளங்குகின்ற பூம்பந்தரின் கீழும் பெண்கள் அடைந்தனர்.

கு :—கரிய திரையை நாற்புறமும் சூழவிட்டு, அதன் மேல் மாலைகளை நாலவிடுதல் வழக்கமாதலின் தார்மிடைந்த கார் எழினிச் சூழல் என்றார். கயம் - ஆழமான நீர்நிலை.

இயங்கு கார் மிடைந்த கா எழினிச் சூழலும் எனப் பாடங் கொண்டு, வானத்தில் இயங்குகின்ற மேகம் நெருங்கித் தங்குகின்ற சோலைகளாகிய இடுதிரைகளையுடைய இடங்களிலும் என உரை கொள்ளலும் ஆம். (5)

## மகளிர் மதுக் குடித்தல்

**1052.** பூக்கம ழோதியர் போது போக்கிய
சேக்கையின் பச்செருச் செருக்குஞ் சிந்தையார்
ஆக்கிய வமிழ்தென வம்பொன் வள்ளத்து
வாக்கிய பசுநறு மாந்தன் மேயினர்.

பூக் கமழ் ஓதியர், போது போக்கிய
சேக்கை இன்பச் செருச் செருக்கும் சிந்தையார்,
ஆக்கிய அமிழ்து என, அம் பொன் வள்ளத்து
வாக்கிய பசு நறு மாந்தல் மேயினர்.

பொ :—மலர்மணங் கமழுகின்ற கூந்தலையுடைய பெண்கள் போதுகளை மிகப் பரப்பிய படுக்கையில் இன்பப் போரிலே களிக்கவேண்டும் என்ற கருத்தினராய், பாற்கடலிலிருந்து கடைந்து ஆக்கப் பெற்ற அமுதத்தைப் போல அழகிய பொற் கிண்ணத்திலே வார்க்கப் பெற்ற புது மதுவைப் பருகினர்கள்.

கு :—போக்கிய - மிகுதியாகப் பரப்பப் பெற்ற. இன்பச் செரு - இன்பத்தை ஊட்டும் போராகிய கலவிப்போர் (6)

### மகளிர் கள்ளுண்டது

1053. மீனுடை விசும்பினர் விஞ்சை நாட்டவர்
ஊனுடை உடம்பின ருருவ மொப்பிலார்
மானுடை நோக்கினர் வாயின் மாந்தினர்
தேனுடை மலரிடைத் தேன்பெய் தென்னவே.

**மீன் உடை விசும்பினர், விஞ்சை நாட்டவர்,**
**ஊன் உடை உடம்பினர், உருவம் ஒப்பு இலார்,**
**மான் உடை நோக்கினர் வாயில் மாந்தினர்,**
**தேன் உடை மலரிடைத் தேன் பெய்து என்னவே.**

பொ :—விண்மீன்களையுடைய வானுலகத்தின் மகளிரும், வித்தியாதரநாட்டுமகளிரும் தமது அழகுக்கு ஒப்பாகப் பெறாத வரான ஊனுனியன்ற உடம்பையுடையவர்களான மான் தோற்றுப் போதற்குக் காரணமாகிய கண்களையுடைய பெண்கள், தேனெடுகூடிய மலரில் தேனை வார்த்தாற்போல மதுவைப் பருகினார்கள்.

கு :—விண்ணவர் மகளிரும் வித்தியாதர மகளிரும் ஒளிமேனி படைத்தவர்களாயினும், ஊனுடை உடம்பினர்களாகிய இவ் வுலகப் பெண்களின் அழகுக்கு ஒப்பிலாராயினர் என்பதாம். அம் மகளிர் இமையாக் கண்ணராயிருத்தலின் இமைத்து மருட்டும் கண்களையுடைய இம் மகளிர்க்கு ஒப்பாகார் என்பதனை 'மான் உடை நோக்கினர்' என்று விளக்கியவாறு. உடைதல் - தோற்றல்.

இயல்பாகவே தேனையுடைய மலரில் மேலும் தேனைப் பெய்தது போல வால் எயிறு ஊறிய நீராகிய தேனோடு கூடிய செவ்வாயில் மதுவைப் பெய்து மாந்தினர் என்ற நயம் ஓர்க. (7)

### கள்குடிக்கும் காரிகை ஒருத்தியின் கவின்

1054. உக்கபால் புரைநறு
வுண்ட வள்ளமும்
கைக்கொள்வா ளொளிபடச்
சிவந்துகாட் டத்தன்

மைக்கணுஞ் சிவந்ததோர்
மடந்தை வாய்வழி
புக்கதே னமிர்தமாய்ப்
பொலிந்த போன்றவே.

உக்க பால் புரை நறு, உண்ட வள்ளமும்,
கைக் கொள் வாள் ஒளி படச் சிவந்து காட்டத் தன்
மைக்கணும் சிவந்தது ; ஓர் மடந்தை வாய்வழி
புக்க தேன் அமிர்தமாய்ப் பொலிந்த போன்றவே.

பொ :—சிந்திய பாலை ஒத்த கள்ளும் கள்ளோடு கூடிய கிண்ணமும் (உண்பதற்காக எடுத்த) பெண்ணின் கையினது மிக்க ஒளிபடுதலால் சிவந்து காட்ட, அவளுடைய வாயிற் புகுந்த,-நிறத்தால் தேனையொத்திருந்த அக் கள், அமுதமாகி விளங்குவ போன்றன. அதனால் அவளுடைய மைபூசிய கரிய கண்களும் சிவந்தன.

கு :—நிறத்தாற் பாலை யொத்த கள்ளும் கள்ளோடு கூடிய வள்ளமும் கைபடச் சிவந்து, கள் நிறத்தால் தேனாய் வாய்புக்க அளவில் அமிர்தமாய் விளங்கிற்று என்பது கருத்து.

நறுவும், நறு உண்ட வள்ளமும் சிவந்து காட்ட என வியைக்க. மைக்கணும் சிவந்தது என்றது கள் குடித்தார்க்குக் கண் சிவத்தல் இயல்பாதலின். நறு, கைப்படச் சிவந்து தேனாய் வாய்ப் பட அமுதமாயிற்று என ஒன்றின் ஒன்று உயர்வு தோன்ற நிற்றல் காண்க. கள் அமுதம்போலானாலும் தன் குணம் கெட்ட தில்லை என்பார் மைக்கணுஞ் சிவந்த, என்றார். 'உக்க பால்புரை நிலா' என்று பாடங் கொண்டு வேறு உரை கூறுவாரும் உளர். (8)

### கள் காமத்தை மிகுவித்தல்

**1055.** தாமமு நானமுந் ததைந்த தண்ணகில்
தூமமுண் குழலிய ருண்ட தூநறை
ஓமவெங் குழியுகு நெய்யி னுள்ளுறை
காமவெங் கனலினைக் கனற்றிக் காட்டிற்றே.

தாமும் நானமும் ததைந்த தண் அகில்
தூமம் உண் குழலியர் உண்ட தூ நறை,
ஓம வெம் குழி உகு நெய்யின், உள் உறை
காம வெம் கனலினைக் கனற்றிக் காட்டிற்றே.

பொ :—மாலையும், புனுகும் நிறைந்த குளிர்ந்த அகிற்புகை யூட்டப் பெற்ற கூந்தலையுடைய பெண்கள் உண்ட கள், ஓம குண்டத்தில் ஊற்றிய நெய்யைப் போல உள்ளே உறைந்து கிடக்கின்ற காமம் ஆகிய கொடிய நெருப்பை மூளச் செய்து வெளிக் காட்டிற்று.

கு :—ஓம குண்டத்தில் ஊற்றிய நெய் ஓமத்தீயை வளர்ப்பது போல, கள் காமத்தை வளர்த்தது என்பதாம். ததைந்த குழலியர் எனவும் தூமம் உண் குழலியர் எனவும் தனித்தனி கூட்டுக. குழலுக்கு அகிற்பு கையூட்டுதலும் மாலை சூட்டுதலும் புனுகு நெய் அப்புதலும் கள்ளால் மிகுந்த காமத்தை மேலும் வளர்க்க வாயில்கள். (9)

### மடந்தையொருத்தி தன் நிழலைத் தோழி என மயங்குதல்

1056. விடனொக்கு நெடிய நோக்கி
★ னமிழ்தொக்கு மின்சொ லார்தம்
மடனொக்கு மடனு முண்டே
வாணுத லொருத்தி காணத்
தடனொக்கு நிழலைப் பொன்செய்
தண்ணறுந் தேறல் வள்ளத்
துடனொக்க வுவந்து நீயே
யுண்ணுதி தோழி யென்றாள்.

விடன் ஒக்கும் நெடிய நோக்கின்
அமிழ்து ஒக்கும் இன் சொலார் தம்
மடன் ஒக்கும் மடனும் உண்டே!
வாள் நுதல் ஒருத்தி, காணத்
தடன் ஒக்கும் நிழலைப் பொன் செய்
தண் நறும் தேறல் வள்ளத்து
'உடன் ஒக்க உவந்து நீயே
உண்ணுதி தோழி!' என்றாள்.

பொ :—ஒளி பொருந்திய நெற்றியினையுடையாளாகிய ஒருத்தி. குளிர்ந்த நல்ல கள்ளினையுடைய செம்பொன்னாற் செய்த கிண்ணத்திலே பெருமையால் ஒத்த தன் நிழலைக் கண்டு, 'தோழீ! என்னுடன் கூட மகிழ்ந்து நீயே இக்கள்ளை உண்ணுவாயாக' என்று வேண்டிக்கொண்டாள். ஆகையால் நஞ்சை யொத்த நீண்ட கண் நோக்கையும் அமுதத்தை ஒத்த இனிய சொல்லையும்

உடைய பெண்களின் அறியாமையை ஒத்த அறியாமையும் உலகத்து உண்டோ.

கு:—நோக்கு தாக்கித் தீமை செய்தலின் விடனெக்கும் என்றும் அந்நோக்கால் உண்டாய நோயைப் போக்குதலின் அவர்களுடைய சொல்லை அமுது ஒக்கும் என்றும் கூறினர். (10)

## ஒருத்தி தன் நிழலையே வேறொருத்தி என்று நகுதல்

**1057.** அச்சநுண் மருங்கு லாளோ
ரணங்கனு ளளக பந்தி
நச்சுவேற் கருங்கட் செவ்வாய்
நளிர்முக மதுவுட் டோன்றப்
பிச்சிநீ யென்செய் தாயிப்
பெருநற விருக்க வாளா
எச்சிலை நுகர்தி யோவென்
றெயிற்றரும் பிலங்க நக்காள்.

அச்சம் நுண் மருங்குலாள், ஓர் அணங்கு அனாள், அளக பந்தி நச்சு வேல் கருங்கண் செவ்வாய் நளிர் முகம் மதுவுள் தோன்ற, 'பிச்சி! நீ என்செய்தாய்?இப் பெரு நறவு இருக்க, வாளா எச்சிலை நுகர்தியோ? என்று, எயிற்று அரும்பு இலங்க நக்காள்.

பொ:—கண்டவர்க்கு அச்சத்தை விளைவிக்கின்ற நுணுகிய இடையை உடையவளாகிய ஒரு பெண், கூந்தலின் செறிவையும் நஞ்சு பூசிய வேல் போன்ற கரிய கண்களையும் சிவந்த வாயையும் உடைய (தன்) குளிர்ந்த முகமானது கள்ளில் தோன்ற, அதனை வேறொருத்தியாக எண்ணி, 'பைத்தியம் பிடித்தவளே! நீ என்ன செயல் செய்தாய்? இந்தப் பெரிய கள்ளிருக்கவும் பயனற்று இந்த எச்சிற் கள்ளையா நுகர்கின்றாய்?' என்று அரும்பு போன்ற பற்கள் தோன்றச் சிரித்தாள்.

கு:—கண்டவர்கள் 'ஒடிந்துவிடுமே' என்று அஞ்சுதலால் அச்ச நுண்மருங்குல் என்றார். மிகுந்த கள்ளிருக்க உண்டு எஞ்சிய எச்சிலையா நுகர்வது என்ற ஏளனம் தோன்றப் பிச்சி என்றார்.

நளிர் முகம், குளிர்ச்சியையுடைய முகம்; அமைதியான நோக்கத்தையுடைய முகம் என்றவாறு. நகைமுகம் எனப் பாடம் கொண்டு பற்களையுடைய முகம் என்றும் ஒளியையுடைய முகம் என்றும் உரை கூறுவாருமுளர். (11)

## ஒருத்தி வள்ளத்துள் நிலவை மதுவென மயங்கல்

**1058.** புறமெலா நகைசெய் தேசப்
பொருவரு மேனி வேறோர்
மறமுலாங் கொலைவேற் கண்ணாள்
மணியின்வள் ளத்து வெள்ளை
நிறநிலாக் கற்றை பாய
நிறைந்தது போன்று தோன்ற
நறவென அதனை வாயின்
வைத்தன ளாணுட் கொண்டாள்.

புறம் எலாம் நகைசெய்து ஏசப்,
பொரு அரு மேனி வேறு ஓர்
மறம் உலாம் கொலை வேல் கண்ணாள்,
மணியின் வள்ளத்து வெள்ளை
நிற நிலாக் கற்றை பாய,
நிறைந்தது போன்று தோன்ற,
நறவு என அதனை வாயின்
வைத்தனள், நாண் உள் கொண்டாள்.

பொ:—ஒப்பற்ற மேனியையும், வேறு ஒரு கொடுமை உலாவப்பெற்ற கொலைத்தன்மை பொருந்திய வேல் போன்ற கண்களையும் உடையாள் ஒருத்தி, முத்தாலியன்ற கிண்ணத்தில் வெண்மையான நிலவின் தொகுதி பாய்ந்ததால் (கள்) நிறைந்தது போன்று தோன்ற, அதனை உண்மையான கள்ளென்றே எண்ணி வாயில் வைத்துப் பருகத் தொடங்கினாள். புறத்தேயுள்ள தோழியர் முதலாயினார் நகை செய்து இகழ வெட்கினாள்.

கு:—முத்துவள்ளத்தில் நிலவொளி பாய அது கள் நிறைந்தாற் போலத் தோன்றியது. அதனைக் கள்ளென்று கருதிப் பருகத் தொடங்கினாள். பக்கத்தில் உள்ளவர்கள் நகைத்தனர். அவள் தான் மயங்கினமை குறித்து நாணினாள் என்பது கருத்து.

புறம் – புறமாகவுள்ள சிலதியர்முதலாயினார், மணியின் வள்ளம் –இரத்தினகிண்ணம் என்பாரும் உளர். (12)

ஒருத்தி கள்ளில், கண்நிழலை வண்டென ஓச்சுதல்

1059. யாழ்க்குமின் குழற்கு மின்ப
மளித்தன விவையா மென்னக்
கேட்குமென் மழலைச் சொல்லோர்
கிஞ்சுகங் கிடந்த வாயாள்
தாட்கருங் குவளை தோய்ந்த
தண்ணறைச் சாடி யுட்டன்
வாட்கணி னிழலைக் கண்டாள்
வண்டென ஓச்சு கின்றாள்.

'யாழ்க்கும் இன் குழற்கும் இன்பம்
அளித்தன இவையாம்' என்னக்
கேட்கும் மென் மழலைச் சொல் ஓர்
கிஞ்சுகம் கிடந்த வாயாள்,
தாள் கருங்குவளை தோய்ந்த
தண் நறைச் சாடியுள் தன்
வாள் கணின் நிழலைக் கண்டாள்,
'வண்டு' என ஓச்சுகின்றாள்.

பொ :—யாழின் ஓசைக்கும், குழலின் இசைக்கும் இனிமை தந்தன இவையாம் என்று சொல்லும் வண்ணம் செவி மடுக்கத் தக்க மெல்லிய மழலைச் சொற்களையுடைய முருக்கம்பூப்போலும் சிவந்த வாயையுடையாள் ஒருத்தி, தண்டோடு கூடிய கருங் குவளைப்பூக் கிடக்கின்ற குளிர்ந்த கட்பானையுள் தன் ஒளி பொருந்திய கண்ணின் நிழலைக் கண்டாள். வண்டு மொய்க்கின்றது என எண்ணி ஓட்டுகிறாள்.

கு :—கட்சாடியுள் நறுமணத்திற்காகத் தாமரை, குவளை முதலிய நீர்ப்பூக்களை யிட்டு வைத்தல் மரபு. (13)

ஒருத்தி கள்ளினுள் தோன்றுவது கலைமதி என்று எண்ணி இனியன கூறல்

1060. களித்தகண் மதர்ப்ப வாங்கோர்
கனங்குழை கள்ளி னுள்ளால்
வெளிப்படு கின்ற காட்சி
வெண்மதி நிழலை நோக்கி

அளித்தனெ னபயம் வானத்
தரவினை யஞ்சி நீவந்
தொளித்தனை யஞ்ச லென்றாங்
கினியன உணர்த்து கின்றாள்.

களித்த கண் மதர்ப்ப, ஆங்கு ஓர்
கனங்குழை, கள்ளின் உள்ளால்
வெளிப்படுகின்ற காட்சி
வெண்மதி நிழலை நோக்கி.
'அளித்தனென் அபயம்: வானத்து
அரவினை அஞ்சி நீ வந்து
ஒளித்தனை, அஞ்சல்!' என்று ஆங்கு
இனியன உணர்த்துகின்றாள்.

பொ :—அவ்விடத்து கனவிய குழையையுடையா ளொருத்தி, கள்ளினுள்ளே ஆகாயத்தின்கண் காணப்படுகின்ற, அழகினை உடைய வெண்மதியின் நிழலைக் கள்ளுண்டு மதர்த்த கண்கள் களிக்கும்படி நோக்கி '(சந்திரனே!) நீ வானத்தின்கண் உலாவுகின்ற இராகுவாகிய பாம்பிற்குப் பயந்து இங்கு வந்து ஒளித்திருக்கின்றாய். அபயம் தந்தேன்; அஞ்சாதே' என்று இனிமையான சொற்களைச் சொல்லுகின்றாள்.

கு:—ஒருத்தி கண் மயக்கத்தால், கட்சாடியுள் தோன்றும் மதியின் நிழலைப் பார்த்து இராகுவுக்கு அஞ்சி வந்ததாக எண்ணி அபயம் தந்து ஆதரவு அளிக்கின்றாள் என்பது கருத்து. (14)

ஒருத்தி நிலாவைக் கள்ளென்று கிண்ணத்தில் ஏற்றல்

1061. அழிகின்ற வறிவி னாலோ
பேதைமை யாலோ வாற்றிற்
சுழியொன்றி நின்ற தன்ன
வுந்தியா ளுய செங்தேன்
பொழிகின்ற பூவின் வேய்ந்த
பந்தரைப் புரைத்துக் கீழ்வந்
திழிகின்ற கொழுநி லாவை
நறவென வள்ளத் தேற்றாள்.

**அழிகின்ற அறிவினாலோ, பேதைமையாலோ, ஆற்றிற்**
**சுழி ஒன்றி நின்றது அன்ன உந்தியாள், தூய செந்தேன்**
**பொழிகின்ற பூவின் வேய்ந்த பந்தரைப் புரைத்துக், கீழ் வந்து**
**இழிகின்ற கொழு நிலாவை, நறவு என வள்ளத்து ஏற்றாள்.**

பொ :—ஆற்று நீரில் தோன்றுகின்ற நீர்ச்சுழியானது ஓரிடத்துப் பொருந்திநின்றாலொத்த உந்தியை உடையவளாகிய ஒருத்தி, நல்ல செந்நிறமான தேனைப் பொழிகின்ற பூக்களால் வேய்ந்த பந்தலைத் துளைத்துக்கொண்டு கீழே இறங்குகின்ற, வளம் பொருந்திய நிலாவைக் கள்ளுண்டு அழிகின்ற அறிவாலோ பேதைமைக் குணத்தாலோ கள்ளென்று மயங்கிக் கிண்ணத்தில் ஏற்றாள்.

கு:—ஒருத்தி மலர்ப்பந்தலின் கீழே புரைகளின் வழியாக, விழுகின்ற நிலவைக் கள்ளென்று மயங்கிக் கிண்ணத்தில் ஏற்றாள் என்பதாம். (15)

## காரிகையொருத்தி களியால் தடுமாறல்

**1062.** மின்னென நுடங்கு கின்ற
மருங்குலா ளொருத்தி வெள்ளை
இன்னமிழ் தனைய தீஞ்சொ
லிடைதடு மாறி யென்ன
வன்னமே கலையை நீக்கி
மலர்த்தொடை யல்குல் சூழ்ந்தாள்
பொன்னரி மாலை கொண்டு
புரிகுழல் புனைய லுற்றாள்.

**மின் என நுடங்குகின்ற மருங்குலாள் ஒருத்தி, வெள்ளை**
**இன் அமிழ்து அனைய தீஞ்சொல் இடை தடுமாறி என்ன**
**வன்ன மேகலையை நீக்கி மலர்த் தொடை அல்குல் சூழ்ந்தாள்,**
**பொன்னரிமாலை கொண்டு புரி குழல் புனையல் உற்றாள்.**

பொ :—மின்னலைப்போல அசைகின்ற இடையையுடைய ஒரு பெண், வெண்மைநிறமான கள்ளால் இனிய அமுதத்தை ஒத்த இனிய சொல்லும் இடையில் தடுமாறினாற்போல, தனது இடையிலே அணிந்திருந்த அழகிய மேகலையை நீக்கிவிட்டுப் பூமாலையை அணிந்தாள்; பொன்னாலாகிய சதங்கை மாலையைக் கொண்டு, பின்னப்பட்ட கூந்தலை அலங்கரித்தாள்.

கு :—தன்னுடைய சொல் தடுமாறியதுபோல, செயலும் தடுமாறினுள் என்பார், மேகலையை நீக்கி மலர்த்தொடை சூழ்ந்தாள், பொன்னரிமாலை கொண்டு புரிகுழல் புனையலுற்ருள் என்ருர். தலைக்கிடுவன அரைக்கிட்டும் அரைக்கிடுவன தலைக்கிட்டும் தடுமாறினுள் என்க. வெள்ளை – கள். பண்பாகுபெயர். 'பொன்னரி ஆடைகொண்டு, எனப் பாடமோதிப் பொற்சரிகையாடையைத் தலைக்கு அணிந்து என்று பொருளுரைப்பாரும் உளர், (16)

ஒருத்தி மதுவின்கண் தோன்றும் தன் முகத்தை
மதியென மயங்கல்

**1063.** கண்மணி வள்ளத் துள்ளே
களிக்குந்தன் முகத்தை நோக்கி
விண்மதி மதுவி னுசை
வீழ்ந்ததென் ருெருத்தி யுன்னி
உண்மகிழ் துணைவ னேடு
மூடுநாள் வெம்மை நீங்கித்
தண்மதி யாதி யாகில்
தருவெனிந் நறவை யென்ருள்.

கள் மணி வள்ளத்துள்ளே
களிக்கும் தன் முகத்தை நோக்கி,
விண் மதி மதுவின் ஆசை
வீழ்ந்தது என்று, ஒருத்தி உன்னி,
'உள் மகிழ் துணைவனேடும்
ஊடும் நாள் வெம்மை நீங்கித்
தண் மதி ஆதியாகில்
தருவென் இந் நறவை' என்ருள்.

பொ :—ஒருத்தி, அழகிய வள்ளத்துள் இருக்கும் கள்ளில், களிப்போடு கூடிய தன் முகத்தைப் பார்த்து வானின்கண் உள்ள மதியானது கள்ளாசையால் கிண்ணத்துள் வீழ்ந்தது என்று எண்ணி, 'மனமகிழ்ச்சியோடு கூடிய என் கணவனேடு நான் ஊடுகின்ற காலத்து நீ வெப்பம் நீங்கிக் குளிர்மதியாவையானல் இக்கள்ளைத் தருவேன்' என்ருள்.

கு :—கட் கிண்ணத்திலே தோன்றுகின்ற தன் முகத்தைக் கள்ளாசையால் கிண்ணத்துள் விழுந்துகிடக்கின்ற மதி என்று

மயங்கி நாங்கள் ஊடிய காலத்திலும் தண்மதியாய் இருப்பா யானல் இக்கள்ளை நீ குடிக்கத் தருவேன். (இல்லையானல் நான் விரைந்து குடித்து விடுவேன்) என்பது தோன்றக் கூறினள். கட்கிண்ணத்துள் தோன்றும் முகநிழலை மதியென மயங்குதல் ''அழல் நிறத் தேறலுள் மதிகண்டு'' (சீவகசிந்தா. 2677) என்பதனலும் அறியலாம். (17)

### ஒரு மடந்தை, மயக்கத்தால் வெறும் கிண்ணத்தை வாயில் வைத்துக் கொள்ளுதல்

**1064.** எள்ளொத்த கோல மூக்கி
னேந்திழை யொருத்தி முன்கை
தள்ளத்தண் ணறவை யெல்லாந்
தவிசிடை யுகுத்துந் தேருள்
உள்ளத்தின் மயக்கந் தன்ன
லுட்புறத் துண்டென் றெண்ணி
வள்ளத்தை மறித்து வாங்கி
மணிநிற விதழின் வைத்தாள்.

எள் ஒத்த கோல மூக்கின்
ஏந்திழை ஒருத்தி, முன்கை
தள்ளத் தண் நறவை எல்லாம்
தவிசு இடை உகுத்தும் தேருள்,
உள்ளத்தின் மயக்கம் தன்னல்
உட்புறத்து உண்டு என்று எண்ணி,
வள்ளத்தை மறித்து வாங்கி,
மணி நிற இதழின் வைத்தாள்.

பொ:—எள்ளுப்பூவையொத்த அழகிய மூக்கையும் பூண்ட அணிகலன்களையும் உடைய ஒருத்தி, முன்கை நடுங்குவதால் குளிர்ந்த கள் அனைத்தையும் இருக்கையில் சிந்திவிட்டும் தெளியாத வளாய் மனமயக்கத்தால் கிண்ணத்துள் கள் இருக்கிறது என்று எண்ணிக் கிண்ணத்தைத் திருப்பியெடுத்து செந்நிறமான உதட்டில் வைத்துக்கொண்டாள்.

கு:—முன்கை தள்ள - மதுவுண்டமயக்கால் முன்கை நடுங்க. வள்ளத்தை மறித்து வாங்கி – கிண்ணத்தைத் தலைகீழாக வாங்கி. (18)

### ஒருத்தி மலரின் நாளத்தால் மதுப்பருகுதல்

**1065.** வான்றனைப் பிரித லாற்ரு
வண்டினம் வச்சை மாக்கள்
ஏன்றவர் நிதியம் வேட்ட
விரவல ரென்ன வார்ப்பத்
தேன்தரு கமலச் செவ்வாய்
திறந்தன ணுகர நாணி
ஊன்றிய கழுநீர் நாளத்
தாளினு லொருத்தி யுண்டாள்.

வான்தனைப் பிரிதல் ஆற்ரு
வண்டு இனம், வச்சை மாக்கள்
ஏன்று அவர் நிதியம் வேட்ட
இரவலர் என்ன, ஆர்ப்ப,
தேன் தரு கமலச் செவ்வாய்
திறந்தனள் நுகர நாணி,
ஊன்றிய கழுநீர் நாளத்
தாளினுல் ஒருத்தி உண்டாள்.

பொ :—வானத்தைப் பிரியாத வண்டுக் கூட்டங்கள் உலோபி களைப் பொருந்தி அவர் செல்வத்தை விரும்பிய இரவலர்போல் ஆரவாரிக்க, தேன் பொருந்திய செந்தாமரைமலர்போன்ற சிவந்த வாயைத் திறந்து குடிக்க வெட்கிச் சாடியில் ஊன்றிய செங்கழுநீர்த் தண்டினுல் ஒருத்தி கள்ளுண்டாள்.

கு :—வெற்றிடமாகிய வானத்தைப் பிரியாத வண்டுக் கூட்டங்கள், தேனேடு கூடிய கமலச் செவ்வாயைத் திறந்தால் இதில் வந்து மொய்த்துவிடும் என்று அஞ்சிக் குவிந்த வாய் திறக் காமலே குடித்தாள் என்ருர். (19)

### ஒருத்தி கள்ளைக் கணவன் உண்ணுன் எனக் கருதித் தானும் உண்ணுமை

**1066.** புள்ளுறை கமல வாவிப்
பொருகயல் வெருவி யோட
வள்ளுறை கழித்த வாள்போல்
வரியுற வயங்கு கண்ணுள்

கள்ளுறை மலர்மென் கூந்தற்
களியிள மஞ்ஞை யன்னாள்
உள்ளுறை யன்ப னுண்ணா
னெனநற வுண்ண லெண்ணாள்.

புள் உறை கமல வாவிப் பொரு கயல் வெருவி ஓட,
வள் உறை கழித்த வாள்போல் வரி உற வயங்கு கண்ணாள்,
கள் உறை மலர் மென் கூந்தல் களி இள மஞ்ஞை அன்னாள்,
உள் உறை அன்பன் உண்ணான் என நறவு உண்ணல் எண்ணாள்.

பொ :—பறவைகள் உறைகின்ற தாமரைகளோடு கூடிய குளத்திலே, ஒன்றையொன்று தாக்கும் கயல்மீன்கள் அஞ்சி ஓடச் செறிந்த உறையிலிருந்து கழிக்கப்பட்ட வாளைப்போலச் செவ்வரி பரந்து விளங்குகின்ற கண்களையுடையவளும், கள்ளோடு கூடிய பூக்களை அணிந்த மெல்லிய கூந்தலையுடைய களிப்போடு கூடிய இளமயிலை ஒத்தவளுமாகிய ஒருத்தி, மனத்துள் உறைகின்ற மணவாளன், உண்ணமாட்டான் என்று எண்ணித் தானும் கட்குடித்தலைக் கருதாளாயினள்.

கு :—கணவன் ஒழுக்கத்திற்கு இடையூறுகாத காரிகையிவள் என்பது உணர்த்தியவாறு. (20)

### மதுப்பருகிய மாதொருத்தியின் நிலை

1067. கூற்றுறழ் நயனங்கள் சிவப்பக் கூனுதல்
★ ஏற்றிவா ளெயிறுக ளதுக்கி யின்றளிர்
மாற்றருங் கரதல மறிக்கு மாதொரு
சீற்றமா மபிநயந் தெரிக்கின் றாரினே.

கூற்று உறழ் நயனங்கள் சிவப்பக், கூன் நுதல்
ஏற்றி, வாள் எயிறுகள் அதுக்கி, இன் தளிர்
மாற்று அரும் கரதலம் மறிக்கும் மாது ஒரு
சீற்றம் ஆம் அபிநயம் தெரிக்கின்றாரினே.

பொ :—ஒரு பெண் வெகுளியாகிய அபிநயத்தை அறிவிக்கின்றவள்போல, இயமனையொத்த கண்கள் சிவப்பப், புருவங்களை நெற்றியில் வளைவுபடும்படி ஏற்றியும், கூரிய பற்களைக் கடித்தும், இனிய தளிரின் செம்மையை மாற்றிய அருமையான கைகளை மறித்து நிற்பாள்.

கு:—ஆடவர்க்கு நோக்கால் நோய் செய்தலின் கூற்றுறழ் நயனங்கள் என்றார். (21)

மாதொருத்தி மதுவுண்டு வியர்த்துநிற்றல்

1068. துடித்தவான் றுவரிதழ்த்
தொண்டைத் தூநிலாக்
கடித்தவா லெயிறுக
ளதுக்கிக் கண்களாம்
வடித்தவெங் குருதிவேல்
விழிக்கு மாதர்மெய்
பொடித்தவேர் புறத்துகு
நறவம் போன்றதே.

துடித்த வான் துவர் இதழ்த் தொண்டைத் தூ நிலாக்
கடித்த வால் எயிறுகள் அதுக்கிக், கண்களாம்
வடித்த வெம் குருதி வேல் விழிக்கும் மாதர் மெய்
பொடித்த வேர் புறத்து உகு நறவம் போன்றதே.

பொ:—துடித்த பெரிய செவ்விய இதழாகிற தொண்டைக் கனியைத் தூய்மையான வெண்ணிலாவை வெருட்டிய வெண்பற்களால் கடித்துக்கொண்டு கூர்மையாக்கப்பட்ட கொடிய இரத்தந் தோய்ந்த வேலாகிய விழிகளால் (சினந்து) விழிக்கின்ற ஒரு பெண்ணின் உடலில் உண்டான வியர்வை, வெளியில் சிந்துகின்ற கள்ளைப்போன்றது.

கு:—கடிந்த என்பது எதுகை நோக்கிக் கடித்த என நின்றது வலித்தல் விகாரம். குடித்த கள் உள்நிரம்பி இடமின்மையால் மெய்யின் புறத்தும் கசிவதுபோல வியர்த்தது என்பதாம். (22)

ஒருத்திக்கு மதுவுண்டதால், புருவம் வளைதலும் நெற்றியில் வியர்வை உண்டாதலும்

1069. கனித்திர ளிதழ்பொழி
செம்மை கண்புக
நினைப்பதொன் றுரைப்பதொன்
றுமொர் நேரிழை

தனித்தட மரைமலர்
முகத்துச் சாபமும்
குனித்தது பனித்தது
குழவித் திங்களே.

கனித் திரள் இதழ் பொழி செம்மை கண் புக,
நினைப்பது ஒன்று உரைப்பது ஒன்று ஆம் ஓர் நேரிழை,
தனித் தட மரை மலர் முகத்துச் சாபமும்
குனித்தது, பனித்தது குழவித் திங்களே.

பொ :—(கொவ்வைக்) கனிபோன்ற திரண்ட உதடானது பொழிகின்ற, செந்நிறம் கண்களிற் சென்று அடைக்கலம்புக, நினைப்பது ஒன்றும் சொல்வது (பிறிது) ஒன்றுமாக இருக்கிற ஒரு பெண்ணின் ஒப்பற்ற - குளத்திலுள்ள – தாமரைமலர் போன்ற முகத்தின்கண் உள்ள வில்போன்ற புருவமும் வளைந்தது பிறைமதி போன்ற நெற்றியில் குறுவியர் பொடித்தது.

கு:—ஒருத்தி மதுவுண்டதால் கண் சிவக்க, உரை தடுமாறிப் புருவம் வளைய நெற்றி வியர்க்க, இருந்தனள் என்பதாம். (23)

## கணவரும்-கள்ளும் ஒத்த எனல்

1070. இலவிதழ்த் துவர்விட வெயிறு தேனுக
முலைமிசைக் கச்சொடு கலையு மூட்டற
அலைகுழல் சோர்தர வசதி யாட்டலால்
கலவிசெய் கொழுநருங் கள்ளு மொத்தவே.

இலவு இதழ்த் துவர் விட, எயிறு தேன் உக,
முலை மிசைக் கச்சொடு கலையும் மூட்டு அற,
அலை குழல் சோர்தர, அசதி ஆட்டலால்,
கலவி செய் கொழுநரும் கள்ளும் ஒத்தவே.

பொ:—இலவம்பூப் போலும் சிவந்த உதடுகளின் செம்மை நிறம் நீங்கவும், எயிறுகளிலிருந்து தேன் சிந்தவும், முலைகளின்மேல் அணிந்துள்ள கச்சோடு, ஆடையும் கட்டுதல் அவிழவும், அசைகின்ற கூந்தல் அவிழ்ந்து சோரவும், நகைச்சிரிப்பைத் தோற்றுவித்தலால், மாதரைப் புணர்கின்ற மணாளர்களும், கள்ளும் தம்முள் ஒத்தன.

கு :—உதடு வெளுத்தலும், பல்லடியினின்று இனிய சுவைநீர் சுரத்தலும், ஆடையும் கச்சும் அவிழ்தலும், மயிர் குலைதலும், நகுதலும் கள் குடித்தாரியல்பு. இவைகளே கொழுநரோடு கூடும் போது மகளிர்க்கு உண்டாவனவாம் என்க.

அசதியாடுதல் - பரிகசித்தல். "ஒறுக்கப்படுவார் இவர் என் றங்கசதியாடி" (சிவகசிந்தா. 1871) என வருமாற்றானும் அறிக. (24)

## காரிகையொருத்தி தன் காதலனிடம் தோழியைத் தூதனுப்புதல்

**1071.** கனைகழற் காமனாற்
கலக்க முற்றதை
அனகனுக் கறிவியென்
றறியப் போக்குமோர்
இனமணிக் கலையினா
டோழி நீயுமென்
மனமெனத் தாழ்த்தியோ
வருதி யோவென்றாள்.

கனைகழல் காமனால் கலக்கம் உற்றதை
அனகனுக்கு அறிவி, என்று அறியப் போக்கும் ஓர்
இன மணிக் கலையினாள், 'தோழி! நீயும், என்
மனம் எனத் தாழ்த்தியோ? வருதியோ?' என்றாள்.

பொ :—ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த மன்மதனால், யான் கலங்கியதைக், குற்றமற்றவராகிய என் கணவருக்கு அறிவி என்று, தன் கணவன் தெரிந்துகொள்ளத் தூதனுப்புகின்ற,- கூட்டமாகிய மணிகளாலான மேகலையையுடைய பெண்ணொருத்தி, தோழியே! நீயும் என் மனத்தைத் போலத் தாமதிப்பாயோ ; அன்றி விரைந்து வருவாயோ !! என்று வினவினாள்.

கு:—உண்டு களித்திருக்கும் இந்நேரத்திற் கணவன் என் பக்கல் இல்லாமையால் நான் மதனனாற் கலக்கமுற்றிருக்கிறேன். தோழி நீ விரைந்து சென்று உணர்த்தி வருவாயோ! அன்றி என் மனம்போல அங்கேயே தங்கி விடுவாயோ சொல் என்றாள் என்க. (25)

## தோழியரைத் தூதனுப்பியவள் தானே காதலனிடம் தனித்துச் சேர்தல்

**1072.** மானமர் நோக்கியோர் மதுகை வேந்தன்பால்
ஆனதன் பாங்கிய ராயி னுரெலாம்
போனவர் போனவர் தொடரப் போக்கினுள்
தானுமங் கவர்பினே தமிய ளேகினுள்.

மான் அமர் நோக்கி, ஓர் மதுகை வேந்தன்பால்,
ஆன தன் பாங்கியர் ஆயினுர் எலாம்
போனவர் போனவர்; தொடரப் போக்கினுள்;
தானும், அங்கு அவர் பினே, தமியள் ஏகினுள்.

பொ :—மான் கண்ணை ஒத்த (மருண்ட) நோக்கையுடையவள் ஒருத்தி, ஒரு வீரம் பொருந்திய வேந்தன்பால், தன்பால் உள்ள தோழியர் ஆயினுர் அனைவரையும் தூதாக அனுப்பினுள். அங்ஙனம் போனவர்கள் போனவர்களாகப், பின்னும் தொடர்ந்து அனுப்பினுள். அவர்கட்குப் பின் தானும் தனித்துச் சென்றுள்.

கு :—பின் அனுப்புவார் யாரும் இன்மையால், தானே தமியளாய்ச் சென்றுள் என்பதாம். (26)

## ஒருத்தி கணவன்பேர் சொல்லும் கிளியைப் புல்லுதல்

**1073.** விரைசெய்பூஞ் சேக்கையி
னடுத்த மீமிசைக்
கரைசெயா வாசையங்
கடலு ளாளொரு
பிரைசமென் குதலையாள்
கொழுநன் பேரெலாம்
உரைசெயுங் கிள்ளையை
உவந்து புல்லினுள்.

விரை செய் பூஞ் சேக்கையின் அடுத்த மீமிசைக்
கரை செயா ஆசை அம் கடலுளாள், ஒரு
பிரைசம் என் குதலையாள், கொழுநன் பேர் எலாம்
உரைசெயும் கிள்ளையை உவந்து புல்லினுள்.

பொ :—மணம் வீசுகின்ற பூக்களாலாகிய படுக்கையிற் பொருந்தியவளும், மேன்மேலும் வரம்புகட்ட இயலாத ஆசைக் கடலுள் ஆழ்ந்தவளும், ஒப்பற்ற தேன்போன்ற குதலைச்சொற் களையுடையவளும் ஆகிய ஒருத்தி தன் கணவன் பெயர் எல்லா வற்றையும் சொல்லும் கிளியை மகிழ்ந்து தழுவினள்.

கு :—கணவன்மேற்கொண்ட எல்லைகடந்த காதலால் அவன் பேரைச் சொல்லும் கிளியைத் தழுவினள் என்பதாம். (27)

## காதலாள் ஒருத்தி கிளியைக் கடிதல்

1074. மன்றனா றொருசிறை
யிருந்தோர் வாணுதல்
தன்றுணைக் கிள்ளையைத்
தழீஇயென் னாவியை
இன்றுபோய்க் கொணர்கிலை
யென்செய் வாயெனக்
கன்றிலோ டொத்தியென்
றழுது சீறினள்.

மன்றல் நாறு ஒருசிறை இருந்து, ஓர் வாள் நுதல்,
தன் துணைக் கிள்ளையைத் தழீஇ, 'என் ஆவியை
இன்று போய்க் கொணர்கிலை; என்செய்வாய் எனக்கு ?
அன்றிலோடு ஒத்தி' என்று, அழுது, சீறினள்.

பொ:—மணம் வீசுகின்ற ஒரு பக்கத்து இருந்து, ஒளி பொருந் திய நெற்றியையுடையாள் ஒருத்தி, தனது துணையான கிளியைத் தழுவிக்கொண்டு 'கிளியே! நீ என் உயிர்போன்றவராகிய கணவரை இன்றுபோய் உடனே அழைத்துவந்தாயல்லை. எனக்கு என்ன உதவி செய்வாய்? நீயும் அன்றிலோடு ஒத்திருக்கிறாய்." என்று அழுது கோபித்தாள்.

கு :—ஆவி – ஆவியொத்த கணவன். அன்றில், இரவு முழுதும் அரற்றிக்கொண்டே இருந்து என்போலப் பிரிந்தார்க்கு இடுக் கண்ணே விளைக்கும். அதுபோல நீயும் என் காதலரை அழைத்து வராது, அவர் பெயரை அடுத்தடுத்துக் கூறி என்னை வருத்துகின் றாய்? எனக் கிள்ளையைச் சினந்தாள். இச்சினம் அழுகையடி யாகப் பிறந்த வெகுளி. (28)

## கணவன் இளையாள்பெயரைச் சொல்லி மூத்தாளை அழைக்க அவள் வருந்துதல்

**1075.** வளைபயின் முன்கையோர் மயில னுடனக்
கிளையவள் பெயரினைக் கொழுந னீதலும்
முளையெயி றிலங்கிட முறுவல் வந்தது
களகள வுதிர்ந்தது கயற்க ணாலியே.

**வளை பயில் முன்கை ஓர் மயில் அனாள், தனக்கு**
**இளையவள் பெயரினைக் கொழுநன் ஈதலும்,**
**முளை எயிறு இலங்கிட முறுவல் வந்தது;**
**களகள உதிர்ந்தது கயல் கண் ஆலியே.**

பொ;—வளை பயிலுகின்ற முன்கையையுடைய மயிலை ஒத்த சாயலாள் ஒருத்தி, கணவன் (மறதியால்) தனக்கு இளையவள் பெயரையிட்டு அழைத்தலும், அவளுக்கு முளையொத்த பற்கள் விளங்கச் சிரிப்பு வந்தது. கயல்மீன் போன்ற கண்களிலிருந்து நீர்த் துளிகள் களகளவென உதிர்ந்தன.

கு :—கணவன் இளையாள்மீது கரந்து வைத்திருந்த காதல் வெளிப்பட்டதனுல் நகையும், அவன் மற்ருெருத்திபால் அன்பு கொண்டமை வெளிப்பட்டமையால் அழுகையும் ஒருசேர விளைந்தன என்பதாம். (29)

## ஒருவன் மனைவி ஊடலைத் தீர்க்க முயலுதல்

**1076.** செற்றமுன் புரிந்ததோர்
செம்மல் வெம்மையாற்
பற்றலு மல்குலிற்
பரந்த மேகலை
அற்றுகு முத்தின்முன்
னவனி சேர்ந்தன
பொற்ருெடி யொருத்திகண்
பொழிந்த முத்தமே.

**செற்றம் முன் புரிந்தது ஓர் செம்மல், வெம்மையாற்**
**பற்றலும் அல்குலில் பரந்த மேகலை**
**அற்று உகும் முத்தின்முன் அவனி சேர்ந்தன,**
**பொற்ருெடி ஒருத்தி கண் பொழிந்த முத்தமே.**

பொ :—பொன்னாலாகிய வளைகளை அணிந்த ஒருத்தி எதிரே ஊடலாற் சினந்துநின்றதை அறிந்த ஒரு தலைவன், (அவள் ஊடலைத் தீர்க்கும்பொருட்டு) விருப்பத்தோடு அவள் இடையில் பரந்துகிடக்கின்ற மேகலை யென்னும் அணியைப் பற்றலும், அறுந்து உதிருகின்ற முத்துக்களுக்குமுன்னே, அவள் கண்கள் பொழிந்த முத்துப்போன்ற நீர்த்துளிகள் நிலத்தைச் சேர்ந்தன. (30)

ஒருத்தி யாதுசெய்வேன் என அயர்தல்

1077. தோடவிழ் கூந்தலா ளொருத்தி தோன்றலோ
டூடுகெ னோவுயி ருருகு நோய்கெடக்
கூடுகெ னோவவன் குணங்கள் வீணையில்
பாடுகெ னோவெனப் பலவும் பன்னினாள்.

தோடு அவிழ் கூந்தலாள் ஒருத்தி ‘தோன்றலோடு
ஊடுகெனோ ? உயிர் உருகும் நோய் கெடக்
கூடுகெனோ ? அவன் குணங்கள் வீணையில்
பாடுகெனோ ?’ எனப் பலவும் பன்னினாள்.

பொ :—இதழ் விரிந்த பூக்களையணிந்த கூந்தலை உடையாளாகிய ஒரு பெண் தன் கணவனோடு ஊடுவேனோ; அல்லது உயிரை உருகச்செய்யும் பிரிவுத்துன்பம் அகலக் கூடுவேனோ; அவன் குணங்களை வீணையில் அமைத்துப் பாடுவேனோ என்று பலவும் கூறினாள். (31)

ஒருத்தி ஊடலைப் பாடிக் குறிப்பித்தது

1078. மாடகம் பற்றினண்
மகர வீணைதன்
தோடவிழ் மலர்க்கரம்
சிவப்பத் தொட்டனள்
பாடின ளொருத்திதன்
பாங்கு ளார்களோ
டூடின துரைசெயா
ளுள்ளத் துள்ளதே.

மாடகம் பற்றினள்; மகரவீணை தன்
தோடு அவிழ் மலர்க் கரம் சிவப்பத் தொட்டனள்;
பாடினள் ஒருத்தி, தன் பாங்கு உளார்களோடு
ஊடினது உரைசெயாள், உள்ளத்து உள்ளதே.

பொ:—ஒருத்தி தான் தன் கணவனோடு ஊடுதற்குக் காரணத்தைத் தன் பாங்கிமார்க்கு உரைசெய்யாதவளாய், மகர யாழின் முறுக்காணியைப்பற்றி இதழ்விரிந்த மலர் போன்ற கை சிவக்க, மீட்டினாள்; மனத்திலுள்ள கருத்து அமையப் பாடினாள்.

கு:—தலைவி தலைவனது குற்றத்தைப் பாங்கியர்க்கு எடுத்துரைத்தலும், பாங்கியர் தலைவிமீது வைத்த பேரன்பு காரணமாகத் தலைமகனை இகழ்ந்துரைக்க வாயாதலும், தக்கதன்று ஆகையாலும், தலைவனுக்கு ஊடலுணர்த்துதல் இன்றியமையாததாகலானும், பாங்கியரைத் தாமே உணரச் செய்யப் பாடினாள் என்பதாம். (32)

### ஒருத்தி கூடற்சுழி இழைத்தல்

**1079.** குழைத்தபூங் கொம்பனாள்
ஒருத்தி கூடலை
இழைத்தன ளதுவவ
ளிட்ட போதெலாம்
பிழைத்தலு மனங்கவேள்
பிழைப்பி லம்பொடும்
உழைத்தன ளுயிர்த்தன
ளுயிருண் டென்னவே.

குழைத்த பூங்கொம்பு அனாள் ஒருத்தி கூடலை
இழைத்தனள்; அது அவள் இட்ட போது எலாம்
பிழைத்தலும், அனங்கவேள் பிழைப்பு இல் அம்பொடும்
உழைத்தனள்; உயிர்த்தனள் உயிருண்டு என்னவே.

பொ:—தளிர்த்த பூங்கொம்பை யொத்த ஒருத்தி கூடற் சுழியிட்டாள். அது, அவள் இட்ட போதெல்லாம் தவறிப்போதலும், மன்மதனுடைய குறி தவறாத அம்போடும் வருந்தினள். உயிர் உண்டு என்று சொல்லும்படி பெருமூச்சுவிட்டாள்.

கு:—கூடற்சுழியிடுதலாவது தலைவனைப் பிரிந்த மகளிர் தலைவனோடு கூடுதல் நிகழுமா என அறிந்துகொள்ளக் கண்ணை மூடிக்

கொண்டு மணலிற் சுழியிடுவது. சுழி இருதலையும் கூடுமாயின் தலைவனொடு கூட்டம் நிகழும் என்றும், பிரியின் தலைவனொடு கூட்டம் நிகழாது என்றும் கொள்வர். இது ஆழி எனவும் வழங்கும், சிவகசிந்தாமணியில், ''செருவேலான், பொன்ளுங் கணியகலம் புல்லப் பொருந்துமேல், குன்ளுது கூடுகெனக் கூறி முத்த வார்மணன்மேல், அன்ளுங் கணியிழையாள் ஆழி யிழைத் தாளே'' (1037) என வருதலும் காண்க,

தெள்ளியார் பலர் கைதொழும் தேவனார்
வள்ளல் மாலிருஞ்சோலை மணாளனார்
பள்ளி கொள்ளுமிடத் தடிகொட்டிடக்
கொள்ளு மாகில்நீ கூடிடு கூடலே.

(திவ். நாச்சியார் திருமொழி-4-1.) என வரும் பாசுரத்தாலும் அறியலாம். (33)

## தூதுபோக்கிய ஒருத்தி கணவன் வரக் கதவடைத்தது

1080. பந்தணி விரலிஞ
ளொருத்தி பையுளாள்
சுந்தர ஞெருவன்பாற்
றூது போக்கினுள்
வந்தன னெனக்கடை
யடைத்து மாற்றினுள்
சிந்தனை தெரிந்திலஞ்
சிவந்த நாட்டமே.

பந்து அணி விரலினள் ஒருத்தி பையுளாள்
சுந்தரன் ஒருவன்பால் தூது போக்கினள்;
வந்தனன் எனக் கடை அடைத்து மாற்றினள்
சிந்தனை தெரிந்திலம் சிவந்த நாட்டமே.

பொ:—பந்தை அழகு செய்கின்ற விரலை உடையவளாகிய ஒருத்தி பிரிவுத்துன்பம் பெரிதும் உடையவளாய், அழகனாகிய தன் கணவனிடத்துத் தன் தோழியைத் தூதனுப்பினாள்; அவன் வந்தானாகக் கதவைத் தாழிட்டுத் தடுத்தாள்; கண்கள் சிவந்தன; அவள் கருத்து யாதென்று அறிந்திலேம்.

கு:—தன் கணவன் காதன்மிகுதியால் தானே வராது. தூது அனுப்பி வந்த குற்றத்திற்காகக் கதவடைத்தாள், உண்மைக்

காதல் இல்லையென்று வருந்திக் கண் சிவந்தாள், என்று புலவீ நுணுக்கம் புலப்படுத்தியவாறு. (34)

ஒருத்தி, கூடல்விருப்பைக் குறிப்பான் உணர்த்தல்

1081. உய்த்தபூம் பள்ளியி
னூட னீங்குவான்
சித்தமுண் டொருத்திக்க
தன்பன் றேர்கிலான்
பொய்த்ததோர் மூரியா
னிமிர்ந்து போக்குவாள்
எத்தனை யிறந்தன
கடிகை யீண்டென்றாள்.

**உய்த்த பூம் பள்ளியின் ஊடல் நீங்குவான்**
**சித்தம் உண்டு ஒருத்திக்கு அது அன்பன் தேர்கிலான்**
**பொய்த்தது ஓர் மூரியால் நிமிர்ந்து போக்குவாள்**
**எத்தனை இறந்தன கடிகை ஈண்டு என்றாள்.**

பொ:—இடப்பட்ட, மலர்ப் படுக்கையில் உள்ள ஒரு பெண்ணுக்கு ஊடல் நீங்க எண்ணம் உண்டு; அதனை அவள் கணவன் அறியான்; அவள் பொய்யான சோம்பல் முறித்தலால் நிமிர்ந்து ஊடலைப் போக்குவாளாக, இங்கு எவ்வளவு நாழிகை ஆயிற்று என்றாள்.

கு:—ஒருத்தி ஊடல் நீங்கிக் கணவனைக் கூடவேண்டுமென்ற விருப்போடு மலர்ப்படுக்கையில் பொய்யுறக்கம் கொள்ளுகிறாள். அதனைக் கணவன் அறியானாய் அவள் அருகில் தீண்ட அஞ்சி நிற்கிறான். அவள் பொய்யுறக்கத்தால் சோம்பல் முறிப்பாள் போலத் தீண்டியும், பேசியும் குறிப்பித்தாள். (35)

ஒருவன் ஊடற்காலத்து உதையால் மயிர் சிலிர்த்தல்

1082. விதைத்தமென் காதலின்
வித்து மெய்ந்நிறை
இதைப்புன னனைத்திட
முளைத்த வேயெனப்

பதைத்தன ளொருத்தன்மே
லொருத்தி பஞ்சடி
உதைத்தலும் பொடித்தன
வுரோம ராசியே.

விதைத்த மென் காதலின் வித்து மெய்ந் நிறை
இதைப் புனல் நனைத்திட முளைத்தவே எனப்
பதைத்தனள் ஒருத்தன்மேல் ஒருத்தி பஞ்சடி
உதைத்தலும் பொடித்தன உரோமராசியே.

பொ:—ஒருத்தி (ஊடற்காலத்துக் கணவன் தீண்டப்) பதை பதைத்தவளாய்க் கணவன்மேல் செம்பஞ்சுக்குழம்பு பூசிய அடியால் உதைத்தலும் ஊடலுக்குக் காரணமாகிய எருநிறைந்த உடம்பாகிய கொல்லையில் காதலியின் கால்தீண்டிய இன்பமாகிய தண்ணீர் நனைக்க, விதைக்கப்பட்ட மெல்லிய, காதலாகிய விதைகள் முளைத்தனபோல மயிர்கள் சிலிர்த்தன.

கு:—ஒருத்தி ஊடலால் தன் கணவனை உதைக்க, அவன் உடல் எங்கும் மயிர்கள் சிலிர்த்தன: இதனை, உடம்பைக் கொல்லையாகவும் காதலை வித்தாகவும் உதைத்த இன்பத்தை நீராகவும் உரோமராசியைக் காதன்முளையாகவும் உருவகித்தார்.

"ஒருத்தி, பதைத்தனள்; ஒருத்தன்மேல் பஞ்சடி உதைத்தலும், நிறைமெய் இதைப் புனல் நனைத்திட, விதைத்தமென் காதலின் வித்து முளைத்தவேயென உரோமராசி பொடித்தன" எனக் கூட்டுக. (36)

### காதலி மெலிந்தமை நோக்கிக் காதலன் பூரித்தல்

1083. பொலிந்தவாண் முகத்தினன்
பொங்கித் தன்னையும்
மலிந்தபே ருவகையான்
மாற்று வேந்தரை
நலிந்தவா ளுழவனோர்
நங்கை கொங்கைபோய்
மெலிந்தவா நோக்கித்தன்
புயங்கள் வீங்கினன்.

பொலிந்த வாள்முகத்தினன் பொங்கித் தன்னையும்
மலிந்த பேருவகையான், மாற்று வேந்தரை
நலிந்த வாள் உழவன் ஓர் நங்கை கொங்கை போய்
மெலிந்தவா நோக்கித் தன்புயங்கள் வீங்கினன்.

பொ:—பகையரசர்களை வருத்திய வீரனொருவன், தன் காதலியின் கொங்கைகள் மிக மெலிந்திருப்பதைப் பார்த்து, மனக் கிளர்ச்சியோடு கூடிய ஒளி பொருந்திய முகத்தை உடையவனாகித் தன்னையும் விஞ்சிய பெருமகிழ்ச்சியை உடையனாய்ப் புயங்கள் பூரித்தான்.

கு:—காதலி கொங்கை மெலிய இவன் புயங்கள் வீங்குதற்கு ஏது, அவள் தன்மாட்டுக் கொண்டிருந்த காதலை வியந்தமையின் விளைவென்க. (37)

ஒருவன் தீந்த தளிர் கண்டு திகைப்படைதல்

1084. ஏய்ந்தபே ரெழிலினொ
ருவ னெய்தினன்
வேய்ந்தபோ லெங்கணு
மனங்கன் வெங்கணை
பாய்ந்தபூம் பள்ளியிற்
படுத்த பல்லவம்
தீய்ந்தன நோக்கினன்
றிகைக்குஞ் சிந்தையான்.

ஏய்ந்த பேர் எழிலினன் ஒருவன், எய்தினன்;
வேய்ந்த போல் எங்கணும் அனங்கன் வெங்கணை
பாய்ந்த பூம் பள்ளியில் படுத்த பல்லவம்
தீய்ந்தன நோக்கினன் திகைக்கும் சிந்தையான்.

பொ:—பொருந்திய பேரழகன் ஒருவன், தன் காதலி இருக்குமிடத்தை அடைந்தான்; எவ்விடத்தும் மன்மதனுடைய கொடிய அம்புகள் வேய்ந்தனபோலப் பரந்துகிடக்கின்ற பூப்படுக்கையில் பரப்பப்பெற்ற தளிர்கள் கருகிக்கிடப்பவற்றைக் கண்டான்; அதனால் திகைக்கும் சிந்தையன் ஆனான்.

கு:—ஒருவன், தனது பிரிவால் விளைந்த வெப்பம் தாங்காது மலர்ப் படுக்கையிற் பரப்பிய பல்லவங்களும் கருகக் காதலி இடத்த நிலையைக் கண்டு மனம் திகைத்தான் என்பதாம். (38)

### கொங்கை பொற்கலசம் போன்றதெனல்

1085. ஊட்டிய சாந்துவெந்
துலரும் வெம்மையான்
நாட்டினை யளித்திநீ
யென்று நல்லவர்
ஆட்டுநீர்க் கலசமே
யென்ன லானவோர்
வாட்டொழின் மைந்தற்கோர்
மங்கை கொங்கையே.

ஊட்டிய சாந்து வெந்து உலரும் வெம்மையான்,
நாட்டினை அளித்தி நீ, என்று நல்லவர்
ஆட்டும் நீர்க் கலசமே என்னல் ஆன ஓர்
வாள் தொழில் மைந்தற்கு ஓர் மங்கை கொங்கையே.

பொ:—ஒரு பெண்ணின் கொங்கைகள், நறுமணம் ஊட்டிய சந்தனம் வெந்து உலர்ந்து போம்படி (மிக்க) வெப்பம் உடைமையால், 'நீ இந்நாட்டைக் காப்பாயாக' என்று நல்லோர் வாட்போரில் வல்ல வீரன் ஒருவனுக்குப் புனலாட்டுச் செய்வதற்கு வைத்த(பொற்)கலசமே போன்றன என்று சொல்லும்படியாயின.

கு:—போர்வயிற் பிரிந்த தலைவன் வரக் காலந்தாழ்த்தமையின் காமவெப்பம் ஏறிய காதலியின் கொங்கைகள், வெற்றியோடு திரும்பும் அவ்வீரனுக்கு முடிசூட்டுவதற்காக வைத்த பொற்கலசம் போன்றன என்பதாம். (39)

### கணவன் இருப்பிடம் தேடிச் செல்லும் காரிகையின் இயல்பு

1086. பயிருறு கிண்கிணி பரந்த மேகலை
வயிரவான் பூணவை வாங்கி நீக்கினாள்
உயிருறு தலைவன்பால் போக வுன்னினாள்
செயிருறு திங்களைத் தீய நோக்கினாள்.

பயிர் உறு கிண்கிணி பரந்த மேகலை,
வயிர வான் பூண் அவை வாங்கி நீக்கினாள்
உயிர் உறு தலைவன்பால் போக உன்னினாள்
செயிர் உறு திங்களைத் தீய நோக்கினாள்.

பொ:—ஒருத்தி உயிரொத்த தலைவனிடம் செல்ல விரும்பியவளாக ஒலிக்கின்ற கிண்கிணிமாலையையும், அரையில் பரவிய மேகலையையும். ஏனைய வயிர அணிகளையும், கழற்றி அகற்றினுள். குற்றம் பொருந்திய மதியைக் கருகிப்போகும்படி நோக்கினுள். (40)

## மாலையாற் கட்டுண்ட தோளின் மாண்பு

**1087.** ஏலுமிவ் வன்மையை யென்னென் றுன்னுதும்
ஆலைமென் கரும்பனு னொருவற் காங்கொரு
சோலைமென் குயிலனுள் சுற்றி வீக்கிய
மாலையை நிமிர்ந்தில வயிரத் தோள்களே.

ஏலும் இவ் வன்மையை என் என்று உன்னுதும்;
ஆலை மென் கரும்பனுன் ஒருவற்கு ஆங்கு ஒரு
சோலை மென் குயில் அனுள் சுற்றி வீக்கிய,
மாலையை நிமிர்ந்தில வயிரத் தோள்களே!

பொ—ஆலையில் அகப்பட்ட மெல்லிய கரும்பை ஒத்தவனுகிய ஒரு தலைவனுக்கு (அமைந்த) வயிரத்தோள்கள், சோலைக்கண்ணதாகிய மெல்லிய குயிலை ஒத்தவளாகிய [ஒரு தலைவியானவள், சுற்றிக் கட்டிய மாலையை மீறி நிமிரும் வன்மையை உடையன அல்ல ஆயின. பொருந்திய இவ்வலிமையை என்ன என்று எண்ணுவோம்.

கு:—ஒருத்தி ஊடலால், கணவன்தோள்களை மலர்மாலையாற் கட்டினுள், அவன் தோள்கள் அக்கட்டை மீறி நிமிரமாட்டாதன வாயின; இவ்வல்லமையை என்னவென்று சொல்வது என்றவாறு. 'எல்லியம்போ தினிதிருத்தல் இருந்ததோர் இடவகையில், மல்லிகைமா மாலைகொண்டங் கார்த்ததுமோர் அடையாளம்' (திவ். பெரியாழ்வார் திருமொழி. 3, 10, 2) என்னும் அருளிச் செயற்பாசுரமும் இங்கு நோக்கத்தகும்.

'ஆலைமென் கரும்பனுன்' என்பதனுடன், 'ஆலைநீள் கரும்பன்னவன் தாலோ, என்ற பெருமாள் திருமொழியும் (7. 1) நோக்கத்தகும். 'ஆலைமென் கரும்பனுன், என்றது இவள் பிரிவால் மெலிந்த உடலை உடையவன் என்பதை உட்கொண்டு. 'ஆலைமென் கரும்பிலா ஒருவற்கு, எனப் பாடங்கொண்டு கையிற் கரும்பொன்றில்லாத மன்மதனையொத்த தலைவனுக்கு, என்று உரை கூறுவாரும் உளர், (41)

### ஒருத்தி தூதனுப்ப பாங்கியைக் குறிப்பால் நோக்குதல்

1088. சோர்குழ லொருத்திதன்
வருத்தஞ் சொல்லுவான்
மாரனை நோக்கியோர்
மாதை நோக்கினுள்
காரிகை யிவளவள்
கருத்தை நோக்கியோர்
வேரியந் தெரியலான்
வீடு நோக்கினுள்.

சோர் குழல் ஒருத்தி தன் வருத்தம் சொல்லுவான்
மாரனை நோக்கி ஓர் மாதை நோக்கினுள்
காரிகை இவள் அவள் கருத்தை நோக்கி ஓர்
வேரி அம் தெரியலான் வீடு நோக்கினுள்.

பொ :—அவிழ்ந்து தொங்குகின்ற கூந்தலை உடையாளொருத்தி தன் வருத்தத்தைச் சொல்வதற்காக மன்மதனையும் நோக்கி, (தன் பாங்கியாகிய) ஒரு பெண்ணையும் பார்த்தாள்; இப்பாங்கி, தலைவியின் கருத்தை ஆராய்ந்து, தேனெழுகுகின்ற அழகிய மாலையை அணிந்த (அவள்) தலைவன் வீட்டை நோக்கி நடந்தாள்,

கு:—மன்மதனை நோக்கியது அவன் அம்புகளால் தான் வருந்துவதைக் குறிக்க; மாதை நோக்கியது வருத்தம் தணிக்கும் வாயிலாகத் தூது அனுப்பலாம் என்பதைச் சொல்லாமற் சொல்ல,

'மாரனை நோக்கியோர் மாதை நோக்கினுள்' என்பதற்கு மன்மதனைப் பார்த்து அவன் பக்கத்தில் இணைபிரியாது உள்ள இரதியையும் நோக்கினுள்: இவ்வண்ணம் இணைபிரியாது இருக்கப் பெற்றிலமே எனக் கூறலும் ஆம்.

தலைவியர், தம் இல்லத்து மாரவேள், இரதி இவர்கள் படத்தை எழுதிவைத்திருத்தல் இயல்பு, ஆதலின் அதனை நோக்கினுள் என்க. (42)

### காதலி, காதலன்வீடு தேடிச் செல்லக் காரணம் யாதெனல்

1089. சினங்கெழு வாட்கையோர் செம்மல் பாலொரு
கனங்குழை மயிலனுள் கடிது போயினுள்
மனங்குழை நறவமோ மாலை தான்கொலோ
அனங்கனோ யார்கொலோ வழைத்த தூதரே.

சினம் கெழு வாள் கை ஓர் செம்மல் பால் ஒரு
கனம் குழை மயில் அனுள் கடிது போயினுள்;
மனம் குழை நறவமோ! மாலேதான்கொலோ!
அனங்கனே! யார்கொலோ! அழைத்த தூதரே.

பொ:—சினம் பொருந்திய வாளேந்திய கையையுடைய ஒருவனிடத்துச் சாயலால் மயிலே யொத்த கனத்த காதணியை அணிந்த பெண்ணெருத்தி விரைந்து சென்றுள்; அவ்வண்ணம் அவளே அங்கு அழைத்த தூதர் உண்டார்மனத்தைக் குழைக்கின்ற கள்ளோ! மாலேக்காலமோ! மன்மதனே! யாரோ!

கு:—கள் முதலாயின, காதல் கைம்மிகச் செய்து கணவனே வலியத் தேடச்செய்தலின் இங்ஙனம் கூறினர்.

நாண் பிரித்தலின் கள்ளோ என்றும், மயக்கம் தந்து மறை விடமுந்தந்து அவனுழைச் செலுத்துதலின் மாலேயோ என்றும், ஊரலர் உற்று நோக்காது விரைந்து செலுத்துதலின் அனங்கனே என்றும், இவற்றுள் ஒன்றும் துணியமாட்டாமையின் யார் கொலோ என்றும் கூறினர்.

சிறப்புப் பற்றி அழைத்த தூதர் யாரெனப் பலர்பால்முடிவு ஏற்றது. (43)

### காதலி கண்ணீர் உகுக்கக் காதலன் வினுதல்

1090. தொகுதரு காதற்குத் தோற்ற சீற்றத்தோர்
வகிர்மதி நெற்றியாண் மழைக்க ணுலிவந்
துகுதலு முற்றதென் னென்று கொற்றவன்
நகுதலு நக்கன ணுணு நீங்கினுள்.

தொகுதரு காதற்குத் தோற்ற சீற்றத்து ஓர்
வகிர் மதி நெற்றியாள், மழைக்கண் ஆலி வந்து,
உகுதலும், 'உற்றது என்' என்று கொற்றவன்,
நகுதலும், நக்கனள்; நாணும் நீங்கினுள்.

பொ:—நிறைந்த காதலுக்குத் தோற்ற – கோபத்தையுடைய பிறைமதி போன்ற நுதலாள் ஒருத்திக்கு, குளிர்ந்த கண்ணிலிருந்து நீர்த்துளி வந்து சிந்துதலும், வெற்றியை உடையவனுகிய காதலன், 'உனக்கு வந்தது என்' என்று நகைத்தலும், தானும் சிரித்தவளாய் நாணத்தையும் விட்டாள்.

கு:—ஊடல் கொண்ட ஒருத்தி பிரிவால் மிக்க காதலுக்குத் தான் தோற்றுப் பிரிவுநோய்மிகுதியால் கண்ணீர் வடித்தாள்; அவள் கணவன் நான் பக்கத்தில் இருக்கும்போது உனக்கு வந்தது என் என்று நகையாடினான். அவளும் நகைத்தாள், நாணும் நீங்கினாள் என்பதாம், (44)

புல்லிய கை புடைபெயரப் புரவலன் வருந்துதல்

1091. பொய்த்தலை மருங்குலா ளொருத்தி புல்லிய
கைத்தல நீக்கினள் கருத்தி னீக்கலள்
சித்திரம் போன்றவச் செயலோர் தோன்றற்குச்
சத்திர மார்பிடைத் தைத்த தொத்ததே.

பொய்த்தலை மருங்குலாள் ஒருத்தி புல்லிய,
கைத்தலம் நீக்கினள்; கருத்தின் நீக்கலள்;
சித்திரம் போன்ற அச்செயல் ஓர் தோன்றற்குச்
சத்திரம் மார்பிடைத் தைத்தது ஒத்ததே.

பொ:—பொய் போல் இல்லையான இடையை உடையாள் ஒருத்தி, (கள்மயக்கத்தால்.) காதலனைப் புல்லிக் கிடந்த கையை நெகிழ்த்தாள். ஆனால் மனத்திலிருந்து பிரித்தாளல்லள். வியப் படையத் தக்க அச்செய்கை அவ்வாடவனுக்கு, மார்பில் வாள் தைத்ததைப்போல இருந்தது.

கு:—அவன் எதிர்பாராதிருக்கக் கை நெகிழ்த்தாளாதலானும், அவள் கண்ணும் முகமும் தன்னையே நோக்கியிருக்கக் காண் இன்றான் ஆதலானும், அச்செயல் அவனுக்கு வியப்பாயிருந்தது: புல்லிய கை புடை பெயர்ந்தது வாள் ஏறுண்டது ஒத்தது என்ப தாம். சத்திரம் – வாள், (45)

நங்கையொருத்தி நாணத்தால் தூதனுப்ப இயலாது விம்முதல்

1092. மெல்லிய லொருத்திதான்
விரும்புஞ் சேடியைப்
புல்லிய கையினள்
போதி தூதெனச்

சொல்லுவா னுறுமுற
நாணுஞ் சொல்லலள்
எல்லையில் பொழுதெலா
மிருந்து விம்மினுள்.

மெல் இயல் ஒருத்தி, தான் விரும்பும் சேடியைப்
புல்லிய கையினள், 'போதி தூது' எனச்
சொல்லுவான் உறும்; உற நாணும்; சொல்லலள்;
எல்லை இல் பொழுது எலாம் இருந்து விம்மினுள்.

பொ:—மென்மைத் தன்மையை யுடையாளொருத்தி, தான் விரும்பிய பாங்கியைத் தழுவிய கையை உடையவளாய், 'நீ தூதுபோ' எனச் சொல்லத் தொடங்குவாள், மிக வெட்கப் படுவாள்: (அதனுல்) சொல்ல முடியாதவளாக அளவற்ற இராப் பொழுது முழுதும் இருந்து விம்மினுள். (46)

ஒருத்தி தலைவன்செயலைச் சாற்ற நாணுதல்

1093. ஊறுபே ரன்பினு ளொருத்தி தன்னுயிர்
மாறிலாக் காதலன் செய்லை மற்றொரு
நாறுபூங் கோதைபா னவில நாணுவாள்
வேறுவே றுறச்சில மொழிவி ளம்பினுள்.

ஊறு பேர் அன்பினுள் ஒருத்தி, தன் உயிர்
மாறிலாக் காதலன் செயலை மற்று ஒரு
நாறு பூங் கோதைபால் நவில நாணுவாள்;
வேறு வேறு உறச் சில மொழி விளம்பினுள்.

பொ:—சுரக்கின்ற அன்பை உடையா ளொருத்தி தன் உயிரை யொத்த மாறுபாடற்ற தலைவன் செய்கையை மணம் வீசுகின்ற பூமாலையை அணிந்த வேறு ஒரு பெண்ணினிடம் சொல்ல நாணுகின்றவளாய்த் தொடர்பற்ற வேறு வேருன சில மொழிகளைச் சொன்னுள்.

கு:—வெட்கத்தால் உள்ளது சொல்ல மாட்டாமையால் தொடர்பற்ற மொழிகளைச் சொன்னுள் என்பதாம்.

இச்செய்யுட்கு ஒரு பெண், தன் உயிரையின்றி வேறுயிரைப் பெருத தலைவன் செய்த பிழைச் செயலை வேறொருத்தியிடம் சொல்லுவதற்குப் போனவள் வெட்கத்தால் வேறு வேறு சொன்னுள் என்று உரைப்பாரும் உளர். (47)

### காதலர் இருவர் புல்லுதல்

1094. உருத்தெரி தன்மைய வுயிரு மொன்றுதாம்
அருத்தியு மத்துணை யாய நீரினர்
ஒருத்தியு மொருத்தனு முடம்பு மொன்றெனப்
பொருத்துவ ராமெனப் புல்லி னரரோ.

உரு தெரி தன்மைய; உயிரும் ஒன்று தாம்;
அருத்தியும் அத்துணை ஆய நீரினர்;
ஒருத்தியும் ஒருத்தனும், 'உடம்பும் ஒன்றெனப்
பொருத்துவர் ஆம்' எனப், புல்லினர் அரோ.

பொ :—ஒருத்தியும் ஒருத்தனுமாக, உருவம் தனியே தெரியும் தன்மையவாய் இருப்பினும், இருவர்க்கும் உயிரும் ஒன்றே: ஆசையும் அத்துணையேயான தன்மையை உடையவர்கள்; ஆதலால் உடம்பும் ஒன்றாகத் தம்முள் பொருத்திக் கொள்பவர் போலத் தழுவினர்கள். (48)

### காதலி முகங்கவிழ்ந்துநின்ற நிலைகண்டு காதலன் அஞ்சுதல்

1095. வெதிர்பொரு தோளினா ளொருத்தி வேந்தன்வந்
தெதிர்தலுந் தன்மன மெழுந்து முன்செல
மதிமுகங் கதுமென வணங்கி னளது
புதுமையா தலினவற் கச்சம் பூத்ததே.

வெதிர் பொரு தோளினள் ஒருத்தி, வேந்தன் வந்து
எதிர்தலும், தன் மனம் எழுந்து முன் செல,
மதி முகம் கதுமென வணங்கினள்; அது,
புதுமை, ஆதலின், அவற்கு அச்சம் பூத்ததே.

பொ:—மூங்கிலை யொத்த தோளையுடைய ஒருத்தி, தன் கணவன் வந்து எதிர்ப்பட்டவுடன், தன் மனம் எழுந்து முன்னே செல்ல, விரைவாகத் தன் மதிபோலும் முகம் கவிழ்ந்து நின்றாள். அது அக்கணவனுக்குப் புதுமையாதலால் அச்சம் உண்டாயிற்று.

கு :—தலைவன் தவறு கண்டு, தலைவி முகங்கவிழ்ந்து நின்றனள் என்க. (49)

### தனியே வந்த தோழி தாயை ஒத்தாள் எனல்

**1096.** துனிவரு நலத்தொடு சோர்கின் ருளொரு
குனிவரு நுதலிக்குக் கொழுந னின்றியே
தனிவருந் தோழியுந் தாயை யொத்தனள்
இனிவரு தென்றலு மிரவு மென்னவே.

துனி வரும் நலத்தொடு சோர்கின்ருள் ; ஒரு
குனி வரும் நுதலிக்குக் கொழுநன் இன்றியே
தனி வரும் தோழியும், தாயை ஒத்தனள்
இனி வரு தென்றலும் இரவும் என்னவே.

பொ :—ஊடலால் வருகின்ற அழகொடு, (கணவனைப் போக விட்டுத்) தளர்கின்றவளும் வளைந்த நெற்றியையுடையவளுமாகிய ஒருத்திக்கு, (தூது சென்று) கணவனையின்றித் தனித்து வருகின்ற தோழியும், (யாவர்க்கும்) இனிதாய்வரும் தென்றலையும் இரவையும் போலத் துன்பம் தருபவள் ஆயினுள்; அன்றியும் (இடித்துரை கூறும் வகையால்) தாயையும் ஒத்தனள்.

கு :—காதலி, பிரிவுத் துன்பத்தால் தென்றலும் இரவும் கண்டு பேதுற்ருளாகத் தோழி நீ இவ்வாறு அழிதல் பெண்மைக்கு ஏற்றது அன்று என்று தாயைப்போல இடித்துரை இயம்பலின், 'தாயை ஒத்தனள்' என்ருர். (50)

### உணர்வழிந்த ஒருத்தியின் நிலை

**1097.** ஆக்கிய காதலா ளொருத்தி யந்தியில்
தாக்கிய தெய்வமுண் டென்னுந் தன்மையள்
நோக்கின ணின்றன ணுவன்ற தோர்கிலள்
போக்கின தூதினே டுணர்வும் போக்கினுள்.

ஆக்கிய காதலாள் ஒருத்தி அந்தியில்
தாக்கிய தெய்வம் உண்டு என்னும் தன்மையள்
நோக்கினள் ; நின்றனள் நுவன்றது ஓர்கிலள்,
போக்கின தூதினேடு உணர்வும் போக்கினுள்.

பொ: —மிகுவித்த காதலையுடையவள் ஒருத்தி, மாலைக் காலத்தில் தீண்டிய தெய்வம் ஒன்று உண்டு என்று கண்டோர் கூறுந்தன்மையை உடையவள், கண் கொட்டாமலே நின்ருள்.

பிறர் கூறுவதை அறியுந்தன்மையில்லாதவள், காதலனிடம் செல்லவிட்ட தூதோடு கருத்தையும் போக்கிவிட்டாள்.

கு :—காதல் விதி கூட்ட விளைவது; காதலிக்கப்பட்டாருடைய குணம், நலம், கல்வி, இளமை, தோற்றம், முதலியவை காரணமாக மிகுவது. ஆதலின் 'ஆக்கிய காதலாள், என்பதற்கு மிகுவித்த காதலையுடையவள் என்று உரை வரையலாயிற்று.

தாக்கிய தெய்வம் - தாக்கணங்கு; தெய்வம் தீண்டின் ஒன்றிலும் பற்றுள்ளமின்றி ஒதுங்கி நிற்கச்செய்யும்; அத்தன்மையள் ஆயினள் என்பதாம். (51)

## கணவன் வரவு நோக்கும் காரிகையின் செயல்

1098. மறப்பிலள் கொழுநனை வரவு நோக்குவாள்
பிறப்பினெ டிறப்பெனப் பெயருஞ் சிந்தையாள்
துறப்பரு முகிலிடைத் தோன்று மின்னெனப்
புறப்படும் புகுமொரு பூத்த கொம்பனாள்.

மறப்பிலள், கொழுநனை வரவு நோக்குவாள் ;
பிறப்பினொடு இறப்பு எனப் பெயரும் சிந்தையாள் ;
துறப்பு அரும் முகிலிடைத் தோன்றும் மின் எனப்
புறப்படும் ; புகும் ; ஒரு பூத்த கொம்பு அனாள்.

பொ:—தன் கணவனை மறவாதவளாய், அவன் வருகையை எதிர் நோக்கியிருக்கின்ற பூத்த கொம்பைப் போன்றவளாகிய ஒருத்தி, தன் கணவன் வருவான் என்று மகிழ்ச்சியும் வாரான் என்று கவற்சியும் பிறப்பும், இறப்பும் போல மாறி மாறி எழுகின்ற சிந்தையாளாகித் துறத்தற்கரிய மேகத்தினிடையே தோன்றுகின்ற மின்னலைப் போல, கணவன் வருவான் என்று வீட்டிற்கு வெளியே வருவாள், வாரானென்று உள்ளே போவாள்;

கு:—மேகத்தில் மின்னல் தோன்றி மறைவதைப் போல, இவள் இல்லத்தின் முகப்பிற்றோன்றி மறைகின்றாள், என்பதை 'முகிலிடைத் தோன்றும் மின்' என உவமையாற் கொள்ள வைத்தார்.

மின் முகிலைத் துறக்க மாட்டாது. இவளும் வீட்டின் எல்லை கடவாள் என்ற நயம் தோன்றுதல் காண்க. இச்செய்யுள், "வருவார் கொழுநர் எனத் திறந்தும் வாரார் கொழுநர் என அடைத்தும், திருகும் குடுமி விடியளவும் தேயுங்கபாடம்

திறமினே" (கடைதிறப்பு-49) என்ற கலிங்கத்துப்பரணிப் பாடலை நினைவூட்டுவது. (52)

### அனங்கன்நோய் ஆற்றாத அணங்கு பாங்கியை வாயில் வேண்டல்

**1099.** எழுதருங் கொங்கைமே
லனங்க னெய்தவம்
புழுதவெம் புண்களில்
வளைக்கை யொற்றினாள்
அழுதனள் சிரித்தன
ளற்றஞ் சொல்லினாள்
தொழுதன ளொருத்தியைத்
தூது வேண்டுவாள்.

எழுதரும் கொங்கைமேல் அனங்கன் எய்த அம்பு
உழுத வெம் புண்களில் வளைக் கை ஒற்றினாள்;
அழுதனள்; சிரித்தனள்; அற்றம் சொல்லினாள்;
தொழுதனள்; ஒருத்தியைத் தூது வேண்டுவாள்.

பொ :—ஒருகாலைக் கொருகால் விம்மி எழுகின்ற கொங்கைகளின்மேல் மன்மதன் எய்த அம்புகள், உழுதலால் விளைந்த கொடிய புண்களில் சங்குவளைகளை அணிந்த கையால் ஒற்றிக் கொண்டாள். தன்வயமழிந்து அழுதாள்; சிரித்தாள்; தன் பாங்கி ஒருத்தியைத் தூதாக விரும்புகின்றவளாய்த் தொழுதாள்; குறைகளைச் சொல்லிக் கொண்டாள்.

கு :—எழுதரும் கொங்கை - எழுதுதற்கரிய கொங்கை எனப் பொருள் கொள்வாருமுளர். காயங்களில் கையைத் தேய்த் தொற்றுதல் மரபாதலின், 'புண்களில் வளைக்கை ஒற்றினாள்' என்றார்.

அழுதலும், சிரித்தலும் ஆகிய மாறுபட்ட மெய்ப்பாடுகள் தன் வயமழிந்தமையால் விளைந்தன. (53)

### ஒருத்தி பிரிவாற்றாமையைத் தோழிக்குக் குறிப்பாலுணர்த்தல்

**1100.** ஆர்த்தியு முற்றது
மறிஞர்க் கற்றந்தான்
வார்த்தையி னுணர்த்துதல்
மாசன் றேமனம்

வேர்த்தனள் வெதும்பினண்
மெலிந்து சாய்ந்தனள்
பார்த்தன ளொருத்திதன்
பாங்க னுளையே.

ஆர்த்தியும் உற்றதும் அறிஞர்க்கு அற்றம்தான்
வார்த்தையின் உணர்த்துதல் மாசு அன்றோ! மனம்
வேர்த்தனள்; வெதும்பினள்; மெலிந்து சாய்ந்தனள்;
பார்த்தனள்; ஒருத்தி, தன் பாங்கு அனுளையே.

பொ:—ஒருத்தி, விருப்பமும், விருப்பம் ஈடேறாமையால் உற்ற துன்பமும், ஆகிய இக்குறைகளை, அறிவாளிகளுக்கு வார்த்தையால் உணர்த்துதல். குற்றமல்லவா? என்று மனம் புழுங்கினள்; வெதும்பினள்; மெலிந்து சோர்ந்தாள்; தன் பாங்கியைப் பார்த்தாள். (54)

## மன்மதனும் மது அருந்துதல்

1101. தனங்களி னிளையவர் தம்மின் மும்மடி
கனங்கன மிடையிடை களிக்குங் கள்வனாய்
மனங்களி னுழைந்தவர் மாந்து தேறலை
அனங்கனு மருந்தின னாதல் வேண்டுமால்.

தனங்களின் இளையவர் தம்மின், மும்மடி
கனம் கனம் இடையிடை களிக்கும் கள்வனாய்,
மனங்களின் நுழைந்து அவர் மாந்து தேறலை
அனங்கனும் அருந்தினன் ஆதல் வேண்டுமால்.

பொ:—தனங்களையுடைய இளம் பெண்களைக் காட்டிலும் மும்மடங்கு மிகுதியாக இடையிடை களிக்கும் திருடனாய் அப் பெண்களின் மனத்தே நுழைந்து, அவர்கள் குடிக்கின்ற கள்ளை மன்மதனும் குடித்தானாதல் வேண்டும்.

கு:—மன்மதன் மாதர்களைவிடக் களிக்கின்றான் ஆதலின், மாதர் நெஞ்சுள் இருக்கின்றவன் மது அருந்தியிருக்க வேண்டுமென்பதாம். (55)

### காதலர் கலவிக்காகக் கலன் கழித்தல்

1102. நறைகம ழலங்கன் மாலை
நளிர்நறுங் குஞ்சி மைந்தர்
துறையறி கலவிச் செவ்வித்
தோகையர் தூசு வீசி
நிறையக லல்குல் புல்குங்
கலன்கழித் தகல நீத்தார்
அறைபறை யனைய நீரார்
அருமறைக் காவ ரோதான்.

நறை கமழ் அலங்கல் மாலை நளிர் நறும் குஞ்சி மைந்தர்
துறை அறி கலவிச் செவ்வித் தோகையர் தூசு வீசி
நிறை அகல் அல்குல் புல்கும் கலன் கழித்து அகல நீத்தார்
அறை பறை அனைய நீரார் அரு மறைக்கு ஆவரோ தான்.

பொ :—மணம் வீசுகின்ற அசைகின்ற மாலையை அணிந்த குளிர்ந்த நல்ல குடுமியையுடைய ஆடவர்கள், கரண வகைகள் அறிந்த புணர்ச்சிக்கேற்ற தகுதியையுடைய பெண்களின் ஆடையைக் களைந்து அகற்றி, நிறைந்த அகன்ற அல்குலைத் தழுவிக் கிடக்கின்ற மேகலை முதலிய அணிகலன்களையும் கழித்து அப்பால் எறிந்தார்கள். ஒலிக்கின்ற பறை போன்ற தன்மையை யுடையவர்கள். அருமையான இரகசியச் செயல்களுக்கு உதவு வார்களோ!

கு :—புணர்ச்சிக்குத் தடையான ஆடையையும், ஒலித்துப் பிறரறியச் செய்கின்ற மேகலையையும் கழித்தனர் என்பதாம்.

''அறைபறையனைய நீரார்'' என்பது, ''அறைபறையன்னர்'' (1076) என்ற திருக்குறட் பகுதியை அடியொற்றி எழுந்தது. (56)

### நாணுத் துறவுரைத்தல்

1103. பொன்னருங் கலனுந் தூசும்
புறத்துள துறத்தல் வம்பே
நன்னுத லொருத்தி தன்பா
லகத்துள நாணு நீத்தாள்

உன்னருந் துறவு பூண்ட
வுணர்வுடை ஒருவனே போல்
தன்னையுந் துறக்குந் தன்மை
காமத்தே தங்கிற் றன்றே.

பொன் அரும் கலனும், தூசும்,
புறத்து உள துறத்தல் வம்பே!
நல் நுதல் ஒருத்தி, தன்பால்
அகத்து உள நாணும் நீத்தாள்;
உன் அரும் துறவு பூண்ட
உணர்வு உடை ஒருவனே போல்,
தன்னையும் துறக்கும் தன்மை
காமத்தே தங்கிற்று அன்று ஏ.

பொ :—பொன்னாலாகிய அரிய அணிகளும் ஆடைகளுமாகிய உடலின் புறத்தேயுள்ள பொருள்களை நீக்குதல் ஒரு புதுமையோ! நல்ல நெற்றியையுடைய பெண் ஒருத்தி தன்னிடம் மனத்தேயுள்ள நாணத்தையும் விட்டாள். பிறரால் நினைத்தற்கரிய உண்மைத் துறவு பூண்ட மெய்ஞ்ஞானி ஒருவனைப் போலத் தன்னையும் துறக்கும் தன்மை காமத்திடத்தில் தங்கியுள்ளதல்லவா?

கு :—உண்மைத் துறவி அகப்பற்று புறப்பற்று ஆகிய அனைத்தையும் துறப்பதுபோலக், காமமும் கலனும் தூசும் நாணமும் ஆகிய அனைத்தையும் துறக்கும் தன்மையது என்பதாம். (57)

### வெல்வார் யார்?

**1104.** பொருவரு மதனன் போல்வா
னொருவனும் பூவின் மேலத்
திருவினுக் குவமை சால்வா
ளொருத்தியுஞ் சேக்கைப் போரில்
ஒருவருக் கொருவர் தோலார்
ஒத்தன ருயிரு மொன்றே
இருவர துணர்வு மொன்றே
யென்றபோ தியாவர் வெல்வார்.

பொரு அரும் மதனன் போல்வான்
ஒருவனும், பூவின்மேல் அத்
திருவினுக்கு உவமை சால்வாள்
ஒருத்தியும், சேக்கைப் போரில்
ஒருவருக்கு ஒருவர் தோலார்;
ஒத்தனர்; உயிரும் ஒன்றே;
இருவரது உணர்வும் ஒன்றே;
என்றபோது யாவர் வெல்வார்.

பொ:—ஒப்பு அரிய மன்மதனைப் போன்ற ஆடவன் ஒருவனும், தாமரைப்பூவின் மேலுள்ள திருமகளுக்கு உவமிக்கத் தக்கவள் ஒருத்தியும், படுக்கையில் நிகழ்ந்த கலவிப்போரில் ஒருவருக் கொருவர் தோற்காதவர்கள் ஆயினர்கள்; தம்முள் ஒத்தனர்; அவ்விருவரது உயிரும் ஒன்றே, உணர்வும் ஒன்றே, என்றபோது வெல்பவர்கள் யார்?

கு:—இருவர் வேறல் இயற்கை யன்றாதலின், யாவர் வெல் வார் என்றார். உயிரும் உணர்வும் ஒன்றேயான அவ்விருவரும் கலவிப்போரில் ஒத்தனர் என்பதாம். (58)

ஒருத்தி முனையிற் புலத்தல்

1105. கொள்ளைப்போர் வாட்க ணாளங்
கொருத்தியோர் குமர னன்னான்
வள்ளத்தா ரகலந் தன்னை
மலர்க்கையாற் புதைப்ப நோக்கி
உள்ளத்தா ருயிரன் னாண்மே
லுதைபடு மென்று நீநின்
கள்ளத்தாற் புதைத்தி யென்னா
முன்னையிற் கனன்று மிக்காள்.

கொள்ளைப் போர் வாள் கணாள் அங்கு
ஒருத்தி, ஓர் குமரன் அன்னான்
வள்ளத் தார் அகலம் தன்னை
மலர்க் கையால் புதைப்ப நோக்கி
உள்ளத்து ஆர் உயிர் அன்னாள்மேல்
உதை படும் என்று நீ நின்
கள்ளத்தால் புதைத்தி என்னா
முன்னையில் கனன்று மிக்காள்.

பொ :—போரில் உயிரைக் கொள்ளை கொள்கின்ற வாள் போலும் கண்களை உடையாளொருத்தி, முருகனை யொத்த ஆடவன் ஒருவன் தனது வளம்பொருந்திய மாலையை அணிந்த மார்பை, மலர்போன்ற கையால் மறைக்க, அதனைக் கண்டு மனத்துள் வசிக்கின்ற நின் உயிரை யொத்த என் மாற்றாள்மேல் உதைபடும் என்று எண்ணி நீ கள்ளத்தனத்தால் மறைக்கின்றாய் என்று முன்னிலும் மிகுதியாகச் சீறினாள்.

கு :—வளம் என்பது வள்ளம் என நின்றது விகாரம். காதலன் பால் புறத்தொழுக்கம் உண்டென்று சீறிய தலைவி, அவன் மார்பில் உதைக்கப்புக்க அளவில், தலைவன், தன் மார்பு தலைவியின் மெல்லிய அடிக்கு ஊறு செய்யுமென்று தன் மார்பைக் கையால் பொத்திக்கொண்டான்; அதைக் கண்ட அவன் காதலி "நும் நெஞ்சில் இருக்கின்ற இளையவளுக்கு உதைபடும் என்றோ கள்ளத் தாற் புதைத்தீர்" என்று கனன்றாள் என்க.

"சிலைமலி வாணுதல் லெங்கை யதாக மெனச்செழும்பூண்
மலைமலி மார்பின் உதைப்பத்தந் தான்தலை மன்னர்தில்லை
உலைமலி வேற்படை ஊரனிற் கள்வர்இல் லென்னவுன்னிக்
கலைமலி காரிகை கண்முத்த மாலை கலுழ்ந்தனவே"
(திருக்கோவையார். 397)

என்பதும் இங்கு நோக்கத்தகும். (59)

ஒருத்தி தன்னை அரம்பை மாதோ என்று ஐயுறச் செய்தமை

1106. பாலுள பவளச் செவ்வாய்ப்
பணைமுலை நிகர்த்த மென்றோள்
வேலுள நோக்கி னாளோர்
மெல்லியல் வேலை யன்ன
மாலுள சிந்தை யாங்கோர்
மழையுள தடக்கை யாற்கு
மேலுள வரம்பை மாத
ரென்பதோர் விருப்பை யீந்தாள்.

பால் உள பவளச் செவ்வாய்ப்
பணை முலை நிகர்த்த மென் தோள்
வேல் உள நோக்கினாள் ஓர்
மெல் இயல் வேலை அன்ன

மால் உள் சிந்தை ஆங்கு ஓர்
மழை உள தடக்கையாற்கு
மேல் உள அரம்பைமாதர்
என்பது ஓர் விருப்பை ஈந்தாள்.

பொ:—பாலின் சுவையமைந்த பவளம் போன்ற சிவந்த வாயினையும், பணைத்த முலைகளையும் தம்முள் ஒன்றோடொன்று ஒத்த மெல்லிய தோள்களையும் வேல்போன்ற கண்களையும் உடையவளாகிய மென்மைத் தன்மை வாய்ந்த பெண் ஒருத்தி, கடலையொத்த காம மயக்கம் நிறைந்த சிந்தையையும், ஒப்பற்ற மேகத்தை ஒத்த வரையாத வள்ளன்மையையும் உடைய, பெரிய கையோடு கூடிய ஆடவன் ஒருவனுக்குச் சொர்க்கத்தில் உள்ள அரம்பைப் பெண்ணே இவள் என்கின்ற விருப்பத்தை விளைவித்தாள்.

கு:—விண்ணுலக இன்பத்தை இங்கேயே விளைவித்தலானும் குன்றாத செவ்வியானும், 'அரம்பை மாதர் என்பதோர் விருப்பை ஈந்தாள்' ஆயினள் என்க.

'வேலையன்ன மால்' என்பதனொடு, 'கடலன்ன காமம்' (1137) என்னும் திருக்குறட் பகுதியும் நோக்கத்தகும். (60)

### காதல் வென்றது எனல்

1107. புனத்துறை மயிலனாள் கொழுநன் பொய்யுரை
★ நினைத்தனள் சீறுவா ளொருத்தி நீடிய
சினத்தொடு காதல்கள் செய்த போரிடை
மனத்துறை காதலே வாகை கொண்டதே.

புனத்து உறை மயில் அனாள் கொழுநன் பொய்யுரை
நினைத்தனள் சீறுவாள் ஒருத்தி நீடிய
சினத்தொடு காதல்கள் செய்த போரிடை
மனத்து உறை காதலே வாகை கொண்டதே.

பொ :—தினைக்கொல்லையில் தங்குகின்ற மயிலை ஒத்தவளாகிய—கணவனுடைய பொய்யுரையை நினைத்துச் சீறுவாள் ஒருத்தி, மிக்க வெகுளியோடு காதல்கள் செய்த போரிலே அவள் மனத்தில் தங்கிய காதலே வென்றது.

கு :—முன்னர்க் கணவன் கூறிய பொய்யுரையை நினைத்து ஒருத்திக்கு வெகுளி பிறந்தது. அதனுல், . அவன் வந்தால் கலவிக்கு இணங்கக்கூடாதென்ற சினமும், அவனை இன்றியமையாமையால் எழுந்த காதலும் மனத்துள் மாறிமாறிப் போரிட்டன. அவற்றுள் காதலே வென்றது என்பதாம்,

மூன்றும் அடியில், 'சினத்தொடு காதலன் சேக்கைப் போரிடை எனப் பாடங்கொண்டு இவள் சினத்தொடு இருக்க, காதலன் செய்த படுக்கைப் போரில் இவள் காதல் வென்றது என உரைத்தலும் ஆம். (61)

### காரிகை ஒருத்தி கணவன் முதுகை நோக்கல்

1108. கொலையுரு வமைந்தெனக்
கொடிய நாட்டத்தோர்
கலையுரு வல்குலாள்
கணவற் புல்குவாள்
சிலையுரு வழிதரச்
செறிந்த மார்பிற்றன்
முலையுரு வினவென
முதுகை நோக்கினுள்.

**கொலை உரு அமைந்து எனக் கொடிய நாட்டத்து ஓர்**
**கலை உருவு அல்குலாள், கணவன் புல்குவாள்**
**சிலை உரு அழிதரச் செறிந்த மார்பில் தன்**
**முலை உருவின என முதுகை நோக்கினுள்.**

பொ :—கொலைத் தொழில் யாவும் ஓர் உருக்கொண்டு அமைந்தாற் போன்ற கொடிய கண்களையும், ஆடையை ஊடுருவி வெளிப்படுகின்ற அல்குலையும் உடையாள் ஒருத்தி தன் கணவனை இறுகத் தழுவினுள். மலையின் வடிவு கெடும்படி செறிந்த கணவன் மார்பில் தன் முலை ஊடுருவிப் போயினவோ என்று அவன் முதுகைப் பார்த்தாள்.

கு :—வேழத்தின் கொம்பு போன்ற தன் முலைகள் தான் இறுகப் புல்லியதால் மார்பைத் துளைத்து மறுபக்கம் வந்தனவோ என்று முதுகைப் பார்த்தாள் என்பதாம். (62)

## கலவியின் விளைவு

1109. குங்கும முதிர்ந்தன கோதை சோர்ந்தன
சங்கின முரன்றன கலையுஞ் சாறின
பொங்கின சிலம்புகள் பூச லிட்டன
மங்கைய ரிளநல ஸ்மைந்த ருண்ணவே.

குங்குமம் உதிர்ந்தன; கோதை சோர்ந்தன;
சங்கினம் முரன்றன; கலையும் சாறின;
பொங்கின சிலம்புகள் பூசல் இட்டன;
மங்கையர் இள நலம் மைந்தர் உண்ணவே.

பொ:—பெண்களது இளமையின்பத்தை ஆடவர் நுகர்தலால் அவர்கள் மார்பில் அப்பியிருந்த குங்குமங்கள் புலர்ந்து உதிர்ந்தன; கூந்தல் அவிழ்ந்தன; வளைகள் ஒலித்தன; ஆடைகள் அவிழ்ந்தன; சிலப்புகள் மிகுதியாக ஒலித்தன.

கு :—இரண்டாமடியில் 'கலையும் சாய்ந்தன' எனப் பாடங் கொண்டு மேகலைகள் தளர்ந்தன என்று பொருளுரைப்பாரும் உண்டு. (63)

## காரிகை ஒருத்தி கனவென்ற பெயராற் காதலற் புல்லுதல்

1110. துனியுறு புலவியைக்
காதற் சூழ்சுடர்
பனியெனத் துடைத்தலும்
பதைக்குஞ் சிந்தையாள்
புனையிழை யொருமயில்
பொய்யு றங்குவாள்
கனவெனுஞ் சலத்தினாற்
கணவற் புல்லினள்.

துனி உறு புலவியைக் காதல் சூழ் சுடர்
பனி எனத் துடைத்தலும் பதைக்கும் சிந்தையாள்
புனை இழை ஒரு மயில் பொய் உறங்குவாள்
கனவு எனும் சலத்தினால் கணவன் புல்லினள்.

பொ:—காதலனது துயரம் மிகுதற்குக் காரணமான ஊடலை, சூரியன், சூழ்ந்த பனியைப் போக்குவது போலப் போக்குதலும், அணிகளையுடைய சாயலால் மயில்போல்வாள் ஒருத்தி, பதைக்கின்ற மனம் உடையவளாக, பொய்த்தூக்கம் தூங்குகின்றவள் கனவு என்கின்ற பொய்க் காரணத்தால், கணவனைத் தழுவிக் கொண்டாள்.

கு :—சூரியன் பனியைத் துடைப்பது போலக் காதல் புலவியைத் துடைக்கப் பதைக்கின்றவள் பொய்யுறக்கங் கொண்டு கனவு கண்டதாகக் கூறிக் கணவனைப் புல்லினுள் என்க.

ஊடலை உறுதுணையாகக் கொண்டு தன் இன்றியமையாமையைத் தலைவற்கு உணர்த்திய அவளுக்குக் காதல் கைம்மிக்கதால் ஊடல் நீங்கப் பதைப்பு உண்டாயிற்று என்க. சலம்-பொய்யான காரணம். (64)

## காதலர் புல்லிக் கிடந்தமை

**1111.** வட்டவாண் முகத்தொரு மயிலு மன்னனும்
கிட்டிய போதுடல் கிடைக்கப் புல்லினர்
விட்டிலர் கங்குலின் விடிவு கண்டிலர்
ஒட்டிய உடல்பிரிப் புணர்கி லாமையால்.

வட்ட வாள் முகத்து ஒரு மயிலும், மன்னனும்,
கிட்டிய போது உடல் கிடைக்கப் புல்லினர்;
விட்டிலர்; கங்குலின் விடிவு கண்டிலர்
ஒட்டிய உடல் பிரிப்பு உணர்கிலாமையால்.

பொ:—வட்டமாகிய ஒளிபொருந்திய முகத்தினையுடைய மயில் போல்வாள் ஒருத்தியும் ஆடவன் ஒருவனும் ஒருவர்க்கொருவர் நெருங்கியகாலத்து வாய்ப்புக் கிடைத்ததால் உடலைத் தழுவிக் கொண்டார்கள்; அங்ஙனம் ஒன்றாக ஒட்டிய உடலைப் பிரிக்கும் வகையறியாமையால் தழுவிய கையை விட்டிலர்; இரவு விடிந்தது என்பதையும் அறிந்திலர்.

கு :—பன்னெடுநாள் சமயம் நோக்கியிருந்த இருவர் சமயம் வாய்த்ததால் தழுவினர்; விடிந்தும் விட்டிலர் என்பதாம். (65)

### கங்குற்போது கலவியாற் கழிந்தமை

1112. அருங்களி மால்களி றனைய வீரர்க்கும்
கருங்குழல் மகளிர்க்கும் கலவிப் பூசலால்
நெருங்கிய வனமுலை சுமக்க நேர்கலா
மருங்குல்போற் றேய்ந்ததம் மாலைக் கங்குலே.

அரும் களி மால் களிறு அனைய வீரர்க்கும்
கரும் குழல் மகளிர்க்கும் கலவிப் பூசலால்
நெருங்கிய வன முலை சுமக்க நேர்கலா
மருங்குல் போல் தேய்ந்தது அ மாலைக் கங்குலே.

பொ :—அந்தக் கலவி தொடங்கிய மாலைக் காலத்தை முதலாக உடைய இரவானது, தணித்தற்கரிய களிப்பினையுடைய மத மயக்கம் பொருந்திய, ஆண்யானையை ஒத்த வீரர்கட்கும், கரிய கூந்தலையுடைய பெண்களுக்கும், புணர்ச்சியாகிய போரால் ஒன்றோடொன்று நெருங்கிய அழகிய முலைகளைச் சுமக்க மாட்டாத இடையைப் போலத் தேய்ந்துபோயிற்று.

கு :—மாலைக் கங்குல் என்பதற்கு மாலை என்று வழங்கப்படுகின்ற இரவு என்று உரைப்பாரும் உளர். வரிசையான இடையறுத கங்குல் என்றும் ஆம். (66)

45–ஆம் பிரதியில், ''சில பிரதிகளில் இதன்பின்,

'அரம்பைய ரினுமிவ ராட னன்றெனப்
புரந்தரன் கலவியின் பூச னோக்கிவான்
நிரம்பிய கண்களை முகிழ்த்து நீணகர்
கரந்தது கடுத்துடுக் கணங்கண் மாண்டவே'

என்ற செய்யுள் காணப்படுகிறது'' என்று குறிக்கப்பட்டுளது.

### மதியம் மறைதலும் இரவி எழுதலும்

1113. கடையுற நன்னெறி காண்கி லாதவர்க்
கிடையுறு திருவென விந்து நந்தினன்
படர்திரைக் கருங்கடற் பரமன் மார்பிடைச்
சுடர்மணிக் கரசென விரவி தோன்றினன்.

கடை உற நல் நெறி காண்கிலாதவர்க்கு
இடை உறு திரு என இந்து நந்தினன் ;
படர் திரைக் கருங்கடல் பரமன் மார்பிடைச்
சுடர் மணிக்கு அரசு என இரவி தோன்றினன்.

பொ:—புண்ணியங்களை முடிவு போகச் செய்யாதவர்களுக்கு இடையில் வந்து கழியும் செல்வத்தைப் போல மதி மறைந்தான்: திருமாலின் மார்பிலே விளங்குகின்ற, ஒளி விடுகின்ற மணிகளுக் கெல்லாம் அரசாகிய கௌத்துவ மணியைப்போல அலைகள்பரந்த கருங்கடலிலே சூரியன் தோன்றினன்.

கு:—அவரவர்கள் செய்த நல்வினைகட்கு ஏற்பச் செல்வம் சேர்ந்து கழிதல் இயல்பாதலின், சிறிது புண்ணியம் செய்தவர் கட்குச் செல்வம் இடையிற் சேர்ந்து இடையிலே கழிந்துபோதலை மதியம் மறைதலுக்கும், திருமால் மார்பிடை என்றும் விளங்கும் மணிக்கரசைச் சூரியன் தோற்றத்திற்கும் உவமை கூறினர். (67)

உண்டாட்டுப் படலம் முற்றிற்று

# 18. எதிர்கொள் படலம்

இப்படலம், மிதிலைமன்னன் தனது சுற்றங்களோடும் நால் வகைப் படையுடனும் பல அரசியற் சின்னங்களுடனும் வந்து தயரதனை எதிர்கொள்கின்ற செய்தியைக் கூறும். இவ்வெதிர் கோளிலேயே இராமனும் இளைய கோவும் தம் தந்தையை எதிர் கொள்வதும் அடங்கும். இஃது, எதிர்கோட் படலம் என்று சபாபதி முதலியார் பதிப்பிலும், இராமசாமி நாயுடு உரைப் பதிப்பிலும், கம்பராமாயண சாரத்தும், 21, 44 என்ற எண்கள் உள்ள ஏட்டுப் பிரதிகளிலும் காணப்படுகின்றது. மற்றும் மகட் காட்சிப் படலம் என்று 1, 3, 4, 6 எண்கள் உள்ள ஏட்டுப் பிரதி களிலும், எதிரெழுச்சிப் படலம் என்று 5, 12, 15, 19, 23, 24 எண்கள் கொண்டுள்ள பிரதிகளிலும், எதிர்கொள் படலம் என்று 2, 13, 20 என்ற எண்கள் ஏற்ற பிரதிகளிலும், எதிரெழும் படலம் என்று 16 என்ற எண் ஏற்ற பிரதியிலும் இப்படலத்தின் பெயர் காணப்படுகின்றது. ஆயினும் '' இந்திர திருவன்றன்னை யெதிர்கொள்வா னெழுந்து போந்தான்'' என்று இப்படலத்து நான்காவது செய்யுளிற் காணப்படுதலின் 'எதிர்கொள் படலம்' என்ற தலைப்பே இங்குத் தழுவப்பட்டது.

சனகன் விடுத்த திருமண ஓலையைத் தாங்கிச் சென்ற தூதுவர் மூன்றிரவில் அயோத்தியை அடைந்து அத்திருமண இதழைத் தயரதனிடம் தர, மன்னர்பிரான் தன் பரிவாரங்க ளுடன் புறப்பட்டு, ஐந்து நாட்களில் மிதிலையை அடைந்து, சனகனால் வரவேற்கப்பட்ட செய்தி முதனூலில் 69-வது சருக்கத் தில் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

கம்பர் இச்செய்தியை எழுச்சிப் படலம் முதலாக, பல படலங் களிற் குறிப்பதோடு, சனகன் தயரதனை எதிர்கொண்டதைச் சிறப்பாக இப்படலத்தில் பற்பல நயங்களும் அணிகளும் தோன்ற 34 செய்யுட்களிற் பாடியுள்ளார். தயரதனை மிதிலைக் கோமான் எதிர்கொண்ட செய்தி மூன்று செய்யுட்களிற் கூறப்பட்டது. இங்கே 'பாற்கடல் எதிர்வதே போல், மங்கையைப் பயந்த மன்னன் வளநகர் வந்ததன்றே' என்று கூறுவது உணரத்தக்கது.

வான்மீகர்போலன்றிக் கம்பர் சீதாப் பிராட்டியைத் திரு மகளாகவே பல இடங்களிலும் குறிப்பர். இதனைக் '' கருங்கடற் பள்ளியிற் கலவி நீங்கிப் போய்ப் பிரிந்தவர் கூடினாற் பேசல்

வேண்டுமோ'' (மிதிலைக். 38); ''போதினைவெறுத்தரசர் பொன் மனை புகுந்தாள்'' (கோலங்காண். 35); ''அல்லிமலர் புல்லும் வல்லியிவளாமென வசிட்டன் மகிழ்வுற்றான்'' (ஷை 32); ''உறைந்த பாற்கடற் சேக்கை யுடனொரீஇ, அறந்திறம்புமென் றையன் அயோத்தியிற் பிறந்த பின்பும் பிரிவிலள் ஆயினாள்'' (நகர்நீங்கு. 223); ''உவரிவாயன்றிப் பாற்கடல் உதவிய அமுதே'' (சித்திரகூட. 5); ''அரவினீங்கிய தேவனே யவனிவள் கமலச் செல்வியே'' (காட்சி. 66) என்ற பகுதிகள் கொண்டு உணரலாம்.

நான்காவது செய்யுளிலிருந்து சில செய்யுட்களில் சேனைகளின் வருணனையும், கொடிகள் குடைகள் முதலிய அரசியற் சின்னங்களின் அழகும், தானைகள் படர்ந்த வழிகளின் சிறப்பும், பலவாறு கற்பித்துக் கூறப்பட்டுள்ளன. இருபெரு மன்னர்கள் சந்தித்ததும், இராம இலக்குவர், தம் தாதையை எதிர்கொள்ள மிதிலையினின்றும் பெருஞ் சேனை பின்வரச் சென்று கண்டதும், தாய்மாரைக் கண்டு வணங்கியதும் இலக்குவனும் சத்துருக்கனும் முறையே பரதனையும் இராமனையும் தலையால் வணங்கியதும் இவற்றை யடுத்துக் காணலாம். படலத்திறுதிச் செய்யுட்களில் மிதிலைப்பதியின் மாளிகைகளும் பிறவும் எழில்பெற வருணிக்கப் பட்டுள்ளன. இராமனும் இலக்குவனும் தம் தந்தையை எதிர் கொள்ளச் சென்றதாக முதனூலிற் கூறப்படவில்லை. பலநாட் களாகப் பிரிந்துநின்ற தன் அருமைப் புதல்வர்களைக் காண வேண்டும் என்ற ஆர்வம் தந்தைக்கும், தந்தையைக் காண வேண்டும் என்ற ஆர்வம் தனயர்க்கும், உண்மை உலகியல் என்பதை ஓர்ந்த கம்பர், மக்கள் தந்தையைக் காண எதிர்சென்ற செய்தியையும், தந்தையின் மகிழ்ச்சிப் பெருக்கையும் தனித்துக் கூறியுள்ளார். 28-வது செய்யுட்கண் இராமன் முதலிய நால்வரையும் ''பொருவில் நான்மறையெனும் நடையினர்'' என்று புகழ்ந்துரைப்பர் கம்பர். நான் மறை ''உண்மையைப் பேசு, அறத்தின்வழி நட'' ''தாய்தந்தையரைத் தெய்வமாகக் கருது'' என்று விதிக்கும். அந்த விதிகளைக் கடைப்பிடித்து நடைமுறையில் அறநெறி காட்டியவர் என்பது தெரிய ''நான் மறையெனும் நடையினர்'' என்றார். இதனை, ''விராவரும் புவிக்கெலாம் வேதமேயன இராமன்'' (மந்தரை. 47); ''நியாய மத்தனைக்குமோர் நிலையமாயினான்'' (கிளைகண்டு. 55); ''நின்செய்கை கண்டு நினைந்தனவோ நீண்மறைகள், உன்செய்கை அன்னவை தாம் சொன்ன ஒழுக்கினவோ'' (கவந்தன். 49) என்று இராமனையும்; ''தள்ளரிய பெருநீதித் தனியாறு புக மண்டும் பள்ளமெனும் தகையான்'' (குலமுறை. 21); ''எனைத்துள மறையவை

யியம்பற்பாலன, பணைத்திரள் கரக்கரிப் பரதன் செய்கையே" (கிளைகண்டு 44); "சேணுயர் தருமத்தின் தேவைச் செம்மையின் ஆணியை" (கிளைகண்டு. 47) எனப் பரதனையும், "இயைந்த நீதி வழியாவரு நன்னெறி நின்னறிவாகும்" (நகர்நீங்கு, 129) என்று இளைய கோவையும்; "அலையாழியென வளர்ந்தார் மறை நான்கு மனையார்கள்" (குலமுறை. 23) என நால்வரையும் புகழ்ந்தமை கொண்டு தெளியலாம்.

கம்பர் ஓரிடத்தில் ஓர் அரிய புதியகருத்தை அமைத்தால் அதே கருத்தைப் பின்னர்ப் பல இடங்களிலும் குறித்துச் செல்வது வழக்கம். இப்படலத்தும் "தேவரும் தொழுகழற் சிறுவன்முன் பிரிவதோர் ஆவிவந்தென்னவந் தரசன்மா டணுகினன்" (22) என்று கூறியது அறிந்து இன்புறத்தக்கது. முன்னர்க் கையடைப் படலத்தில் இராம இலக்குவர் கோசிக முனிவனை "மன்னனின் னுயிர் வழிக்கொண்டாலென"ப் பின்பற்றிச் சென்றனர் என்றும் (கையடைப். 20); கோசிக முனிவன் "உயிரிரக்கும் கொடுங் கூற்றின்" (கையடைப். 10) இராமனைத் தயரதன்பா லிரந்தான் என்றும், "என் மகன், என்கண், என்னுயிர் எல்லாவுயிர்கட்கும் நன்மகன்" (கைகேசி. 32) எனத் தயரதன் கைகேயியிடம் வேண்டினன் என்றும், இராமனைத் தயரதன் உயிர் எனக்கூறிப் போந்த புலவர் பெருமான், இவ்விடத்தில் தயரதனிடமிருந்து பிரிந்த உயிர் தனக்குரிய இடத்தை அடைந்ததாகக் கூறிய நயம் காணலாம்.

மற்றும், "தேவரும் தொழுகழற் சிறுவன்" (22) என்றும், "உம்பரும் இம்பரும் உரகரும் தொழவுளான்" (20) என்றும், "ஆதிவானவர் பிரான்" (34) என்றும், புகழ்ந்து இராமனது தெய்வத்தன்மையைக் கவி குறித்தார். சீதையைத் திருமகளாகக் கூறியது போன்றே இராமனையும் 'திருமாலாகவே கூறுவர்'. வான்மீக முனிவர் இராமபிரானை அவதாரமாகக் கூறினும் காப்பியம் முழுவதிலும் அவனை ஓர் மனிதனாகவும், மனிதருள் மாணிக்கமாகவுமே கூறிச் செல்வர். போர்ப் பகுதியைக் கூறும் காண்டத்தில் பிரமன் முதலியோர் இராமனை வணங்கி அவனே பரம்பொருளாகிய திருமால் எனக் கூறியபோது, இராமன் தான் ஓர் மனிதனே என்றும் தயரதன் மைந்தனாகவே தன்னைத் தான் நினைத்திருந்ததாகவும் கூறினன் என்பது முதனூலால் விளங்கும். கம்பர் அவதாரம் என்ற சொல்லை விளக்குவார் போன்று "வானின்றிழிந்து வரம்பிகந்த மாபூதத்தின் வைப்பெங்கும் ஊனும் உயிரும் உணர்வும் போல் உள்ளும் புறத்தும் உளன் என்ப" என்று கூறி அவதார மறையை வெளியிடுவதோடு நில்லாது பல இடங்களிலும் இராமனது தெய்வத் தன்மையைக்

குறித்துச் செல்வர். முதனூலிலிருந்து கம்பர் வேறுபட்ட பல இடங்களில் இஃதும் ஒன்ருகும். தேவர்பொருட்டே இப்பூவுலகில் இராமன் உருவத்திருமேனி கொண்டான் என்பதை, "அரக்கர் பாவமு மல்லவரியற்றிய அறமும் துரக்க நல்லறம் துறந்தனள் தூமொழி மடமான்" (மந்தரை. 78) என்றும், "தேவர் உள்ள மும் வெந்தனர் மேல்வரும் உறுதி வேண்டலார்" (நகர் நீங்கு. 172) என்றும், "தேவர்செய் தவத்தினுற் செம்மல் ஏகினுன்" (சடாயுஉயிர். 19) என்றும், "காந்தையருக்கணியனைய சானகி யார் பேரழகும் அவர்தங் கற்பும், ஏந்துபுயத்திராவணனுர் காத லும் அச்சூர்ப்பணகை இழந்த மூக்கும், வேந்தர்பிரான் தயரதனுர் பணியினுல் வெங்கானில் விரதம் பூண்டு போந்ததுவும் கடை முறையே புரந்தரனுர் பெருந்தவமாய்ப் போயிற்றம்மா" (இராவ ணன் வதை, 240) என்றும் கூறிய பகுதிகள் கொண்டு அறிய லாம். மற்றும் "அராவணைத் துயில்வோயென அந்நாள், விராவி யளித்தருள் மெய்ப்பொருளுக்கே, இராமனெனப் பெயர் ஈந்த னன்" திருவவ. 118); "முப்பரம் பொருளுக்கு முதல்வன்" (திருவவ. 137); "திருவின் கேள்வனைக் கொணர்மின்" (கையடைப். 16); "சங்குறை கரத்தொரு தனிச்சிலை தரித்தான்" (தாடகை. 45); "தொல்லாழித் துயிலாதே துயராழி நெடுங் கடலுள் துயில்கின்ருனே" (மிதிலைக். 154); "எங்கள் செய் தவத்தினி லிராமனென வந்தோன் சங்கினெடு சக்கரமுடைத்தனி முதற்பேர்" (கோலங்காண். 32); "மூவுலகும் ஈன்ருனை முன் னீன்ருனை" (குகப். 65); "வாராதே வரவல்லாய்" (விராதன். 55); "ஒருவினையும் இல்லார்போல் உறங்குதியால் உறங்காதாய்" (விராதன் 57); "மூன்று கவடாய் முளைத்தெழுந்த மூலமோ" (கவந்தன். 42); "மூலமே யில்லா முதல்வனே" (கவந்தன். 43); "மறைகளு முனிவர் யாரும் மலர்மிசை யயனு மற்றத் துறை களும் பிறவும் எல்லாம் துணிபொருள் துணிவில் தூக்கி, அறை கழல் இராமனுகி அறநெறி நிறுத்த வந்த இறை" (வாலி. 132); "மும்மைசால் உலகுக்கெல்லாம் மூலமந்திரத்தை முற்றும் தம்மையே தமர்க்குநல்கும் தனிப்பெரும் பதத்தை" (வாலி. 71) "மேலொரு பொருளுமில்லா மெய்ப்பொருள் வில்லுந்தாங்கிக் கால்தரை தோயநின்று கட்புலக் குற்றதம்மா, மால்தரும் பிறவி நோய்க்கு மருந்தினை" (வாலி. 148); "அரவினீங்கிய தேவனே யவன்" (காட்சி. 66); "ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும் விட்டயோத்தி வந்தான்" (பிணிவீட்டு. 80); "வருவாய் போல வாராதாய்" (பிரமாத்திர. 228) என்பன போன்ற பகுதிகள் கொண்டு இராமன் தெய்வத்தன்மையைக் கம்பர் தமது பெருங் காப்பியத்துள் ஆங்காங்குக் கூறிச் செல்வது காண்க.

---

# 18. எதிர்கொள் படலம்

### தயரதன் சேனையுடன் கங்கையை அடைதல்

1114. அடாநெறி யறைதல் செய்யா
★ வருமறை யமைந்த நீதி
விடாநெறிப் புலமைச் செங்கோல்
வெண்குடை வேந்தர் வேந்தன்
படாமுக மலையிற் றோன்றிப்
பருவமொத் தருவி பல்கும்
கடாநிறை யாறு பாயுங்
கடலொடுங் கங்கை சேர்ந்தான்.

அடா நெறி அறைதல் செய்யா,
அரு மறை அமைந்த நீதி
விடா நெறிப் புலமைச் செங்கோல்
வெண் குடை வேந்தர் வேந்தன்,
படாம் முக மலையில் தோன்றிப்
பருவம் ஒத்து அருவி பல்கும்,
கடாம் நிறை ஆறு பாயும்
கடலொடும் கங்கை சேர்ந்தான்.

பொ:—பொருந்தாத நெறிகளை உரையாத உணர்தற்கரிய மறைகளில் அடங்கிய நீதிகளைக் கைவிடாத முறையையுடைய புலமை நிறைந்தவனும், (நெறி வழுவாத) செவ்விய அரசாட்சியையும் வெண்குடையையும் உடையவனும் அரசர்க்கரசனுமான தயரதன், நெற்றிப்பட்டம் அணிந்த முகத்தையுடைய (யானைகளாகிய) மலையில் தோன்றி மாரிக்காலத்தை ஒத்து அருவிபோல் பெருகும்படியான மதநீராகிய நிறைந்த ஆறுபாயும் (படைக்)கடலொடும் கங்கையைச் சேர்ந்தான்.

கு:—கார்காலத்து மலைகளினின்றும் அருவியாகத் தோன்றிப் பெருகும் நதிகள் தன்னிடம் கலக்கப்பெற்ற கடல் போன்று, யானைகளாகிய (மலைகளில்) தோன்றிப் பெருகிய மதநீர்த் தாரைகள் வந்து கலக்கும் சேனைக் கடலுடன், தயரதன் கங்கையை அடைந்தான் என்றவாறு. தயரதனது செங்கோல் முறையைச்

"செம்மாண் தனிக்கோல் உலகேழினுஞ் செல்ல நின்றான்" (அரசியல்-1); "தருமத்தின் கவசத்தான், மனுவென்ற நீதியான்" (குலமுறை. 16) என்றமைகொண்டு தெளிக. ஆற்றோடு சென்று கடலையடைவதுண்டு. இங்கே கடலுடன் சென்று ஆற்றை யடைந்தான் என்று கூறிய நயம் காணத்தகும். (1)

### சேனை கங்கைநீரைப் பருகுதல்

**1115.** கப்புடை நாவினாக ருலகமுங்
கண்ணிற் றோன்றத்
துப்புடை மணலிற் றாகிக்
கங்கைநீர் சுருங்கிக் காட்ட
அப்புடை யனீக வேலை
யகன்புனன் முகந்து மாந்த
உப்புடைக் கடலுந் தெண்ணீ
ருண்ணசை யுற்ற தன்றே.

கப்பு உடை நாவின் நாகர் உலகமும்
கண்ணில் தோன்றத்
துப்பு உடை மணலிற்று ஆகிக்
கங்கைநீர் சுருங்கிக் காட்ட,
அப்பு உடை அனீக வேலை
அகன் புனல் முகந்து மாந்த,
உப்பு உடைக் கடலும் தெள் நீர்
உண் நசை உற்றது அன்றே.

பொ :—பிளவுபட்ட நாவினையுடைய நாகர்களின் உலகமும் கண்களுக்குத் தோற்றும்படி, தூய மணலையுடையதாகிக் கங்கை யாறு நீர் குறைந்துகாட்டும்படி, அம்பு முதலிய போர்க் கருவிகளை யுடைய சேனைக்கடல், அகன்ற அந்த (ஆற்றின்) நீரை மொண்டு பருகியதனால் (கங்கை கடலிற்சென்று சேராதாக) உவர்த் தன்மையை உடைய கடலும், தெளிவான அந்தக் கங்கைநீரைப் பருகவேண்டும் என்ற விருப்பத்தை அடைந்தது.

கு :—பாதலம் வரையில் ஆழ்ந்ததாய்க் கோடை நீடினும் குறைபடலறியாததாய்க் கடலிற் சென்று கலக்கும் அக்கங்கை யாற்றில், தயரதனது சேனைக்கண்ணுள்ள யானைகளும் குதிரை களும் வீரர்களும் இறங்கி நீரைப் பருகிய அளவில், ஆற்றில் நீர் குறைந்து மணல் தோன்றப்பெற்று அந்த ஆறு கடல் வரையிற்

செல்லாததாயிற்று என்பது கருத்து. என்றும் இனிய கங்கை நீரைப் பருகிய கடல் இப்பொழுது பருகப் பெருமையின் நீர் வேட்கையுற்றதென்று கூறிச் சேனையின் மிகுதியைக் குறித்த வாறு. மற்றும் ஆழிக்குள்ளிருந்து அதுகாறும் கங்கைப்புனலைப் பருகிநின்ற உயிர்த் தொகுதிகளும் இப்பொழுது கிடைக்கப் பெருமையின் ஏக்கற்றன என்க. 'வெள்ளமேழுபத்துளதால் வீரன்சேனை யிவ் வேலைப் பள்ளம் ஒரு கை நீரள்ளிக் குடிக்கச் சாலும் பான்மையதோ'' (உருக்காட்டு. 115) என்று குரக்குச் சேனை மிகுதியை அநுமன் குறித்தது காண்க. சேனைக் கடல் இடையிட்டுக் கடலிற் கங்கை கலவாமற் செய்தது என நயம்படக் கூறினர். கப்புடை நா - பிளவுண்ட நா. ''கவை நா வருந்தலைக் காண்பின் சேக்கை'' (13, 28) என்பது பரிபாடல். விநதை தன் மாற்றாளாகிய கத்துருவினிடம் அடிமைத்தளை பூண்டதை நீக்க அவள் மகன் கருடன் விண்ணுலகினின்று கொணர்ந்த அமுத கலயத்திலிருந்து சிந்தின அமுதத்தை நக்குகையில் அமுதம் சிந்தப் பெற்ற தருப்பையாற் கீறுண்டு, கத்துருவின் மக்களான அரவங் களின் நாக்கள் பிளவுண்டன என்பது புராண வரலாறு. அம்பு - அப்பு என வலித்தது. (2)

### தயரதன் மிதிலையை அணுகுதல்

**1116.** ஆண்டுநின் றெழுந்து போகி
யகன்பணை மிதிலை யென்னும்
ஈண்டுநீர் நகரின் பாங்க
ரிருநிலக் கிழவ னெய்தத்
தாண்டு மாப்புரவித் தானைத்
தண்ணளிச் சனக னென்னும்
தூண்டரு வயிரத் தோளான்
செய்தது சொல்ல லுற்றும்.

**ஆண்டு நின்று எழுந்து போகி,**
**அகன் பணை மிதிலை என்னும்,**
**ஈண்டு நீர் நகரின் பாங்கர்**
**இரு நிலக் கிழவன் எய்தத்**
**தாண்டும் மாப் புரவித் தானைத்**
**தண் அளிச் சனகன் என்னும்,**
**தூண் தரு வயிரத் தோளான்**
**செய்தது சொல்லல் உற்றும்.**

பொ :—பெரிய பூமிக்குரியவனுன தயரதன் அந்தக் கங்கைக் கரையினின்று புறப்பட்டுச் சென்று, அகன்ற வயல்கள் நிறைந்த மிதிலை என்று சிறப்பித்துக் கூறப்படும் நீர் செறிந்த நகரின் அண்மையில் வரத் தாவிச் செல்கின்ற பெரிய குதிரைச் சேனையை யுடைய குளிர்ந்த (இனிய) அருளுடன் கூடிய சனகன் என்னும் தூணை ஒத்த வன்மையையுடைய புயங்களையுடையவன் செய்ததைக் கூறத் தொடங்கினேம்.

கு :—இது கவிக்கூற்று. ஈண்டுதல் - நெருங்குதல்; ''ஈண்டிய மழையென மருளும்'' (புறம். 17) இரு நிலக் கிழவன் - மாநில மன்னன். ''இரு நிலக் கிழவர் உரிமை மகளிரொடு'' (பெருங். 2, 6, 147). தூண்தரு - தரு உவம உருபு. பணை - வயல்; ''பெருந்தண்பணை பாழாக'' (புறம். 161) (3)

### சனகன் தயரதனை வரவேற்க எழுதல்

1117. வந்தனன் அரச னென்ன
மனத்தெழு முவகை பொங்கக்
கந்தடு களிறுந் தேருங்
கலினமாக் கடலுஞ் சூழச்
சந்திர னிரவி தன்னைச்
சார்வதோர் தன்மை தோன்ற
இந்திர திருவன் றன்னை
யெதிர்கொள்வா னெழுந்து சென்றுன்.

வந்தனன் அரசன் என்ன
மனத்து எழும் உவகை பொங்கக்,
கந்து அடு களிறும் தேரும்
கலின மாக் கடலும் சூழச்,
சந்திரன் இரவிதன்னைச்
சார்வது ஓர் தன்மை தோன்ற,
இந்திர திருவன் றன்னை
எதிர்கொள்வான் எழுந்து சென்றுன்.

பொ :—(தயரதன் தன் தலைநகர் அண்மையில் வந்தடைந்த நற்செய்தியைத் தூதர் வாயிலாகக் கேட்டறிந்த சனகன், கோசலப்) பேரரசன் வந்தடைந்தான் என்ற காரணத்தால்

தனது உள்ளத்தில் எழுந்த மகிழ்ச்சி மேலிட, கட்டுத்தறியை முறிக்கின்ற ஆண் யானைகளும், தேர்களும் கடிவாளம்பூண்ட குதிரைக் கடலும் (தன்னைச்) சூழ்ந்துவர, சந்திரன் கதிரவனைச் சென்றணையும் திறம் விளங்கும்படி இந்திரனது செல்வத்தை யொத்த செல்வமுடையவனான தயரதனை வரவேற்கும்பொருட்டுப் புறப்பட்டுச் சென்றான்.

கு :—இங்கு அரசன் என்றது தயரதனை. கந்து - கட்டுத்தறி. ''கந்துமுனிந் துயிர்க்கும்'' (புறம். 178). கடலைக் களிற்றுக்கும் தேருக்கும் கூட்டுக. கடல் என்பதை மாவொன்றற்கேயியைத்து ஒன்றன்பின் ஒன்றாகத் தாவி வருகின்ற அலைவரிசைபோல ஒழுங்கு பட்ட குதிரைநிரை என்று கூறலுமாம். ''இந்திர திருவன்'' ''இந்திர திருவற்கு'' (சிந்தா. 1264) என்றது காண்க, (4)

### மிதிலை மாந்தரும் உடன்வருதல்

**1118.** கங்கைநீர் நாடன் சேனை
 மற்றுள கடல்கள் எல்லாம்
சங்கின மார்ப்ப வந்து
 சார்வன போலச் சாரப்
பங்கயத் தணங்கைத் தந்த
 பாற்கடல் வருவதே போல்
மங்கையைப் பயந்த மன்னன்
 வளநகர் வந்த தன்றே.

கங்கை நீர் நாடன் சேனை,
 மற்று உள கடல்கள் எல்லாம்
சங்கு இனம் ஆர்ப்ப வந்து
 சார்வன போலச் சாரப்,
பங்கயத்து அணங்கைத் தந்த
 பாற்கடல் வருவதே போல்,
மங்கையைப் பயந்த மன்னன்
 வளநகர் வந்தது அன்றே.

பொ :—(நீர் வளம் செறிந்த) கங்கை பாயும் கோசல நாட்டுத் தலைவனாகிய தயரதனது படைகள், பாற்கடல் ஒழிந்த பிறகடல்கள் எல்லாம் சங்குத் தொகுதிகள் பேரொலி செய்யும்படி வந்து அடைவனபோல அடையாநிற்கத் தாமரையில் (வீற்றிருக்கும்)

திருமகளை உதவிய பாற்கடலானது (பிறகடல்களை) எதிர்வது போலச் சீதையைப் பெற்ற அரசனது வளஞ்சான்ற நகர மாந்தர் எதிர்கொண்டுவந்தனர்.

கு:—சனகன் படைக்குப் பாற்கடலையும், தயரதன் படைகளுக்கு அஃதொழிந்த பிறகடல்களையும் உவமித்தார். சரயுநதி தான் கோசலநாட்டாறெனினும் அந்நாட்டின் பரப்பு கங்கை வரையில் விரிந்ததாதலின் கங்கைநீர்நாடன் என்றார். இலக்குவனைக் கங்கைக்கிறைவன் (நகர் நீங்கு. 117) என்றதும் காண்க. பிறகடல்கள் உவர்க்கடல், கருப்பஞ்சாற்றுக்கடல் முதலிய ஆறு கடல்களுமாம். சேனைகளின் செலவிலும் சங்கொலி கேட்கப்பெறுதலின் சங்கின மார்ப்ப என்றதைக் கடல், சேனை இரண்டிற்கும் கொள்க. முதனூல் ஆசிரியராகிய வான்மீக முனிவர் போலன்றிக் கம்பர் சீதையைத் திருமகளாகவே கூறிச் செல்வர். "சனகியாம் கடிகமழ்கமலத்தௌவை" (மந்தரை. 88) என்றது காண்க. நகர் என்பது நகரமக்களை. (5)

### சனகன் படை வருணனை

1119. இலைகுலா வயிலினு
★ னனிகமே ழெனவுலாம்
நிலைகுலா மகரநீர்
நெடியமா கடலெலாம்
அலகின்மால் களிறுதேர்
புரவியா ளெனவிராய்
உலகெலா நிமிர்வதே
பொருவுமோ ருவமையே.

இலை குலாவு அயிலினன் அனிகம், ஏழ் என உலாம்
நிலை குலாம் மகர நீர் நெடிய மா கடல் எலாம்,
அலகு இல் மால் களிறு தேர் புரவி ஆள் என விராய்,
உலகு எலாம் நிமிர்வதே பொருவும் ஓர் உவமையே.

பொ:—இலையைப்போன்று ஒளிர்கின்ற வேலையுடைய சனகனது சேனைக்கு (உவமை காணப் புகுமிடத்து) சுறா மீன்கள் உலாவும், ஏழு என்னும் எண்ணைக்கொண்டனவாகி, நிலைபெற்று விளங்கும் நீர்நிறைந்த நீண்டகன்ற கடல்கள் யாவும் வரம்பில்லாத பெரிய யானைகளும் தேர்களும் குதிரைகளும் காலாட்

படைகளும் என்னும் நான்குவகை வடிவுடன் கலந்து, உலகம் முழுவதும் பொங்கிப் பரந்து வருவதே பொருந்தியதோர் உவமையாம்.

கு :—கடல்கள் ஏழும் யானை முதலிய நால்வகைப் படைகளின் வடிவாக உலகிற் பரந்தனபோலச் சனகனது சேனைகள் பரவின என்பது கருத்து. சுறவினமாகிய மகர மீன் வதிதலால் கடலை மகரநீர் என்றார். இனி 'இலைகுலா வயிலினான்' என்ற தொடர் தயரதனைக் குறிப்பதாகக்கொண்டு பொருள் கூறுவாரும் உண்டு. (6)

### சேனை தாமரைக் குளத்தை ஒத்தமை

**1120.** தொங்கல்வெண் குடைதொகைப்
 பிச்சமுட் படவிராய்
எங்கும்விண் புதைதரப்
 பகன்மறைந் திருளெழப்
பங்கயஞ் செய்யவும்
 வெளியவும் பலபடத்
தங்குதா மரையுடைத்
 தானமே போலுமே.

**தொங்கல் வெண் குடை தொகைப் பிச்சம் உட்பட விராய்,**
**எங்கும் விண் புதைதரப், பகல் மறைந்து இருள் எழப்,**
**பங்கயம் செய்யவும் வெளியவும் பல படத்**
**தங்கு தாமரை உடைத் தானமே போலுமே.**

பொ :—தூங்கும் குஞ்சமணிந்த வெண்கொற்றக் குடைகளும் தொகுதியான மயிற்பீலிக் குஞ்சங்களும் (இன்னும் கவரி கொடி முதலிய) அரச சின்னங்களும் கலந்து (அதனால்) எவ்விடத்தும் விண்ணகம் மறைவதனால் கதிரவன் ஒளி மறைபட்டு இருள் தோன்ற (அச்சேனை, வெண்குடைகளும் செந்நிறக் குஞ்சங்களும் விரவியதால்) செந்நிறத்தனவும் வெண்ணிறத்தனவுமான தாமரைகள் பல தோன்றிப் பொருந்திய தாமரைவாவியே போலும்.

கு :—அரச சின்னங்களால் ஆகாயம் மறைபடச் சூரியன் ஒளி மறைந்து இருள் உண்டாயிற்று. அப்பொழுது சேனை வெண்குடைகளும் செந்நிறப் பிச்சங்களும் ஒளிர்தலால் வெண்டாமரையும் செந்தாமரையும் நிறைந்த தாமரைக் குளத்தை ஒத்தது.

என்பது கருத்து. தொங்கல்-குடைகளின் விளிம்பிற்றூங்கவிட்ட குஞ்சங்கள். இவை வெண்ணிறக்குடைகளுடன் மாறுபட்டு ஒளிருமாறு செந்நிறமாக அமைந்தவை. இச் செய்யுட் கருத்தைக் "குடையொடு களிறுந் தொங்கற் குழாங்களும் கொடியின் காடும் இடையிடை மயங்கியெங்கும் வெளிகரந்திருளைச் செய்யப், படைகளும் முடியும் பூணும் படர்வெயில் பரப்பிச்செல்ல, இடையொரு கணத்தினுள்ளே யிரவுண்டு பகலும் உண்டே" (எழுச்சிப். 56); "பல்பெரும் பதாகைப்பத்தி மீமிசைத் தொடுத்த பந்தர், செல்ல வெங்கதி ரொண்கற்றை முற்றவுந் தெரியாவண்ணம்" (மகரக் கண்ணன். 8) என்ற செய்யுட்களுடன் ஒப்பு நோக்குக. (7)

### எங்கும் திருமகளின் விளக்கம்

1121 கொடியுளா ளோதனிக்
குடையுளா ளோகுலப்
படியுளா ளோகடற்
படையுளா ளோபகர்
மடியிலா வரசன்மார்
பினிலுளா ளோவளர்
முடியுளா ளோதெரிந்
துணர்கிலா முளரியாள்.

கொடி உளாளோ? தனிக் குடை உளாளோ? குலப்
படி உளாளோ? கடல் படை உளாளோ? பகர்
மடி இலா அரசன் மார்பினில் உளாளோ? வளர்
முடி உளாளோ? தெரிந்து உணர்கிலாம், முளரியாள்.

பொ :— செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள் சிறப்பித்துச் சொல்லப்படுகிற சோம்பலில்லாத அரசியல் நெறியினையுடைய (மன்னனது) மார்பகத்தில் இருக்கின்றாளோ, (அவனது ஆட்சிச் சின்னமாகிய) கொடியினிடத்து இருக்கின்றாளோ, ஒப்பற்ற அவனது கொற்றக்குடையிலிருக்கின்றாளோ, குலத்திற்குரிய (வழிவழியாக வந்த அவனது) நாட்டின்கண் உள்ளாளோ, அல்லது (கீர்த்தி) வளர்கின்ற அவனது முடியின்கண் இருக்கின்றனளோ, அவள் இல்லாத இடம் இன்றாகலின் (இன்ன இடத்தாளென்று) ஆராய்ந்து அறியும் ஆற்றல் இலம்.

கு :—"மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான் தாஅய தெல்லாம் ஒருங்கு" (610) என்ற குறட் கருத்தை இங்கே

காணலாம், பகர் மடி என்பதற்குப் பேரறிஞர் மிகக் கொடியது என்று கூறும் மடியென்று கூறி, அந்த மடிமைத்தன்மை யற்றவன் என்று கூறலும் ஆம்; ''நெடுநீர் மறவி மடி துயில் நான்கும், கெடுநீரார் காமக்கலன்'' (குறள் 605) என்பது தமிழ் மறை யாகலின். (8)

### பலவகை ஒலி எழுதல்

1122. வார்முகங் கெழுவுகொங்
கையர்கருங் குழலின்வண்
டேர்முழங் கரவமே
ழிசைமுழங் கரவமே
தேர்முழங் கரவம்வெண்
டிரைமுழங் கரவமே
கார்முழங் கரவம்வெங்
கரிமுழங் கரவமே.

வார் முகம் கெழுவு கொங்கையர் கருங் குழலின் வண்டு
ஏர் முழங்கு அரவம், ஏழ் இசை முழங்கு அரவமே;
தேர் முழங்கு அரவம், வெண் திரை முழங்கு அரவமே;
கார் முழங்கு அரவம், வெம் கரி முழங்கு அரவமே.

பொ :—கச்சின்கண் நிறைந்து விளங்கும் தனங்களையுடைய மகளிரின் கரிய கூந்தலில் வண்டுகள் அழகாக ஒலிக்கின்ற ஒலி ஏழிசைகள் ஒலிக்கின்ற ஒலியே; தேர்கள் ஒலிக்கின்ற ஒலி வெள்ளிய அலைகளையுடைய கடல் ஒலிக்கின்ற ஒலியே; கடுமை யான யானைகள் பிளிறுகின்ற ஒலி மேகங்கள் குமுறுகின்ற ஒலியேயாம்.

கு :—கெழுவுதல் - பொருந்துதலுமாம். ''கெழுவிப் பெடை யைக் கிளர் சேவல் தழீஇ. (சிந்தா-1187). வண்டுகளின் ஓசையை இசையொலிக்கு உவமையாக்குவதுண்டு. ''கந்தாரம் செய்து களிவண்டு முரன்றுபாட'' என்பது சிந்தாமணி (1159). இச் செய்யுளில் மகளிரின் பெருந்தொகுதியும், யானை தேர்களின் மிகுதியும் கூறினர். (9)

### சேனை எழுப்பிய தூளி

**1123.** சூழுமா கடல்களுந்
திடர்படத் துகள்பரந்
தேழுபா ரகமுமுற்
றுளதெனற் கெளிதரோ
ஆழியா னுலகளந்
தன்றுதாள் சென்றவப்
பூழையூ டேபொடித்
தப்புறம் போயதே.

**சூழும் மா கடல்களும் திடர் படத் துகள் பரந்து,**
**ஏழு பாரகமும் உற்று உளது எனற்கு எளிது அரோ?**
**ஆழியான் உலகு அளந்த அன்று தாள் சென்ற அப்**
**பூழையூடே பொடித்து அப்புறம் போயதே.**

பொ :—(அச்சேனையால் எழுப்பப்பட்ட) தூளி உலகைச் சுற்றியுள்ள பெரிய கடல்களும் மேடுபடும்படி பரந்து ஏழுலகங்களிலும் படிந்திருந்தது என்று சொல்லுவதற்கு எளியதோ? சக்கரப் படையையுடைய திருமால் (மாவலிபால் மண் வேண்டி) உலகெலாம் (ஈரடியால்) அளந்த அன்று அவனது வலது திருவடி (விண்ணைத் துளைத்துச் சென்ற) அந்தத் துளைவழியே தோன்றி (நுழைந்து) அவ்விண்ணுக் கப்பாலும் சென்றது.

கு:— துகள் போயது என்க. அரோ, அன்று என்னும் பொருளில் வந்தது. "வீடு பெற்ற விலங்கும் விலங்கரோ" (வாலி. 109) என்றது காண்க. அளந்த அன்று என்பது அகர வீறுதொக்கது. ஏழுலகங்களில் மட்டும் அத்தூளி பரக்கவில்லை அவற்றிற்கு அப்பாலும் நுழைந்தது என்று தூளியின் மிகுதியைக் குறித்தார். இனி எளிது என்பதற்கு எளியது என்று கொண்டு, அரோ என்பதை அசையாக்கி அத்தூளி அண்டத்தின் புறத்துச் சென்றது என்றதனால் ஏழுலகங்களிலும் பரவியது என்பது தானே போதரும் என்க. பூழை - சிறுதுளை; "புகையும் புகற்கரிய பூழை நுழைந்து" (நாலடி. 282) ஏழுலகங்கட் கப்பால் புற அண்டங்கள் உள என்று கம்பர் பலஇடங்களிலும் கூறிச் செல்வர்; "புகல் புகுந்திலரேற்புறத் தண்டத்தின் அகல்வரேனும்" (அகத்தியப். 17) "அண்டத்தைப் பொதுத் தப்புறத் தப்பினால் ஆடும்" (இரணியன். 4) "இற்றையண்டத்தின் அளவினோ விதன்புறத் துலவாமற்றைபண்டமும்" (இரணியன் 2) என்பன காண்க. (10)

### குடைகளும் அணிகலங்களும்

**1124.** மன்னெடுங் குடைமிடைந்
தடையவான் மறைதரத்
துன்னிடுந் நிழல்வழங்
கிருடுரப் பெளிதரோ
பொன்னிடும் புவியிடும்
புனைமணிக் கலனெலாம்
மின்னிடும் வில்லிடும்
வெயிலிடும் நிலவிடும்.

**மன் நெடுங்குடை மிடைந்து அடைய, வான் மறைதரத்,
துன்னிடும் நிழல் வழங்கு இருள் துரப்பு எளிது அரோ?
பொன் இடும், புவி இடும், புனை மணிக் கலன் எலாம்,
மின் இடும், வில் இடும், வெயில் இடும், நிலவு இடும்.**

பொ:—மன்னரது உயர்ந்த குடைகள் நெருங்கி நிறைய (அதனால்) ஆகாய முழுதும் மறையுமாறு அடர்ந்த நிழல் உண்டு பண்ணுகின்ற இருளைப் (பிறிதொன்றால்) போக்குவது எளிதோ? எளிதன்று. (எனினும்), அந்தப் பூமியில் உள்ளார் (சேனைகள்) அணிந்த பொன்னாற் செய்யப்பட்ட அணியத்தக்க (பலவித) மணியணிகள் எல்லாம் மின்னல் ஒளியை வீசும், இந்திர வில்லின் ஒளியை வீசும், கதிர் ஒத்த ஒளியை வீசும், நிலவின் ஒளியையும் பரப்பும் (இவற்றால்) அவ்விருள் அகன்றது.

கு:—சேனையில் உள்ளார் அணிகலன்களின் பேரொளியால் குடை முதலியவற்றான் உண்டான இருள் ஒழிந்தது என்பது கருத்து. இனி எளிது என்றே கொண்டு அரோ என்பதை அசையாக்கி, மணிக்கலன்களால் இருள் அகலும் என்று கூறலும் ஆம். இஃதன்றி மணிக்கலன்கள் பல்வேறு ஒளியை விரிப்பினும் குடைகளானெழுந்த இருளைப் போக்குவது எளிதன்று என்று கூறிக் குடை முதலியவற்றின் மிகுதியைக் குறித்தலுமாம். புவி இடவாகு பெயராய் அதன் மீது செல்லும் சேனையை உணர்த்திற்று. புவியிடும் என்பதற்குச் சேனையிலுள்ளார் செல்லும்போது பூமியில் உதிர்க்கின்ற என்றும் கொள்ளலாம். படையின் ஒளிமிகுதியால் இருள் இரிந்ததை, "எரிந்தெழு பல்படை யின்னொளி வீரர், அருங்கல மின்னொளி தேர்பரி யானை, பொருந்திய பண்ணொளி தாரொளி பொங்க, இரிந்தது பேரிருள் எண்டிசை யெங்கும்" (படைத் தலைவர் 28) என்றதுகொண் டுணர்க.

"குடைகள் நெருங்கி மறைத்தலால் ஆகாயத்தினின்று கீழ் வருகின்ற மின், வில், வெயில், நிலவு ஆகிய நால்வித ஒளிகளும் தடுப்புண்ண, மன்னவர் செல்வழி உகுத்த அணிகலன்கள், மேகம் வானவில் கதிரவன் சந்திரன் இவைகளுக்குப் பதிலாய் அமைந்து அதாவது தனித் தனியே தருகின்ற பல்வேறு ஒளிகளைத் தாமே கீழ்நின்று மேல் போகச் செலுத்தின. எனவே குடைகள் மிடைந்து இருள் அற்றது என்பது சேஷாசலம் குறிப்புரை. (11)

## சனகன் எதிர்கொளவரும் வழியின் காட்சி

1125. தாவின்மன் னவர்பிரான்
வரமுரட் சனகனும்
ஏவருஞ் சிலையினன்
எதிர்வரு நெறியெலாம்
தூவுதண் சுண்ணமுங்
கனகநுண் டூளியும்
பூவின்மென் றாதுகும்
பொடியுமே பொடியெலாம்.

தா இல் மன்னவர் பிரான் வர, முரண் சனகன் ஆம்
ஏ வரும் சிலையினன் எதிர் வரும் நெறி எலாம்,
தூவு தண் சுண்ணமும், கனக நுண் தூளியும்,
பூவின் மென் தாது உகும் பொடியுமே, பொடி எலாம்.

பொ:—கெடுதல் இல்லாத அரசர்க்கரசனை தயரதன் வர. அம்புகள் எய்தற்குப் பொருந்தும் வில்லையுடைய வன்மை வாய்ந்த சனகன் எதிர்கொள்ளச் செல்லும் வழி யெல்லாம் (மங்கலமாகத்) தூவப்படுகிற இனிய நறுமணத் தூளும் பொன்னினின்று உதிர்கின்ற நுட்பமான தூளும் (சேனையில் உள்ளார் அணிந்த மாலைக்கண் உள்ள) பூவின் மெல்லிய மகரந்தத்தில் இருந்து சிந்துகின்ற பொடிகளும் என்ற இவையேயாம் (வேறன்று).

கு:—தா இல் - கெடுதல் இல்லாத; "தாவாவிருப்பொடு" (மருதக்கலி 16); "தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்" (தொல். புறத். 5). இரப்பவர் கடலை ஈந்தே கடந்தவன் ஆகலானும் ஈந்தவர் அல்லது உலகிற் புகழுடன் நிலைபெற்றவர் பிறர் இலராகலானும் உளதாகும் சாக்காடு வித்தகர்க்கே உரியதாகலானும், மண்ணின் மெல் வான் புகழ் நட்டானே சாவாவுடம்பு எய்தினவன் எனக் கூறப்படுதலானும், புகழல்லால் பொன்றுது நிற்பதொன்றில்

ஆகலானும் அத்தகைய அழியாப் புகழ் பெறற்குரியவன் ஆக லானும் தயரதனைத் தாவில் மன்னவன் என்றார். இனி, தாவின் என்பதற்கு வலியுடன் கூடிய என்றுமாம். ''தாவே வலியும் வருத்தமுமாகும்'' (தொல். சொல். 344). தா இல்-எனப் பிரித்துக் குற்றமற்ற என்றும் பொருள் கொள்ளலாம்; அவை செருக்கு, சினம், சிறுமை, இவறல், மாண் பிறந்த மானம் என்பர் வள்ளுவர் (குறள். 431). ''தாவில் வெண் கவிகை'' (கோலங்காண். 1) என்றது காண்க. (12)

## வழியிற் படர்ந்த சேற்றின் தன்மை

1126. நறுவிரைத் தேனுநா
னமுநறுங் குங்குமச்
செறியகிற் றேய்வையு
மான்மதத் தெக்கரும்
வெறியுடைக் கலவையும்
விரவுசெஞ் சாந்தமும்
செறிமதக் கலுழிபாய்
சேறுமே சேறெலாம்.

நறு விரைத் தேனும், நானமும், நறும் குங்குமச்
செறி அகில் தேய்வையும், மான்மதத்து எக்கரும்,
வெறி உடைக் கலவையும், விரவு செஞ்சாந்தமும்,
செறி மதக் கலுழி பாய் சேறுமே, சேறெலாம்.

பொ :—(சேனைகள் செல்கின்ற வழியிலுள்ள) சேறெல்லாம், (குழலில் அணிந்த மாலைகளிலிருந்து துளிக்கின்ற) நறுமணம் தங்கிய தேனும், (கூந்தலினின்று ஒழுகும்) மயிர்ச் சாந்தும், நல்ல மணமுள்ள குங்குமம் செறிந்த அகில் தேய்வையும், கத்தூரியின் வண்டலும், மணமிக்க பலவகைப் பொருள்களும் கலந்த செஞ் சந்தனமும், மிகுதியாகப் பொருந்திய மதஆறும் ஒழுகுதலாலாகிய சேறுமேயாம். (13)

## நிழல்களின் தன்மை

1127. மன்றலங் கோதையார்
மணியினும் பொன்னினும்
சென்றுவங் துலவுமச்
சிதைவிலா நிழலினேர்

வென்றதிண் கொடியொடும்
நெடுவிதா னமும்விராய்
நின்றவெண் குடைகளின்
நிழலுமே நிழலெலாம்.

மன்றல் அம் கோதையார், மணியினும் பொன்னினும்,
சென்று வந்து உலவும், அச் சிதைவு இலா நிழலின் நேர்
வென்ற திண் கொடியொடும் நெடு விதானமும் விராய்
நின்ற, வெண் குடைகளின் நிழலுமே நிழல் எலாம்.

பொ :–(அவ்வழியிற் காணப்படும்) நிழல்கள் எல்லாம், இயற்கைமணம் செறிந்த அழகிய கூந்தலையுடைய மகளிர் (அணிந்த) நவமணிகளானும் பொன்னானும் இயன்ற அணிகளிலிருந்து விட்டு விட்டு வெளிப்படுவதாகிய துண்டுபடுதல் இல்லாத (தொடர்ந்த) அந்நிழலோடு, அழகிய பகைவரை வெற்றி கொண்ட உறுதியான கொடிகளுடன் நீண்ட மேற்கட்டிகளும் கலந்து நின்ற வெண் கொற்றக் குடைகளின் நிழல்களேயாம். (14)

## இருவர் சேனையும் சந்தித்தல்

1128. மாறிலா மதுகையான்
வருபெருந் தானைமேல்
ஊறுபே ருவகையா
னனிகம்வந் துற்றபோ
தீறிலோ தையினெடு
மெறிதிரைப் பரவைமேல்
ஆறுபாய் கின்றதோ
ரமலைபோ லானதே.

மாறு இலா மதுகையான் வரு பெரும் தானை மேல்,
ஊறு பேர் உவகையான் அனிகம் வந்து உற்ற போது,
ஈறு இல் ஓதையினெடும் எறி திரைப் பரவை மேல்,
ஆறு பாய்கின்றது ஓர் அமலை போல் ஆனதே.

பொ :—நிகரற்ற வன்மையையுடைய தயரதனது (தொடர்ந்து) வருகின்ற பெரிய சேனையை நோக்கி, மேன்மேற் பெருகுகின்ற பெருமகிழ்ச்சியுடன் கூடிய (சனகனது) சேனை வந்து கலந்தபோது (எழுந்த ஒலி), முடிவில்லாத முழக்கத்துடன்

வீசுகின்ற அலைகளையுடைய கடலின்மீது ஆறுகள் சென்று கலப்பதனால் எழுவது போன்ற ஒலியை ஒத்திருந்தது.

கு :—" மாறு "—ஒப்பு " மாறன்மையின் மறம் வாடுமென் றிளையோரையுமெறியான்" (சிந்தா. 261). மதுகை – வலி; "மண்டமர் பல கடந்து மதுகையானீறணிந்து" (கலித். கடவுள்). மாறிலா மதுகை என்பதற்குப் போர்முகத்தில் மாறுதலில்லாத வலி என்றும் கூறலாம். (15)

### தயரதனைக் காணச் சனகன் வருதல்

1129. கந்தையே பொருகரிச்
சனகனுங் காதலோ
டுந்தவோ தரியதோர்
தன்மையோ டுலகுளோர்
தந்தையே யனையவத்
தகவினன் முன்புதன்
சிந்தையே பொருநெடுந்
தேரின்வந் தெய்தினன்.

கந்தையே பொரு கரிச் சனகனும், காதலோடு
உந்த, ஓதரியது ஓர் தன்மையோடு, உலகு உளோர்
தந்தையே அனைய அத் தகவினன் முன்பு, தன்
சிந்தையே பொரு நெடும் தேரின் வந்து எய்தினன்.

பொ :—இத்தன்மைத்தென்று எடுத்துக் கூறற்கரிய (கொடை, அளி, செம்மை முதலிய நற்பண்புகள் நிறைந்த) தன்மையோடு, உலகில் உள்ளார்க்குத் தந்தையே ஒத்த அழகிய தகுதியையுடைய தயரதற்குமுன், கட்டுத்தறியையே மோதி முறித்துத் தள்ளுகின்ற யானைச் சேனையையுடைய சனகனும் (தயரதனைக் காணவேண்டுமென்ற) ஆசையினால் செலுத்தப்பட்டு (வேகத்தால்) தனது மனத்தையே ஒத்த உயர்ந்த தேரின்மீது வந்துசேர்ந்தான்.

கு :—கந்தையே பொருகரி என்றமையின் வேறு பகையின்மை பெறப்படும். " சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடனே " (புறம். 312) என்றதற் கேற்பத் தானும் சான்றோனாய்த், தன்னைச் சார்ந்தோரையும் சான்றோராக்கும் இயல்பு வாய்ந்தவன் என்பார், தந்தையே யனைய என்றார். மூவுலகு மீன்றானை முன்னீன்றானாகிய இராமனுக்குத் தந்தையாகலானும் தயரதனை உலகுளோர் தந்தை என்றார் எனினும் ஆம். (16)

### தயரதன் சனகனைத் தழுவுதல்

**1130.** எய்தவத் திருநெடுந்
　　தேரிழிந் தினையதன்
மொய்கொடிண் சேனைபின்
　　னிற்கமுன் சேறலும்
கையின்வந் தேறெனக்
　　கடிதின்வந் தேறினான்
ஐயனும் முகமலர்ந்
　　தகமுறத் தழுவினான்.

எய்த, அத் திரு நெடும் தேர் இழிந்து, இனைய தன்
மொய் கொள் திண் சேனை பின் நிற்க, முன் சேறலும்,
கையின் வந்து ஏறு எனக் கடிதின் வந்து ஏறினான்:
ஐயனும் முகம் மலர்ந்து அகம் உறத் தழுவினான்.

பொ :—அணுகும்படி வந்து அந்த வெற்றித் திரு (இடங்கொண்ட) உயர்ந்த தேரினின்று இறங்கி, இப்படிப்பட்ட (தன்னுடன் வந்த) வன்மை வாய்ந்த உறுதியான சேனை பின்னே நிற்கத், தான் முன்னே நடந்து செல்லுதலும், கைகொடுத்து வந்து ஏறுக என்று (தயரதன்) கூற விரைவாக வந்து ஏறினான் (சனகன்). தலைவனாகிய தயரதனும் முகமலர்ந்து தனது மார்பில் நன்கு பொருந்தத் தழுவினான்.

கு :—நம்பத்தக்க உறுதியும், போரிற் பின்னிடாமையும் உடைய சேனை என்பார் திண்சேனை என்றார். கையின் என்பதற்குக் கையினால் சைகை செய்து குறிப்பிக்க எனினுமாம். கை என்பது பக்கமுமாம். முகமலர்ந்து அகமுற என்றதனால் உள்ளும் புறமும் ஒத்து என்க. (17)

### இருவரும் அளவளாவிச் செல்லுதல்

**1131.** தழுவினின் றவனிருங்
　　கிளையையுந் தமரையும்
வழுவில்சிந் தனையினான்
　　வரிசையின் னளவளாய்

எழுகமுந் துறவெனு
வினிதுவந் தெய்தினன்
உழுவைமுந் தரியனு
னெவரினு முயரினன்.

தழுவிநின்று, அவன் இரும் கிளையையும் தமரையும்
வழுவில் சிந்தனையினன், வரிசையின் அளவளாய்,
'எழுக முந்துற' எனு, இனிது உவந்து எய்தினன்
உழுவை முந்து அரி அனன், எவரினும் உயரினன்.

பொ :—புலியின்முன் வந்த சிங்கம் போன்றவனும், யாவரினும் உயர்ந்தவனுமாகிய தயரதன் (அங்ஙனம்) சனகனை அணைத்து, அவனது உறவினர்களையும் நண்பர்களையும் களங்கமற்ற உள்ளத்துடன் (அவரவர் தகுதிக்கேற்ற) முறைப்படி வினவிப் (பின்பு) 'முன்னே செல்க' என்று சொல்லி இனிமையாக மகிழ்ந்து அவனுடன் சென்றடைந்தான். (18)

## இராமன் தயரதனை எதிர்கொள்ள வருதல்

**1132.** இன்னவா றிருவரும்
இனியவா றேகவத்
துன்னுமா நகரினின்
றெதிர்வரத் துன்னினன்
தன்னையே யனையவன்
றழலையே யனையவன்
பொன்னின்வார் சிலையிறப்
புயநிமிர்த் தருளினன்.

இன்ன ஆறு, இருவரும் இனிய ஆறு ஏக, அத்
துன்னும் மா நகரில் நின்று எதிர் வரத் துன்னினன்;
தன்னையே அனையவன், தழலையே அனையவன்,
பொன்னின் வார் சிலை இறப் புயம் நிமிர்த்தருளினன்.

பொ :—இந்த முறையில் (இரு மன்னர்களும்) இனிய வழியில் செல்லும்போது, (இவர்களை) எதிர்கொள்ளத் தன்னையேதான் நிகர்ப்பவனும் (நிறத்திலும் திறத்திலும்) தீயையே ஒத்தவனும் (ஆன சிவபெருமானது), பொன்மலையாகிய மேருவைப்போன்ற நீண்ட வில் ஒடியும்படி (தனது) தோள்களை நிமிர்த்தருளியவனும்

(ஆன இராமபிரான்), அந்த (மிதிலை நகர் மாந்தர் எல்லாம் அரசைக் காண) நெருங்கும்படியான பெரிய நகரினின்று நெருங்கி வந்தான்.

கு:—நிழலும் நீரும் தோப்பும் துரவும் காயும் கனியும் நிறைந்து இன்புறுத்தும் வழியென்பார், 'இனிய ஆறு' என்றார், இனித் தன்னையே யனையவன் இராமன் எனக் கொள்ளலுமாம். தன்னொப்பாரில்லப்பன் (திருவாய் 6. 3. 9). சிவன் கையிலேற்றது மேரு என்ற பொன்மலைவில்லாகலானும், இராமன் இறுத்ததும் சிவனது வில்லேஆகலானும் பொன்னின்வார்சிலை என்றார். "வடவரை வார்சிலை, ஏங்குமாத் திரத்திற்றிரண்டாய் விழ, வீங்கு தோள்" (காட்சிப். 21) என்று பின்னும் கூறியதற்கேற்ப, இங்கும் இராமன் வில்வளைத்ததையே கூறினர். (19)

### இராமன் எதிர்கொண்ட வகை

1133. தம்பியுந் தானுமத்
தானைமன் னவனகர்ப்
பம்புதிண் புரவியும்
படைஞரும் புடைவரச்
செம்பொனின் பசுமணித்
தேரின்வந் தெய்தினன்
உம்பரு மிம்பரும்
உரகருந் தொழவுளான்.

தம்பியும் தானும் அத் தானை மன்னவன் நகர்ப்,
பம்பு திண் புரவியும் படைஞரும் புடை வரச்,
செம்பொனின் பசு மணித் தேரின் வந்து எய்தினன்;
உம்பரும் இம்பரும் உரகரும் தொழ உளான்.

பொ:—விண்ணுலகத்தவரும் இவ்வுலகத்தவரும் கீழ் உலகத்தவரான நாகரும் வணங்க நின்றவனாகிய இராமபிரான், தானும் தம்பியும், சேனையையுடைய அந்தச் சனகமன்னவனது தலைநகரினின்றும், பரந்த வன்மைவாய்ந்த குதிரைப்படைகளும் காலாட்களும் அண்மையில் வர, செம்பொன்னில் மரகதமணிகளிழைத்துச் செய்த தேரின்மேல் (தன் தந்தையை எதிர்கொள்ள) வந்து சேர்ந்தான்.

கு :—தானைமன்னவன்-சனகன். இராமனுடன் வந்த சேனை சனகனது சேனையே. மூவுலகும் தொழநின்ற இராமன், சேனைகள் சூழ்வரத் தன் தம்பி இலக்குவனுடன் தன் தந்தையை எதிர் கொள்ள வந்தான் என்பது கருத்து. தானை மன்னவன் எதிர் என்ற பாடத்திற்குத் தயரதன் எதிரே என்று கொள்க. (20)

## இருவருடன் வந்த சேனையின் பெருக்கம்

**1134.** யானையோ பிடிகளோ
விரதமோ விவுளியோ
ஆனபே ருறையிலா
நிறைவையா ரறிகுவார்
தானையேர் சனகனே
வலினெடுந் தாதைமுன்
போனபே ரிருவர்தம்
புடைவரும் படையினே.

யானையோ பிடிகளோ இரதமோ இவுளியோ,
ஆன பேர் உறை இலா நிறைவை யார் அறிகுவார் ?
தானை ஏர் சனகன் ஏவலின், நெடும் தாதை முன்,
போன பேர் இருவர் தம் புடை வரும் படையினே.

பொ :—பெருமைவாய்ந்த தந்தையாகிய (தயரதன்) முன் சென்ற (நற்பண்புகளாற்) பெருமைபெற்ற (இராம இலக்குவ ராகிய) இருவர் அருகில், அழகிய சேனையைக்கொண்ட சனகனது கட்டளைப்படி, வரும் படைகளில், களிற்று யானைகளோ, பெண் யானைகளோ, தேர்களோ, குதிரைகளோ, (இவற்றுள் எவையோ) மிகுதியாகப் பொருந்திய பெரிய உறை என்னும் இலக்கமிட்டும் எண்ணமுடியாத (அந்த யானை முதலியவற்றின்) நிறைவை எவரே அறிந்து கூற முடியும்? ஒவ்வொரு பகுதியும் எண் ணிறந்தன.

கு :—பொருள்களை எண்ணிக் கணக்கிடுங்கால் எண் மறவாதிருத்தற்பொருட்டு ஒவ்வொரு பெருந்தொகைக்கும் ஒவ் வொன்றாக ஓர் கழற்சிக்காய் அல்லது குன்றிமணியை இடுவது வழக்கம். இதனை உறை என்பர். ''ஒழிந்த பேருயிர்களெல்லாம் அரக்கருக் குறையும் போதா'' (ஊர்தேடு. 34); ''அம்பண வளவை யுறை குறித்தாங்கு'' (பதிற். 11, 5); ''இவ்வரக்கர் ......உறையிடவும் போதார் கணக்கு வரம்புண்டோ'' (உருக் காட்டு. 118) என்பன காண்க. (21)

## இராமன் தந்தையை அணுகுதல்

**1135.** காவியுங் குவளையுங்
கடிகொள்கா யாவுமொத்
தோவியஞ் சுவைகெடப்
பொலிவதோ ருருவொடே
தேவருந் தொழுகழற்
சிறுவன்முன் பிரிவதோர்
ஆவிவந் தென்னவந்
தரசன்மா டணுகினான்.

காவியும் குவளையும் கடி கொள் காயாவும் ஒத்து,
ஓவியம் சுவை கெடப் பொலிவது ஓர் உருவொடே,
தேவரும் தொழு கழல் சிறுவன், முன் பிரிவது ஓர்
ஆவி வந்து என்ன வந்து, அரசன் மாடு அணுகினான்.

பொ :—நீலமலரையும் குவளைமலரையும் நறுமணங்கொண்ட காயாம்பூவையும் ஒத்து, ஓவிய உருவமும் (தனது வடிவத்தின் முன்) அழகிழந்ததாகத் தோன்றும்படி விளங்கும் ஒப்பற்ற வடிவத்துடன், தேவர்களும் வணங்கத்தக்க திருவடிகளையுடைய இளங்குமர (ன் இராமபிரான்), முன்னர்த் தயரதனை விட்டு நீங்கிய உயிர் (மீண்டும்) அவன் உடலில் வந்து கூடினாற்போலத் தயரத மன்னனிடம் சேர்ந்தான்.

கு:—தேவரும் தொழுகழற் சிறுவன் என்று இராமனது தெய்வத் தன்மையைக் குறித்தார். முன்னர்க் கையடைப் படலத்தில் விசுவாமித்திரன் பின்னர் வழிக்கொண்ட மன்னனது உயிர், இப்பொழுது தனக்குரிய இடத்தை வந்தடைந்தது எனக் கூறிய நயம் காண்க. ''ஓவியம் சவிகெட'' என்றும் பாடம் உண்டு. சவி - ஒளி. இடங்கட்கேற்ப இராமனது திருமேனி விளக்கத்தைக் கம்பர் ஆங்காங்குக் கூறிச் செல்வர். ''அல்லை யாண்டமைந்த மேனியழகன்'' (குகப். 42); ''வெய்யோனொளிதன் மேனியின் விரி சோதியின் மறையப்......போனான்'' (கங்கைப். 1); ''ஓவியத் தெழுதவொண்ணா வுருவத்தாய்'' (வாலி. 78) முதலிய இடங்களைக் காண்க. இங்கே உற்ற பொலிவு பிரிந்த தாதையைக் காணப் பெற்றதாலும் அடுத்து நிகழவிருக்கும் சீதாபிராட்டியாரின் திருமணத்தாலும் என்று கொள்க. (22)

### இராமன் தயரதனை வணங்குதல்

**1136.** அனிகம்வந் தடிதொழக்
கடிதுசென் றரசர்கோன்
இனியபைங் கழல்பணிந்
தெழுதலுந் தழுவினன்
மனுவெனுந் தகையன்மார்
பிடைமறைந் தனமலைத்
தனிநெடுஞ் சிலையிறத்
தவழ்தடங் கிரிகளே.

**அனிகம் வந்து அடி தொழக் கடிது சென்று, அரசர் கோன்
இனிய பைங் கழல் பணிந்து எழுதலும், தழுவினன்;
மனு எனும் தகையன் மார்பிடை மறைந்தன, மலைத்
தனி நெடும் சிலை இறத் தவழ் தடம் கிரிகளே.**

பொ:—(பேரரசனான தயரதனது) படைகள் வந்து (தனது) திருவடிகளிற் பணிய விரைந்துபோய், அரசர் பெருமானது (காண்பதற்கு) இனிமையான பசும்பொன்னாற் செய்யப்பட்ட வீரகண்டையணிந்த திருவடிகளை (த் தான்) வணங்கி எழுந்த அளவில், (தயரதன் தன் புதல்வனைத்) தழுவிக்கொண்டான், (அக்காலையில் நீதிநிலைக்களமான) ஆதிமனுப் பேரரசன் என்று (போற்றத்தக்க) தகுதிசான்ற தயரதனது மார்பிடத்து; மேருமலையாகிய ஒப்பற்ற பெரிய வில் ஒடியும்படி கிளர்ந்த இராமனது புயங்களாகிய மலைகள் மறைந்தன.

கு:—தடங்கிரிகள் மனுவெனும் தகையனது மார்பிடை மறைந்தன என்க. தயரதன் சேனை வந்து தன்னைப் பணிய, இராமன் தன் தந்தையின் திருவடிகளைப் பணிந்தான்; தயரதன் தன் தனயனைத் தழுவினன், அவனது மார்பிடை இராமனது மலையன்ன புயங்கள் மறைந்தன என்றவாறு. மார்பிடைத் தோள்கள் மறைந்தன என்றமையால் தயரதனது மார்பின் அகலம் விளங்கும். மனு ஆதித்தன் குலமுதல்வன் என்பதும், தயரதன் முன்னோன் என்பதும் முன்னர்க் குலமுறை கிளத்து படலத்திற் கூறப்பட்டது. மலையை யிறுத்த மலை என்று புயத்தைப் புகழ்ந்தது காண்க. "மலையெடுத்த தனி மலையே இவை காண வாராயோ" (சூர்ப்பணகைப். 101) என்ற தொடர் இங்கே காணத்தகும். (23)

## இலக்குவன் தந்தையை வணங்குதல்

1137. இளையபைங் குரிசில்வந்
 தடிபணிந் தெழுதலும்
தளைவருந் தொடையன்மார்
 புறவுறத் தழுவினன்
களைவருந் துயரறக்
 ககனமெண் டிசையெலாம்
விளைதரும் புகழினு
 னெவரினும் மிகுதியான்.

இளைய பைங் குரிசில் வந்து அடி பணிந்து எழுதலும்,
தளை வரும் தொடையல் மார்பு உற, உறத் தழுவினன்;
களைவு அரும் துயர் அறக், ககனம் எண் திசை எலாம்
விளைதரும் புகழினன், எவரினும் மிகுதியான்.

பொ :—எவராலும் போக்குதற்கரிய (சம்பரன் முதலிய அசுரர்களால் புவிக்கு நேர்ந்த) துன்பம் நீங்கப்பெற்றதனால், விண்ணிலும் எட்டுத்திக்கிலும் பரவிய கீர்த்தியையுடையவனும் (மன்னர்) எல்லோரினும் மிக்கு ஒளிர்பவனுமான தயரதன், பசிய (பொன்னிறம் வாய்ந்த) இளைய குரிசில் (ஆகிய இலக்குவன்) அணுகித் (தன்னுடைய) திருவடிகளை வணங்கி எழுந்த அளவில் (மலர்கள்கொண்டு) தொடுத்தல் அமைந்த மாலையை அணிந்துள்ள தனது மார்பின்கண் பொருந்த நன்றாகப் புல்லினன்.

கு :—சம்பரனைப் பல உலகங்களினும் தொடர்ந்து சென்று வென்றதனால் தயரதனது புகழ் எங்கும் பரவலாயிற்று; ஆகலின் திசையெலாம் விளைதரும் புகழினன் என்றார். களைவரும் துயர் அற என்பதற்குப் பயிர்க்குக் களைபோல உயிர்கட்குக் கேடு விளைக்க எழும் பகையைத் துடைத்து உயிர்களைக் காத்தவன் என்ற பொருள் நயம் காண்க. (24)

## இராமன் பணியத் தாயர் மகிழ்தல்

1138. கற்றைவார் சடையினன்
 கைக்கொளுந் தனுவிறக்
கொற்றநீள் புயநிமிர்த்
 தருளுமக் குரிசில்பின்

பெற்றதா யரையுமப்
பெற்றியிற் றொழுதெழுந்
துற்றபோ தவர்மனத்
துவகையா ருரைசெய்வார்.

கற்றை வார் சடையினுன் கைக் கொளும் தனு இறக்,
கொற்றம் நீள் புயம் நிமிர்த்தருளும் அக் குரிசில், பின்
பெற்ற தாயரையும் அப் பெற்றியில் தொழுது எழுந்து
உற்ற போது, அவர் மனத்து உவகை யார் உரைசெய்வார்.

போ :—தொகுதியாக நீண்ட சடையினையுடைய (சிவபெருமான்) கைக்கொண்ட வில் ஒடியும்படி வெற்றி பொருந்திய (தனது) நீண்ட தோள்களை உயர்த்தருளிய, அந்தப் பெருமை சான்ற இராமபிரான், அடுத்துத் தன்னைப் பெற்ற அன்னைமாரையும், (முன் தனது தந்தையை வணங்கிய) அந்த முறைப்படியே பணிந்தெழுந்து (அருகில்) அடைந்தபோது, அத் தாய்மார்களின் உள்ளத்தெழுந்த மகிழ்ச்சியை யாரே எடுத்து மொழிவார்?

கு:—இராமன் தந்தையை வணங்கியபோது கூறியவண்ணமே தாய்மாரை வணங்கும்போதும், இராமனது வில்லிறுத்த புயவலியையே எடுத்துக் கூறினர். செயற்கருஞ் செயலைக் கேட்டறிந்த தாயரின் உவகை, ஈன்ற ஞான்றினும் பெரிதாகலின் இங்ஙனம் கூறினர் என்க. (25)

பரதன் இராமனை வணங்குதல்

1139. உன்னுபே ரன்புமிக்
கொழுகியொத் தொண்கணீர்
பன்னுதா ரைகடரத்
தொழுதெழும் பரதனைப்
பொன்னின்மார் புறவணைத்
துயிருறப் புல்லினுன்
தன்னையத் தாதைமுன்
றழுவினு லென்னவே.

உன்னு பேரன்பு மிக்கு ஒழுகி ஒத்து, ஒண் கண் நீர்
பன்னு தாரைகள் தரத் தொழுது எழும் பரதனைப்
பொன்னின் மார்பு உற அணைத்து உயிர் உறப் புல்லினன்,
தன்னை அத் தாதை முன் தழுவினால் என்னவே.

பொ :—(இடைவிடாது இராமனையே) நினைக்கின்ற பெருகிய அன்பு (உள்ளத்திலே) மிகுந்து புறத்தே ஒழுகியது ஒத்து, ஒளி பொருந்திய கண்களில் (அன்பின் அறிகுறியென்று கூறும்படி) நீர்த்தாரைகள் பெருகத் தன்னை வணங்கி யெழுந்த பரதனை (இராமன்) அழகிய தந்தை தன்னை முன் தழுவினாற்போலப், பொன்னினாற் செய்த (அணிகள் அணியப் பெற்ற) மார்பிற் பொருந்தச் சேர்த்து உயிரோடு பொருந்தத் தழுவினன்.

கு :—பெருகிய கண்ணீர் அன்பின் அறிகுறியென்ப. "ஆர்வலர் புன்கணீர் பூசல் தரும்". (குறள். 71) என்றது காண்க. பொன்னின் மார்பு என்பதற்குத் திருமகள் பொருந்திய மார்பு என்றுமாம். வேறு பொருந்திய உவமையின்மையின் தாதை தழுவியதையே உவமையாக்கினர். முன் தோன்றல் தந்தையை ஒப்பான் என்ற தொடர் இங்கே கருதத்தக்கது. (26)

### இலக்குமண சத்துருக்கனர் முறையே பரதனையும் இராமனையும் வணங்குதல்

**1140.** கரியவன் பின்புசென்
றவனருங் காதலிற்
பெரியவன் றம்பியென்
றினையதோர் பெருமையப்
பொருவருங் குமரர்தம்
புனைநறுங் குஞ்சியால்
இருவர்பைங் கழலும்வந்
திருவரும் வருடினர்.

கரியவன் பின்பு சென்றவன், அரும் காதலில்
பெரியவன் தம்பி, என்று, இனையது ஓர் பெருமை அப்
பொருவு அரும் குமரர், தம் புனை நறும் குஞ்சியால்,
இருவர் பைங் கழலும் வந்து இருவரும் வருடினர்.

பொ :—கருநிறவண்ணனான இராமனைப் பின் தொடர்ந்த இலக்குவன் (பிறரால் எய்தற்கரிய) இராம பத்தியிற் சிறந்த

பரதன் தம்பி என்ற, இத்தன்மையான ஒப்பற்ற சிறப்பை யுடைய அழகிய தம் நிகரற்ற இளைஞர் இருவரும் வந்து, (மலரான்) அழகு செய்யப் பெற்ற நறுமணம் தங்கிய மயிர் முடியால் (இலக்குவன் பரதனையும் சத்துருக்கன் இராமனையும்) இருவரது பைம்பொனாற் செய்த வீரக்கழல் செறிந்த திருவடி களைத் தடவினார்கள் (தலையால் வணங்கினர்).

கு :—கரியவன் பின்பு சென்ற இலக்குவன் பரதனையும் சத் துருக்கன் இராமனையும் பணிந்தனர் என்க. இருவரும் இறைவன் சேவையிலும் அடியார் சேவையிலும் சிறந்தவர் என்பது தோன்றப் பொருவரும் குமரர் என்றார். (27)

## குமரர் நால்வரின் சிறப்பு

1141. கோல்வருஞ் செம்மையுங்
குடைவருந் தண்மையும்
சால்வருஞ் செல்வமென்
றுணர்பெருந் தாதைதன்
மேல்வருந் தன்மையான்
மிகவிளங் கினர்கடாம்
நால்வரும் பொருவினான்
மறையெனு நடையினர்.

கோல் வரும் செம்மையும் குடை வரும் தண்மையும்
சால் வரும் செல்வம் என்று உணர் பெருந் தாதை தன்,
மேல் வரும் தன்மையால், மிக விளங்கினர்கள் தாம்,
நால்வரும் பொருவு இல் நான்மறை எனும் நடையினர்.

பொ :—உவமை நீங்கிய நான்கு மறைகளே என்னும் ஒழுக்கம் செறிந்த (இராமர் முதலிய) நால்வரும், தனது செங்கோலான் விளையும் நீதியையும் வெண்கொற்றக் குடையினால் விளையும் தண் ணளியையும் தனக்கு அமைந்த நிறைந்த செல்வம் என்றுணர்ந்த பெருமை சான்ற தந்தையினுடைய மேன்மை பெற்றுள்ளிரும் தன்மையால் பெரிதும் விளங்கினர்.

கு :—ஒழுக்கத்தின் உயர்வால் தந்தைக்கேற்ற மக்கள் என்று நால்வரும் புகழப்பட்டார். கோல்வரும் செம்மை – ஒருபாற் கோடாத நடுவுநிலைமை; தராசுக்கோல் தன்பால் வைக்கும் பொருளை நிறுத்து அறுதியிடுவதற்குமுன் தன்னைச் சரி செய்து

கொள்வது போன்று, தன்கீழ்க் குடிகளை நல்வழிப்படுத்து மவன் தான் நன்னெறியை மேற்கொண்டு செங்கோல் நடத்தி யவன் என்பார் கோல்வரும் செம்மை யென்ருர். நீதியையும் தண் ணளியையும் செல்வம் போன்று போற்றியவன் தயரதன் என்பது கருத்து. இப்பண்புகளை அவன் மக்களும் உடையவர் என்ருர். மற்றும் நான் மறையோடுவமித்து இன்னும் பிற இடங்களிலும் கூறுவர் கம்பர். இதனை, 'அலையாழியென வளர்ந்தார் மறைநான் கும் அனையார்கள்' (குலமுறை கிளத்து. 25) ''நின்செய்கை கண்டு நினைந்தனவோ நீண் மறைகள், உன்செய்கை அன்னவைதாம் சொன்ன ஒழுக்கினவோ'' (கவந்தன். 49); முதலிய பகுதிகள் கொண்டு தெளியலாம். இனிச் சால் என்பதை 'ஊன்றுசால்' எனக் கொள்ளலுமாம் ''பொருபடை தரூஉங் கொற்றமும்...... ஊன்று சால் மருங்கின் ஈன்றதன் பய''னுகலின் (புறம். 35); ''கோலின் செம்மையும் குடையின் தண்மையும்'' என்பது சிலப் பதிகாரம் (15, 3, 5) இனி, தாதை மேல் வரும் தன்மையால் என்பதற்கு தந்தையினும் மீக்கூறுமாறு மிக்க தகுதியினுல் என்றும் கொள்ளலாம். (28)

### சேனைகளை நடத்திக்கொண்டு செல்லுமாறு தயரதன் இராமனிடம் கூறல்

**1142.** சான்றெனத் தகையசெங்
கோலினு னுயிர்கடாம்
ஈன்றநற் ருயெனக்
கருதுபே ரருளினுன்
ஆன்றவிச் செல்வமித்
தனையுமொய்த் தருகுறத்
தோன்றலைக் கொண்டுமுற்
செல்கெனச் சொல்லினுன்.

சான்று எனத் தகைய செங்கோலினுன், உயிர்கள்தாம்
ஈன்ற நற்ருய் எனக் கருது பேர் அருளினுன்,
ஆன்ற இச் செல்வம் இத்தனையும் மொய்த்து அருகு உறத்,
தோன்றலைக் 'கொண்டு முன் செல்கெனச்' சொல்லினுன்.

பொ :—(பகை நொதுமல் நட்பு என்னும் மூவகையினருக்கும்) சாட்சி என்று கூறும் தகுதிவாய்ந்த செங்கோலையுடையவனும், எல்லா உயிர்களும் தாம் தாம் தம்மைப் பெற்ற (அன்புமிக்க)

தாயென்று கருதும்படியான மிக்க கருணையையுடையவனும் பேரருளினனுமாகிய தயரதன், நிறைந்த (இந்தச் சேனை குடை கொடி முதலிய) அரசியற் செல்வங்கள் இவ்வளவும் நெருங்கி அண்மையிலே பொருந்த, நடத்திக்கொண்டு முன்னர்ச் செல்வா யாக என்று, இராமபிரானாகிய தன் மகனை நோக்கிக் கூறினான்.

கு :—தகுதியுடன் குடிகளைப் புரந்து பிறர்க்கு எடுத்துக்காட் டாகவுள்ளவன் ஆகலின், அவனது செங்கோன்மை யாவர்க்கும் சான்றென்றார். ''யாவர்க்கும் சான்றென நின்ற வீரன்'' என்று இராமனை வாலி புகழ்ந்தமை காண்க. அன்பிற் சிறந்தவள் தாயென்பது ''தாயொக்குமன்பில்'' (பால. அரசியல். 4) ''தாயே யனைய கருணையான்'' (பிணிவீட்டு. 127) ''பானினைந் தூட்டும் தாயினும் சாலப் பரிந்து'' (திருவாச. பிடித்த. 9); ''தாயின் மன்னுயிர்க் கன்பினன்'' (இரணியன். 19) என்ற பகுதி கள் கொண்டு உணரலாம். இனி, இராமனாகிய தோன்றலைக் கொண்டு முன் செல்க என்று சனகனை நோக்கித் தயரதன் கூறினான் எனலுமாம். (29)

## அப்போது சேனை அடைந்த மகிழ்ச்சி

**1143.** காதலோ வறிகிலங்
 கரிகளைப் பொருவினார்
தீதிலா வுவகையுஞ்
 சிறிதரோ பெரிதரோ
கோதைசூழ் குஞ்சியக்
 குமரர்வந் தெய்தலும்
தாதையோ டொத்ததத்
 தானையின் றன்மையே.

**காதலோ அறிகிலம், கரிகளைப் பொருவினார்**
**தீதிலா உவகையும் சிறிது அரோ, பெரிது அரோ,**
**கோதை சூழ் குஞ்சி அக் குமரர் வந்து எய்தலும்,**
**தாதையோடு ஒத்தது அத் தானையின் தன்மையே.**

பொ :—யானைகளை ஒத்த அந்நால்வர்மீதும் அச் சேனைவீரர்கள் வைத்த அன்பின் தன்மையை (இவ்வளவினதென்று) அறியோம். (வஞ்சம் பொறாமை முதலிய) தீங்குகள் நீங்கிய (அவர்களது) மகிழ்ச்சியும் அளவிற் சிறியதோ பெரியதோ அவற்றையும் அறி யோம். மாலை சூடின மயிர்முடியையுடைய அந்த இளைஞர்கள்

வந்து சேர்தலும், அந்தச் சேனையின் தன்மையானது (இராம இலக்குவரைக் கண்ட அளவில்) தந்தையான தயரதன் அடைந்த மகிழ்ச்சி நிலையை ஒத்துநின்றது.

கு:—நால்வரையும் ஒருசேரக் காணப்பெற்ற தயரதனது காதலையும் பேருவகையையும் அவர்களைக் கண்ணுற்ற சேனைகளின் காதல் மகிழ்ச்சிகட்கு உவமை கூறினர். வேழம் இராமனுக்கு உவமையாதலை "இருகை வேழத்திராகவன்" (வாழ்த்து. 1) என்பது கொண்டு உணர்க. கரிகளைப் பொருவினர் என்பதனைச் சேனை வீரர்களாகக் கொண்டு பொருளுரைத்தலும் ஆம். (30)

### இராமன் தேர்மீதேறிச் செல்லுதல்

**1144.** தொழுதிரண் டருகுமன்
புடையதம் பியர்தொடர்ந்
தழிவில்சிந் தையினுகந்
தாடன்மா மிசைவரத்
தழுவுசங் குடனெடும்
பணைதழங் கிடவெழுந்
தெழுதருந் தகையதோர்
தேரின்மே லேகினன்.

**தொழுது இரண்டு அருகும் அன்பு உடைய தம்பியர் தொடர்ந்து, அழிவில் சிந்தையின் உகந்து ஆடல் மா மிசை வரத், தழுவு சங்குடன் நெடும் பணை தழங்கிட எழுந்து, எழுதரும் தகையது ஓர் தேரின் மேல் ஏகினன்.**

பொ:— இருபுறத்திலும் அன்புள்ள தம்பியர் தொடர்ந்து (என்றும்) அழிதல் இல்லாத உள்ளத்தில் மகிழ்ச்சி கொண்டு வெற்றியையுடைய குதிரைகளின்மீது வாரா நிற்க, (பிற துணைக் கருவிகளுடன்) பொருந்தி ஒலிக்கின்ற சங்கொடு பெரிய முரசம் முழங்கப் புறப்பட்டு எழுதற்கரிய தன்மை வாய்ந்த ஒப்பற்ற தேரின்மீதேறிச் சென்றான் இராமன்.

கு:—ஆடல்மா - நாட்டியக் குதிரையுமாம்; தழுவு சங்கு - கைகளாற்றழுவி யெடுத்து ஊதுகின்ற சங்குமாம். (31)

## இராமன் மிதிலைநகர் வீதியிற் சேறல்

**1145.** பஞ்சிசூழ் மெல்லடிப்
பாவைமார் பணைசூழ்
மஞ்சுசூழ் நெடியமா
ளிகையின்வந் திடைவிராய்
நஞ்சுசூழ் விழிகள்பூ
மழையின்மேல் விழநடந்
திஞ்சிசூழ் மிதிலைமா
வீதிசென் றெய்தினன்.

**பஞ்சி சூழ் மெல் அடிப் பாவைமார் பணையின், மஞ்சு சூழ் நெடிய மாளிகையின் வந்து, இடை விராய், நஞ்சு சூழ் விழிகள், பூ மழையின் மேல் விழ, நடந்து, இஞ்சி சூழ் மிதிலை மா வீதி சென்று எய்தினன்.**

பொ :—செம்பஞ்சணிந்த மெல்லிய அடிகளையுடைய சித்திரப் பதுமை போன்ற மகளிர், ஆயத்தோடு சூழ்ந்து மேகங்கள் படிந்து தங்கப் பெற்ற உயர்ந்த மாளிகையினின்று வந்து வீதியின் (பல்வேறு) இடங்களினும் கலந்து நிற்க, விடம் நிறைந்தாற் போன்ற அவரது கரிய கண் பார்வைகள் மலர்மழை போன்று தன் மீது விழும்படி (இராமன்) நடந்து சென்று, மதில்கள் சூழப் பெற்ற மிதிலை நகரின் வீதியைச் சென்றடைந்தான்.

கு :—மகளிர் கண்வாளி மழையொடு அவர் பெய்த கடிமலர் மழையும் இராமன் மேல் வீழ்ந்தன என்க. இனி மாளிகையின் வந்து இடைவிராய் என்பதற்கு வீதிக் கண் வாராமலே, மாளிகையின் முன்புறத்து வந்து இராமனைக் காண்பதற்கு நன்கமைந்த இடங்களில் நின்று என்றுமாம். உயர்குல மகளிராதலின் மறுகின் எய்தாமல் "மாளிகை மேற்புலத்தினின்றே நோக்கினர் என்க. "சாளரந்தோறும் தோன்றும் சந்திரவுதயங் கண்டார்" (மிதிலைக். 13); சாளரத்தினும் பூத்தன தாமரை மலர்கள் (அயோத். மந்திரப். 56) எனக் கூறியன காண்க. (32)

## மாளிகைகளின் வருணனை

**1146.** சூடகந் துயல்வரக்
கோதைசோர் தரமலர்ப்
பாடகம் பரதநூல்
பகரவெங் கடகரிக்

கோடரங் கிடவெழுங்
குவிதடங் கொங்கையார்
ஆடரங் கல்லவே
யணியரங் கயலெலாம்.

சூடகம் துயல்வரக் கோதை சோர்தர மலர்ப்
பாடகம் பரதநூல் பகர, வெம் கடகரிக்
கோடு அரங்கிட, எழும், குவி தடம் கொங்கையார்,
ஆடு அரங்கு அல்லவே அணி அரங்கு அயல் எலாம்.

பொ :—அழகிய (அத்தெருக்களில் உள்ள) மாளிகையின் புற மெல்லாம் (அங்கு நின்ற) மகளிரது கைவளைகள் அசைதலாலும், கூந்தல் அவிழ்ந்து சரிவதனாலும், மலர் போன்ற அடிகளில் அணிந்த பாடகம் முதலிய அணிகள் பரத நூல் கூறும் நாட்டிய முறையை ஒத்து ஒலித்தலாலும், கொடுமை வாய்ந்த மதம் செறிந்த யானையினது மருப்புக்களின் (செருக்குக்) கெடும்படி மேலெழுந்து குவிந்த, பெரிய கொங்கைகளையுடைய நாட்டிய மகளிர் ஆடுகின்ற அரங்கு என்று கருதவேண்டா. அழகிய மாளிகைகளேதாம் அவைகள்.

கு :—மாளிகைகளின் புறத்தில், தெருக்களில் மகளிர்கள் நடந்து வரும் இடங்கள், அவர்களது வளைகள் அசைந்து ஒலி செய்தலாலும், கோதை சரிதலாலும், பாடகம் ஒலித்தலாலும், பரத நூலிற் கூறப்படும் இலக்கணம் அமைந்த கூத்த மகளிர் ஆடும் அரங்கு போலுதலால், அவை ஆடரங்கல்ல என்று கூற வேண்டுவதாயிற்று மிக விரைந்தோ மந்தமாகவோ நடவாது ஒரே சீராக நடந்தமையின், வளையொலியும் பாடக வொலியும் அந்நடைக்கேற்ப ஒத்து ஒலிக்கவே, மகளிர் ஆடுங்கால் நிகழும் ஒலி போன்றதென்று நயம் படக் கூறினர் கவி. மலர் உவமவாகு பெயராய் அடியை உணர்த்திற்று. சூடகம்-வளை ; ''சூடகமே தோள்வளையே'' (திருப்பாவை. 27) பாடகம்-மகளிர் காலணி. ''பாடகத் தாமரைச் சீறடி பணிந்து'' என்பது மணிமேகலை (25, 85). 'பாடகம் போலச் சூழ்ந்த பழவினை' (சிந்தா. 510) ''மகளிர் காலிற் பாடகம் ஒரு கம்பி யாய்ப் பல முடக்குக்களுடன் கூடி நிற்கும்'' என்பர் நச்சினார்க் கினியர். (33)

## வீதிவாய் மகளிர் அடைந்த நிலை

**1147.** பேதைமார் முதல்கடைப்
பேரிளம் பெண்கடாம்
ஏதியார் மாரவே
ளேவவந் தெய்தினர்
ஆதிவா னவர்பிரா
னணுகலா லணிகொள்கார்
ஓதியார் வீதிவா
யுற்றவா றுரைசெய்வாம்.

பேதைமார் முதல் கடைப் பேரிளம்பெண்கள் தாம்
ஏதியார் மாரவேள் ஏவ வந்து எய்தினர்,
ஆதி வானவர் பிரான் அணுகலால் அணி கொள் கார்
ஓதியார், வீதி வாய் உற்ற ஆறு உரைசெய்வாம்.

பொ:—ஆதி முதல்வனாகிய கடவுளர் தம் தலைவன் சேர்தலால் போர்க் கருவிகளையுடைய மன்மதன் ஏவலால், பேதையர் முதல் பேரிளம்பெண்கள் ஈறாக வந்து நின்றவர்களாகிய, அழகினைக் கொண்ட மேகம் போன்ற கூந்தலையுடைய அம்மாதர் கள், தெருக்களில் அடைந்த நிலைமையைச் சொல்லத் தொடங்கு வோம்.

கு:—உலா என்னும் தமிழ் நூலில் ஓர் தலை மகன் சிவிகை யானை முதலிய ஊர்தி மேற்கொண்டு மறுகிற் பவனி வருதலும், ஏழுபருவ மாதர்களும் தத்தம் நிலைக்கேற்ப அவனைக் கண்டு காமுறும் நிகழ்ச்சிகளும் கூறப்படும், இலக்கிய மரபை ஒட்டிக் கம்பரும் உவகைச் சுவைதோன்றக் கூறத் தொடங்குகிறார். வானவர்பிரான் என்று இராமனைக் கூறி அவனைப் பல மகளிர் காமுற்றார் எனல் இருமாதரைச் சிந்தையாலும் தீண்டாதவ னாகிய இராமனுக்கு இழுக்கன்றோ எனின், தனது பேரழகான் அனைத்துயிரையும் மோகமுறச் செய்யும், ஆடவர் பெண் மையை அவாவும் தோளினன் ஆதலின் இழுக்கன்று எனவும், ஆடவர் திலகனாகிய இராமன் முன்பு ஆடவரும் பெண்டிரும் பெண்களாகவே கருதப்படுவர் என்றும், இவ்வாறு கொண்ட அன்பு காமத்தான் எழுந்ததன்று, பத்தியான் எழுந்ததென்றும் கொள்க. மற்றும் ஒருவர் ஒருவர் வயப்படுவது ஆண் பெண் ணாகிய பால் பற்றி மட்டும் அன்றென்பர் அறிஞர். பிராட்டியைக்

கண்ட சூர்ப்பணகை 'கண் பிறபொருளிற் செல்லா கருத் தெனினஃதே கண்ட பெண் பிறந்தேனுக் கென்றால் என்படும் பிறருக்கு' (சூர்ப்ப. 60) எனத் தான் ஒரு பெண்ணாக இருந்தும் பிறிதொரு பெண்ணை விழைந்ததாகக் கூறினள். இத் தகைய ஈடுபாடு ஒன்றன் வயப்பட்ட மனத்தின் செயல் என்பதை, '' தஞ்சொற்கள் குழறித் தத்தம் தகை தடுமாறி நின் றார், மஞ்சர்க்கும் மாதரார்க்கும் மனம் என்பது ஒன்றே யன்றோ '' (கோலங். 19) என்றும் மக்கள் மனத்தத்துவத்தை நன்குணர்ந்த கம்பர் கூறுவர். எனவே ஈண்டும் ஈடுபாட்டிற்குக் காரணம் பாற் கவர்ச்சியன்றென்பது பெற்றாம். (34)

எதிர்கொள் படலம் முற்றிற்று

# 19. உலாவியற் படலம்

இது உலாவரு படலம் என்றும், உலாவியருள் படலம் என்றும், உலாவு படலம் என்றும் சில பிரதிகளிற் காணப் படும். இப்படலத்து, இராமன் தேர் ஏறி மிதிலை நகரின் வீதிகள் வழியாகச் சென்று மண்டபம் எய்தி, அங்கிருந்த வசிட்டன், விசுவாமித்திரன் முதலிய முனிவர்களை வணங்கி, ஆசனத்தமர் தலும், அங்கே தசரதன் எழுந்தருளுதலும், சனகன் எல்லோ ரையும் ஒப்ப உபசரித்தலும் ஆகிய செய்திகள் கூறப்பட்டுள்ளன. உலாப்போந்த செய்தி வான்மீகத்தில் கூறப்படவில்லை.

உலா என்பது தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தங்களுள் ஒன்று. அது, பவனி, உலாப்புறம் எனவும் வழங்கும்; தலைவன் பவனிவருகையில் வீதியிலுள்ள பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என எழுவகைப் பருவத்து மகளிரும் அவனைக் கண்டு காமுற்றதாகக் கலிவெண்பா வாற் பாடப்படும்; கடவுளர்களையும், அரசர்களையும் வள்ளல் களையும் தலைவர்களாக வைத்துத் தம் புலமைத்திறம் தோன்றத் தனிப் பிரபந்தமாகப் பாடுவதில் தமிழ்ப் புலவர்கள் பேரார்வம் காட்டியுள்ளார்கள். சேரமான் பெருமாள் நாயனார் பாடிய திருக் கயிலாய ஞானவுலா, தத்துவராயர் இயற்றிய ஞானவினோத னுலா, ஒட்டக்கூத்தர் பாடிய மூவருலா என்பவற்றை எடுத்துக் காட்டாக இங்கே குறிப்பிடலாம். இது, தொல்காப்பியம் புறத் திணையியல், 30-ஆம் சூத்திரம் '' ஊரொடு தோற்றமு முரித்தென மொழிப'' என்பதனுள் அடங்கும் ஆகையால், புறப்பொருளைச் சேர்ந்த பெண்பாற் கைக்கிளையாகும்.

இங்ஙனம் தனிப் பிரபந்தங்களாகப் பாடப்படுவதோடு, காப்பியங்களிலும் அவற்றின் தலைவர்கள் உலாப் போந்ததாகவும் மகளிர் கண்டு காமுற்றதாகவும் பல காட்சிகளைப் புனைந்துரைத் தலும் கவிமரபாகக் காணப்படுகிறது. பெருங்கதை, சீவக சிந்தாமணி முதலிய காப்பியங்களில் காவியத் தலைவர்கள் முடி புனைந்தும், மணம்புரிந்தும், வெற்றித் திருவெய்தியும் உலாவரும் பொழுது வீதி மகளிர் காதலுற்ற செய்தி பல அழகிய உலாக் காட்சிகளாகப் புனைந்து கூறப்பட்டுள்ளது. முத்தொள்ளாயிரம் போன்ற நூல்களிலும் பல தனிப்பாடல்கள் உலாப்பாடல்க ளாகச் சித்திரிக்கப்பட்டுள்ளன, அம்முறையைப் பின்பற்றிக் கம்பரும், உலாப்பாடல்களைப் பாடும் வேட்கையால் மிகவுந்தப்

பட்டு, உலாவியற் படலம் என்று ஒரு தனிப் படலத்தையே இங்குப் படைத்துக்கொண்டு ஐம்பத்துநான்கு செய்யுட்களால் அழகுறப் பாடியுள்ளார். இப்படலம் நுதலிய பொருளை முன் படலமாகிய எதிர்கொள் படலத்து ஈற்றுச் செய்யுளில் கம்பர் நன்கு தெளிவுபடுத்தியிருப்பதும் ஈண்டு நோக்கத்தகும். அது,

> "பேதைமார் முதல்கடைப் பேரிளம் பெண்கடாம்
> ஏதியார் மாரவேள் ஏவவந் தெய்தினர்
> ஆதிவா னவர்பிரான் அணுகலால் அணிகொள்கார்
> ஓதியார் வீதிவா யுற்றவா றுரைசெய்வாம்."

என்பது.

உயர்வற வுயர்நலமுடைய இறைவன் தன் பெருங்கருணை யினால் உலகில் மானிடச் சட்டை தாங்கி அடியார்கள் கட்புலனுக் கெளியனாய் அணியனாய் வந்து தோன்றிய நிலையில், அவ்வடியார் கள் அவனிடம் அன்புபூண்டு மனமுருகி உள்ளத்தைப் பரம் பொருளிடத்தே பறிகொடுத்துநிற்கும் பத்தி நிலை இங்குப் பல படிகளாக எடுத்துப் பகரப்படுகிறது. "பரம் பொருளின் தத்து வம் இப்படலத்தில் விரவிக்கிடக்கின்றது. கரணங்களின் உதவி யாலும் மத ஆராய்ச்சியாலும் துறவு போன்ற மார்க்கங்களாலும் அப்பொருள் எட்டாமை காண்க. இனி, அன்பினால் உணர்ந் தெய்திய பக்தர்தம் மனநிலை(யை)யும் செயல்வகை(யை)யும் இச் செய்யுள்களில் கம்பர் செவ்வனே வகுத்திருக்கின்றனர். "சீவக சிந்தாமணி, முத்தொள்ளாயிரம், பெரியாழ்வார் திருமொழி(யில் கண்ணன்கோலங்கண்டு கன்னியர் காமுறுதல்) முதலிய நூல்களி லிருந்து பல கருத்துக்களை நுண்ணிதாய் நுனித்தறிந்து கற்றோர்க் குள்ளம் களிசிறக்கும்வகையிலே கம்பர் இப் படலத்தில் ஆங் காங்குக் கையாண்டுள்ளார். பலவகை மகளிர்களின் இதய வுணர்ச்சிகளையும் குணசித்திர மேம்பாடுகளையும் மனநிலை உண்மைகளையும் பல்லாற்றானும் கம்பர் குறித்துப் பாடும் திறன் மிகவும் வியக்கற்பாலதாகும்.

இங்குக் கம்பர் காகுத்தனைக் காதலென்னும் பொருளாகவே கற்பித்துக்கொண்டு, பெண்ணினீர்மையினால் மகளிர் அவனைக் காண விரைகின்றபொழுது தம்மினும் முந்திச் சென்ற மனத்தைப் பிடிக்கவே இவர்கள் விரைகின்றார்கள் என்பதும், அவ்வாறு விரைகின்றவர்கள் தங்கள் அணிகலங்களையும் நாணம் போன்ற குணநலங்களையும் உகுத்துவிட்டு உயிர்மட்டும் தாங்கி நின்றார்கள் என்பதும், இராமனையே நோக்கும் மகளிர் கண்களின் அஞ்சன வண்ணத்தால் இராமன் கரிய நிறம் கொண்டானோ? அல்லது அவன் கரிய வண்ணத்தைக் காண்பதால் மகளிர் கண்கள் கருமை

யானவோ என்பதும், வில் வீரனுன இராமன் முன்னிலையில் மன்மதன் வில் வீரம் வெற்றிபெற்ற திறத்தை மெச்சுவதும், இராமனைத் தவிர வேருெரு பொருளும் அம்மகளிர் கண்களுக்குப் புலப்படாமையும், கண்வழி புகுந்த கள்வனை ஒரு பெண் கண்ணை மூடியபடியே பிடித்துவிட்டதாகக் களித்து அமளி சேர முயல்வதும், குளிர்ப்போடு வந்தோர் வெதுப்போடு திரும்பினர் என்பதும், இராமனுடைய ஒவ்வோர் உறுப்பிலேயே மகளிர் மனம் பதிந்து கிடந்த நிலையும், அது பல்வேறு சமயத்தார்களும் இறைவனுடைய முழு இயல்பையும் அறியமுடியாது ஒவ்வொரு பகுதியைக் கண்டு தடுமாறுவதை ஒக்கும் என்பதும், ஒருத்தி இராமனைத் தன் உள்ளத்தொடுங்க வைத்ததும், ஒருத்தி தன் வயமிழந்த நிலையும், உருவெளித் தோற்றத்தில் மயங்கலும், மாதர்கள் ஒருவரையொருவர் பொருமைப்படுதலும், சீதைமீது பொருமைப்படுதலும், அவள் தவத்தை மெச்சுதலும், எல்லார் கண்ணிலும் உலாவும் இராமன் கண்ணனே என்றலும், அவன் திருமாலே என்றலும், மன்மதனுலும் எழுதரிய அழியா அழகுடையவன் இராமன் என்றலும், மாரன் கையம்பு அற்று உடைவாளினும் கைவைத்தான் என்பதும், பொருப்பு வில்லை ஒடித்த இராமன் கருப்பு வில்லை ஒடித்தல் கூடாதோ என்று ஒருத்தி ஏங்குவதும், அம் மகளிரிடத்து ஒரு பொருளும் விரும்பாது போகின்ற இராமன் கருணையென்பதே இன்னதென்று கண்டறியாத படுகொலையாளனே என்ருெருத்தி கொடுமை கூறுதலும், அருத்தியுற்ற பின் நாணம் அழியும் என்பதும், வான நாடியரும் இராமனைக் காமுற்றனர் என்பதும் போன்ற பகுதிகள் கற்குந்தோறும் தெவிட்டா விருந்தாய்க் களியூட்டுவது திண்ணம்.

---

# 19. உலாவியற் படலம்

## வீதியில் மகளிர் வந்து கூடிய தன்மை (1148-1152)

**1148.** மானினம் வருவ போன்று
மயிலினந் திரிவ போன்றும்
மீனின மிளிர்வ போன்று
மின்னின மிடைவ போன்றும்
தேனினஞ் சிலம்பி யார்ப்பச்
சிலம்பினம் புலம்ப வெங்கும்
பூநனை கூந்தன் மாதர்
பொம்மெனப் புகுந்து மொய்த்தார்.

மான் இனம் வருவ போன்றும், மயில் இனம் திரிவ போன்றும், மீன் இனம் மிளிர்வ போன்றும், மின் இனம் மிடைவ போன்றும், தேன் இனம் சிலம்பி ஆர்ப்பச், சிலம்பு இனம் புலம்ப, எங்கும், பூநனை கூந்தல் மாதர் பொம்மெனப் புகுந்து மொய்த்தார்.

பொ :—(தேனுல்) ஈரமாகியுள்ள பூக்களைச் சூடிய கூந்தலை யுடைய (மிதிலை நகரத்து) மகளிர் மான் கூட்டங்கள் வருவன போலவும், மயிலின் கூட்டங்கள் திரிவன போலவும், நட்சத்திரக் கூட்டங்கள் விளங்குவ போலவும், மின்னலின் கூட்டங்கள் நெருங்குவ போலவும் (தாம் அணிந்துள்ள பூமாலைகளில் மொய்த்துள்ள) வண்டுகளின் கூட்டங்கள் இரைந்து ஆரவாரிக்கவும், (கால்களில் அணிந்துள்ள) சிலம்புகளும் அவற்றின் இனமான பிற காலணிகளும் ஒலிக்கவும், எவ்விடத்தும் விரைவாக வந்து நெருங்கினர்கள்.

கு :—இளமை பார்வைகளால் மானையும், சாயல் நடைகளால் மயிலையும், ஒளியால் மீனையும், இடையால் மின்னலையும் மாதர் ஒத்திருந்தனர் என்றவாறு. தேன்—வண்டு. சிலம்பி—ரீங்காரஞ் செய்து. பொம்மெனல்: விரைவுக் குறிப்பு. (1)

**1149.** விரிந்துவீழ் கூந்தல் பாரார்
மேகலை யற்ற நோக்கார்
சரிந்தபூந் துகில்க டாங்கா
ரிடை தடு மாறத் தாழார்
நெருங்கினர் நெருங்கிப் புக்கு
நீங்குமி னீங்கு மின்னென்
றருங்கல மனைய மாதர்
தேனுக ரளியின் மொய்த்தார்.

**விரிந்து வீழ் கூந்தல் பாரார், மேகலை அற்ற நோக்கார், சரிந்த பூம் துகில்கள் தாங்கார், இடை தடுமாறத் தாழார், நெருங்கினர், நெருங்கிப் புக்கு, 'நீங்குமின்! நீங்குமின்!' என்று அரும் கலம் அனைய மாதர் தேன் நுகர் அளியின் மொய்த்தார்.**

பொ:—(அங்ககரத்துக்குப்) பெறுதற்கரிய அணிகலன்களை யொத்து அழகு செய்கிற அம்மகளிர் (தாம் பொம்மெனப் புகுந்து மொய்த்ததால்) அவிழ்ந்து விழுகிற தத்தம் கூந்தலைக் கவனியாத வர்களும், (தத்தம்) மேகலாபரணங்கள் அறுந்து போவதைப் பாராதவர்களும், நெகிழ்ந்து அவிழ்கிற பூப்போலும் மெல்லிய பட்டாடைகளைப் பாதுகாவாதவர்களும், (தம்முடைய) இடை கள் நிலைகுலைதலுற (அதற்காகத்) தாமதியாதவர்களுமாகி, (இராமனது) அருகில் வந்தவர்களாய் அடர்ந்து சென்று '(வழி விட்டு) விலகுங்கள்! விலகுங்கள்!' என்று (ஒருவரை யொருவர்) கூறிக் கொண்டு தேனைப் பருகுகின்ற வண்டுகள் போல (இரா மனை) ச்சூழ்ந்துகொண்டார்கள்.

கு:—ஒருவரை யொருவர் இடித்துக் கொண்டு பெண்களின் கூட்டம் விரைந்து வந்ததால் அவர்களின் கூந்தல்கள் சரிந்தன, மேகலைகள் அற்றன, ஆடைகள் அவிழ்ந்தன, மெல்லிடைகள் சோர்ந்தன. ஆயினும் அவர்கள் அவற்றைக் கவனியாமல் இரா மனைக் காணவேண்டும் என்னும் ஆசையால் மதுவை உண்ணும் வண்டுகள் போல இராமனைச் சூழ்ந்து அப்பிக்கொண்டார்கள் என்றவாறு. (2)

**1150.** கண்ணினாற் காத லென்னும்
பொருளையே காண்கின் றேமிப்
பெண்ணினீர் மையினா லெய்தும்
பயனின்று பெறுது மென்பார்

மண்ணினீ ருலர்ந்து வான
　　மழையற வறந்த காலத்
துண்ணுநீர் கண்டு வீழு
　　முழைக்குலம் பலவு மொத்தார்.

'கண்ணினுல் காதல் என்னும்
　　பொருளேயே காண்கின்ருேம்! இப்
பெண்ணின் நீர்மையினுல் எய்தும்
　　பயன் இன்று பெறுதும்!' என்பார்,
மண்ணின் நீர் உலர்ந்து வானம்
　　மழை அற வறந்த காலத்து
உண்ணும் நீர் கண்டு வீழும்
　　உழைக் குலம் பலவும் ஒத்தார்.

பொ :—(அப்பெண்கள்) 'நம் கண்களாலே காதல் என்னும் பொருளின் வடிவத்தையே (இங்கு நேரில்) பார்க்கிருேம்; (ஆத லால்) இந்தப் பெண் பிறப்பின் தன்மையால் அடையும் பயனை இற்றை நாளில் அடைகின்ருேம்' என்று நினைப்பவர்களாய்ப் பூமி முழுவதிலும் தண்ணீர் வறண்டு ஆகாயத்தில் மேகங்களின் மழையும் இல்லாமற் காய்ந்துபோன காலத்தில், குடி தண்ணீரை ஓரிடத்திற் பார்த்து விரும்பி அங்குவந்து சேர்கின்ற மான்கூட் டங்கள் பலவற்றையும் போன்ருர்கள்.

கு :—காதல் என்பது ஆசை: ஆசையே வடிவெடுத்ததைப் போன்றது இராமனின் அழகு நிரம்பின திருமேனி என்றவாறு. கோடைக் காலத்து நீர்நசையுற்ற மான்களுக்குக் கிடைத்த தண்ணீர் போல், காதல் வேட்கையுற்ற அம்மகளிருக்கு இராமன் காட்சியளித்தான். பெண் பிறப்பெடுத்ததின் பயன் பேரழக னை இராமனைக் காண்பதுதான் என்று அம்மகளிர் கருதினர் என்க. (3)

1151. பள்ளத்துப் பாயு நன்னீ
　　ரனையவர் பானல் பூத்த
வெள்ளத்துப் பெரிய கண்ணுர்
　　மென்சிலம் பலம்ப மென்பூத்
தள்ளத்தம் மிடைக ளுேவத்
　　தமைவலித் தவன்பாற் செல்லும்
உள்ளத்தைப் பிடித்து நாமென்
　　ருேடுகின் ருரு மொத்தார்.

பள்ளத்துப் பாயும் நல் நீர்
அனையவர் பானல் பூத்த
வெள்ளத்துப் பெரிய கண்ணூர்
மென் சிலம்பு அலம்ப மென் பூத்
தள்ளத் தம் இடைகள் நோவத்
தமை வலித்து அவன்பால் செல்லும்
'உள்ளத்தைப் பிடித்தும் நாம்!' என்று
ஓடுகின்ருரும் ஒத்தார்.

பொ :—பள்ளமான இடத்திலே (ஓடிப்) பாயும் தெளிவான நீரைப் போன்ற தன்மையுடையவர்களாகிய கருங்குவளைப் பூப் போல மலர்ந்துள்ள கடலினும் பெரிய கண்களையுடைய அம் மகளிர், மெல்லிய சிலம்பணிகள் ஒலிக்கவும், (தாம் அணிந்த) மென்மையான பூமாலைகள் அசையவும், (தம்) இடைகள் வருந் தவும், தம்மை இழுத்துக் கொண்டு அவனிடத்தே (இராமனி டத்தே) சென்று சேருகின்ற 'மனத்தை நாம் பிடிப்போம்' என்று (அதனைத் தொடர்ந்து) ஓடுகின்றவர்களையும் ஒத்து (இராமனிடம்) விரைவாகச் சென்ருர்கள்.

கு:—சிற்றின்பத்தைப் பள்ளமடையென்பர். வெள்ளம்-கடல்: 'கடலினும் பெரிய கண்கள்' என்று (ஆரண்ய மாரீசன் வதை. 70) கூறுவர். உள்ளத்தைப் பிடிக்க ஓடுதல் போற் சென்று அவ்வுள்ளம் சென்று விட்ட இராமனிடம் ஓடினர் என்பதாம். மனோவேகத்தில் ஓடினர் என்றவாறு. உடலை இழுத்துக்கொண்டு மனம் ஓடிற்று என்க. (4)

1152. அரத்தமுண் டனைய மேனி
யகலிகைக் களித்த தாளும்
விரைக்கருங் குழலிக் காக
வில்லிற நிமிர்ந்து வீங்கும்
வரைத்தடந் தோளுங் காண
மறுகினின் வீழு மாதர்
இரைத்துவந் தமிழ்தின் மொய்க்கு
மீயின மென்ன லானர்.

அரத்தம் உண்டனைய மேனி
அகலிகைக்கு அளித்த தாளும்,
விரைக் கருங்குழலிக்கு ஆக
வில் இற நிமிர்ந்து வீங்கும்
வரைத் தடம் தோளும் காண,
மறுகினின் வீழும் மாதர்,
இரைத்து வந்து அமிழ்தின் மொய்க்கும்
ஈ இனம் என்னல் ஆனார்.

பொ :—செந்நிறத்தை யுட்கொண்டாற் போன்ற (செந்நிறமான) வடிவத்தையுடைய, அகலிகை சாபம் தீர (கல்லுருவம் நீங்க) அருளிய (இராமனுடைய) திருவடிகளையும், மணமுள்ள கரிய கூந்தலையுடையவளான சீதையைப் பெறுவதற்காக வில் ஒடியும்படி உயர்ந்து பூரித்த மலை போன்ற பெரிய தோள்களையும் பார்க்க வேண்டி அத்தெருவிலே வந்தடைகிற பெண்கள். ஆரவாரஞ்செய்துகொண்டு வந்து அமிழ்தத்திலே மொய்க்கிற ஈக்களின் கூட்டம் என்று சொல்லும்படியானார்கள்.

கு :—பெண்களாகிய அகலிகைக்கும் சீதைக்கும் இன்பளித்த தாளும் தோளும் இப்பெண்களுக்கு உகந்தனவாயின. மறுகு - தெரு. அமிழ்தத்தை மொய்த்த ஈயினம் அதனை விட்டு நீங்காதாற் போல, இராமனைப் பார்த்த பெண்களும் அவனை விட்டு நீங்காதாராயினர் என்றவாறு. ஈக்கள் இரைத்து வருதல் போற் பெண்களும் ஆரவாரித்து நெருங்கினர் என்பது அறியப்படும். (5)

### கண்ணன் என்னும் பெயர்

1153. வீதிவாய்ச் செல்கின் றான்போல்
விழித்திமை யாது நின்ற
மாதரார் கண்க ளூடே
வாவுமான் றேரிற் செல்வான்
யாதினு முயர்ந்தோர் தன்னை
யாவர்க்குங் கண்ண னென்றே
ஓதிய பெயர்க்குத் தானே
யுறுபொரு ளுணர்த்தி விட்டான்.

வீதி வாய்ச் செல்கின்றான் போல்,
விழித்து இமையாது நின்ற
மாதரார் கண்கள் ஊடே
வாவும் மான் தேரில் செல்வான்,
யாதினும் உயர்ந்தோர் தன்னை
யாவர்க்கும் கண்ணன் என்றே
ஓதிய பெயர்க்குத் தானே
உறு பொருள் உணர்த்திவிட்டான்.

பொ :—(அங்நகரத்துத்) தெருவினிடத்திலே போகிறவன் போல, இமைத்தலுஞ் செய்யாது விழித்துக்கொண்டுநின்ற அம் மகளிர்களுடைய கண்களிடத்திலே தாவிப்பாய்கின்ற குதிரைகள் பூட்டிய தேரின்மீது செல்பவனான அவ்விராமன், எவற்றினுஞ் சிறந்த பெரியோர்கள் தன்னைக் கண்ணனென்று கூறியுள்ள திருநாமத்துக்குத் தகுந்த பொருளைத் தானே எல்லோர்க்கும் அறிவித்து விட்டான்.

கு :—க்ருஷ்ணன் என்னும் வடமொழிப் பெயர் தமிழில் கண்ணன் என்று திரிந்து வழங்கும். க்ருஷ்ணன் என்பதற்குக் கருநிறமுடையவன் அல்லது யாவர் மனத்தையும் கவர்ந்து இழுக்குந் தன்மையுடைவன் என்று பொருள். கண்ணன் என்னும் தமிழ்ச் சொல் (யாவரிடத்தும்) கண்ணோட்டமாகிய அருளை யுடையவன் என்றும், யாவர்க்குங் கண்ணையொத்து அருமையாய் நிற்பவன் என்றும், ஞானக் கண்ணை அளிப்பவன்'என்றும், எல்லா விடத்தும் உள்ளவன் என்றும் பொருள்படும். இப்போது அத் திருநாமத்துக்கு எல்லா மகளிருடைய கண் வழியிற் செல்லுத லால் கண்ணன் என்று பொருள் சொல்லும்படியாயிற்று என்பது இப்பாடலின் பொருள்.

கண்களை இமைத்தால் அவ்வளவு காலம் இராமனின் வடி வழகு காணப்படாமல் மறைபடுமாதலால், இடைவிடாது அவ் வழகைக் காணும் ஆசையால் அம்மகளிர் இமையாது நிற்பா ராயினர். (6)

## இராமனைக் கண்கடவாது காத்த காரிகை

**1154.** எண்கடந் தலகி லாதின்
றேகுறு மிவன்றே ரென்று
பெண்கடந் தம்மி னைந்து
பேதுறு கின்ற காலை

மண்கடங் தமரர் வைகும்
வான்கடங் தானைத் தான்றன்
கண்கட வாது காத்த
காரிகை பெரிய ளேகாண்.

'எண் கடந்து அலகு இலாது இன்று
ஏகுறும் இவன் தேர்,' என்று,
பெண்கள் தம் தம்மில் நொந்து
பேதுறுகின்ற காலை,
மண் கடந்து அமரர் வைகும்
வான் கடந்தானைத் தான் தன்
கண் கடவாது காத்த
காரிகை பெரியளே காண்!

பொ :—'இவ்விராமனது தேர், மனத்தின் விரைவினும் மிக்கு அளவில்லாத விரைவுடன் இப்பொழுது செல்லா நிற்கும்' என்று (அந்நகரத்துப்) பெண்கள்யாவரும் தங்கள் தங்களுக்குள் வருந்திக் காம மயக்கத்தை அடைகிற பொழுதில், (முன் திரிவிக்கிரமனாகி) மண்ணுலகை அளந்து (மேலும்) தேவர்கள் தங்கும் விண்ணுலகையும் அளந்தவனான (திருமாலின் அமிசமான) அவ்விராமனைத் தான் தன்னுடைய கண்களை விட்டு நீங்காமல் பாதுகாத்துக் கொண்ட அழகியான சீதை, (மற்ற மங்கையரை விடச்) சிறந்தவளே யாவள்.

கு :—இது கவிக் கூற்று. இதனால், அழகுடைய மகளிர் பலரும் தன்னைக் கண்டு காதலித்து மயங்கவும், தான் அம் மகளிருள் ஒருத்தியிடத்தும் காதல் கொள்ளாத இராமனை எப்பொழுதும் தன்னை விட்டு நீங்காமல் தன் கண்ணுக்குப்புலனாம்படி நாயகனாகப் பெறும் பேறுற்ற சீதையின் பெருமை கூறியவாறு. கடத்தல் - அளத்தல். 'இரு நிலங்கடந்த' (29) என்பது பெரும்பாணாற்றுப் படை.

இராமன் தம் நோக்கத்தை விட்டு அகலுங்காலத்து மகளிர் பலர் பிரிவாற்றாமையால் வருந்திநிற்க, அப்பொழுது மறைந்து சென்ற அவன் வடிவழகை உருவெளித் தோற்றத்தால் கண்ணெதிரே நீங்காமல் கண்டு நின்று முன்போலவே களிக்கின்ற ஒரு காரிகையைக் கற்பனை முகத்தாற் சிறப்பித்துக் கூறுகிறது இக்கவி எனக் கொள்ளினும் அமையும். (7)

### ஒரு தெரிவை எல்லாவற்றையும் உகுத்து நிற்றல்

**1155.** பயிரொன்று கலையுஞ் சங்கும்
பழிப்பறு நலனும் பண்பும்
செயிரின்றி யலர்ந்த பொற்புஞ்
சிந்தையு முணர்வுந் தேசும்
வயிரஞ்செய் பூணு நாணு
மட்டனுந் தன்னிறையு மற்றும்
உயிரொன்று மொழிய வெல்லா
முகுத்தொரு தெரிவை நின்றாள்.

பயிர், ஒன்று கலையும், சங்கும்,
பழிப்பு அறு நலனும், பண்பும்,
செயிர் இன்றி அலர்ந்த பொற்பும்,
சிந்தையும், உணர்வும், தேசும்,
வயிரம் செய் பூணும், நாணும்,
மட்டனும், தன் நிறையும், மற்றும்,
உயிர் ஒன்றும் ஒழிய, எல்லாம்
உகுத்து ஒரு தெரிவை நின்றாள்.

பொ :—(அம்மகளிர்களுள்) தெரிவைப் பருவத்தளாய ஒரு பெண் தன்னுடைய பயிர்ப்பு என்னும் பெண்மைக் குணத்தையும், (பிரியாது) பொருந்தின ஆடையையும், சங்க வளையல்களையும், வசையில்லாத நற்செய்கையையும், பாடறிந்து ஒழுகுதலையும், குற்றமில்லாமல் விளங்கிய அழகையும், மனத்தையும், அறிவையும், ஒளியையும், வயிரக் கற்களை யழுத்திச் செய்த நகைகளையும், வெட்கத்தையும், மடமைக் குணத்தையும், மனஅடக்கத்தையும், இன்னுமுள்ள அச்ச முதலிய பெண்மைக் குணங்களையும், (இங்ஙனம்) தன் உயிரொன்றைத் தவிர எல்லாவற்றையும் சிந்தவிட்டுத் தான் தனியே நின்றாள்.

கு :—பயிர் - பயிர்ப்பு : பெண்களுக்குரிய அச்சம் முதலிய நான்கு குணங்களில் ஒன்று : பயிர்ப்பாவது பழகாத பொருளைக் கண்டால் உண்டாகும் அருவருப்பு. கலை - துகில். சங்கு - சங்காலாகிய வளை. செயிர் - குற்றம். பொற்பு - அழகு. தெரிவை - 25 முதல் 31 வயதுக்குட்பட்ட பருவப்பெண். இராமனிடத்துத் தன் மனத்தைப் பறிகொடுத்த இத்தெரிவை தன் உடைமைகளை மட்டுமன்றிப் பெண்மைக்குரிய குணங்களையும் இழந்து நின்றாள் என்றவாறு.
(8)

### காமன் சரங்களால் ஒருத்தி வருந்துதல்

1156. குழையுரு மிளிருங் கெண்டை
கொண்டலி னுலி சிந்தத்
தழையுருக் கரும்பின் சாபத்
தனங்கவேள் சரங்கள் பாய
இழையுருப் புண்ண ருத
விளமுலை யொருத்தி சோர்ந்து
மழையுரு மின்னி னன்ன
மருங்குல்போ னுடங்கி நின்ருள்.

குழை உரு மிளிரும் கெண்டை
கொண்டலின் ஆலி சிந்தத்,
தழை உருக் கரும்பின் சாபத்து
அனங்கவேள் சரங்கள் பாய,
இழை உருப் புண் அருத
இள முலை ஒருத்தி, சோர்ந்து,
மழை உரு மின்னின் அன்ன
மருங்குல் போல், நுடங்கி நின்ருள்.

பொ :—குழையென்னும் காதணியோடு பொருந்தி விளங்குகிற கெண்டை மீன்கள் போன்ற கண்கள் மேகம்போலக் கண்ணீர்த் துளிகளைப் பெருகவிடாநிற்க, தழையில்லாத இனிய கரும்பாகிய வில்லையுடைய மன்மதனின் அம்புகள் (தன்மேற்) பாய்ந்ததனுல், நூலிழையும் இடையிலே நுழையும்படி வெற்றிடமில்லாமல் புண்கள் (எங்கும்) நீங்காமல் நிறைந்திருக்கப்பெற்ற இளமையான தனங்களையுடைய ஒரு பெண், தளர்ச்சியடைந்து, மேகத்தில் தோன்ருமல் (பூமியில் தோன்றுவதொரு) மின்னலையொத்த தனது இடை போலவே (உடம்பு) முழுவதும் துவண்டுகின்ருள்.

கு :—கெண்டை - கெண்டை மீன் போன்ற கண். தழை - இலை. சாபம் - வில்.

இவள் கண்ணீர் சொரிந்து சோர்ந்து நுடங்கி நின்றது இராமனை அடையப்பெருமையானும், அவன் மறைந்தமையானும் என்க. (9)

## இராமன் நிறமும் மகளிர் கண்ணின் கருமையும்

**1157.** பஞ்சிவர் விரலி னார்தம்
படைநெடுங் கண்க ளெல்லாம்
செஞ்செவே யையன் மெய்யிற்
கருமையைச் சேர்ந்த வோதாம்
மஞ்சன மேனி யான்றன்
மணிநிற மாத ரார்தம்
அஞ்சன நோக்கம் போக்க
விருண்டதோ வறிகி லேமால்.

பஞ்சு இவர் விரலினார் தம்
படை நெடும் கண்கள் எல்லாம்
செஞ்செவே ஐயன் மெய்யில்
கருமையைச் சேர்ந்தவோ தாம்?
மஞ்சு அன மேனியான் தன்
மணி நிறம் மாதரார் தம்
அஞ்சன நோக்கம் போக்க
இருண்டதோ? அறிகிலேம், ஆல்.

பொ:—செம்பஞ்சுக் குழம்பூட்டப்பட்ட விரல்களையுடைய அப்பெண்களின் வேலாயுதம் போன்ற பெரிய கண்கள் யாவும் தாங்கள் இராமனுடைய மேனியிலுள்ள கருநிறத்தை மிகவும் நன்றாக அடைந்தனவோ? (அல்லது) மேகத்தையொத்த மேனியையுடைய அவ்விராமனது அழகிய நிறம் அப்பெண்கள் தம்முடைய மைதீட்டிய கருங்கண்களைச் செலுத்தியதனால் கறுப்படைந்ததோ? தெரிந்தோமில்லை. ஆல் - அசை.

கு:—பஞ்சு இவர் - செம்பஞ்சுக் குழம்பு படர்ந்த. செஞ்செவே - மிகவும் நன்றாக. இதனால் இராமனது கருநிறமும் அப்பெண்கள் கண்களின் கருநிறமும் ஒன்றையொன்று மிஞ்சி நின்றவாறு உணர்த்தப்பட்டது. அப்பெண்கள் தத்தம் கண்கள் இராமன் உடம்பில் நன்கு பதியுமாறு நன்றாக ஊன்றி நோக்கினர் என்றவாறு.

(10)

ஒருத்தி மன்மதனை நொந்து கூறல்

1158. மாந்தளிர் மேனி யாளோர்
வாணுதன் மதன னெங்கும்
பூந்துணர் வாளி மாரி
பொழிகின்ற பூச னோக்கி
வேந்தர்கோ னாணை நோக்கான்
வீரன்வி லாண்மை பாரான்
ஏந்திழை யாரை யெய்வான்
யாவனோ வொருவ னென்றாள்.

மாந்தளிர் மேனியாள் ஓர்
வாள் நுதல் மதனன் எங்கும்
பூம் துணர் வாளி மாரி
பொழிகின்ற பூசல் நோக்கி,
'வேந்தர் கோன் ஆணை நோக்கான்,
வீரன் வில் ஆண்மை பாரான்,
ஏந்து இழையாரை எய்வான்
யாவனோ ஒருவன்?' என்றாள்.

பொ:—மாமரத்தின் தளிர்போலச் சிவந்த மெல்லிய உடம்பையுடையவளாகிய ஒளி பொருந்திய நெற்றியையுடைய ஒரு பெண், மன்மதன் (தங்கள்மேல்) எவ்விடத்தும் பூங்கொத்துக்களாகிய அம்பு மழையைப் பொழிகின்ற போரினைக் கண்டு, 'அரசர் கோமகனாகிய சனகனது ஆணையின் சிறப்பை மதியாதவனாயும், சிறந்த வீரனான இராமனது விற்றொழிற்றிறமையை மதியாதவனாயும் பெண்கள் மீது அம்பெய்து வருத்துபவனாயுமுள்ள இவ்வொருத்தன் யாரோ?' என்று கூறினாள்.

கு:—மிதிலை நகரத்து மகளிர் 'வேந்தர்கோன்' என்று இயல்பாக சனகனையே குறிப்பிடுவர் என்க. (11)

ஒருத்தி துகில் ஒன்றை மட்டும் தாங்குதல்

1159. சொன்னலங் கடந்த காமச்
சுவையையோ ருருவ மாக்கி
இன்னலந் தெரிய வல்லா
ரெழுதிய தென்ன நின்றாள்

பொன்னையும் பொருவு நீராள்
புனைந்தன வெல்லாம் போகத்
தன்னையுந் தாங்க லாதாள்
துகிலொன்றுந் தாங்கி நின்ருள்.

சொல் நலம் கடந்த காமச்
சுவையை ஓர் உருவம் ஆக்கி,
இன் நலம் தெரிய வல்லார்
எழுதியது என்ன நின்ருள்;
பொன்னையும் பொருவும் நீராள்,
புனைந்தன எல்லாம் போகத்,
தன்னையும் தாங்கலாதாள்,
துகில் ஒன்றும் தாங்கி நின்ருள்.

பொ :—திருமகளையும் ஒக்கும் அழகின் தன்மையுடையவளான ஒரு பெண், (இராமனைக் கண்டு காமுற்றுத் தான்) அணிந்துள்ள நகைகள் எல்லாம் கழன்று விழுந்துவிடவும், தன் உடம்பையும் தான் தாங்கும் வலிமையில்லாதவளாய்த் தன் ஆடையொன்றை மட்டுமே தரித்துக்கொண்டவளாய், இனிய (சித்திரத்தின்) சிறப்பு முழுவதையும் அறியவல்ல ஓவியக்காரர் சொல்லையும் எல்லா இன்பங்களையும் கடந்து நின்ற காமவின்பத்தையே ஒரு பெண் வடிவமாக அமைத்து எழுதினதுபோல, நின்ருள்.

கு :—பொன் – திருமகள். இன்னதென்று சொல்லுதற்கரிதாய் எல்லா இன்பங்களையும் கடந்து நின்றது, காமவின்பமாதலால், 'சொன்னலங் கடந்த காமச் சுவையை' என்ருர். பரிமேலழகரும், காமத்துப்பாலின் தொடக்கத்தில், திருக்குறளுரையில், "ஈண்டின்பமென்றது ஒருகாலத் தொருபொருளான் ஐம்புலனு நுகர்தற் சிறப்புடைத்தாய காமவின்பத்தினை. இச்சிறப்புப் பற்றி வடநூலுட் போசராசனும், 'சுவை பலவென்று கூறுவார் கூறுக, யாம் கூறுவது இன்பச்சுவையொன்றனையுமே' என இதனையே மிகுத்துக் கூறினன்" என்று குறித்ததும் காண்க. (12)

### ஒருத்தி இராமன் தமியனே எனல்

1160. விற்றங்கு புருவ நெற்றி
வெயர்வரப் பசலை விம்மச்
சுற்றெங்கு மெறிப்ப வுள்ளஞ்
சோரவோர் தோகை நின்ருள்

கொற்றஞ்செய் கொலைவே லென்னக்
கூற்றெனக் கொடிய கண்ணாள்
மற்றொன்றுங் காண்கி லாதா
டமியனோ வள்ள லென்றாள்.

வில் தங்கு புருவம் நெற்றி
வெயர் வரப், பசலை விம்மச்,
சுற்று எங்கும் எறிப்ப, உள்ளம்
சோர, ஓர் தோகை நின்றாள்,
கொற்றம் செய் கொலை வேல் என்னக்
கூற்று எனக் கொடிய கண்ணாள்,
மற்று ஒன்றும் காண்கிலாதாள்
'தமியனோ வள்ளல்?' என்றாள்.

பொ :—வெற்றியை விளைக்கின்ற கொல்லுந் தொழிலையுடைய வேலாயுதம் போலவும், யமன் போலவும் கொடுந் தன்மையை யுடைய கண்களையுடையவளும் மயில்போலுஞ் சாயலையுடைய வளுமாகிய ஒரு பெண், வில்லின் தன்மை பொருந்தின (வளைந்த) புருவங்களிலும் நெற்றியிலும் வேர்வை நீர் ஒழுகவும், பசப்புநிறம் (தன் உடம்பைச்) சுற்றி எவ்விடத்திலும் மிகுதியாகப் பரவி விளங்கவும், மனம் தளர நின்றவளாய், (இராமனைத் தவிர) வேறு எப்பொருளையும் காணாதவளாய் 'வண்மைக் குணமுடையவனான இராமன் தனியனாயுள்ளானோ?' என்று கூறினாள்.

கு :—இராமன்மீது அளவற்ற காதல்கொண்டு அம்மயக்கிலே திளைத்த இப்பெண், இராமன் தனக்கு அருள்பாலிக்கும் பொருட்டே தனியாக வந்துள்ளான் எனக் கொண்டு அவனை வள்ளல் என்றாள்.

அவளுடைய கண்கள் ஐந்து பேரறிவையுங்கொண்ட நிலையில் அவள் கண்களை இராமன் ஒருவனே கொண்டுவிட்டானாகையால், அவளால் வேறு யாரையும் எப்பொருளையும் காண இயலாது போயிற்று. (13)

### ஒருத்தி கண்களை அடைத்து அமளியை நாடுதல்

1161. மைக்கருங் கூந்தற் செவ்வாய்
வாணுத லொருத்தி யுள்ளம்
நெக்கன ளுருகு கின்று
ணெஞ்சிடை வஞ்சன் வந்து

புக்கனன் போகா வண்ணங்
கண்ணெனும் புலங்கொள் வாயும்
சிக்கென வடைத்தேன் ரோழி
சேருது மமளி யென்றாள்.

மைக் கருங்கூந்தல் செவ்வாய்
வாள் நுதல் ஒருத்தி உள்ளம்
நெக்கனள் உருகுகின்றாள்,
'நெஞ்சு இடை வஞ்சன் வந்து
புக்கனன், போகாவண்ணம்,
கண் எனும் புலம் கொள் வாயும்
சிக்கென அடைத்தேன், தோழி!
சேருதும் அமளி' என்றாள்.

பொ :—அஞ்சனமைபோலக் கருநிறமான கூந்தலையும், சிவந்த வாயையும், ஒளிபொருந்திய நெற்றியையுமுடைய ஒரு பெண் (இராமனிடத்து) மனம் நெகிழ்ந்து உருகுகின்றவளாய், (தன் தோழியை நோக்கி) 'தோழியே! வஞ்சனையையுடையவனான இராமன் (என்) மனத்தினுள்ளே (கண் வழியாக) வந்து நுழைந்து அகப்பட்டுக்கொண்டான்; (அவன்) தப்பித்துப் போகாதபடி கண்ணென்கிற உறுப்பாகிய அவன் வந்த வழியையும் கதவை மூடி இறுக்கி அடைத்துவிட்டேன்; (இனி இங்கு நிற்காமல்) படுக்கையை அடைவோம்' என்று கூறினாள்.

கு :—சிக்கென - உறுதியாக. அவள் கண்களை மூடிக்கொண்டதால் தோழியின் உதவியை நாடினாள் என்க. தானும் தோழியும் வேறன்மையின் அவளையும் உளப்படுத்திச் சேருதும் எனக் கூறினாள். இராமன் கண் வழி நுழையும் கள்வனாய் அவள் மனத்தைக் கவர்ந்தவனாதலால் வஞ்சன் எனப்பட்டான். இன்பம் நுகரக் கருதி அமளி சேருதும் என்றாள்.

கண்வழி நுழைந்த கள்வனைக் கண்ணை மூடி அகப்படுத்திக் கொள்ளுதல், 'தனையவிழும் பூங்கோதை' என்று தொடங்கும் முத்தொள்ளாயிரப் பாடலிலும் காணலாம். (14)

## ஒருத்தி இராமனைக் காணும் பிறரைச் சினத்தல்

**1162.** தாக்கணங் கனைய மேனி
தைத்தவேள் சரங்கள் பாராள்
வீக்கிய கலனுங் தூசும்
வேறுவே றுன தோராள்

ஆக்கிய பாவை யன்னு
ளொருத்தியாண் டமலன் மேனி
நோக்குறு வாரை யெல்லா
மெரியெழ நோக்கு கின்ருள்.

தாக்கணங்கு அனைய மேனி
தைத்த வேள் சரங்கள் பாராள்,
வீக்கிய கலனும் தூசும்
வேறு வேறு ஆனது ஓராள்,
ஆக்கிய பாவை அன்னுள்
ஒருத்தி, ஆண்டு அமலன் மேனி
நோக்குறுவாரை எல்லாம்,
எரி எழ, நோக்குகின்ருள்.

பொ :—(அருமையாகச்) செய்யப்பட்ட பதுமைபோல்வாளான ஒரு பெண், மோகினியென்னும் பெண்தெய்வத்தின் வடிவத்தையொத்த (தனது) உடம்பிலே பாய்ந்த காமன் அம்புகளையும் கவனியாதவளாய், (தான்) இறுக அணிந்துள்ள நகைகளும் ஆடையும் (தன் உடம்பினின்று) வெவ்வேருகி நீங்கினமையும் உணராதவளாய், அவ்விடத்தில் குற்றமற்றவனான இராமனது திருமேனியை அன்போடு பார்ப்பவர்களையெல்லாம் கண்களினின்று தீப்பொறிகிளம்பச் சினந்து நோக்குபவளானுள்.

கு :—தாக்கணங்கு - தீண்டி வருத்துகின்ற மோகினி என்னும் அழகிய பெண்தெய்வம். தான் காதலித்தவனைப் பிறர் பார்ப்பதுகூடப் பொருமையினுல் எழுந்த சினத்தால் அவள் கண்களில் எரி எழுந்தது. அவளுடைய பரவச நிலையில் வெகுளியும் பொருமையும் கூடியெழுந்தன. இராமனுக்குக் கண்ணெச்சில் வருமே என்றும் கண்ணேறுபடுமே என்றும் சினந்தாள் எனலுமாம். (15)

### ஒருத்தி வெதுப்பொடு போதல்

1163. களிப்பன மதர்ப்ப நீண்டு
கதுப்பினை யளப்ப கள்ளம்
ஒளிப்பன வெளிப்பட் டோடப்
பார்ப்பன சிவப்புள் ளூற

வெளிர்ப்பன கறுப்ப வான
வேற்கணு ளொருத்தி யுள்ளம்
குளிர்ப்பொடு காண வந்தாள்
வெதுப்பொடுங் கோயில் புக்காள்,

களிப்பன, மதர்ப்ப, நீண்டு
கதுப்பினை அளப்ப, கள்ளம்
ஒளிப்பன, வெளிப்பட்டு ஓடப்
பார்ப்பன, சிவப்பு உள் ஊற
வெளிர்ப்பன, கறுப்ப ஆன
வேல் கணுள் ஒருத்தி உள்ளம்
குளிர்ப்பொடு காண வந்தாள்,
வெதுப்பொடும் கோயில் புக்காள்.

பொ :—களிப்புத் தோன்றுவனவும், செருக்குடையனவும், நீளமாய்ச் சென்று கன்னங்களை அளந்திடுவனவும் (பிறர் மனத்தைக் கவரும்) வஞ்சனைத் தன்மையை மறைத்துள்ளனவும், (விரைந்த பார்வையால்) வெளியே வந்து ஓடிப்போக வழி பார்ப்பவை போன்றனவும், (செவ்வரிகள் படர்ந்திருப்பதால்) சிவந்த நிறம் உள்ளே பொருந்த, (ஒரு பகுதி) வெளுத்திருப்பவையும், (ஒரு பகுதி) கறுத்திருப்பவையும் ஆகிய வேலாயுதம் போல் (நீண்டு நுனி கூரிய கொடிய) கண்களையுடையவளான ஒரு பெண் குளிர்ந்த மனத்துடனே (இராமனைப்) பார்க்க வந்து (கண்டபின் காதலால் அவனைச் சேரப் பெருமையாலாகிய) காம வெப்பத்துடனே (தன்) மாளிகையினுட் சென்றாள்.

கு :—பிதுங்கி விழுந்துவிடுமோ என்னும்படியாக நிலைத்த பார்வையில் விழிகளைக் கொண்டு நிறுத்துவதால், வெளிப்பட்டோடப் பார்ப்பன என்றார். மதர்ப்பு - செழிப்பினால் உண்டான செருக்கு. இராமன் அவள் பார்வையிலிருந்தும் நீங்கவும் விரக வேதனை அவளை நெருப்பாகச் சுட்டதால், வெதுப்பொடும் கோயில் புக்காள் என்றார். இக்கருத்து, "நீங்கிற் றெறூஉங் குறுகுங்கா றண்ணென்னுந், தீயாண்டுப் பெற்றாளிவள்." என்று திருக்குறளிலும் (1104) வந்துள்ளது.
(16)

**ஒருத்தி பெண்கள் இடைகளின் வெளிகளூடே பார்த்தல்**

1164. கருங்குழற் பாரம் வார்கொள்
கனமுலை கலைசூ ழல்குல்
நெருங்கின மறைப்ப வாண்டோர்
நீக்கிடம் பெறுது விம்மும்
பெருந்தடங் கண்ணி காணும்
பேரெழி லாசை தூண்ட
மருங்குலின் வெளிக ளூடே
வள்ளலை நோக்கு கின்ருள்.

கருங்குழல் பாரம் வார் கொள்
கன முலை, கலை சூழ் அல்குல்,
நெருங்கின மறைப்ப, ஆண்டு ஓர்
நீக்கு இடம் பெறுது, விம்மும்
பெரும் தடம் கண்ணி, காணும்
பேர் எழில் ஆசை தூண்ட,
மருங்குலின் வெளிகள் ஊடே,
வள்ளலை நோக்குகின்ருள்.

பொ :—(தனக்கு முன்ஞல் நிற்கும் பல மாதர்களுடைய) கருமையான கூந்தலின் தொகுதியும், கச்சணிந்த பருத்த தனங்களும், மேகலை சுற்றிலும் அணியப்பட்ட அரைப் பக்கங்களும் நெருங்கியிருந்த நிலையில் மறைத்தலைச் செய்யவும், (அக்குழல், முலை, அல்குல் உள்ள) அவ்விடங்களிலே (பார்ப்பதற்குரிய) வெளியிடமொன்றையும் பெறமாட்டாமல் வருந்திய மிகவும் பெரிய கண்களை யுடையவளான ஒரு பெண் (இராமனது) மிக்க அழகைப் பார்க்க வேண்டுமென்கிற விருப்பமானது உந்த (முன்ஞல் நிற்கும் மாதர்களின்) நுண்ணிய இடைகளுக்கு இடையிலுள்ள வெளிகளின் வழியாக வள்ளலாகிய இராமனைப் பார்ப்பவளாஞள்.

கு :—குழற்பாரம் என்றும் கனமுலை என்றும் சூழ் (பரந்த) அல்குல் என்றும் பெருந்தடங் கண்ணி என்றும் மருங்குலின் வெளிகள் என்றும் கூறினமையால் இராமனைக் கண்டு கொண்டிருந்த பெண்கள் உத்தம இலக்கணங்களையுடைய மாதர் என்பது கூறியவாறு. (17)

## வீதிகளின் தன்மை

1165. வரிந்தவா ளனங்கன் வாளி
மனங்கழன் றனவு மாதர்
எரிந்தபூ ணினமுங் கொங்கை
வெயர்த்தபோ திழிந்த சாந்தும்
சரிந்தமே கலையு முத்துஞ்
சங்கமுந் தாழ்ந்த கூந்தல்
விரிந்தபூந் தொடையு மன்றி
வெள்ளிடை யரிதவ் வீதி.

**வரிந்த வாள் அனங்கன் வாளி**
**மனம் கழன்றனவும், மாதர்**
**எரிந்த பூண் இனமும், கொங்கை**
**வெயர்த்தபோது இழிந்த சாந்தும்,**
**சரிந்த மேகலையும், முத்தும்,**
**சங்கமும், தாழ்ந்த கூந்தல்**
**விரிந்த பூந் தொடையும் அன்றி,**
**வெள் இடை அரிது அவ் வீதி.**

பொ :—கட்டிய வாளாயுதத்தையுடைய காமனுடைய மலரம்புகள் (பெண்களுடைய) நெஞ்சிலே தைத்து ஊடுருவி வெளி விழுந்தவையும், அப்பெண்களுடைய (உடம்பில் காம வெப்பம் படுதலால்) தீந்து சிந்துகிற நகைகளின் தொகுதியும், (அவர்கள்) தனங்கள் (புழுங்கி) வேர்வையுற்றபோது கரைந்தொழுகிய சந்தனப் பூச்சும், கழன்று வீழ்ந்த மேகலாபரணங்களும், முத்து மாலைகளும், சங்கு வளையல்களும், (அவர்களுடைய) நீண்ட கூந்தல் (கலைந்து) விழுந்த பூமாலைகளும் (என்னும் இவை எங்கும் கீழே நெருங்கிக் கிடப்பனவே) அல்லாமல் (இராமன் பவனிவந்த) அந்தத் தெருக்களில் காலியான இடம் இல்லை யாயிற்று.

கு :—மன்மதனுடைய வாள் தாழம்பூ என்பர். தெருக்களி லெல்லாம் மாதர்கள் கவனியாது கழல விட்ட பலவகை அணி கலன்களும், கரைந்தொழுகிய சந்தனச் சாந்தும், சரிந்து வீழ்ந்த பூமாலைகளுமாகக் கிடந்தன என்றவாறு. (18)

## இராமனது முழுவடிவை எவரும் கண்டிலர் என்றல்

**1166.** தோள்கண்டார் தோளே கண்டார்
தொடுகழற் கமல மன்ன
தாள்கண்டார் தாளே கண்டார்
தடக்கைகண் டாரு மஃதே
வாள்கண்ட கண்ணார் யாரே
வடிவினை முடியக் கண்டார்
ஊழ்கண்ட சமயத் தன்னா
னுருவுகண் டாரை யொத்தார்.

தோள் கண்டார் தோளே கண்டார்:
தொடு கழல் கமலம் அன்ன
தாள் கண்டார் தாளே கண்டார்:
தடக் கை கண்டாரும் அஃதே:
வாள் கண்ட கண்ணார் யாரே
வடிவினை முடியக் கண்டார்?
ஊழ் கண்ட சமயத்து அன்னான்
உருவு கண்டாரை ஒத்தார்.

பொ :—(அப்பெண்களுள் இராமனுடைய) தோள்களைப் பார்த்தவர்கள் (அத்தோள்களினழகுக்கு ஓர் எல்லையில்லாமையினாற் பிற உறுப்புக்களிற் கண்களைச் செலுத்த இயலாமல்) அத்தோள்களையே பார்த்துக்கொண்டிருந்தார்கள்; கட்டிய வீரக்கழலையுடைய தாமரைமலர்கள் போன்ற (இராமனின்) திருவடிகளைப் பார்த்தவர்கள் அத்திருவடிகளையே பார்த்து நின்றார்கள்; (முந்தி இராமனின்) பெரிய கைகளைப் பார்த்தவர்களும் அங்ஙனமே (அக்கைகளையே) விடாது பார்த்துக்கொண்டிருந்தார்கள்; வாளை யொத்த கண்களையுடைய அப் பெண்களுள் (இராமனுடைய) திருமேனியழகு முழுவதையும் பார்த்தவர் யாவருளர்? (அங்ஙனம் இராமனுடைய ஒவ்வோர் உறுப்பை மாத்திரம் பார்த்தவர்கள், தாம் தாம் தனித்தனி ஒவ்வொரு) முறைமையை ஏற்படுத்திக் கொண்ட மதங்கள் பலவற்றிலே கூறப்படுகிற அக்கடவுளின் வடிவங்கள் பலவற்றினுள் ஒவ்வொரு வடிவத்தையே கண்ட ஒவ்வொரு மதத்தினரைப் போன்றனர்.

கு :—இராமனுடைய அங்கங்களுள் ஒவ்வொன்றுமே பார்ப்பவர் மனத்தை முழுதும் கவர்வனவாயிருந்தன: அவற்றில் ஒன்றை முதலில் பார்த்தவர்கள் அதனையே பார்த்தவண்ணம்

நின்றுவிட்டார்கள். அது எப்படியிருந்தது என்றால், முழுமுதற் கடவுளுடைய ஒவ்வொரு பகுதியை அல்லது பல்வேறு வடிவங்களுள் ஒரு வடிவத்தையே கண்ட பல சமயத்தவரும் அவ்வப் பகுதியை அல்லது வடிவத்தையே முடிவாகக் கொண்டு விட்டது போலிருந்தது என்றவாறு. (19)

## ஒருத்தி தன் உள்ளத்து இராமனை ஒடுக்குதல்

1167. தையல் சிற்றிடை யாளொரு தாழ்குழல்
★ உய்ய மற்றவ ளுள்ளத் தொடுங்கினான்
வைய முற்றும் வயிற்றி னடக்கிய
ஐய னிற்பெரி யாரினி யாவரே.

தையல் சிற்றிடையாள் ஒரு தாழ் குழல்
உய்ய, மற்று, அவள் உள்ளத்து ஒடுங்கினான் ;
வையம் முற்றும் வயிற்றின் அடக்கிய
ஐயனில் பெரியார் இனி யாவரே ?

பொ :—அழகுடையவளும் சிறிய இடையை யுடையவளும் தாழ்ந்த கூந்தலையுடையவளுமான ஒரு பெண் (வருந்தாமற்) பிழைத்திருக்கும்படி (இராமன்) அவளுடைய நெஞ்சினுள்ளே அடங்கியிருந்தான்; உலக முழுவதையும் (தன்) வயிற்றிலே (ஒரு காலத்து) அடக்கி வைத்த அத்தலைவனைவிடப் பெரியவர் வேறு யாவருளர்? மற்று அசை.

கு :—உலக முழுதையும் தன் வயிற்றிலடக்கிய ஒரு பெரியவன் இப்பொழுது ஒரு பெண்ணின் உள்ளத்தில் அடங்கிக் கிடந்தான் என்று அவன் பெருமையைக் கூறுமுகத்தால் அப் பெண்ணினுடைய உள்ளத் திறமையை வியந்து கூறுகிறார் கவிஞர். (20)

## ஒருத்தி தோழியர் கைத்தாங்கலிற் செல்லுதல்

1168. அலம்பு பாரக் குழலியொ ராயிழை
சிலம்பு மேகலை யும்மொலி செய்திட
நலம்பெய் கொம்பி னடந்துவந் தெய்தினாள்
புலம்பு சேடியர் கைமிசைப் போயினாள்.

அலம்பு பாரக் குழலி, ஓர் ஆய் இழை,
சிலம்பும் மேகலையும் ஒலி செய்திட
நலம் பெய் கொம்பின் நடந்து வந்து எய்தினுள்,
புலம்பு சேடியர் கை மிசைப் போயினுள்.

பொ:—(வண்டுகள்) ஒலிக்கின்ற (மலர்ச்) சுமையைத் தாங்கிய கூந்தலையுடையவளும் ஆராய்ந்தெடுத்த அணிகலன்களை யணிந்தவளுமான ஒரு பெண் (காலில்) சிலம்பும் (இடையில்) மேகலையும் ஒலிக்கும்படியாக அழகுமிகுந்த பூங்கொம்பு போல (இராமனைக் காணும்படி) நடந்து வந்து சேர்ந்தவள் (இராமனைக் கண்டு மயங்கித் தன்வசமிழக்கவும்) பலவும் கூறி வருந்துகிற தோழிமாரின் கைத்தாங்கலிலே திரும்பிப்போனுள்.

கு:—இராமனைக் காணவரும்பொழுது அவளுக்குள்ள மகிழ்ச்சியும் ஒய்யார நடையும் முதல் மூன்று அடிகளாற் கூறினுர். இராமனைக் கண்டபின் அவள் தன் வசமிழந்து செயலற்ற நிலையில் தோழிமார்களால் எடுத்துச் செல்லப் பெற்றுள் என்பதாம். முன் தானுக நடந்து வந்தவள் இப்பொழுது தோழியர் அரவணைப்பிலே செல்லலாயிற்று. அவளுக்குத் திடீரென நேர்ந்த மயக்க நிலை கண்டு தோழியர் புலம்பிக்கொண்டே அவளை எடுத்தோ நடத்தியோ சென்றனர் என்க. (21)

### ஒருத்தி இராமனைக் கரும்பு வில் ஒடிக்க வேண்டுதல்

1169. அருப்பு மென்முலை யாளங்கொ ராயிழை
இருப்பு நெஞ்சினை யேனுமொ ரேழைக்காப்
பொருப்பு வில்லைப் பொடிசெய்த புண்ணியா
கருப்பு வில்லிறுத் தாட்கொண்டு காவென்றுள்.

அருப்பு மெல் முலையாள், அங்கு, ஓர் ஆய் இழை,
'இருப்பு நெஞ்சினையேனும், ஓர் ஏழைக்கு ஆப்
பொருப்பு வில்லைப் பொடி செய்த புண்ணியா!
கருப்பு வில் இறுத்து ஆள் கொண்டு கா!' என்றுள்.

பொ:—(அவ்விடத்தே கோங்கின்) அரும்பு போன்ற மெல்லிய தனங்களையுடையவளும் ஆராய்ந்தெடுத்த அணிகலன்களையுடையவளுமான ஒரு பெண் (இராமனை நோக்கி) 'இரும்பு போன்ற வலிய நெஞ்சையுடையாயாயினும், ஓர் இளம்பெண்ணுக்காக (சீதைக்காக) மேருமலையான வில்லை ஒடித்தெறிந்த நல்வினை

யுடையவனே! (என் மேல் அம்பை எய்கிற மன்மதனது) கரும்பாகிய வில்லை ஒடித்து என்னையும் அடியவளாகக் கொண்டு காத்தருள்க' என்று கூறினாள்.

கு :—ஓர் ஏழைக்கு ஆ-ஒரு பெண்ணுக்கு ஆக: இங்கே ஏழை என்றது சீதையை. சீதைக்காக இராமன் ஒடித்த வில் இரண்டாக முறிந்தது உண்மையாயினும், அவன்மீதுள்ள ஆசைபற்றி, வில்லைத் தூளாகும்படி பொடிசெய்தான் என்று இவள் கூறினாள். சீதையை மணந்துகொள்ள ஒரு மலையை ஒடித்தவனுக்கு, இப்பெண்ணை மணக்க ஒரு கரும்புவில்லை ஒடிப்பது எளிதென்று இவ்வாறு கூறினாள்.

அரும்பு அருப்பு என்றும் இரும்பு இருப்பு என்றும் எதுகை நோக்கி வலித்துநின்றன.

சீதையை மணக்க வேண்டி மிதிலையில் இராமன் ஒடித்த வில் சிவனுடைய வில் ஆதலால் பொருப்பு வில் எனப்பட்டது. மேரு மலையைச் சிவன் வில்லாக வளைத்துக் கொண்டான் என்பது வரலாறு. (22)

## ஒருத்தி இராமனைத் தேரிலன்றிக் கண்ணெதிரே காண்டல்

**1170.** மைத வழ்ந்த கருங்கணோர் வாணுதல்
செய்த வன்றனித் தேர்மிசைச் சேறல்விட்
டெய்த வந்தெதிர் நின்றமை தானிது
கைத வங்கொல் கனவுகொ லோவென்றாள்.

மை தவழ்ந்த கருங்கண் ஓர் வாள் நுதல்,
'செய் தவன் தனித் தேர் மிசைச் சேறல் விட்டு,
எய்த வந்து, எதிர் நின்றமைதான் இது,
கைதவம் கொல்? கனவு கொல்? ஓ' என்றாள்.

பொ :—மைதீட்டப்பட்டுள்ள கரிய கண்களையுடைய ஒளி பொருந்திய நெற்றியையுடையவளான ஒரு பெண், (முற்பிறப்பில் அரிய) தவத்தைச் செய்தவனாகிய இராமன் ஒப்பற்ற தேரின் மேலே செல்லுதலை யொழிந்து, பொருந்த வந்து என் கண்ணெதிரில் நின்றதாகிய இச் செய்கை பொய்தானோ! அல்லது கனவாக இருக்குமோ?' என்று கூறினாள். ஓ - அசை.

கு :—கைதவம் - பொய். உருவெளித் தோற்றத்தில் இராமனைக் கண்ட ஒரு பெண் இவ்வாறு கூறினாள். அவ்வளவு பேரழகு

பெறுதற்கு முற்பிறப்பில் தவம் செய்திருக்கவேண்டுமாதலால், இராமனைச் செய்தவன் என்றாள். செய்தவன் என்பதற்குத் தன்னை அவ்வாறு விரகவேதனையடையச் செய்தவன் என்றும் பொருள் கொள்ளலாம். (23)

### ஒருத்தி சீதையின் தவத்தை நினைந்து சோர்தல்

**1171.** மாதொ ருத்தி மனத்தினை யல்லதோர்
தூது பெற்றில ளின்னுயிர் சோர்கின்றாள்
போத ரிக்கட் பொலன்குழைப் பூண்முலைச்
சீதை யெத்தவஞ் செய்தன ளோவென்றாள்.

மாது ஒருத்தி மனத்தினை அல்லது ஓர்
தூது பெற்றிலள் இன் உயிர் சோர்கின்றாள்
'போது அரிக் கண் பொலன் குழைப் பூண் முலைச்
சீதை எத் தவம் செய்தனளோ?' என்றாள்.

பொ:—ஒரு பெண் (தன்) மனத்தைத் தவிர (இராமனிடம் அனுப்ப) வேறொரு தூதையும் பெறாதவளாய் (இராமன் மீது கொண்ட காதலால் தனது) இனிய உயிர் தளர்ந்தொழியப் பெறுகிறவள், 'தாமரைமலர்போன்ற செவ்வரி படர்ந்த கண்களையும், பொன்னாற் செய்த குழையென்னும் காதணிகளையும், நகைகளணிந்த தனங்களையுமுடைய சீதை (இராமனை மணவாளனாகப் பெறுவதற்கு) எத்தகைய தவத்தைச் செய்தனளோ?' என்றாள்.

கு:—சீதை செய்த தவத்தைத் தான் செய்யவில்லையே என்று ஏங்கியவாறும். வேறு யாரிடமும் சொல்ல இயலாது தன் மனத்தை நோக்கிக் கூறியதால், மனத்தைத் தவிர வேறு தூது பெற்றிலள் என்றார். இராமனை எப்பொழுதும் கண்டுகளிக்கும் பேறு பெற்றதால் சீதையின் கண்களும், அவன் இன்சொற்களைப் பருகி மகிழும் பேறு பெற்றதால் அவள் செவிகளும், அவனை அணையும் பேறு பெற்றதால் அவள் தனங்களும் சிறப்பாக இங்கே அப் பெண்ணால் குறிக்கப்பெற்றன. (24)

### மன்மதனால் இராமனை எழுதலாமோ எனல்

**1172.** பழுதி லாவொரு பாவையன் னாள்பதைத்
தழுது வெய்துயிர்த் தன்புடைத் தோழியைத்
தொழுது சோர்ந்தயர் வாளிந்தத் தோன்றலை
எழுத லாகுங்கொன் மன்மதனா லென்றாள்.

பழுது இலா ஒரு பார்வை அன்னாள் பதைத்து
அழுது வெய்து உயிர்த்து, அன்பு உடைத் தோழியைத்
தொழுது சோர்ந்து அயர்வாள் 'இந்தத் தோன்றலை
எழுதல் ஆகும் கொல் மன்மதனால்?' என்றாள்.

பொ :—(எவ்வகையிலும்) குற்றமில்லாத ஒரு சித்திரப் பதுமை போன்ற அழகுவாய்ந்த ஒரு பெண், (இராமன் மீது கொண்ட காதலால்) துடித்து அழுது வெப்பங்கொண்ட பெருமூச்சுக்களை விட்டுத் தளர்ந்து வருந்துபவளாய், அன்புள்ள தனது தோழிக்கு (இராமனைத்) தொழுதுகாட்டி, 'இந்தத் தலைவனாகிய இராமனை மன்மதனாலும் (சித்திரத்தில்) வரைய முடியுமா?' என்று வினவினாள்.

கு :—'இந்தத் தோன்றலை' என்று இராமனைத் தோழிக்குக் காட்டும்பொழுது, அவனைக் கைகூப்பித் தொழுதவண்ணம் காட்டினாள் என்க. அழகிய வடிவங்களை மன்மதன் ஓவியமாக எழுதுவதாகக் கூறுதல் கவி மரபு. 'அனங்கவேள் செய்த வோவியம் புகை யுண்டதே யொக்கின்ற வுருவாள்' என்று சுந்தரகாண்டம், காட்சிப் படலத்தில் (11) வருதல் காண்க. (25)

### ஒருத்தி இராமன் கண்ணனே எனல்

**1173.** வண்ண வாயொரு வாணுதன் மானிடற்
கெண்ணுங் காலிவ் விலக்கண மெய்திட
ஒண்ணு மோவி துணர்த்துகின் றேனிவன்
கண்ண னேயிது கண்டிரும் பின்னென்றாள்.

**வண்ண வாய் ஒரு வாள் நுதல், 'மானிடற்கு,**
**எண்ணுங்கால், இவ் இலக்கணம் எய்திட**
**ஒண்ணுமோ? இது உணர்த்துகின்றேன், இவன்**
**கண்ணனே! இது கண்டிரும் பின்!' என்றாள்.**

பொ :—அழகிய வாயையுடைய ஒள்ளிய நெற்றியையுடையாளொரு பெண் (தன் அருகிலுள்ள பெண்களை நோக்கி) 'எண்ணிப் பார்க்குமிடத்து, எல்லா இலக்கணத்துக்கும் ஒத்திருக்கும் இவ்வழகு மனிதனையுள்ள ஒருவனுக்குப் பொருந்தக்கூடியதோ? இந்த உண்மையை (நான் உங்களுக்குத்) தெரிவிக்கின்றேன். இந்த இராமன் திருமாலேயாவான்! இதை நீங்கள் பின்னால் அறியப் போகிறீர்கள்!' என்று கூறினாள்.

கு :—இவள் இராமனைக் கண்ணனென்று அழகாகப் பேசும் வாயைப் பெற்றதால், இவள் வாய் வண்ணவாய் என்று சிறப்பிக் கப்பெற்றதுபோலும். மனித உலகிலே காணப்படாத பேரழகு இராமனிடம் காணப்பட்டதால், அவனைத் தெய்வப்பிறவியாகக் கண்டு திருமாலே எனக்கொண்டு கூறினாள் என்பதாம். (26)

### ஒருத்தி இராமன் மிதிலை வருதல் சனகன் தவம் எனல்

1174. கனக நூபுரங் கைவளை யோடுக
மனனெ கும்படி வாடியொர் வாணுதல்
அனக னிந்நக ரெய்திய தாதியிற்
சனகன் செய்த தவப்பய னாலென்றாள்.

கனக நூபுரம் கை வளையோடு உக,
மனன் நெகும்படி வாடி, ஒர் வாள் நுதல்,
'அனகன் இந் நகர் எய்தியது, ஆதியில்
சனகன் செய்த தவப் பயனால்!' என்றாள்.

பொ :—ஒளிபொருந்திய நெற்றியையுடையவளான ஒரு பெண், (தன்னுடைய) பொன்னாலான காற்சிலம்புகளும் கையிலணிந்த வளையல்களும் (இராமன் மீது கொண்ட காதலில் உடம்பு இளைத்து மெலிந்ததால்) கழன்று விழ, வருந்தி, உள்ளம் உருகும் படி, 'குற்றமற்றவனான இவ்விராமன் இந்த மிதிலை நகரை யடைந்தது சனகன் முன் செய்த தவத்தின் பயனாலேயாகும்!' என்று கூறினாள்.

கு :—மிதிலைக் கரசன் சனகனாதலாலும், அவன் மகளான சீதையை இராமன் மணந்து அவனுக்கு மருகனாக ஆவதாலும் இராமன் அங்கு வருவதற்குப் பல பிறவிகளில் சனகன் தவம் செய்திருக்க வேண்டும் என்றாள். தன் தந்தை அவ்வாறு தவம் செய்யவில்லையே என்று அப்பெண் உருகியவாறாகக் கொள்க, அவள் மனனெகும்படி வாடிக் கூறியபடியால். (27)

### ஒருத்தி 'கனவில் இராமன் தனி வருமோ' எனல்

1175. நனிவ ருந்தி நலங்குடி போயிடப்
பனிவ ருங்கணோர் பாசிழை யல்குலாள்
முனிவ ருங்குல மன்னரு மொய்ப்பறத்
தனிவ ருங்கொல் கனவின் றலையென்றாள்.

நனி வருந்தி, நலம் குடிபோயிடப்,
பனி வரும் கண் ஓர் பாசிழை அல்குலாள்,
'முனிவரும் குல மன்னரும் மொய்ப்பு அறத்,
தனி வரும் கொல் கனவின் தலை?' என்ருள்.

பொ :—பசும்பொன்னுலாகிய (மேகலை முதலிய) அணிகலன் களையுடைய அரைப்பக்கத்தையுடையவளான ஒரு பெண் (இராமனிடத்துக் காதலால்) மிக வருத்தமுற்றுத் தன் அழகு கெடும்படி கண்ணீர்த் துளிகள் பெருகும் கண்களையுடைய ளாய், '(இராமன்) முனிவர்களும் உயர்குலத்தரசர்களும் (இப் பொழுது சூழ்ந்திருத்தல் போலச்) சூழ்தலில்லாமல் (என் னுடைய) கனவிடத்துத் தனியாய் வருவானே?' என்று கூறினள்.

கு :—கனவிலாயினும் இராமனைத் தழுவி இன்புறக் கருதினள் ஒரு பெண் என்றவாறு.

பொன்னின் பசுமை இழைக்கு ஏற்றிக் கூறப்பட்டது; பாசிழை என்பதற்குப் பசுநிறப் பட்டாடையென்றும் கொள்ள லாம். (28)

### முகக் குறிகளால் ஒருத்தி காதல் புலப்படுதல்

**1176.** புனங்கொள் கார்மயில்
போலுமோர் பொற்கொடி
மனங்கொள் காதன்
மறைத்தலை யெண்ணினள்
அனங்க வேள
தறிந்தன னற்றந்தான்
மனங்கள் போல
முகமு மறைக்குமே.

புனம் கொள் கார் மயில் போலும் ஓர் பொன் கொடி,
மனம் கொள் காதல் மறைத்தலை எண்ணினள்:
அனங்கவேள் அது அறிந்தனன்: அற்றம் தான்,
மனங்கள் போல முகமும் மறைக்குமே?

பொ :—காட்டில் வாழ்கின்ற கார்காலத்துக் களிக்கும் மயிலை யொப்பவளாகிய பொன்னுலாகிய பூங்கொடி போல்வா ளொருத்தி (இராமனிடத்துத் தன்) மனத்திலே கொண்ட

ஆசையை வெளியே தோன்றுதபடி மறைத்து வைத்தலைக் கருதி ஞள்; (ஆனல்) மன்மதன் அதனை அறிந்துகொண்டான்; (எங்ஙனமெனின்) இரகசியப் பொருளை மனங்கள்போல முகங்களும் மறைப்பனவாமோ?

கு:—புனம் - காடு. கார் – மழைக்காலம். அற்றம் – இரகசியம்.

இராமனிடத்துத் தான்கொண்ட காதலை ஒருத்தி மனத்திலேயே வைத்து மறைத்துவிடப் பார்த்தாள். ஆனல் அவள் முகக் குறிகள் அதனை அம்பலப்படுத்திவிட்டன. மன்மதன் அதனைத் தெரிந்துகொண்டு அவளை வருத்தத் தொடங்கினன் என்பதாம்.

மயில்போன்ற ஒரு பெண் காளமேகம்போன்ற நிறத்தினனை இராமனைக் கண்டு களித்ததால் அவள் கார்மயில் என்னப்பட்டாள். முகம் பளிங்குபோல் நெஞ்சத்தை வெளியே காட்டி நிற்குமாதலால் 'முகத்தின் முதுக் குறைந்ததுண்டோ' (திருக்குறள். 707) என்று வள்ளுவரும் கூறினர். (29)

### ஒருத்தி பூவணையில் நெட்டுயிர்த்தல்

1177. இணைநெ டுங்க ணொரிந்து முகத்திபூ
அணைய ணைந்திடி யுண்ட வராவெனப்
புணர்ந லங்கிளர் கொங்கை புழுங்கிட
உணர்வ ழுங்க வுயிர்த்தன ளாவியே.

இணை நெடும் கண் ஓர் இந்து முகத்தி, பூ
அணை அணைந்து இடி உண்ட அரா எனப்,
புணர் நலம் கிளர் கொங்கை புழுங்கிட,
உணர்வு அழுங்க உயிர்த்தனள் ஆவியே.

பொ:—(ஒன்றோடொன்று ஒத்திருக்கும்படியான) இரண்டு நீண்ட கண்களையுடைய சந்திரனைப் போன்ற முகத்தையுடையாளொரு பெண் (இராமனிடத்துக் காதலால்) மலர்ப் படுக்கையைச் சேர்ந்து இடியொலியைக் கேட்ட பாம்புபோல, (ஒன்றோடொன்று) நெருங்கிய அழகுமிக்கு விளங்குகின்ற தனங்கள் வியர்க்கவும், அறிவு கெடவும் பெருமூச்செறிந்துகொண்டிருந்தாள்.

கு :—இடியொலியைக் கேட்ட நாகம் அஞ்சிப் புடையினுள் ஒடுங்கி உயிர்த்தல் போல், விரக வேதனையால் இப்பெண் பூவணை யில் ஒடுங்கி உயிர்த்தாள் என்றவாறு. (30)

### கவிக் கூற்று

1178. ஆம்ப லொத்தமு தூறுசெவ் வாய்ச்சியர்
தாம்ப தைத்துயி ருட்டடு மாறுவார்
தேம்பு சிற்றிடைச் சீதையைப் போற்சிறி
தேம்பல் பெற்றில ரெங்ஙன முய்வரே.

ஆம்பல் ஒத்து அமுது ஊறு செவ் வாய்ச்சியர்
தாம் பதைத்து உயிர் உள் தடுமாறுவார் :
தேம்பு சிற்றிடைச் சீதையைப் போல் சிறிது
ஏம்பல் பெற்றிலர் எங்ஙனம் உய்வரே ?

பொ :—அல்லிமலரைப்போற் சிவந்து, அமுதம் ஊறுகின்ற வாயையுடைய பெண்கள் (பலர்) தாங்கள் (உடல்) துடித்து உள்ளே உயிர்நிலை கலங்குவதானார்கள் : (மற்றை உறுப்புக்களின் பாரத்தால்) வருந்துகிற நுண்ணிய இடையையுடைய சீதையைப் போல் மகிழ்தற்குக் காரணத்தைச் சிறிதளவுகூடப் பெறாத இவர்கள் எவ்வாறு பிழைப்பார்கள் ?

கு :—இது பொதுவாக அம்மகளிரைப் பார்த்துக் கவிஞர் இரங்கிக் கூறிய கூற்று. இராமனுக்கு மனைவியாகிச் சீதை யடையும் இன்பத்தில் ஒரு துளிகூட இவர்களுக்குக் கிட்டாது என்பதாம். (31)

### ஒருத்தி 'இராமன் உள்ளன்பிலாதவனோ ?' எனல்

1179. வேர்த்து மேனி தளர்ந்துயிர் விம்மலோ
டார்த்தி யுற்ற மடந்தைய ராரையும்
தீர்த்த னித்தனை சிந்தையிற் செங்கணிற்
பார்த்தி லானுட் பரிவில னோவென்றாள்.

வேர்த்து மேனி தளர்ந்து, உயிர் விம்மலோடு,
'ஆர்த்தி உற்ற மடந்தையர் ஆரையும்,
தீர்த்தன் இத்தனை சிந்தையில் செங்கணில்
பார்த்திலான், உள் பரிவு இலனோ ?' என்றாள்.

பொ :—(இராமனிடத்துக் காதல் கொண்ட ஒரு பெண்) உடம்பு வியர்வையடைந்து, உயிர் நிலைகுலையப்பெற்று, வருத்தத்துடனே, 'வேதனைமிக்க மகளிர் எவரையும் தூயவனான இவ்விராமன் (தன்) சிவந்த கண்களாற் சிறிதும் நோக்கினானுமில்லை' உள்ளத்தாற் சிறிதும் கருதினானுமில்லை; (இவன்) மனத்தில் சிறிதும் அன்பு இல்லாதவனோ?' என்று கூறினாள்.

கு :—தூய சிந்தை நோக்குகளைக் கொண்டவன் இராமன் ஆதலால், அவன் தீர்த்தன் என்னப்பட்டான். தன்பாற் காதல் கொண்டவரைத் தான் காதலியாதிருத்தல் அன்பில்லாமையாகும் என்னும் கருத்தால் 'உட்பரிவிலனோ?' என்றாள். மகளிர் பலரும் மேற்சொல்லியவாறு இராமனைக் காதலித்து வேதனையடைந்தாராயினும், இராமன் அவர்கள்மாட்டு எவ்வித உணர்ச்சியுமின்றி இயல்பாக இருந்தான் என்பது இதனாற் போதரும். (32)

மன்மதன் உடைவாளினும் கை வைத்தல்

1180. வையம் பற்றிய மங்கைய ரெண்ணிலர்
ஐயன் பொற்புக் களவிலை யாதலால்
எய்யும் பொற்சிலை மாரனு மென்செய்வான்
கையம் பற்றுடை வாளினுங் கைவைத்தான்.

வையம் பற்றிய மங்கையர் எண் இலர்:
ஐயன் பொற்புக்கு அளவு இலை: ஆதலால்,
எய்யும் பொன் சிலை மாரனும் என்செய்வான்?
கை அம்பு அற்று, உடைவாளினும் கை வைத்தான்.

பொ :—அங்கநகரத்தினிடத்திற் பொருந்திய மாதர்களோ அளவில்லாதவர்கள்; தலைவனாகிய இராமனின் அழகுக்கோ எல்லையில்லை: ஆகையால் (அம்மாதர்களின்மேல்) அம்பெய்கிற அழகிய வில்லையுடைய மன்மதனும் யாதுசெய்வான்? (தன்) கையிலுள்ள மலரம்புகளெல்லாம் காலியாகிவிடவும் (தன் இடையிலே கட்டியுள்ள தாழம்பூவாகிய) உடைவாளிலும் (அம் மாதர்மேல் எறிவதற்காகக்) கையை வைத்தான்.

கு :—இராமன் காரணமாக அம்மாதர்களின்மேல் மன்மதன் தொடுத்த போரின் தீவிர நிலையை இப்பாடல் சித்திரிக்கிறது. காமன் தன்னிடமுள்ள பல படைகளையும் ஏவி அம்மகளிரை வருத்தினான் என்பதாம். தொலைவிலிருந்து அம்புகளைப் பொழிவ

தும், நெருங்கிச் சென்று வாளை வீசுதலும் போர்முறை யாதலால், மன்மதன் மிகவும் நெருங்கிச் சென்று அம்மகளிரோடு பொருதான் என்பார், வாளினும் கைவைத்தான் என்றார். மகளிர் பலராகவும் இராமனின் அழகு மிகுதியாகவும் இருந்த நிலையில் ஓயாது போர் விளைத்தான் மன்மதன் என்றதால், மகளிர் யாவரும் தீராத நோய்க்கு ஆளானர் என்பதாயிற்று. அம்புகள் ஓய்ந்தும் ஓயாத காமன் வாளெடுத்துப் பொருதான் என்று அவன் நிகழ்த்திய போரின் கொடுமையை நயம்படக் கூறினர். (33)

### வான நாடியரும் இராமனைக் காதலித்தல்

**1181.** நான வார்குழ ளுரிய ரோடலால்
வேனல் வேளொடு மேலுறை வார்களோ
டான பூச லறிந்தில மம்புபோய்
வான நாடியர் மார்பினுந் தைத்தவே.

நான வார் குழல் நாரியரோடு அலால்,
வேனல் வேளொடு மேல் உறைவார்களோடு
ஆன பூசல் அறிந்திலம்: அம்பு போய்
வான நாடியர் மார்பினும் தைத்தவே.

பொ :—(மிதிலை நகரத்துக்) கத்தூரிமதமணிந்த நீண்ட கூந்தலையுடைய பெண்களோடு (இராமன் காரணமாக மன்மதன் நடத்திய போரினல் விளைந்தனவற்றை) அல்லாமல், வசந்த காலத்துக்குரிய மன்மதன் மேலுலகத்தில் வாழ்கிற தெய்வ மாதர் களோடு நடத்திய போரின் விளைவை (ச் சொல்ல) அறிந்தோ மில்லை ; (ஆயினும்) மன்மத பாணங்கள் சென்று வானுலகத்து அமர மாதர்கள் மார்புகளிலும் பாய்ந்தன.

கு :—மண்ணுலகத்து மாதரன்றி விண்ணுலகத்து மாதரும் இராமனிடத்துக் காதல் கொண்டமையைக் கவி இவ்வாறு கூறி யுள்ளார். மன்மத பாணங்கள் வான மாதரையும் தாக்கின என்பதால் காமனம்புகளின் வேகமும் மிகுதியும் ஆற்றலும் நன்கு பெறப்படும். தேவ மாதர்கள் இராமனிடத்துக் காதலால் அடைந்த வேதனைகளை மனித அறிவுகொண்டு எவ்வாறு அறிந்து கூற முடியும் என்று கூறுமுகத்தால் வாசகர்களின் கற்பனைக்கு விட்டு விடுகிறார் கவிஞர். (34)

### ஒருத்தி இராமனைப் படுகொலையான் எனல்

1182. மருண்மயங்கு மடந்தையர் மாட்டொரு
பொருணயந்திலன் போகின்ற தேயிவன்
கருணை யென்பது கண்டறி யான்பெரும்
பருணி தன்கொல் படுகொலை யானென்றாள்.

'மருள் மயங்கும் மடந்தையர் மாட்டு ஒரு
பொருள் நயந்திலன் போகின்றதே? இவன்
கருணை என்பது கண்டு அறியான், பெரும்
பருணிதன்கொல்? படுகொலையான்!' என்றாள்.

பொ :—'(தன் பொருட்டு) ஆசையால் மயங்குகிற மாதரெவரிடத்தும் ஒரு பொருளையும் விரும்பாதவனாய் (இராமன் இப்படி)ச் செல்வது தகுதியோ? இவன் அருள் என்பதைப் பார்ப்பதுகூடச் செய்திருக்கமாட்டானோ? பெரிய தத்துவ ஞானியாக இருப்பானோ? பெரிய கொடுமைக்காரனேதான்!' என்று (ஒரு பெண்) கூறினாள்.

கு:—மருள் என்பது இங்கே ஆசை அல்லது மோகம் என்னும் பொருளில் வந்தது. தங்களைப் பொருட்படுத்தாமல் போகிறானே யென்பாள் 'ஒரு பொருள் நயந்திலன் போகின்றதே' என்றாள். கருணை யென்பதை அறவே தெரிந்தானில்லை யென்பாள், கருணை யென்பது கண்டறியான் என்றாள். பருணிதன் - விருப்பு வெறுப்பற்ற ஞானி. பெண் கொலை கொடிதாதல் கருதிப் படுகொலை யென்றாள். பிறரை வருத்துவதால், கொலைகாரன் என்றே கூறினாள். (35)

### ஒருத்தி தளர்ந்து ஓய்தல்

1183. தொய்யில் வெய்ய முலைத்துடி போலிடை
நையு நொய்ய மருங்குலொர் நங்கைதான்
கையு மெய்யு மறிந்திலள் கண்டவர்
உய்யு முய்யு மெனத்தளர்ந் தோய்வுற்றாள்.

தொய்யில் வெய்ய முலைத், துடி போல் இடை
நையும் நொய்ய மருங்குல், ஓர் நங்கைதான்,
கையும் மெய்யும் அறிந்திலள், கண்டவர்,
'உய்யும்? உய்யும்?' எனத், தளர்ந்து ஓய்வு உற்றாள்.

பொ :—சந்தனக் கோலங்கொண்ட வெப்பமுடைய தனங்களை யும், உடுக்கைபோல் நடுவிடம் நையச் சிறுத்து மெல்லிதான இடையையுமுடைய பெண்களிற் சிறந்தவளொருத்தி (இராம னிடத்துக் காதலால் தான் நடக்க வேண்டிய) ஒழுக்கத்தையும் தன் உடம்பின் தன்மையையும் அறியாதவளாய், (அவளைப்) பார்த்தவர்கள் ('இனி இவள்) பிழைப்பாளோ? பிழைப் பாளோ?' என்று சொல்லும்படியாகத் தளர்ச்சியை யடைந்து (கரணங்களெல்லாம்) செயலடங்கினுள்.

கு :—தொய்யில் – சந்தனக் குழம்பினல் மாதர் தோள்களிலும் தனங்களிலும் எழுதும் கோலம். துடி போன்ற மருங்குல் இடை (நடுப்பகுதி) நைந்து மெலிந்திருக்கும் என்க. கை - ஒழுக்கம். கண்டவர்கள் இவள் இனிப் பிழைக்கமாட்டாள் என்று சொல்லும் படியாகத் தளர்ந்து ஓய்ந்தாள் என்க. (36)

## ஒருத்தி இராமன் தேரின்பின் போவதும் வருவதுமாயிருத்தல்

1184. பூக வூசல் புரிபவர் போலொரு
பாகு போன்மொழி யாண்மலர்ப் பாதங்கள்
சேகு சேர்தரச் சேவகன் றேரின்பின்
ஏகு மீளு மிதென்செய்த வாறரோ.

பூக ஊசல் புரிபவர் போல், ஒரு
பாகு போல் மொழியாள், மலர்ப் பாதங்கள்
சேகு சேர்தரச், சேவகன் தேரின் பின்
ஏகும், மீளும்; இது என் செய்தவாறு, அரோ?

பொ :—வெல்லப் பாகுபோல் இனிய மென்மையான பேச்சுக் களையுடையவளான ஒரு பெண், பாக்கு மரத்தில் தொங்கவிட்ட ஊஞ்சலில் விரும்பி ஆடுபவர்போல, தன் தாமரைப் பூப் போன்று மெல்லிய அடிகள் காய்ப்பை அடையும்படி, வீரனான இராமனுடைய தேரின் பின்னே (பலகால்) தொடர்வதும் (பின் உடனே) திரும்ப வருவதுமாக (அங்குமிங்கும்) நடந்தாள்; இது யாது செய்தவிதம்? (அரோ – ஈற்றசை).

கு :—ஊஞ்சல் ஆடுபவர் அங்குமிங்கும் போய்வருவதுபோல, ஒரு பெண் இராமன் தேரைத் தொடர்ந்து செல்வதும் உடனே மீள்வதுமாக இருந்தாள் என்பதாம். இராமனைத் தழுவ வேண்டும் என்ற எண்ணத்தாலும் அவனைக் காண வேண்டும் என்ற எண்ணத்தாலும் தேரின்பின் செல்வதும், பின் அவனைத்

தழுவ முடியாது எனக் கருதியும் பிறர் ஏளனம் செய்வர் என நாணியும் உடனே திரும்பிவிடுவதுமாக ஊசலாட்டுண்டாள். அவள் செயல் பொருத்தமற்ற தடுமாற்றச் செயலாதல் கண்டு, கவிஞர் 'இதென் செய்தவாறரோ' என்றுர். (37)

### ஒருத்தி நாணிழந்து பேசுதல்

1185. பெருத்த காதலிற் பேதுறு மாதரின்
ஒருத்தி மற்றங் கொருத்தியை நோக்கியென்
கருத்து மவ்வழிக் கண்ட துண் டோவென்றுள்
அருத்தி யுற்றபி ஞணமுண் டாகுமோ.

பெருத்த காதலில் பேது உறும் மாதரின்,
ஒருத்தி மற்று அங்கு ஒருத்தியை நோக்கி, 'என்
கருத்தும் அவ்வழிக் கண்டது உண்டோ?' என்றுள்;
அருத்தி உற்ற பின் நாணம் உண்டாகுமோ?

பொ:—மிகுந்த வேட்கையினுல் மதிமயக்கமடைந்த அப் பெண்களுக்குள்ளே ஒரு பெண் அவ்விடத்து (இராமனைக் கண்டு வந்த, வேருெரு பெண்ணைப் பார்த்து, 'அவ்விடத்தில் (இராம னுக்கருகில்) என் மனத்தையும் பார்த்தது உண்டோ?' என்று வினவினுள்; ஆசை மிகுந்த பின்பு வெட்கம் (அங்கு) உள்ள தாமோ?

கு:—'ஆசை வெட்கம் அறியாது' என்பது பழமொழி. ஈற்றடி கவியின் கூற்று. வினவிய பெண்ணின் மனமும் இராம னுடனே சென்றுவிட்டது என்பதாம். தான் அவ்விதம் வினு வினுல் பிறர் ஏளனம் செய்வார்களே என்பதை அவள் பொருட் படுத்தவில்லை, வேட்கையின் வரம்பு கடந்த நிலையால். (38)

### ஒருத்தி இராமனுக்குள்ள கொடுமையைக் கூறல்

1186. நங்கை யங்கொரு பொன்னயங் தாருயத்
தங்க ளின்னுயி ருங்கொடுத் தார்தமர்
எங்க ளின்னுயி ரெங்களுக் கீகலா
வெங்க ணெங்கண் விளைந்த திவற்கென்றுள்.

நங்கை அங்கு ஒரு பொன், ‘ நயந்தார் உயத்
தங்கள் இன் உயிரும் கொடுத்தார் தமர் :
எங்கள் இன் உயிர் எங்களுக்கு ஈகலா
வெங்கண் எங்கண் விளைந்தது இவற்கு ?’ என்றாள்.

பொ :—அவ்விடத்துப் பெண்களிற் சிறந்தவளான திருமகள் போன்றவளொருத்தி, ‘ (இவ்விராமனது) குலத்தினர் (தம்மை) விரும்பிச் சரணடைந்தவர்கள் பிழைக்கும் பொருட்டுத் தங்களுடைய இனிய உயிரையும் கொடுத்துதவினார்கள். எங்களுக்கு உரிய இனிய உயிர்களையே எங்களுக்குக் கொடுத்திடாத கொடுந் தன்மை இவ்விராமனுக்கு எப்படி உண்டாயிற்றோ ?’ என்று வினவினாள்.

கு :—இராமனுடைய முன்னோர்கள் பிறருக்காகத் தங்கள் உயிரையே கொடுத்திருக்கவும், இராமன் மட்டும் பிறருடைய உயிரையே எடுத்துக் கொள்ளும் கொடியனாவது எங்ஙனம் என்றவாறும். இராமனுடைய முன்னோனான சிபிச் சக்கரவர்த்தி ஒரு புறாவுக்காகத் துலையேறிப் பருந்தினுக்குத் தன் உயிரையளித்த வரலாற்றை நினைந்து அவ்வாறு கூறினாள். (39)

### ஒருத்தி இராமன் காமமற்றவன் எனல்

1187. நாமத் தாலழி வாளொரு நன்னுதல்
சேமத் தார்வில் லிறுத்தது தேருங்கால்
தூமத் தார்குழற் றூமொழித் தோகைபால்
காமத் தாலன்று கல்வியி னாலென்றாள்.

நாமத்தால் அழிவாள் ஒரு நல் நுதல்,
‘ சேமத்து ஆர் வில் இறுத்தது, தேருங்கால்,
தூமத்து ஆர் குழல் தூ மொழித் தோகைபால்
காமத்தால் அன்று, கல்வியினால்’ என்றாள்.

பொ :—(இராமனுடைய) பெயரைக் கூறியே (மனம்) நிலைகுலைபவளான அழகிய நெற்றியையுடையாளொருத்தி, ‘ காவலில் வைக்கப்பட்டிருந்த வில்லை ஒடித்ததன் காரணத்தை ஆராய்ந்து பார்க்குமிடத்து, நறும்புகை யூட்டிய கூந்தலையும் தூய்மையான பேச்சையுமுடைய மயில் போலுஞ் சாயலுடையளான சீதையினிடத்து விருப்பத்தினாலன்று போலும் ! தனது விற்றொழில் திறமையைக் காட்டுவதற்காகவே போலும் !’ என்று கூறினாள்.

கு :—இராமன் பிறமங்கையரிடத்து யாதொரு விதமான காமக் குறிப்பும் அற்றிருந்த நிலை நோக்கி, சீதையிடத்தும் அவ்வாறே இருப்பன் எனக் கொண்டு இவ்வாறு கூறினாள். நாமத்தாலழித லாவது, இராம நாமத்தைச் சொல்லிச் சொல்லி மெலிதல். சேமம் - பாதுகாப்பு. தூமம் - நறும்புகை. (40)

### ஒருத்தி மாரனின் வன்மையைக் கூறல்

1188. ஆர முந்துகி லுங்கல னியாவையும்
சோர வின்னுயிர் சோருமோர் சோர்குழல்
கோர வில்லிமு னேயெனைக் கொல்கின்ற
மார வேளின் வலியவர் யாரென்றாள்.

ஆரமும், துகிலும், கலன் யாவையும்,
சோர இன் உயிர் சோரும் ஓர் சோர் குழல்,
'கோர வில்லி முனே எனைக் கொல்கின்ற
மாரவேளின் வலியவர் யார்?' என்றாள்.

பொ :—முத்துமாலையும், ஆடையும், மற்றுமுள்ள நகைகளெல் லாமும் (தன்னுடம்பிலிருந்து) தளர்ந்து விழ, இனிமையான தன் உயிரும் தளர்ந்து விழும் நிலைமையை யடைந்த தளர்ந்த கூந்தலை யுடையா ளொருத்தி, 'கொடிய வில்லை யேந்தியவனான இவ் விராமன் முன்னிலையிலேயே (அம்பெய்து) என்னைக் கொல்பவ னான மன்மதனைப் போல வலிமையுடையவர் (உலகத்தில் வேறு) யாவர் (உளர்)?' என்று கூறினாள்.

கு :—மன்மதனைப் புகழ்ந்து கூறுவது போல, அவனிடத்தி லிருந்து தன்னைக் காக்கக் கூடியவனான இராமன் அவ்வாறு செய்யாதிருந்த நிலைக்கு வருந்தினாள் என்க. (41)

### இராமன் மண்டபம் அடைதல்

1189. மாத ரின்னண மொய்த்திட வள்ளல்போய்க்
கோதில் சிந்தை வசிட்டனுங் கோசிக
வேத பாரனு மேவிய மண்டபம்
ஏதி மன்னர் குழாத்தொடு மெய்தினான்.

மாதர் இன்னணம் மொய்த்திட, வள்ளல் போய்க்,
கோது இல் சிந்தை வசிட்டனும், கோசிக
வேத பாரனும் மேவிய மண்டபம்,
ஏதி மன்னர் குழாத்தொடும் எய்தினன்.

பொ:—பெண்கள்(பலரும்) இவ்வாறு வந்து நெருங்க, வண்மையாளனை இராமன், குற்றமில்லாத மனத்தையுடைய வசிட்ட முனியும், கோசிக முனிவன் என்கிற வேதத்தின் கரையைக் கண்டவனை விசுவாமித்திர முனியும் பொருந்தியிருந்த திருமண மண்டபத்தை ஆயுதங்கள் தரித்த அரசர்கள் குழாத்துடனே, போய் அடைந்தான். (42)

வசிட்டனையும் கோசிகனையும் இராமன் வணங்குதல்

**1190.** திருவி னயகன் மின்றிரிந் தாலெனத்
துருவின் மாமணி யாரந் துயல்வரப்
பருவ மேகம் படிந்தது போற்படிந்
திருவர் தாளு முறையி னிறைஞ்சினன்.

திருவின் நாயகன், மின் திரிந்தால் எனத்
துருவு இன் மா மணி ஆரம் துயல்வரப்,
பருவ மேகம் படிந்தது போல், படிந்து,
இருவர் தாளும் முறையின் இறைஞ்சினன்.

பொ :—இலக்குமி மணாளனை இராமன், மின்னல் உலாவினாற் போல, ஆராய்ந்தெடுத்துப் பதித்த இனிய சிறந்த இரத்தின ஆரங்கள் (தன் மார்பில்) அசைந்து புரளும்படி, கார்காலத்துக் காளமேகம் (பூமியிலே) படிந்தாற் போலக் கீழே தாழ்ந்து (வசிட்டன், விசுவாமித்திரன் என்னும்) இரண்டு பேரின் திருவடிகளையும் முறையே வணங்கினன்.

கு :—ஆரம் மின் திரிந்தாலெனத் துயல்வர என்க. துருவுதல் - ஆராய்தல். பருவ மேகம் - மழை காலத்தி லெழுகின்ற சூல் கொண்ட மேகம்; இராமனுடைய நிறத்திற்கு உவமை. (43)

இராமன் இருக்கையில் அமர்தல்

**1191.** இறைஞ்ச வன்னவ
ரேத்தின ரேவவோர்
நிறைஞ்ச பூந்தவி
சேறி நிழற்கள்போல்

புறஞ்செய் தம்பிய
ருட்பொலிந் தானரோ
அறஞ்செய் காவற்
கயோத்தியிற் றோன்றினன்.

இறைஞ்ச, அன்னவர் ஏத்தினர் ஏவ, ஓர்
நிறைஞ்ச பூம் தவிசு ஏறி, நிழற்கள் போல்
புறம் செய் தம்பியருள் பொலிந்தான், அரோ,
அறம் செய் காவற்கு அயோத்தியில் தோன்றினன்.

பொ:—தருமத்தை (அழியாதபடி) காத்தல் செய்வதற்காகவே அயோத்தியில் வந்து பிறந்தவனான இராமன் (அவ்வாறு) வணங்கவும், (உடனே) அம்முனிவர்கள் வாழ்த்தி (ஓர் ஆசனம் காட்டி அதில் இருக்கும்படி) பணித்தலும், ஒப்பற்ற நிறைந்த மலர்களால் அலங்கரிக்கப்பட்ட (அவ்) ஆசனத்தின் மேல் ஏறி இருந்து, நிழலைப் போல் விடாது தொடர்ந்து தன் பக்கங்களிலிருந்து காவல் செய்கிற (தன்) தம்பிமார் மூவர்களிடையிலே விளங்கினான்.

கு:—புறம் செய் - புறத்தே நின்று பாதுகாத்தல். அன்னவர் என்றது வசிட்டரையும் விசுவாமித்திரரையும். (44)

### தசரதனும் வருதல்

1192. ஆன மாமணி மண்டப மன்னது
தானை மன்னன் றமரொடுஞ் சார்ந்தனன்
மீனெ லாந்தன் பின்வர வெண்மதி
வானி லாவுற வந்தது மானவே.

ஆன மா மணி மண்டபம் அன்னது
தானை மன்னன் தமரொடும் சார்ந்தனன்,
மீன் எலாம் தன பின் வர, வெண் மதி
வான் நிலாவுற வந்தது மானவே.

பொ:—(முன் கூறியவாறு இராமன் ஆசனத்து அமர்ந்த பின்னர்) எல்லா நட்சத்திரங்களும் தன் பின்னேவர, வெண்மை நிறமுடைய சந்திரன் ஆகாயம் விளங்கும்படி (அங்கு) வந்து சேர்ந்ததை ஒக்கும்படி, சேனைகளையுடைய சக்கரவர்த்தியாகிய தசரதன் தன் சுற்றத்தாருடனே சிறந்த இரத்தினங்களாலான அந்த மண்டபத்தை அடைந்தான்.

கு:—அன்னது ஆன மாமணி மண்டம் என்று கொண்டு, அத்தன்மையதாகச் சிறந்த (வைகுண்ட நகரத்துத்) திருமாமணி மண்டபத்தை யொத்த மண்டபம் என்றும் பொருள் கொள்ள லாம். வைகுண்டத்தில் திருமாலின் அத்தாணி மண்டபம் 'திரு மாமணி மண்டபம்' எனப் பெயர் பெறும். (45)

### தசரதன் இருக்கையில் அமர்தல்

1193. வந்து மாதவர் பாதம் வணங்கிமேல்
சிந்து தேமலர் மாரி சிறந்திட
அந்த ணுளர்க ளாசியொ டாசனம்
இந்தி ரன்முக நாணுற வேறினுன்.

வந்து மாதவர் பாதம் வணங்கி, மேல்
சிந்து தேம் மலர் மாரி சிறந்திட,
அந்தணுளர்கள் ஆசியொடு, ஆசனம்,
இந்திரன் முகம் நாண் உற, ஏறினுன்.

பொ:—(அவ்வாறு தசரதன்) வந்து சிறந்த தவத்தோரான வசிட்ட விசுவாமித்திர முனிவர்களின் திருவடிகளைத் தொழுது (தன்) மேலே (பலராலும்) சொரியப்படுகிற தேனையுடைய பூக்களின் மழை மிகாநிற்க, அந்தணர்களாற் கூறும் ஆசிர்வாதங்க ளுடனே, தனக்குரிய இருக்கையைத் தேவேந்திரனும் (ஒப்பாகா மையால்) முகங்கவிழ்ந்து வெட்கமடையும்படி ஏறியமர்ந்தான்.

கு:—தேவேந்திரன் நிலையையும் மிஞ்சும்படியான சிறப்புடனே ஆசனம் ஏறினுன் தசரதன் என்பதாம், (46)

### பல நாட்டு மன்னர்களும் வருதல் (1194—1196)

1194. கங்கர் கொங்கர் கலிங்கர் குலிங்கர்கள்
சிங்க ளாதிபர் சேரலர் தென்னவர்
அங்க ராசர் குலிந்த ரவந்திகர்
வங்கர் மாளவர் சோழர் மராடரே.

கங்கர், கொங்கர், கலிங்கர், குலிங்கர்கள்,
சிங்கள அதிபர், சேரலர், தென்னவர்,
அங்கராசர், குலிந்தர், அவந்திகர்,
வங்கர், மாளவர், சோழர், மராடரே.

பொ :—(அம்மண்டபத்தில்) கங்கநாட்டரச பரிவாரங்களும், கொங்குநாட்டரச பரிவாரங்களும், கலிங்கநாட்டரச பரிவாரங் களும், குலிங்கநாட்டரச பரிவாரங்களும், சிங்களநாட்டரச பரி வாரங்களும், சேரநாட்டரச பரிவாரங்களும், தென்னுடாகிய பாண்டியநாட்டரச பரிவாரங்களும், அங்கநாட்டரச பரிவாரங் களும், குலிந்தநாட்டரச பரிவாரங்களும், அவந்திநாட்டரச பரிவாரங்களும், வங்கநாட்டரச பரிவாரங்களும், மாளவநாட்டரச பரிவாரங்களும், சோழநாட்டரச பரிவாரங்களும், மராடநாட் டரச பரிவாரங்களும்.

கு :—(இது முதல் மூன்று கவிகள் ஒரு தொடர்; 'துன்னினுர்' எனப் பின்வரும் இரண்டாவது செய்யுளோடு முடியும். கங்கர் என்ருல், கங்கநாட்டு அரசனும் அவன் பரிவாரங்களும் என்று பொருள் கொள்க. இதுபோலவே மற்றவைகளுக்கும் பொருள் அமையும். (47)

**1195.** மான மாகதர் மச்சர் மிலேச்சர்கள்
ஏனை வீர விலாடர் விதர்ப்பர்கள்
சீனர் தெங்கணர் செஞ்சகர் சோமகர்
சோன கேசர் துருக்கர் குருக்களே.

மான மாகதர், மச்சர், மிலேச்சர்கள்,
ஏனை வீர இலாடர், விதர்ப்பர்கள்,
சீனர், தெங்கணர், செம்சகர், சோமகர்,
சோனக ஈசர், துருக்கர், குருக்களே.

பொ :—பெருமையையுடைய மகத நாட்டரச பரிவாரங்களும், மச்சநாட்டரச பரிவாரங்களும், மிலேச்சநாட்டரச பரிவாரங் களும், மற்றுமுள்ள வீரமமைந்த இலாடநாட்டரச பரிவாரங் களும், விதர்ப்ப நாட்டரச பரிவாரங்களும், சீனநாட்டரச பரிவாரங்களும், தெங்கணநாட்டரச பரிவாரங்களும், செம்மை யான சகநாட்டரச பரிவாரங்களும், சோமகநாட்டரச பரிவாரங் களும், சோனக நாட்டரச பரிவாரங்களும், துருக்க நாட்டரச பரிவாரங்களும், குரு நாட்டரச பரிவாரங்களும் (48)

**1196.** ஏதி யாதவ ரேழ்திறற் கொங்கணர்
சேதி ராசர் தெலுங்கர் கருநடர்
ஆதி வானங் கவித்த வவனிவாழ்
சோதி நீண்முடி மன்னருந் துன்னினுர்.

ஏதி யாதவர், ஏழ் திறல் கொங்கணர்,
சேதி ராசர், தெலுங்கர், கருநடர்,
ஆதி வானம் கவித்த அவனி வாழ்
சோதி நீள் முடி மன்னரும் துன்னினர்.

பொ :—ஆயுதங்களையுடைய யதுகுலத் தலைவர்களும், ஏழு பகுப்பையுடைய கொங்கண நாட்டுத் தலைவர்களும், சேதிநாட்டரச பரிவாரங்களும், தெலுங்குநாட்டுத் தலைவர்களும், கன்னடநாட்டுத் தலைவர்களும், (மற்றும்) மற்றப் பூதங்கள் தோன்றுவதற்கிடமான முதற் பூதமாய் விளங்கும் ஆகாயத்தாற் கவியப்பட்ட பூமிமுழுவதிலும் வாழ்கிற ஒளியையுடைய நீண்ட கிரீடத்தைத் தரித்த அரசர்கள் பலரும் நெருங்கி வந்து கூடினார்கள். (49)

தசரதனுக்குச் சாமரை வீசுதல்

1197. தீங்க ரும்பினுந் தித்திக்கு மின்சொலார்
தாங்கு சாமரை மாடு தயங்குவ
ஓங்கி யோங்கி வளர்ந்துயர் சீர்த்தியின்
பூங்கொ ழுந்து பொலிவன போன்றவே.

தீம் கரும்பினும் தித்திக்கும் இன் சொலார்
தாங்கு சாமரை மாடு தயங்குவ,
ஓங்கி ஓங்கி வளர்ந்து உயர் சீர்த்தியின்
பூம் கொழுந்து பொலிவன போன்றவே.

பொ :—இனிப்பான கருப்பஞ்சாற்றினும் மிக இனிதாயுள்ள பேச்சுக்களையுடைய மகளிர் ஏந்தி வீசுகிற சாமரங்கள் (தசரதனின்) பக்கங்களிலே விளங்குபவை, (மேலுலகங்கள் எல்லாவற்றிலுஞ் சென்று பரவி) மேன்மேலும் வளர்ந்து மேம்பட்டுள்ள (தசரதனது) புகழாகிய மரத்தின் அழகான இளந்தளிர்கள் விளங்குவனவற்றை ஒத்திருந்தன.

கு :—சீர்த்தி - புகழ். புகழ் அருவப் பொருளாயினும் வெண்மை நிறமுடையதாகக் கூறுதல் கவிமரபு. அதுபற்றி வெண்சாமரைகள் மேலோங்கி ஆடுதலைப் புகழின் வெண் கொழுந்துகள் தழைத்தோங்குவன போலக் கூறினர். கொழுந்து பொலிவன என்றதால் அவற்றின் மரம் செழித்து வளர்ந்திருப்பது நன்கு பெறப்படும். (50)

### தசரதனுக்குப் பல்லாண்டு பாடுதல்

1198. சுழலும் வண்டு மிஞிறுஞ் சுரும்புஞ்சூழ்ந்
துழலுந் தும்பியும் பம்பற லோதியர்
குழலி னேடுறக் கூறுபல் லாண்டொலி
மழலை யாழிசை யோடு மலிந்தவே.

சுழலும் வண்டும், மிஞிறும், சுரும்பும், சூழ்ந்து
உழலும் தும்பியும் பம்பு அறல் ஓதியர்,
குழலினேடு உறக் கூறு பல்லாண்டு ஒலி,
மழலை யாழ் இசையோடு, மலிந்தவே.

பொ:—சுழன்று மொய்க்குந் தன்மையையுடைய வண்டுகளும், மிஞிறுகளும், சுரும்புகளும், சுற்றித் திரியும் தும்பிகளும் நெருங்கும் கருமணலைப்போன்ற கூந்தலையுடைய பெண்கள் வேய்ங்குழலி னேசையோடு பொருந்தச்சொல்லி(த் தசரதன் பொருட்டு)ப் பாடுகின்ற பல்லாண்டினேசைகள் குதலைமொழிபோன்றினிய யாழினிசையோடு மிக்கன.

கு:—வண்டு, மிஞிறு, சுரும்பு, தும்பி: வண்டின் சாதிகள். பம்பு-நெருங்கு. அறல்-கருமணல். பல்லாண்டு-பல ஆண்டுகள் வாழ்ந்திட வேண்டும் எனப் பாடும் வாழ்த்துப் பாடல். தசரதனை வாழ்த்திப் பெண்கள் பல்லாண்டு பாடினர் என்றவாறு. (51)

### தசரதன் வெண்குடை விளங்குதல்

1199. வெங்க ணானையி னன்றனி வெண்குடை
திங்க டங்கள் குலக்கொடிச் சீதையாம்
மங்கை மாமணங் காணிய வந்தருள்
பொங்கி யோங்கித் தழைப்பது போன்றதே.

வெம் கண் ஆனையினன் தனி வெண் குடை,
திங்கள், தங்கள் குலக் கொடிச் சீதை ஆம்
மங்கை மா மணம் காணிய வந்து, அருள்
பொங்கி ஓங்கித் தழைப்பது போன்றதே.

பொ:—கொடுமையையுடைய யானைச் சேனையையுடையவனாகிய தசரதனது ஒப்பற்ற வெண்கொற்றக் குடையானது,

சந்திரன் தன் குலத்திலே தோன்றின பூங்கொடிபோல் மெல்லிய சீதையாகிய பெண்ணின் சிறந்த மணவிழாவைக் கண்டு களிப்ப தற்காக (இங்கே) வந்து கருணை மிகுந்து உயர்ந்து பூரித்து விளங்குவதை ஒத்திருந்தது.

கு :—இதனால் சீதை பிறந்து வளர்ந்த சனகர் குலம் சந்திர குலம் என்பது விளங்கலாயிற்று. திங்கள் தசரதனது வெண் கொற்றக்குடைக்கு உவமை. (52)

### தசரதன் படைகளின் பெருக்கம்

**1200.** ஊடு பேர்விட மின்றியொன் றும்வகை
நீடு மாகடற் றானை நெருங்கலால்
ஆடன் மாமத வானைச் சனகர் கோன்
நாடெ லாமொரு நன்னக ராயதே.

ஊடு பேர்வு இடம் இன்றி ஒன்று ஆம் வகை
நீடு மா கடல் தானை நெருங்கலால்,
ஆடல் மா மத ஆனைச் சனகர் கோன்
நாடு எலாம் ஒரு நல் நகர் ஆயதே.

பொ :—இடையில் நீங்கிச் செல்லுதற்குரிய வெற் றிடைவெளி சிறிதும் இல்லாமல் ஒரே தன்மையதாய்ச் சேரும்படி மிகவும் நீண்ட பெரிய கடல் போன்று பரந்த (தசரதனது) சேனை (நாடு முழுவதுமாக) நெருக்கமாகப் பரவியதால், வெற்றி பொருந்திய பெரிய மதயானைச் சேனையையுடைய சனக குலத்தார்க்குத் தலைவனான சனகமன்னனுடைய விதேகநாடு முழுவதும் அழகிய பட்டணமொன்றைப் போலவே ஆகிவிட்டது.

கு :—தசரதனுடைய சேனையின் நெருக்கத்தால் சனகன் நாடு முழுவதும் ஒரு விரிந்த பட்டணம் போலவே காணப்பட்டது என்பதாம். (53)

### சனகன் யாவரையும் ஒப்ப உபசரித்தல்

**1201.** ஒழிந்த வென்னினி யொண்ணுத றுதைதன்
பொழிந்த காத ரெுடரப் பொருளெலாம்
அழிந்து வந்துகொண் டாடலி னன்புதான்
இழிந்து ளார்க்கு மிராமற்கு மொத்ததே.

ஒழிந்த என் இனி? ஒள் நுதல் தாதை தன்
பொழிந்த காதல் தொடரப் பொருள் எலாம்
அழிந்து உவந்து கொண்டாடலின், அன்புதான்
இழிந்துளார்க்கும் இராமற்கும் ஒத்ததே.

பொ:—ஒளிவீசும் நெற்றியையுடைய சீதையின் தந்தையாகிய சனகன் தனது பெருகிய ஆசை பொருந்தச் செல்வம் முழுவதையும் சொரிந்து மகிழ்ச்சியோடு (யாவரையும் உபசரித்துப்) பாராட்டியதால் (சனகனின்) அன்பானது தாழ்ந்துள்ளவர்களிடத்தும் இராமனிடத்தும் ஒரேபடித்தாயிருந்தது; இனிக் கூற வேண்டியவாயுள்ளன யாவை?

கு:—மேலானவர்கள் கீழானவர்கள் என்று வேறுபடுத்தாமல் எல்லாரையும், மணமகனுன இராமனுக்குச் சிறப்புக்காட்டியது போல், ஒன்ருகச் சனகன் உபசரித்தான் என்ருல், வேறு என்ன சொல்லக் கிடக்கிறது? என்றவாறு. (54)

உலாவியற் படலம் முற்றிற்று.

# 20. கோலங்காண் படலம்

இப்படலம், சீதாபிராட்டிக்கு அவள் தோழிமார் மணக் கோலம் செய்ததைக் கூறுவது. தயரதன் மிதிலை எய்தியபோது, அவனை எதிர்கொண்ட சனகன், மணநிச்சயம் மறுநாள் செய்வதாகச் சொல்லி, பின்னர்த் தன் தம்பி உதாசித்தை வரவழைத்தான். பிற்றை நாளிற் புரோகிதன் முதலியவரோடு தயரதன் வர, அவனது குலமுறையை வசிட்டன் கூறியதோடு அந்தச் சீரிய கால்வழியிற்றோன்றிய குமரருக்கு உன் மகளிரை மணம் புரிவித்தல் தகும் என்றும் சனகனிடம் உரைத்தான். பின்னர்ச் சனகன் தன் மகளிராகிய பிராட்டியையும் ஊர்மிளையையும் முறையே இராம இலக்குவர்க்கும், தன் தம்பியின் புதல்விகளாகிய மாண்டவி சுருதகீர்த்திகளை முறையே பரத சத்துருக்கனர்க்கும், பங்குனி உத்தர நாளில் மணம் செய்வித்ததாக முதனூலாகிய வான்மீகம் கூறும். கோலம் புனைந்து சீதையை அழைத்துவந்த செய்தி முதனூலில் தனித்துக் கூறப்படவில்லை. எல்லாவித அணிகளாலும் அலங்கரிக்கப்பட்ட சீதை திருமண மேடையில் வந்து அமர்ந்ததாகக் கூறி அமைந்தார் வான்மீகி. நிமி முதலாக வந்த சனகனது அரச மரபு முதனூலிற் கூறப்பட்டுள்ளது. கம்பர் அதனைக் கூறவில்லை. சீதை கருவில் தங்கிப் பிறவாமல், உழுகின்ற கொழுமுகத்திற்றோன்றியவள் ஆகலின், சனகன் அரசமரபினைக் கூறுதொழிந்தார் போலும்.

சனகனது கட்டளையின் பேரில், தாதியர் சீதையை அழைத்து வரச் சென்றனர். அவ்வளவில் அவள் செவிலியர் பல்வேறு அணி கலங்களைக் கொண்டு சீதையை அலங்கரித்தல், முதல் 18 கவிகளிற் கூறப்பட்டுள்ளது. ஆடவரும் மகளிரும் ஒருவர் ஒருவரைக் காமுறும் உலகியற்கு மாறாக, ஒப்பனை செய்த பெண்களே சீதையின் பேரழகைப் பருகித் ''தஞ்சொற்கள் குழறித் தத்தம் தகை தடுமாறி நின்றார்'' என்று கூறி உளநூற் பயிற்சியுள்ள கம்பர் ''மஞ்சர்க்கும் மாதரார்க்கும் மனமென்பதொன்றே யன்றே'' என்று காரணம் காட்டுவது படித்து இன்புறத்தக்கது. அடுத்துச் ''சங்கங்கையுடைமையானும், தாமரைக் கோயிலானும்'' என்ற செய்யுளில் சிலேடை நயம் தோன்ற ''நங்கையும் நம்பி ஒத்தாள்'' என்று கூறுவது பாராட்டற்குரியது. சீதை நடையின் வருணனை 23 முதல் 27 வரையில் உள்ள செய்யுட்களில் அழகுபெறக் கூறப்பட்டது. வசிட்டமுனிவன் பிராட்டியை அல்லிமலர் புல்லும்

மங்கை என்று கூறுவதும், தயரதன் சீதையை மருகியாகப் பெற்ற தற்குப் பெரிதும் மகிழ்ந்ததும் அடுத்துக் கூறப்பட்டுள்ளன. சீதை மணமண்டபத்தை அடைந்த அளவில் 'வையநுகர் கொற்றவனும் மாதவருமல்லார் கைகள் தலைபுக்கன' என்று கூறி, "தெய்வமெனல் உற்ற உடல் சிந்தை வசமன்றோ" என்று அதற்குக் காரணமும், காட்டியிருப்பது நோக்கி மகிழத்தக்கது.

கம்பர் பல இடங்களில் இராமனைத் திருமாலாகவும் சீதையைத் திருமகளாகவும் குறிப்பர் என்று பல மேற்கோள்களால் முன்னர்க் கூறப்பட்டது. இப்படலத்தும் "வையக மடந்தைமார்க்கும் நாகர் கோதையர்க்கும் வானத் தெய்வ மங்கையர்க்குமெல்லாம் திலகத்தை" என்றும், "சங்கினொடு சக்கரமுடைத்தனி முதற் பேர் அங்கணரசாதலினவ் வல்லிமலர் புல்லும் மங்கையிவள்' என்றும் "போதினை வெறுத்தரசர் பொன்மனை புகுந்தாள்" என்றும் வரும் செய்யுட்கள் கொண்டு இவ்வுண்மையை நன்குணரலாம். நாணம் மீதூரவும் தன் மணாளன் முகத்தைக் காண வேண்டும் என்ற ஆசை தூண்டவும் "தன் நாதனைக் கைவளை திருத்துபு கடைக்கணி னுணர்ந்தாள்" என்று கூறிய நயம் அறிந்து இன்புறத்தக்கது.

---

# 20. கோலங்காண் படலம்

## வசிட்டன் சீதையை அழைத்துவரச் சொல்லுதல்

1202. தேவியர் மருங்கு சூழ
★ விந்திர னிருக்கை சேர்ந்த
ஓவிய முயிர்பெற் றென்ன
வுவந்தர சிருந்த காலைத்
தாவில்வெண் கவிகைச் செங்கோற்
சனகனை யினிது நோக்கி
மாவிய னோக்கி னாளைக்
கொணர்கென வசிட்டன் சொன்னான்.

தேவியர் மருங்கு சூழ,
இந்திரன் இருக்கை சேர்ந்த
ஓவியம் உயிர் பெற்று என்ன
உவந்து அரசு இருந்த காலைத்
தா இல் வெண் கவிகைச் செங்கோல்
சனகனை இனிது நோக்கி
'மா இயல் நோக்கினாளைக்
கொணர்க' என வசிட்டன் சொன்னான்.

பொ :—இந்திரன் தலைநகரில் (அமராவதியின்கண்) உள்ள பதுமைகள் உயிர் பெற்றாற்போன்ற (அரம்பை முதலியவர்களை ஒத்த) பட்டத்தரசியர் (மூவரும்) அருகிற் சூழ்ந்திருக்க(ப், பேரரசனாகிய தயரதன்) மகிழ்ந்து வீற்றிருந்தபோது, கெடுதல் இல்லாத வெண்கொற்றக் குடையையும் செங்கோலையும் உடைய சனகனை வசிட்ட முனிவன் இனிய முகத்துடன் பார்த்துத், திருமகள் போன்ற அழகு வாய்ந்த சீதையை அழைத்து வருக என்று கூறினான்.

கு :—தேவியர்-பட்டத்து மகளிர் அல்லாத வேறு மகளிருமாம். தயரதன் பல மாதர்களை மணந்ததாக முதனூலாகிய வான்மீகத்திலும் கம்பர் காப்பியத்திலும் கூறப்பட்டுள்ளது. "நெறியிடைப் படர வேந்தன் நேயமங்கையர்தாஞ் செல்வார்" (எழுச்சி. 63) "அறுபதினாயிர ரரசன் தேவியர் மறுவறு கற்பினர்" (நகர் நீங்கு. 180) என்பன காண்க. இந்திரன் இருக்கை - அமராவதி

நகர். "இந்திரன் இருக்கை யென்பார் இலங்கையை எடுத்துக் காட்டார்" (இலங்கைகாண். 31) என்றது காண்க. "ஓவியம் உயிர் பெற்றென்ன" என்பதைக் தயரதற்கு ஏற்றிக் குலகுரு முன்னர் அரசன் அடங்கி மோனமெய்தியிருந்தனன் என்றும் கூறுப. ஆயினும் இத்தொடரைத் தேவியருடன் இயைத்தலே பொருந்துமாறு காண்க. 'மாவியல் நோக்கி' என்பதற்கு மாவடு வகிர் போன்ற விழியினள் என்றும், மானின் பார்வையைப் போன்ற பார்வையினள் என்றும், பெரிய அகன்ற நோக்கினள் என்றும், பிறவாறும் கூறலாம், நோக்கு – அழகு; "நோயிகந்து நோக்கு விளங்க" (மதுரைக். 13) (1)

### சனகன் கட்டளையை ஏவன் மகளிர் தாதியரிடம் கூறல்

1203. உரைசெயத் தொழுத கைய
னுவந்தவுள் ளத்தன் பெண்ணுக்
கரைசியைத் தருதி ரீண்டென்
றுயிழை யவரை யேவக்
கரைசெயற் கரிய காதல்
கடாவிடக் கடிது சென்றூர்
பிரைசமொத் தினிய சொல்லார்
பேதைதா தியரிற் சொன்னூர்.

உரைசெயத் தொழுத கையன்,
உவந்த உள்ளத்தன், 'பெண்ணுக்கு
அரைசியைத் தருதிர் ஈண்டு' என்று,
ஆயிழையவரை ஏவக்
கரை செயற்கு அரிய காதல்
கடாவிடக் கடிது சென்றூர்,
பிரைசம் ஒத்து இனிய சொல்லார்,
பேதை தாதியரில் சொன்னூர்.

பொ:—(வசிட்ட முனிவன் இவ்வாறு) கூற, வணங்கிய கையினனும் மகிழ்ச்சி கூர்ந்த மனத்தினனுமாகிய சனகன் 'பெண்கட்கு அரசியை அழைத்து வாருங்கள்' என்று அழகிய அணிகளை யணிந்த மகளிர்க்குக் கட்டளையிட, தேன் போன்ற இனிய சொற்களையுடைய அம்மாதர்கள், அளவு செய்தற்கு இயலாத (சீதைபால் உள்ள) அன்பு தூண்ட, விரைந்துசென்று

பிராட்டியின் செவிலித்தாயரிடம் (அச்செய்தியைச்) சொன்னார்கள்.

கு :—இனி, பிரைசம் ஒத்து இனிய சொல் நிறைந்த பேதை என்று பிராட்டியைக் கூறியதாகவும் கொள்ளலாம். சிலர் பெண்ணுக்கரசியெனக் கூறிப் பின் பேதை என்றது பொருந்தாது என்பர். ஆயினும், இங்கே பேதை என்பது அறிவிலள் என்ற பொருளில் வந்ததன்று. பெண் என்ற பொருளிலேயே வந்தது என்க. தாதி - செவிலித்தாய் (பிங்கலம்). (2)

### சீதையைத் தாதியர் அணிசெய்தல்

**1204.** அமிழிமைத் துணைகள் கண்ணுக்
கணியென வமைக்கு மாபோல்
உமிழ்சுடர்க் கலன்க ணங்கை
யுருவினை மறைப்ப தோரார்
அமிழ்தினைச் சுவைசெய் தென்ன
வழகினுக் கழகு செய்தார்
இமிழ்திரைப் பரவை ஞால
மேழைமை யுடைத்து மாதோ.

அமிழ் இமைத் துணைகள் கண்ணுக்கு
அணி என அமைக்குமாபோல்,
உமிழ் சுடர்க் கலன்கள் நங்கை
உருவினை மறைப்பது ஓரார்,
அமிழ்தினைச் சுவை செய்து என்ன,
அழகினுக்கு அழகு செய்தார்,
இமிழ் திரைப் பரவை ஞாலம்
ஏழைமை உடைத்து, மாதோ!

பொ:—(விழிகளை) மூடி அவற்றின் அழகை மறைக்கும் இரண்டு இமைகளையும் கண்களுக்கு அழகென (அயன்) அமைக்குமாறு போல, வெளி விடுகின்ற ஒளியையுடைய அணிகலன்கள் பிராட்டியின் மேனியழகை மறைத்துநிற்பதை உணராராய் (ச் சுவை நிறைந்து விளங்கும்) அமிழ்தினை மேலும் சுவைப் படுத்தும் (வீணான) முயற்சி போன்று (எல்லா அழகும் ஒருங்கே அமையப்பெற்ற பிராட்டியின்) அழகுக்கு மேலும் அழகு செய்தார். (ஆதலின்) ஒலிக்கின்ற அலைகளையுடைய கடல் சூழ்ந்த உலகம் அறியாமையை உடைத்து.

கு :—அமிழிமைத் துணைகள் என்பதை அமிழ் துணையிமைகள் என மாற்றுக. கண்ணை மூடி அதன் அழகு புலப்படாமல் மறைத்தலின் அமிழ் இமை என்றார். சீதையின் பேரழகினைப் பல இடங்களிலும் பற்பல நயங்கள் தோன்றக் கூறுவர் கம்பர். "அழகெலாம் ஒருங்கே கண்டால் யாவரே ஆற்றவல்லார்" (கோலங்காண். 20); "அணிபறித் தழகு செய்யும் அணங்கு" (அங்கதன், 18) முதலியன காண்க. "கோலங்கொள்ளும் ஆடகப் பைம்பூண் அருவிலை யழிப்பச் செய்யாக் கோலமொடு வந்தீர்க்கு" (சிலப். 16, 9—11) என்ற வரிகள் இங்கு ஒப்பு நோக்கத்தகும்.

இமைகள் அழகிய கண்களை மறைப்ப, அவற்றை விழிகட்கு அணிசெய்வனவாகக் கருதல்போன்று, இயற்கை யழகுடன் ஒளிரும் பிராட்டியின் வடிவத்தை மறைக்கும் அணிகளை, அவட்கு அழகுறுத்துவனவாகக் கருதியது அறியாமையென்று கவி இரங்குகின்றார். ஏழைமை என்பது பேதைமை, அறியாமை என்னும் பொருட்டாய் நின்றது; பொருட் குறைவுண்மையைக் குறித்து எழுந்ததன்று. "ஏழைமை வேடன்" (குகப். 15) என்ற இடத்துப் போல. (3)

### குழலில் மாலை சூட்டுதல்

1205. கண்ணன்றன் னிறந்தன் னுள்ளக்
கருத்தினை நிறைத்து மீதிட்
டுண்ணின்றுங் கொடிக ளோடி
யுலகெங்கும் பரந்த தன்ன
வண்ணஞ்செய் கூந்தற் பார
வலயத்து மழையிற் றோன்றும்
விண்ணின்ற மதியின் மென்பூஞ்
சிகழிகைக் கோதை வேய்ந்தார்.

கண்ணன்தன் நிறம், தன் உள்ளக்
கருத்தினை நிறைத்து, மீதிட்டு,
உள் நின்றும் கொடிகள் ஓடி
உலகு எங்கும் பரந்தது அன்ன,
வண்ணம் செய் கூந்தல் பார
வலயத்து, மழையில் தோன்றும்
விண் நின்ற மதியின் மென் பூஞ்
சிகழிகைக் கோதை வேய்ந்தார்,

பொ;—இராமனது (காயாம்பூ) நிறம், சீதையின் மனத்தை இடமாகக் கொண்டு நிறைந்து விளங்கி (அதனுள் அடங்காமல்) மேலிட்டு, அவ்விடத்தினின்றும் உரோமக் கொடிகளாகப் படர்ந்து, உலகம் முழுவதும் பரவியதை ஒப்ப, (இராமனது நிறத்தை ஒத்த) நிறத்தையுடைய கனத்த வட்டமான கூந்தலிலே, மேகத்தில் தோன்றும், ஆகாயத்தில் நிலைபெற்ற சந்திரன் போல, மெல்லிய பூமாலையை(த் தாதியர்) வட்டமாகச் சூட்டினார்கள்.

கு :—செய் - உவமவுருபு. சிகழிகை - சிரத்தைச் சுற்றி யணியும் பூமாலை. நிறம் நிறைத்துக் கொடிகளாக ஓடிப் பரந்தது அன்ன கூந்தற் பாரம் என்க, கூந்தலுக்கு மேகமும் வலயத்துப் பூமாலைக்கு மேகத்து மதியும் உவமை. கண்ணன் - இராமன்; யாவர்க்கும் கண் போன்றவன் அல்லது கண்ணாக இருப்பவன் என்பது பொருள். "யாதினும் உயர்ந்தோர் தன்னை யாவர்க்கும் கண்ணன் என்றே, ஓதிய பெயர்க்குத் தானே உறுபொருள் உணர்த்தி விட்டான்" (உலாவியல். 6) என்றது காண்க. (4)

### சுட்டி முதலிய அணிகள் அணிதல்

1206. விதியது வகையால் வான
மீனினம் பிறையை வந்து
கதுவுறு கின்ற தென்னக்
கொழுந்தொளி கனலத் தூக்கி
மதியினைத் தந்த மேக
மருங்குநா வளைப்ப தென்னப்
பொதியிரு ளளக பந்தி
பூட்டிய பூட்டு மிட்டார்.

விதியது வகையால், வான
மீன் இனம் பிறையை வந்து
கதுவுறுகின்றது என்னக்
கொழுந்து ஒளி கனலத் தூக்கி,
மதியினைத் தந்த மேகம்,
மருங்கு நா வளைப்பது என்னப்
பொதி இருள் அளக பந்தி
பூட்டிய பூட்டும் இட்டார்.

பொ :—(ஒன்று கூடுவதற்கு ஏதுவாகிய) ஊழ்முறையால் விண்ணிலுள்ள உடுக்களின் தொகுதி இளம்பிறையை அணுகிப் பற்றுகின்றது போலச், சுட்டி என்னும் அணியை ஒளி நிறையு மாறு தொங்கவிட்டு(த் தன்னகத்தே மறைந்து நின்ற) முழுமதி யினை (ப் புறத்தே செல்ல) விடுத்த மேகம் (மீட்டும் அதனைக் கௌவ) அருகில் நாவை (நீட்டி) வளைப்பது என்னுமாறு கவிந்த இருளை ஒத்த கூந்தற் கற்றையில், பூட்டு என்னும் அணியை (த் தோழிமார்) அணிந்தார்கள்.

கு :—நெற்றியின் மீது கூந்தலினின்று தொங்கவிடப்பட்ட சுட்டி, வானத்து உடுக்கள் பிறையைப் பற்றுவது போலும் என்பது கருத்து. கொழுந்து - சுட்டி; உவமவாகுபெயர். பூட்டு - தலைக்கோலத்தின் ஓரணிபோலும். தலைக் கோலத்தை இப் பொழுது சடை சிங்காரம் என வழங்குவர். அளகபந்தி - மயிர் ஒழுங்கு.

''ஓதி யாகிய வறன்மிசைச் சுவடுற ஊர்ந்து
நீதி லாதவெண் சந்தனத் திலகவெண் மதிக்குப்
போது மோர்சிறு பாம்பென மயிர்வகிர்ப் பொருந்தச்
சோதி மாமணிச் சுட்டியை யொருத்திதூக் கினளால்
(பிரபுலிங்க. மாயை பூசை. 8)

என்ற செய்யுளில் இக்கருத்தை ஒருவாறு காணலாம். மீனினத் திற்குப் பதிலாக இதில் அரவம் காணப்படுகிறது. (5)

## குழை அணிதல்

1207. வெள்ளத்தின் சடிலத் தான்றன்
வெஞ்சிலை யிறுத்த வீரன்
தள்ளத்த னாவி சோரத்
தனிப்பெரும் பெண்மை தன்னை
அள்ளிக்கொண் டகன்ற காளை
யல்லன்கொ லாங்கொ லென்பாள்
உள்ளத்தி னூச லாடுங்
குழைநிழ லுமிழ விட்டார்.

'வெள்ளத்தின் சடிலத்தான் தன்
வெம் சிலை இறுத்த வீரன்,
தள்ளத் தன் ஆவி சோரத்
தனிப் பெரும் பெண்மை தன்னை

அள்ளிக்கொண்டு அகன்ற காளை
அல்லன் கொல்? ஆம் கொல் என்பாள்?'
உள்ளத்தின் ஊசல் ஆடும்
குழை நிழல் உமிழ இட்டார்.

பொ :—கங்கையைத் தாங்கிய சடையையுடைய சிவபெருமானுடைய வலிய வில்லை ஒடித்த வீரன், தன் உயிர் தள்ளாடிச் சோர, ஒப்பற்ற பெருமைவாய்ந்த தன் பெண்மைத் தன்மையைக் கவர்ந்துகொண்டு சென்ற, மழவிடை போன்ற, (பெருமித நடையையுடைய) குமரன் அல்லனோ அவன்தானோ என நினைவாளது உள்ளத்தைப் போல ஊசல் ஆடுகின்ற குழைகளை ஒளிவிடும்படி காதில் தூக்கினார்கள்.

கு :—பெண்மை - நாணம் மடம் முதலியன. இராமன் மிதிலை வீதியிற் செல்லும்போது சீதை அவனைக் கண்டு காதல்கொள்ள, அவளது '' சிந்தையும் நிறையும் மெய்ந்நலனும் பின்செல, மைந்தனும் முனியொடு மறையப் போயினன் '' (மிதிலைக். 39) என்று கூறப்பட்டது. ஆயினும் வில் இறுத்த செய்தி அவள் அறிவாள் அன்றி, இறுத்தவன் யார் என்று அறியாதவள் ஆகலின், அவள் மனம் ஊசலாடிற்றென்று கூறி அதனைக் குழையின் ஊசலாட்டுக்கு உவமித்தார், (6)

கழுத்தணி யணிதல்

1208. கோனணி சங்கம் வந்து
குடியிருந் தனைய கண்டத்
தீனமில் கலன்க டம்மி
லியைவன வணிதல் செய்தார்
மானணி நோக்கி னார்த
மங்கலக் கழுத்துக் கெல்லாம்
தானணி யான போது
தனக்கணி யாது மாதோ.

கோன் அணி சங்கம் வந்து
குடியிருந்தனைய கண்டத்து,
ஈனம் இல் கலன்கள் தம்மில்
இயைவன அணிதல் செய்தார்,

மான் அணி நோக்கினார்தம்
மங்கலக் கழுத்துக்கு எல்லாம்
தான் அணி ஆன போது,
தனக்கு அணி யாது மாதோ?

பொ :—திருமால் (கையில்) தாங்கிய சங்கு (நாடி) வந்து தங்கினாற் போன்ற சீதையின் கழுத்தில், (வேலைப்பாட்டிற்) குறைவில்லாத அணிகலன்களிற் பொருத்தமானவைகளை (த் தாதியர்) அணிந்தார்கள். மான் போன்ற (மருண்ட) அழகிய பார்வையையுடைய மகளிரின் மங்கலக் கழுத்துக்கெல்லாம், சீதை (அணிகளுக்கு அரசாகிய) மாங்கலியமாக இருக்கும்போது, அவளுக்கு அணியாகக் கூடியது யாது? எதுவுமில்லை.

கு :—பிராட்டியார் திருமகளின் அவதாரமாகலானும் திருமங்கலியத்திற்குத் திருவென்ற பெயருண்மையானும், ''மான் அணி நோக்கினார்தம் மங்கலக் கழுத்துக்கெல்லாம் தான் அணியான போது தனக்கணி யாது மாதோ'' என நயம்படக் கூறினார். முதனூலாகிய வான்மீகத்தில் திருமணச் சடங்காகத் திருமங்கலியம் அணிதல் குறிக்கப்பெறவில்லை. கங்கணம் தரித்தல், தாரைவார்த்தல், கைப்பிடித்தல், வேதியை வலம்வருதல், அம்மி மிதித்தல், அருந்ததி பார்த்தல், பாலிகைகொட்டுதல் முதலிய பல மண நிகழ்ச்சிகளைக் கூறிய கம்பரும், அதனைத் திருமணச் சடங்கில் ஒன்றாக விதந்து கூறவில்லை. ஆயினும் அவர் காலத்துத் தாலிகட்டும் வழக்கம் தோன்றிவிட்டது. மாங்கலியம் அணிவிப்பதைத் திருப்பூட்டுதல் என்று கூறுவது பெருவழக்கு. உலகில் மணமக்கட்கு உவமை கூறுங்கால் திருமாலையும் திருமகளையும் கூறுவது மரபு. உவமையாகத்தக்க அவ்விருவருமே இங்கே மணமக்களாக அமர்ந்தபோது அவர்கட்குக் கூறத்தக்க உவமையாது? ''உயர்ந்த தன் மேற்றே உள்ளுங்காலை'' என்றபடி உவமானம் உயர்ந்ததாக இருத்தல் வேண்டுமே என நினைந்து ''ஒப்பெங்கே கொண்டெவ்வகைநாடி உரை செய்வேம்'' (மிதிலைக். 24) எனப் பாடிய கவிஞர் பிரான், மாங்கலியத்தையும் திருமகளாகவே கூறி, அதற்கு மேப்பட்ட அணியில்லை என்றும், திருமகளே அவ்வணியாக ஒளிர்கின்றாள் என்றும் காட்டித் திருமணச் சடங்கில் மாங்கலியம் தரித்தது கூறப்பெறவில்லையேயென வினவுவார்க்கு விடையிறுப்பது போன்று, ''தான் அணியானபோது தனக்கணியாது'' என்றார். இந்த மாங்கலியந்தான் பிற அணிகள் புனைதற்கு இடம் தருவது. அஃதின்றேல் ஏனைய அணிகள் அணிதற்கில்லை. உருக்காட்டு படலத்தில், சீதையால் கிட்கிந்தையில் எறியப்பட்ட அணிகளைச் சுக்கிரீவன் இராமனுக்குக் காட்டியபோது, இராமன்

அளவற்ற துயர் எய்தினன் என்று கூறிக் "கொற்றவற் காண்டுக் காட்டிக் கொடுத்தபோ தடுத்த தன்மை பெற்றியின் உணர்தற் பாற்ருே உயிர்நிலை பிறிது முண்டோ, இற்றை நாள் அளவும் அன்று யன்று நீ இழித்து நீத்த, மற்றை நல்லணிகள் காணுன் மங்கலம் காத்த மன்னே" (உருக்காட்டு. 35) என்ற செய்யுட் கண், பிராட்டியின் பிற நல்ல அணிகள் அவளது மங்கல்யத் தைக் காத்தன என அநுமன் மொழிந்தான். மாங்கலிய அணி ஒருகால் தம்மைக் காத்ததை நினைந்து, செய்ந்நன்றி மறவாது அந்நல்லணிகள் மாங்கலியத்தைப் பாதுகாத்தன எனக் கூறுமுகத் தால், அவளது மங்கல அணிக்கு யாதொரு குறைவுமில்லை என்றும், இராமன் உயிருடன் இருக்கின்ருன் என்றும் சொல்லி அநுமான் பிராட்டியைத் தெளிவித்தான். இனி மங்கலவணி அணிதல் கம்பர்காலத் துண்டு என்பதும், அப்பேரறிஞர் அவ்வழக்கை நன்கறிந்தவர் என்பதும் பின்வரும் மேற் கோள்கள் கொண்டும் உணரலாம். "மங்கலவணியை நீக்கி மணியணி துறந்து" (கிட்கிந்தை. 52); "அரக்கியர் மூக்கொடும் அற்றநாணினர்" (சூடா. 16); "சூலிரும் பெருவயிறலைத் துச் சோர்வுறும், ஆலியங் கண்ணியர் அறுத்து நீத்தன... தாலியம் பெருமலை தயங்கக் காண்டியால்" (சூடா. 55); "உன் கழுத்தின் நாண் உன் மகற்குக் காப்பின் நாணு மென்ருன்" (நகர்நீங்கு. 49); "கோல விற்குரல் கேட்டுக் குலுங்கித்தந், தாலியைத் தொடல் என்னுமற் ருேர்தலை" (இராவணன் சோகப். 21) என்பன காண்க. மற்றும் இம்மங்கல அணி அணி யும் வழக்கம் சிலப்பதிகாரம் இயற்றிய இளங்கோவடிகள் காலத் தும் அதற்கு முன்னரும் இருந்தது என்பதை, "மங்கல வணி யிற் பிறிதணி மகிழாள்" (சிலப். அந்திமாலை. 50) "ஈகையரிய இழையணி" (புறம். 127) என்ற வரிகளை நோக்கி அறிக. "ஈகை யரிய இழையணி மகளிர்" என்ற தொடர்க்குப் 'பிறிதோ ரணிகலமுமின்றிக் கொடுத்தற்கரிய மங்கலிய சூத்திரத்தை யணிந்த மகளிர்' என்று உரைகாரர் எழுதுவதும் ஈண்டு நோக்கி உணரத்தக்கது.

(7)

## முத்துமாலை அணிதல்

1209. கோணிலா வான மீன்க
ளியைவன கோத்த தென்கோ
வாணிலா வயங்கு செவ்வி
வளர்பிறை வகிர்ந்த தென்கோ

நாணிலா நகையி னின்ற
நளிர்நிலாத் தவழ்ந்த தென்கோ
பூணிலா முலைமே லார
முத்தையான் புகல்வ தென்னே.

கோண் இலா வான மீன்கள் இயைவன கோத்தது என்கோ ?
வாள் நிலா வயங்கு செவ்வி வளர் பிறை வகிர்ந்தது என்கோ ?
நாணில் ஆம் நகையில் நின்ற நளிர் நிலாத் தவழ்ந்தது என்கோ?
பூண் நிலாம் முலை மேல் ஆர முத்தை, யான் புகல்வது என்னே ?

பொ :—தம்முள் மாறுபடுதலின்றி நேர் ஒத்தனவாகிய உடுக்களில் பொருத்தமானவைகளைக் கோத்த (வடம்) என்பேனே? ஒள்ளிய நிலவு விளங்கும் அழகிய வளர்பிறையைப் பகுத்த பிளவு என்பேனே? வெட்கம் காரணமாக வெளிப்படுகின்ற நகையினையுடைய பல்லில் நின்ற தண்ணிய நிலவானது தவழ்ந்த காட்சி யென்பேனே? பூண்கள் ஒளிரப்பெற்ற கொங்கைகளின் மீதணிந்த முத்துமாலையை இன்னது என யான் எவ்வாறு எடுத்துக் கூறுவேன் ?

கு :—சீதை அணிந்த முத்துமாலை உடுக்கள் கோத்த மாலை முதலியவற்றை ஒத்திருந்தது என்பது கருத்து. கோண் இலா என்பதற்குக் கோணுதலில்லாத என்றுமாம். ஆடவர் குறுகா அருங்கடிவரைப்பில் இதுகாறும் இருந்த பிராட்டி, இப்பொழுது பலர் நிறைந்த அவைக்கண் வருதலின் இயல்பாகிய நாணத்தோடு கூடிய நகை பிறந்தது என்றார். வானமீன்கள் இயைவன என்றார் எல்லா மீன்களும் ஒரு தன்மையனவல்ல ஆகலின். (8)

### ஆரத்தின் வருணனை

1210. மொய்கொள்சி றடியைச் சேர்ந்த
முளரிக்குஞ் செம்மை யீந்த
தையலா ளமிழ்த மேனி
தயங்கொளி தழுவிக் கொள்ள
வெய்யபூண் முலையிற் சேர்ந்த
வெண்முத்தஞ் சிவந்த வென்றால்
செய்யரைச் சேர்ந்து ளாருஞ்
செய்யராய்த் திகழ்வ ரன்றே.

மொய் கொள் சீறடியைச் சேர்ந்த முளரிக்கும் செம்மை ஈந்த
தையலாள் அமிழ்த மேனி, தயங்கு ஒளி தழுவிக்கொள்ள,
வெய்ய பூண் முலையில் சேர்ந்த வெண்முத்தம் சிவந்த என்றால்,
செய்யரைச் சேர்ந்துளாரும், செய்யராய்த் திகழ்வர் அன்றே?

பொ :—(செந்நிறத்தில் எம்மை ஒவ்வீர் என்று) போரைச் செய்கின்ற சிறிய அடியைப் பொருந்திய தாமரை மலர்க்கும் செந்நிறத்தை அளித்த பிராட்டியின் அமிழ்தம் போன்று (இனிய) மேனியில் விளங்குகின்ற ஒளி (தம்மீது வந்து) பொருந்துதலால், விரும்பத்தக்க அணிகள் அணிந்த கொங்கைகளில் படிந்த வெண்ணிறமான முத்தும் சிவந்து காட்டின என்றால், செந்நிறமுள்ளவரைக் கூடினவரும் செந்நிறம் பெற்றவராய் விளங்குவர் அன்றே.

கு :—மொய் - போர் ; தனது தாள் பொருந்துதலால் சிவப்பு நிறம் பெறும், தாமரையில் வீற்றிருக்கும் திருமகளின் கூறான பிராட்டியின் திருமேனியொளி தீண்டுதலாலே மார்பில் அணிந்த முத்தாரமும் செந்நிறம் பெற்று விளங்கியது என்க. இறுதியடி இரட்டுற மொழிதல். செய்யர் என்றதனால செம்மையான பண்பு வாய்ந்தவர் என்றும், செய்யராய் என்றதனால் அவரைச் சேர்ந்தவரும் செம்மையராவர் என்றும் கூறியதாம். "அழலாடி அங்கை சிவந்ததோ அங்கை அழகால் அழல் சிவந்தவாறோ" என்றது காண்க. மொய்கொண்டனவாய்ச் சேர்ந்த முளரிக்கும் எனக் கூட்டுக. மொய் என்பதற்கு அழகு அல்லது பெருமை என்றும் பொருள் கூறலாம். அமிழ்த மேனி என்ற இடத்து அமிழ்தம் போன்ற மேனி மாத்திரம் அன்று அமிழ்தமயமான மேனி என்றும் கொள்க ; பாற்கடலில் அமிழ்தத்துடன் தோன்றியவள் ஆகலின். "அமிழ்தின் வந்த தேவி" (வாலி. 78) என்றது காண்க. உத்தம மகளிரது அடி சிறிதாயிருக்கும் என்ப. "நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகி" (கலித். 108) என்றது காண்க. (9)

### தோளணி அணிதல்

1211. கொமையுற வீங்கு கின்ற
குலிகச்செப் பனைய கொங்கைச்
சுமையுற நுடங்கு கின்ற
நுசுப்பினாள் பூண்பெய் தோளுக்கு

இமையுற விமைக்குஞ் செங்கே
ழினமணி முத்தி ஞேடும்
அமையுற வமைவ துண்டா
மாகினொப் பாகு மன்றே.

**கொமை உற வீங்குகின்ற குலிகச் செப்பு அனைய கொங்கைச்**
**சுமை உற நுடங்குகின்ற நுசுப்பினள் பூண் பெய் தோளுக்கு,**
**இமை உற இமைக்கும் செங்கேழ் இன மணி முத்திேனாடும்**
**அமை உற அமைவது உண்டாம் ஆகின், ஒப்பாகும் அன்றே.**

பொ:—இங்குலிகத்தால் அமைந்த கிண்ணத்தை ஒத்த, திரட்சி பொருந்தப் பருத்தெழுகின்ற தனங்களாகிய பாரம் பொருந்த, (அதனைத் தாங்கமாட்டாது) துவள்கின்ற இடையினையுடைய பிராட்டியின் அணிகலங்கள் அணியப்பெற்ற தோளுக்கு, காண்பவர் கண்கள் (கூசி) இமைக்கும்படி ஒளிவிடுகின்ற செந்நிறம் வாய்ந்த ஓரினமணிகளாகிய பதுமராகங்களை முத்துடன் கூடத் தன்னிடம் மிகுதியாகப் பொருந்தப்பெற்ற மூங்கில் உண்டெனின் அதுவே ஒப்பாகும்.

கு :—மூங்கில் பல செந்நிறக் கற்களுடனும் முத்துக்களுடனும் கூடி விளங்குமானால் அப்பொழுதுதான் சிவப்புக் கற்கலங்களையும் வெண் முத்துக்களையும் அணியப்பெற்ற பிராட்டியின் தோளுக்கு ஒப்பாகும் என்க. மகளிர் தோளுக்குக் கணுக்களற்ற இள மூங்கிலை உவமை கூறுவர்; ''ஆடமைத் தோள்'' (சிந்தா. 170): ''வேயமழத் திரண்ட மென்றோேள்'' (சிந்தா. 2923) என்ற இடங்களைக் காண்க. (10)

## கையிற் கடகமணிதல்

**1212.** தளையவிழ் கோதை யோதிச்
சானகி தளிர்க்கை யென்னும்
முளரிக ளிராமன் செங்கை
முறைமையிற் றீண்ட நோற்ற
அளியன கங்குற் போதுங்
குவியல வாகு மென்றுங்
கிளவெய்யில் சுற்றி யன்ன
வெரிமணிக் கடக மிட்டார்.

தளை அவிழ் கோதை ஓதிச் சானகி தளிர்க் கை என்னும்
முளரிகள், இராமன் செங்கை முறைமையில் தீண்ட நோற்ற,
அளியன, கங்குல் போதும் குவியல ஆகும் என்று ஆங்கு
இளவெயில் சுற்றி அன்ன, எரி மணிக் கடகம் இட்டார்.

பொ :—முறுக்கவிழ்கின்ற மலர்மாலை யணிந்த கூந்தலை யுடைய சானகியின் தளிர் போன்ற மெல்லிய கைகள் என்னும் தாமரைகள், இராமனது சிவந்த கையை முறைமையில் பொருந்தும்படி நோன்பு செய்துள்ளன. (ஆகலின் அவை நம்மாற்) போற்றத்தக்கன! ஆகவே (அவை பிற தாமரைமலர்கள் போலன்றி) இராக்காலத்தும் குவிந்தில ஆகும் என்று கருதி, இளவெயிலைச் சூழ நிறைத்தன்ன, ஒளிவிடுகின்ற மணிகள் இழைத்துச் செய்த கடகத்தை (க் கையில்) அணிந்தனர்.

கு :—தாமரைகள் கங்குற்போதிற் குவிவன. ஆனால் பிராட்டியின் தளிர்க்கையாகிய முளரிகள் குவியா எனக் காட்டுவார் போல, இரவிலும் ஒளிபடும்படி இளவெயிலைச் சூழ நிறைத்தாற் போன்று கடகம் அணிந்தார் என்றார். கையை முளரியாக உருவகம் செய்தார். முளரிகள் இராமனது செங்கை தீண்ட நோற்ற என்பது கொண்டு, இராமனாகிய சூரியனது கதிர்கள் தீண்ட மலர்ந்திடுமாறு அம்முளரிகள் நோன்பாற்றியுள்ளன என்ற பொருளும் காணலாம். முறைமை - மறையிற் கூறப்பட்ட முறைமை. "மையறு மந்திர முற்றும் வழங்கா, நெய்யமை யாவுதி யாவையு நேர்ந்தான், தையல் தளிர்க்கை தடக்கை பிடித்தான்" (கடிமணம். 90) என்றது காண்க. கடகம் ஆடவர் பெண்டிர் என்ற இருவர்க்கும் பொதுவான அணிபோலும். "கங்கைக் கிறைவன் கடகக்கை புடைத்து நக்கான்" (நகர் நீங்கு. 117) என்றது காண்க. (11)

## தொய்யில் எழுதல்

**1213.** சில்லிய லோதி கொங்கைத்
திரண்மணிக் கனகச் செப்பில்
வல்லியு மனங்கன் வில்லும்
மான்மதச் சாந்திற் றீட்டிப்
பல்லிய னெறியிற் பார்க்கும்
பரம்பொரு ளென்ன யார்க்கும்
இல்லையுண் டென்ன நின்ற
விடையினுக் கிடுக்கண் செய்தார்.

சில் இயல் ஓதி கொங்கைத் திரள் மணிக் கனகச் செப்பில்,
வல்லியும், அனங்கன் வில்லும் மான்மதச் சாந்தும், தீட்டிப்,
பல் இயல் நெறியில் பார்க்கும் பரம்பொருள் என்ன, யார்க்கும்
இல்லை உண்டு என்ன நின்ற, இடையினுக்கு இடுக்கண் செய்தார்,

பொ :—தகட்டணி அணிந்த நல்ல தன்மை வாய்ந்த கூந்தலை யுடைய பிராட்டியின். கொங்கைகளாகிய திரண்ட மணியுடன் கூடிய பொற்செப்பின்மீது, கத்தூரிக் குழம்பால் காமவல்லியும் (உருவிலியாகிய) மன்மதனது (கரும்பு) வில்லும் தொய்யிலாக எழுதிப், பல்வகைப் பட்ட சமய நெறிகளால் ஆராயப்படுகிற (எல்லாப் பொருள்களினும்) மேம்பட்ட பொருளாகிய கடவுளின் உருவம் இல்லையென்றும் உண்டென்றும் ஐயுற்று நிற்கும் நிலை போல, யார்க்கும் (கட்புலனாகாமையின்) இல்லையென்றும் (அனுமானத்தான்) உண்டென்றும் ஐயுறும்படி நின்ற (சீதையின்) இடைக்கு வருத்தத்தை விளைவித்தார்கள்.

கு :—சில் இயல் ஓதி - மெல்லிய தன்மை வாய்ந்த கூந்தல் எனினுமாம். மற்றும் ஐம்பால் வகைகளில் சிலவிதமாக வகுத்த தன்மை வாய்ந்த கூந்தலுமாம். காணப்படுவது உலகமேயன்றிக் கடவுள் காணப்படுவதில்லையாகலின் சிலர் கடவுள் இல்லை என்பர். ஆத்திகர் அநுமானப் பிரமாணத்தாலும் ஆகமங்களைக் கொண்டும் உண்டென்பர். அது போன்று கட்புலனாகாத நுட்ப முடைமையின் சீதைக்கு இடை இன்றெென்பர் சிலர். எனினும் மேற்பகுதியாகிய கொங்கைகளும் கீழ்ப்பகுதியும் உண்மையின், நடுப்பாகம் இருந்தேயாகவேண்டும் என்று கொள்வர் அறிந்தோர். சூர்ப்பணகை வாயிலாகச் சீதையின் உறுப்புக்களின் சிறப்பைக் கேட்டறிந்த இராவணன், தனக்கு முன்னர் வெளிப்பட்ட சீதை யின் உருவெளித் தோற்றத்தைக் கண்ணுற்றபோது, "புடை கொண்டெழு கொங்கையும் அல்குலும் புல்லி நிற்கும், இடை கண்டில மல்லது எல்லா உருவும் தெரிந்தாம்" என்று, "கட் புலனாகாத தன்றி இடை இல்லையெனச் சொல்லற் கில்லை" எனக் கூறியது காண்க (மாரீசன். 114). கொங்கையும் அல்குலும் புல்லி நிற்கும் என்ற தொடர், மேலும் கீழும் உள்ள உறுப்புக்களைக் கொண்டு நடு உறுப்பாகிய இடை உண்டென்று ஊகிக்கப்படும் என்பதை விளக்கும். இதே கருத்தை விரித்துக் கம்பர் பின்னரும் "தொட்ட வெற்குணரலாமற் றுண்டெனும் சொல்லுமில்லை" (நாடவிட்ட. 38) என்று கூறி, இராமன் சீதையைத் தொட்டுத் துய்த்தவனாதலின் அவன் பிராட்டிக்கு இடையுண்டு என்று தெளிந்தான் என்பர். பரம்பொருள் இல்லையென்று வாதிப்பவரும் யோக ஞான முறைகளால் அவனை யுணர்ந்தவழி அவன் உண்டு

எனத் தெளிவர் என்பது கருத்து, "கண்கொளா நுடங் கிடையை......உண்டெனத் தமர் மதிப்பர் நோக்கினுர் பிறர் எல் லாம் உண்டில்லை யெனஐய மல்லதொன் றுணர்வரிதே" (172.) என்ற சிந்தாமணிக் கருத்தைக் கம்பர் இங்கே தெளிவாக்கி யிருப்பது மகிழ்ந்து காண்டற்குரியது, சிந்தாமணி ஆசிரியர் "உண்டெனத் தமர் மதிப்பர்" என்ருர். தமர் என்பது நற்ருய் செவிலிமார்களைக் குறிக்கும், குழந்தை பிறந்ததிலிருந்து அதற்குப் பாலூட்டி, நீராட்டிச் சீராட்டி வளர்த்த ஐவகைத் தாயர் பிராட் டியின் உறுப்புக்களை அறியாதவர் ஆவரோ? ஆகார்; கம்பர், "கொண்டானிற் கேளிர் பிறரில்லை" ஆகலின், தமர் என்பதைக் கணவனுன இராமன் எனவே கொண்டு "தொட்ட வெற்குணர லாம்" என்று கூறினர். தொட்ட என்பது கல்வி கேள்விகளால் இறைவனை அவனருளாலேயே கண்டு அவனுடன் ஒன்றிய அறிஞ ரைக் குறிக்கும். பல்லியல் நெறி என்றது, துவிதம் விசிட்டாத் துவிதம் அத்துவிதம் முதலியன. உலகாயதம் முதலிய சமயங் களுமாம். (12)

### மேகலையும் தாரகைச் சும்மையும் அணிதல்

1214. நிறஞ்செய்கோ சிகநுண் டூசு
நீவிநீ வாத வல்குல்
புறஞ்செய்மே கலையுந் தாழத்
தாரகைச் சும்மை பூட்டித்
திறஞ்செய்கா சீன்ற சோதி
பேதைசே யொளியிற் றீர்ந்த
கறங்குபு திரியத் தாமுங்
கண்வழுக் குற்று நின்ருர்.

நிறம் செய் கோசிக நுண் தூசு நீவி, நீவாத அல்குல்
புறம் செய் மேகலையும், தாழத் தாரகைச் சும்மை பூட்டித்,
திறம் செய் காசு ஈன்ற சோதி, பேதை சேய் ஒளியில் தீர்ந்த
கறங்குபு திரியத், தாமும் கண் வழுக்குற்று நின்ருர்.

பொ :—(பல நிறங்காட்டி) ஒளிவிடுகின்ற, பட்டாகிய நுட்ப மான (இழைகள் ஓட்டிய) ஆடையின் கொய்சகம் நீங்காத, அல்குலின் புறத்தே அணி செய்கின்ற மேகலையையும் அதன் கீழ்ப்பட, தாரகைச் சும்மை என்னும் மணிவடத் தொகுதியையும் (தோழிமார்) அணிவித்து, (அவ்வணிகளில் அமைந்த) பல்வேறு

அரத்னங்கள் வீசிய ஒளிகள், பிராட்டியின் (சிவந்த மேனி) ஒளியினின்றும் வேறுபட்டனவாய் (எப்புறத்திலும்) சுழன்று உலாவுதலினுல் (அணிகளைப் பூட்டி நின்ற) தாமும் கண்ணெளி மழுங்கி நின்றுர்.

கு :—தோழிமார் சிதைக்கு அணிந்த அணிகள் அவர்கள் விழிகளே கூசும்படி பேரொளி செய்தன என்பது கருத்து. தூசு நீவியும், நீவாத அல்குற்புறத்தே (அழகு செய்கின்ற) மேகலை தாழவும், தாரகைச் சும்மை (என்னும் அணிகளைப் பூட்டியும்) என்றும் இணைக்கலாம். தாரகைச் சும்மை வானமீன்கள் போல முத்துத் தொகுதியாலாகிய ஓர் அணி. "கதிர் முத்தம் இடங் தொறுங் கிடந்திமைப்பன வெக்கிளஞ் செக்கர் படர்ந்த வானிடைத் தாரகை நிகர்ப்பன பாராய்" (சித்திரகூடப். 27) என்ற இடத்து முத்துக்களுக்குத் தாரகையை உவமித்தது காண்க. பிராட்டியின் செம்மேனி ஒளியால் அணிகளின் ஒளிகள் நீங்கின என்றும் கூறலாம். நீவி – கொய்சகம் ; கோசிகம் - பட்டு, "கோசிகத்தினில் உற்ற கொழுங்கனல்" (இலங்கையெரி. 25) என்றது காண்க. (13)

## சிலம்பு அணிதல்

1215. ஐயவா மனிச்சப் போதி
னதிகமு நொய்ய வாடல்
பையர வல்கு லாடன்
பஞ்சின்றிப் பழுத்த பாதம்
செய்யபூங் கமல மன்னச்
சேர்த்திய சிலம்பு சால
நொய்யவே நொய்ய வென்ருே
பலபட நுவல்வ தம்மா.

ஐய ஆம் அனிச்சப் போதின் அதிகமும் நொய்ய, ஆடல்
பை அரவு அல்குலாள்தன் பஞ்சு இன்றிப் பழுத்த பாதம்,
செய்ய பூம் கமலம் மன்னச் சேர்த்திய சிலம்பு, சால
நொய்யவே நொய்ய என்ருே பலபட நுவல்வது ? அம்மா!

பொ :—செந்தாமரை மலர் போன்ற (திருவடிகளைப்) பொருந் தத், (தோழிமார்) அணிவித்த சிலம்புகள் பலவாருக ஒலிப்பது, (எல்லா மலர்களினும்) நுண்ணியவான அனிச்ச மலர்களைக் காட்டிலும் மிகவும் மெல்லியவான, ஆடலுடன் கூடிய பட

அரவை யொத்த அல்குலையுடைய சீதையின் செம்பஞ்சூட்டப் பெறுமல் இயற்கையாகவே சிவந்துள்ள திருவடிகள், மிகவும் நொய்ம்மையுடையன என்று நினைந்தோ அறிகிலம்.

கு:—அனிச்ச மலர் நொய்யது என்பதையும் அதனைவிட உத்தம மகளிரது அடி நொய்யது என்பதையும், "அனிச்சமும் அன்னத்தின் தூவியு மாதர் அடிக்கு நெருஞ்சிப் பழம்" (குறள். 1120) "அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள், நுசுப்பிற்கு நல்ல படாஅ பறை" (குறள். 1115) "அனிச்சப்பூங் கோதை சூட்டின் அம்மனையோ வென்றஞ்சும்" (சிந்தா. 745) என்ற வரிகள் கொண்டு உணரலாம், சிலம்பு ஒலிப்பது பிராட்டியின் திருவடிகள் மிகவும் நொய்யன எனக் கூறுவது போன்றிருந்தது என்க. (14)

## விழிகட்கு மையிடுதல்

**1216.** நஞ்சிடை யமிழ்தங் கூட்டி
நயனங்க ளான வென்னச்
செஞ்செவே நீண்டு மீண்டு
சேயரி சிதறித் தீய
வஞ்சமுங் களவு மின்றி
மழையென மதர்த்த கண்கள்
அஞ்சன நிறமோ வண்ணல்
வண்ணமோ வறித றேற்றும்.

**நஞ்சிடை அமிழ்தம் கூட்டி நாட்டங்கள் ஆன என்னச், செஞ்செவே நீண்டு மீண்டு சேய் அரி சிதறித், தீய வஞ்சமும் களவும் இன்றி மழை என மதர்த்த கண்கள், அஞ்சன நிறமோ? அண்ணல் வண்ணமோ? அறிதல் தேற்றும்.**

பொ:—அமுதத்திடையில் விடத்தைச் சேர்த்து (அவற்றால்) கண்கள் உண்டாயின என்று சொல்லுமாறு, மிகவும் நேரே சென்று திரும்பிச் செவ்வரிகளைச் சிதறிக் கொடிய வஞ்சனையும் களவுமில்லாமல் மேகம் போன்று (குளிர்ந்து) களித்த கண்களின் கருநிறம், (அவைகளிற் றீட்டப் பெற்ற) மையினது நிறமோ? (அல்லது) பெருமை மிக்க இராமனது மேனி நிறமோ? இதுவென அறிந்து தெளிகிலம்.

கு:—மகளிர் விழிகளில் நஞ்சும் அமுதமும் கலந்துள்ளன என்பர். இதனை, "இருநோக் கிவளுண்கணுள்ள தொரு நோக்கு

நோய்நோக்கொன் றந்நோய் மருந்து" (குறள். 1091); "பிணியும் அதற்கு மருந்தும் பிறழப் பிறழுமின்னும், பணியும் புரை மருங்குல் பெருந்தோளி படைக்கண்களே." (திருக்கோவை. 5); "நஞ்சினும் கொடிய நாட்டம் அமுதினு நயந்து நோக்கி" (பூக்கொய். 7); "நஞ்சு மமிர்தமுமே போல் குணத்த" (சிந்தா. 167) என்பன கொண்டு தெளிக. இராமனைத் தவிரப் பிறரிடத்திற் பொது நோக்கமன்றிக் காதல் நோக்கன்மையின் "வஞ்சமும் களவுமின்றி" எனக் கூறப்பட்டது. அண்ணலைக் கண்டதிலிருந்து அவனையே நினைந்தவளாகலின் அவனைக் கண்ட கண்கள் அவன் நிறம் பெற்றன என்றார். "அவர்தம் நீல நிறத்தை யெல்லோரும் நினைக்க அதுவாய் நிரம்பியதோ" (மிதிலைக். 67) என்றது காண்க. கருநிற நஞ்சும் வெண்ணிற அமுதும் கண்ணின் கருவிழிக்கும் அதன் சுற்றுப்புறத்திற்கும் முறையே உவமை. "ஈசற் கியான்வைத்த அன்பின் அகன்று அவன் வாங்கிய என் பாசத்திற் காரென்று அவன் தில்லையின் ஒளிபோன்று அவன் தோள் பூசத் திருநீறென வெளுத்து" (திருக்கோ. 109) என்புழி, கண்களிற் காணும் பல்வேறு நிறங்களும் சிறந்த உவமைகள் கொண்டு விளக்கப் பெற்றமை காண்க. செஞ்செவே நீண்டு—கோணுதலின்றி நேராக நீண்டு; "செஞ்செவே கமலக் கையாற் றீண்டலும்" (பூக்கொய். 7) என்ற இடத்துப் போல. (15)

## திலகம் தீட்டுதல்

**1217**. மொய்வளர் குவளை பூத்த
முளரியின் முளைத்த முந்நாள்
மெய்வளர் மதியி னுப்பண்
மீனுண்டே லனைய தேய்ப்ப
வையக மடந்தை மார்கும்
நாகர்கோ தையர்க்கும் வானத்
தெய்வமங் கையர்க்கு மேலாந்
திலகத்தைத் திலகஞ் செய்தார்.

மொய் வளர் குவளை பூத்த முளரியின் முளைத்த முந்நாள் மெய்வளர் மதியின் நாப்பண் மீன் உண்டேல் அனையது ஏய்ப்ப, வையக மடந்தைமார்க்கும், நாகர் கோதையர்க்கும், வானத் தெய்வ மங்கையர்க்கும் மேலாம் திலகத்தைத் திலகம் செய்தார்.

பொ :—வண்டுகள் சூழ்ந்த நீல மலர்களாகிய (விழிகளைத்) தன்னிடத்தே மலரப் பெற்ற ஒரு தாமரை மலரினிடத்தே தோன்றி விளங்குகின்ற, நாள்தோறும் கலைகள் கூடி மேனி வளரும் தன்மையையுடைய மூன்று நாட் பிறைச் சந்திரன் நடுவில் விண்மீன் ஒன்றுண்டாயின் அதனை ஒக்கும்படி, பூவுலகத்துள்ள மகளிர் நாகலோகத்துள்ள மங்கையர் விண்ணுலகத்துள்ள தேவ மாதர் என்ற இவர்கள் எல்லோரினும் சிறந்து ஒளிரும் திலகம் போன்றவளாகிய பிராட்டியின் நெற்றியில் திலகம் தீட்டினார்கள்.

கு :—மொய் - வண்டு (சூடாமணி); மொய்வளர் என்பதற்கு (இதழ்கள்) நெருங்கிய என்றுமாம். குவளை – கண்கள். முளரி-முகம். முந்நாட்பிறை முழுமதியன்றாகலின் மானென்றும் முயல் என்றும் கவிகள் கூறும் களங்கம் பெறுதற்கில்லை ஆதலின் உண்டேல் என்றார். முந்நாள் மதியென்பது நுதலை மட்டும் குறித்து நின்றது; திலகம் தீட்டுவது நுதற்கேயாகலின். "பிறைவனப் பிழந்த நுதலும்" (நற், 263) என்றது காண்க. திலகத்தைத் திலகம் செய்தது அழகினுக் கழகு செய்தாற் போல என்க. "மடந்தை மார்களிற் றிலகமே" (சித்திர கூடப். 27) எனப் பிராட்டியை இராமனே விளித்தது காண்க. (16)

## பல மலர்களைச் சூட்டுதல்

1218. சின்னப்பூச் செருகு மென்பூச்
சேகரப் போது கோதில்
கன்னப்பூக் கனல மீது
கற்பகக் கொழுந்து மான
மின்னப்பூச் சுரும்பும் வண்டும்
மிஞிறுந்தும் பிகளும் பம்பும்
புன்னைப்பூந் தாது மானும்
பொற்பொடி யப்பி விட்டார்.

சின்னப்பூச், செருகும் மென் பூச், சேகரப் போது, கோது இல்
கன்னப் பூக், கனல, மீது கற்பகக் கொழுந்து மான
மின்னப், பூம் சுரும்பும் வண்டும் மிஞிறும் தும்பிகளும் பம்பும்
புன்னைப் பூம் தாது மானும் பொன் பொடி, அப்பிவிட்டார்.

பொ :—சின்னப்பூவும் (குழலிற்) செருகுகின்ற மெல்லிய பூவும் தலை மயிர்மீது அணிதற்குரிய மலரும் பருவத்தரும்பும், குற்ற மற்ற காதுகளிலே வைத்தற்குரிய பூவும் நிறைந்து விளங்குமாறு

(அணிவித்து), அவைகளின் மீது (அம்மலர்கள் பொன்னிறம் பெற்ற) கற்பகத் தருவின் இளந்தளிரை ஒக்கும்படி ஒளிவிட, அழகிய சுரும்புகளும் வண்டுகளும் மிஞிறுகளும் தும்பிகளும் நெருங்கி மொய்த்துத் தேனுண்ணும், புன்னை மலர்களின் மகரந்தத் தாதுக்களை நிகர்க்கும் பொற்பொடிகளை (க் கையால்) அப்பினார்கள்.

கு :—சின்னப்பூ முதலிய நான்கிற்கும் ஏற்ப, சுரும்பு முதலிய நான்கினையும் கூறியது காண்க. சின்னப்பூ - விடுபூ (சிந்தா. 2251. உரை) இது சின்னம் எனவும் படும். கன்னப்பூ - ஒருவகைக் காதணியுமாம். சுரும்பு முதலிய நான்கும் பொதுப்பட வண்டின் இனம் எனினும் அவற்றினிடை வேற்றுமையுண்டு; நச்சினார்க்கினியர், ''மிஞிற்றிற் சுரும்பு சிறத்தலின் அதனை முற்கூறினார். ......இவை நல்ல மணத்தே செல்லும்'' (சிந்தா. 892 உரை) என்றது காண்க. (17)

## பிராட்டிக்குக் காப்பிடுதல்

1219. நெய்வளர் விளக்க மாட்டி
நீரொடு பூவுந் தூவித்
தெய்வமும் பராவி வேத
பாரகர்க் கீந்து செம்பொன்
ஐயவி நுதலிற் சேர்த்தி
யாய்நிற வயினி சுற்றிக்
கைவளர் மயில னானை
வலஞ்செய்து காப்பு மிட்டார்.

நெய் வளர் விளக்கம் ஆட்டி, நீரொடு பூவும் தூவித்,
தெய்வமும் பராவி, வேத பாரகர்க்கு ஈந்து செம்பொன்,
ஐயவி நுதலில் சேர்த்தி, ஆய் நிற அயினி சுற்றிக்,
கை வளர் மயில் அனானை வலம் செய்து, காப்பும் இட்டார்.

பொ :—(மேற்கூறியபடி ஒப்பனை செய்த தோழிமார் சீதைக்குக் கண்ணேறு வாராமல் காக்கும் பொருட்டு) நெய்கொண்டு எரிகின்ற விளக்கைச் சுற்றிக் காட்டி, (தூய) நீருடன் மலர்களையும் (பூப்பலியாக) முன் இறைத்துத் தாம் பரவும் தெய்வங்களைக் குறித்து வேண்டிக்கொண்டு, மறைகளில் வல்ல அந்தணர்க்குச் சிவந்த பொன் நாணயங்களைக் கொடையாகக் கொடுத்து (ப் பேய்கள் முதலியன தீண்டாதவாறு) சிறுவெண்கடுகின் தூளை நெற்றி

யிலே பூசி, அழகிய செந்நிறம் வாய்ந்த சோறு கலந்த ஆலத்தி நீரைச் சுழற்றி, இல்வாழ்க்கை வளர்தற்குக் காரணமான, மயில் போன்ற சாயலையுடைய பிராட்டியை வலமிடமாகச் சுற்றிவந்து பிற காப்புகளும் இட்டார்.

கு :—விளக்கம் மாட்டி எனக்கொண்டு விளக்கினை ஏற்றியெனி னுமாம். அயினி - செஞ்சோறு. மஞ்சளும் சுண்ணும்பும் கலந்து அதில் இட்ட சோறு சிவப்பாக இருக்கும். அதனைக் கண்ணேறு வாராமற் சுற்றுவது மரபு. ஆலத்திநீரிற் கையைத் தோய்த்து நெற்றியில் அதுகொண்டு பொட்டு வைப்பதைக் காப்பிடுதல் என்ப. காப்பு - திருநீற்றுக் காப்புமாம். இவையனைத்தும் கண் ணெச்சில் கழித்தற்குதவுவன. "கைவளர்" என்பதற்கு 'இல் வாழ்க்கை வளர்வதற்குக் காரணமான' என்பர் நச்சினார்க் கினியர். (18)

## சீதையின் அழகைக்கண்டு மகளிரும் காமுறுதல் (1220-1221)

**1220.** கஞ்சத்துக் களிக்கு மின்றேன்
கவர்ந்துணும் வண்டு போல
அஞ்சொற்கள் கிள்ளைக் கெல்லா
மருளினு ளழகை மாந்தித்
தஞ்சொற்கள் குழறித் தத்தந்
தகைதடு மாறி நின்றூர்
மஞ்சர்க்கு மாத ரார்க்கு
மனமென்ப தொன்றே யன்றே.

**கஞ்சத்துக் களிக்கும் இன் தேன் கவர்ந்து உணும் வண்டு போல, அம் சொற்கள் கிள்ளைக்கு எல்லாம் அருளினள் அழகை மாந்தித், தம் சொற்கள் குழறித், தம் தம் தகை தடுமாறி நின்றூர்; மஞ்சர்க்கும் மாதரார்க்கும் மனம் என்பது ஒன்றே அன்றே?**

பொ :—தாமரைமலரிலிருந்து களிப்பை உண்டாக்குதற்குக் காரணமான இனிய தேனைக் கொள்ளைகொண்டு பருகுகின்ற வண்டுகள் போல, அழகிய (இனிய) மழலைச் சொற்களைக் கிளிகட் கெல்லாம் (பழக்கி) அருளிய சீதையின் அழகைப் பருகித் தங்கள் தங்களுடைய வார்த்தைகள் குழறித் தங்கள் தங்களுடைய (நாணம் முதலிய) இயற்கைப் பண்புகள் நிலைகுலையப்பெற்று நின் றனர். (ஆராயுமிடத்து அழகின் வயப்படும் தன்மையில்) மனம் என்பது ஒருபடித்தான பெற்றியை யுடையதன்றே?

கு:—இயற்கையெழிலும் செயற்கை வனப்பும் கூடி விளங்கிய சீதையின் வரம்பற்ற அழகைக் கண்டு சேடியர் (தாமும் மகளிர் தாமே என்ற எண்ணத்தையும் மறந்து) அவள் மாட்டுக் காதல் கொண்டனர். முதல் மூன்றடிகளிற் கூறிய சிறப்புப் பொருளில், மகளிர் மகளிரைக் காமுறுவதும் உண்டோ என எழும் ஐயத்தைப் போக்க, இருசார்ரார்க்கும் மனம் என்பது ஒன்றே என்றார். இது வேற்றுப்பொருள்வைப்பணி; ஆடவரும் பெண்டிரும் தம்முட் காதலிப்பது பாலுணர்ச்சிபற்றி மட்டும் அன்று என்ற உளநூற் கொள்கையைக் கம்பர் இங்கே விளக்குகின்றார். பிராட்டியைக் கண்ட சூர்ப்பணகை "கண்பிற பொருளிற் செல்லா கருத்தெனின் அஃதே கண்ட, பெண் பிறந்தேனுக் கென்றால் என்படும் பிறருக்கு" எனக் கூறுகின்றாள். காப்பியத் தலைவனையும் தலைவியையும் சித்திரிக்குங்கால் ஏற்றத் தாழ்வு தோன்றாதபடி செய்திருப்பது கம்பர் காப்பியத்திற் கண்ட ஓர் தனிச் சிறப்பு. மற்றும் "ஆடவர் பெண்மையை அவாவும் தோளினாய்" (தாடகை. 24) என இராமபிரானைப் புகழ்ந்த கவி, சூர்ப்பணகை வாயிலாகப் பிராட்டியை அதே முறையிற் புகழ்கின்றார். சிந்தாமணி ஆசிரியர் இதே கருத்தைப் "பெண்டிரும் ஆண்மை வெஃகிப் பேதுறு முலையினாளை" என்றார். இங்கே இருவர் கூற்றுக்களுக்கும் உள்ள வாசி அறியத்தக்கது. "வாராக வாமனனே யரங்கா வட்ட நேமிவல வாராகவாவுன் வடிவு கண்டால் மன்மதனும் மட வாராக வாதரஞ் செய்வன்" என்ற திருவரங்கத்தந்தாதிப் பாசுரம் இங்கே ஒப்புநோக்கத்தக்கது. சொற்கள் கிள்ளைக்கெல்லாம் அருளினாள் என்றதால் கிளியின் மொழியினும் இனிய மொழியுடையள் சீதை என்பது பெறப்படும். "எழுவு தண்டமிழ் யாழினு மினியசொற் கிளியே" (சித்திரகூடப். 28) என்று இராமபிரானே பிராட்டியை விளித்த இடத்தில் கிளி என்று மாத்திரம் கூறாது, தமிழ் யாழ் என்ற இவற்றினும் இனிய சொற்களையுடைய கிளியே என்றதனால் கிளியின் மொழி மிகவும் இனியது என்றும், அதனினும் இனிய மொழியுடையவள் பிராட்டி என்பதும் உணரலாம். (19)

**1221.** இழைகுலா முலையி னாளை
யிடையுவா மதியி னோக்கி
மழைகுலா வோதி நல்லார்
களிமயக் குற்று நின்றார்

உழைகுலா நயனத் தார்மாட்
டொன்ஞென்றே விரும்பற் கொத்த
அழகெலா மொருங்கே கண்டால்
யாவரே ஆற்ற வல்லார்.

இழை குலாம் முலையினளை
இடை உவா மதியின் நோக்கி,
மழை குலாம் ஓதி நல்லார்
களி மயக்குற்று நின்ருர்,
உழை குலாம் நயனத்தார் மாட்டு,
ஒன்று ஒன்றே விரும்பற்கு ஒத்த,
அழகு எலாம் ஒருங்கே கண்டால்
யாவரே ஆற்ற வல்லார்?

பொ:—மானின் விழிகளைப் போன்று ஒளிர்கின்ற கண்களை யுடைய மங்கையரிடம் (பண்பு, செய்கை, உறுப்பமைதி, நடை, சாயல், வண்ணம் என்பனவற்றுள்) ஒவ்வொன்றே விரும்பத் தக்கது. அத்தகைய அழகெல்லாம் ஒருங்கே ஓரிடத்துக் கண்டால் அதனைக் கண்டு (காதலியாது) அமைதியுறுவோர் யார்தாம்? (எவரும் இன்ருகலின்) தமக்கு அழகைத் தருதலால் அணிகள் களிப்பதற்குக் காரணமான தனங்களையுடைய சீதையைத் (தமக்கு) நடுவே முழுமதிபோன்று பார்த்து, மேகத்தை ஒப்ப விளங்கும் கூந்தலையுடைய சிறந்த அழகுவாய்ந்த அம் மாதர்கள், களிப்பை விளைக்கும் மயக்கம் அடைந்து நின்றனர்.

கு:—இழை குலாம் என்பதற்குத் தம்மால் அணியப்பெற்ற அணிகள் ஒளிபெற்றுவிளங்குதற்குக் காரணமான என்றும் பொருள் கொள்ளலாம். "மொய்கொள் சீறடியைச் சேர்ந்த முளரிக்கும் செம்மையீந்த" என்ற இப்படலம் ஒன்பதாவது செய்யுளையும், "இழைகளும் குழைகளும் இன்ன முன்னமே, மழை பொரு கண்ணிணை மடந்தை மாரொடும், பழகிய வெனினு மிப் பாவை தோன்றலால், அழகெனும் அவையும் ஓரழகு பெற்றவே" (மிதிலைக். 34) என்ற செய்யுளையும் ஒப்புநோக்கி உணர்க. அணிகள் சாதாரணமாக மகளிர்க்கு அழகுதரும் என்பர். "அணியிலாக் கவிதை பணியிலா வனிதை" என்பது பழமொழி. ஆனல் பிராட்டியின் மேனி அழகு அணிகட்கும் அழகைத் தந்தது என்ருர், மகளிர் அணிதரித் தழகுசெய்வது வழக்கு. பிராட்டி யோ "அணிபறித் தழகுசெய்யும் அணங்கு" (அங்கதன். 18) எனப் புகழப்படுபவர். "உமிழ் சுடர்க் கலன்கள் நங்கை உருவினை மறைப்பதோரார், அமிழ்தினைச் சுவைசெய்தென்ன அழகினுக்

கழகு செய்தார்'' (கோலங்காண். 3) என்ற வரிகள் இங்கு நினைவு கூரத்தகும். ''பண்களாற் கிளவி செய்து'' எனத் தொடங்கும் செய்யுட்கண், ''பெண்களானூர்க்குள் நல்ல உறுப்பெலாம் பெருக்கி ஈட்டி, எண்களால் அளவாமானக் குணம் தொகுத்தியற் றினளை'' (மாயா சனகப். 7) என்று பிராட்டியின் பேரழகைப் புகழ்ந்தமை காண்க. மற்றும் ''இருதிறத்தார்க்கும் செய்த வரம்பிவரிருவர்'' என்று சூர்ப்பணகையும் (சூர்ப்ப. 61); ''தெரிவைமார்க்கொரு கட்டளையெனச் செய்த திருவே'' (சித்திர. 34) என்று இராமனும் பிராட்டியைப் புகழ்ந்தமையும் காண்க. (20)

### சீதையின் தோற்றம்

**1222.** சங்கங்கை யுடைமை யாலுந்
தாமரைக் கோயி லாலும்
எங்கெங்கும் பரந்து வெவ்வே
றுள்ளத்தி னெழுதிற் றென்ன
அங்கங்கே தோன்ற லாலு
மருந்ததி யனைய கற்பின்
நங்கையு நம்பி யொத்தா
ளுமினிப் புகல்வ தென்னே.

சங்கு அம் கை உடைமையாலும், தாமரைக் கோயிலாலும்,
எங்கு எங்கும் பரந்து வெவ்வேறு உள்ளத்தின் எழுதிற்று என்ன,
அங்கு அங்கே தோன்றலாலும், அருந்ததி அனைய கற்பின்
நங்கையும் நம்பி ஒத்தாள்; நாம் இனிப் புகல்வது என்னே ?

பொ :—(ஐம்படையுள் ஒன்றான) வளையைக் கையில் உடையனா யிருத்தலானும் (சங்கினால் இயன்ற வளையல்களை அழகிய கையில் தரித்திருத்தலானும்) நினைவாரது உள்ளக் கமலமாகிய ஆலயத் தைத் தனக்கு வாழுமிடமாகக் கொண்டிருத்தலானும் (ஐம்பூதங் கள் முதலான காட்சிப் பொருள்கள், அணு பரமாணு முதலிய கருத்துப் பொருள்கள், நிலைத்திணைப் பொருள், இயங்கு திணைப் பொருள் என்ற) எல்லாவற்றினும் எல்லா இடங்களினும் (அங்கு இங்கு எனாதபடி) நிறைந்து தனித்தனி உள்ளங்களில் எழுதியது போன்று அந்த அந்த இடங்களில் காணப்படுதலானும், அருந் ததியை ஒத்த கற்புவாய்ந்த பெண்ணின் நல்லாளாகிய பிராட்டி யும் ஆடவர் திலகனாகிய இராமனை ஒத்து விளங்கினாள். இனி (இதனினும் வேறாகப் பிராட்டிக்கு) நாம் கூறக்கூடிய (உவ மானம்) யாது ?

கு:—சங்கு - சங்காற்செய்த கைவளைக்கு ஆகுபெயர். இது சிலேடைபற்றி வந்த உவமையணி. இறைவன் எல்லோருளத்திலும் இருந்து உயிர்கட்கு அருள்புரிவோன் என்பது, "பூதங்கள் தொறு முறைந்தால் அவையுன்னைப் பொறுக்குமோ" (விராதன் வதை. 48) "காண்பார்க்கும் காணப் படுபொருட்கும் கண்ணாகிப் பூண்பாய்போல் நிற்றி" (கவந்தப். 44) என்ற வரிகள் கொண்டு உணர்க. சங்குவளையணிந்த கை, தாமரைமலரிருப்பு, தனது பேரெழிலாலும் அருட்டிறத்தாலும் எல்லோருடைய உள்ளத்தும் வீற்றிருத்தல் என்பன பிராட்டிக்கும், பாஞ்சசன்னியம் என்ற சங்கத்தைத் தாங்கி நிற்றல், அன்பருடைய உள்ளத்தாமரையில் வீற்றிருத்தல் எங்கும் நிறைந்து நிற்றல் என்பன இராமனுக்கும் ஏற்பக் கொள்க. மகளிர் குழுவில் சீதைக்கு ஒப்பாவாரின்மையின் உவமை நீங்கிய தோன்றலாகிய இராமனையே உவமையாக்கினர். (21)

### தோழிமார் சீதையைச் சூழ்தல்

1223. பரந்தமே கலையுங் கோத்த
பாதசா லகமு நாகச்
சிரஞ்செய்நூ புரமும் வண்டுஞ்
சிலம்பொடு சிலம்பி யார்ப்பப்
புரந்தரன் கோற்கீ ழானோ
ரரம்பையர் புடைசூழ்ந் தென்ன
வரம்பறு சும்மைத் தீஞ்சொன்
மடந்தையர் தொடர்ந்து சூழ்ந்தார்.

பரந்த மேகலையும், கோத்த
பாதசாலகமும், நாகச்
சிரம் செய் நூபுரமும், வண்டும்,
சிலம்பொடு சிலம்பி ஆர்ப்பப்,
புரந்தரன் கோல் கீழ் ஆனோர்,
அரம்பையர் புடைசூழ்ந்து என்ன,
வரம்பு அறு சும்மைத் தீம் சொல்
மடந்தையர் தொடர்ந்து சூழ்ந்தார்.

பொ:—இந்திரனது ஆட்சியின்கீழ் உள்ளவராகிய அரம்பையர்கள் புறத்திற் சூழ்ந்து வந்தாற்போல், (அல்குலின் மேற்புறத்தில்) பரவிய மேகலையும், (மணிகள்) கோத்த பாதசரம் என்னும்

காலணியும், பாம்பின் தலைபோன்று செய்யப்பட்ட நூபுரம் என்ற அணியும், (குழலில் உள்ள மலர்த் தேனைப் பருகும்) வண்டுகளும் சிலம்பொடு ஒலித்து முழங்க, மெல்லென ஒலிக்கின்ற இனிய சொற்களையுடைய கணக்கற்ற மகளிர் சீதையைச் சூழ்ந்து வந்தனர்.

கு :—நூபுரமும் சிலம்பும் வெவ்வேருகக் கூறலின் முன்னது சிலம்பின் வகை என்று கொள்க. சிலம்பு - ஒலித்தல் காரணமாக வந்த பெயர், இங்கே அப்பெயர்க் காரணம் அறிவிப்பார் போன்று சிலம்பொடு சிலம்பி என்ருர். ''சீறடிய கிண்கிணி சிலம்பொடு சிலம்ப'' என்பது சிந்தாமணி (2019). சும்மை - ஒலி ''இழுமென் சும்மை யிடனுடை வரைப்பின்'' (பொருந. 65). பின்னரும், கம்பர், நூபுரமும் சிலம்பும் வேறுபிரித்துக் கூறுவர். ''நூபுரம் புலம்பிடச் சிலம்பு நொந்தழ'' (இராவணன் வதை. 230) என்றது காண்க. நூபுரம் - பாததண்டை என்ப. (22)

### சீதை நடந்து செல்லுதல்

**1224.** சிந்தொடு குறளுங் கூனுஞ்
சிலதியர் குழாமுந் தெற்றி
வந்தடி வணங்கிச் சுற்ற
மணியணி விதான நீழல்
இந்துவின் கொழுந்து விண்மீ
னினத்தொடும் வருவ தென்ன
நந்தலில் விளக்க மன்ன
நங்கையு நடக்க லுற்ருள்.

சிந்தொடு குறளும் கூனும் சிலதியர் குழாமும் தெற்றி,
வந்து அடி வணங்கிச் சுற்ற, மணி அணி விதான நீழல்,
இந்துவின் கொழுந்து விண்மீன் இனத்தொடும் வருவது என்ன,
நந்தலில் விளக்கம் அன்ன நங்கையும் நடக்கல் உற்ருள்,

பொ :—சிந்தர்களும் குறளர்களும் கூனர்களும் சேடியர்கூட்டமும் நெருங்கி வந்து பணிந்து சூழ, நவமணிகளால் அணிசெயப் பெற்ற மேற்கட்டியின் நீழலிலே, இளமதியம் விண்மீன்களின் தொகுதியுடன் வருவது போன்று அணையாத விளக்கையொத்த (திருமேனி ஒளியையுடைய) மகளிரிற் சிறந்த பிராட்டியும் (மண மண்டபத்தை நோக்கி) நடந்து செல்லத் தொடங்கினுள்.

கு:—பிறை சந்திரன் பிராட்டிக்கும் விண்மீன்கள் தோழிமார் கூட்டத்திற்கும் உவமை. செயற்கை ஒளியால் ஒளிவிடும் விளக்கம் போலாது இயற்கையிலேயே சோதியுடன் விளங்குபவள் ஆதலின் நந்தலில் விளக்கு என்றார். சீலம் இன்னதென் றருந்ததிக் கருளிய கற்பால் ஒளி சிறந்தவளாகலின் நந்தலில் விளக்கம் என்றார் எனினுமாம். 'மனைக்கு விளக்கம் மடவாள்' (நான்மணிக். ) என்றதும் காண்க. "நந்தா விளக்கே நாமிசைப் பாவாய்" என்பது மணிமேகலை (14.18) சிந்தர் – குறுகிய உறுப்பினர். சிந்து - குறள் வடிவத்திற் சற்று உயர்ந்த வடிவம். "குறளாமை விட்டு நடப்பனபோற் சிந்தும்" (சிந்தா. 2798); "தேரை நடப் பனபோற் குறள் சிந்திளுேடு" (சிந்தா. 631). "பூமிதோய்பிடிச் சிந்தரும் போயினார்" (எழுச்சி. 99) என்பன காண்க, இரண்டடி உயரமுள்ளவனைக் குறளன் என்றும் மூன்றடி உயரமுள்ளவனைச் சிந்தன் என்றும் கூறுவது மரபு (தொல். செய். 40. பேரா). (23)

## சீதை நடையின் வருணனை (1225-1228)

1225. வல்லியை யுயிர்த்தநில மங்கையிவள் பாதம்
★ மெல்லிய வுறைக்குமென வஞ்சி வெளியெங்கும்
பல்லவ மலர்த்தொகை பரப்பின ளெனத்தன்
நல்லணி மணிச்சுடர் தவழ்ந்திட நடந்தாள்.

**வல்லியை உயிர்த்த நில மங்கை, இவள் பாதம்**
**மெல்லிய உறைக்கும் என அஞ்சி, வெளி எங்கும்**
**பல்லவம் மலர்த் தொகை பரப்பினள் எனத், தன்**
**நல் அணி மணிச் சுடர் தவழ்ந்திட நடந்தாள்.**

பொ:—(பிராட்டியாகிய) பூங்கொடியைப் பெற்ற பூமகள், (தன் மகளாகிய) இவள் திருவடிகள் மென்மையானவை (நடந் தால் தரை) உறுத்தும் என்று பயந்து வெளியிடம் எங்கும் தளி ரையும் மலர்த்தொகுதியையும் விரித்தனள் என்று சொல்லுமாறு தனது நல்ல அணிகளின் அழகிய ஒளி பூமியிற் படிய நடந்தாள் (சீதை).

கு:—நடந்து செல்லும்போது பிராட்டி அணிந்திருந்த மணிக் கலங்களினின்றும் ஒளி பரவியதைத் தன் மகளின் மெல்லிய அடிகள் வெறுந்தரைமேல் நடந்தால் பூமி உறுத்தும் என்று தாயான நிலமகள் தளிரையும் மலரையும் பரப்பியதுபோலும் என்று கூறினார். பொன்னேர் பூட்டி உழுதபோது உழுகின்ற

கொழுமுகத்தின் ஓர் பெட்டியின்கண்ணின்று எடுக்கப்பட்ட வரலாற்றை யொட்டி "வல்லியையுயிர்த்த நிலமங்கை" என்றார். (24)

**1226.** தொழுந்தகைய மென்னடை
தொலைந்துகளி யன்னம்
எழுந்திடை விழுந்தயர்வ
தென்னவய லெங்கும்
கொழுந்துடைய சாமரை
குலாவவொர் கலாவம்
வழங்கநிழன் மின்னவரு
மஞ்ஞையென வந்தாள்.

தொழும் தகைய மெல் நடை தொலைந்து களி அன்னம்,
எழுந்து இடை விழுந்து அயர்வது என்ன, அயல் எங்கும்
கொழுந்து உடைய சாமரை குலாவ, ஓர் கலாபம்
வழங்க நிழல், மின்ன வரும் மஞ்ஞை என வந்தாள்.

பொ :—(தன்னுடன் நடை பயிலக் கருதி வந்த) களிப்புமிக்க அன்னம் (யாவராலும்) வணங்கத்தக்க (தனது) மெல்லிய நடைக்குத் தோற்று, இடையிடையே விழுந்து (மீட்டும்) எழுந்து தளர்வது போன்று, முதிராத இள ஒளியையுடைய வெண் சாமரை (தன் இருபுறங்களிலும்) விளங்க, ஒப்பற்ற தோகை ஒளிதர விளக்கம் உண்டாகும்படி நடந்து வரும் மயில் என்று சொல்லும்படி (சீதை) வந்தாள்.

கு :—சீதையின் நடைக்குத் தோற்ற அன்னங்கள் ஓட எழுந்து, அச்சத்தால் ஓட இயலாது அடிக்கடி விழுந்தும் எழுந்தும் அயர் வது போன்றிருந்தது இரட்டப்பட்ட வெண்கவரிகள் என்பது கருத்து. தோகை ஒளிர மயில் வருவது போன்று பிராட்டி வந்தாள் என்க. (25)

**1227.** மண்முத லனைத்துலகின்
மங்கையரு ளெல்லாம்
கண்மணி யெனத்தகைய
கன்னியெழில் காண

அண்ணன்மர பிற்சுட
ரருத்தியொடு தானவ்
விண்ணிழிவ தொப்பதொர்
விதானநிழல் வந்தாள்.

மண் முதல் அனைத்து உலகின் மங்கையருள் எல்லாம்,
கண்மணி எனத் தகைய கன்னி எழில் காண,
அண்ணல் மரபில் சுடர் அருத்தியொடு, தான் அவ்
விண் இழிவது ஒப்பது ஒர் விதான நிழல் வந்தாள்.

பொ :—பூவுலகம் முதலான எல்லா உலகங்களிலும் (உள்ள) மகளிர் எல்லோருள்ளும் கண்ணில் உள்ள கருமணி போன்றவள் என எடுத்துக் கூறும் தகுதிவாய்ந்த கன்னியாகிய சீதையின் பேரழகை (நேரிற்) காண்டற்பொருட்டு (அவள் மணாளனாகிய) இராமபிரான் மரபின் முதல்வனான சூரியன் பெருங்காதலோடு (தான் சரிக்கும்) அந்த ஆகாயத்தினின்று இறங்கி வருவதை ஒத்த தன்மையுள்ளதான ஒரு மேற்கட்டியின் நிழலிலே (சீதை) வந்தாள்.

கு :—முன்னர்ப் பெண்ணரசி என்றும் மங்கையர் திலகம் என்றும் கூறியதற்கேற்ப இங்கும் மங்கையர் கண்மணி எனப் புகழ்ந்தார். விதானத்தின் ஒளி மிகுதியை உவமையான் விளக்கினார். (26)

1228. கற்றைவிரி பொற்கடை
மயிர்த்துறு கலாபம்
சுற்றுமணி புக்கவிழை
மிக்கிடை துவன்றி
விற்றவழ வாணிமிர
மெய்யணிகண் மின்னச்
சிற்றிடை நுடங்க வொளிர்
சீறடி பெயர்த்தாள்.

கற்றை விரி பொன் கடை மயிர்த் துறு கலாபம்
சுற்றும் மணி புக்க இழை, மிக்கு இடை துவன்றி,
வில் தவழ, வாள் நிமிர, மெய் அணிகள் மின்னச்,
சிற்றிடை நுடங்க, ஒளிர் சீறடி பெயர்த்தாள்.

பொ:—தொகுதியாகப் பரந்த (தோகையினது) பொன்னிறம் வாய்ந்த கடைமயிர் செறிந்த இருபத்தொரு வடமாகிய கலாபமும் அதன்மீது சூழ அணிந்த மணிகள் அமைந்த (தாரகைச் சும்மை என்னும்) அணியும் இடைக்கண் மிக்கு நிறைவதனுல் (அவ்வணிகள்) விட்டு விட்டு ஒளி செய்யவும், தொடர்ந்து ஒளி நிறைந்து விளங்கவும் உடலின் அணிந்திருந்த அணிகள் ஒளிரவும் சிறிய இடை அசைய ஒளி வீசுகின்ற சிறிய அடியை எடுத்து வைத்து நடந்தாள்.

கு :—அரசிளங்குமரியாகலின் அவட்குக் காவலாக வில்லும் வாளும் போந்தன எனத் தொனிக் குறிப்பும் காணலாம். வில், வாள் மின் முதலிய ஒளியென்று பொருள்படும் பல சொற்களை அடுத்தடுத்துக் கூறுவது கொண்டு பிராட்டி உலகச் சோதியாக விளங்கினுள் என உணரலாம். (27)

## சீதை மண்டபத்தை அடைதல்

1229. பொன்னினொளி பூவின்வெறி
சாந்துபொதி சீதம்
மின்னினிழ லன்னவடன்
மேனியொளி மான
அன்னமு மரம்பையரு
மாரமிழ்து நாண
மன்னவை யிருந்தமணி
மண்டப மடைந்தாள்.

பொன்னின் ஒளி, பூவின் வெறி, சாந்து பொதி சீதம்,
மின்னின் நிழல் அன்னவள் தன் மேனி ஒளி மான,
அன்னமும் அரம்பையரும் ஆர் அமிழ்தும் நாண,
மன் அவை இருந்த மணி மண்டபம் அடைந்தாள்.

பொ :—பிராட்டி, தனது திருமேனியின் இயற்கை அழகைப் பொன்னின்கணுள்ள ஒளியும் பூவின் கண் உள்ள மணமும் மின்னலின் கண் உள்ள பளபளப்பும் சந்தனத்தின் கண் உள்ள குளிர்ச்சியும் ஒத்திருக்கவும், (நடை கண்டு) அன்னமும், (அழகால்) அரம்பையரும் (சுவையானும் உறுதி பயத்தலானும் சிறந்த) அமுதமும் நாணவும், அரசரது பேரவை கூடியிருந்த மணிகள் இழைத்து அமைக்கப்பெற்ற மண்டபத்தை அடைந்தாள்.

கு :—பொன்னின் திருவுரு என்றதற்கேற்பப் பொன்னின் ஒளியும், உத்தம வனிதையர்க்குள்ள இயல்பான நறுமணமும், சந்தனத்துக்குள்ள தண்மையும், மின்னலினது பளபளப்பும் பிராட்டி இயற்கையிலேயே பெற்று விளங்கினள் என்பது கருத்து. (28)

### சீதையின் எழிலை யாவரும் காணுதல்

**1230.** சமைத்தவரை யின்மைமறை
தானுமென லாமச்
சுமைத்திரண் முலைத்தெரிவை
தூய்வடிவு கண்டார்
அமைத்திரள்கொ டோளியரு
மாடவரு மெல்லாம்
இமைத்தில ருயிர்த்திலர்கள்
சித்திர மெனத்தாம்.

சமைத்தவரை இன்மை மறை தானும் எனலாம் அச்
சுமைத் திரள் முலைத் தெரிவை தூய் வடிவு கண்டார்,
அமைத் திரள் கொள் தோளியரும், ஆடவரும், எல்லாம்
இமைத்திலர் உயிர்த்திலர்கள் சித்திரம் எனத் தாம்.

பொ:—தன்னைப் படைத்தவர் எவரையும் இன்மையால் நான் மறையே எனக் கூறலாம் தன்மை வாய்ந்த அழகிய தனபாரத்தை யுடைய பிராட்டியினது தூய வடிவைக் கண்டவர்களாகிய திரண்ட வேய் போன்ற தோளினையுடைய மகளிரும் ஆடவரும் ஆன எல்லோரும் சித்திரங்கள் போலக் கண்கள் இமைத்திலர் மூச்சும் விட்டிலர்.

கு :—பிராட்டி வினைவயப்பட்டு ஓர் தாய் வயிற்றிற், பிறவாது தானே தன் இச்சைப்படி தோற்றியவர் ஆதலின் ஒருவராற் செய் யப்படாது தானே தோன்றிய மறைபோலும் என்றார். மறைகள் இறைவனாற் செய்யப்பட்டன என்றும், தாமே தோன்றின என்றும் இரு கொள்கைகள் உண்டு. திருவள்ளுவ மாலையில் வேதத்தைச் செய்யா மொழி என்று ஓர் புலவர் குறித்தார். (29)

## சீதையைக் கண்ட இராமனது மகிழ்ச்சி

1231. அன்னவளை யல்லளென
வாமென வயிர்ப்பான்
கன்னியமிழ் தத்தையெதிர்
கண்டகடல் வண்ணன்
உன்னுயிர் நிலைப்பதொ
ரருத்தியொ டுழைத்தாண்
டின்னமிழ் தெழக்களிகொ
ளிந்திரனை யொத்தான்.

**அன்னவளை, அல்லள் என, ஆம் என அயிர்ப்பான்,**
**கன்னி அமிழ்தத்தை எதிர் கண்ட கடல் வண்ணன்**
**உன் உயிர் நிலைப்பது ஓர் அருத்தியொடு, உழைத்து ஆண்டு,**
**இன் அமிழ்து எழக் களிகொள் இந்திரனை ஒத்தான்.**

பொ:—அமிழ்த மயமான கன்னியாகிய பிராட்டியை நேரிற் பார்த்த கடல் நிறம் கொண்ட இராமபிரான், அவளைத் தான் முன்னர்க் கன்னிமாடத்திற் கண்ட அப்பேரழகிதானோ அல்லளோ என ஐயங் கொண்டவனாய், (அகத்ததோ புறத்ததோ எனக்) கருதப்படும் உயிர் நிலைபெறுவதாகிய ஒப்பற்ற காதலுடன் (பாற் கடல் கடையும் முயற்சியிலே) வருந்தி அவ்விடத்திருந்து இனிய அமுதம் தோன்றியபோது மகிழ்ச்சிகொண்ட இந்திரனை ஒத்து விளங்கினன் (இராமன்).

கு:—இராமன் ஐயுற்ற வண்ணமே பிராட்டியும் ஐயுற்ற செய்தி, ''வெள்ளத்தின் சடிலத்தான்றன்'' எனத் தொடங்கும் செய்யுளில், ''தனிப் பெரும் பெண்மை தன்னை, அள்ளிக் கொண்டகன்ற காளை யல்லன்கொல் ஆம் கொல் என்பாள்.'' என்ற பகுதி கொண்டு காணலாம். உன்னு உயிர் எனப் பிரித்துத் தன் உடலை விட்டு மேனோக்கி எழுகின்ற உயிர் அவ்வாறு எழாமல் உடற் கண்ணே நிலைபெற்றிருக்கவேண்டும் என்னும் விருப்பொடும் என்றும் பொருள் கூறலாம். உன்னுதல் – உயர்தல்; ''சங்குத் தமர்க்கென்று உன்னித் தெழுந்தவென் தடமுலைகள்'' (நாச்சியார். 1, 5). சீதைக்கு அமிர்தம், யாவராலும் விரும்பப்படுதலாலும் பாற் கடலிற்றோன்றியதாலும், இன்பம் விளைத்தலாலும், மரணத் தைப் போக்கி நிலைபேறான வாழ்வை யளித்தலாலும் உவமை என்க. (30)

## சீதையைக் கண்ட இராமன் வியப்பு

1232. நறத்துறை முதிர்ச்சியுறு நல்லமிழ்து பில்குற்
றறத்தின்விளை வொத்துமுக டுந்தியரு குய்க்கும்
நிறத்துவ ரிதழ்க்குயி னினைப்பினிடை யல்லால்
புறத்துமுள தோவென மனத்தொடு புகன்றான்.

நறத் துறை முதிர்ச்சி உறு நல் அமிழ்து பில்குற்று,
அறத்தின் விளைவு ஒத்து, முகடு உந்தி, அருரு உய்க்கும்,
நிறத் துவர் இதழ்க் குயில், நினைப்பின் இடை அல்லால்,
புறத்தும் உளதோ? என மனத்தொடு புகன்றான்.

பொ:—தேனிடத்தே வதிகின்ற முற்றிய (சுவையாற்) சிறந்த அமுதத்தைச் சிந்தி, (புரிந்த) புண்ணியச் செயல்களான் நிகழ்ந்த பயனை ஒத்து, (அக்கன்னிமாடத்தின்) மேலிருந்து கொணர்ந்து அண்மையில் இருத்தப்பெற்ற செந்நிறம் வாய்ந்த வாயிதழை யுடைய குரலால் இனிய குயில் போன்ற மங்கை எனது எண்ணத்திடை மட்டுமல்லாது வெளியிலும் இருக்கின்றாளோ? எனத் தன் நெஞ்சொடு கிளந்தான்.

கு:—சிறந்த அறத்தின் பயனாகவன்றி, சீதை போன்ற அரிய பொருள் எய்தல் அரிது என நினைந்தான் இராமன். நறவு என்பது அத்துச்சாரியை பெற்று நறத்து என நின்றது. விடாது ஒரு பொருளை நினைப்பவர்முன்பு நினைத்த பொருள் தோன்றுவது உலகியற்கை. அந்த நினைவில் இருந்த அந்த உருவமே அவ்வாறு முன் போந்ததோ என்ன உன்னினான். "நோக்குவ வெல்லா மவளே போறல்" என்ற மெய்ப்பாடு இங்கே காணலாம். துவர் இதழ் - பவளம் போன்ற இதழுமாம். பில்குதல் - சிந்துதல். "பில்கித்தேனொழுகும்" (சிந்தா 2186). ஒத்த அன்புள்ள தலைவன் தலைவியர் கூட்டம் அறத்தின் விளைவே என்பதைச் "சொற்பாலமுதிவள் யான் சுவை யென்னத் துணிந்திங்ஙனே நற்பால் வினைத் தெய்வம் தந்தின்று" (8) என்ற திருக்கோவைச் செய்யுள் கொண்டு உணரலாம். (31)

## வசிட்டன் மகிழ்ச்சி

1233. எங்கள்செய் தவத்தினி லிராமனென வந்தான்
சங்கிநெடு சக்கர முடைத்தனி முதற்பேர்
அங்கணர சாதலினவ் வல்லிமலர் புல்லும்
மங்கையிவ ளாமென வசிட்டன்மகிழ் வுற்றான்.

'எங்கள் செய் தவத்தினில் இராமன் என வந்தான்,
சங்கினெடு சக்கரம் உடைத் தனி முதல் பேர்,
அங்கண் அரசு ஆதலின், அவ் அல்லி மலர் புல்லும்
மங்கை இவள் ஆம்' என வசிட்டன் மகிழ்வு உற்ருன்.

பொ :—(சீதையைக் கண்ணுற்ற) வசிட்ட முனிவன் "யானும் என் போன்ற முனிவரரும் புரிந்த தவத்தின் விளைவாக இராம பிரானுகத் தோற்றம் செய்தவன், சங்கினையும் ஆழிப்படையையும் கைகளிற்ருங்கிய ஒப்பற்ற முதற் கடவுளாகிய பெரிய அழகிய கண்களையுடைய (எல்லோர்க்கும்) இறைவனுன திருமாலே யாதலின், இந்த மங்கையும் அழகிய அகவிதழையுடைய தாமரை மலரிற் பொருந்தியுள்ள திருமகளே யாவள்" என வசிட்ட முனிவன் மகிழ்ச்சியை அடைந்தான்.

கு :—அகத்தியப் படலத்தில் முனிவரர் இராமபிரானைச் சரணம் அடைந்ததும் இராமன் அவர்கட்கு அபயம் அளித்ததும் விரிவாகக் காணலாம். அங்கே "தகவில் துன்பம் தவிருதிர் நீர்" (17) என்று இராமன் முனிவரைத் தேற்றியுள்ளமை காண்க. அது பற்றியே, "எங்கள் செய்தவத்தினில்" எனக் கூறினர். இராமனைத் திருமாலாகவும் சீதையைத் திருமகளாகவும் கம்பர் கூறியிருப்பதைக் குறித்து எதிர்கொள் படலத்து முகவுரையிலும் பிற இடங்களிலும் குறிக்கப் பெற்றுள்ளது. முழுமுதலான திருமாலே இராமனுகவும் அயோத்தி அரசாகவும் வந்தனன் என்று வசிட்டன் கருதினன் என்க. (32)

## தயரதன் மகிழ்ச்சி

**1234.** துன்றுபுரி கோதையெழில் கண்டுலகு சூழ்வந்
தொன்றுபுரி கோலொடு தனித்திகிரி யுய்ப்பான்
என்றுமுல கேழுமர செய்தியுள னேனும்
இன்றுதிரு வெய்தியது தெனக்கென நினைத்தான்.

துன்று புரி கோதை எழில் கண்டு, உலகு சூழ் வந்து
ஒன்று புரி கோலொடு தனித் திகிரி உய்ப்பான்,
'என்றும் உலகு ஏழும் அரசு, எய்தி உளன் ஏனும்,
இன்று திரு எய்தியது எனக்கு' என நினைத்தான்.

பொ :—உலகைச் சுற்றி வந்து (எல்லோரிடத்தும்) ஒரு தன்மை யாகப் பொருந்திய செங்கோலுடன் ஒப்பற்ற ஆணை ஆழியைச்

செலுத்தும் தயரதன், அடர்ந்த நெறித்த கூந்தலையுடைய சீதை யின் அழகைக் கண்டு, 'எக்காலத்தும் எப்பொழுதும் ஏழுல கரசாட்சியும் யான் பெற்றுள்ளேன் எனினும், இன்றுதான் என்வயமாகச் செல்வத் திருமகள் வந்தடைந்தாள்' என்று எண்ணினான்.

கு :—பேரரசனாக உலகம் முழுவதும் ஆண்டுவந்தாலும் எல் லாச் சிறந்த இலக்கணங்களையும் ஒருங்கே பெற்றுள்ள இம் மங்கையை அடைந்த பிறகே செல்வமனைத்தும் தன் கைவரப் பெற்றதாக எண்ணி மகிழ்ந்தான் தயரதன். (33)

## இராமன் முதலிய சிலர் தவிர ஏனையோர் சீதையை வணங்குதல்

**1235.** நைவள நவிற்றுமொழி நண்ணவர லோடும்
வையநுகர் கொற்றவனு மாதவரு மல்லார்
கைகடலை புக்கன கருத்துளது மெல்லாம்
தெய்வமென லுற்றவுடல் சிந்தைவச மன்றோ.

நைவளம் நவிற்றும் மொழி நண்ண வரலோடும்,
வையம் நுகர் கொற்றவனும் மாதவரும் அல்லார்,
கைகள் தலை புக்கன, கருத்து உளதும் எல்லாம்
தெய்வம் எனல் உற்ற, உடல் சிந்தை வசம் அன்றோ?

பொ :—நட்டபாடை என்ற குறிஞ்சிப் பண் போன்று பேசுகின்ற இனிய சொற்களையுடைய சீதை அருகில் வர, ஊழிக் காலத்தில் உலகனைத்தையும் உண்ட வெற்றிவீரனாகிய இராம னும் (விசுவாமித்திரர் சதாநந்தர் முதலிய) தவ முனிவர்களு மல்லாத பிறர் கைகள் தாமே தலைகள்மீது குவிந்தன. (ஏனெனில்) எல்லோருடைய மனமும், புத்தி சித்தம் முதலிய உட்கருவிகளும் பிராட்டியைத் தெய்வம் என்றே நினைந்தன. உடலானது மனத்தின் வயப்பட்டதே யன்றோ?

கு :—சீதை வணங்குதற்குரியவர் தவிர ஏனையோர் சீதையை வணங்கினர் என்பது கருத்து. மனமின்றிச் சடமான உடலுக்கு இயக்கமில்லை. எனவே மனம் தெய்வம் என்று உன்னிய அளவில், அவர்களது கைகளும் குவிந்தன என்று உள நூற்கருத்தைஅழகு பெறக் கூறினர். (34)

### சீதை தன் தந்தையருகில் அமர்தல்

**1236.** மாதவனை முற்கொள வணங்கிநெடு மன்னன்
பாதமல ரைத்தொழுது கண்கள்பனி சோரும்
தாதையரு கிட்டதவி சிற்றனி யிருந்தாள்
போதினை வெறுத்தரசர் பொன்மனை புகுந்தாள்.

மாதவனை முன் கொள வணங்கி, நெடு மன்னன்
பாத மலரைத் தொழுது, கண்கள் பனி சோரும்
தாதை அருகு இட்ட தவிசில் தனி இருந்தாள்,
போதினை வெறுத்து அரசர் பொன்மனை புகுந்தாள்.

பொ :—(தனது இருக்கையாகிய) செந்தாமரைமலரை வெறுத்துச் சனக மன்னனது அழகிய (பொன்னுனியன்ற) அரண்மனையிற் புகுந்த சீதை, பெருந்தவத்தையுடைய வசிட்டனை முதற்கண் வணங்கி, யாவரினும் சிறந்த அரசனுகிய தயரதனது திருவடித் தாமரைகளைத் தொழுது, கண்களில் ஆனந்தக் கண்ணீர் வீழ்த்துகின்ற தந்தையாகிய சனகனுக்கு அருகில் இடப்பட்ட ஆதனத்தில் வீற்றிருந்தாள்.

கு :—தகுதியை ஒட்டி முனிவரனை முன்பும், அரசர்களை யடுத்தும் வணங்கினள் என்க. திருமகளே பிராட்டியாகப் போந்தாள் என்று கம்பர் பல இடங்களிலும் கூறுவர் என்பது முன்னரே பல மேற்கோள்களால் விளக்கப்பட்டது, இச்செய்யுளிலும் திருமகளே சனகன் புதல்வியாகத் தோன்றினள்என்று கூறப்பட்டது. இனி இறுதியடிக்குத் திருமாலான தன் கணவனைப் பிரிந்து கழிக்கும் பொழுதினை வீண் போதாகும் என்று கருதிச் சனகனிடம் தோன்றினுள் என்று உரைகூறலுமாம். கணவனைப் பிரிந்து நின்ற கற்புடை மகளிர்க்கு ஒரு நாள் எழு நாள் போற் செல்லும். (குறள். 1269). மேலும், "யாமத் தெல்லை ஓர் யாண்டொத் திறந்ததே" என்று கூறுவது கொண்டும் இவ்வுண்மை உணரலாம். மற்றும் "துறந்து போமெனச் சொற்றசொற் றேறுமோ, அறந்திறம்புமென் றையன் அயோத்தியிற், பிறந்த பின்பும் பிரிவிலளாயினுள்" (நகர்நீங்கு. 223) என்ற செய்யுளும் இங்கே கருதத்தகும். இராமன் தனது பரத்துவ நிலையை மறந்து மனிதனுக நடித்ததுபோன்று, பிராட்டியும் மானுட மகள் வடிவு கொண்டனள் ஆதலின், அரச கன்னிகைக்கேற்ப முனிவரையும் பிறரையும் வணங்கினள். சனகனது மனை அவட்குத் தாமரையை விட இனிதாக இருந்தது பற்றிப் போதினை அடைமொழி கொடாது கூறிச் சனகனது மனையைப் பொன்மனை யென்றுர்.

பொன் என்பது திருமகட்குப் பெயர் ஆதலின் இங்குப் பொன்னுக்குரிய மனை என்ற பொருளும் கூறலாம். கருவயின் இருத்தல் பெருந்துன்பம் எனப்படினும், கோசலை வயிறு இராமற்கு மிகவும் இன்பம் விளைத்தது பற்றி அவள் வயிற்றில் பன்னிரண்டு திங்கள் தங்கியதாக முதனூல் கூறும். (35)

## சீதையைக் கண்ணுற்ற கோசிகனது வியப்பு

**1237.** அச்சென நினைத்தமுத லந்தண னினைந்தான்
பச்சைமலை யொத்தபடி வத்தட லிராமன்
நச்சுடை வடிக்கண்மலர் நங்கையிவ ளென்றால்
இச்சிலை கிடக்கமலை யேழையு மிறானே.

அச்சு என நினைத்த முதல் அந்தணன் நினைந்தான்,
'பச்சை மலை ஒத்த படிவத்து அடல் இராமன்,
நச்சு உடை வடிக் கண் மலர் நங்கை இவள் என்றால்,
இச் சிலை கிடக்க, மலை ஏழையும் இறானோ!'

பொ:—உலகத்தார் மாதிரிப்படி என்று கருதும் சிறப்பையுடைய அந்தணனை கோசிகன் (வில்லை முறித்தற்குப் பரிசாகிய) இப்பெண் தன்னிடம் நஞ்சினையுடைய மாவடுவின் பிளவு போன்ற கண்களையுடைய மலரின் வீற்றிருக்கும் திருமகளே என்று அறிந்திடின் (இவள்மீது எழும் காதற்பெருக்கால்) பசிய நிறத்தையுடைய மலை போன்ற வடிவத்தையுடைய வன்மை வாய்ந்த இராமன் இந்த (மேருமலையாகிய) வில் ஒன்று தானோ முறிப்பான் ஏழு மலைகளையும் முறிக்க மாட்டானோ? என்று நினைந்தான்.

கு:—அரசர் மரபிற் பிறந்தும் தனது அளவு கடந்த தவச் சிறப்பால் பிரம இருடி என்னும் பட்டம் பெற்றவன் ஆகலின் உலகத்தார்க்கு எடுத்துக் காட்டாகக் கூடிய அச்சு என்றார். இனி இச் சீதையை மகளிர்க்கெல்லாம் மாதிரிப்படி யெனக் கருதிய அந்தணாளனை விசுவாமித்திரன் என்றும் கூறலாம். "இருதிறத்தார்க்கும் செய்த வரம்பிவர் இருவர்" (சூர்ப்ப. 61) என்று சூர்ப்பணகை கூறியது காண்க. "மலர் புல்லும் மங்கையிவள்" என வசிட்டனும், இன்று திருவெய்தியது எனக்கு எனத் தயரதனும், "மலர் நங்கையிவள்" எனக் கோசிகனும் ஆக மூவரும் பிராட்டியைத் திருமகளாகவே கருதினர் என்று கம்பர் கூறிப் போந்தனர். "தெரிவை மார்க்கொரு கட்டளை யெனச் செய்த திருவே" என்று இராமபிரானே பிராட்டியைப் புகழ்ந்

ததும் காண்க. பச்சை மலை – இராமனது பரந்த திண்ணிய நீல மேனிக்கு உவமை. ''பச்சை மாமலை போல்மேனி'' என்று திருமாலைத் தொண்டரடிப்பொடியார் புகழ்ந்தது காண்க. மேனி வனப்பு மட்டுமன்று வீரமும் உண்டென்பார் 'படிவத்தடல் இராமன்' என்றார். மகளிர் விழிகளில் நஞ்சும் அமுதமும் உண்டென்பர் கவிஞர். ''இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு, நோய் நோக்கு ஒன் றந் நோய் மருந்து'' (திருக்குறள். 1091) என்றது காண்க. சிலை என்பது வில், மலை என்ற இரு பொருளில் வந்தது. (36)

## சீதை இராமனைக் காணுதல்

1238. எய்யவில் வளைத்தது மிறுத்தது முரைத்தும்
மெய்விளை விடத்துமுத லையம்விட லுற்றாள்
ஐயனை யகத்துவடி வேயல புறத்தும்
கைவளை திருத்துபு கடைக்கணி னுணர்ந்தாள்.

எய்ய வில் வளைத்ததும் இறுத்ததும் உரைத்தும்,
மெய் விளைவு இடத்து முதல் ஐயம் விடல் உற்றாள்,
ஐயனை அகத்து வடிவே அல புறத்தும்
கைவளை திருத்துபு கடைக்கணின் உணர்ந்தாள்.

பொ :—எய்யும்பொருட்டு (இராமன்) வில்லை வளைத்ததையும் ஒடித்ததையும் பலர் கூறக் கேட்டதாலும், (கன்னிமாடத்தில் தன்னைக் கண்டவன்) உண்மை வெளிப்பட்டபோது முன் தான் கொண்டிருந்த ஐயம் நீங்கப்பெற்றவளாகி, இராமபிரானைத் தன் உள்ளத்திற் கருதிய வடிவாலே யன்றிப் புறத்தும் கைவளையைத் திருத்தும்போதே கடைக்கண்ணாற் கண்டு கொண்டாள். (37)

## சீதையின் மகிழ்ச்சி (1239-1240)

1239. கருங்கடை நெடுங்கணொளி
யாறுநிறை கண்ணப்
பெருங்கடலின் மண்டவுயிர்
பெற்றினி துயிர்க்கும்

அருங்கல னணங்கரசி
யாரமிழ் தனைத்தும்
ஒருங்குட னருந்தினரை
யொத்துட றடித்தாள்.

கரும் கடை நெடும் கண் ஒளி ஆறு, நிறை கண்ணப்
பெரும் கடலின் மண்ட, உயிர் பெற்று இனிது உயிர்க்கும்
அரும் கலன் அணங்கு அரசி, ஆர் அமிழ்து அனைத்தும்
ஒருங்கு உடன் அருந்தினரை ஒத்து உடல் தடித்தாள்.

பொ :—தனது நீண்ட கரிய கண்ணினது கடையொளியாகிய ஆறு (அழகாகிய நீர்) நிரம்பிய (யாவர்க்கும் கண்ணன் எனப் பட்ட) இராமனாகிய அகன்று ஆழ்ந்த அக்கடலில் மிக்குச் சென்று பாய்வதனால் முன்னர் ஊசலாடிய உயிர் நிலைக்கப்பெற்று (மகிழ் வால்) இனிதாக மூச்செறியும், உயர்ந்த அணிகலம் புனைந்த தெய்வ மங்கையர்க்கெல்லாம் அரசியானவள் (பெறுதற்கு) அரிய அமுதம் முழுவதையும் பிறரோடு பங்குகோடலின்றி உண்டவரை ஒத்து உடல் பூரித்தாள். (38)

1240. கணங்குழை கருத்தினுறை
கள்வனெனல் ஆனான்
வணங்குவி லிறுத்தவ
னெனத்துயர் மறந்தாள்
அணங்குறு மவிஞ்சைகெட
விஞ்சையி னகம்பா
டுணர்ந்தறிவு முற்றுபய
னுற்றவரை யொத்தாள்.

கணம் குழை கருத்தின் உறை கள்வன் எனல் ஆனான்
வணங்கு வில் இறுத்தவன் எனத் துயர் மறந்தாள்.
அணங்கு உறும் அவிஞ்சை கெட, விஞ்சையின் அகம்பாடு
உணர்ந்து, அறிவு முற்று பயன் உற்றவரை ஒத்தாள்.

பொ :—திரண்ட குழையிணையுடைய (சீதை) தனது நினைவில் தங்கிய கள்வன் என்று கூறப்பட்டவன் வளைந்த வில்லை ஒடித்த வனே என (ஐயம் நீங்கித் துணிந்து) துன்பத்தை மறந்தவளாய்ப் பிறவித் துயர் உறுதற்குக் காரணமான அவித்தை என்ற அஞ் ஞானம் நீங்க, விச்சை என்கின்ற தத்துவ உணர்வால் உள்ளத்

தின் கண் உள்ள பரம்பொருளின் தன்மையை அறிந்து, அவ்வறிவு முதிர்ந்ததனுல் ஆகிய பயனுன முத்தியுலகில் நிலைபெற்று ஆனந்த மடைந்தவரை ஒத்தாள்.

கு:—தன்னை யறிந்து தலைவனை யறிய உதவும் தத்துவ உணர்ச்சி வரப்பெற்றவர் பிறவித் துன்பம் நீங்கிக் கடவுளை நினைந்து அமர்வதாகிய பேரின்பத்தில் ஆழ்ந்திருப்பர்; ஆகலின், அவரை ஐயவுணர்வு நீங்கப்பெற்று இராமனை உளத்திற்கொண்டு மகிழ்ச்சியுற்ற பிராட்டிக்கு உவமை கூறினர். கள்வன் - 'உள்ளங் கவர் கள்வன்' (தேவாரம். 1-1.) என்ருற் போலக் கொள்க. அணங்கு உறும் அவிஞ்சை என்பதற்குத் துன்புறுத்துகின்ற அவித்தை என்றுமாம். அகம்பாடு - மனத்திற் படிந்த வடிவம். படு முதனிலை திரிந்து பட்ட வடிவத்தைக் குறித்து நின்றது. அகம்பாடு என்பதற்குத் தானே பிரமமெனத் தெளிதல் எனினுமாம். முன்னர் மிதிலைக் காட்சியில், "நெருக்கியுட் புகுந்தரு நிறையும், பெண்மையும், உருக்கி யென்னுயிரொடு முண்டு போனவன்" (54) என்றும், 'பெண் வழி நலனொடும் பிறந்த நாணொடும், எண்வழி யுணர்வு நான் எங்கும் காண்கிலேன், மண் வழி நடந்தடி வருந்தப் போனவன், கண்வழி நுழையுமோர் கள்வனே கொலாம்' (55) என்றும் "என் கன்னிமாமதில் எறிந்தவக்குமரன்" (59) என்றும் வரும் பகுதிகள் இங்கே ஒப்பு நோக்கத்தகும். தன்னை அவித்தை முதிர்வால் மறந்தவர் பின்னர்க் குருவின் அரிய ஞானவுரையாலும், தனது முயற்சியினுலும் மெய் யுணர்வு பெற்ருற் போல என்க. "மறந்தனரறிந்துணர்வு வந்தனர்கொல் என்கோ" (உருக்காட்டு. 64) என்றதும் காண்க. (39)

### மணநாளைத் தயரதன் வினவுதல்

1241. கொல்லுயர் களிற்றரசர் கோமக னிருந்தான்
கல்விகரை யுற்றமுனி கௌசிகனை மேலோய்
வல்லிபொரு சிற்றிடை மடந்தைமண நாளாம்
எல்லையி னலத்தபக லென்றுரைசெய் கென்ருன்.

கொல் உயர் களிற்று அரசர் கோமகன் இருந்தான்,
கல்வி கரை உற்ற முனி, கௌசிகனை, 'மேலோய்!
வல்லி பொரு சிற்றிடை மடந்தை மண நாளாம்
எல்லையில் நலத்த பகல் என்று? உரை செய்க' என்ருன்.

பொ :—பகைவரைக் கொல்வதும் உயர்ந்து விளங்குவதுமான யானைகளையுடைய மன்னர்க்கு மன்னவனான தயரதன் (அரியணையில்) வீற்றிருந்தவனாய்க் கல்வியின் கரையைக் கண்டுணர்ந்த முனிவனான கோசிகனை (நோக்கி) மேலான பண்புகளை உடையவனே! பூங்கொடியை ஒத்த நுண்ணிய இடையினை உடைய மகளிரிற் சிறந்த சீதையினது திருமணத்துக்குரிய நாளாகிய அளவற்ற நன்மையைப் பயக்கும் நாள் எந்நாள்? அருளிச் செய்க என்றான்.

கு :—இத்திருமணம் உலகிலுள்ள வன்கணர் அழிதற்கும் நல்லவர் வாழ்தற்கும் ஏதுவாகலின் "எல்லையில் நலத்த பகல்" என்றார். தயரதன் மிதிலையெய்தியபோது அவனை எதிர்கொண்ட சனகன், மணநிச்சயம் மறுநாள் செய்வதாகச் சொல்லிப் பின்னர்த் தன் தம்பி உதாசித்தை வரவழைத்துப் பிற்றை நாளில் புரோகிதன் முதலியவரோடு, தயரதன் வர, அவனது குல முறையை வசிட்டன் கூறி, அந்தச் சீரிய கால்வழியிற்றோன்றிய குமாரர்களுக்கு உன் மகளிரை மணம்புரிவித்தல் தகும் என்று சொன்ன அளவில், பிராட்டியையும் ஊர்மிளையையும் முறையே இராமஇலக்குவர்க்கும், தன் தம்பியின் புதல்விகளாகிய மாண்டவி, சுருதகீர்த்தியை முறையே பரத சத்துருக்கனர்க்கும், பங்குனி உத்தர நாளில் மணம் செய்வித்ததாக முதனூல் கூறும். கோலம் புனைந்து சீதையை அழைத்துவந்த செய்தி முதனூலில் தனியாகக் கூறப்படவில்லை. திருமண நிச்சயம் செய்தது திருமண நிகழ்ச்சிக்கு இரண்டு நாள் முன்பென்று வான்மீகம் கூறும். குலமுறையை வசிட்டன் தயரதனிடம் கூறியதாக முதனூல் கூறாநிற்க, கோசிகன் சனகற்குக் கூறியதாகக் கம்பர் கூறுவர். "கொல்வதில் உயர்ந்த களிறு" எனினுமாம். (40)

## திருமணம் நாளை யெனல்

**1242.** வாளையுக ளக்கயல்கள் வாவிபடி மேதி
மூளைமுது கைக்கதுவ மூரிய வரால்மீன்
பாளைவிரி யக்குதிகொள் பண்ணைவள நாடா
நாளையென வுற்றபக னற்றவ னுரைத்தான்.

'வாளை உகளக், கயல்கள் வாவிபடி, மேதி
மூளை முதுகைக் கதுவ மூரிய வரால் மீன்,
பாளை, விரியக் குதிகொள், பண்ணை வள நாடா!
நாளை' என, உற்ற பகல் நற்றவன் உரைத்தான்.

பொ :—வாளை மீன்கள் துள்ளிக் குதித்தலால் கெண்டை மீன்கள் குளங்களில் படிந்த எருமைகளின் மூளையையும் முதுகையும் பற்ற, வன்மை வாய்ந்த வரால் மீன்கள் (அண்மையிலிருந்த கமுகு தெங்கு முதலிய மரங்களின்) பாளை விரியும்படி குதித்தல் பொருந்திய மருதநில வளம்வாய்ந்த கோசலநாட்டு மன்னவ! திருமணத்திற்குப் பொருந்திய நன்னாள் நாளையென்று சிறந்த தவமுனிவனான கோசிகன் கூறினான்.

கு :—இனி நான்காம் அடிக்கு, நாளை என்று பொருந்திய பலனை அறியவல்ல அறிவாலும் ஒளியாலும் அறிவொளியைப் பிறர்க்குப் பரப்புவதாலும் பகலவனை ஒத்த நல்ல முனிவன் கூறினான் எனினுமாம். சூரியன் ஒளி தருவதுமட்டுமன்றி அறிவும் அளிக்க வல்லவன் என்பதை அநுமன் "காதல் நான்முகனாலும் கணிப்பரிய கலையனைத்தும் கதிரோன் முன்சென்று ஓதினான்" (வீடணன். 105) என்பது கொண்டுணர்க. (41)

## தயரதன் தன் மாளிகையை அடைதல்

**1243.** சொற்றபொழு தத்தரசர்
　　கைதொழு தெழத்தன்
ஒற்றைவயி ரச்சுரிகொள்
　　சங்கினொலி பொங்கப்
பொற்றட முடிப்புது
　　வெயில்பொழி தரப்போய்
நற்றவ ரனுச்சைகொடு
　　நன்மனை புகுந்தான்.

சொற்ற பொழுதத்து, அரசர் கைதொழுது எழத், தன்
ஒற்றை வயிரச் சுரி கொள் சங்கின் ஒலி பொங்கப்,
பொன் தட முடிப் புது வெயில் பொழிதரப் போய்,
நற்றவர் அனுச்சை கொடு, நல் மனை புகுந்தான்.

பொ :—(இவ்வாறு கோசிகன்) சொல்லியபொழுது மன்னர்கள் கை வணங்கி எழுந்து நிற்பத் தனது ஒப்பற்ற வயிரப் பூண் அணிந்த (வலதுபக்கம்) வளைந்த வலம்புரிச் சங்கினது ஒலி தழைப்பப் பொன்னால் அமைந்த பெரிய (மணி) முடி இளவெயிலைச் சொரியச் சென்று சிறந்த தவமுனிவரது இசைவைப் பெற்றுக் கொண்டு அழகிய (தனக்கமைத்த) அரண்மனையில் நுழைந்தான்.

கு :—நற்றபனன் உச்சிதொடு நன்மனை என்ற பாடத்திற்குச் சிறந்த சூரியனைத் தனது சிகரம் தீண்டும்படியான அரண்மனை யென்று கொண்டு, வானுற வோங்கிநின்ற மனை என்க. அனுஞ்ஞா என்ற வடமொழிப் பதம் அனுச்சை எனத் திரிந்தது. (42)

### கதிரவன் மறைவு

**1244.** அன்னமரி திற்பிரிய
வண்ணலு மகன்றப்
பொன்னினெடு மாடவரை
புக்கனன் மணிப்பூண்
மன்னவர் பிரிந்தனர்கள்
மாதவர்கள் போனூர்
மின்னுசுட ராதவனு
மேருவின் மறைந்தான்.

**அன்னம் அரிதில் பிரிய, அண்ணலும் அகன்று, அப்**
**பொன்னின் நெடு மாடவரை புக்கனன், மணிப் பூண்**
**மன்னவர் பிரிந்தனர்கள், மாதவர்கள் போனூர்,**
**மின்னு சுடர் ஆதவனும் மேருவில் மறைந்தான்.**

**பொ :**—(நடையால் அன்னம் ஒத்த) சீதாதேவி (இராமனை விட்டுப் பிரிய மனமின்றி) அரிதாகப் பிரிந்து செல்ல (ப்பெருமை சேர்) இராமனும் (சீதையை விட்டுப் பிரிய மனமில்லாமற்) பிரிந்து, (அந்த மணிமண்டபத்தினின்றும் நீங்கிப்) பொன்னு லியன்ற உயர்ந்த மாளிகையாகிய மலைக்கண் புகுந்தான். நவமணி களாற் செய்யப்பட்ட அணிகலன்கள் புனைந்த அரசர் பலரும் பிரிந்து (தத்தம் இருக்கைகட்குச்) சென்றனர். பெருந்தவ முனிவர் களும் அகன்றூர். ஒளிவிடுகின்ற கதிர்களையுடைய சூரியனும் மேருமலைக்கப்பாற் சென்று மறைந்தான்.

கு :—தயரதன் இராமன் முதலிய தன் குலவழித் தோன்றல் கள் தத்தம் இருக்கைகளை அடையத் தானும் தனக்குரிய இடத் திற்குச் செல்ல விழைவான்போன்று மேருவிற்கப்பால் சூரியன் மறைந்தான். சூரியன் உதயகிரியில் தோன்றி அத்தமனகிரியில் மறைவதாகக் கூறுவது கவி மரபு. (43)

**கோலங்காண் படலம் முற்றிற்று**

# 21. கடிமணப் படலம்

இராமபிரானுடன், தசரதன் சனகன் முனிவர் முதலியோர் மணிமண்டபத்தில் குழுமியிருந்தபோது, வசிட்டமாமுனிவரது விருப்பின்படி, சீதாதேவி இயற்கையழகுடன் செயற்கையலங்காரங்களும் புனைந்துகொண்டு அம் மண்டபத்துக்குள் பிரவேசித்தாள். பின் கோசிக முனிவரால் திருமணநாள் 'நாளை' என்று நிச்சயிக்கப்பட்டது. இருதிறத்தரசர்களும் இதற்கு உடம்பட்ட பின் தசரதரும் அவர் புத்திரர்களும் தத்தம் உறைவிடம் சென்றனர். ஏனைய முனிவர்களும் வேந்தர்களும் பிரிந்தனர். சூரியனும் அத்தமித்தான் என்று மேலே கோலங்காண் படலத்தில் கூறப்பட்டது.

மணமுறைகளில், வந்த மணமகன் தந்தை முதலிய சம்பந்திகளைப் பெண்வீட்டார் எதிர்கொண்டு அழைத்து வந்து அளவளாவி உபசரித்தலும், பின் மணமகனைத் தம் மாளிகைக்குப் பவனியாக அழைத்து வருதலும், அவ்விடம் மணமக்களை யாவர்க்கும் அறிமுகப்படுத்துதலும் மணமக்களிருவரும் ஒருவரை யொருவர் பார்த்துக்கொள்ளுதலும், திருமண முகூர்த்த முதலியன நிச்சயித்தலும், அம் முகூர்த்த நாளில் கலியாணத்தைச் சிறப்புற நடத்துதலும் இன்று போலவே பெரும்பாலும் பண்டும் நடந்தேறின என்பது, எதிர்கோள், உலாவியல், கோலங் காண்டல் கடிமணம் என்ற படலங்களால் நன்கு அறியலாம்.

இவ்வாறு, 'நாளை வதுவை மணமென்று நாளிட்ட' பின் மறுநாள் நிகழும் கடிமணச்செய்திகளாகக் கம்பர் கூறுவனவற்றை நோக்குவோம். முன்தினம் அரண்மனை மண்டபத்தில் பலர் முன்பு சீதாதேவி இராமனை நேரிற் கண்டு தெளிந்த பின் உண்டான அவளது மனநிலைகள் முதலில் வருணிக்கப்படுகின்றன. ஒரு பக்கம் மகிழ்ச்சியுளதாயினும் மறுபக்கம் விரகதாபம் அவள் உள்ளத்தை வருத்தியது. இரவு கழிவதை எதிர்நோக்கிநின்றுள் அந்நங்கை. இவற்றை யெல்லாம் கம்பர் சித்திரித்துக் காட்டும் அழகு படித்து உவக்கத்தகும்.

மறுநாள் சூரியோதயம் ஆயிற்று. மிதிலை மாநகர்க்குப் புரிந்த அலங்காரங்களும் மக்களடைந்த மகிழ்ச்சிகளும் பல திறப்படச் சிறப்பிக்கப்படுகின்றன. சனகன் அரண்மனையில் அமைந்திருந்த அலங்கார மணமண்டபத்துள் தசரத சக்கரவர்த்தி முதலிற் பிர

வேசித்தார். அம்மண்டபத்தின் எடுப்பும் விசாலமும் பேரழகும் கண்கவர் காட்சி பெற்று விளங்கின. இங்கே இவ்வாருக, இராம பிரான் முற்பட மங்கலத் திருமஞ்சனமாடித் திருமண் காப்புத் தரித்துக் கொண்டபின் சூரியகுல தெய்வமான ஆதியஞ் சோதி மூர்த்தியை அடிவணங்கித் தொழுதுகொண்டார். பின்பு திரு மணக் கோலமாக அலங்கார அணிகலன்கள் யாவும் தரித்தனர். இவ்வலங்காரங்களில் பல்வகை அணிகள் தரித்த அழகுகளைக் கம்பர் வாக்கிற் காணலாம். அடுத்து (கல்யாண) யாத்திரா தானங்களைப் புரிந்தனர். பின் தன் தம்பியர்களிலே பரதன் இரத சாரத்தியஞ் செய்ய இலட்சுமணன் மெய்காவல் புரிய சத்துருக் கனன் கவரி விச, திருத்தேரினில் ஏறி மணமண்டபம் நோக்கிப் பவனியாகச் செல்லலானுர்.

அவ்வாறு வீதிகளில் இராமபிரான் வரும்போது அமைந்த மக்களின் மனோநிலைகளும் காட்சிகளும் ஆரவாரங்களும் அணிந்து கூறப்படுகின்றன. முடிவில் திருமண மண்டபத்தை அடைந்து, தன் திருத்தாதையை அடிவணங்கி அவரருகில் இராமபிரான் அமர்ந்தருளினன். பின் சீதாதேவியும் யாவரும் மகிழ்வுற அடைய லானுள். விண்ணிடையே திரிமூர்த்திகளும் தங்கள் தேவியர்க ளுடன் அத் திருக்கல்யாண வைபவத்தைக் கண்டுகளிக்கக் கூடி யிருந்தனர். சூரிய வமிசத்துக் குலகுருவான வசிட்ட பகவானே புரோகிதராக நின்று வேள்வித்தீயை வளர்த்து விவாகச் சடங்கு களை விதிப்படி நடத்தலானுர். அப்போது, அலங்கார மணமேடை யில், சிரிய ஆசனத்தே விற்றிருந்த இராமபிரான், முன்பு சனக மகாராசர் தம் திருமகளுடன் வந்து நின்றுகொண்டு, ‘திருமா மகளும் திருமாலும் போல் என் புத்திரியான இந்தச் சீதையுடன் நெடுங்காலம் நீவிர் வாழ்வீராக’ என்று வாழ்த்திய வண்ணம் இராமன் திருக்கைத்தலத்தில் புனித நீரை வார்த்துத் தம் கன்னி கையை வேத விதிப்படி தானம்பண்ணிஞர். அப்போது மங்கள கரமான சங்க முதலிய வாத்திய வொலிகளும் வாழ்த்தொலி களும் பெரிதும் முழங்கின. பின்பு ஒம ஆகுதிகளைப் பெய்து தன் தேவி சானகியின் கைத்தலத்தைப் பற்றிக்கொண்டு இராம பிரான் மங்கலத் தீயை வலம் வந்தனன்; அதனை யடுத்து, அம்மி மிதித்தலும் அருந்ததி காண்டலுமாகிய மணவினைகள் நடந் தேறின. இவ்வாறு யாவும் நிறைவேறியதும் வசிட்டர் கோசிகர் முதலாய பெருமுனிவர்களையும், பின் தன் தந்தையான சக்கரவர்த் தியையும் அடிவணங்கினன் இராமபிரான். பின் தேவியுடன் கூடித் தான் தங்கியிருந்த பொன் மாளிகையைப் பெருமான் அடைந் தனன். அப்போது மகிழ்ச்சி யாரவாரங்கள் மிக்கெழுந்தன. இராம பிரான் அங்கிருந்த தன் தாயர் மூவரையும் தண்டனிட்டு வணங்க,

சீதாபிராட்டியும் உடன் வணங்கினள். அப்பிராட்டியை மாமியர் மூவரும் கண்டு பேரானந்தத்தால் உள்ளமும் உடலமும் பூரித்து வாழ்த்தலானுர்கள். ஏனைய ரெல்லாம் பெருமகிழ்வுடன் அளவற்ற உயர் பரிசுகளை ஆசிகளோடும் அளித்தனர். பின்பு மணமக்கட்கு நடத்தும் பள்ளியறைச் சடங்கும் நடந்தேறியது. வசிட்ட பகவானே திருமணச் சடங்குகள் யாவையும் நடத்தி வைக்க இவ்வாறு சீதா கல்யாணப் பெருவிழா இனிது நிறைவேறியது.

பின், இலக்குமணன் பரதன் சத்துருக்கனன் என்ற இராம சகோதரர் மூவரும், சனகன் தம்பி குசத்துவசன் பெற்ற ஊர்மிளை, மாண்டவி, சுருதகீர்த்தி என்ற கன்னியர்களை முறையே திருமணம் புரிந்து கொண்டார்கள். இவையே கம்பர் கூற்றுன கடிமணப் படலத்தின் வரலாறுகள்.

இவற்றுடன் வான்மீகி முனிவர் கூறிய சரிதங்கள் பல இடங்களில் ஒற்றுமையும் சில இடங்களில் வேற்றுமையும் கொண்டுள்ளன. மிதிலா நகரம் அடைந்த பின், தசரத சக்கரவர்த்தியும் அவர் திருக்குமாரர்களும் இனிதாகத் தங்குவதற்கு அமைந்த மாளிகைக்குச் சென்ருர்கள். மறு நாட்காலை சனகராசன் காணிக்கைகளுடன் வந்து சக்கரவர்த்தியை வரவேற்று உபசரித்தான், அதற்கடுத்த நாள், சனக மன்னன் வேண்டுகோளின்படி. தசரத மன்னர் முனிவர்களுடன் அரண்மனை மண்டபத்தை அடைந்தனர். அங்கே சூரிய குலப்பெருமைகளும் வமிசாவளியும் வசிட்ட முனிவரால் கூறப்பட்டன. அவ்வாறே மிதிலை வேந்தரின் குல வரலாறுகளும் தம்பி குசத்துவசனின் செய்திகளும் சனக வேந்தரால் உரைக்கப்பட்டன. மிகவும் ஏற்றதும் மகிழ்ச்சிக்கு உரியதுமான சம்பந்தம் என்பதறிந்து மகிழ்ந்த சனகராசன், சீதை பூமியில் தோன்றிய பின், தான் பெற்ற ஊர்மிளை என்ற நங்கையை இலட்சுமணற்குக் கன்னிகாதானம் செய்ய நிச்சயித்திருப்பதைத் தெரிவித்ததோடு இதற்கு மறுநாள் உத்தர பல்குனியில் (பங்குனி உத்தரத்தில்) திருமணங்கள் நடைபெறவும், அவற்றுக்குமுன் நிகழ வேண்டிய சடங்குகளை நடத்தவும் சக்கரவர்த்தி முதலியோரை வேண்டிக்கொண்டனன். அப்போது விசுவாமித்திரர், சனகராசனை நோக்கி உம் தம்பியான குசத்துவசரின் பெண்மணிகளிருவரையும் பரத சத்துருக்கனர் இருவருக்கும் முறையே தேவியராகக் கன்னிகா தானம் புரிய வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். இது மிக்க விருப்பத்துடன் சனகராசனல் ஏற்றுக் கொள்ளப் பெற்றது. இவ்விதமாக அன்று திருமண உடன்பாடுகள் உலகியலின்படி நடந்து நிறைவேறின. சக்கரவர்த்தியும் பரிவாரங்களுடன் தம் இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்.

திருமணத்துக்குரிய மறுநாட்காலை முதலிற் செய்ய வேண்டிய தானாதிகளை முடித்துக்கொண்டபின், தசரதர் தம் புத்திரர்களுடனும் முனிவர்களுடனும் திருக்கல்யாண மண்டபத்தை அடைந்தனர். திருமண யாகசாலை சடங்குக்குரிய பண்டங்களால் நிரம்பி அலங்காரமாயிருந்தது. சனகராசனது வேண்டுகோளின் படி, வசிட்ட பகவானே மணச்சடங்குகளை வைதிக முறைப்படி நடத்தலானார். அதன் இடையில் மிக்க அலங்காரங்களுடன் கூடியிருந்த சீதையை ஓமாக்கினிக்குமுன் சனகராசன் அழைத்து வந்து இராமபிரானுக்கு எதிரில் நிறுத்தியவராய், 'என் புத்திரியாகிய இந்தச் சீதை உமக்கு ஒத்த தருமங்களைச் செய்தற்கு உரிய தேவியாவள். உமது திருக்கரங்களால் இவளது கைத்தலத்தைப் பற்றிக் கொள்க. உமக்கு மங்கள முண்டாகுக' என்று மந்திர பூர்வமாக தூய நீரை அவர் திருக்கரத்தில் வார்த்து அளித்தார். அப்போது முனிவர்களும் தேவர்களும் மலர்மாரி பொழிந்து வாழ்த்தினர்.

இவ்வாறே, சனக புத்திரியான ஊர்மிளையை இலட்சுமணரும் அவர் தம்பி குசத்துவசர் புத்திரிகளில் மூத்தவளான மாண்டவியைப் பரதரும், இளையவளான சுருதகீர்த்தியைச் சத்துருக்கனரும் கன்னிகாதானமாகப் பெற்றவர்களாய்த் தத்தம் தேவியரின் கைத்தலங்களைப் பற்றலாயினர். இதன்பின் நிகழும் மணச்சடங்குகள் யாவும் பூர்த்தியாயின. பூமழைகள் பொழிந்தன. வாத்திய கோஷங்களும் பலவேறு இசை யொலிகளும் எழுந்தன. இவ்வாறாக, தசரத புத்திரர்களின் திருக்கல்யாண வைபவம் இனிது நிறைவேறியது.

இனி, இறுதியில் இராம சகோதரர் மூவர் திருமணங்களையும் பற்றிக் கூறுமிடத்தில் இலட்சுமண பரத சத்துருக்கனர் மூவர்க்கும் சனகரின் தம்பி குசத்துவசர் பெற்ற கன்னியர் மூவரும் மணஞ் செய்யப் பெற்றனர் என்று கம்பர் சுருங்கப் பாடினர், ஆனால், சானகியின் தோற்றத்துக்குப் பின் சனகர்க்குப் பிறந்த ஊர்மிளை என்பவளே இலட்சுமணர்க்கு அளிக்கப்பட்டவள் என்பதும், மற்றக் கன்னியரிருவரும் அவர் தம்பி குசத்துவசர் பெற்ற மகளிர் என்பதும் இவர்களுடன் தசரத புத்திரர் நால்வர் திருமணங்களும் பங்குனியுத்தர தினத்தன்றே நடைபெற்றன என்பதும் வால்மீகத்தால் தெளிவாக அறியப்படுகின்றன.

இவற்றை விளக்கமாகக் கம்பநாடர் கூறவில்லையேனும், உத்தர பல்குனியில் எல்லாத் திருமணங்களும் நிறைவேறின

என்ற முனிவர் கருத்தோடு அவர் மாறுபட்டவர் என்று சொல்வதற்கில்லை. பொதுப்பட இரண்டு பாடல்களில் கூறி முடிப்பதே இங்குப் போதியது என்பது அவர் கருத்தாகத் தோற்றுகின்றது. இது தவிர ஏனைய நிகழ்ச்சிகளில் சம்பிரதாயமான இன்சொற்களும் உபசாரமொழிகளும் புகழ்ச்சியுரைகளும் சம்பந்தியர்க்குள் பரிமாறிக் கொண்டதை யன்றி, முக்கியமான கதைக் கூறுகள் பெரும்பாலும் ஒற்றுமையுடையன என்றே சொல்லலாம்.

---

# 21. கடிமணப் படலம்*

## சனகன் வரவேற்பால் யாவரும் மகிழ்தல்

1245. இடம்படு புகழ்ச்சனகர் கோனினிது பேணக்
கடம்படு களிற்றரச ராதியிடை கண்டோர்
தடம்படு புயத்தசிறு தம்பியர்கள் காறும்
உடம்பொடு துறக்கநக ருற்றவரை யொத்தார்.

இடம் படு புகழ்ச் சனகர் கோன் இனிது பேணக்,
கடம் படு களிற்று அரசர் ஆதி இடை கண்டோர்,
தடம் படு புயத்த சிறு தம்பியர்கள் காறும்,
உடம் பொடு துறக்கநகர் உற்றவரை ஒத்தார்.

பொ :—மிகப் பரந்த புகழைத்தேடிய சனகமன்னன் இன்பமாய் வரவேற்று வேண்டிய உபசாரங்களைச் செய்தலால், மதம் பொருந்திய வேழப்படையுடைய வேந்தர் முதல் பெருமைவாய்ந்த தோள்களையுடைய (அரசர்குலத்தோன்றல்களாய) சிறிய தம்பியர் வரை இடையில் உள்ளவர் யாவரும், இந்த உடலோடு சுவர்க்கலோகத்துத் தலைநகரான அமராவதிநகரை அடைந்தவரைப் போன்றார்.

கு :—அமுதுண்ணல், புனைகளாரப் போகந்துய்த்தல் முதலியவற்றால், விண்ணுலகத்தினும் சிறந்த இன்பம் பெற்றனர் என்பதாம். இடம்படுதல் - மிகப் பெரிதாதல்; "இடம்பட மெய்ஞ்ஞானம் கற்பினும்" (116) என்பது நாலடி. இடை கண்டோர் என்றது, அமைச்சர், சேனைத் தலைவர், முனிவர் முதலோரைக் குறிக்கும். 'தவஞ்செய் மாக்கள் தம்முடம்பிடாஅது - அதன்பய மெய்தியவளவை மான' (பொருந. 91–92) எனத் தவம் புரிவோர் இம்மையிலே துறக்கப் பயன் துய்த்தல் உவமிக்கப் பட்டமை காண்க. "வைய மாளுடை நாயகன் மலர்ச்சரண் வணங்கி, மெய்யினோடருந் துறக்கமுற்றாரென வியந்தார்" (யுத்த. மீட்சி. 156) என்றார் பின்னரும்.

இனி, இராமபிரான் விரகதாபமுற்று வருந்துதலைப் பின்வரும் கவிகள் வருணித்தலின், 'இடைகண்டோர்' என்றது அவரையொழிந்த அமைச்சராதியரை என்க. (1)

---

* இது 23-ஆவது சுவடியில் "திருமணப் படலம்" என்று காணப்படுகின்றது.

## சீதாதேவியின் நிலை

1246. தேடருந லத்தபுன
லாசைதெற லுற்றார்
மாடொர்தட முற்றதனை
யெய்தும்வகை காணார்
ஈடழிவு றத்தளர்வொ
டேமுறுவ ரன்றே
ஆடகவ ளைக்குயிலு
மந்நிலைய ளானாள்.

தேடு அரு நலத்த புனல் ஆசை தெறல் உற்றார்,
மாடு ஓர் தடம் உற்று, அதனை எய்தும் வகை காணார்,
ஈடு அழிவு உறத் தளர்வொடு ஏமுறுவர் அன்றே?
ஆடக வளைக் குயிலும் அந்நிலையள் ஆனாள்.

பொ :—நாடி அடைதற்கரிய நன்னீர் வேட்கையால் தாப மடைந்தவர், அருகே ஒரு குளத்தைக் கண்டு, அக்குளத்தின் உள்ளிடத்தை அடையும் நெறி அறியாராய்த் தம் முயற்சி கெடுதலால் சோர்வுடன் கலக்கமடைவரன்றோ; பொன்வளை புனைந்த குயில் மொழிச் சீதையும் அத்தன்மையளாயினள்.

கு :—தன் காதல் வேட்கையைத் தணிப்பதற்கு உரிய மருந்தாகிய இராமபிரானை அருகிற் காணப்பெற்றும், அப்பொழுதே அவனை யடைந்து அனுபவிக்கப் பெறாமையால், பிராட்டி தனது நாணம் நிறை முதலிய வலிமையழியத் தளர்ச்சியோடு கலங்குவாளாயினளென்க. ஏம் - ஏமம்; மயக்கம், வருத்தம். (2)

45 என்னும் குறியீடுள்ள அடையாற்றுப் பதிப்பில் இப்பாடலின்பின் பின்வரும் பாடல் வரையப்பட்டிருப்பதாகக் கீழ்க் குறிப்பில் காட்டப்பட்டுள்ளது.

1246 (a) எரிகால் சுடரே கவெழுந் தநிலா
வருமீ ரமுமா மயில்சா னகிதன்
திருமே னியின்மீ துசினந் துசுடத்
தரியா துளநொந் துதனித் துறைவாள்.

# 21. கடிமணப் படலம்*

## சனகன் வரவேற்பால் யாவரும் மகிழ்தல்

1245. இடம்படு புகழ்ச்சனகர் கோனினிது பேணக்
கடம்படு களிற்றரச ராதியிடை கண்டோர்
தடம்படு புயத்தசிறு தம்பியர்கள் காறும்
உடம்பொடு துறக்கநக ருற்றவரை யொத்தார்.

இடம் படு புகழ்ச் சனகர் கோன் இனிது பேணக்,
கடம் படு களிற்று அரசர் ஆதி இடை கண்டோர்,
தடம் படு புயத்த சிறு தம்பியர்கள் காறும்,
உடம் பொடு துறக்கநகர் உற்றவரை ஒத்தார்.

பொ :—மிகப் பரந்த புகழைத்தேடிய சனகமன்னன் இன்பமாய் வரவேற்று வேண்டிய உபசாரங்களைச் செய்தலால், மதம் பொருந்திய வேழப்படையுடைய வேந்தர் முதல் பெருமைவாய்ந்த தோள்களையுடைய (அரசர்குலத்தோன்றல்களாய) சிறிய தம்பியர் வரை இடையில் உள்ளவர் யாவரும், இந்த உடலோடு சுவர்க்கலோகத்துத் தலைநகரான அமராவதிநகரை அடைந்தவரைப் போன்றார்.

கு :—அமுதுண்ணல், புணைகளாரப் போகந்துய்த்தல் முதலியவற்றால், விண்ணுலகத்தினும் சிறந்த இன்பம் பெற்றனர் என்பதாம். இடம்படுதல் - மிகப் பெரிதாதல்; "இடம்பட மெய்ஞ்ஞானம் கற்பினும்" (116) என்பது நாலடி. இடை கண்டோர் என்றது, அமைச்சர், சேனைத் தலைவர், முனிவர் முதலோரைக் குறிக்கும். 'தவஞ்செய் மாக்கள் தம்முடம்பிடா அது - அதன்பய மெய்தியவளவை மான' (பொருந. 91-92) எனத் தவம் புரிவோர் இம்மையிலே துறக்கப் பயன் துய்த்தல் உவமிக்கப் பட்டமை காண்க. "வைய மாளுடை நாயகன் மலர்ச்சரண் வணங்கி, மெய்யினோடருந் துறக்கமுற்றுறரென வியந்தார்" (யுத்த. மீட்சி. 156) என்றார் பின்னரும்.

இனி, இராமபிரான் விரகதாபமுற்று வருந்துதலைப் பின்வரும் கவிகள் வருணித்தலின், 'இடைகண்டோர்' என்றது அவரையொழிந்த அமைச்சராதியரை என்க. (1)

---

* இது 23-ஆவது சுவடியில் "திருமணப் படலம்" என்று காணப்படுகின்றது.

## சீதாதேவியின் நிலை

**1246.** தேடருந லத்தபுன
லாசைதெற லுற்றார்
மாடொர்தட முற்றதனை
யெய்தும்வகை காணார்
ஈடழிவு றத்தளர்வொ
டேமுறுவ ரன்றே
ஆடகவ ளைக்குயிலு
மந்நிலைய ளானாள்.

**தேடு அரு நலத்த புனல் ஆசை தெறல் உற்றார்,
மாடு ஓர் தடம் உற்று, அதனை எய்தும் வகை காணார்,
ஈடு அழிவு உறத் தளர்வொடு ஏமுறுவர் அன்றே?
ஆடக வளைக் குயிலும் அந்நிலையள் ஆனாள்.**

பொ :—நாடி அடைதற்கரிய நன்னீர் வேட்கையால் தாப மடைந்தவர், அருகே ஒரு குளத்தைக் கண்டு, அக்குளத்தின் உள்ளிடத்தை அடையும் நெறி அறியாராய்த் தம் முயற்சி கெடுதலால் சோர்வுடன் கலக்கமடைவரன்றோ ; பொன்வளை புனைந்த குயில் மொழிச் சீதையும் அத்தன்மையளாயினள்.

கு :—தன் காதல் வேட்கையைத் தணிப்பதற்கு உரிய மருந்தாகிய இராமபிரானை அருகிற் காணப்பெற்றும், அப்பொழுதே அவனை யடைந்து அனுபவிக்கப் பெறாமையால், பிராட்டி தனது நாணம் நிறை முதலிய வலிமையழியத் தளர்ச்சியோடு கலங்குவாளாயினளென்க. ஏம் - ஏமம்; மயக்கம், வருத்தம். (2)

45 என்னும் குறியீடுள்ள அடையாற்றுப் பதிப்பில் இப்பாடலின்பின் பின்வரும் பாடல் வரையப்பட்டிருப்பதாகக் கீழ்க் குறிப்பில் காட்டப்பட்டுள்ளது.

1246 (a) எரிகால் சுடரே கவெழுந் தநிலா
வருமீ ரமுமா மயில்சா னகிதன்
திருமே னியின்மீ துசினந் துசுடத்
தரியா துளநொந் துதனித் துறைவாள்.

## சீதை இரவொடு கூறல்

1247. உரவே துமிலா ருயிரீ துமெனுர்
★ கரவே புரிவா ருளரோ கதிரோன்
வரவே யெனையா ளுடையான் வருமே
இரவே கொடியாய் விடியா யெனுமால்.

'உரவு ஏதும் இலார் உயிர் ஈதும் எனுர்
கரவே புரிவார் உளரோ? கதிரோன்
வரவே எனை ஆளுடையான் வருமே
இரவே! கொடியாய் விடியாய்' எனுமால்.

பொ:—இராப்பொழுதே! நீ கொடுந்தன்மையுடையை; வலிமை சிறிதும் இல்லாதவரது உயிரை அளிப்போம் என்னுது, வஞ்சனையையே செய்பவர் உலகிலிருக்கின்றனரோ! நானை சூரியனுதித்தமாத்திரத்தில், என்னை ஆளுடைய நாயகன் வந்தருளுவனே! உன் கொடுமை நீங்க விடிவாயாக என்று கூறுவாள் பிராட்டி.

கு:—உளரோ - ஓகாரம், எதிர்மறை. 'இரவே கொடியாய்' என்பது, கேளாததைக் கேட்பது போலக் கூறிய மரபு வழுவமைதி. உரவு ஏதுமிலார் என்றது, மெல்லியலாரான மகளிர் என்றபடி. எவ்வளவு கொடுமை புரிபவரும், தம்மொடு ஒப்பாரும் மிக்காரு மாகிய வலியாருடன் எதிர்த்து அழிக்கத் தொடங்குவரேயன்றித் தம்மினும் கீழ்ப்பட்ட வலியிலாரை வருத்தார்; பெரும்பாவம் ஆகிய பெண்கொலையும் புரியாரென்பார், 'உளரோ' என்றும், தன்னைத் துன்புறுத்துவது இன்னதென்று தெரியாதபடி இராப்பொழுது வருத்துவதனுல், 'கரவே புரிவார்' என்றும் கூறினர். (3)

## மனத்தொடு கூறல்

1248. கருநா யிறுபோல் பவர்கா லொடுபோய்
வருநா ளயலே வருவாய் மனனே
பெருநா ளுடனே பிரியா துழல்வாய்
ஒருநா டரியா தொழிவா ருளரோ.

'கருநாயிறு போல்பவர் காலொடு போய்
வரும் நாள் அயலே வருவாய், மனனே!

பெருநாள் உடனே பிரியாது உழல்வாய்,
ஒரு நாள் தரியாது ஒழிவார் உளரோ?'

போ:—மனமே! கருநிறக் கதிரவன்போன்றவனான இராம பிரான் திருவடியுடன் தொடர்ந்து சென்று அவர் மீள வருகிற நாளில் அவரருகிலே வருவதாக உள்ளாயே; பல நாளாக என்னை விட்டு நீங்காமல் உடனியங்கும் இயல்புடையாய்! (நினைத்த பயனைப் பெறுங்காலம் நெருங்கிவருகையில்) ஒரு நாள் பொறுத்திராது விட்டு விலகுவோர் உன்னையன்றி வேறெவருளர்?

கு:—கருநாயிறு, இல்பொருளுவமை. 'கருநாயிறெனக் கண்டான்' (ஆரணிய. 2, 24) என வருதலும் காண்க. 'மண்வழி நடந்தடி வருந்தப் போனவன்' 'நடந்தது கிடந்தது என் உள்ளம் நண்ணி' (மிதிலைக். 55, 57) என்று பிராட்டியே கூறியிருத்தலால், அவர் மனம் திருவடியிலிடுபட்டிருந்தமை அறியலாம். இவ்வளவு காலம் என்னோடு கூடியே பழகியிருந்தும், என் காதலுக்கிடனான தலைவனை நானே அடைந்து களிப்பதாயிருக்க, இன்று நீ என்னை விட்டு நீங்குதல் தகாது என்பதாம். பின்னடிகளுக்கு, 'பெரு நாளான நாளைத் திருமணத்திலிருந்து என்னைப் பிரிதலின்றி மகிழ்ந்துழலவிருக்கும் நீ இன்றொரு நாளும் தரிக்காமல் நீங்கலாமோ' என்று கருத்துக் கூறினுமாம். (4)

(5) அன்றிலொடு கூறல்

**1249.** கனையேழ் கடல்போற் கருநா ழிகைதான்
வினையேன் வினையால் விடியா விடினீ
தனியே பறவாய் தகவே துமிலாய்
பனைமே லுறைவாய் பழிபூ ணுதியோ.

கனை ஏழ் கடல் போல் கரு நாழிகை தான்
வினையேன் வினையால் விடியாவிடின், நீ,
தனியே பறவாய், தகவு ஏதும் இலாய்,
பனை மேல் உறைவாய்! பழி பூணுதியோ?'

போ:—பனையில் வாழும் அன்றிற் பறவையே! ஒலிக்கும் எழு கடல் போன்று (மிகப் பரந்த) இரவானது (பெருமானைக் கூடி வாழ முயலும்) எனது தீவினைப்பயனால் விடியாமற் போனால், (விடியாது நீட்டிக்கும் இக்காலத்தில்) தனித்தியங்கும் ஆற்றல் யினக்கில்லை, நேர்மை சிறிதுமில்லாத நீ (பிரிந்து வாழும் என்

னிலைக்கு இரங்காது என்னைக் கொல்லுதலாகிய) பழியை ஏற்றுக் கொள்ளுவாயோ?

கு :—இது அன்றிலைக் குறித்து இரங்கியது. கருநாழிகை - அன்மொழித்தொகை. "கரும்பொழுதகலு முன்னே கொல்வதே கருமமென்றான்" (வில்லிபாரதம். கிருடிணன் றாது. 17) என்றார் பிறரும். தான் அசை. இரவுக்குக் கடல் உவமை, நிறம் பற்றியும் அளக்கலாகா அளவுபற்றியுமாம். "கங்குல் வெள்ளம் கடலினும் பெரிதே" (குறுந்தொகை. 387-5) என்பர். அன்றில், இரவில் ஆணும் பெண்ணுமாக இணைபிரியாது வாழும் பறவை வகை. அவை பனைமேல் உறைவன என்பர்; ஒன்றையொன்று சிறிது பிரியினும் வருந்தும் இயல்பின என்பது, "அன்றிலொரு கண் துயின்றொருக ணூர்வத்தால், இன்றுணைமேல் வைத்துறங்கும்" (நளவெண்பா, சுயம்வர. 117) என்பதனால் அறியப்படும். இரவிடை இணைபிரியாதிருப்பினும், பகலிடை உணவு முதலிய வற்றுக்காகப் பிரிதல் உனக்கும் உண்டு ஆதலின் 'விடியா விடினீ தனியே பறவாய்' என்றும் அதனால் இருவருமே அவ்விடிவினை எதிர்நோக்கியுள்ள நிலையிலிருக்க, நீமட்டும் என் மன வேதனையை மிகுதிப்படுத்தக் கூவுதல் முறையன்று என்பாள், 'தகவேது மிலாய்' என்றும், இதனால் என்னை வருத்தும் பாவமன்றி வேறடையாயென்பாள் 'பழிபூணுதியோ' என்றும் கூறினாள். பனைமடலேறுவார் செயல் பழிப்புக்குரியதாகும் என்ற பொருள் ஈற்றடியால் தொனிப்பதும் காண்க. வினையால் விடியாவிடின் பறவாய் தகவேதுமிலாய் நீ பழி பூணுதியோ என இயைக்க. (5)

## நிலவொடு கூறல்

**1250.** அயில்வே லனல்கால் வனவா நிழலாய்
வெயிலே யெனநீ விரிவாய் நிலவே
செயிரே துமிலா ருடறேய் வுறுவார்
உயிர்கோ ளுறுவா ருளரோ வுரையாய்.

'அயில் வேல் அனல் கால்வன ஆம் நிழலாய்
வெயிலே என நீ விரிவாய், நிலவே!
செயிர் ஏதும் இலார், உடல் தேய்வுறுவார்,
உயிர் கோள் உறுவார் உளரோ?, உரையாய்!'

**பொ :**—கூரிய வேலின் கொடுமையையும் சிவந்த நெருப்பின் வெம்மையையும் வெளியிடுவனவற்றை ஆக்கந்தரும் நிழல்

போலச் செய்துகொண்டு சூரியவெப்பமே போல எங்கும் கடுமையைப் பரப்பும் நிலாமதியே! குற்றம் சிறிது மில்லாதவரும் நாளுக்கு நாள் உடல் மெலியும் மெல்லியலாருமாகியோரது உயிரைக் கவருந்தன்மை வாய்ந்தவர் உன்னையன்றி வேறு யாவர் உளரோ? சொல்வாயாக.

கு:—நின்பால் செற்றம் செய்யாதவரும் இயற்கையில் மெல்லியல் வாய்ந்து காதல் நோயால் நாளுக்கு நாள் மெலிபவருமான ஒருவருயிரை நீ நலிதல் பெருங் குற்றமே என்பதாம், 'உடல் தேய்வுறுவார்......உளரோ' என்பதற்கு, வலிமையின்றி நாடோறும் உடல் இளைத்து வருந்துபவர், பிறர் துயர்தீர வழி தேடாது, அவரைக் கொல்ல முயல்வாருளரோ என்றும் பொருள் கூறலாம். சந்திரன், தேய்பிறைக் காலத்தில் வரவரக் கலைகுறைந்து காணப் படுபவன் ஆதலின், 'உடல் தேய்வுறுவார்' என்றார். (6)

### தென்றலொடு கூறல்

1251. மன்றற் குளிர்வா சம்வயங் கனல்வாய்
மின்றொத் துநிலா நகைவீழ் மலயக்
குன்றிற் குலமா முழையிற் குடிவாழ்
தென்றற் புலியே யிரைதே டுதியோ.

**'மன்றல் குளிர் வாசம் வயங்கு அனல்வாய்,**
**மின் தொத்து நிலா நகை, வீழ் மலயக்**
**குன்றில் குலமா முழையில் குடிவாழ்,**
**தென்றல் புலியே! இரை தேடுதியோ?'**

பொ:—தலைவனுடன் கூடி மகிழ்தற்குரிய தண்மை நறுமணங்களாகிய விளங்கும் அனலைக் கக்கும் வாயினையும், ஒளி திரண்ட நிலவாகிய பற்களையும் கொண்டு விரும்பத்தக்க மலயம் என்னும் சிறந்த குன்றிலுள்ள பெரிய குகையில் நிலையாக வாழ்கின்ற தென்றலாகிய புலியே! நீ (பசியால் உண்ணும்பொருட்டு) என் உயிராகிய இரையைத் தேடி அலைகிறாயோ?

கு:—கொடுமை பற்றித் தென்றலைப் புலியாக்கி அதற்கேற்ப வாயும் பல்லும் குகையும் கூறப்பட்டன. தென்றல், குளிர்ச்சியும் நறுமணமு முடைமையால் 'குளிர்வாசம்' என்றும், தனக்கு வெய்யதாயிருத்தலின், 'அனல்வாய்' என்றும், அது வருத்துதற்கு நிலவு கருவியாதலின், 'நிலா நகை' என்றும் கூறப்பட்டன. மலயக் குன்றின் என மாறுக. மன்றல்-கலவி. (சிவகசிந்தா-2171) (7)

## உருவெளித் தோற்றம்

1252. தெருவே திரிவா
ரொருசே வகனர்
இருபோ தும்விடா
ரிதுவென் னைகொலாம்
கருமா முகில்போல்
பவர்கன் னியர்பால்
வருவா ருளரோ
குலமன் னவரே.

'தெருவே திரிவார் ஒரு சேவகனர்
இரு போதும் விடார், இது என்னை கொலாம்?
கரு மா முகில் போல்பவர், கன்னியர்பால்
வருவார் உளரோ குல மன்னவரே?'

பொ :—அழகிய கார்மேகம் போன்று வீதியில் உலா வருகின்றவரான ஒப்பற்ற வீரரொருவர், இரவு பகல் என்ற இரு போதும் என்னை விடாது தொடர்கின்றார், இஃது என்னையோ? சிறந்த அரசர்குடியிற் றோன்றியோருள், திருமணம் பெறாத இள மங்கையருறைவிடம் நாடி அடைவோரும் உண்டோ?

கு :—இஃது உருவெளித் தோற்றங் கண்டு கூறியதாம். இதனால் தேவிக்குப் பெருமான் எப்பொழுதும் கட்புலனாய் நின்றமை பெறப்பட்டது. ஒரு பொருளை இடைவிடாது கருதுவோருக்கு அப்பொருள் அவர் மனக்கண் முன் நிற்றல் இயல்பு. கன்னிமாடத்தருகில் கண்டதையும், யாவரும் காண வீதியில் உலாப் போந்ததையும் கருதித் 'தெருவே திரிவார்' என்றார். திரிதல் - பலகாற் செல்லல். (8)

## இரவு நீட்டித்ததுகுறித் திரங்கல்

1253. தெருளா வினைதீ யவர்சேர லர்தோள்
அருளா நெறியோ டுமவா வதுவோ
கருளார் கடலோ கரைகா ணரிதால்
இருளா னதுதா னெனையூ ழிகொலாம்.

'தெருளா வினை; தீயவர் சேரலர் தோள்;
அருளா நெறி ஓடும் அவா அதுவோ;
கருள் ஆர் கடலோ கரை காணரிதால்,
இருள் ஆனதுதான், எனை ஊழி கொலாம்?'

பொ :—என் வினைப்பயன் இன்னவென்பது தெளியப்படவில்லை. என்னை வருத்தும் கொடியவரோ என் தோள்களை அணைந்திலர், (இவ்வாறு வினைப்பயனும் அதன் பயனுனவரும்) அனுகூலமாக இராத வழியிலே என் ஆசையோ ஓடாநின்றது. இருண்ட இருளானது, கருமை யடர்ந்த கடலோ (என்று சொல்லும்படி) கரை காணுதற்கு அரிதாயுள்ளது, (இவ்வாறு நிகழ்வது) எத்தனை நீண்ட காலமோ?

கு :—பின்வரும் 'இடையே வளைசோர' என்ற செய்யுள், கடலைப் பற்றித் தனியே வருதலின் 'இருளானது கருளார் கடலோ' என, இரவின் கருமையே ஈண்டுக் கூறப்பட்டதென்க. (9)

தேவியின் வருத்த மிகுதி

1254. பண்ணோ வொழியா பகலோ புகுதா
தெண்ணோ தவிரா விரவோ விடியா
துண்ணோ வொழியா வுயிரோ வகலா
கண்ணோ துயிலா விதுவோ கடனே.

'பண்ணோ ஒழியா, பகலோ புகுதாது,
எண்ணோ தவிரா, இரவோ விடியாது,
உள் நோ ஒழியா, உயிரோ அகலா,
கண்ணோ துயிலா; இதுவோ கடனே?'

பொ :—பண்களின் இசையோ ஒடுங்கவில்லை. பகலோ (விரைந்து) வருவதாயில்லை. எண்ணங்களோ அடங்கவில்லை, இராக்காலமோ முடிவடைய வில்லை, மனத்துன்பங்கள் அகன்ற பாடில்லை, உயிரோ நீங்கவில்லை, கண்களோ உறக்கங் கொள்ள வில்லை, (என் பிறவிக்குரிய) கடமை இவ்வாறு வருந்துதல்தானோ.

கு :—நகரமாந்தரால் கடிமண நிகழ்ச்சியாகக் கொண்டாடப் படுதலின் நள்ளிரவினிடையும் 'பண்ணோ வொழியா' எனப் பட்டது. இரா நீங்காமையே இத்துயர்க்கெல்லாம் மூலமாதலால், இப்பாடலும் இரவுக் கிரங்கியதேயாம். பஞ்சப் பிராணன் என்ப

ராதலின் 'உயிரோ அகலா' எனக் கூறினர். ஒருமை வினைமுடிவு குறைந்ததுமாம். 'இதுவோ' என்ற ஒருமைக்கு 'இவ்வாறு வருந்துதல்' என்பது பொருள். (10)

### கடலை நோக்கி இரங்குதல்

1255. இடையே வளைசோ ரவெழுந் துவிழுந்
தடலேய் மதனன் சரமஞ் சினையோ
உடலோய் வுறநா ளுமுறங் கலையால்
கடலே யுரைநீ யுமொர்கன் னிகொலாம்.

'இடையே வளை சோர, எழுந்து, விழுந்து,
அடல் ஏய் மதனன் சரம் அஞ்சினையோ?
உடல் ஓய்வு உற நாளும் உறங்கலையால்;
கடலே! உரை, நீயும் ஓர் கன்னிகொலாம்?'

பொ:—ஆழியே! இடையிடையே வளைகள் சிந்த, உயர எழுந்தும் மறிந்து வீழ்ந்தும் உடல் தளர்வெய்த என்றும் துயில்கிலாய்; ஆதலால் நீயும் என்போல் மணம் பெறு நங்கையோ, கொல்லும் இயல்பு வாய்ந்த காமவேள் கணைக்கு அஞ்சினை போலும்? சொல்வாயாக.

கு:—'காமுற்ற கையறவோ டெல்லே யிராப்பகல், நீ முற்றக் கண்டுயிலாய் நெஞ்சுருகி யேங்குதியால், தீமுற்றத் தென்னிலங்கை யூட்டினன் தாள் நயந்த, யாமுற்ற துற்றாயோ வாழி கனைகடலே' (திவ். திருவாய். 2. 1. 3) என்னும் பெரியார் பாசுரம் இங்கே ஒப்பிடத்தகும். இரங்கல் நெய்தல்நிலத்து உரிப்பொருளாதலால் அந்நிலத்துள்ள கடலைக்குறித்து இரங்கியவாறு. கடலுக்கு வளை சோர்தல், வெள்ளிய சங்குகளைச் சிந்துதல்; எழுந்து விழுதல் - அலைகள் மேலெழுந்து மடங்கிக் கீழ் வீழ்தல்; உடல் ஓய்வுறுதல், அதன் உடலாகிய நீர் வெப்பத்தால் வற்றிச் சோர்தல்; உறங்காமை, பகலிரவுகளில் ஓய்வின்றி ஒலித்தல் என்றும், பிராட்டிக்கு உடல் மெலிவால் கைவளை நழுவல், எழுந்து சோர்ந்து விழுதல், காமதாபத்தால் உடல் இளைத்தல், வேதனை மிகுதியால் இரவில் உறங்காமையும் வாய்புலம்பலுமாகும். இது சிலேடையணி. நீயும் என்ற உம்மை, யானே யன்றி என இறந்தது தழீஇய எச்சப் பொருளது. கன்னி - (காம நோயுற்ற மணம் பெறாத) இளநங்கை. (11)

### கவிக்கூற்று

**1256.** எனவின் னனபன் னியிருந் துளைவாள்
துனியுன் னிநலங் கொடுசோர் வுறுகால்
மனைதன் னின்வயங் குறும்வை கிருள்வாய்
அனகன் னினைகின் றனயா மறைவாம்.

என இன்னன பன்னி, இருந்து உளைவாள்,
துனி உன்னி நலம் கொடு சோர்வு உறு கால்,
மனை தன்னின் வயங்குறும் வைகு இருள் வாய்
அனகன் நினைகின்றன யாம் அறைவாம்.

பொ:—(தேவி) என்று இத்தன்மையவான மொழிகளைக் கூறித் தனித்திருந்து நோகின்றவள், தனக்கு நேர்ந்த வேதனை நிலையை நினைந்து பெண்ணியல்பு கெடாது பேதுறும்போது, தன் மாளிகையிலே நிறைந்து காணப்படும் இருளில் குற்றமற்ற இராமபிரான் எண்ணும் எண்ணங்களை இனி யாம் இங்கு எடுத்து இயம்புவாம், (12)

### இராமன் நினைகின்றவை (1257-1262)

**1257.** முன்கண் டுமுடிப்
பருவேட் கையினல்
என்கண் டுணைகொண்
டிதயத் தெழுதிப்
பின்கண் டுமொர்பெண்
கரைகண் டிலெனல்
மின்கண் டவரெங்
கறிவார் வினையே.

'முன் கண்டு முடிப்பு அரு வேட்கையினல்,
என் கண் துணை கொண்டு இதயத்து எழுதிப்,
பின் கண்டும், ஓர் பெண் கரை கண்டிலென் ஆல்;
மின் கண்டவர் எங்கு அறிவார் வினையே?'

பொ:—முதலில் கன்னிமாடத்துக் கண்டு எல்லையற்ற பெரு விருப்பால் என் இரு கண்களான எழுதுகோல் கொண்டு மனமாகிய படத்திலே வரைந்து (அதனுடைமையாது) பின்னர்

(நேராக) அறிந்தும், ஒப்புற்ற பெண்ணழகாகிய கடலுக்கு எல்லை காணாதவனானேன். மின்னலே அருகில் வரக் கண்டவர் பின் எங்ஙனம் (திகைப் படையாது) அறிந்து (உருவை வரைந்து) காட்ட வல்லவராவார்.

கு:—மிக்க ஒளிபெற்ற மின்னல்போன்றதொரு பேரழகியை இருமுறை கண்டும் திகைப்படைந்த தன்றி, வடிவழகின் எல்லை காணும் செயலில் யான் தேர்ந்திலேன் என்றவாறு. பெண், பெண்ணழகுக்கு ஆகுபெயர். எழுதி, என்றதனால் கண்ணிணை எழுதுகோலாகவும் இதயம் எழுதும் படமாகவும் கொள்ளப் பட்டன.

'நாளை வதுவை மணமென்று நாளிட்ட' கோலக் காட்சியில், மணிமண்டபத்தே இராமன் சீதா தேவியைக் கண்டவனாதலின் 'பின் கண்டும்' எனப்பட்டது; கன்னிமாடத்திடைப் பெருமான் கண்டபோது, பிராட்டியைச் 'சதகோடி மின் சேவிக்க மின்னரசென்னும்படி நின்றாள்' என்வும், பெருமானை 'மின்னின் மின்னிய மேனி கண்டான்' எனவும் மேலே கூறியவற்றுக்கேற்ப 'மின் கண்டவரெங்கறிவார் வினையே' என இங்கும் கூறலாயினர். அம் மின்னலின் பேரொளி தம் கண்ணொளியை மழுங்கச் செய்ததனால் தாம் எழுதத் தொடங்கிய மனவோவியம் நிரம்பியதில்லை என்று இராமபிரான் கூறினான் என்க. வினை — சித்திரம் வரையும் செயல். (13)

1258. திருவே யனையாண் முகமே யுயிரின்
கருவே களியே விளைகா மவிதைக்
கெருவே மதியே யிதுவென் செய்தவா
ஒருவே னொடுநீ யுறவா கலையோ.

'திருவே அனையாள் முகமே! உயிரின்
கருவே! களியே விளை காம விதைக்கு
எருவே! மதியே! இது என் செய்தவா?
ஒருவேனொடு நீ உறவு ஆகலையோ?'

பொ:—இலக்குமியை ஒத்தவளான சீதையின் திருமுக மண்டலம் போன்றவனே! சந்திரனே! சீவராசிகளின் வளர்ச்சிக்கு மூலமானவனே! களிப்பையே விளைக்கும் காமவித்திற்கு எருப் போலிருந்து வளர்ப்பவனே! இத்தகைய நீ இப்போது கொடுமை புரிவது என்னே? தனித்துள்ள என்னொடும் உறவுடையவனாகாயோ.

கு :—திருவாகிய சீதைக்கு உறவினனாய் அவள் திருமுகம் போலத் தோற்ற மளித்து என்னைமட்டும் நீ வருத்துவ தென்னையோ என்பதாம். தெரியின் என்பது பாடமாயின், 'கூர்ந்து நோக்கினால்' 'திருவே யனையாள் முகமே நீ,' என்றும் 'கருவே கனியே விளை காமவிதைக்கு' என்பது பாடமாயின், 'கருக்காயாகிய துனியையும் கனியான புலவியையும் விளைக்கும் காமமாகிய விதைக்கு' என்றும் பொருள் கொள்க. புலவி - முதிராத ஊடல்; துனி - முதிர்ந்த ஊடல். 'துனியும் புலவியு மில்லாயிற் காமங், கனியுங் கருக்காயு மற்று' என்பர் (குறள் - 1306). இனி, 'சீவராசிகளின் உற்பத்திக்கு மூலமாயும் அதன் பலனாகவும் உள்ள காம விதைக்கு எருப்போல நின்று வளர்க்கும் மதியே' என்று உரைகொள்ளுதலுமாம். (14)

1259. கழியா வுயிருந் தியகா ரிகைதன்
விழிபோ லவளர்ந் ததுவீ கிலதால்
அழிபோ ரிறைவன் படவஞ் சியவன்
பழிபோ லவளர்ந் ததுபா யிருளே.

'கழியா உயிர் உந்திய, காரிகை தன்
விழி போல வளர்ந்தது, வீகிலது ஆல்;
அழி போர் இறைவன் பட அஞ்சியவன்
பழி போல வளர்ந்தது பாய் இருளே.'

பொ :—பரந்துபட்ட இருளானது, விட்டு நீங்காத என் உயிரை வெளியேற்றுதற்குச் சீதையின் கண்கள் போல் வளர்ந்து ஒழியாததாயிற்று ; அன்றியும், அழிவுக்கிடமான போரில், தன்னைக் காத்த தலைவன் அழியும்படி தன்னுயிர்க்கு அஞ்சியோடிய சேனை வீரன் பழிபோலவும் வளர்வதாயிற்று.

கு :—உந்திய என்பது செய்யிய என்னும் வினையெச்சம். 'விழி போல வளர்ந்தது' என்றது, பிரிந்தார்க்கு இரவு வளர்வதுபோல விழிகளின் நோக்கம் மேன்மேற் பெருகி வருத்துதலால் என்க. முன்பு சீதையின் 'நோக்கெனும் நுதிகொள் வேலினை' தன் தோள்களில் ஆழ்ந்து உயிரை வெளியேற்ற முயன்றமையால் 'கழியா உயிர் உந்திய காரிகை' எனப்பட்டாள். தன் தலைவன் போரிற்பட்டபின் அஞ்சிப் பின்னிட்ட வீரனது பழிப்பெருக்கு, சூரியன் மறைந்த பின் தோன்றிய இருட் படலத்துக்கும், அப்பின்னிட்ட வீரன் சந்திரனுக்கும் உவமைகளாகக் கொள்ளத்தகும். (15)

1260. நினையா யொருகா
னெடிதோ நெறிதான்
வினவா தவர்பால்
விடைகொண் டிலையோ
புனமா னனையா
ரொடுபோ யினவென்
மனனே யெனைநீ
யுமறந் தனையோ.

'நினையாய் ஒருகால், நெடிதோ நெறிதான்?
வினவாதவர் பால் விடை கொண்டிலையோ?
புன மான் அனையாரொடு போயின என்
மனனே! எனை நீயும் மறந்தனையோ?'

பொ :—வனத்து வாழும் மான்போல்பவளுடன் சென்ற என் மனமே! என்னை ஒருமுறையேனும் நினைந்தாயல்லை; நீ சென்ற வழிதான் நெடுந்தூரத்துள்ளதோ; உன்னைப்பற்றி உசாவாத சீதையிடம் நீ மீள விடைபெற்றிலையோ; என்னை நீயும் மறந் தொழிந்தனை போலும்.

கு :—நீயும் என்ற உம்மை 'கன்னியேயன்றி' என்ற இறந்தது தழீஇய எச்சப் பொருளோடு, கணப்பொழுதும் நீங்காத நீயும் என உயர்வு சிறப்புப் பொருளையும் உணர்த்தியது. ஒருகால் நினைத்தாலும் உய்யலாம் என்பார், 'ஒருகால் நினையாய்' என்றும், அண்மையதாயின், அடைந்திருப்பாய் என்பது தோன்ற, 'நெடிதோ நெறிதான்' என்றும், உபசரித்து உசாவாதவர்பால் விடை பெறுவது பயனற்றது என்பார், 'வினவாதவர்பால் விடை கொண்டிலையோ' என்றும், விரைந்து மீளாமையால், 'நீயு மறந்தனையோ' என்றும் கூறினர் நெடிதோ நெறிதான் என்றது, நினைத்தவுடன் நெடுந்தூரஞ் செல்லவல்ல உனக்கு இஃது ஒரு தூரமோ? என்றபடி. (16)

1261. தன்னேக் கெரிகா றகைவா ளரவின்
பன்னேக் கினதென் பதுபண் டுகொலாம்
என்னேக் கினுநெஞ் சினுமென் றுமுளார்
மென்னேக் கினதே கடுவல் விடமே.

'தன் நோக்கு எரி கால் தகை வாள் அரவின்
பல் நோக்கினது என்பது பண்டு கொல் ஆம்?
என் நோக்கினும் நெஞ்சினும் என்றும், உளார்
மெல் நோக்கினதே கடுவல் விடமே.'

பொ:—'கொடிய வலிய விடம், தன் கண்களிலிருந்து நெருப்பை உமிழும் தன்மையையும் ஒளியையும் கொண்ட பாம்பின் பல்லை இடமாகக் கொண்டது' என்று கூறுவது இதற்கு முன்பிருந்த உண்மைபோலும்; (இன்று) என் கண்ணிலும் மனத்திலும் எப்பொழுதும் நீங்காது உறைபவரான அந்நங்கையரது மெல்லிய பார்வையிடத்ததேயாம்.

கு:—நோக்கிலிருத்தல் - உருவெளிப்பாட்டிற் காணுதலாலும், நெஞ்சிலிருத்தல் எப்பொழுதும் இடைவிடாது அவளையே சிந்தித்தலாலும் என்க. (17)

**1262.** வல்லார் புனைமா ளிகைவார் பொழிலோ
டெல்லா முளவா யினுமென் மனமோ
கல்லோ வெனுநெஞ் சொடுகன் னியராம்
மெல்லோ தியர்தாம் விளையா டிடமே.

'வல்லார் புனை மாளிகை வார் பொழிலோடு
எல்லாம் உள ஆயினும், என் மனமோ,
கல்லோ எனும் நெஞ்சொடு கன்னியர் ஆம்
மெல் ஓதியர் தாம் விளையாடு இடமே.'

பொ:—சிற்பத்திறம் வல்லோர் அழகுறச் செய்த மாளிகை, உய்யானவனம் முதலாக இடங்கள் பல இருப்பவும், கல்லைப் போன்ற வன்னெஞ்சோடு, மெல்லிய கூந்தலையுடைய கன்னியர் விளையாடப்பெறும் இடம் (இப்போது) என் மனமே போலும்.

கு:—எல்லாம் என்றது - மலைச்சோலை, கழிக்கானல் முதலியவற்றை, அழகிய மாளிகைகளையும் அவற்றைச் சூழ்ந்த பொழில்களையும் வெறுத்து, என் உள்ளத்தையே தான் விரும்பிய விளையாட்டிடம் ஆக்கினள் அக்கன்னி என்றவாறு. (18)

இப்பாடலுக்குப்பின், கீழ்வரும் பாடல் ஒரு பிரதியில் உள்ளதாக அடையாற்றுப் பதிப்பில் (45) உள்ளது.

1262 (a) என்றை யன்மனத் தொடுமெண் ணினன்மற்
றன்றங் கவைநிற் கவருட் சனகன்
முன்றந் ததவத் துறுமொய் குழலாள்
துன்றும் மணமுற் றதுசொல் லிடுவாம்.

### மணமுரசறைதல்

1263. வானவர் பெருமானும்
★ மனநினை வினனாகத்
தேனகு குழலாடன்
திருமண வினைநாளை
பூநகு மணிவாசம்
புனைநக ரணிவீரென்
றானையின் மிசையாணை
யணிமுர் சறைவித்தான்.

வானவர் பெருமானும் மனம் நினைவினன் ஆகத்,
'தேன் நகு குழலாள் தன் திருமண வினை நாளை;
பூ நகு மணி வாசம் புனை நகர் அணிவீர்' என்று,
ஆனையின் மிசை ஆணை அணி முரசு அறைவித்தான்.

பொ:—தேவர்தலைவனான இராமபிரானும் இவ்வாறு மனத்தில் சிந்தனை கொண்டிருக்க, (சனக மன்னன்) 'வண்டுகள் மகிழும் மலர்க் கூந்தலையுடைய சீதையின் திருமண வேள்வி நாளை நடைபெறும். மலர்களாலும், ஒளி மணிகளாலும், எழுது சீலைகளாலும், இயற்கையழகு பெற்ற மிதிலை நகரை ஒப்பனை செய்யுங்கள்' என்று, தனது கட்டளையை யானை மேல் தன் அழகிய பேரிகையை ஏற்றி முழக்கி நகர்க்கு அறிவித்தான்.

கு:—வள்ளுவர் யானைமீது முரசேற்றி அறைந்து அரசராணை சாற்றுதல் மரபு. வாசம் - ஆடை; வாசனையுள்ள நறுஞ் சுண்ணம் முதலியனவுமாம். திருமணவினை நாளை என்றதனால், முரசறைந்தது முதல்நாள் இரவு என்று கொள்க. அடுத்த கவி காண்க.

### நகரமாந்தர் நன்முயற்சி

1264. முரசறை தலுமான
முதியரு மிளையோரும்
விரைசெறி குழலாரும்
விரவினர் விரைகின்றார்
உரைசெறி கிளையோடு
முவகையி னுயர்கின்றார்
கரைதெரி வரிதாகு
மிரவொரு கரைகண்டார்.

முரசு அறைதலும், மான முதியரும், இளையோரும்,
விரை செறி குழலாரும், விரவினர் விரைகின்றார்,
உரை செறி கிளையோடும் உவகையின் உயர்கின்றார்,
கரை தெரிவு அரிது ஆகும் இரவு ஒரு கரைகண்டார்.

பொ :—திருமணமுரசு ஒலிக்கப்பெற்றவுடன் பெருமைமிக்க பெரியோரும், ஆண்டில் இளையோரும், மணமிக்க மலரணிந்த கூந்தலாராகிய மகளிரும் தம்முட் கூடிப் பரபரப்போடு நகரை அலங்கரிக்கத் தொடங்கியவராகவும் குலாவி யுரையாடும் உறவினர்களுடன் களிப்பு மிக்கவராகவும் ஆகிக் கரைகாண இயலாத் இரவு என்னும் கடலுக்கு ஓர் முடிவைக் கண்டனர்.

கு :—இராமபிரானுக்கும் சானகிப் பிராட்டிக்கும் இரவு கழியாது நீட்டித்தது போன்றே, முரசொலி கேட்ட அந்நகர மாந்தர்க்கும், திருமண வேள்வி காணும் பெருவிழைவால் அது நீட்டித்ததாகத் தோன்றுதலின் அனைவரும் 'கரைதெரிவரிதாகும் இரவொரு கரைகண்டார்' என்றார். கரைகண்டார் என்றதனால், இரவைக் கடல் என ஏகதேசவுருவக மாக்குக. (20)

### கதிரவன் வருகை

1265. அஞ்சன வொளியானு
மலர்மிசை யுறைவாளும்
எஞ்சலின் மணநாளைப்
புணர்குவ ரெனலோடும்

செஞ்சுடர் இருள்கீறித்
தினகர னொருதேர்மேல்
மஞ்சனை யணிகோலங்
காணிய வெனவந்தான்.

அஞ்சன ஒளியானும், அலர் மிசை உறை வாளும்,
எஞ்சல் இல் மணம் நாளைப் புணர்குவர் எனலோடும்,
செஞ் சுடர் இருள் கீறித் தினகரன் ஒரு தேர் மேல்
மஞ்சனை அணி கோலம் காணிய என வந்தான்.

பொ :—மைவண்ணனை இராமபிரானும், மலருறை மங்கையான சீதாதேவியும், நாளை எல்லா நலன்களோடும் திருமணம் புரிந்துகொள்வர் என்று (முரசறைந்து) தெரிவித்த அளவில், கதிரவன் தன் குலக்குமரனைத் திருமணக்கோலத்துடன் காணும் பொருட்டு வந்தானென்னும்படி, சிவந்த ஒளிக் கரங்களால் இருளாகிய திரையைக் கிழித்துக்கொண்டு ஒப்பற்ற இரதத்தின்மேல் வந்து தோன்றினன், (21)

இப்பாடலுக்குப்பின் கீழ்வரும் பாடல் சில பிரதிகளில் காணப்படுவதாக அடையாற்றுப் பதிப்பில் (45) உள்ளது.

கதிரவ னெழலோடும் கடிநக ரிடமெங்கும்
மதிமுக மடவாரு மைந்தரு முதியோரும்
விதிபுரி செயல்போலு மேலுல கினுமில்லாப்
புதுமையி னுறுகோலம் புனைதலை முயல்வுற்ருர்.

## நகரமாந்தர் செயல் (1266-1281)

1266. தோரண நடுவாருந் தூணுறை பொதிவாரும்
பூரண குடமெங்கும் புனைதுகில் புனைவாரும்
காரணி நெடுமாடங் கதிர்மணி யணிவாரும்
ஆரண மறைவாணர்க் கின்னமு தடுவாரும்.

தோரணம் நடுவாரும், தூண் உறை பொதிவாரும்,
பூரண குடம் எங்கும் புனை துகில் புனைவாரும்,
கார் அணி நெடு மாடம் கதிர் மணி அணிவாரும்,
ஆரண மறைவாணர்க்கு இன் அமுது அடுவாரும்.

பொ :—எங்கும் தோரணத் தம்பங்களை நாட்டுபவரும், தூண்களுக்குச் சித்திர வேலைப்பாடமைந்த உறைகளை அமைத்து அணி

பவரும, நிறை குடங்களுக்குப் பட்டாடை புனைவாரும், புயல் படிந்த உயர்ந்த மாளிகைகளை ஒளிமணிகளால் அணிசெய்வாரும், வேதமோதும் அந்தணர்களுக்கு இனிய உணவை ஆக்குபவர் களும்.

கு :— "தோரண வீதியுந் தோமறு கோட்டியும்
பூரண கும்பமும் பொலம்பா லிகைகளும்
பாவை விளக்கும் பலவுடன் பரப்புமின்."

"பத்தி வேதிகைப் பசும்பொற் றூணத்து
முத்துத் தாமம் முறையொடு நாற்றுமின்"

என்ற மணிமேகலை அடிகள் (விழாவறைகாதை. 43-45, 48, 49) இங்கு ஒப்பிடத்தக்கன. (22)

**1267.** அன்னமென் னடையாரு
மழவிடை யனையாரும்
கன்னிநன் னகர்வாழை
கமுகொடு நடுவாரும்
பன்னரு நிரைமுத்தம்
பரியன தெரிவாரும்
பொன்னணி யணிவாரும்
மணியணி புனைவாரும்.

அன்னம் மெல் நடையாரும், மழ விடை அனையாரும்,
கன்னி நல் நகர் வாழை கமுகொடு நடுவாரும்,
பன் அரு நிரை முத்தம் பரியன தெரிவாரும்,
பொன் அணி அணி வாரும், மணி அணி புனைவாரும்.

பொ :—அன்னம் போன்ற மெல்லிய நடையுடைய மகளிரும் இளங் காளைகள் போன்ற ஆடவரும், அழிவில்லாத அழகிய நக ரெங்கணும் வாழை, கமுகு முதலியவற்றை உரிய இடங்களில் நாட்டுவோரும், விலைமதித்தற்கரிய வரிசையான முத்துக்களில் பருத்துள்ளவற்றை எடுத்தணிபவரும், பொன்னாலாய அணிகளை அணிபவரும், இரத்தினங்கள் பதித்த கலன்களை அணிபவரும். (23)

1268. சந்தன மகினுறுஞ்
சாந்தொடு தெருவெங்கும்
சிந்தினர் திரிவாருஞ்
செழுமலர் சொரிவாரும்
இந்திர தனுநாணு
மெரிமணி நிரைமாடத்
தந்தமில் விலையாரக்
கோவைக ளணிவாரும்.

சந்தனம் அகில் நாறும் சாந்தொடு தெரு எங்கும்
சிந்தினர் திரிவாரும், செழு மலர் சொரிவாரும்,
இந்திர தனு நாணும் எரி மணி நிரை மாடத்து
அந்தம் இல் விலை ஆரக் கோவைகள் அணிவாரும்.

பொ :—மணங்கமழும் சந்தனம், அகில், நறுந்தயிலம் இவற்றின் குழம்புகளை வீதிகள்தோறும் தெளித்துச் செல்வோரும், அழகிய புதிய பூக்களை வாரி எங்கும் இறைப்போரும், இந்திர வில்லும் வெட்கும் ஒளிமிக்க நவமணிகள் நிரலே பதிக்கப்பெற்ற மேல் நிலைகளிலே, மதித்து முடிவு காணுதற்கரிய விலைகொண்ட முத்துச் சரங்களை அமைத்து அணிபவரும்.

கு :—சாந்து - தைலம்; விக்கிரகங்கட்கணியும் தைலக் காப்பைச் 'சாந்து சாத்துதல்' என்பது வழக்கு. (24)

1269. தளங்கிளர் மணிகாலத்
தவழ்சுட ருமிழ்தீபம்
இளங்குளிர் முளையார்நற்
பாலிகை யினமெங்கும்
விளிம்புபொன் வகைநாற
வெயிலொடு நிலவீனும்
பளிங்குடை யுயர்திண்ணைப்
பத்தியின் வைப்பாரும்.

தளம் கிளர் மணி காலத் தவழ் சுடர் உமிழ் தீபம்,
இளம் குளிர் முளை ஆர் நல் பாலிகை இனம் எங்கும்,
விளிம்பு பொன் வகை நாற வெயிலொடு நிலவு ஈனும்
பளிங்கு உடை உயர் திண்ணைப் பத்தியின் வைப்பாரும்.

பொ :—நால்வகைப் பொன்னும் விளக்கமுற ஓரங்களில் சந்து சேர்க்கப்பட்டமையால் கதிரவன் வெயிலையும், பளிங்குக் கற்களாலமைக்கப்பட்டமையால் சந்திரன் நிலவையும் வீசுகின்ற உயர்ந்த திண்ணைகளிலே (விளக்கின் தானமாகவுள்ள தண்டின்) அடிப்பகுதியில் பதிக்கப்பெற்று இரத்தினங்கள் ஒளிவிட, மேற்பகுதியில் பிழம்பொளி தவழும் விளக்குகளையும், முற்றாத குளிர்ந்த முளைகளைக் கொண்ட நல்ல பாலிகை வகைகளையும் எங்கும் அடுக்கடுக்காக வைப்பவர்களும். (25)

**1270.** மந்தர மணிமாட
முன்றிலின் வயினெங்கும்
அந்தமி லொளிர்முத்தி
னகனிரை யொளிநாறி
இந்திர னெடுவான
மீனலர் குவதென்னப்
பந்தரி னிழல்வீசப்
படர்வெயில் கடிவாரும்.

**மந்தரம் மணி மாடம் முன்றிலின் வயின் எங்கும்**
**அந்தம் இல் ஒளிர் முத்தின் அகல் நிரை ஒளி நாறி,**
**இந்திரன் நெடு வானம் ஈன் அலர்குவது என்னப்,**
**பந்தரின் நிழல் வீசப், படர்வெயில் கடிவாரும்.**

பொ :—மந்தர மலைபோற் சிறந்த வீடுகளின் முன்னிடங்களிலெல்லாம் அளவில் ஒளிவீசும் முத்துக்களின் பரந்த சரவரிசைகள் ஒளி கான்றமையால், இந்திரனுக்குரிய பெரிய சுவர்க்க லோகமே இவ்வுலகில் (வந்து) விளங்குகின்றது என்று சொல்லும்படி (முத்துப்) பந்தல்கள் இனிய நிழலைச் செய்ய (அதனால்) எங்கும் பரவும் வெயிலைத் தடுப்பவர்களும்.

கு :—திருமண நிகழும் பங்குனியுத்தர நாள் கடுவெயிற் காலமாதலால், 'படர் வெயில்' என்றும், அதன் கடுமை முத்தின் குளிர்ந்த கிரணங்களாலும் பூம்பந்தர்களாலுமன்றி நீங்கலாகாமையின், முத்தின்......ஒளி 'நாறி', 'பந்தரின்னிழல் வீச' என்றும் கூறினர். வேனிற் காலத்தே மாளிகையின் முன்னிடங்களில் அலங்காரப் பந்தல்கள் அமைத்து விழாக்கொண்டாடும் வழக்கம் அறியத்தகும்.

ஈன்–இவ்வுலகம்; ''ஈனும் உம்பரும் பெறலருங் குரைத்தே'' (ஐங்குறு. 401); ''ஈனோர் வடிவிற் காண்டல் இல்லென'' (சிலப். பதிகம். 53. கட்டுரை. 176) என்னும் முன்னூல் வழக்கும் நோக்கத்தகும். (26)

1271. வயிரமி னொளியீனு
மரகத மணிவேதிச்
செயிரற வொளிர்தீபஞ்
சிலதியர் கொணர்வாரும்
வெயில்விர வியபொன்னின்
மிடைகொடி மதிதோயும்
எயிலினி னடுவாரு
மகிலெரி யிடுவாரும்.

வயிரம் மின் ஒளி ஈனும் மரகத மணி வேதிச்
செயிர் அற ஒளிர் தீபம் சிலதியர் கொணர்வாரும்,
வெயில் விரவிய பொன்னின் மிடை கொடி மதி தோயும்
எயிலினில் நடுவாரும், அகில் எரி இடுவாரும்.

பொ:—வயிரங்கள் மின்னொளியைச் சுற்றிலும் வீசுவனவும் மரகதம் பதித்தனவுமான மேடைகளில், குற்றமற்றொளிரும் விளக்குகளைப் பணிப்பெண்கள் கொணர்ந்து வைப்பவர்களும், ஒளி கலந்த பொன்னாலாகிய செறிந்த கொடிகளைச் சந்திரன் படியும் மதில்களில் நாட்டுவோரும் அகிற்றுண்டங்களை நெருப்பிலிட்டுப் புகைப்பவர்களும். (27)

1272. பண்டியி னிறைவாசப்
பனிமலர் கொணர்வாரும்
தண்டலை யிலையோடு
கனிபல தருவாரும்
குண்டலம் வெயில்வீசக்
குரவைகள் புரிவாரும்
உண்டைகொள் மதவேழத்
தோடைக ளணிவாரும்.

பண்டியில் நிறை வாசப் பனி மலர் கொணர்வாரும்,
தண்டலை இலையோடு கனி பல தருவாரும்,
குண்டலம் வெயில் வீசக் குரவைகள் புரிவாரும்,
உண்டை கொள் மத வேழத்து ஓடைகள் அணிவாரும்.

பொ :—சகடங்களில் நிறைந்த நறுந்தண் மலர்களைக் கொண்டு வருவோரும், சோலையிலுள்ள வாழையிலை வெற்றிலைகளுடன் பல பழவகைகளைக் கொண்டு வருவோரும், காதணி ஒளி செய்யக் குரவைக்கூத்து ஆடுவோரும், கவளங்கொள்ளும் மத யானைகளின் நெற்றியில் பட்டங்களை அணிபவர்களும்.

கு :—சூட்டிக்கொள்ளுதற்கும் விருந்தளித்தற்கும் மலர் இலை கனிகளைப் பண்டிகளிற் கொணர்வாராயினர். குரவை - கைகோத்தாடல். (28)

**1273.** கலவைகள் புனைவாருங்
கலைநல தெரிவாரும்
மலர்குழன் மலைவாரும்
மதிமுக மணியாடித்
திலதமு னிடுவாருஞ்
சிகழிகை யணிவாரும்
இலவிதழ் பொலிகோல
மெழில்பெற விடுவாரும்.

கலவைகள் புனைவாரும், கலை நல தெரிவாரும்,
மலர் குழல் மலைவாரும், மதி முகம் மணி ஆடித்
திலதம் முன் இடுவாரும், சிகழிகை அணிவாரும்,
இலவு இதழ் பொலி கோலம் எழில் பெற இடுவாரும்.

பொ :—கலவைச் சந்தனம் பூசுவோரும், நல்லுடைகளை அறிந்துடுப்போரும், கூந்தலில் பூக்களைச் சூடுவோரும், அழகிய கண்ணாடியின் முன் நின்று சந்திரன் போலும் முகத்தே திலக மிடுவோரும், சிரத்தைச் சூழ அணியும் சிகழிகை என்ற மாலையைத் தரிப்போரும், இலவமலர் போலும் அதரத்தில் விளங்குஞ் செங்விறக் கோலத்தை அழகுற அணிவாரும்.

கு :—அதரத்துச் செந்நிற மூட்டுதலை,

"அம்மல ரடியும் கையும் அணிகிளர் பவளவாயும்
செம்மலர் நுதலும் நாவும் திருந்தொளி உகிரொ டங்கேழ்
விம்மிதப் பட்டுவீழ அலத்தகம் எழுதிவிட்டாள்
அம்மலர்க் கண்டம் உள்ளிட் டரிவையைத் தெரிவை தானே"

என்ற சிந்தாமணிப் பாடலாலும்(2446), இக்கவியிற் கூறப்பெற்ற கோலம் பிற்காலத்தில் வழக்கற்றமை, நச்சினார்க்கினியருரை யாலும் (தொல். பொருள். செய். 80) அறியலாம். (29)

1274. தப்பின மணிகாசுஞ்
சங்கமு மயிலன்னார்
ஒப்பனை புரிபோது
மூடலி னுகுபோதும்
துப்புற ழிளவாசச்
சுண்ணமு முதிர்தாதும்
குப்பைக ளெனவாரிக்
கொண்டனர் களைவாரும்.

தப்பின மணி காசும் சங்கமும் மயில் அன்னார்
ஒப்பனை புரி போதும், ஊடலின் உகு போதும்,
துப்பு உறழ் இள வாசச் சுண்ணமும், உதிர் தாதும்,
குப்பைகள் என வாரிக் கொண்டனர் களைவாரும்.

பொ :—மயில்போன்ற சாயலையுடைய மகளிர் அழகு மிக ஆடையும் அணிகலனும் அணியுங்காலும், தத்தம் கொழுநரோடு ஊடி, அணிகலன், மலர் இவற்றை வெறுத்து நீக்குங்காலும், தவறி வீழ்ந்த முத்துக்களையும், இரத்தினங்களையும், சங்கவளை களையும், பவழம்போற் சிவந்து மென்மையும் வாசனையும் கொண்ட கந்தப் பொடிகளையும், சிந்தும் மகரந்தங்களையும், குப்பைகளாகக் குவித்துத் திரட்டி எடுத்து அப்புறப்படுத்து வோரும்.

கு :—பெருஞ் செல்வராதலின், வறியர் போன்று சிந்தி வீழ்ந்த வற்றை விரும்பி மீண்டும் எடாராயினர் என்க. குப்பைகள் இவை யெனவே, விரும்பிப் போற்றத்தக்க பொருள்கள் பெருமதிப்பின வாதல் வேண்டும் என்பது பெறப்படும். (30)

**1275.** மன்னவர் வருவாரும்
மறையவர் நிறைவாரும்
இன்னிசை மணியாழி
னிசைமது நுகர்வாரும்
சென்னியர் திரிவாருஞ்
சிலதியர் செறிவாரும்
கன்னலின் மணவோலைக்
கடிகைகள் தெரிவாரும்.

மன்னவர் வருவாரும், மறையவர் நிறைவாரும்,
இன் இசை மணி யாழின் இசை மது நுகர்வாரும்,
சென்னியர் திரிவாரும், சிலதியர் செறிவாரும்,
கன்னலின் மண ஓலைக் கடிகைகள் தெரிவாரும்.

பொ :—அரசராக வருபவரும், வேதியராக மிகுபவரும், இனிய பண்ணிசையும், அழகிய வீணையின் இசையும் ஆகிய மதுக்களை (செவியாகிய வாயால்) பருகுபவரும், பாணர்களாக இயங்குபவரும், பணிப் பெண்டிராக மிடைபவரும், திருமணப் பத்திரிகையைக் கொண்டு நாழிகை வட்டிலால் முகூர்த்த காலத்தை ஆராய்கின்றவர்களும்.

கு :—கன்னல் - நாழிகையை அளவிட்டுக் காட்டும் வட்டிற் கருவி. யாவரையும் தன்வயமாக்கி மகிழ்வூட்டலின், இசைகள் மதுவெனப்பட்டன. இன்னிசை மது, யாழின் இசை மது என்க. (31)

**1276.** கணிகையர் தொகுவாருங்
கலைபல பயில்வாரும்
பணிபணி யெனலோடும்
பலவிரு நிலமன்னர்
அணிநெடு முடியொன்றொன்
றறைதலி னுகுமம்பொன்
மணிமலை தொகமன்னன்
வாயிலின் மிடைவாரும்.

கணிகையர் தொகுவாரும், கலை பல பயில்வாரும்,
'பணி, பணி' எனலோடும், பல இரு நில மன்னர்
அணி நெடு முடி ஒன்று ஒன்று அறைதலின் உகும் அம்பொன்
மணி மலை தொக மன்னன் வாயிலின் மிடைவாரும்.

பொ :—பொதுமகளிர் ஒன்று கூடுவோரும், கூடிக் கலைத் தொழில் பலவும் நடத்துவோரும், 'அரசன் பணித்த பணி' என்று கட்டளை பிறந்ததும், பல பெருநாடுகளை ஆளும் அரசர்களின் அழகார்ந்த நீண்ட முடிகள் ஒன்றோடொன்று தாக்குதலால் சிந்தும் அழகிய பொன்மணிகள் மலைபோலக் குவிந்து கிடக்கும் படி சனகராசனது அரண்மனை வாயிலில் நெருங்குவோர்களும்.

கு :—கணிகையர் - அரங்குகளில் வேத்தியல் நாடகம் நிகழ்த்துவோர்; அறுபத்துநான்கு கலைத்திறமும் படைத்துளோர். கலை வன்மை பற்றி, இவர்களைப் 'பண்ணும் கிளையும் பழித்த தீஞ் சொல் - எண்ணெண் கலையோர்' (சிலப். மதுரைக். ஊர்காண். 166) என்பர் இளங்கோவடிகளும், அறுபத்து நான்கு கலைகள் இன்னவென்பது வாற்சாயனம் முதலிய வடநூல்களால் அறியப் படும். பணி பணி வினைத்தொகை; பேரரசர் முதலியோர் பணித்த பணி—என்றது சனகன் கட்டளையிட்ட பணியை. "ஆயிரத்தெண்மர் அவிரோதப் பணிப்பணியால்", "பணிப் பணியால் வியவஸ்தை செய்த பரிசாவது" என இடையொற்று மிக்குச் சாஸனங்களில் இத்தொடர் வழங்கும் (பெருந்தொகை 895; S. I. I. Vol VII P 399). 'பண்டே பரமன் பணித்த பணி வகையே (திருவாய்-10-4-9). என்ற திருவாக்கும், இத்தொகை நிலைத் தொடரின் விரிவேயாம். பேரரசனுக்குத் திறை செலுத்த வேற்றரசர் முந்துதலின் 'மன்னன் வாயிலின் மிடைவாரும்' என்றார். (32)

**1277.** கேடகம் வெயில்வீசக் கிளரயில் நிலவீனக்
கோடுயர் நெடுவிஞ்சைக் குஞ்சர மதுபோல
ஆடவர் திரிவாரு மரிவையர் களிகூரும்
நாடக நவில்வாருந் நகையுயிர் கவர்வாரும்.

கேடகம் வெயில் வீசக், கிளர் அயில் நிலவு ஈனக்,
கோடு உயர் நெடு விஞ்சைக் குஞ்சரம் அது போல
ஆடவர் திரிவாரும், அரிவையர் களி கூரும்
நாடகம் நவில்வாரும், நகை உயிர் கவர்வாரும்.

பொ :—(கைக்கொண்ட) கேடயம் வெயிலொளி விடவும், விளங்கும் வேலாயுதம் நிலவொளி தரவும் - சீரிய தந்தங்களுடன் பெரும் போர்க்கலைப் பயிற்சியுமுடைய யானைகள் போல வீரர்கள் தெருவில் திரிபவரும், (அவர்கட்கு இன்பமாக) பருவமுள்ள பெண்டிர் மகிழ்ச்சி மிக்க கூத்தினை நடிப்பவரும், தங்கள் புன் முறுவலால் காணும் வீரர் முதலியோர் உயிர்களைக் கவர்பவர்களும்.

கு :—ஆடவர் கேடயங்களுடனும் வேலாயுதங்களுடனும் தெருவில் திரிதல் என்றது, திருவிழாக் காலங்களில் நகர்த் தெருக்களில் நிகழ்த்துஞ் சேரிப் போரினை எனலாம். ''மறங்கொள் சேரி மாறுபொரு செருவில், மாறுதுற்ற வடுப்படு நெற்றி...... மறவர்'' (மதுரைக்காஞ்சி. 594-6) என்பதற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையால் இதனை அறிக. 'கூர்தருவேல் வல்லார் கொற்றங் கொள் சேரிதனில்.........ஆதிரைநாள்' (தேவாரம். மயிலை. சம்பந்தர். 4) என்றூர் பெரியாரும். சேரிப்போரை மலைநாட்டார் 'வேலக்களி' என வழங்குவர். இப்போர்செய்வோர் வலக்கையில் வேலும் இடக்கையில் கேடயமும் பற்றி, இடசாரி வலசாரியாகச் சுற்றி வந்து ஒருவரையொருவர் வெல்லப் பார்ப்பராதலின் 'ஆடவர் திரிவாரும்' என்றும், திரியுங்கால் தற்காப்புக்காக எதிரியின் குறிதவறுமாறு கேடயம் பற்றி நிற்றலும், குறிநோக்கி வேலைச் சுழற்றலும் அடிக்கடி நிகழ்தலின், 'கேடயம் வெயில் வீசக் கிளர் அயில் நிலவீன' என்றும், விளையாட்டுப் போர் ஆதலின் உயிர்கவர்தல் இல்லையாயினும், அவ்வீரருயிரைக் கவர்வாருமுளர் என்பார் 'நகையுயிர் கவர்வாரும்' என்றும் கூறினர். நாடகம் - பொதுவியலான கூத்து. (33)

**1278.** கதிர்மணி யொளிகாலக்
கவர்பொரு டெரியாவா
றெதிரெதிர் சுடர்விம்முற்
றெழுதலி னிளையோரும்
மதுவிரி குழலாரு
மதிலுடை நெடுமாடம்
அதுவிது வெனவோரா
ரலமர லுறுவாரும்.

கதிர் மணி ஒளி காலக் கவர் பொருள் தெரியா ஆறு
எதிர் எதிர் சுடர் விம்முற்று எழுதலின், இளையோரும்
மது விரி குழலாரும், மதில் உடை நெடு மாடம்
அது இது என ஓரார், அலமரல் உறுவாரும்.

பொ :—மதில் சூழ்ந்த பெரிய மாளிகைகளிற் பதிக்கப்பெற்ற இரத்தினங்கள் ஒளியை எங்கும் பரப்பத், தாம் விரும்பிய பொருள்களை அறிந்து கொள்ளாதபடி எதிரெதிராகக் கிரணங்கள் பொங்கி எங்குந் தோன்றுதலால், அந்நகரத்து இளைஞர்களும் தேன் மிகுந்த மலர் நிறைந்த கூந்தலையுடைய இள நங்கையரும்,

தம் மாளிகை இதுவோ அதுவோ என்று அறியாது மனங்கலங்குவோரும்.

கு :—கவர் பொருள் - மனம் கவரும் பொருள்கள்: பெற விரும்பிய பொருளுமாம். அலமரல் - மனம் சுழலல். சுடர் விம்முற்றுக் கண் கூசச் செய்தலின் ஓராராயின ரென்க. (34)

1279. தேர்மிசை வருவாரும்
சிவிகையில் வருவாரும்
ஊர்தியில் வருவாரு
மொளிமணி நிரையோடைக்
கார்மிசை வருவாருங்
கரிணியில் வருவாரும்
பார்மிசை வருவாரும்
பண்டியில் வருவாரும்.

தேர் மிசை வருவாரும், சிவிகையில் வருவாரும்,
ஊர்தியில் வருவாரும், ஒளி மணி நிரை ஓடைக்
கார் மிசை வருவாரும், கரிணியில் வருவாரும்,
பார் மிசை வருவாரும், பண்டியில் வருவாரும்.

பொ :—தேரேறி வருபவரும், பல்லக்கில் வருபவரும், வாகனங்களில் வருபவரும், ஒளிமிக்க இரத்தினங்களிழைத்த முகபடாமணிந்த மேகம் போன்ற களிற்றின்மேல் வருபவரும், பிடியானை மேல் வருபவரும், தரையில் நடந்துவருபவரும், வண்டிகளில் அமர்ந்து வருபவரும்.

கு :—ஊர்தி - ஒட்டகம், குதிரை முதலியன. மேகம் மின்னலோடு இயங்குதல் போல யானை, ஒளி மணி நிரையுள்ள ஓடையோடு இயங்கியது. கரிணி - பெண் யானை, முன் கூறியது, ஆண் யானை என்க. பார்மிசை வருதல் - நடந்துவருதல். (35)

1280 முத்தணி யணிவாரும்
மணியணி முனிவாரும்
பத்தியி னிமிர்செம் பொற்
பலகலன் மகிழ்வாரும்

தொத்துறு தொழின்மாலை
சுரிகுழ லணிவாரும்
சித்திர நிரைதோயுஞ்
செந்துகில் புனைவாரும்.

முத்து அணி அணிவாரும், மணி அணி முனிவாரும்,
பத்தியின் நிமிர் செம் பொன் பலகலன் மகிழ்வாரும்,
தொத்து உறு தொழில் மாலை சுரி குழல் அணிவாரும்,
சித்திரம் நிரை தோயும் செந்துகில் புனைவாரும்.

பொ :—முத்தினாலமைத்த கலன்களைப் பூண்போரும், முன் அணிந்த இரத்தின அணிகளை வெறுத்து நீக்குவோரும், ஒழுங்காக உயர்ந்த செம்பொன்னாலான பலவகை அணிகளை விரும்பியணிவோரும், பூங்கொத்துப் பொருந்திய வேலைப்பாடுள்ள மாலையைச் சுருண்ட கூந்தலிலே சூடிக் கொள்வோரும், சித்திர வேலைகளின் ஒழுங்கமைந்த செவ்வாடையை உடுப்போரும்.

கு :—சுரிகுழல் - கடை குழன்ற கூந்தல். சித்திர நிரை – கிளி, மயில் பூங்கொடி முதலிய சித்திரங்களின் வரிசை. அவ ரவர் விருப்பிற்கும் இயல்பிற்கும் ஏற்ப அணிவகை பலவாயின. (36)

**1281.** விடநிகர் விழியாரு
மமுதெனு மொழியாரும்
கிடைபுரை யிதழாருங்
கிளர்நகை யொளியாரும்
தடமுலை பெரியாருந்
தனியிடை சிறியாரும்
பெடையன நடையாரும்
பிடியென வருவாரும்.

விடம் நிகர் விழியாரும், அமுது எனும் மொழியாரும்,
கிடை புரை இதழாரும், கிளர் நகை ஒளியாரும்,
தடம் முலை பெரியாரும், தனி இடை சிறியாரும்,
பெடை அன நடையாரும், பிடி என வருவாரும்.

பொ :—நஞ்சுபோலும் கண்களையுடையவரும், அமுதுபோலும் இன்சொல்லையுடையாவரும், நெட்டிபோலும் சிவந்த அதரம்

உடையவரும், வெண்முறுவலின் விளக்கம் பெற்றவரும், அடி பரந்த தனங்கள் பருத்தவரும், ஒப்பற்ற இடை சிறுத்தவரும், அன்னப்பேடு போன்று நடையுடையாரும், பெண் யானை என்னும்படி இயங்குகின்றவரும் (ஆயினர் நகர மகளிர்.)

கு :—கிடை - நெட்டி ; இதழுக்கு உவமை. முடிவாக வினை முற்று வருவித்துரைக்கப்பட்டது. விழி, விடத்தன்மையதாகவும் மொழி அமுதின் தன்மையதாகவும், இதழ், செந்நிறத்த தாகவும் பற்கள், வெண்ணிறத்தனவாகவும், முலை, பெரியன வாகவும் இடை, சிறியனவாகவும், இளமங்கையர் - அன்னப் பேடு போன்ற நடையினராகவும் – முதுமங்கையர் பிடியானை போன்ற நடையினராகவும் இயங்கினர் என முரண்டொடைகள் அமைந்துள்ளமை காண்க. (37)

## பல செல்வமும் நிறைந்து மணநாள் சிறத்தல்

**1282.** உண்ணிறை நிமிர்செல்வ
மொருதுறை செலவென்றும்
கண்ணுற லரிதென்றுங்
கருதுத லரிதம்மா
எண்ணுறு சுடர்வானத்
திந்திரன் முடிசூடும்
மண்ணுறு திருநாளே
யொத்ததம் மணநாளே.

உள் நிறை நிமிர் செல்வம் ஒரு துறை செல என்றும்
கண்ணுறல் அரிது, என்றும் கருதுதல் அரிது, அம்மா!
எண் உறு சுடர் வானத்து இந்திரன் முடி சூடும்
மண்ணுறு திருநாளே ஒத்தது அம் மண நாளே.

பொ :—(இவ்வாறு) நகரத்துள் நிறைந்து கிளர்ந்த பெருஞ் செல்வம் ஒரு துறைப்பட்டதாகக் கண்ணுற் காணுதல் என்றும் அரியதாம்; (அதன் வரம்பை) மனத்தால் மதித்தலும் என்றும் அரிதாம்: அத்திருமண விழா நாளானது மதிக்கத்தக்க ஒளி திகழும் விண்ணுலகில் தேவர் கோன் திருமுடி தரிக்கின்ற அபி டேகத்தோடு கூடிய பெருவிழா நாளையே நிகர்த்தது.

கு :—மேலே மிதிலைநகரின் பெருமையைப் பலவகையாகவும், சிறப்பித்து வந்தவர், அந்நகரின் செல்வவளம் ஒருபடிப்பட்ட

தன்றிப் பலவாற்றுலும் மேம்பாடுடைமையால், காட்சிக்கும் கருத்துக்கும் அப்பாற்பட்டதென்ருர். மண்ணுறு திரு நாள் - இந்திராணியுடன் கூடி நடத்தும் அபிடேகத் திருவிழா; இதனை, 'மண்ணுமங்கலம்' என்பர் (புறப் - வெண். பாடாண் 36). முடி சூடுவதற்குமுன் மஞ்சன மாடுதல் மரபாதலின் 'முடிசூடு மண்ணுறு திருநாள்' என்ருர்; ''ஒக்க அபிடேகஞ் செய்யும் உரிமைக்கண் - தக்க தலைமைத் தனித்தேவி'' என்ருர் கூத்தரும். (குலோத்-உலா-36). (38)

## தயரதன் மணமண்டப மடைதல் (1283 – 1284)

1283. கரைதெரி வரியது கனகம் வேய்ந்தது
☆ வரையென வுயர்ந்தது மணியிற் செய்தது
நிரைவளை மணவினை நிரப்பு மண்டபம்
அரசர்த மரசனு மணுகன் மேயினுன்.

கரை தெரிவு அரியது, கனகம் வேய்ந்தது,
வரை என உயர்ந்தது, மணியின் செய்தது,
நிரை வளை மண வினை நிரப்பும் மண்டபம்,
அரசர் தம் அரசனும் அணுகல் மேயினுன்.

பொ :—எல்லை காண இயலாததும், செம் பொற்றகடுகளா லியன்றதும், மலைபோலுயர்ந்ததும், நன்மணிகள் பதித்து அமைத்ததும் ஆன - வளைவரிசைகளை யணிந்த கரத்தவளான சிதையின் திருமண விழாவிற்கு ஏற்ற பொருள் நிரம்பிய - மண்ட பத்தை, வேந்தர் வேந்தனுன தயரதனும் அடைய விரும்பினன்.

கு :—நிரைவளை - அன்மொழித்தொகை. மணவினை நிரப்பு மண்டபம் - திருக்கல்யாணமண்டபம். (39)

1284. வெண்குடை யிளநிலா விரிப்ப மின்னெனக்
கண்குடை யினமணி வெயிலுங் கான்றிடப்
பண்குடை வண்டினம் பாட வாடன்மா
மண்குடை தூளிவிண் மறைப்ப வேகினுன்.

வெண் குடை இள நிலா விரிப்ப, மின் எனக்
கண் குடை இன மணி வெயிலும் கான்றிடப்,
பண் குடை வண்டினம் பாட, ஆடல் மா
மண் குடை தூளி விண் மறைப்ப, ஏகினுன்.

பொ :—வெள்ளிய சந்திரவட்டக் குடைகள் இளங்கதிர்களைப் பரப்பவும், மின்னல்போன்று பார்ப்பவர் விழி கூசச் செய்யும் அணிகளின் மணியினங்கள் வெங்கதிர்களை வீசவும், மலரைக் குடைந்து மதுவுண்ணும் வண்டின் கூட்டம் இன்னிசை எழுப் பவும், வெற்றிக் குதிரைகள் (நிலத்தில் விரைந்து மிதித்தலால்) உண்டாகிய துகள்கள் ஆகாயத்தை மறைக்கவும் (தயரதன்) சென்றான்.

கு :—குடை வண்டு பண்பாட என இயையும். குடைதற்குச் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. ஆடல் – வெற்றி; நாட்டி யம் எனினுமாம். (40)

## முரசம் முதலியன ஆர்த்தல்

1285. மங்கல முரசின மழையி னார்த்தன
சங்குகள் முரன்றன தாரை போரெனப்
பொங்கின மறையவர் புகலு நான்மறை
கங்குலி னொலிக்குமா கடலும் போன்றவே.

மங்கல முரசு இனம் மழையின் ஆர்த்தன,
சங்குகள் முரன்றன, தாரை போர் எனப்
பொங்கின, மறையவர் புகலும் நான் மறை
கங்குலின் ஒலிக்கும் மா கடலும் போன்றவே.

பொ :—மங்கல முரசங்கள் மேகங்கள் போலப் பெருமுழக்கஞ் செய்தன; சங்குகள் ஒலித்தன; தாரை என்னும் குழற்கருவி கள் போர்க்காலத்துப்போலப் பொங்கியதிர்ந்தன; வேதிய ரோதும் நான்குவேதங்களும், இரவில் மிக்கொலிக்கும் பெருங் கடலையும் நிகர்த்தன.

கு :—' நான்மறை......கடலும் போன்றவே' என்ற உம்மை 'அக்கடலின் ஒலியே அன்றி' என்ற குறிப்பும் கொண்டது. (41)

## தயரதனோடு சென்ற அரசர்கள்

1286. பரந்ததேர் களிறுபாய் புரவி பண்ணையில்
தரந்தர நடந்தன தானை வேந்தனை
நிரந்தரந் தொழுதெழு நேமி மன்னவர்
புரந்தரன் புடைவரு மமரர் போன்றனர்.

பரந்த தேர் களிறு பாய் புரவி பண்ணையில்
தரம் தரம் நடந்தன தானை வேந்தனை
நிரந்தரம் தொழுது எழும் நேமி மன்னவர்
புரந்தரன் புடை வரும் அமரர் போன்றனர்.

பொ :—பரவிநின்ற தேர்களும், யானைகளும், பாய்ந்து செல்லும் குதிரைகளும், கூட்டமாய் வரிசை வரிசையாய் நடந்து சென்றன. அச்சேனைகளையுடைய தயரத சக்கரவர்த்தியை இடைவிடாமல் வணங்கி எழுகின்ற ஆணை செலுத்தும் வேந்தர், இந்திரன் அருகிற் செல்லும் தேவரை ஒத்தனர். (42)

### அனைவரும் முறையாக வருதல்

1287. அனையவன் மண்டப
மணுகி யம்பொனின்
புனைமணி யாதனம்
பொலியத் தோன்றினன்
முனைவரு மன்னரு
முறையி னேறினர்
சனகனுந் தன்கிளை
தழுவ வேறினன்.

அனையவன் மண்டபம் அணுகி அம் பொனின்
புனை மணி ஆதனம் பொலியத் தோன்றினன்
முனைவரும் மன்னரும் முறையின் ஏறினர்
சனகனும் தன் கிளை தழுவ ஏறினன்.

பொ :—அங்ஙனம் வந்த தயரதன் மண மண்டபத்தை யடைந்து, சிறந்த பொன்னில் நவமணி பதித்தமைத்த பீடத்திலே ஏறி, அழகுடன் விளங்கினன்; முனிவரும் ஏனை வேந்தரும் முறைப்படி, தத்தம் ஆதனங்களில் அமர்ந்தனர்; சனக மன்னனும் உறவினர் சூழத் தனக்குரிய பீடத்தில் ஏறியிருந்தான்.

கு :—மண மண்டபத்தில், தயரதன் சக்கரவர்த்தியாதலாலும் சம்பந்தியாதலாலும் பொன்மணிகளாலான ஆதனத்தில் முதலில் வீற்றிருந்தானென்பார், 'அனையவன்....பொலியத்தோன்றினன்' என்றும், அவன் வீற்றிருந்த பின்னரே, முனிவரும் அரசர்களும் முறைப்படி தத்தம் ஆசனங்களில் அமர்ந்தனர் என்பார் 'முறையினேறினர்' என்றும், இவரெல்லாரையும்

உபசரித்தற்குரியவர் தன்வழியினரும் தானுமே யாதலின் "சனகனும் தன்கிளை தழுவ வேறினன்" என்றும் கூறினர். (43)

### மண்டபம் பொன்மலையை ஒத்தல்

1288. மன்னரு முனிவரும்
வானு ளோர்களும்
அன்னமென் னடையணங்
கனைய மாதரும்
துன்னினர் துவன்றலிற்
சுடர்கள் சூழ்வரும்
பொன்மலை யொத்ததப்
பொருவில் கூடமே.

மன்னரும், முனிவரும், வான் உளோர்களும்,
அன்னம் மெல் நடை அணங்கு அனைய மாதரும்,
துன்னினர் துவன்றலில், சுடர்கள் சூழ்வரும்
பொன்மலை ஒத்தது அப் பொரு இல் கூடமே.

பொ :—அரசரும் முனிவரும், தேவலோகவாசிகளும், அன்ன நடையினரான தேவமாதர் போன்ற நகர மகளிரும் நெருங்கி வந்து நிறைதலால் ஈடிலா மண்டபம், நாள் மீன்களும் கோள் மீன்களும் வலஞ்செய்து வரப்பெறும் மேருமலையை நிகர்த்தது.

கு :—கூடத்துக்கு மேருவும், மன்னர் முதலோர்க்குச் சுடர் களும் உவமைகள். தங்கள் வேண்டுகோளால் ஆதியஞ் சோதியே நிலத்திற்றோன்றித் திருமகளை மணம்புரிதலால், அத் திருமணத்தைக் காணத் தேவர்களும் வருவாராயினர் என்க. (44)

### மண்டபம் அண்டகோளத்தை ஒத்தல்

1289. புயலுள மின்னுள பொருவின் மீனுள
இயன்மணி யினமுள சுடரி ரண்டுள
மயன்முதற் றிருத்திய மணிசெய் மண்டபம்
அயன்முதற் றிருத்திய வண்ட மொத்ததே.

புயல் உள மின் உள, பொரு இல் மீன் உள,
இயல் மணி இனம் உள, சுடர் இரண்டு உள,
மயன் முதல் திருத்திய மணி செய் மண்டபம்
அயன் முதல் திருத்திய அண்டம் ஒத்ததே.

பொ :—மயன் என்னும் தெய்வத் தச்சனால் ஆதியில் திருத்தமாக அமைக்கப்பட்ட இரத்தினம் இழைத்த அம்மண்டபத்தில் (மகளிர் கூந்தலாகிய) மேகங்களுள்ளன; (அவர்களின் இடைகளாகிய) மின்னல்கள் உள்ளன; (அவர் கண்களாகிய) நிகரற்ற விண்மீன்களுள்ளன: (அவர் அணிகலன்களாகிய) ஒளியியங்கும் மணியினமான தாரகைக் கணங்கள் உள்ளன; (தயரத சனகர்களாகிய) இரவி மதி என்ற இரு சுடர்களுள்ளன; ஆதலால், அம்மண்டபம் படைப்புக் கடவுள் ஆதியில் அழகுடன் ஆக்கிய அண்டகோளத்தைப் போன்றதாம்.

கு :—ஆகாய வட்டத்துள்ள மேகம், மின், இருசுடர், நாள், கோள், தாரகை இவற்றைக் கூறவே, நிலத்துள்ள உயிர்ப் பொருள் உயிரில்பொருள் யாவும் அடங்கின. இரு சுடர் - இரவி, மதி. நாள் - 27 நட்சத்திரங்கள். கோள் - இரு சுடரொழிந்த கிரகங்கள். தாரகை - விண்ணிலுள்ள ஏனைய ஒளிக் கூட்டங்கள். தயரதன் சூரியகுலத்தவன், சனகன் சந்திர குலத்தவன் என்ப.

"சந்திர னிரவி தன்னைச் சார்வதோர்
தகைமை தோன்ற
இந்திர திருவன் றன்னை யெதிர்கொள்வா
னெழுந்து போந்தான்"

என இவ்வாறே உவமை கூறப்பட்டிருப்பதும் காண்க. (45)

மண்டபம் மாலின் வயிற்றை ஒத்தல்

1290. எண்டவ முனிவரு மிறைவர் யாவரும்
அண்டரும் பிறரும்புக் கடங்கிற் றாதலின்
மண்டபம் வையமும் வானும் வாய்மடுத்
துண்டவன் மணியணி யுதர மொத்ததே.

எண் தவ முனிவரும் இறைவர் யாவரும்
அண்டரும் பிறரும் புக்கு அடங்கிற்று; ஆதலின்,
மண்டபம், வையமும் வானும் வாய்மடுத்து
உண்டவன் மணி அணி உதரம் ஒத்ததே.

பொ :—மதிக்கத்தக்க தவத்தோரான வசிட்டன் கோசிகன் முதலிய இருடிகளும், எல்லா அரசர்களும், தேவர்களும், ஏனையோரும் வந்து அடங்கப்பெற்றதாதலின், அம்மண்டபம், மண்ணையும் விண்ணையும் தன் மணி வாயில் இட்டுண்ட திருமாலின் நீல மணி போன்ற அழகிய திருவயிற்றை நிகர்த்ததாம்.

கு :—இங்கு, இறைவர் என்றது உலக பாலர்களாகிய தேவர் அரசர் முதலிய யாவரையும் குறிக்கும். அண்டங்கள் யாவும் உண்டவன் என்பார், அவற்றின் காரணமான ஐம்பூதங்களுள் முதலும் கடையுமாகிய வையமும் வானும் கூறினார். பிரளய காலத்தில் பெருமான் உலகையுண்டு ஆலிலைமேற் பள்ளிகொண்டவனாய்ப் புவனமனைத்தையும் அணிவயிற்றடக்கிக் காப்பவன் என்பர். (46)

**கவிக் கூற்று**

1291. தராதல முதலுல
கனைத்துந் தள்ளுற
விராவின குவிந்தன
விளம்ப வேண்டுமோ
அராவணை துறந்துபோந்
தயோத்தி யெய்திய
இராகவன் செய்தியை
யியம்பு வாமரோ.

தராதலம் முதல் உலகு அனைத்தும் தள்ளுற
விராவின, குவிந்தன, விளம்ப வேண்டுமோ ?
அரா அணை துறந்து போந்து அயோத்தி எய்திய
இராகவன் செய்தியை இயம்புவாம் அரோ.

பொ :—பூவுலகு முதல் பிறவுலகங்களில் வாழும் உயிர்கள் யாவும் (மண வேள்வி காணும் வேட்கை) தூண்டி உந்துதலால் கலந்து அங்குத் திரண்டன என்றால், அக் கூட்ட மிகுதியைச் சொல்லவும் வேண்டுமோ ? ஆதிசேடனாகிய பள்ளியை நீங்கி வந்து அயோத்தி நகரமடைந்த இராமபிரான் செயலை (இனிக்) கூறுவோம்.

கு :—தராதலம் - பூமியாகிய இடம் ; தள்ளுற - உந்த ; கூட்ட மிகுதியால் இயல்பிற் செல்லலாகாமையின் தள்ளுற என்றுமாம்'

பல உலகிலுள்ளாரும் செறிதலின், இவர் இவ்வுலகினர் என்று தெளியலாகாமையின், 'விராவின', 'குவிந்தன' என்றும், ஊர், நகர், நாடு, தேசம், உலகு இவற்றில் உறைபவர்மிக்குத் தொகவே வரம்பு கடத்தலின் அளவு கூற இயலாது என்பார், 'விளம்ப வேண்டுமோ' என்றும் கூறினர். மேற்கூறிய வரம்பின்மைக்கு, அவதார மூர்த்தியின் திருமணமே காரணம் என்பது, பின்னிரண்டடிகளாற் பெறப்படும். (47)

## இராமபிரான் திருமஞ்சனமாடல்

**1292.** சங்கினங் தவழ்கட லேழிற் றந்தன
சிங்கலி லருமறை தெரிந்த தீர்த்தங்கள்
கங்கையே முதலிய கலந்த நீரினல்
மங்கல மஞ்சன மரபி னடியே.

சங்கு இனம் தவழ் கடல் ஏழில் தந்தன
சிங்கல் இல் அரு மறை தெரிந்த தீர்த்தங்கள்
கங்கையே முதலிய கலந்த நீரினல்
மங்கல மஞ்சனம் மரபின் ஆடியே.

பொ:—சங்கின் கூட்டம் ஊர்ந்து செல்லும் எழு கடல்களினின்றும் கொணரப் பெற்றனவும், குற்றமற்றனவும், அருமையுடையனவுமான வேதங்களில் எடுத்துக் கூறப்பட்ட புனிதமான புனல்களுள் கங்கை முதலிய நீர்கள் கலந்தனவுமான புண்ணிய தீர்த்தங்களால் மங்களகரமான திருமஞ்சனத்தை முறைப்படி ஆடி.

கு:—மேற் கவிகளில் தசரதன் மண மண்டபத்துக்கு வந்ததன் சிறப்பும் அம் மண்டபத்தின் பெருமைகளும் கூறப்பட்டன. இக் கவி முதல் - இராமபிரான், அங்கு வருவதற்கு முன்பு நிகழ்ந்த செயல்களைப் பல பாடல்களால் வருணிக்கின்றார். திருமணநிகழ்ச்சிக்கு முன் நிகழ வேண்டிய முதற்செயல் 'மங்கள ஸ்நானம்' ஆதலால், கடல்நீர் நதிநீர் யாவும் கலந்த புண்ணிய தீர்த்தங்களால் புரியும் நீராட்டத்தை இராமபிரான் முதலில் முடித்துக்கொண்டார் என்றபடி. (48)

## திருமண் தரித்தல்

1293. என்றுநான் முகன்முதல் யாரும் யாவையும்
நின்றபே ரிருளினை நீக்கி நீணெறி
சென்றுமீ ளாக்குறி சேரச் சேர்த்திடு
தன்றிரு நாமத்தைத் தானுஞ் சாத்தியே.

என்றும் நான்முகன் முதல் யாரும் யாவையும்
நின்ற பேர் இருளினை நீக்கி நீள் நெறி
சென்று மீளாக் குறி சேரச் சேர்த்திடு
தன் திரு நாமத்தைத் தானும் சாத்தியே.

பொ :—(படைப்புக் கடவுளான) பிரமன் முதலாக அவனாற் படைக்கப்பட்ட (தேவகணத்தார் மக்கள் முதலிய) உயர்திணைப் பொருள்களிடத்தும் சராசரங்களான அஃறிணைப் பொருள்களிடத்தும் நிலைபெற்று நின்ற பெரிய அவிச்சையாகிய இருளைப் போக்கி, மீண்டு வருதலில்லாத முத்தியாகிய குறிக்கோளை அவை சென்று சேரும்படி செய்வித்திடும் தன் திருநாமத்தைத் தானும் தரித்து.

கு :—இதனால், நான்முகன் முதலாக உள்ள ஆன்மகோடிகளும், ஏனைச் சராசரங்களும் அவிச்சை நீங்கி முடிவில் முத்தி பெறுவதற்கு உரியன என்பதும், அவ்வாறு பெறுவதற்குத் திருமண்காப்புத் தரித்தல் இன்றியமையாததென்பதும் பெறப்படும். நீள்நெறி - அர்ச்சிராதி மார்க்கம். மீளாக்குறி - மீண்டு வருதலில்லாத முத்திநிலை. "இந்தச் சீவனைச் சரீரமாகவுடைய நான், அசித்திற் பிரவேசித்து அவற்றின் நாமரூபங்களைப் பிரகாசிப்பிக்கின்றேன்", என்பது வேத (சாந்தோக்கியம்) முடிபாதலின் 'யாவையும்.....சேர' என்றார். இதுபற்றிப்போலும் உயிருள்ளனவும் இல்லனவுமாகியவற்றுக்குத் திருமண் காப்பிடுவதும் என்க. கண்ணபிரான், ததிபாண்டனோடு அவன் தயிர்த் தாழியும் வீடுபெற அருளிய திறம் இங்கு நினைப்பிடத்தகும்.

"அறந்தலை நிறுத்தி வேதம் அருள்சுரந் தறைந்த நீதித் திறந் தெரிந்துலகம் பூணச் செந்நெறி செலுத்த" அவதரித்த மூர்த்தியாதலின், தன் திருநாமத்தைத் தானே சாத்திக்கொண்டான் என்றார். திருநாமம் – திருமாலின் பன்னிரு திருநாமங்களையும் கூறிப் பன்னிரண்டுறுப்புக்களில் அணிந்துகொள்ளும் ஊர்த்துவ புண்டரம். "ஈராறு நாமம் உரைசெய்து மண்கொ டிடுவார்கள் காணும் இமையோர்" (வில்லி பாரதம். 9-ஆம் போர் 1) என்றார் பின்னோரும். 'சூனிய நெற்றியோடு எந்தச் சுப காரியமும் செய்ய

லாகாது' என்பது விதியாதலின், 'மங்கள ஸ்நானம்' செய்தபின் திருநாமந் தரித்தல் கூறப்பட்டது.

இவ்வாறே, திருமணச் சடங்குகளில், மங்கல நீராட்டத் துக்குப் பின், தத்தம் சமயாசாரப்படி, திருநீறு முதலியவை தரித்தல் சம்பந்தர் சுந்தர மூர்த்திகளின் வரலாறுகளாலும் தெரிய லாம். எனவே, இப்பாடலை வேறோரிடத்து அமைத்துச் சில சுவடிகளில் எழுதப்பட்டிருப்பது பொருத்த மன்றென்க.

இராமபிரானது பெருந் தொண்டராகிய அனுமனைத் திரு மண்காப்புத் தரித்தவராகவும் (சம்புமாலி-21) துளவமாலை பூண்டவராகவும் (மாயாசனக-58) கம்பரும், உத்தர காண்ட அசுவமேதப் படலத்தில் இராமபிரான் வேள்வி தொடங்கற்கு முன் 'திருமணி மார்பன் தன் திருநெற்றி, திகழ்திரு நாமமுஞ் சாத்தி' (70) என்று அந்நூலாசிரியரும் பாடிச் செல்லுதல் அறியத்தக்கது. (49)

இப்பாடல், கனகசுந்தரம் பிள்ளையவர்கள் பதிப்பில் 66 ஆவதாகக் காணப்படுகிறது,

"இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை; வேறு சில பிரதி களில், இது, 49-ஆம் பாடலாகக் காணப்படுகின்றது. 1301-ஆம் கவியில் திலகங் கூறப்படுவதால், இது அதிகப் பாடலென்பர் பலர்" என்பது அடையாற்றுப் பதிப்பிற் கண்ட குறிப்பு.

### ஆதியஞ்சோதியை அடிவணங்கல்

1294. கோதறு தவத்துத்தன்
குலத்து ளோர்தொழும்
ஆதியஞ் சோதியை
யடிவ ணங்கினன்
காதியல் கயல்விழிக்
கன்னி மார்களை
வேதியர்க் கருமறை
விதியி னல்கியே.

கோது அறு தவத்துத் தன் குலத்து உளோர் தொழும்
ஆதி அம் சோதியை அடி வணங்கினன்
காது இயல் கயல் விழிக் கன்னிமார்களை
வேதியர்க்கு அரு மறை விதியின் நல்கியே.

பொ:—காதளவு செல்லும் கயல் போன்ற கண்களுடைய கன்னி மார்களை, அந்தணர்களுக்கு வேதவிதிப்படி கன்னிகாதனஞ் செய்துவிட்டுப் பின், குறைவற்ற தவமுடைய தன்குல முன்னோர் தொழுதுவரும் பழமையான பரஞ்சோதியைத் திருவடி தொழுது வணங்கினான்.

கு:—அரசர் குலத்துதித்த தான், உத்தமகன்னிகையைத் தான பூர்வமாக அடைவதற்குமுன், அந்தணர்கட்கு அழகிய கன்னிமார்களைத் தானம் புரிந்தான் என்றவாறு. வேதியர்-வேதிய ரான பிரமசாரிகள்; அவர்கள் விரும்பி ஏற்கத்தக்கவராயிருந்தனர் கன்னியர் என்பார், 'காதியல் கயல்விழிக் கன்னிமார்களை' என்றார்- வழி வழி வணங்கிவருங் குலதெய்வ மாதலின், " ஆதியஞ் சோதி " எனப்பட்டது. " இராமர் திருமஞ்சனம் ஆடித் தூய மனத்தினராய்த் தம் தேவியாகிய சீதையுடன் சென்று, திரு மாலாகிய நாராயணனை ஆராதித்தார் "—என்ற கருத்துப்பட, வான்மீக முனிவரும் அயோத்தியா காண்டம் ஆறும் சருக்கத்தில் கூறுதல் ஒப்பிடத்தகும். ஆதியஞ் சோதியான இம் மூர்த்தமே இட்சுவாகுவால் அயோத்தியில் பிரதிட்டை பெற்ற 'பணியரங்கப் பெரும்பாயற் பரஞ்சோதி' என்று குலமுறையிலும் கூறப்பட்டதாம். 'ஆதியஞ் சோதியுருவை அங்கு வைத்து, இங்குப் பிறந்த வேத முதல்வன்' (திருவாய்-3-5-5) ஆதலின், தன் அவ தாரத்துக்கு மூலமான 'பழைய சோதி மூர்த்தியை' எனினுமாம். 'உலகனைத்தும் விளக்குஞ் சோதி, வெங்கதிரோன் குலத்துக் கோர் விளக்காய்த் தோன்றி, விண்முழுதும், உயக் கொண்ட வீரன்' (10.1.) என்றார் குலசேகரப் பெருமானும். எனவே 'சிறு சோதி பெருஞ்சோதியை அடி வணங்கிற்று' என்றவாறும். அர சரும் சமயாசிரியரும், தாம் வழிபடும் தெய்வ மூர்த்தங்களுடன் வேற்றிடங்கட்குச் செல்லுதல் மரபாதலால், அயோத்தி வேந்த ரால் வழிபடப் பெறும் குலதெய்வமே மிதிலையிற் கொணர்ந்து வழிபடப்பட்டதென்க. (50)

### கலவைச்சாந்தணிதல்

1295. அழிவரு தவத்தினோ
டறத்தை யாக்குவான்
ஒழிவருங் கருணையோ
ருருவு கொண்டென

எழுதரு வடிவுகொண்
டிருண்ட மேகத்தைத்
தழுவிய நிலவெனக்
கலவை சாத்தியே.

அழிவரு தவத்திேடு அறத்தை ஆக்குவான்
ஒழிவு அரும் கருணை ஓர் உருவு கொண்டென
எழுதரு வடிவு கொண்டு இருண்ட மேகத்தைத்
தழுவிய நிலவு எனக் கலவை சாத்தியே.

பொ :—(அரக்கர் முதலிய தீயோரால்) அழிந்து வருகின்ற தவத்தையும் தருமத்தையும் மீள உண்டாக்கிக் காக்க வேண்டி,- நீங்காத கருணையே ஓர் வடிவு எடுத்தாற்போல ஓவியத்தமைக்க வொண்ணு உருவந்தாங்கி-இருண்டு வந்த மேகத்தைத் தழுவி நின்ற வெண்ணிலவைப் போலக் கலவைச் சந்தனக் குழம்பு அணிந்து.

கு :—'அறத்தை ஆக்குவான் உருவு கொண்டென இருண்ட மேகத்தை என இயையும். தவமும் அறமும் தாங்கிக் காப்பதற்குக் கருணை இன்றியமையாதென்பதும், அக்கருணையும் வேண்டிய இடத்துப் பொழியத்தக்கபடி அமைய வேண்டுமென்பதும் தோன்றத் "தவத்திேை டறத்தை யாக்குவான் கருணையோர் உருவு கொண்டென...இருண்ட மேகத்தை" என்ருர் 'ஆருக் கனலாற்று மோர் அஞ்சனமேகம்' (அயோத்-நகர் நீங்கு 125) என்பர் பின்னும். மேகத்தைத் தழுவிய நிலவு, நீலத்திருமேனி யிற் பூசிய சந்தனக் குழம்புக்கு உவமை. ஆதியஞ் சோதியை வழிபட்டபின் அணிந்த இச்சாந்து, அத்தெய்வத்தின் பிரசாத மாகப் பெற்ற உயர்ந்த கலவைச் சந்தனம் எனல் தகும். 'மெய்யிட நல்லதோர் சாந்தமுந் தந்து' (திருப்பல்லாண்டு 8) என்பது பெரியார் திருவாக்கு; இதனைக் 'கோயிற் சாந்து' என்பர் முன்னோர் (திருப்பல்லாண்டு, 10-வியாக்). (51)

சுழியம் சூடல்

1296. மங்கல முழுநிலா
மலர்ந்த திங்களைப்
பொங்கிருங் கருங்கடல்
பூத்த தாமெனச்

செங்கிடைச் சிகழிகைச்
செம்பொன் மாலேயும்
தொங்கலுந் துயல்வரச்
சுழியஞ் சூடியே.

மங்கல முழு நிலா மலர்ந்த திங்களேப்
பொங்கு இரும் கருங்கடல் பூத்ததாம் எனச்
செங்கிடைச் சிகழிகைச் செம்பொன் மாலேயும்
தொங்கலும் துயல்வரச் சுழியம் சூடியே.

பொ :—பொங்கியெழும் பெரிய கரிய கடலானது நன்மை தரும் பூரண கலேயுடன் விளங்கும் சந்திரனேத் தோற்றுவித்தது போல, சிவந்த கிடேச்சால் அமைந்த வாசிகையில் செம்பொன் மாலேயும் குஞ்சங்களும் புரளாநிற்க, (தன் முடிக் கொண்டையில்) சுழியம் என்ற அணியைச் சூடி.

கு :—தம் திருமுடியின் அலங்காரமே திருமணம் நிகழும் பங்குனியுத்தர நாளின் தோற்றத்தை அளித்த தென்பார், 'மங்கல முழுநிலா மலர்ந்த திங்களே' என்ருர். கருங்கடல் திங்களேப் பூத்தது – திருமுடிச் சுழியத்துக்கும், அத்திங்களினின்று நிலாக் கதிர்கள் தோன்றுவது - சிகழிகையில் பொன்மாலேயும் தொங்கலும் துயல்வருவதற்கும் ஏற்ற உவமைகளாதல் காண்க. சிகழிகை - செங்கிடேச்சு முதலியவற்ருல் நெற்றியிற் சூழச் சூட்டுவதும் குஞ்சங்களுடையதுமான மாலே. சுழியம் - முடிக் கொண்டையில் அதனேப் பிணிக்கும் வட்ட வடிவான அணிவகை. திங்களேக் கடல் பூத்ததாம் எனச் சுழியஞ்சூடி என இயைக்க. 'துளவியல் தும்பையஞ் சுழியஞ் சூடினுன்' (முதனுட்போர் 115) என்பதனுல், தும்பையின் வெண்பூக்களாலும் இச்சுழியம் அமைத்துச் சூடப்படுவதென்பது தெரியலாம்; 'செங்கையினிற் பொற்செண்டும் திருமுடியிற் சுழியமுடன்' (பெரியபு: கழறிற் 112) என்ருர் சேக்கிழாரும். (52)

## இருகுழைக் காட்சி

1297. ஏதமி லிருகுழை
யிரவு நன்பகல்
காதல்கண் டுணர்ந்தன
கதிருந் திங்களும்

சீதைதன் கருத்தினைச்
செவியி னுள்ளுறத்
தூதுசென் றுரைப்பன
போன்று தோன்றவே.

ஏதம் இல் இரு குழை இரவு நன் பகல்
காதல் கண்டு உணர்ந்தன கதிரும் திங்களும்
சீதைதன் கருத்தினைச் செவியின் உள் உறத்
தூது சென்று உரைப்பன போன்று தோன்றவே.

பொ :—குற்றமற்ற காதணியான மணிக்குண்டலங்கள் இரண்டும், இரவு பகற் காலங்களில் நிகழும் பிராட்டியின் காதற் பெருக்கை உள்ளபடி யுணர்ந்த இரவியும் மதியும், சிதையின் உள்ளக் கருத்தை இரு செவிகளினும் தூதாகச் சென்று (இரக சியமாக) உரைப்பவை போலத் தோன்ற.

கு :—சிதா தேவியின் உள்ளக்கிடையைச் சூரியன் தன் வழித் தோன்றலான இராமபிராற்குத் தூதுவனாக வந்துரைப்பவ னாகவும், சந்திரன் தன் வழி வந்த சீதையின் தூதுவனாய் அவள் கருத்தைச் சென்று அறிவிப்பவனாகவும் கொள்க. 'திங்கள் தங்கள் குலக்கொடி சீதையா மங்கை' (உலாவரு. 52) என்பதனால் பிராட்டி சந்திரவமிசத்தவளாதல் காண்க. 'செவியின் உள்ளுற என்றார், இருவரும் உள்ளறிந்த தன்றி மற்றிவ் வூரறிந்திராத மறைபொருளாதலின், 'மின்னிற மருங்குலாய் செவியின் மெல்ல வோர், பொன்னிறத் தும்பிவந் தூதிப் போயதால்' (காட்சிப் 37) என்று, அனுமனாகிய பொன் வண்டு காதினுள் மெல்லத் தூது ஓதிச் சென்ற கனத்திறத்தைச் சிதை பால் திரிசடை குறிப்பாகக் கூறுதலும் ஒப்புநோக்குக. அந்தரங்கச் செய்திகளை அரசர்க்கு உரைக்கும் தூதர், இவ்வாறே செவியுள் ஓதுதல் வழக்கு. இரவு நன்பகல் என்றதற்கேற்பத் திங்களும் கதிரும் எனக் கூட்டுக. (53)

### வீரபட்டம் சூடல்

**1298.** கார்விடக் களமுடைக் கணிச்சி வானவன்
வார்சடைப் புடையினேர் மதிமி லைச்சத்தான்
சூர்சுடர்க் குலமெலாஞ் சூடி னானென
வீரபட் டத்தொடு திலத மின்னவே.

கார் விடக் களம் உடைக் கணிச்சி வானவன்
வார் சடைப் புடையின் ஓர் மதி மிலேச்சத் தான்
சூர் சுடர்க் குலம் எலாம் சூடினுன் என
வீரபட்டத்தொடு திலதம் மின்னவே.

பொ :— கரிய விடத்தைக் கண்டத்திற் களங்கமாகவுடைய மழுவாளியான சிவபிரான், தன் நீண்ட சடைமுடியின் ஒரு பக்கத்தில் பிறைச்சந்திரனைச் சூடி விளங்க, தான் (இராமபிரான்) தெய்வத் தன்மையுள்ள (நாள்கள் கோள்கள் விண்மீன்களான) ஒளிக் கூட்டங்களை ஒரு சேரச் சூடினுன் என, வீர பட்டமும் அதனிடத்ததான திலதமும் (நெற்றியில்) ஒளி பெற்றுத் திகழ.

கு :—பிறைமதி சூடிநின்ற சிவபிரான் விளக்கத்தினும் மேம்பாடு தோன்றப் பேரொளி மண்டலங்களை ஒருங்குசூடி விளங்கினன் இராமபிரான் என்றவாறு, வீரபட்டம், வீரர் நெற்றியில் அணியும் பொன் முத்துக்களால் அமைந்ததோர் அணி; வீரபட்டிகை எனவும் பட்டம் எனவும் வழங்கும். 'நுதலணி யோடையிற் பிறழும் வீர பட்டிகை.' (கரன்வதை 159) என்பர். திலதம் – சுட்டி (திவாகரம்). இது வீரபட்டத்தினருகிலிணைந்திருப்பது. 'சுட்டி சேர் வாளார் நுதற் பட்டம் மன்னுவித்து' (ஆதியுலா-17) 'நித்திலஞ் செய் பட்டமும் நெற்றித் திலதமும் ஒத்திலங்க' என்ருர் பிறரும் (பெருந்தொகை 426). இப்பட்டமும் சுட்டியும் இணைந்து நிற்பது பற்றியே 'வீரபட்டத்தொடு திலதம் மின்னவே' எனப்பட்டது. கொற்றக் குடையின் மேலலங்காரமான பொற்குமிழ்க்குத் 'திலதம்' என நூல்வழக் குண்மையால் (பெருந் தொகை 574) அத்தகைய வட்டமான நெற்றிப்பட்டத்தின் மேலே அணியும் பகுதிக்குத் திலதம் என்ற வழக்கு ஏற்புடையதாதல் காண்க. (54)

## முத்தாரம் அணிதல்

1299. சக்கரத் தயல்வருஞ் சங்க மாமென
மிக்கொளிர் கழுத்தணி தரள வெண்கொடி
மொய்க்கருங் குழலினுண் முறுவ லுள்ளுறப்
புக்கன நிறைந்துமேற் பொடித்த போன்றவே.

சக்கரத்து அயல் வரும் சங்கம் ஆம் என
மிக்கு ஒளிர் கழுத்து அணி தரள வெண் கொடி
மொய்க் கருங் குழலினுள் முறுவல் உள் உறப்
புக்கன நிறைந்து மேல் பொடித்த போன்றவே.

பொ :— திருமாலின் சக்கரப்படையின் அருகில் அமைந்த சங்கம் இது என்னும்படி, மிகுந்து ஒளிவீசும் கழுத்தினில் தரித்த வெண்ணிறமுடைய முத்தாரத்தின் ஒழுங்கு, செறிவுடைய கருங்கூந்தல் உள்ள சிதாதேவியின் புன்சிரிப்பால் முன்பு அகத்தினுள் பதிந்து கிடந்தவை, இப்போது திருமேனியில் நிறைந்து வெளிப்பட்டவை போன்றன.

கு :—சக்கரம், பெருமானது திருமுகத்துக்கும் சங்கு அவன் கண்டத்துக்கும் ஒளி வடிவுகள் பற்றிய உவமை. சங்கமாம் என ஒளிர் கழுத்து எனவும் (அதனில்) அணி வெண் தரளக் கொடி எனவும் இயையும். கொடி - ஒழுங்கு; 'கருங்கொடிப் புருவம்' (சீவகசிந். 658) என்ப; மாலையுமாம். 'வாணிலா முறுவற்கனி வாய்மதி, காண லாவதோர் காலம்' (மிதிலைக் காட்சி. 143) எனவும், 'உண்ணிவந்த நகையுமென் ளுென்றுண்டால்' (மிதிலைக் காட்சி. 144) எனவும் முன்பு பிராட்டியின் முறுவற் குறிப்பைப் பெருமான் உணர்ந்தவனுதலால், 'குழலினுள் முறுவலுள்ளுறப் புக்கன......பொடித்த போன்றவே' என்ருர். (மிதிலைக்காட்சி. 143-4) (55)

## தோள்வளை தரித்தல்

1300. பந்திசெய் வயிரங்கள் பொறியிற் பாடுற
அந்தமில் சுடர்மணி யழலிற் ருேன்றலால்
சுந்தரத் தோளணி வலயந் தொல்லைநாள்
மந்தரஞ் சுற்றிய வரவை மானுமே.

பந்தி செய் வயிரங்கள் பொறியின் பாடு உற
அந்தம் இல் சுடர் மணி அழலில் தோன்றலால்
சுந்தரத் தோள் அணி வலயம் தொல்லை நாள்
மந்தரம் சுற்றிய அரவை மானும் ஏ.

பொ :—ஒழுங்காகப் பதிக்கப் பெற்ற வயிர மணிகள் பாம்பின் படப் பொறிகள் போல ஒளிவிட, மதிப்பு எல்லையற்று விளங்கும் மாணிக்கம் செந்தீப் போலக் காணப்படுதலால், அழகிய தோள்

களில் அணிந்த வாகுவலயம், முற்காலத்தே (மத்தாய் நின்ற) மந்தர மலையைச் சூழப் பிணித்த (கடைகயிருன வாசுகி என்ற) பாம்பை ஒக்கும்.

கு:—திருத்தோள்கட்கு மந்தரமும் அதனைச் சூழ்ந்த தோள் வளைகட்கு வாசுகியும் உவமைகளாம். 'இருளிரியச் சுடர் மணிகள் இமைக்கும் நெற்றி' (பெருமாள் திருமொழி 1.1.) என்ப தனுல் இங்குச் சுடர் மணி என்றது பாம்பின் சிவரத்தினத்தை என்க. (56)

## முத்துவடங்கள் தரித்தல்

1301. கோவையின் பெருவட முத்தங் கோத்தன
காவல்செய் தடக்கையி னடுவட் காந்துவ
மூவகை யுலகுக்கு முதல்வ ஞமென
ஏவரும் பெருங்குறி யிட்ட போன்றவே.

கோவை இன் பெரு வட முத்தம் கோத்தன
காவல் செய் தடக் கையின் நடுவண் காந்துவ
மூவகை உலகுக்கும் முதல்வன் நாம் என
ஏவரும் பெரும் குறி இட்ட போன்றவே.

பொ:—முத்துக்கள் கோக்கப்பட்டனவாகிய ஒழுங்கும் கட்கு இனிமையும் உடைய பெரிய வடங்கள், உலகங்களைக் காத் தளிக்கும் நீண்ட கரங்களின் நடுவிடத்தே அணியப் பெற்று விளங்குபவை, 'உலகம் மூன்றற்கும் தலைவன் நாமே' என்று சீரிய பேரடையாளம் இட்டவற்றைப் போன்றிருந்தன.

கு:—முற்பாடலில் தோள்வளையும் அடுத்துவரும் பாடலில் கைவளையும் அணிந்தமை கூறி, ஈண்டுத் 'தடக்கையின் நடுவண் காந்துவ' என்றதனுல், இம் முத்துவடங்கள் கைகளின் நடு இடத்தே அணியப் பெறுவன என்பதும், 'மூவகை யுலகிற்கும் முதல்வன் நாம்' என்பதனை உணர்த்துவன என்பதனுல், அவ் வணி மூன்று வடங்கள் உடையதென்பதும் பெறப்படும். 'மூவகை யுலகுக்கும் முதல்வன் நாம்' என்றது, '' உயர்ந்தோர்க் கெல்லாம் இறைவன் யாமே' என்று ஆன்ம கோடிகட்கு அறி வுறுத்திக் கொண்டபடியை, 'ஆம் முதல்வன் இவன் என்று தற் றேற்றி' (திருவாய்–7–9–3) என்று ஆழ்வாரை இறைவன் தெளி வித்தவாறும் இங்கு அறியத்தகும். உலகம் மூன்று - சுவர்க்கம்

மத்தியம், பாதலம் என்பன. இனி, ‘மூவகை யுலகுக்கும் முதல்வனுவன்’ என யாவரும் குறியிட்டவை போன்றன’ என்று பொருள் உரைப்பினுமாம். (57)

## கடகம் தரித்தல்

1302. மாண்டபொன் மணியணி வலயம் வந்தெதிர்
வேண்டினர்க் குதவுவான் விரும்பிக் கற்பகம்
ஈண்டுதன் கொம்பிடை யீன்ற தாமெனக்
காண்டகு தடக்கையிற் கடக மின்னவே.

மாண்ட பொன் மணி அணி வலயம் வந்து எதிர்
வேண்டினர்க்கு உதவுவான் விரும்பிக் கற்பகம்
ஈண்டு தன் கொம்பு இடை ஈன்றது ஆம் எனக்
காண் தகு தடக் கையில் கடகம் மின்னவே.

பொ :—சிறிய பொன்னாலும் மணிகளாலும் இயற்றப்பட்ட கங்கணங்களைத், தன்முன் வந்து வேண்டும் கலைஞர் முதலியோர்க்கு அளித்தலை விரும்பிக், கற்பக தருவானது, தன் கொம்புகளிடையே அவற்றை உண்டாக்கி வைத்தது என்னும் படி, காட்சிக்கினிய நீண்ட கரங்களில், கடகம் என்னும் அணி விளங்க.

கு :—கலை வல்லார்க்குக் கங்கணம் பூட்டிச் சிறப்பித்தல் அரசர் மரபு. ‘கற்பகக் காவன்ன நற்பல தோளர்க்கு’ (திருவாய் 6-6-6) என்பராதலின், கற்பகக் கொம்பாகத் தோள்கள் கூறப்பட்டன. கற்பகம், பெருமானுக்கும், அதன் கொம்பு, திருக்கைகட்கும் உவமைகள். வலயம் - கங்கணம்; கைவளை. வேண்டினர் – பரிசுபெற விரும்புவோர். (58)

## நவமணிமாலை அணிதல்

1303. தேனுடை மலர்மக டிளைக்கு மார்பினிற்
றூனிடை விளங்கிய தகையி னாரந்தான்
மீனெடு சுடர்விட விளங்கு மேகத்து
வானிடு வில்லென வயங்கிக் காட்டவே.

தேன் உடை மலர் மகள் திளைக்கும் மார்பினில்
தான் இடை விளங்கிய தகையின் ஆரந்தான்
மீனெடு சுடர் விட விளங்கும் மேகத்து
வான் இடு வில் என வயங்கிக் காட்டவே.

பொ :—தேனெழுகும் செந்தாமரையில் வாழும் திருமகள் திளைத்தற்கிடமான மார்பினிடையே விளக்கமுறும் சீரிய (நவமணி) மாலையானது, மின்னல் ஒளிவீச விளங்குகின்ற மேகத்திடையே இந்திர வில்லைப்போல விளங்கித் தோன்ற.

கு :—மலர்மகள் திளைக்கும் திருமார்பினை மின்சுடர் விளங்கும் மேகமெனவும், அம்மார்பிடை விளங்கும் ஆரத்தை வானிடுவில் எனவும் கொள்க. மீன்–மின்னல்; நீட்டல் விகாரம். வானிடுவில்- இந்திரவில்; 'வானிடு வில்லின் வரவறியா வாய்மையால்' என்ப. (நாலடி - 1) (59)

### உத்தரீயக் காட்சி

1304. நணுகவு நிமிரவு நடக்கு ஞானத்தர்
உணர்வினி னொளிதிக ழுத்த ரீயந்தான்
தணிவருங் கருணைதன் கழுத்திற் சாத்திய
மணியுமிழ் கதிரென மார்பிற் றோன்றவே.

நணுகவும் நிமிரவும் நடக்கும் ஞானத்தர்
உணர்வினின் ஒளி திகழ் உத்தரீயம் தான்
தணிவு அரும் கருணை தன் கழுத்தில் சாத்திய
மணி உமிழ் கதிர் என மார்பில் தோன்றவே.

பொ :—உலகியல்போடு ஒன்றிச் சுருங்கவும் அவ்வியல்பை விட்டு மேலோங்கி விரியவும் வல்ல ஞானியரின் பரஞானம் போலத் தூய ஒளி திகழும் உத்தரீயமானது, குறைவற்ற கருணாகரனது திருக்கழுத்தில் அணிந்த முத்தாரம் வீசும் ஒளிபோலவே திருமார்பில் தோன்ற.

கு :—நணுகுதல் - ஈண்டு ஒன்றிச் சுருங்குதல்; 'நம்புமென் சிந்தை நணுகும் வண்ணம்' (திருவாச. 40-6). என்புழிப்போல. 'குறுகமிக வுணர்வத்தொடு நோக்கி யெல்லாம் விட்ட.....ஞானிக்கும்' (திருவாய். 4-4-10) என்பராதலின் 'நணுகவும் நிமிரவும் நடக்கும் ஞானத்தர்' என்றார். மடிப்புக்குரியதாய்ச் சுருக்கமும் மேற்போர்வைக்குரியதாய் விரிவும் உடையதாகித் தூயவொளி

கொண்டு மார்பில் திகழும் உத்தரீயத்துக்கு, சுருங்கி நிமிரும் ஞானியருணர்வு ஒப்பாமென்க. கருணை - கருணாகரனான பெருமாள்; ஆகுபெயர். (60)

## முப்புரிநூலின் தோற்றம்

1305. மேவருஞ் சுடரென விளங்கு மார்பினூல்
ஏவருந் தெரிந்தினி துணர்மி னீண்டெனத்
தேவரு முனிவருந் தெரிக்க லாமுதல்
மூவருந் தானென முடித்த தொத்ததே.

மேவு அரும் சுடர் என விளங்கும் மார்பின் நூல்
ஏவரும் தெரிந்து இனிது உணர்மின் ஈண்டு எனத்
தேவரும் முனிவரும் தெரிக்கலா முதல்
மூவரும் தான் என முடித்தது ஒத்ததே.

பொ :—அணுகற்கரிய (சூரிய சந்திர அக்கினிகளாகிய) முச்சுடர்போல, விளக்கமுறும் திருமார்பில் அணிந்த முப்புரி நூலானது, 'தேவர்களும் இருடிகளும் அறிந்து கூற முடியாத மும்மூர்த்தி யுருவங்களும் தானே என்று யாவரும் ஈண்டு நன்கறிந்து உணர்மின்' என்று (மூன்றும் ஒன்றாக) முடியப்பட்டதை ஒத்தது.

கு :—மூன்று வடங்களுடன் 'பிரம முடிச்சு' உடையதாய்ப் பிரமசாரியர் அணியும் 'ஒற்றைப் பூணூல்' ஈண்டுச் சிறப்பிக்கப் பட்டபடி. (61)

## உதரபந்தனத் தோற்றம்

1306. சுற்றுநீ டமனியச் சோதி பொங்கமேல்
ஒற்றைமா மணியுமி ழுதர பந்தனம்
மற்றுமோ ரண்டமு மயனும் வந்தெழப்
பொற்றடந் தாமரை பூத்த போன்றதே.

சுற்றும் நீள் தமனியச் சோதி பொங்க, மேல்
ஒற்றை மா மணி உமிழ் உதர பந்தனம்,
மற்றும் ஓர் அண்டமும் அயனும் வந்து எழப்
பொன் தடம் தாமரை பூத்த போன்றதே.

பொ :—சுற்றிலும் பொன்னின் பெரிய சோதி ததும்பி எழ, மேலிடத்து ஒற்றையான பெரிய மாணிக்கமணி ஒளிவீசும் உதர பந்தன அணி, பிறிதோர் அண்டமும் நான்முகனும் வந்து தோன்றும்படி பெரிய பொற்றாமரை மலர் (உந்தியிற்) பூத்தது போன்றது.

கு :—உதரபந்தனம் - அரையாடை நழுவாதபடி வயிற்றின் மீது சூழ அணிவது. 'உதரபந்தனமுங் கண்டோர் மனமகிழக் கட்டுறீஇ' (ஆதியுலா. 20) என்பர். அண்டகோளம், வளைந்த பொன்னின் சோதியாகவும்; உந்தித்தாமரை, உதரபந்தத்தின் அலங்கார முகப்பாகவும்; பிரமன் - அவ்வணியில் திகழும் ஒற்றை மாமணியாகவும் உவமை கொள்க. கடவுள் தன் சங்கற்பத்தாற் படைத்த அண்டம் பொன்மயமானதென்று நூல்கள் கூறும் என்ப. (62)

### வெண்ணிறப் பட்டுச் சாத்தல்

**1307.** மண்ணுறு சுடர்மணி
வயங்கித் தோன்றிய
கண்ணுறு கருங்கட
லதனைக் கைவளர்
தண்ணிறப் பாற்கட
றழீஇய தாமென
வெண்ணிறப் பட்டொளி
விளங்கச் சாத்தியே.

மண் உறு சுடர் மணி வயங்கித் தோன்றிய
கண் உறு கருங் கடல் அதனைக் கை வளர்
தண் நிறப் பாற்கடல் தழீஇயது ஆம் என
வெண் நிறப் பட்டு ஒளி விளங்கச் சாத்தியே.

பொ :—கழுவப்பெற்று ஒளிரும் முத்து முதலிய மணிகள் விளங்கும் காட்சியமைந்த கரிய கடலை, அலைகளான கைகள் பெருகும் குளிர்ந்த நிறமுள்ள பாற்கடல் தழுவிநின்றதுபோல, வெண்பட்டின் ஒளி விளக்கமுறும்படி, (சூழ) உடுத்து.

கு :—முத்து முதலிய இரத்தினங்கள் நீராற் கழுவித் தூய்மை பெற்று ஒளிர்தலின் 'மண்ணுறு சுடர்மணி' எனப்பட்டது. 'கற்பா லுமிழ்ந்த மணியுங் கழுவாது விட்டால், நற்பாலழியும்'

(சீவகசிந். அவையடக்) என்ப. அணிகள் புனைந்து விளங்கும் பெருமானுக்குக் கருங்கடலும், உடுத்த வெண்பட்டுக்குப் பாற் கடலும் உவமைகள். மங்கலக் குறியாதலின், வெண்மை நிற முள்ள பட்டாடை கூறப்பட்டது. (63)

### உடைவாள் அணிதல்

1308. சலம்வரு தரளமுந்
 தயங்கு நீலமும்
அலம்வரு நிழலுமி
 ழம்பொற் கச்சினாற்
குலம்வரு கனகவான்
 குன்றை நின்றுடன்
வலம்வரு கதிரென
 வாளும் வீக்கியே.

சலம் வரு தரளமும் தயங்கும் நீலமும்
அலம் வரு நிழல் உமிழ் அம் பொன் கச்சினால்
குலம் வரு கனக வான் குன்றை நின்று உடன்
வலம் வரு கதிர் என வாளும் வீக்கியே.

பொ :—கடல் நீரில் தோன்றும் முத்துக்களும், விளங்கும் நீல மணிகளும், தம்முள் மாறுபட்ட ஒளிவீசும் அழகிய பொற்கச்சி னால், குலபர்வதமான பெரிய மேரு என்னும் பொன்மலையை, என்றும் வலமாக வருகின்ற சூரியனைப் போல, உடைவாள் என்ற ஆயுதத்தைக் கட்டி.

கு :—கச்சினால் கட்டி என இயையும். முத்துக்களும் நீலமணி களும் ஒன்றுக்கொன்று மாறுபட்ட ஒளியினை வீசுவனவாதலால் 'அலம்வரு நிழலுமிழ்' என்றார். அலம்வரல் - சுழலுதல் ; மாறு படுதல். அணிகளின் ஒளியால் பெருமானது திருவரை பொன்மய மாகத் தோன்றலின், கனகக் குன்றுடன் ஒப்பிடப்பட்டது. வான் கனகக் குன்று என்க. (64)

### உடைவாளின் பக்கத்தில் குஞ்சங்களைத் தொங்கவிடுதல்

1309. முகைவிரி சுடரொளி முத்தின் பத்திவான்
 தொகைவிரி பட்டிகைச் சுடருஞ் சுற்றிடத்

தகையுடை வாளெனுந் தயங்கு வெய்யவன்
நகையிள வெயிலெனத் தொங்க னாற்றியே.

முகை விரி சுடர் ஒளி முத்தின் பத்தி வான்
தொகை விரி பட்டிகைச் சுடரும் சுற்றிடத்
தகை உடை வாள் எனும் தயங்கு வெய்யவன்
நகை இள வெயில் எனத் தொங்கல் நாற்றியே.

பொ :—அரும்பி விரியும் கிரணவொளிவிடும் முத்து வரிசைகளின் வெண்ணிறத் தொகுதி பரவும் அரைப்பட்டிகையின் ஒளியும் சூழ்ந்துள்ளமையால், (மேற் கூறிய) தன்மைகளுடைய வாளாகிய சூரியனது கதிர் வீசும் இளவெயில்போலக் குஞ்சங்களைத் தொங்கவிட்டு.

கு :—முகைவிரி - முல்லையரும்பின் தன்மை விரியும் எனினும் ஆம். வான் தொகை - வெண்மையான ஒளிக் கூட்டம், பட்டிகை - அரைப்பட்டிகை என்னும் அணி. வாளின் பக்கத்து அமைந்த முத்துச்சரத் தொங்கல்கள் சிறப்பிக்கப்பட்டவாறு. (65)

## கிம்புரி அணிதல்

1310. காசொடு கண்ணிழல் கஞலக் கைவினை
ஏசறு கிம்புரி யெயிறு வெண்ணிலா
வீசலின் மகரவாய் விளங்கு வாண்முகம்
ஆசையை யொளிகளா லளந்து காட்டவே.

காசொடு கண் நிழல் கஞலக் கைவினை
ஏசு அறு கிம்புரி எயிறு வெண் நிலா
வீசலின் மகரவாய் விளங்கு வாள் முகம்
ஆசையை ஒளிகளால் அளந்து காட்டவே.

பொ :—இரத்தினங்களின் ஒளியோடு (காண்போர்) கண்களின் ஒளியும் சேர்ந்து பொலிய, கைத்தொழிற்றிறமையில் குறைவற்ற கிம்புரி என்ற அணியின் கொம்புகள் வெண்ணிலாவைப் பரப்புதலால், அம்மகரவாயான கிம்புரியில் தோன்றும் ஒளி முகமானது, தன் பிரகாசங்களால் திசைகளின் தூர அளவை அளந்து காட்ட.

கு :—கிம்புரி - சுறு என்ற பெரு மீனின் அங்காந்த வாயின் வடிவிற் செய்த ஆபரணமாதலின் மகரவாய் எனவும், தொடையில் அணியப்படுவதனுல், 'குறங்கு செறி' எனவும், இதனை நூல்கள் வழங்கும். இச் சுறுமீன் கொம்புகள் வெண்மை நிறங் கொண்டு விளங்குதலின், 'எயிறு வெண்ணிலா வீசலின்' என்ருர். நெய்தனிலமாக்கள், சுறவுக்கோடு நட்டுப் பரவுக் கடன் கொடுத்தல் வழக்கு', என்பதனுல், (தொல். பொரு. அகத்திணை-5. உரை) இக் கொம்புகளின் சிறப்பு விளங்கும். இம்மகரவாயான கிம்புரி, மணிகளாலான சரங்களுடைமையால் 'வாண்முகம்......... ஒளிகளால் அளந்து காட்ட' என்ருர். (66)

### சிலம்பும் கழலும் அணிந்தமை

1311. இனிப்பரந் துலகினை
யளப்ப தெங்கெனத்
தனித்தனி தடுப்பன
போலுஞ் சால்பின
நுனிப்பரு நுண்வினைச்
சிலம்பு நோன்கழல்
பனிப்பருந் தாமரைப்
பாதம் பற்றவே.

இனிப் பரந்து உலகினை அளப்பது எங்கு? எனத்
தனித்தனி தடுப்பன போலும் சால்பின
நுனிப்பு அரும் நுண் வினைச் சிலம்பு நோன் கழல்
பனிப்பு அரும் தாமரைப் பாதம் பற்றவே.

பொ :—'வளர்ந்து பரவி உலகங்களை அளவிடுதலென்பது இனி எங்ஙனம்?' என்று ஒவ்வொன்றும் தனியே தடை செய்தல் போன்ற தகுதியுடையனவாய், ஆய்ந்தறிய முடியாத நுண்ணிய செய்தொழில்கள் அமைந்த சிலம்பும் வலிய வீரக் கழலும் வாட்டமற்ற தாமரைமலர் போலும் திருவடிகளைப் பொருந்த.

கு :—சிலம்பும் வீரக்கழலுமாக இரண்டாதலின் 'தனித்தனி தடுப்பன போலும்' என்ருர். எங்கு - எங்ஙனம். பனிப்பு அருந் தாமரை - (பனியால்) வாடுதலில்லாத தாமரை ; குளிர்ச்சியும் பருமையும் உடைய தாமரை எனினுமாம். (67)

1312. இன்னண மொளிர்தர
விமைய வர்க்கெலாம்
தன்னையே யனையதோர்
கோலந் தாங்கினன்
பன்னக மணிவிளக்
கழலும் பாயலுள்
அன்னவர் தவத்தினு
லனந்த னீங்கினன்.

இன்னணம் ஒளிர்தர இமையவர்க்கு எலாம்
தன்னையே அனையது ஓர் கோலம் தாங்கினன்
பன்னக மணி விளக்கு அழலும் பாயலுள்
அன்னவர் தவத்தினுல் அனந்தல் நீங்கினன்.

பொ:—நாகரத்தினங்களான தீபங்களின் ஒளி விளங்கப் பெற்ற ஆதிசேடனுகிய பாயலுள், அறிதுயில்கொள்ளுதலைத், தேவர்கள் செய்த தவப்பயனுல் ஒழிந்து நின்று அவதரித்த இராம பிரான், மேற்கூறியவாறு, ஒளிதிகழும்படி, அத்தேவரெல்லா ருடைய நலத்தின்பொருட்டுத் தன்னையே தானொத்த அலங்காரக் கோலத்தைத் தரித்துநின்ருன்.

கு:—'மணி விளக்காம்.... திருமாற்கு அரவு' என்பது பெரியார் திருவாக்கு (இயற்பா, முதற்றிருவந்தாதி. 53). 'பாம்பின்...... ஆயிர மணி விளக்கு அழலுஞ் சேக்கை' (யாப்-வி. 90, மேற்) என்பர் முன்னேரும். பன்னகப் பாயனின்று துயில் நீங்கி அவதரித்த செய்தி திருவவதாரப் படலத்துக் கண்டது. (68)

இராமபிரான் கொண்ட திருக்கோலச் சிறப்பு
செப்ப அரிதெனல்

1313. முப்பரம் பொருளிற்குண்
முதலை மூலத்தை
இப்பரந் துடைத்தவ
ரெய்து மின்பத்தை
அப்பனை யப்பினு
ளமுதந் தன்னையே
ஒப்பனை யொப்பனை
யுரைக்க வொண்ணுமோ.

முப் பரம் பொருளிற்குள் முதலை மூலத்தை
இப் பரம் துடைத்தவர் எய்தும் இன்பத்தை
அப்பனை அப்பினுள் அமுதம் தன்னையே
ஒப்பனை ஒப்பனை உரைக்க ஒண்ணுமோ.

பொ :—அரி அயன் அரன் என்ற திரிமூர்த்திகளான பரம் பொருள் மூவர்க்குள் முதல்வனாய் நிற்பவனும், உலகங்கட் கெல்லாம் ஆதிகாரணமானவனும், இவ்வுலகத் தொடர்பான பாரத்தைத் துறந்த ஞானியர் அடையும் இன்பமயமானவனும், யாவர்க்கும் அப்பனாயுள்ளவனும், பாற்கடலில் தோன்றிய தேவாமுதம் போல் இனிமையானவனும் ஆன (அவதார மூர்த்தி யாகிய) இராமபிரான் கொண்ட திருக்கோலங்களை இத்தன்மைய வென்று கூற முடியுமோ.

கு :—'தானும் சிவனும் பிரமனு'மாகிப் பணைத்த தனி முதலை (திருவாய். 8, 8, 5) என்பராதலின், 'முப்பரம் பொருளிற்குள் முதலை' என்றார். 'தானே ருருவே தனிவித்தாய்த் தன்னின் மூவர் முதலாய, வானோர் பலரும் முனிவரரும் மற்றும் மற்றும் முற்றுமாய்' (திருவாய். 1, 5, 4.) ஆனமை பற்றி, 'மூலத்தை' எனப்பட்டது. பரம் - சமுசாரபாரம்; சம்பந்தம் எனினுமாம். 'பேசுவான் புகில் நம்பர மன்றே' (பெரியா. 4, 5, 1) என்ப. 'சுடர்ஞான இன்பமேயோ' (திருவாய். 10, 10 10) என்பதனால், 'இப்பரந் துடைத்தவ ரெய்து மின்பத்தை' என்றார். 'ஆரப் பருக வெனக்கு ஆராவமுதானாயே' என்பதனால், (திருவாய். 10, 10, 5) 'அப்பினுள் அமுதந்தன்னையே ஒப்பனை' எனப்பட்டது. அரங்க நகரப்பன், திருவிண்ணகரப்பன், காட்கரையப்பன் என்பராதலின் (திருவாய்) 'அப்பனை' என்றார். ஆக, பெரியார் திருவாக்குக்களை அடியொற்றியே இப்பாடல் அமைந்திருத்தல் காண்க. ஒப்பனை - அலங்காரம்; கோலம். 'அலங்காரப் பிரியன் விட்டுணு' என்பராதலின், அப் பரம்பொருள் கொண்ட திருக்கோலத்தின் சிறப்பை நம்மால் அளவிடக் கூடுமோ என்பது கருத்து. (69)

இராமபிரான் தானஞ் செய்தபின் திருத்தேர் ஏறுதல்

**1314.** பல்பதி னாயிரம்
பசுவும் பைம்பொனும்
எல்லையி னிலனோடு
மணிகள் யாவையும்

நல்லவர்க் குதவினு
னவிலு நான்மறைச்
செல்வர்கள் வாழ்த்துறத்
தேர்வந் தேறினான்.

பல் பதினுயிரம் பசுவும் பைம் பொனும்
எல்லை இல் நிலனொடு மணிகள் யாவையும்
நல்லவர்க்கு உதவினன், நவிலும் நான்மறைச்
செல்வர்கள் வாழ்த்து உறத் தேர் வந்து ஏறினான்.

பொ :—பல பதினுயிரக்கணக்கான ஆனிரைகளையும் பசும் பொற் காசுகளையும், எல்லையற்ற பூமிகளையும், நவரத்தினங் களையும், நல்லொழுக்க முள்ளவர்கட்குத் தானஞ் செய்தவனுகி, நான்கு வேதமும் வல்ல அந்தணச் செல்வர்கள் ஆசி கூறத், திருத்தேரின்மீது ஏறுவானுயினன்.

கு :—குலதெய்வத்தை வணங்கிய பின், 'கயல்விழிக் கன்னி மார்களை வேதியர்க்கு அருமறை விதியின் நல்கினான்' என்று (கடிமணம்-50) தக்கஇடத்து முன்பே கூறப்பட்டமையின், ஈண்டும் அத்தானம் ஒழியக் கூறினர். ஒழுக்கத்திற் சிறந்த தக்கார் என்பார் – 'நல்லவர்க் குதவினன்' என்ருர் ; 'அறப் பயனும், தான் சிறிதாயினும் தக்கார்கைப் பட்டக்கால், வான் சிறிதாப் போர்த்துவிடும்' (நாலடி–38) என்ப. திருமண யாத் திரையாதலின், இவை யாவும் 'யாத்திராதானம்' என்பது, 'தேர்வந் தேறினான்' என்பதனல் பெறப்படும், பொன் – ஆகு பெயர். (70)

## இராமபிரான் ஏறிய தேரின் சிறப்பு 1315 – 1316

1315. பொற்றிர ளச்சது வெள்ளிச் சில்லிபுக்
குற்றது வயிரத்தி னுற்ற தட்டது
சுற்றுறு நவமணி சுடருந் தோற்றத்த
தொற்றையா ழிக்கதிர்த் தேரொ டொத்ததே.

பொன் திரள் அச்சது, வெள்ளிச் சில்லி புக்கு
உற்றது, வயிரத்தின் உற்ற தட்டது,
சுற்று உறு நவமணி சுடரும் தோற்றத்தது,
ஒற்றை ஆழிக் கதிர்த் தேரொடு ஒத்ததே.

பொ :—பொன்னாலமைந்த திரண்ட அச்சினையுடையதும், வெள்ளியாலான சக்கரங்கள் அவ்வச்சிலே பொருந்தியதும், வயிரமணி யிழைக்கப் பெற்ற தட்டையுடையதும், சூழவும் பொருந்திய நவமணிகளால் விளக்கமுற்ற காட்சியினையுடைய தும் ஆகிய அத் திருத்தேர், ஒற்றையாழியுடைய சூரிய ரதத்தை ஒத்து விளங்கியது.

கு :—ஒளியும், வேகமும் உடைமையோடு கதிரோனது மண்டல மத்தியில், சூரிய நாராயண மூர்த்தி எழுந்தருள இடமாயு மிருப்பதனால் சூரியனது ஒற்றையாழியந்தேர் உவமையாயிற்று. (71)

1316. நூல்வருந் தகையன நுனிக்கு நோன்மைய
சால்பெருஞ் செவ்விய தரும மாதிய
நாலையு மனையன புரவி நான்கொரு
பாலமை புணர்ந்தன பக்கம் பூண்டவே.

நூல் வரும் தகையன நுனிக்கும் நோன்மைய
சால் பெரும் செவ்விய தருமம் ஆதிய
நாலையும் அனையன புரவி நான்கு ஒரு
பாலமை புணர்ந்தன பக்கம் பூண்டவே.

பொ :—குதிரை நூல் கூறும் உத்தம இலக்கணங்களுடையன வும், சாரதி கருத்தைக் கூர்ந்தறியும் ஆற்றலுள்ளனவும், நிரம் பிய பேரழகுடையனவும். அற முதலிய உறுதிப்பொருள் நான்கை யும் ஒத்தனவும், ஒத்த இளமைத் தன்மையனவுமான குதிரைகள் நான்கு, தேரிற் பூட்டப்பட்டுள்ளன.

கு :—துறக்கம் முதலிய உத்தம கதிகளை நெறியறிந்து மாந்தர் அடைதற்கு, உறுதிப் பொருள்கள் நான்கும் உதவல்போல, நன் னெறி சென்று உரிய இலக்கை அடைதற்குப் புரவிகள் நான்கும் உதவ வல்லன என்பார், "தரும மாதிய நாலையு மனையன" என்றார். நான்கு குதிரைகள் பூட்டிய தேரில் அரசர் செல்வது மரபு ; 'பால்புரை புரவி நால்குடன் பூட்டி,' (பொருந 165) என்றார் சான்றோரும். ஈண்டு 'பால்புரை புரவி' என்பதற் கேற்ப, பாலமை என்பதற்குப் 'பாலின் வெண்ணிறத் தன்மை யுள்ள என்றுமாம். பாலமை என்பது, முன்கருத்தில் 'பாலியத் தன்மை' என்ற பொருளது. 'பாலமையுடையராதி' என அப் பாலத் தன்மைக் குரிய மடமை என்ற பொருளில் பின்னோர் வழங்குதலும் ஒப்பிடுக (உபதேச காண்டம் - சிவபுண்ணிய'

339). பின்னதான பாவின் தன்மை என்ற கருத்தில் - வன்மை என்பது வல்லமை என்றுதல் போல, பான்மை எனற்பாலது பாலமை என இடையே அகரம் பெற்றதென்க. (72)

## இராமபிரான் தேரேறிச் செல்லுதல்

**1317.** அனையதோர் தேரினி லருண னின்றெனப்
பனிவரு மலர்க்கணப் பரதன் கோல்கொளக்
குனிசிலைத் தம்பிபின் கூட வேனையன்
இனியபொற் கவரிகா லியக்க வேகினான்.

அனையது ஓர் தேரினில் அருணன் நின்றெனப்
பனி வரு மலர்க் கண் அப் பரதன் கோல் கொளக்,
குனி சிலைத் தம்பி பின் கூட, ஏனையன்
இனிய பொன் கவரி கால் இயக்க, ஏகினான்.

பொ :—அத்தன்மையதானதொரு தேரினில் (சூரியன் தேர்ப் பாகனாக) அருணன் நின்றாற்போலத் தாமரைமலர் போலும் கண்களினின்றும் ஆனந்தநீர்த் துளி ஒழுகும் அப் பரதநம்பி (சாரதியாய்நின்று) குதிரையோட்டும் கோலைப் பிடிக்கவும், வளைந்த வில்லைத் தாங்கிய (வண்ணம் நின்ற) இலக்குவன் (திருமேனி காவல் புரிந்து) பின் நிற்கவும், மற்றவனான சத்துருக்கனன் காட்சிக் கினிய பொற் (காம்பமைந்த) சாமரைகளைக் காற்றுண்டாக வீசவும் (இராமபிரான்) சென்றருளினான்.

கு :—இராமபிரானது திருமணப் பெருவிழாவாலும், அவ் விழாவில் தான் மேற்கொள்ள நேர்ந்த திருத்தொண்டாலும் உளம் பூரித்து ஆனந்தக் கண்ணீர் துளித்தலின் 'பனிவரு மலர்க் கணப் பரதன்' என்றார். பகையின்றியேயும் வில்லை வளைத்த வண்ணம் திருமேனிக் காவல்புரிவது மரபாதலின், 'குனிசிலைத் தம்பி' என்றார். பின் கூடுதலாவது தலைவற்குப் பின்னின்று காவற்றொண்டு புரிதல். இனி, 'தம்பியும், பின் அவனுடன் சத்துருக்கனனுமாகிய இருவரும் இருபக்கங்களினும் நின்று கவரி வீச எனினுமாம்; 'இருவரும் கவரி வீச' (திருமுடிசூட்டு. 38) என்று பிற் கூறுவதும் காண்க. (73)

### இராமபிரானது அழகின் மேம்பாடு

1318. அமைவரு மேனியா னழகி னயதோ
கமையுறு மனத்தினாற் கருத வந்ததோ
சமைவுற வறிந்திலந் தக்க தாகுக
இமையவ ராயினா ரிங்கு ளாருமே.

அமைவு அரு மேனியான் அழகின் ஆயதோ ?
கமை உறு மனத்தினால் கருத வந்ததோ ?
சமைவு உற அறிந்திலம் தக்கது ஆகுக
இமையவர் ஆயினர் இங்கு உளாரும் ஏ.

பொ :—பிறர்க்கு அமைதல் அரிய திருமேனியனான இராமனது அழகால் உண்டானதோ, பொறுமையுள்ள தம் மனத்தால் அப்பெருமானைத் தியானித்தலின் வந்த நிலைமையோ? இரண்டிலொன்றை உள்ளவாறு தெரிந்தோமில்லை. தக்க தொன்று அதற்குக் காரணமாகுக; (அவனைத் தரிசித்த) மக்களெல்லாம் (கண்ணிமையாத) தேவர்களைப்போல் ஆயினர்.

கு :—பேரழகும் வியப்பும் வாய்ந்ததொரு பொருளைக் கண்ணாற் காணுமிடத்தும், மனத்தினூன்றி நினைக்குமிடத்தும் கண் இமையாதிருத்தல் மாந்தர் இயல்பு. இமையவர் - என்பதற்கு - இமையில் விசேடத்தன்மை படைத்தவர் என்பது உறுப்புப் பொருள் என்பர். அவ்விசேடத் தன்மை மக்கள் தேவர் இருவர்க்குமே ஒத்ததென்றபடி. (74)

### தேவர்களின் ஆனந்தக் கூத்து

1319. வரம்பறு முலகினை வலிந்து மாய்வின்றித்
திரம்பயி லரக்கர்தம் வருக்கந் தேய்வின்று
நிரம்பிய தெனக்கொடு நிறைந்த தேவரும்
அரம்பையர் குழாத்தொடு மாடன் மேயினார்.

வரம்பு அறும் உலகினை வலிந்து மாய்வு இன்றித்
திரம் பயில் அரக்கர்தம் வருக்கம் தேய்வு இன்று
நிரம்பியது எனக் கொடு நிறைந்த தேவரும்
அரம்பையர் குழாத்தொடும் ஆடல் மேயினர்.

பொ :—'எண்ணற்ற உலகங்களை வலியத் துன்பப்படுத்தித் தமக்கு அழிவில்லாமல் நிலைபெற்ற அரக்கரின் இனமானது

அழிவது இன்று தான் கைகூடியது' என்று உள்ளத் தெண்ணிய வராய் (விண்ணிடை) நிறைந்த தேவர் யாவரும் அரம்பையர் முதலிய தேவமாதர் கூட்டத்துடன் ஆனந்தக்கூத்தாடினர்.

கு:—சீதா கல்யாணம் தீயோரழியவும் தாங்கள் நல்வாழ்வு பெறவும் நிகழ்வதென்பதனை அறிந்தவராதலால், ஆடவரும் பெண்டிருமான தேவர்கள், பேரானந்தங் கொண்டு ஆடலாயினர் என்றார். இன்று நிரம்பியதென்பது, விரைவும் தெளிவும் பற்றிய கால வழுவமைதி. தேவரும் என்ற இறந்தது தழீஇய எச்ச உம்மை நிலவுலகத்தவரும் என்பதுபட நின்றது. (75)

## மிதிலை நகர மகளிர் செயல் 1320-1321

1320. சொரிந்தனர் மலர்மழை சுண்ணந் தூவினர்
விரிந்தொளிர் காசுபொன் றூசு வீசினர்
பரிந்தன ரழகினைப் பருகி னார்கொலாம்
தெரிந்திலர் திருநகர் மகளிர் செய்கையே.

சொரிந்தனர் மலர் மழை சுண்ணம் தூவினர்
விரிந்து ஒளிர் காசு பொன் தூசு வீசினர்
பரிந்தனர் அழகினைப் பருகினார் கொல் ஆம்
தெரிந்திலர் திருநகர் மகளிர் செய்கையே.

பொ:—அம் மிதிலாநகரத்து மகளிர் (யாவரும்) பூமழை பொழிந்தனர், ஒளிபரவி விளங்கும் மணிகளையும் பொற் காசுகளையும் ஆடைகளையும் வாரி வழங்கினர். விருப்பமுடன் பெருமானது அழகமுதினை உட்கொண்டனர் போலும்; அம்மகிழ்ச்சி மிகுதியால் தாம் செய்யும் செயல்களை அறியாதவராகவே ஆயினர்.

கு:—மழைகுலா வோதி நல்லார் களிமயக்குற்று நின்றமையால் தாம் செய்யும் செய்கையை அறியாராயினர் என்க. (76)

1321. வள்ளலை நோக்கிய
மகளிர் மேனியின்
எள்ளரும் பூணெலா
மிரிய நிற்கின்றார்

உள்ளன யாவையு
முதவிப் பூண்டவும்
கொள்ளையிற் கொள்கெனக்
கொடுக்கின் றாரினே.

வள்ளலை நோக்கிய மகளிர், மேனியின்
எள் அரும் பூண் எலாம் இரிய நிற்கின்றார் ;
உள்ளன யாவையும் உதவிப் பூண்டவும்
கொள்ளையில் கொள்க எனக் கொடுக்கின்றாரினே.

பொ :—தம்பாலுள்ள பொருள்கள் எல்லாவற்றையுமே வழங்கி உடலில் அணிந்த அணிகளையும் வேண்டியவர்கள் தாமே கொள்ளை போலக் கொள்க என்று அளிக்கும் வள்ளல்களைப் போல, பெருமானை நோக்கிய பெண்டிர்கள், (அவரது பேரழகில் ஈடுபட, அது காரணமாக நேர்ந்த உடலிளைப்பால்) தாம் மேனியிற் பூண்ட சிறந்த அணிகள் யாவும் நெகிழ்ந்து விழும்படி நின்றார்கள்.

கு :—காசு பொன் தூசுகளைக் களிப்பு மிகுதியால் வழங்கிய மகளிர், பெருமானது பேரழகில் ஈடுபட்டு விரகதாபத்தால் உடலிளைத்து அணிந்த அணிகளையும் கழலவிட்டனர் என்றபடி. வள்ளலையே நோக்கி நின்றதனால், தாமும் அவ்வள்ளற்றனத்தை மேற்கொள்ளலாயினர் என்பார், 'கொடுக்கின்றாரினே......... பூணெலா மிரிய நிற்கின்றார்' என்றார். உள்ளி உள்ள வெலா முவந்தீயும் அவ் வள்ளல்களைப் போலவே, பெண்டிரும் 'தம்பதங் கொடுக்கும் வண்மை' எய்தினர் என்பதாம். (77)

இராமபிரான் மணமண்டபம் சேர்தல்

1322. எஞ்சலி லுலகத் துள்ள
★ வெறிபடை யரச வெள்ளம்
குஞ்சரக் குழாத்திற் சுற்றக்
கொற்றவ னிருந்த கூடம்
வெஞ்சினத் தனுவ லானு
மேருமால் வரையிற் சேரும்
செஞ்சுடர்க் கடவு ளென்னத்
தேரிடைச் சென்று சேர்ந்தான்.

எஞ்சல் இல் உலகத்து உள்ள எறி படை அரச வெள்ளம்,
குஞ்சரக் குழாத்தில் சுற்றக் கொற்றவன் இருந்த கூடம்
வெம் சினத் தனு வலானும், மேரு மால் வரையில் சேரும்
செம் சுடர்க் கடவுள் என்னத் தேர் இடைச் சென்று சேர்ந்தான்.

பொ:—குறைவில்லாத நிலவுலகத்துள்ள-வேல் முதலிய எறி படைகளுடைய—அரசர் கூட்டம், களிற்றினம் போலச் சூழ்ந்து நிற்க, தசரதன் வீற்றிருந்த அந்தத் திருமண மண்டபத்தை (பகைமீது) கொடுஞ் சினங் காட்டவல்ல கோதண்டபாணி யான இராமனும், பெரிய மேருகிரியிற் சேரும் செங்கிரணங்க ளுள்ள சூரியனைப் போலத் தேரின் மேலே போய்ச் சேர்ந் தான்.

கு:—'ஒற்றையாழிக் கதிர்த்தேரொ டொப்பது' 'அருணன் போற் பரதன் கோல் கொள' என்று மேலே கூறியவற்றுக்கேற்ப, 'செஞ்சுடர்க் கடவு ளென்னத் தேரிடைச் சென்று' என்றும், அக்கடவுள் அடையும் பொன்மலையை இராமனடைந்த மணிமண் டபத்துக்கு உவமித்தும் கூறினர். இராமபிரானைச் சூரியனாகக் கொண்டது சூரிய குலத் தோன்றலாதலா லென்க. (78)

1323. இரதமாண் டிழிந்த பின்ன
ரிருமருங் கிரண்டு கையும்
பரதனு மிளைய கோவும்
பரிந்தன ரேந்தப் பைந்தார்
வரதனு மெய்தி மைதீர்
மாதவர்த் தொழுது நீதி
விரதமெய்த் தாதை பாதம்
வணங்கிமா டிருந்த வேலை.

இரதம் ஆண்டு இழிந்த பின்னர் இரு மருங்கு இரண்டு கையும்
பரதனும் இளைய கோவும் பரிந்தனர் ஏந்தப் பைந்தார்
வரதனும் எய்தி மைதீர் மாதவர்த் தொழுது நீதி
விரத மெய்த் தாதை பாதம் வணங்கி மாடு இருந்த வேலை.

பொ:—பசுமையான மாலையணிந்த இராமவள்ளலும் அங்குத் தேரினின்றும் இறங்கியபின், இரண்டு பக்கங்களிலும் தன் இரு திருக்கரங்களையும், பரத நம்பியும் அவற்கு இளையோனான இலக் குவனும் அன்பு கொண்டு தாங்கிவர, (அம்மண்டபத்தை) அடைந்து, குற்றமற்ற மாதவர்களை வணங்கி, நீதியையே விரத

மாகக் கொண்ட சத்தியசீலனுன தன் தந்தையின், திருவடிகளை வணங்கியவனுய், அவனருகில் வீற்றிருந்த பொழுது.

கு:—பேரரசர் செல்லும்போது 'கைலாகு' கொடுத்தல் மரபாதலின், இருகையும் பரதலக்குமணர்கள் ஏந்த என்றுர். வரதன் – வேண்டியவர்க்கு வேண்டிய வரங்களை அளிப்பவன். மாதவர் - பெருமுனிவரான வசிட்டர், கோசிகர், சதானந்தர் முதலோர். தந்தையான சக்கரவர்த்தியைத் தொழுது அவன் கீழ்க் கன்ருய் வீற்றிருந்தான் என்றது, பெரியோர்கள் அனுமதி பெற்றே பின் மணத்தவிசு ஏற வேண்டுதலின் என்க. (79)

### சீதை மணமண்டபஞ் சார்தல்

**1324.** சிலையுடைக் கயல்வாட் டிங்க
ளேந்தியோர் செம்பொற் கொம்பர்
முலையிடை முகிழ்ப்பத் தேர்மேன்
முன்றிசை முளைத்த தன்னுள்
அலைகடற் பிறந்து பின்னை
யவனியிற் றேன்றி மீள
மலையிடை யுதிக்கின் ருள்போன்
மண்டப மதனில் வந்தாள்.

சிலை உடைக் கயல் வாள் திங்கள்
ஏந்தி ஓர் செம் பொன் கொம்பர்
முலை இடை முகிழ்ப்பத் தேர் மேல்
முன் திசை முளைத்தது அன்னுள்
அலை கடல் பிறந்து பின்னை
அவனியில் தோன்றி மீள
மலை இடை உதிக்கின்ருள் போல்
மண்டபம் அதனில் வந்தாள்.

பொ:—செம்பொன்மயமானதொரு பூங்கொம்பு வில்லோடமைந்த கயல் மீன்களுடைய ஒளிவிடும் சந்திரனை மேலாகத் தாங்கி, அதன் இடையில் முல்லை மலர் அரும்பக் கீழ்த்திசையில் தேரின்மேல் தோன்றியதைப் போன்றவளான சானகி, முதலில் பாற்கடலில் பிறந்தவளாகவும், பின்பு பூமியிடம் தோற்றங் கொண்டவளாகவும், (அவதரித்த நிலைமைகளோடு அமையாமல்) மீளவும் மலையிலுதிக்கலாயினள் என்று சொல்லும்படி அந்த மணமண்டபத்துக்கு வந்து சேர்ந்தாள்.

கு :—(சானகிக்கு) 'அயல் வேறோர் ஒப்பெங்கே கொண்டு எவ்வகை நாடி உரை செய்வேம்' என்று (பால. 587.) கூறப்படு தலின், உவமை காணமுடியாமல், இல்பொருளுவமையாற் சிறப்பிக்கலாயினர் இக்கவிஞரென்க. பூரண சந்திர மண்டல மொன்று சிலைகளோடு கயல்கள் ஏந்தி என்றது - முகம் புருவம் கண்களைக் குறிப்பிட்டவாறு. முலை - முல்லை என்பதன் இடைக் குறை. முன் திசை - கிழக்குத் திக்கு; பூர்வ திசை என்பது வட மொழி வழக்கு. 'பிறையேயணிந்து பொருவிலுடன், கயலே மணந்த கமல மலர்ந்தொரு......பசும்பொற்கொடி நின்றதால்' (தஞ்சைவாணன் கோவை. 1) என்ற, இப்பாடலின் சொல்லும் பொருளும் ஈண்டு அமைந்திருத்தல் காண்க. இவ்வடியுள் 'கமல மலர்ந்து' என்றதற்கேற்ப 'முல்லை இடை முகிழ்ப்ப' என இக் கவியிற் கூறியிருத்தல் குறிப்பிடத்தகும். முல்லை முகிழ்த்தல் கூறியது, இதழ்களிடைப் புன்னகை தோற்றுதலின். இனி முல்லை சூடி இல்லிருந்து வருந்தியவளாதலின் அம்மலர் கூறப் பட்டதென்று தமிழ் வழக்குக் கேற்பக் கருத்துக்கொள்ளலுமாம். கடலிற் பிறந்து, பூமியில் தோன்றியவள், மீள மலைமேல் உதித் தவள் போல மணமண்டபம் புக்காள் என்பது கருத்து.

இனி, 'அலரியிற் றோன்றி' என்று பாடமோதி, தாமரைப் பூவில் தோன்றி என்று பொருள் கூறுதலும் சிறக்கும். அலரி - பூ (திவாகரம்); சிலேடை நயத்தால் வெண்டாமரையை யன்றி ஈண்டுச் செந்தாமரையையும் குறித்தது. 'அலைகடற் பிறந்து' என்பதனால், திருமாமகளையும். 'அலரியிற்றோன்றி' என்ற பாடத் தால் நாமகளையும், 'மலையிடை யுதிக்கின்றாள்' என்பதனால், உமாதேவியையும் கொண்டு, திரிமூர்த்திகளினுருவமாக இராம பிரான் சிறப்பிக்கப்பட்டவாறே, அம்மூர்த்திகளின் தேவியர் மூவராகவும் சீதாதேவி சிறப்பிக்கப்பட்டவாறும். அலரியில் - என்ற, ஆதிப்பாடம், (சானகியின் பிறப்பிடமாதற்கேற்ப) 'அவநியில்' என்று, லகரம் வகரமாகவும், ரி என்ற எழுத்து நி என்ற எழுத்தாகவும் பின்னர் மாறியது என்றே தோன்றுகிறது.

(80)

## வானவர் வியத்தல்

1325. நன்றிவா னவரெலா மிருந்த நம்பியைத்
★ துன்றிருங் கருங்கட றுவைப்பத் தோன்றிய
மன்றலங் கோதையாண் மாலை சூட்டிய
அன்றினு மின்றுடைத் தழகென் றாரரோ.

நன்றி வானவர் எலாம் இருந்த நம்பியைத்
துன்று இரும் கருங் கடல் துவைப்பத் தோன்றிய
மன்றல் அம் கோதையாள் மாலே சூட்டிய
அன்றினும் இன்று உடைத்து அழகு என்றார் அரோ.

பொ :—நன்றியறிதலுடைய தேவர்கள் யாவரும், அங்கு வீற்றிருந்த இராமபிரானை (நோக்கியவராய்), நிறைந்த மிகப் பெரிய கடலைக் கடைதலால் அவதரித்த மணங்கமழும் கூந்தலையுடைய திருமகள் (திருமாலுக்கு) மணமாலை சூட்டிய அந்நாளினும் (சானகி மணமாலை சூட்டப் புகும்) இந்நாள் பேரழகுடைய தாம் என்று கூறிக்கொண்டனர்.

கு :—நன்றி, தம் பொருட்டுப் பெருமான் அவதரித்த தனால் ஆகிய உணர்ச்சி; (பிணிமூப் பிறப்பற்ற) நலங்கள் எனினும் ஆம்: இத்தன்மைகளால் திருமாலின் இருவகைத் திருமணங்களையும் காணலாயினர் என்க. முன்னதான திருமகள் மணம், பெரு முயற்சியும் விடம், போர் முதலியவற்றினிடையீடும், உடையதாய்ப் பின்பு நிறைவேறினமையின், 'அன்றினும்' என்றும், அவ்விடையூறு ஒன்றுமின்றி இனிது நிறைவேறு கின்றமையின் 'இன்று அழகுடைத்து' என்றும் கூறினர். (81)

## திருமணச் சிறப்பு

**1326.** ஒலிகட லுலகினி லும்பர் நாகரில்
பொலிவது மற்றிவள் பொற்பென் றாலிவள்
மலிதரு மணம்படு திருவை வாயினால்
மெலிதரு முணர்வினே னென்வி ளம்புகேன்.

ஒலி கடல் உலகினில் உம்பர் நாகரில்
பொலிவது மற்று இவள் பொற்பு என்றால், இவள்
மலிதரு மணம் படு திருவை வாயினால்
மெலிதரும் உணர்வினேன் என் விளம்புகேன்.

பொ :—ஒலிக்கும் கடல் சூழ்ந்த நிலவுலகோர் நாகருலகோர் களினும் மேம்பட்டு விளங்குவது இவளது பேரழகு என்றால், மனமகிழ்ச்சிதரும் இத் திருக்கலியாண வைபவத்தைச் சிற்றறி வினனான யான் எவ்வாறு சிறப்பித்துக் கூறுவேன்?

கு :—எப் பெண்பாலுங் கொண்டுவமிப்போ ருவமிக்கும் அப் பெண்தானே ஆயின பெண்ணரசி யாதலின், 'உம்பர்

நாகரிற் பொலிவது மற்றிவள் பொற்பு' எனப்பட்டது. திருவுக்குந் திருவாகிய செல்வனுடன் கூடும் திருமணமாதலால், 'மலிதரு மணம்படு திருவை' என்றார். மணம்படு திரு - திருக் கலியாண விபவம். (82)

## திருமணம் காணத் தேவர் வருகை

**1327.** இந்திரன் சசியொடு மெய்தி னுளிளம்
சந்திர மௌலியுந் தைய லாளுடன்
வந்தனன் மலரயன் வாக்கி னுளுடன்
அந்தரம் புகுந்தன னழகு காணவே.

இந்திரன் சசியொடும் எய்தினன், இளம்
சந்திரமௌலியும் தையலாளுடன்
வந்தனன், மலர் அயன் வாக்கினளுடன்
அந்தரம் புகுந்தனன், அழகு காணவே.

பொ :—(இத்தெய்வ மணமக்களின் பேரழகைக் காணும் பொருட்டு) விண்ணிடையே, தேவேந்திரன் இந்திராணியுடன் அடைந்தான்; பிறைமுடியனான சிவபிரானும் தன் உமாதேவியுடன் வந்தடைந்தான்; தாமரையை இடமாகக்கொண்ட பிரமனும் தன் தேவியான கலைமகளுடன் பிரவேசித்தான்.

கு :—தம் தேவியருடன் அழகுகாண இந்திரன் சிவன் பிரமன் மூவரும் வந்தா ரென்றது, அத்தெய்வ மகளிர் அழகுகளுடன் ஒப்புக்காண என்பதனோடு, அப்பேரழகு படுத்தும் பாடே நம்மை இனி வாழ்விக்க வல்லது என்ற குறிப்பும் படநின்றது. இந்திரன் விதி சிவன் என்ற மூவரும், தாமே சென்று அவதாரவரம் வேண்டியவரென்ற முன் செய்தி இங்கு நினைப்பிடத் தகும். (83)

## வசிட்டன் வருதல்

**1328.** நீந்தருங் கடலென
நிறைந்த வேதியர்
தோய்ந்தநூன் மார்பினர்
சுற்றத் தொன்னெறி

வாய்ந்தநல் வேள்விக்கு
வசிட்டன் மையற
ஏய்ந்தன கலப்பையோ
டினிதி னெய்தினான்.

நீந்தரும் கடல் என நிறைந்த வேதியர்
தோய்ந்த நூல் மார்பினர் சுற்றத் தொல் நெறி
வாய்ந்த நல் வேள்விக்கு வசிட்டன் மை அற
ஏய்ந்தன கலப்பையோடு இனிதின் எய்தினான்.

பொ :—முப்புரிநூல் தரித்த மார்பினரும், கடத்தற்கரிய கடல் எனப்படும் வேதங்களில் வல்லவர்களும் நிரம்பினவராய்ச் சூழ்ந்துவர, பழைய முறைகள் பொருந்திய திருமணச் சடங்கு நடத்தற்குக் குறைவற வேண்டிய உபகரணங்களுடன் வசிட்டமா முனிவன் மகிழ்ச்சியுடன் வந்து சேர்ந்தான்.

கு :—வேதியர் கடலெனச் சுற்ற என இயைப்பினுமாம். கலப்பை - துணைக் கருவிகள். 'ஆயதற் குரியன கலப்பை யாவையும்' என்றார் முன்னும் (திருவவதாரப். 83); வேதியர் சுற்ற - என்றது, சடங்கு நிகழும்போது வேதம் வல்லார் பலர் துணை வேண்டுதலின் என்க. (84)

### திருமணச் சடங்கு தொடங்குதல்

**1329.** தண்டிலம் விரித்தனன் தருப்பை சாத்தினன்
மண்டலம் விதிமுறை வகுத்து மென்மலர்
கொண்டவை சொரிந்தெரி குழும மூட்டினன்
பண்டுள மறைநெறி பரவிச் செய்தனன்.

தண்டிலம் விரித்தனன், தருப்பை சாத்தினன்,
மண்டலம் விதிமுறை வகுத்து, மெல் மலர்
கொண்டவை சொரிந்து, எரி குழும மூட்டினன்
பண்டு உள மறை நெறி பரவிச் செய்தனன்.

பொ :—வெண் மணலைக் கீழே பரப்பித் தருப்பைகளை (அதன் மேல் உரிய இடங்களில்) அமைத்து, அக்கினி அமைதற்குரிய வட்டமான இடத்தை வேத முறைப்படி வகுத்துக்கொண்ட மெல்லிய மலர்களை (ச் சுற்றிலும்) தூவி, ஓமத்தீயைக் குவிந்தெரியும்படி வளர்த்துப் பழமையான வேத மந்திரங்களை முறைப்படி ஓதி, (அத்திருமணச் சடங்கைச்) செய்தான்.

கு:—தண்டிலம் - மணல்; வடசொற்றிரிபு. 'அக்கினியைப் பிரதிட்டிக்கு மிடத்தே சதுரமாகப் பரப்புகின்ற மணல்' (சீவக. 2463, உரை) என்பர் நச்சினார்க்கினியர். 'தரு மணல் தருப்பை யார்ந்த சமிதையிம் மூன்றினாலும், விரிமலரணிந்த கோல வேதிகை' என்ற சிந்தாமணிப் பாடல் இங்கு அறியத்தகும். மண்டலம் - என்றது பரிதியை. இச் சடங்கு இராமர் முதலியோ ரின் நன்மையின்பொருட்டுச் சொல்லப்பட்ட ஓமத்தைக் கூறுவ தென்பர். (85)

## சீதா ராமர்கள் மணத்தவிசு ஏறுதல்

1330. மன்றலின் வந்து மணத்தவி சேறி
★ வென்றி நெடுந்தகை வீரனு மார்வத்
தின்றுணை யன்னமு மெய்தி யிருந்தார்
ஒன்றிய போகமும் யோகமு மொத்தார்.

மன்றலின் வந்து மணத் தவிசு ஏறி
வென்றி நெடுந்தகை வீரனும் ஆர்வத்து
இன் துணை அன்னமும் எய்தி இருந்தார்,
ஒன்றிய போகமும் யோகமும் ஒத்தார்.

பொ:—அலங்காரப் பந்தர்க்கு வந்து, திருமணத்துக்குரிய ஆசனத்தில், வெற்றித்திறமும் உத்தம குணங்களும் உடைய வீரனான இராமபிரானும், அப் பிரான்பால் அன்புமிக்க இனிய துணைவியான அன்னம் போன்ற சீதாதேவியும் நெருங்கி வீற்றிருந் தவர்கள், ஒன்று சேர்தற்குரிய போகத்தையும், அதற்கு உபாய மான யோகத்தையும் ஒத்தவரானார்கள்.

கு:—மன்றல் – மணப் பந்தர்; ஆகுபெயர், மணத்தவிசு – அப்பந்தரிடை மணமக்கள் வீற்றிருக்கும் ஆதனம். மார்வத்து இன் துணை – என்று பிரித்து, 'மார்பகத்து வாழும் இனிய துணைவி' என்று கருத்துக் கூறினுமாம். ஒன்றிய போகம் – பரம சாமியத்தை அடைதற்குரிய முத்திநிலை. இது, தவநெறியால் அடையப்படுதலின், அப்போகத்துக்கு உபாயமான யோகத்தைப் பிராட்டிக்கு உவமித்தார்; பரத்துவ விடயத்தில், பிராட்டியினும் வேறுபட்ட பரம்பொருளின் தனிச் சிறப்பு இதனால் அறியப்படும். (86)

### இராமபிராற்குச் சீதையைச் சனகன் தாரை வார்த்தளித்தல்

1331. கோமகன் முன்சன கன்குளிர் நன்னீர்
பூமக ளும்பொரு ளும்மென நீயென்
மாமக டன்னொடு மன்னுதி யென்னுத்
தாமரை யன்ன தடக்கையி னீந்தான்.

கோமகன் முன் சனகன் குளிர் நல் நீர்
பூமகளும் பொருளும் என நீ என்
மாமகள் தன்னொடு மன்னுதி என்னுத்
தாமரை அன்ன தடக்கையின் ஈந்தான்.

பொ :—சக்கரவர்த்தித் திருமகனை இராமபிரான்முன் நின்று கொண்டு சனகராசன், 'ஸ்ரீதேவியும் பரம்பொருளும்போல, நீ, என் திருமகளான சீதாதேவியுடன் நிலைபெற்று வாழ்வாயாக' என்று கூறிய வண்ணம், பெருமானது தாமரைபோலும் நீண்ட கரத்தில், குளிர்ந்த புண்ணிய நீரை வார்த்து, அளித்தான்.

கு :—கோமகன் - சக்கரவர்த்தித் திருமகன்; 'கோக்கண்டு மன்னர் குரைகடல் புக்கிலர்' என்பதனுல், கோ பேரரசரைக் குறித்தல் காண்க. மகட்கொடை நேர்வோர் மணமகன் முன் நின்றே நீர் வார்த்தல் மரபாதலின், 'கோமகன் முன்......ஈந்தான்' என்ருர். நல் நீர் - புண்ணிய நீர். பூமகள் - அலர்மேல் மங்கையான ஸ்ரீதேவி. பொருள் உண்மைப் பொருளான பரமான்மா. 'அகல கில்லேன் இறையுமென் றலர்மேல் மங்கை யுறைமார்பா' (திருவாய். 6, 10, 10) என்றபடி, 'ஒன்றிவாழ்வாயாக' என்ற வாறு. மாமகள் - திருவனைய மகள்; மூத்த மகள் என்றுமாம்; "மிதிலை வேந்தன் தன்பெருந்தனயை" என்பர் பின்னும் (சுஂ. 1305). குளிர்ந்த மனநீர்மையோடு உத்தம பாத்திரத்துப் புரியும் தான மாதலின், 'குளிர்நன்னீர் தாமரையன்ன தடக்கையினீந் தான்' என்ருர். (87)

### அப்போது நிகழ்ந்த வாழ்த்தொலிகள்

1332. அந்தண ராசி யருங்கல மன்னர்
தந்தபல் லாண்டிசை தார்முடி மன்னர்
வந்தனை மாதவர் வாழ்த்தொலி போல
முந்திய சங்க முழங்கின மாதோ.

அந்தணர் ஆசி அரும் கலம், அன்னார்
தந்த பல்லாண்டு இசை, தார்முடி மன்னர்
வந்தனை, மாதவர் வாழ்த்து ஒலி போல,
முந்திய சங்கம் முழங்கின மாதோ.

பொ :—(கன்னிகாதானம் செய்த அப்பொழுது) அந்தணரின் ஆசி ஒலிகளும் நாயகமணி போன்ற மங்கையரின் பல்லாண்டுப் பாடல்களும், மாலை சூடிய முடிவேந்தரது வழிபாட்டுரைகளும் பெருந்தவமுடையோரின் வாழ்த்தொலிகளும், இவைபோலவே முற்பட்ட சங்கங்களின் ஒலிகளும் ஆரவாரித்தன.

கு :—அருங்கலம் - இரத்தினம். திருப்பாவையுள் (10) வரும் இத்தொடர்மொழிக்கு 'ஆரத்தின் நாயகமணி' என்று பொருள் தரப்பட்டுள்ளது, 'அருங்கலச் செப்பு' என்னும் தமிழ் நூல் 'ரத்ந கரண்டகம்' என்ற வடநூலின் மொழிபெயர்ப்பாதலும் அறிக. திறை செலுத்தும் அரசராதலின் 'மன்னர் வந்தனை' என்று அவர் பணிவு கூறினர். சங்க வொலிகள் ஏனையவை யொப்ப ஒருசார் நின்று முழங்கின என்பது படப் 'போல முழங்கின' என்றார். (88)

## வானவர் முதலியோர் மலர்மழை பொழிதல்

1333. வானவர் பூமழை மன்னவர் பொற்பூ
ஏனையர் தூவு மிலங்கொளி முத்தம்
தானகு நாண்மல ரென்றிவை தம்மால்
மீனகு வானின் விளங்கிய திப்பார்.

வானவர் பூ மழை மன்னவர் பொன்பூ
ஏனையர் தூவும் இலங்கு ஒளி முத்தம்
தான் நகு நாள் மலர் என்று இவை தம்மால்
மீன் நகு வானின் விளங்கியது இப்பார்.

பொ :—தேவர்கள் பொழிந்த (கற்பக) மலர்மாரியும், அரசர்கள் சொரிந்த பொன் மலர்களும் மற்றையோர் தூவிய ஒளி விளங்கும் முத்துக்களும், தாமாக மலர்ந்த பூக்களும் என்ற இவற்றால், இந்த நிலவுலகமானது நட்சத்திரங்கள் ஒளிரும் விண்ணிடம் போல விளங்குவதாயிற்று.

கு :—ஏனையர் என்பதனை நாண்மலர் என்பதனோடும் கூட்டுக. (89)

## பாணிக்கிரகணம்

**1334.** வெய்ய கனற்றலை வீரனு மந்நாள்
மையறு மந்திர முற்றும் வழங்கா
நெய்யமை யாவுதி யாவையு நேர்ந்தான்
தைய றளிர்க்கை தடக்கை பிடித்தான்.

வெய்ய கனல் தலை வீரனும் அந்நாள்
மை அறு மந்திரம் முற்றும் வழங்கா
நெய் அமை ஆவுதி யாவையும் நேர்ந்தான்
தையல் தளிர்க்கை தடக்கை பிடித்தான்.

பொ :—வீரனுன இராமபிரானும் அக்காலையில் குறைவற்ற மந்திர முழுவதையும் கூறி, நெய்யொடு பெய்யும் ஆவுதிகள் எல்லாவற்றையும் முறைப்படி பெய்து (பின்) சானகியின் தளிர் போலும் கரங்களைத் தன் பெரிய திருக்கைகளால் பிடித்தான்.

கு :—'மும்மை வழங்கா' என்ற பாடத்திற்கு 'மந்திரத்தை உச்சரித்து நெய்யை மும்முறை மண்ணி' என்பது பொருள்; நெய்யை முனைமுதிர் தருப்பை தன்னுன் – மந்திரத்தமைய முக்கான் மண்ணி' (சிவக சிந். 2465) என்றூர் பிறரும். (90)

## தீவலம் செய்தல்

**1335.** இடம்படு தோளவ னேடியை வேள்வி
தொடங்கிய வெங்கனல் சூழ்வரு போதில்
மடம்படு சிந்தையண் மாறு பிறப்பின்
உடம்புயி ரைத்தொடர் கின்றதை யொத்தாள்.

இடம் படு தோளவனேடு இயை வேள்வி
தொடங்கிய வெம் கனல் சூழ்வரு போதில்
மடம் படு சிந்தையள் மாறு பிறப்பின்
உடம்பு உயிரைத் தொடர்கின்றதை ஒத்தாள்.

பொ :—பெண்மைக்குரிய மடமைக் குணங்கொண்ட மனத்தினளான பிராட்டி, பரந்த தோள்களையுடைய பெருமானுடன் கூடி, மணச்சடங்கு தொடங்கி, விரும்பத்தகும் அந்த அக்கினியை வலம்வருங்கால், வேறுபட எடுக்கும் பிறவிக்கேற்ற உடம்பானது, தனக்கமைந்த உயிருடன் ஒன்றித் தொடர்வதேபோல, உடன் சென்றாள்.

கு :—மடம் - கணவன் கற்பித்தபடி ஒழுகுங் குணம்; 'கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமை' என்பர் முன்னோர். இக்குணவிசேடத்தால், பிராட்டியை உடம்பாகக் கொண்டு, அஃது இராமனுன உயிரைத் தொடர்வது போல என உவமித்தார். மாறு பிறப்பினுடம்பு - மறுபிறவிகளில் எடுத்த உடல். சென்மாந்தரங்களில், அன்பு கருணை பத்திமைகள் புரிந்து பழகிய நெறிக்கு ஏற்பக் கீடமுதல் தேவகதி வரை உயிர் பிறவி எடுத்துப் பயன் துய்க்கும் என்பர். வள்ளுவனாரும்,

"அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்போ டியைந்த தொடர்பு" (73) என்றும்,

"அன்புற் றமர்ந்த வழக் கென்ப வையகத்து
இன்புற்று ரெய்தும் சிறப்பு" (75) என்றும்,

இக்கருத்தே பற்றிக் கூறினர். இவ்வாறு நற்பிறவி எடுக்கும் உடல் தனக்குரிய ஆன்மாவோடு ஒன்றியிணைந்து தொடர்தல் போல, பேரன்பினளான சீதாதேவி இராமபிரானைத் தொடரலாயினள் என்க. இதனால் கருங்கடற் பள்ளியிற் கலவி நீங்கிப் பிரிந்த பிராட்டி, தன் உழுவலன்பால் அவதார நிலையிலும் விடாது தொடர்ந்துநின்றமை பெறப்படும். தொடர்தல் என்பது ஈண்டு தொடர்ந்து மேலான நிலை பெறுதலாம். (91)

## அம்மி மிதித்து அருந்ததி காணல்

**1336.** வலங்கொடு தீயை வணங்கினர் வந்து
பொலம்புரி நூலவர் செய்பொருண் முற்றி
இலங்கொளி யம்மி மிதித்தெதிர் நின்ற
கலங்கலில் கற்பி னருந்ததி கண்டாள்.

வலம் கொடு தீயை வணங்கினர் வந்து
பொலம் புரி நூலவர், செய் பொருள் முற்றி
இலங்கு ஒளி அம்மி மிதித்து எதிர்நின்ற
கலங்கல் இல் கற்பின் அருந்ததி கண்டாள்.

பொ :—அழகமைந்த காப்புநாண் கட்டிக்கொண்ட சீதாராமரிருவரும் ஓமாக்கினியை வலம் வந்து வணங்கி, மற்றும் செய்யத்தகும் சடங்குகளை முடித்துக் கொள்ளப் பின், சீதாதேவி ஒளி விளங்கும் அம்மி மிதித்து எதிர் தோன்றும் கலக்கமற்ற கற்புள்ள அருந்ததி நட்சத்திரத்தைப் பார்த்தாள்.

கு :—'பொலம்புரி நூலவர்' என்பதனுல் முதற்சடங்கான காப்புநாண் கட்டுதல் கூறப்பட்டதாம். அம்மி மிதித்தலும் அருந்ததி காண்டலும் பெண்பாலார்க்குரிய வாதலின் அவை சானகியின் செயல்களாகக் கூறப்பட்டன. அம்மி மிதித்தலாவது மணமகள் பாதத்தைப் பிடித்து மணமகன் அம்மியில் வைப்பது: கல்லின் தன்மை போலக் கற்பு நெறியில் உறுதியாக நிற்க வேண்டும் என்பதனை இது குறிக்குமென்பர். அருந்ததி - வசிட்ட முனிவர் பத்தினி; கற்பு நெறிக்கு எடுத்துக் காட்டானவள்; "எதிர் நின்ற" என்ற அடையால், சடங்கு நிகழ்த்தும் வசிட்ட முனிவரோடு அவர் பத்தினி அருந்ததியும் உடன் வந்தவள் என்றலும் ஆம். விண்ணில் வசிட்ட நட்சத்திரத்தை அடுத்துத் தோன்றும் அருந்ததி நட்சத்திரத்தினைக் காணுதலே உலகவழக்கு.

காப்புநாண் கட்டல், கைத்தலம் பற்றல், தீவலஞ் செய்தல், அம்மி மிதித்தல் முதலிய மணச் சடங்குகள், கோதையார் திருவாக்கிலும் பயில்கின்றன. 'மங்கல நாண்' (நகரப். 2) 'மங்கலக் கழுத்துக் கெல்லாந் தானணி' (கோலங்காண். 7) 'கழுத்தின் நாண்' (அயோத். நகர்நீங்கு. 46) 'மற்ற நல்லணிகள் காணுன் மங்கலங் காத்த' (சுந்தர காண். 524) என, மாங்கலியம் பூட்டுதல், இக்கவியரசரால் பலவிடங்களில் கூறப்பட்டதாயினும், உலக வழக்கான அதனை, வேத வழக்காகவே நடைபெறுஞ் சடங்குகளுடன் இங்குக் கூற அவர் இணங்கவில்லை போலும். (92)

## நன்மனை புகுதல்

1337. மற்றுள செய்வன செய்து மகிழ்ந்தார்
முற்றிய மாதவர் தாண்முறை சூடிக்
கொற்றவ னைக்கழல் கும்பிட லோடும்
பொற்றொடி கைக்கொடு பொன்மனை புக்கான்.

மற்று உள செய்வன செய்து, மகிழ்ந்தார்
முற்றிய மாதவர் தாள் முறை சூடிக்
கொற்றவனைக் கழல் கும்பிடலோடும்
பொன் தொடி கைக் கொடு பொன் மனை புக்கான்.

பொ :—மேலும் செய்யத்தக்க சடங்குகளை யெல்லாம் செய்து முடித்து, மகிழ்ச்சி பெற்றவரான பெருந்தவ முனிவர்களின் திருவடிகளை முறைப்படி தலைக்கணியாக அணிந்து, சக்கரவர்த்தி

யான தன் தந்தையின் பாதங்களை வணங்கியவுடன், பொற்றொடிக ளணிந்த பிராட்டியின் கரங்களைப் பிடித்த வண்ணம் தன் அழகிய மாளிகையினுட் சென்று புகுந்தான்.

கு :—திருமணமானவுடன், மணவாளன் மணவாட்டியோடு தன் இல்லஞ் சேர்ந்து சடங்குகள் சில முடித்தல் நூன்மரபு என்பர். மகிழ்ந்தார் என்பதை, முற்றுகக்கொண்டு சீதாராமர்களை எழுவாயாக்கினுமாம். (93)

### மகிழ்ச்சி யாரவாரம்

**1338.** ஆர்த்தன பேரிக ளார்த்தன சங்கம்
ஆர்த்தன நான்மறை யார்த்தனர் வானோர்
ஆர்த்தன பல்கலை யார்த்தன பல்லாண்
டார்த்தன வண்டின மார்த்தன வண்டம்.

**ஆர்த்தன பேரிகள், ஆர்த்தன சங்கம்,**
**ஆர்த்தன நான்மறை, ஆர்த்தனர் வானோர்,**
**ஆர்த்தன பல் கலை, ஆர்த்தன பல்லாண்டு,**
**ஆர்த்தன வண்டு இனம், ஆர்த்தன அண்டம்.**

**பொ :**—(அப்பொழுது) மங்கல முரசுகள் ஆரவாரித்தன சங்கங்கள் முழங்கின; நான்கு வேத வொலிகள் மிகுந்தன: தேவர்கள் ஆரவாரித்தனர்: பல கலைகள் ஆர்த்தன: பல்லாண்டுப் பாடலிசை ஒலித்தன; வண்டினங்கள் ஒலித்தன; இவ்வளவோ அண்டங்கள் யாவுமே ஆரவாரித்தன.

கு :—பெரு மகிழ்ச்சிக் குரிய சடங்குகள் நிகழும் பொழுது, இவ்வகைப் பேரொலிகள் எழுதல் மரபு. (94)

### மணமகன் தாயர் மூவரையும் வணங்கல்

**1339.** கேகயன் மாமகள் கேழ்கிளர் பாதம்
தாயினு மன்பொடு தாழ்ந்து வணங்கா
ஆயத னன்னை யடித்துணை சூடித்
தூய சுமித்திரை தாடொழ லோடும்.

கேகயன் மா மகள் கேழ் கிளர் பாதம்
தாயினும் அன்பொடு தாழ்ந்து வணங்கா
ஆயதன் அன்னை அடித் துணை சூடித்
தூய சுமித்திரை தாள் தொழலோடும்.

பொ :—கேகயராசன் பெருமகளான கைகேயியின் செந்நிறம் விளங்கும் பாதங்களை, தன் நற்றாயான கோசலா தேவிபால் உள்ள அன்பினும் மிக்க அன்புடன் கீழே விழுந்து வணங்கிப், பின்பு அத்தகைய தன் நற்றாயான கோசலையின் இரண்டு பாதங்களையும் தலையிற் சூடிப் பின், தூயளான சுமித்திரா தேவியின் பாதங்களை வணங்கிய அளவிலே.

கு :—தன் மகனைக் காட்டிலும் மிக்க பேரன்பைக் கைகேயி இராமனிடம் காட்டி வந்தவளாதலின், 'தாயினு மன்பொடு தாழ்ந்து வணங்கா' எனப்பட்டது. 'இராமனைப் பயந்த வெற்கு இடருண்டோ' (அயோத்தியா. மந்தரை சூழ்ச்சி. 47) என்று அக்கைகேயியும், 'என்னை யீன்ற எம்பிராட்டி' என்று இராமனும் கூறிக் கொள்ளுதலைப் பின்னரும் காணலாம். (95)

### மணமகள் அம்மூவரையும் வணங்கல்

1340. அன்னமு மன்னவ ரம்பொன் மலர்த்தாள்
சென்னி புனைந்தனள் சிந்தை யுவந்தார்
கன்னி யருந்ததி காரிகை காணு
நன்மக னுக்கிவ ணல்லணி யென்றார்.

அன்னமும் அன்னவர் அம் பொன் மலர்த் தாள்
சென்னி புனைந்தனள் சிந்தை உவந்தார்
கன்னி அருந்ததி காரிகை காணு
நல் மகனுக்கு இவள் நல் அணி என்றார்.

பொ :—அன்னம் போன்ற சீதாதேவியும், அத்தாயர் மூவரின் பொன்மலரடிகளைத் தலையிற் சூடிப் பணிந்தனள்; (அவர்களும் அத்தேவியைக் கண்டு) மன மகிழ்ச்சியுற்றவர்களாய், அருந்ததி போன்ற அவ்விள மங்கையின் பேரழகை நோக்கி, இவள் நம் திருமகனுக்கு நல்ல அணிகலமானவள் என்று கூறலாயினர்.

கு :—ஒப்புயர்வற்ற பேரழகினன் என்று இராமன் கூறப்படுதலால், அவனாலும் விரும்பி அணிந்து கொள்ளத்தகும் இணையற்ற கௌத்துபமணியானவள் சீதாதேவி என்றவாறு. 'அருந்

ததியான வசிட்ட பத்தினியானவள் காரிகையை (சீதையை)க் கண்டு' என்று பொருள் கூறுதலும் உண்டு. (96)

### தாயரின் பெரு மகிழ்ச்சி

1341. சங்க வளைக்குயி லைத்தழி நின்றார்
அங்கண னுக்குரி யாருள ராவார்
பெண்க ளினிப்பிற ராருள ரென்றார்
கண்கள் களிப்ப மனங்கள் களிப்பார்.

சங்க வளைக் குயிலைத் தழி நின்றார்,
அங்கணனுக்கு உரியார் உளராவார்
பெண்கள் இனிப் பிறர் ஆர் உளர் என்றார்
கண்கள் களிப்ப மனங்கள் களிப்பார்.

பொ:—சங்கு வளைகளை அணிந்த குயில் போலும் மொழியின ளான சீதாதேவியை அன்புடன் தழுவிநின்ற அத் தாய்மார்கள், (தாமரை போலும்) அழகிய திருக்கண்களுடைய இராம பிரானது வாழ்க்கைத் துணையாவதற்கு ஏற்றவராயுள்ள பெண் களில், இவளைப்போல்வார் இனி யாவர் இருக்கப் போகிறார்கள்? என்று கூறியவர்களாய்க் கண்களாற் கண்டு களிப்பவராகவும், மனங்கள் பூரித்து மகிழ்பவராகவும் ஆயினர்.

கு:—இது சீதாதேவியைத் தாயர்கள் கண்டு தழுவிக் கொண்டாடியபடி. அங்கணன்-அழகிய திருக்கண்களுடையவன்; 'அங்கண னப்பூச்சி காட்டுகின்றான்' என்றார் பெரியாரும் (முதலாயிரம். 125) (97)

### பெண்ணின் பரிசு வகைகள்

1342. எண்ணில கோடிபொன் னெல்லையில் கோடி
வண்ண வருங்கல மங்கையர் வெள்ளம்
கண்ணக னாடொடு காசுயர் தூசும்
பெண்ணி னணங்கனை யாள்பெறு கென்றார்.

எண் இல கோடி பொன் எல்லை இல் கோடி
வண்ண அரும் கலம் மங்கையர் வெள்ளம்
கண் அகல் நாடும் ஒடு காசு உயர் தூசும்
பெண்ணின் அணங்கு அனையாள் பெறுக என்றார்.

பொ :—'எண்ணற்ற கோடிக் கணக்கான பொற்காசுகளையும் அளவற்ற கோடிக்கணக்கான அழகிய அணிகலன்களையும், தோழிமார் சேடியர்களாகிய மங்கையர் கூட்டத்தையும், இடமகன்ற நாடுகளுடன் அரதனங்களையும் உயர்ந்த பட்டாடைகளையும், பெண்களின் தெய்வம் போன்ற சீதாதேவி பெறுவாளாக' என்று பரிசளித்தார்கள்.

கு :—காசு உயர் தூசு - விலை மிக்க பட்டாடை எனினுமாம். பிறந்தவிடத்தும் பிறவிடத்தும் உள்ள பெருமக்களின் மகிழ்ச்சிப் பரிசுகள் கூறியவாறு. (98)

**1343.** நூற்கட லன்னவர் சொற்கட னோக்கி
மாற்கட லன்ன மனத்தவ ளோடும்
காற்கடல் போற்கரு ணைக்கடல் பண்டைப்
பாற்கட லன்னதொர் பாய லணைந்தான்.

நூல் கடல் அன்னவர் சொல் கடன் நோக்கி
மால் கடல் அன்ன மனத்தவளோடும்
கால் கடல் போல் கருணைக் கடல் பண்டைப்
பால் கடல் அன்னது ஓர் பாயல் அணைந்தான்.

பொ :—கருங்கடல் போல் விளங்கும் கருணாசாகரமான பெருமான், கலைக்கடல் போன்றவரின் சொற்கடவாத தன்மையைக் கருதி, கடல் போன்ற காதலுள்ளத்தவளான பிராட்டியுடன், பழைய துயிலிடமான திருப்பாற்கடற் பள்ளி போலும் பள்ளியணையை மேவினான்.

கு :—மணமகன் மணமகளோடு தன் மனை புகுதல் என்ற சடங்கு நிகழ்ந்த பின், நான்கு நாளும் மனைவியுடன் கூடி உறைதல் நூன்மரபு என்பர்; 'ஓரிற் கூடியுடன் புணர் கங்குல்' (86) என்பது அகநானூறு. இங்கு 'ஓரில் - சதுர்த்தியறை' என்பர் அரும்பதவுரைகாரர். கால்கடல் - கருநிறம் உள்ள கடல்; 'கால்தோய் மேனிக் கண்டகர்' (வானரரர் களங்காண். 21) என்றார். பின்னும் மால் கடல் – காதற் கடல்; 'கடலன்ன காமம்' என்ப (குறள். 1137). பாற்கடற்பாயல்; அன்னதோர்பாயல் என்க. பாயல் - பள்ளியணை. (99)

## திருமணவேள்வி நிறைவேறுதல்

1344. பங்குனி யுத்தர மான பகற்போ
தங்க ணிருக்கினி லாயிர நாமச்
சிங்க மணத்தொழில் செய்த திறத்தால்
மங்கல வங்கி வசிட்டன் வளர்த்தான்.

பங்குனி உத்தரம் ஆன பகல் போது
அங்கண் இருக்கினில் ஆயிரம் நாமச்
சிங்கம் மணத் தொழில் செய்த திறத்தால்
மங்கல அங்கி வசிட்டன் வளர்த்தான்.

பொ :—பங்குனித் திங்களிற் கூடும் உத்திர நட்சத்திரத்துப் பகற்போதில், அழகிய மணக்கூடத்திலே ஆயிரம் திருநாமங்களுடைய சிங்கமான இராமபிரான் திருமணத்தை வேத முறைப்படி நடத்திய சிறப்பால், வசிட்டபகவானே அத்திருமண வேள்வித்தீயை வளர்த்து நிறைவேற்றிவைத்தான்.

கு :—இப்பாடலால் சீதாராமர்களின் திருமணம் முடிவுறுதலைக் கூறுகின்றார். உத்திர நாளொடு கூடிய பௌர்ணிமையையுடைமையால், பால்குனம், பங்குனி என்று அம்மாதம் பெயர் பெறலாயிற்று. இருக்கினில் மணத் தொழில் செய்த திறம் என இயையும். திறம் - சிறப்பு; பாக்கியம். இறுதியான மங்கல வேள்விச் சடங்கு வரை பிரமபுத்திரனை வசிட்ட பகவானே நேரில் இருந்து நிறைவேற்றிவைத்தான் என்க. 'இராமநாமம் ஒன்றே திருமாலின் ஆயிர நாமங்கட்கு ஒப்பானது' என்பது சகச்சிர நாமத்தின் இறுதித் துதியாதலால், ஆயிர நாமச் சிங்கம் என்றார். சிங்கம் - தேவ சிங்கம் என்றபடி. 'சங்கொடு சக்கரந் தரித்த செங்கைய சிங்கவேறு' (கார்முக. 5) என்றார் முன்னும். இனி, ஆயிரநாமச் சிங்கத்தின் திருமணச் சடங்கை நடத்த நேர்ந்த பாக்கியத்தால் வசிட்ட பகவானே முடிவான ஓமத் தீயை வளர்த்து நிறைவேற்றினன் என்று பொருள் கூறினுமாம். மங்கல அங்கி வளர்த்தலாவது வேள்வியிறுதியில் மங்களகரமாக ஓமத்தீப் பொங்கி யெழும்படி பூரணாகுதி வழங்கல். வசிட்டனே என்ற தேற்றேகாரம் தொக்குநின்றது. 'நெய் சொரிந்து எரி குழும மூட்டினன்' (85) எனவும், 'வெய்ய கனற்றலை......ஆகுதி யாவையும் நேர்ந்தான்' (90) எனவும் 'வேள்வி தொடங்கிய வெங்கனல்' (91) எனவும் மேலே வசிட்டன் எரிவளர்த்த செய்தி

கூறப்பட்டமையால், இங்கு 'வளர்த்தான்' என்றது, அதனை 'வளர்த்து நிறைவேற்றினான்' என்றும் பொருள்பட நின்றது. (100)

1345. வள்ள றனக்கிளை யோர்க டமக்கும்
எள்ளலில் கொற்றவ னெம்பி யளித்த
அள்ளன் மலர்த்திரு வன்னவர் தம்மைக்
கொள்ளு மெனத்தம ரோடுகு றித்தான்.

வள்ளல் தனக்கு இளையோர்கள் தமக்கும்
எள்ளல் இல் கொற்றவன் எம்பி அளித்த
அள்ளல் மலர்த் திரு அன்னவர் தம்மைக்
கொள்ளும் எனத் தமரோடு குறித்தான்.

பொ :—பழிப்பற்ற வெற்றி வேந்தனை சனகன், "என் பின் பிறந்தோனான தம்பி பெற்ற பங்கயத் திருமகள் போன்ற கன்னியர்களை, வள்ளலான இராமபிரானின் இளையோரான பரத லட்சுமண சத்துருக்கனர்களுக்கும் (மணவாட்டியராகக்) கொள்ளுங்கள்" எனச் சுற்றத்தாரோடு குறிப்பிட்டுக் கூறினான்.

கு :—தன் மூத்த திருமகளது மணத்தை மகிழ்ந்து ஈடேற்ற வந்தவனாதலால் 'வள்ளல்' என்றார். சீதாதேவியைத் திருமகளாகப் பெற்றபின் சனகற்குப் பிறந்த மகள் ஊர்மிளை என்பாள். அவளும் தன் தம்பிக்கு மகள் முறையினளாதலால், 'தம்பியளித்த ......திருவன்னவர்' என—சுருங்கச் சொல்லல் என்ற அழகு பற்றி உடன் கூறினர். 'யான் பின்' - என்று பாடங்கொண்டு 'யானும் என் தம்பியும்' என்றும் பொருள் கூறுவதுமுண்டு. (101)

1346. கொய்ந்நிறை தாரன் குசத்துவ சப்பேர்
நெய்ந்நிறை வேலவன் மங்கையர் நேர்ந்தார்
மைந்நிறை கண்ணியர் வானுறை நீரார்
மெய்ந்நிறை மூவரை மூவரும் வேட்டார்.

கொய்ந் நிறை தாரன் குசத்துவசப்பேர்
நெய்ந் நிறை வேலவன் மங்கையர் நேர்ந்தார்
மைந் நிறை கண்ணியர் வான் உறை நீரார்
மெய்ந்நிறை மூவரை மூவரும் வேட்டார்.

போ :—கொய்து தொடுத்து நிறைந்த மலர் மாலையையும் நெய் நிரம்பத் தடவப்பெற்ற வேற்படையையும் உடைய குசத்துவச னுடைய மகளிர் (மூவரும்) அந்தத் திருமணங்கட்குப் பொருந்தி யவராயினர். (பின்) மை நிரம்பத் தீட்டிய கண்ணழகுடையவர் களும் தேவலோகத்தவர் என்று கூறத்தக்கவருமான பருவம் நிரம்பிய அக்கன்னியர் மூவரையும் இராம சகோதரர் மூவரும் திருமணம் புரிந்துகொண்டனர்.

கு :—இலக்குவன் ஊர்மிளையையும், பரதன் மாண்டவியை யும், சத்துருக்கனன் சுருதகீர்த்தியையும், மணம்புரியலாயினர் என்பர். நேர்தல் - மணப்பொருத்தம் சாதகப் பொருத்தம் முதலியவற்றிற்கு ஏற்றவராதல்; வரிக்கப்பெற்றனர் எனினுமாம். இத்திருமணங்களும் பங்குனி யுத்தர நாளன்றே நடந்தேறின என்பர் வான்மீகி முனிவர். (102)

1347. வேட்டவர் வேட்டபின் வேந்தனு மேனாட்
கூட்டிய சீர்த்தி கொடுத்தில னல்லால்
ஈட்டிய மெய்ப்பொரு ளுள்ளன வெல்லாம்
வேட்டவர் வேட்டவை வேண்டள வீந்தான்.

**வேட்டவர் வேட்ட பின் வேந்தனும் மேல் நாள்**
**கூட்டிய சீர்த்தி கொடுத்திலன் அல்லால்**
**ஈட்டிய மெய்ப்பொருள் உள்ளன எல்லாம்**
**வேட்டவர் வேட்டவை வேண்டு அளவு ஈந்தான்.**

போ :—(இராம சகோதரர் மூவரும்) விருப்பத்துடன் மணம் புரிந்து கொண்டபின் சனகமன்னவனும் பல்லாண்டுகளாகத் தான் தொகுத்த கீர்த்தியை மட்டும் கொடுக்கக்கூடியவனாக இல்லை என்பதே யன்றி, தான் நெடுங்காலம் தேடி வைத்தனவும் செலவிட முடியாதனவுமான செல்வங்களை யெல்லாம் வேண்டிய வர் வேண்டியவற்றை அவர்கள் விரும்பிய அளவு (பெரு மகிழ்ச்சி யால்) வழங்கினான்.

கு :—தனக்கு உரியவற்றையெல்லாம் ஈவதனால் குறைவின்றிப் பெருகுவது புகழேயாதலின், சீர்த்தி என்பது அக்கொடைப் பயனை அளியாதது ஆயிற்று; கல்விக் கொடைபோல் என்க. வேந்தனும் என்பது தயரதனை என்பாருமுளர். (103)

1348. ஈந்தள வில்லதொ ரின்ப நுகர்ந்தான்
ஆய்ந்துணர் கேள்வி யருந்தவ ரோடும்
வேந்தனு மந்நகர் வைகினன் மெள்ளத்
தேய்ந்தன நாள்சில செய்த துரைப்பாம்.

ஈந்து அளவு இல்லது ஓர் இன்பம் நுகர்ந்தான்,
ஆய்ந்து உணர் கேள்வி அரும் தவரோடும்
வேந்தனும் அந் நகர் வைகினன், மெள்ளத்
தேய்ந்தன நாள் சில; செய்தது உரைப்பாம்,

பொ :—(எல்லாவற்றையும்) வாரி வழங்கி, அதனால் அளவற்ற தோர் இன்பத்தை அனுபவித்தனன் (சனக மன்னன்). சக்கர வர்த்தியான தயரதனும், ஆராய்ந்து தத்துவமுணர்ந்த கலைவலா ரும் அரிய தவங்களை முடித்தவருமான முனிவர்களுடன் அம்மிதிலை நகரில் தங்கியிருக்க, இவ்வாறு சில நாள்கள் மெல்லக் கழிந்தன; இனிப் பின் நிகழ்த்தியதை உரைப்போம்.

கு :—ஈத்துவக்கும் இன்பம் பெரிதாதலால், ஈந்தளவில்ல தோ ரின்பமென்றும், தத்துவ ஆராய்ச்சி மிக்க மிதிலைவாசிக ளான கலைஞர்களுடன் நெருங்கிப் பழகிப் பேரின்பத்தை அடை கின்ற சக்கரவர்த்திக்கு நாள் கழிந்தது தெரியவில்லை என்பதுபட 'மெள்ளத் தேய்ந்தன நாள் சில' என்றும் கூறினர். திருமண முடிந்தபின் தன் நகரம் செல்லக்கூடிய சம்பந்தியின் மனப்பான் மையையும் மாற்றியது கலைவல்ல முனிவருடன், கூடிக் களித்த செயல் என்பது குறிப்பு. இனி 'வேந்தொடு' என்ற பாடங் கொண்டு, (வேண்டளவீந்த தயரதன்) 'சனகனோடும் வைகினன்' எனப் பொருள் கூறுவாரும் உளர். (104)

கடிமணப் படலம் முற்றிற்று

# 22. பரசுராமப் படலம்

தயரதனும் இராமன் முதலானவர்களும். தமது யானை சேனை பரிவாரங்களுடன் சனக மன்னனிடம் விடைபெற்று அயோத்திக்குப் புறப்பட்டனர். வழியில் பல தீய நிமித்தங்கள் தோன்றின. அவைகளின் நன்மை தீமைகளை நிமித்திகன் கூறுகின்றான். அந்நிலையில் தன் தந்தையைக் கொன்றதற்காக, அரசர் வழி வந்தவரை இருபத்தொரு தலைமுறை கருவறுப்பதாகக் கூறி, மன்னர்களைக் கொன்று, நில முழுவதும் தன்னுடையதாக்கிப் பின்பு அதனைக் காசிப முனிவர்க் கீந்தவனும், அஞ்சத்தக்க பேராற்றலையுடையவனுமான பரசுராமன் எதிர்ப்படுகிறான். தயரதன் கவல்கின்றான். இராமனும் பரசுராமனும் வாதம் புரிகின்றனர். '' சனகன் வில்லை முறித்தது கிடக்க. நான் கொணர்ந்துள்ள வில்லை முறி '' என்று இராமனிடம் பரசுராமன் கூறுகின்றான். இராமன் அவ்வில்லை நாணேற்றி வெற்றி கொள்கின்றான். தோற்ற பரசுராமன் இராமன் கணைக்கு இலக்காகத் தான் ஈட்டிய தவத்தின் பயனைக் குறிக்கின்றான். பின் அவன் மகேந்திர மலைக்குச் செல்கின்றான். தயரதன் அச்சம் நீங்கப் பெற்று, இராமனின் பேராற்றலை மெச்சி, அயோத்தி சென்றடைகின்றான். பரத சத்துருக்கனர் தயரதன் கட்டளைப்படி மாமன் உதாசித்தென்பவனுடன் கேகயநாட்டிற்குச் செல்கின்றனர். இப்படலத்தில் உள்ள ஐம்பது செய்யுட்களிற் கூறப்பட்ட செய்திகள் இவைகளே யாகும்.

முதனூலாகிய வான்மீகத்தில் நிமித்தங்களின் நன்மை தீமைகளை வசிட்டமுனிவனே கூறியதாகக் காணப்படுகிறது. பறவைகள் அஞ்சும்படி கூவுவதால் ஏதோ தீங்கு நேரிடக் கூடும் என்றும், ஆனால் விலங்குகள் வலமாகச் சுற்றிச் செல்வதால் அத்தீங்கு நீங்கும் என்றும், வசிட்ட முனிவன் கூறியதாக, முதனூல் கூறும்.

சடை முடியன் என்றும், மன்னர் வழியைக் கருவறுத்தவன் என்றும், கயிலை போன்றவன் என்றும், ஊழித்தீப் போன்றவன் என்றும், முப்புரமெரித்த சிவபிரான் போல்வான் என்றும், சமதக்கினியின் புதல்வன் என்றும் முதனூல் பரசுராமனைப் பற்றிக் கூறும். தன் தந்தையை ஓர் மன்னன் கொன்றதற்காகச் சினந்து மன்னர்வழி வந்தாரைக் கருவறுப்பது ஒருவாறு பொருந்துமேனும், தன் ஆற்றலை இழிவுபடுத்திப் பேசியதற்காகவே, தான் பரசுராமனை எதிர்க்கக் கருதுவதாக இராமன் கூறினன் என்று

வான்மீகம் கூறும். இனி இராமன் பரசுராமன் என்ற இருவரும் திருமாலின் அவதாரம் எனினும் இராமன் அமிசாவதாரமும், பரசுராமன் ஆவேச அவதாரமுமாகலின் பரசுராமனிடம் புக் குறைந்த ஆற்றல், அமிசாவதாரமான இராமனுற் கவர்ந்து கொள்ளப்படப் பரசுராமன் தோல்வியுற்றுன் என்று அறிஞர் கூறுவர்.

ஆணவம் தலைக்கேறிய அளவில் உரையாடல் எவ்வாறு நிகழும் என்பதைப் பரசுராமன் கூற்றுக் கொண்டு உணரலாம். மற்றும் "கூனி கூன் போக வுண்டை தெறித்தபோ தொத்த தன்றிச் சின வுண்மை தெரிந்ததில்லை" (கும்ப. 17) என்று புகழப்பெற்ற இராம னுக்கும் சினம் சிறிது எழுந்தது என்று காட்டிக் குணமென்னும் குன்றேறிநின்றார்க்கும் சிறிது வெகுளி எழும் என்பதும், அது, தான் உள்ள அளவு கணமாயினும் 'வெகுளப் பட்டாரால் தடுத்தல் அரிது என்பதும், இராமனுக்கும் பரசுராமனுக்கும் இடையே நிகழ்ந்த நிகழ்ச்சி கொண்டு கவிஞர் நயமுற விளக்குவர். ஆணவம், தனை மிகுதியாக உடையார்க்கே மானக்கேட்டை விளைக்கும் என்ற உண்மையைக் கம்பர் இப்படலம் 25ஆவது செய்யுளில் "முடிமன்னவன் மதிசோர்வுறல் மதியான், தானந் நிலையுறுவானுறு வினையுண்டது தவிரான்" என்ற வரிகளால் நன்கு விளக்கிப் போந்தனர். "தன்னைத் தான் காக்கிற் சினம் காக்க காவாக்கால் தன்னையே கொல்லும் சினம்" (திருக்குறள். 305); "சினத்தைப் பொருள் என்று கொண்டவன் கேடு, நிலத்தறைந்தான் கைபிழையாதற்று" (குறள் 307) என்ற தமிழ் மறைச் செய்யுட்கள் இங்கு நினைவுகூரத்தகும். இப்படலத்து ஏழாம் செய்யுள் முதல் பதினுன்காம் செய்யுள் வரையில் பரசு ராமனது வீரமும் வெகுளியும் அவனது பல அரிய செயல்களும் கூறப்பட்டுள்ளன. இப்படலத்துச் செய்யுட்களில் அமைந்த சந்தம் போர்நிகழ்ச்சிக்கேற்ற தொன்று.

பரசுராமன் தந்த வில்லை இராமன் கைக்கொண்ட செய்தி பேசுதலின், இது சிலைக் கோட் படலம் என்ற பெயரோடும் சில சுவடிகளிற் காணப்படுகிறது.

---

# 22. பரசுராமப் படலம்

## கோசிகன் தவம்புரியச் செல்லுதல்

**1349.** தானுவதோர் வகையேநனி
சனகன்றரு தயலும்
நானுவித வருபோகமு
நுகர்கின்றவன் நாள்வாய்
ஆனுமறை நெறியாசிகண்
முனிகோசிக னருளிப்
போனன்வட திசைவாயுயர்
பொன்மால்வரை புக்கான்.

**தான், ஆவது ஓர் வகையே, நனி சனகன் தரு தயலும்
நானுவித வருபோகமும் நுகர்கின்ற அந்நாள்வாய்,
ஆனு மறை நெறி ஆசிகள் முனி கோசிகன் அருளிப்,
போனன், வடதிசைவாய் உயர் பொன்மால்வரை புக்கான்.**

பொ :—(இராமனுகிய) தான் (எடுத்த உருவத் திருமேனிக்கு) ஏற்றதான ஓர் வகையில், சனகன் (தந்த) சீதையுடனே, பல வகையாக நிகழும் போகங்களையும் மிகுதியும் துய்க்கின்ற அந்நாளில் (அவர்களுக்கு) அழிதலில்லாத மறைநெறிகளைக் கடைப் பிடிப்பதில் வல்ல பெருந்தவ முனிவனுன கோசிகன் வாழ்த்துக் கூறிப் போய் வடதிசைக்கண் உயர்ந்த பெரிய இமயமலையில் (தவம்புரியச்) சென்ருன்.

கு :—பரசுராமனது எதிர்ப்பு நிகழ்ந்தபோது கோசிகன் இராமனுடன் இல்லை என்பது இதனுற் பெறப்படும். விசுவாமித் திரர் முன்னர்க் கையடைப்படலத்துத் தயரதனிடமிருந்து இராம இலக்குவரைப் பெற்று, அவர்கட்குப் படைப் பயிற்சி யளித்ததும், இராமனுக்குத் திருமணம் செய்வித்ததுமான போற்றற்குரிய செயல்கள் குறிக்கப்பட்டன. அந்த முனிவன், தான் ஆற்ற வேண்டிய பணிகளை ஆற்றிச் சென்ருன். இனி இம் முனிவனைப் பற்றிய செய்தி ஒன்றும் இராமாயணத்திற் காண்டற் கில்லை என்பது இங்கே அறியத்தக்கது. நானுவித வருபோகமும் துய்த்தான் எனினும், இன்பத் துறையில் எளியனுகாமல் காதலியுடன் துய்க்கும் நெறிமுறையே துய்த்தான் என்பது,

கடிமணப் படலத்திறுதியிற் கூறப்பட்ட "நூற்கடல் அன்னவர் சொற்கடல் நோக்கி நுகர்ந்தான்" என்பது கொண்டு உணரலாம். பையல் பயல் என்றாயினாற்போலத் தையல் தயல் என்றாயிற்று. "தயல்வளர் மேனியன்" என்பது திருக்கோவையார் (117) (1)

### தயரதன் தன் நகர்க்குப் பயணமாதல்

1350. அப்போதினின் முடிமன்னவ
னணிமாநகர் செலவே
இப்போதுந மனிகந்தனை
யெழுகென்றினி திசையாக்
கைப்போதக நிகர்காவலர்
குழுவந்தடி கதுவ
ஒப்போதரு தேர்மீதினி
லினிதேறின னுரவோன்.

அப்போதினில் முடி மன்னவன்
அணி மா நகர் செலவே,
'இப்போது நம் அனிகம் தனை
எழுக' என்று இனிது இசையாக்,
கைப் போதகம் நிகர் காவலர்
குழு வந்து அடி கதுவ,
ஒப்பு ஓது அரு தேர் மீதினில்
இனிது ஏறினன் உரவோன்.

பொ:—அக்காலத்து (ஓர் நாளிலே) வல்லவனும் முடிமன்னவனுமாகிய தயரதன், (நமது) அழகிய பெரிய தலைநகர் செல்வதற்கு இப்பொழுது 'நமது சேனை புறப்படுவதாக' என்று இனிதாகக் கூறி, துதிக்கையையுடைய யானைகளை ஒத்த அரசர்களின் கூட்டம் தனது திருவடிகளை வந்து (பணிந்து) சுற்ற, உவமை கூறற்கரிய தேரின்மீது இனிதாக ஏறினன். (2)

### தயரதன் அயோத்தி நோக்கிச் செல்லுதல்

1351. தன்மக்களு மருமக்களு
நனிதன்கழ றழுவ
மன்மக்களு மயன்மக்களும்
வயின்மொய்த்திட மிதிலைத்

தொன்மக்களு மனமுக்குயிர்
பிரிவென்பதொர் துயரின்
வன்மக்கடல் புகவுய்ப்பதொர்
வழிபுக்கனன் மறவோன்.

தன் மக்களும் மருமக்களும்
நனி தன் கழல் தழுவ,
மன் மக்களும் அயல் மக்களும்
வயின் மொய்த்திட, மிதிலைத்
தொல் மக்களும் மனம் உக்கு உயிர்
பிரிவு என்பது ஓர் துயரின்
வன்மக் கடல் புக, உய்ப்பது ஓர்
வழி புக்கனன் மறவோன்.

பொ :—வீரம் செறிந்த தயரதன், தனது புதல்வர்களும் மருமக்களும் தனது திருவடிகளை நன்றாக வணங்கி உடன் வரவும், அரசிளங்குமரர்களும் மற்றும் முனிவர் முதலியோரும் இடந்தொறும் சூழ்ந்து வரவும், மிதிலைப்பதியில் நீண்டகாலமாக வாழும் மக்கள் அனைவரும் (பிரிவாற்றாமையால்) மனம் உடைந்து, உயிர் உடலைவிட்டு நீங்கும் துன்பம் எனத்தக்கதோர் துயராகிய வலிய கடலை அடையவும் (மிதிலையினின்று அயோத்திக்குச்) செலுத்துவதொரு வழியிற் புகுந்தான்.

கு :—உயிர் பிரிந்தாலன்ன துன்பம் எய்தினர் எனவே, பழக்கம், குறுகிய கால அளவினதேனும், மிதிலைநகர்மக்கள் தயரதனிடத்தும் அவனைச் சார்ந்தோரிடத்தும் கொண்ட அன்பின் ஆழம் நன்கு விளங்கும். துயரின் வன்மக் கடல் என்றதால், எளிதிற் கடத்தற்கரிய துன்பம் என்பது பெறப்படும். வன்மம் - வலி. "மார்பிற் - கரம் சென்றுற்ற வன்மத்தைக் கண்டும்" (யுத்த. அதிகாய. 228) என்பது காண்க. (3)

இராமன் பிராட்டியொடும் தம்பியருடனும் செல்லுதல்

1352. முன்னேநெடு முடிமன்னவன்
முறையிற்செல மிதிலை
நன்மாநக ருறைவார்மன
நனிபின்செல நடுவே

தன்னேர்புரை தருதம்பியர்
தழுவிச்செல மழைவாழ்
மின்னேபுரை யிடையாளொடு
மினிதேகினன் வீரன்.

முன்னே நெடு முடி மன்னவன்
முறையில் செல, மிதிலை
நன் மா நகர் உறைவார் மனம்
நனி பின் செல, நடுவே
தன் நேர் புரைதரு தம்பியர்
தழுவிச் செல, மழை வாழ்
மின் நேர் புரை யிடையா ளொடும்
இனிது ஏகினன் வீரன்.

பொ:—பெருமைமிக்க முடிபுனைந்த தயரதன் (தன் தலைமை தோன்ற) முன்னே முறைப்படி செல்லவும், அழகிய பெரிய மிதிலைப்பதியில் வசிப்பவரது உள்ளம் தன்னைப் பெரிதும் தொடர்ந்து வரவும், தன்னை (எவ்வகையிலும்) பொருந்துமாறு ஒத்த தம்பிமார் தன்னைத் தழுவி வரவும், மேகத்தின்கண் தங்கியுள்ள மின்னலை யொத்த இடையினையுடைய சீதாதேவியொடும், வீரனான இராமன் இனிதாகச் சென்றான்.

கு:—நகரத்தாரது நினைவு முழுவதும் இராமன் மாட்டே யிருந்தது என்பது நன்மா நகர் உறைவார் மனம் நனிபின் செல என்பதனாற் பெற்றாம். முன்னரே "நால்வரும் பொருவில் நான் மறையெனும் நடையினர்", "மறைநான்கும் அனையார்கள்" என்ற இடங்களில் உடன் பிறந்தார்கள் நால்வரும் ஒரே தன்மையர் என்பது காட்டப்பட்டது. அக்கருத்துப் பற்றியே இவ்விடத்தும் "தன் நேர் புரைதரு தம்பியர்" என்றார். இச்செய்யுளின் கருத்தும் சந்தமும், கங்கைப் படலத்து "வெய்யோன் ஒளி" என்று தொடங்கும் செய்யுளுடன் ஒப்புநோக்கத்தக்கன. இங்கே "மின்னேர் புரை இடையாள்" என்றார்; அங்கே "பொய்யோ எனும் இடையாள்" என்றார்; மின்னல் பொய் என்ற இரண்டிற்கும் நிலைபேறின்மை யாவரும் அறிந்ததொன்றாகலின். (4)

### தயரதன் கெட்ட நிமித்தங்கள் கண்டு நிற்றல்

**1353.** ஏகும்மள வையின்வந்தன
வலமும்மயி லிடமும்
காகம்முத லியமுந்திய
தடைசெய்வன கண்டான்
நாகம்மன னிடையிங்குள
திடையூறென நடவான்
மாகம்மணி யணிதேரொடு
நின்றானெறி வந்தான்.

**ஏகும் அளவையின், வந்தன வலமும் மயில், இடமும் காகம் முதலிய முந்திய தடை செய்வன கண்டான், நாகம் அனன், இடை இங்கு உளது இடையூறு என நடவான், மாகம் அணி அணி தேர் ஒடு நின்றான் நெறி வந்தான்.**

பொ :—(இவ்வாறு) செல்லும் பொழுதில், மயில் முதலிய சில பறவைகள் (நல்ல குறியாக) வலப்புறமாக வந்தன. காகம் முதலிய சில பறவைகள் (தீய குறியாக) இடப்புறமாக வந்தனவாகி முற்பட்டுத் தடை செய்வனவற்றைப் பார்த்தவனாகிய, யானையை ஒத்த தயரதன், இந்நெறிக்கண் இடையூறு இருக்கின்றது என எண்ணி மேலே செல்லாதவனாய், வழியில் வந்தவன் ஆகாயத்தை அண்மி நின்ற அழகிய தேரோடும் நின்றுவிட்டான்.

கு :—கொடி வலமிருந்து இடமாதல் தீய நிமித்தம் என்ப. "கொடியிடமாப் போந்த குறை" (மதுரைக். 55) என்றது காண்க. மயில் வலமாதல் நல்ல நிமித்தம். (5)

### நிமித்திகன் இடையூறு நிகழ்ந்து நீங்குமெனல்

**1354.** நின்றேநெறி யுணர்வானொரு
நினைவாளனை யழையா
நன்றோபழு துளதோநடு
வுரைநீயெ மென்னக்

குன்றேபுரை தோளானெதிர்
புள்ளின்குறி கொள்வான்
இன்றேவரு மிடையூறது
நன்ருய்விடு மென்ருன்.

நின்றே நெறி உணர்வான் ஒரு நினைவாளனை அழையா.
'நன்ரே? பழுது உளதோ? நடு உரை நீ நயம்' என்னக்,
குன்றே புரை தோளான் எதிர், புள்ளின் குறி கொள்வான்,
'இன்றே வரும் இடையூறு, அது நன்ருய்விடும்' என்ருன்.

பொ:—(தயரதப் பேரரசன்) நின்று நிமித்தங்களின் (நன்மை தீமைகளை) அறிபவனுகிய ஓர் ஆராய்ச்சியாளனை அழைத்து, (இந் நிமித்தங்களால் உண்டாகும் விளைவு) நல்லதோ அல்லது தியதோ அதன் நயத்தை நீ உண்மையாகச் சொல் என்ன, மலையையே நிகர்த்த புயங்களையுடைய மன்னவன் முன்பாகப், பறவைகளின் நிமித்தங்களை அறிபவனுகிய அக் கணி "இப்பொழுதே தீங்கு நிகழும்; அஃது முடிவில் இனிதாக முடியும்" என்ருன்.

கு:—நெறி – நிமித்தங்களின் நடைமுறை. நயம் நடு உரை நீ என்பதற்கு நீதியாக நடுநிலையினின்று கூறுவாயாக எனினுமாம். "நகலானு நன்னய மென்னும் செருக்கு" (திருக்குறள் 860) என்னு மிடத்தில் நயம் நீதியெனப் பொருள்படுதல் காண்க. குன்றே என்பதில் உள்ள ஏகாரம் அவனது திண்ணிய தோள்கட்கு வேறு உவமையின்மையை விளக்கும். புள்ளின் நிமித்தங்கொள்வது தமிழ்நாட்டுப் பழைய வழக்கங்களில் ஒன்று. "நாளன்று போகிப் புள்ளிடை தட்ப" என்பது புறநானூறு (124). "புலரி விடியற் புள்ளோர்த்துக் கழிமின்" (மலைபடு. 448); "நாளும் புள்ளும் கேளா வூக்கமொடு" (தகடூர்யாத்திரை). பரசுராமன் போரெழுச்சியான் நிகழவிருக்கும் இடையூறும் அஃது இராமனது வெற்றியால் திர்வதும் இங்கே குறிக்கப்பெற்றன. நிமித்தங் களின் நலன் தீங்குகளை வசிட்ட முனிவனே தயரதற்குரைத்ததாக முதனூல் கூறும். பறவைகள் அச்சமுறும்படி கூவுகின்றன என்றும், விலங்குகள் மட்டும் வலமாகச் செல்கின்றன என்றும் மன்னன் கவன்று கூற, முனிவன் பறவைகள் கூவுவதால் ஓர் பயம் உண்டாகும் என்றும், விலங்குகள் தம்மை வலமாகச் சுற்றிச் செல்வதால் அந்தப் பயம் நீங்கிவிடும் என்றும் கூறினன் என்பது வான்மீகத்திற் கண்டது. (6)

## பரசுராமனது வரவு (1355–1363)

**1355.** என்னும்மள வினில்வானக
மிருள்கீறிட வொளியாய்
மின்னும்படி புடைவீசிய
சடையான்மழு வுடையான்
பொன்னின்மலை வருகின்றது
போல்வானனல் கால்வான்
உன்னுந்தழல் விழியானுரு
மதிர்கின்றதொ ருரையான்.

என்னும் அளவினில், வானகம் இருள் கீறிட, ஒளியாய் மின்னும்படி புடை வீசிய சடையான், மழு உடையான், பொன்னின் மலை வருகின்றது போல்வான், அனல் கால்வான், உன்னும் தழல் விழியான், உரும் அதிர்கின்றது ஓர் உரையான்.

பொ :—என்று (நிமித்திகன்) சொல்லும் அளவில், ஆகாயத்தில் பரந்த இருள் சிதைந்து நீங்கும்படி ஒளியாக விளங்குமாறு, பக்கங்களில் விரிந்த சடையையுடையவனும், மழு என்ற கோடரியைத் தாங்கியவனும், பொன்மலை வருவது போன்று காணப் படுபவனும், வெப்பம் வீசுகின்ற (உடலை) உடையவனும் (கண்டவர் யாரும் இஃது என் என்று திகைத்துக்) கருதுமாறு (நெருப்பை உமிழ்கின்ற) கண்களையுடையவனும், இடியொத்து முழங்கும் உவமையிறந்த (கடுஞ்) சொல்லையுடையவனும்.

கு :—என்னும் அளவினில் என்ற தொடர், 1363-வது செய்யுட்கண் 'மழுவாளவன் வந்தான்' என்ற தொடருடன் இயையும். பரசுராமனது கடுஞ் சினத்தொடு கூடிய தோற்றத்தை அறிவித்தற்குச் சடைவீசுதலும், அனல் உமிழ்தலும், தழல்விழித்தலும், உரையதிர்ச்சியும் கூறப்பட்டன. இடத்திற்கு ஏற்ற செய்யுட் சந்தமும் அறிந்து மகிழத்தக்கது. (7)

**1356.** கம்பித்தலை யெறிநீருறு
கலமொத்துல குலையத்
தம்பித்துயர் திசையானைக
ளரக்கடல் சலியா

வெம்பித்திரி தரவானவர்
வெருவுற்றிரி தரவோர்
செம்பொற்சிலை தெறியாவயின்
முகவாளிக டெரிவான்.

கம்பித்து அலை எறி நீர் உறு கலம் ஒத்து உலகு உலையத்
தம்பித்து, உயர் திசை யானைகள் தளரக், கடல் சலியா
வெம்பித் திரிதர, வானவர் வெரு உற்று இரிதர, ஓர்
செம் பொன் சிலை தெறியா, அயில் முக வாளிகள் தெரிவான்.

பொ:—அலைவீசுகின்ற கடல் நீரில் சிக்கிய மரக்கலத்தை யொத்து, உலகில் உள்ள (இயங்குதிணை நிலைத்திணைப் பொருள்கள்) நடுநடுங்கி நிலைகுலையவும், உயரமான எட்டுத் திசைகளிலும் நிற்கும் யானைகள் (அச்சத்தால் அசைவற்று நின்று) தளர்ச்சியுறவும், கடல் கொந்தளித்துக் கொதித்துக் கரை புரளவும், தேவர்கள் அஞ்சி இடம் பெயரவும், ஓர் செந்நிறமான பொன் வில்லை (வளைத்து நாணேற்றித்) தெறித்துக்கூரிய நுனியையுடைய அம்புகளைத் தேர்ந்தெடுப்பவனும்.

கு:—பரசுராமன் வில்லின் நாணைத் தெறித்த அளவில் நிகழ்ந்த விண்ணுலக மண்ணுலக நிகழ்ச்சிகள் முதல் மூன்றடிகளிற் கூறப்பெற்றுள்ளன. கலம் என்ற பலபொருளொரு சொல் இங்கே மரக்கலத்தைக் குறித்தது; "கெடு நீரார் காமக் கலன்" (திருக்குறள். 605) என்ற இடத்து அழியும் தன்மையர் விரும்பியேறும் மரக்கலம் என்றது காண்க. (8)

1357. விண்கீழுற வென்றோ படி
மேல்கீழுற வென்றோ
எண்கீறிய வுயிர்யாவையும்
யமன்வாயிட வென்றோ
புண்கீறிய குருதிப்புனல்
பொழிகின்றன புரையக்
கண்கீறிய கனலான்முனி
வியாதென்றயல் கருத.

'விண் கீழ் உற என்றோ? படி மேல் கீழ் உற என்றோ?
எண் கீறிய உயிர் யாவையும் யமன் வாய் இட என்றோ?
புண் கீறிய குருதிப் புனல் பொழிகின்றன புரையக்,
கண் கீறிய கனலான் முனிவு யாது?' என்று அயல் கருத.

பொ ;—புண்ணைக் கிழித்து வெளிவரும் உதிர நீர் பொழிவதை ஒக்கும்படி, கண்ணைக் கிழித்து வெளிப்பட்ட தீயுடன் கூடியவனது வெகுளிக்குக் காரணம், ஆகாயம் பூமியில் வந்து படியவென்று தானோ, பூமி தலைகீழாக வேண்டும் என்றோ, எண்ணினையும் கிழித்து எழுந்த (எண்ணிறகடங்காத) உலகத்துயிர்கள் அனைத்தையும் யமனது வாயில் இடவென்று நினைந்தோ, அல்லது வேறு எதுவோ என்று அயலில் உள்ளவர் யாவரும் நினையவும்.

கு :—படி மேல் கீழ் உற என்பதற்குப் பூமி, மேல் உலகிற் சென்று பொருந்தவோ, அல்லது கீழேயுள்ள பாதலத்துச் சென்று பொருந்தவோ என்றும் பொருள் கூறலாம். விண்ணுலகம் பாதலத்திற் படியவும் பூமியின்மீது பாதலம் வந்து பொருந்தவும் என்றும் கொள்ளலாம். பரசுராமனது வெகுளியால் மூவுலகும் நிலைகுலைந்த செய்தியைக் கூறுவது இச்செய்யுள். (9)

1358. போரின்மிசை யெழுகின்றதொர்
மழுவின் சிகை புகையத்
தேரின்மிசை மலைசூழ்வரு
கதிருந்திசை திரிய
நீரின்மிசை வடவைக்கன
னெடுவா னுறமுடுகிப்
பாரின்மிசை வருகின்றதொர்
படிவெஞ்சுடர் படர.

**போரின் மிசை எழுகின்றது ஒர் மழுவின் சிகை புகையத்,**
**தேரின் மிசை மலை சூழ்வரு கதிரும் திசை திரிய,**
**நீரின் மிசை வடவைக்கனல் நெடுவான் உற முடுகிப்,**
**பாரின் மிசை வருகின்றது ஒர், படி வெம் சுடர் படர.**

பொ :—போரின்கண் தலையுயர்த்தும் ஒப்பற்ற மழுவினது தலை புகையவும், தேர்மீதமர்ந்து மேருமலையைச் சுற்றிவரும் சூரியனும் (தனது வெய்யதன்மையை நோக்கித்) தான் செல்லும் திக்கு மாறிச் செல்லவும், கடலிடத்துள்ள வடவைத் தீயானது பரந்த ஆகாயத்தைத் தீண்டும்படி விரைந்து பூமிமேல் வருகின்ற ஒப்பற்ற விதமாகத் (தன் மேனியின்) வெவ்விய ஒளி பரவவும்.

கு :—வடவை - பெண் குதிரை முகவடிவாகக் கடலிடையுள்ளதென்றும், அதன் வாயினின்றும் எழும் தீயால் உலகம் யுகமுடிவில் அழியும் என்றும், புராணங்கள் கூறும். மழு-

எரியீட்டியுமாம். தீயின் கொழுந்தைச் சிகையென்று கூறுதல் மரபு. ''ஊழித்தீப் படர்ந்துடற்றுபு சிகையும்'' (கல்லா. கணபதி துதி.) (10)

**1359.** பாழிப்புய முயர்திக்கிடை
யடையப்புடை படரச்
சூழிச்சடை முடிவிண்டொட
வயல்வெண்மதி தோற்ற
ஆழிப்புன லெரிகானில
மாகாயமு மழியும்
ஊழிக்கடை முடிவிற்றிரி
யுமைகேள்வனை யொப்ப.

பாழிப் புயம் உயர் திக்கு இடை அடையப் புடை படர் அச்
சூழிச் சடை முடி விண் தொட, அயல் வெண்மதி தோற்ற,
ஆழிப் புனல் எரி கால் நிலம் ஆகாயமும் அழியும்
ஊழிக் கடை முடிவில் திரி உமை கேள்வனை ஒப்ப.

பொ :—வன்மை செறிந்த தோள்கள், உயர்ந்த திசைகளின் எல்லைகளிலே சென்று அடையவும், பக்கங்களிற் பரவும் அச் சடையுடன் கூடிய மயிர்முடியினது உச்சி ஆகாயத்தை அளாவவும், வெண்ணிறமுள்ள சந்திரன் முடியின் அருகிலே தோற்றவும், கடல் வடிவமான நீரும், தீயும், காற்றும், பூமியும் விண்ணும் (என்னும் ஐம்பெரும் பூதங்களும்) அழியக்கூடிய ஊழிக் காலத்தின் இறுதியில் நடம்புரிகின்ற உமையாள் மணாளனை உருத்திரனை ஒத்து விளங்கவும்.

கு :—சூழி - உச்சி எனக்கொண்டு சடைமுடிச் சூழி என இயைக்க. பூதங்களை முறைபிறழக் கூறியது செய்யுளாதலின் என்க. ஒன்றில் ஒன்று தோன்றிய வகையில், விண் கால் அனல் புனல் மண் என்பதே முறை. ஊழி முடிவில் சிவபிரான் பவுரிக்கூத்தாடுவதாக நூல்கள் கூறும். ''பெருங்கடன் மூடிப் பிரளயங் கொண்டு பிரமனும் போய், இருங்கடன் மூடியிறக்கு மிறந்தான் களேபரமும், கருங்கடல் வண்ணன் களேபரமுங் கொண்டு கங்காளராய், வருங்கடல் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே'' (திருமுறை. 4. பதி.113, 7) என்றவிடத்து மேற் குறித்த ஊழிக்கடை முடிவு கூறப்படுதல் காண்க. ''திண்டோள் விட்டெரி யாடலுகந்தாய் நீயே'' என்பதும்( திருமுறை 6, 38, 10).

"பாற்றிருமேனிக் களவீசனுடும் பவுரி கொண்டே" என்பதும் (திருக்கருவைக். கலித். அந்.) நோக்கத்தகும். (11)

**1360.** அயிர்துற்றிய கடன்மாநில
மடையத்தனி படரும்
செயிர்சுற்றிய படையானடன்
மறமன்னவர் திலகன்
உயிருற்றதொர் மரமாமென
வோராயிர முயர்தோள்
வயிரப்பணை துணியத்தொடு
வடிவாய்மழு வுடையான்.

அயிர் துற்றிய கடல் மா நிலம் அடையத் தனி படரும் செயிர் சுற்றிய படையான், அடல் மற மன்னவர் திலகன், உயிர் உற்றது ஓர் மரம் ஆம் என, ஓர் ஆயிரம் உயர் தோள் வயிரப் பணை துணியத் தொடு வடிவாய் மழு உடையான்.

பொ :—மணல்செறிந்த கடல் (சூழ்ந்த) பெரிய நிலவுலகம் முழுவதும், தனித்துப் பரவும் தன்மையுள்ள, வலிமைமிக்க சேனையை உடையவனும், வீரம் மிக்க அரசர்கட்குத் திலகம் போன்றவனுமான (கார்த்த வீரியார்ச்சுனன்) உயிருடன் கூடிய தொரு மரம் போன்று நிற்க, (அவ்வருச்சுனனது) ஒப்பற்ற ஆயிரம் என்ற எண்ணிக்கையையுடைய உயர்ந்த புயங்களாகிய, வயிரம் செறிந்த கிளைகள் எல்லாம் வெட்டுப்படுமாறு எடுத்த கூர்மையான நுனியையுடைய பரசு (என்ற போர்க்கருவியை) உடையவனும்.

கு :— கார்த்தவீரியன் இராவணனை வென்றவன். இவன் பரசுராமனாற் கொல்லப்பட்டான். வன்மை செறிந்த மூங்கில் போன்ற ஓராயிரம் உயர் தோள்கள் எனினுமாம். துறுதல் - அடர்தல். "துறுமலர் அவிழ் குழலாய்" என்பது சிலப்பதிகாரம் (7.42). (12)

**1361.** நிருபர்க்கொரு பழிபற்றிட
நிலமன்னவர் குலமும்
கருவற்றிட மழுவாள்கொடு
களைகட்டுயிர் கவரா

இருபத்தொரு படிகாலெழு
கடலொத்தலை யெறியும்
குருதிக்குரை புனலிற்புக
முழுகித்தனி குடைவான்.

நிருபர்க்கு ஒரு பழி பற்றிட, நில மன்னவர் குலமும்
கரு அற்றிட, மழு வாள் கொடு களைகட்டு, உயிர் கவரா,
இருபத்தொருபடிகால், எழு கடல் ஒத்து அலை எறியும்
குருதிக் குரை புனலில் புக முழுகித் தனி குடைவான்.

பொ :—(தன் தந்தையைக் கொன்ற) ஒரு பழி அரசர்க்குப் பொருந்த, (அதனுல்) இருபத்தொரு தலைமுறை மழுவாயுதத்தால் உலகில் உள்ள அரசரது குலமும் கருவறும்படி களை களைந்து, (அவர்களது) உயிரை வாங்கி (ப்பொங்கி) எழுகின்ற கடலைப்போன்று அலை வீசுகின்ற (அவரது) உதிரமாகிய ஒலிக்கின்ற நீரில் அமிழக் குளித்துத் தனியே நீராடியவனும்.

கு :—இச்செய்யுளிற் பரசுராமன் அரசர்குலத்தின் மீது கொண்ட சிற்றம் கூறப்பட்டது. கார்த்தவீரியனைப் பரசுராமன் கொல்ல, முன்னவன் மக்கள் பழிக்குப் பழி வாங்கக் கருதிப் பின்னவனது தந்தையாகிய ஜமதக்கினியைக் கொன்றனர் என்றும், அதுகண்டு பொருது பரசுராமன் 21 தலைமுறை அரசர் வழியைக் கருவறுத்தான் என்றும் பாகவதம் கூறும். சமதக்கினி முனிவரைக் கொன்றவர் அரசர் ஆகலின், நிருபர்க்கே அச்செயல் பெரும் பழியாக விளைந்ததென்க. பயிர் நன்கு விளைதற்குக் களையெடுத்தல் வேண்டப்படும். அதுபோன்று, அறநெறியின் வளர்ச்சிக்கு இடையூறு விளைப்பவர்களைக் கோறல் அறமாகலின் "களை கட்டு" என்றுர். "கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ் களைகட் டதனெடு நேர்" என்பது குறள் (550); எழு கடல்-ஏழு கடலுமாம். இனிக் கால் எழு கடல் என்று கூட்டிக் காற்ருல் கொந்தளிக்கின்ற கடல் என்றும் பொருள் கொள்ளலாம். படிகால்-தலைமுறை. "ஏழேழ்படிகால் எமையாண்ட பெம்மான்" என்பது தேவாரம் (1086—9). (13)

1362. கமையொப்பதொர் தவமுஞ்சுடு
கனலொப்பதொர் சினமும்
சமையப்பெரி துடையானெதிர்
தள்ளுற்றிடை தளரும்

அமையத்துயர் பறவைக்கினி
தாரும்வகை சீருச்
சிமையக்கிரி யுருவத்தனி
வடிவாளிக டெரிவான்.

**கமை ஒப்பது ஓர் தவமும், சுடு கனல் ஒப்பது ஓர் சினமும், சமையப் பெரிது உடையான் எதிர் தள்ளுற்று, இடை தளரும் அமையத்து, உயர் பறவைக்கு இனிது ஆறு ஆம் வகை சீருச் சிமையக் கிரி உருவத் தனி வடி வாளிகள் தெரிவான்.**

பொ :—பொறுமை போல விளங்கும் ஒப்பற்ற தவத்தையும், சுடுகின்ற தீயை ஒப்பதாகிய சினத்தையும், பொருந்தப் பெரிதும் உடையானும் (மானச வாவிக்குச் செல்லுங்கால்) எதிரே (பறக்கும் வழியை இடையில்) தவிர்ந்து தளர்ச்சியுற்ற பொழுதில், (பறவைகளில்) உயர்ந்த (அன்னப்) பறவைகள் வருத்தமின்றிச் செல்லும் வழியாகும்படி வெகுண்டு, சிகரத்தையுடைய குருகுக் கிரியை ஊடுருவும்படி, ஒப்பற்ற கூரிய அம்புகளைத் தெரிந்து எய்ய வல்லானும்.

கு :—பரசுராமனும் முருகவேளும் சிவபெருமானிடம் போர்க் கருவிப் பயிற்சிபெறும்போது, அவர்களிருவரது வில்லாற்றலின் உயர்வுதாழ்வை அறியவேண்டிக் குருகுக்குன்றைச் சுட்டிக்காட்டி, அதைத் துளைக்கும்படி சிவன் ஏவ, முருகன் துளைக்க முடியாமற் பின்னிடப் பரசுராமன் துளைத்தனன் என்றும், அம்மலையின் தென்பாலிருந்த அன்னப்பறவைகள், அவைகள் தங்கும் தாமரை மலர்கள் மழை பனிக் காலங்களில் அழியும்பொழுதில், அவ்விடங்களை நீத்துக், குருகுக் குன்றில் பரசுராமன் துளைத்ததனுல் உண்டாக்கப்பட்ட துளைவழியே பறந்துசென்று, இமயமலைப்புறத்து மானதவாவியை யடைந்து, சில காலம் தங்கித் திரும்புவதுண்டென்றும் புராணம் கூறும். இனி முன்னிரண்டடிக்குத் தவத்தையும் சினத்தையும் உடைய சிவபிரான் எதிர்—குருகுக்கிரியைத் துளைத்தவன் என வரலாற்றுக்கியையப் பொருள் கூறலுமாம். பரசுராமனது புகழ்மிக்க இச்செயல் முதனூலிற் குறிக்கப்பெறவில்லை. "உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை அற்றே தவத்திற் குரு" என்ற குறள். (261) இங்கு ஒப்புநோக்கத் தகும். (14)

இப்பாடலின் கீழ் 2 என்னும் குறியீட்டுச் சுவடியில் காணப் படும் பாடல்:

1362(a) கயிலைக்கிரி தனைமூடிய வன்றிற்கிரி கந்தன்
அயிலைப்புக விடர்விட்டது போலேழ்வழி யாகச்
சயிலத்துளை படவெய்தனை வயிறெற்றிய வதனுல்
முயலுற்றவர் நிருபக்குல மூவேழ்முறை முடித்தான்.

1363. சையம்புக நிமிரக்கட
றழுவும்படி சமைவான்
மையின்னுயர் மலைநூறிய
மழுவாளவன் வந்தான்
ஐயன்றனை யரிதிற்றரு
மரசன்னது கண்டான்
வெய்யன்வர நிபமென்னைகொ
லெனவெய்துறு மேல்வை.

சையம் புக, நிமிர் அக்கடல் தழுவும்படி சமைவான்,
மையின் உயர் மலை நூறிய மழுவாளவன் வந்தான்;
ஐயன் தனை அரிதில் தரும் அரசன், அது கண்டான்,
'வெய்யன் வர நிபம் என்னை கொல்?' என வெய்துறும் ஏல்வை.

பொ :—மலைகள் (அழுந்திப்) புக, (அந்தப் பள்ளத்தில்) பொங்கிய அக்கடல்நீர் பொருந்தும்படி, (மிதித்து நடப்பதில்) பொருந்தியவனுகி (–நடப்பவனுகி) மேகங்கள் படியும்படி உயர்ந்த குருகுக்கிரியைப் பிளந்த, பரசுப்படையினையுடைய பரசுராமன் (தயரதன் முதலியவர்கட்கு முன்பு) வந்து சேர்ந்தான். அழகனும் யாவர்க்கும் தலைவனுமான இராமனை அருமையாகப் பெற்ற அரசனுன தயரதன், அவ்வாறு அவன் வருவதைக் கண்டு, கொடியவனுன இவன் (இவ்விடம் இப்பொழுது) வரக்காரணம் என்னை என்று கருதிக் கொடிய மனவேதனை அடையும்பொழுதில்.

கு :—பரசுராமன் சீற்ற மிகுதியால் தாள் பெயர்க்கும்போது மலைகள் கீழுறக் கடல் மேலெழும் என்ருர். இரணியனைப்பற்றிக் கூறும்போது "பெயருமேற் பெரும் பூதங்களைந்தொடும் பெயரும்" (இரணியன். 13); "பேரடா நின்ற தாளோ டுலகெலாம் பெயரப் பேர்வான்" (இரணியன். 129) என்றமை காண்க. மழுவாளன் - மழுவை ஆள்பவன் எனினுமாம். (15)

## பரசுராமனை இராமன் யாரெனக் கருதல்

**1364.** பொங்கும்படை யிரியக்கிளர்
புருவங்கடை நெரிய
வெங்கண்பொறி சிதறக்கடி
துருமேறென விடையாச்
சிங்கம்மென வுயர்தேர்வரு
குமரன்னெதிர் சென்றான்
அங்கண்ணழ கனுமிங்கிவ
னாரோவெனு மளவில்.

பொங்கும் படை இரியக், கிளர் புருவம் கடை நெரிய,
வெம் கண் பொறி சிதறக், கடிது உருமேறு என விடையாச்
சிங்கம் என, உயர் தேர் வரு குமரன் எதிர் சென்றான்;
அங்கண் அழகனும், 'இங்கு இவன் ஆரோ?' எனும அளவில்

பொ:—(தயரதனது) மிகுதியாக நிறைந்து விளங்கும் சேனைகள் அஞ்சி ஓடும்படி, (பரசுராமனது) விளங்குகின்ற புருவத்தின் கடை (சினத்தால்) வளையவும், கடுமையான கண்களிலிருந்து தீப் பொறி சிதறவும், விரைந்து, இடியேறு போன்று பெருஞ் சினம் கொண்டு, சிங்கம் போன்று உயர்ந்த தேரில் வருகின்ற இராம பிரானுக்கு எதிரே சென்றான் (பரசுராமன்). அழகிய கண்களை யுடைய அழகனை இராமனும் 'இவன் யாரோ?' எனக் கருதும் அளவில்.

கு:—பொறி தீப்பொறி என்பது வெங்கண் என்றதனாற் பெறப்படும். நெரிதல் - வளைதல்; "புருவம் நெரிந்தேற" (பெரியாழ். 3, 6, 2). விடைத்தல் – பெருஞ்சினம் கொள்ளுதல்; "விடைத்துவரும் இலங்கைக் கோன்" (தேவா. 159, 10) என்றது காண்க.
(16)

## தயரதன் வணங்குதல்

**1365.** அரைசன்னவ னிடைவந்தினி
தாராதனை புரிவான்
விரைசெய்முடி படிமேலுற
வடிமேலுற விழலும்

கரைசென்றில னனையானெடு
முடிவின்கனல் கால்வான்
முரைசின்குரல் படவீரன
தெதிர்நின்றிவை மொழிவான்.

அரைசன், அவன் இடை வந்து இனிது
ஆராதனை புரிவான்,
விரைசெய் முடி படி மேல் உற
அடி மேல் உற விழலும்,
கரை சென்றிலன், அனையான் நெடு
முடிவின் கனல் கால்வான்,
முரைசின் குரல் பட, வீரனது
எதிர் நின்று இவை மொழிவான்.

பொ :—(தயரத) மன்னன் அப் பரசுராமனிடம் வந்து, இனிமையாக அவனுக்கு அதிதிபூசை புரிந்து, நறுமணம் கமழும் தலை பூமியிற் பொருந்துமாறு (அப் பரசுராமனது) திருவடிகளிலே வீழ்ந்து வணங்கிய அளவிலும், அப்பரசுராமன் (தனது சீற்றமாகிய கரிய கடலுக்கு) ஓர் எல்லை காணாதவனாய், (யுகத்தின்) முடிவில் எழும் வடவைத் தீயை வெளியிடுபவனாய், முரசினது அதிர்வுக்கு ஒப்பான குரல் ஒலி உண்டாக, வீரனான இராமபிரான் முன்னின்று பின்வரும் வார்த்தைகளைக் கூறலானான்.

கு :—தயரதன் பரசுராமனது சீற்றத்தைத் தணிக்கும் பொருட்டு அவனை வழிபடுவானாய் அவனது அடியில் விழ, அப்பொழுதும் அப்பரசுராமன் சினம் தணியாது இராமனை நோக்கிக் கூறலாயினன் என்க. கரை என்றதற்கேற்பச் சினம் கடலாகக் கூறப்பட்டது. நெடுமுடிவின் கனல் - உலகை ஊழியின் அழிக்கும் வடவைத்தீ.
(17)

### இராமனிடம் பரசுராமன் கூறியது

1366. இற்றோடிய சிலையின்றிற
மறிவென்னினி யானுன்
பொற்றோள்வலி நிலைசோதனை
புரிவானசை யுடையேன்

செற்ருேடிய திரடோளூறு
தினவுஞ்சிறி துடையேன்
மற்ருேர்பொரு ளிலையிங்கிதென்
வரவென்றன னுரவோன்.

'இற்று ஓடிய சிலையின் திறம்
அறிவென்; இனி, யான் உன்
பொன் தோள் வலி நிலை சோதனை
புரிவான் நசை உடையேன்,
செற்று ஓடிய திரள் தோள் உறு
தினவும் சிறிது உடையேன்,
மற்று ஓர் பொருள் இலை, இங்கு இது என்
வரவு என்றனன் உரவோன்.

பொ:—வலி மிக்கவனை பரசுராமன், 'உனது (புயவலியால்) ஒடிந்து விழுந்த வில்லின் தன்மை (அது முன்பே உடைந்திருந்த செய்தியை யான்) அறிவேன். இனி உனது அழகிய புயத்தின் வலிநிலையை அறிந்து காணும் விருப்புடையேன், (பகைவரைப்) பகைத்து நிமிர்ந்த (எனது) திரண்ட தோளில் (போர் விழையும்) தினவும் சிறிதுடையேன். இவ்விடத்து என் வரவுக்குக் காரணம் இதுவேயாம். வேறு ஒரு பொருளில்லை' என்ருன்.

கு:—இற்று – ஒடிந்து; ''எடுத்தது கண்டனர் இற்றது கேட்டார்'' (கார் முகப். 34) (18)

### தயரதன் அபயம் வேண்டுதல் (1367–1371)

**1367**. அவனன்னது பகரும்மளை
வையின்மன்னவ னயர்வான்
புவனம்முழு வதும்வென்ருெரு
முனிவற்கருள் புரிவாய்
சிவனும்மய னரியும்மலர்
சிறுமானிடர் பொருளோ
இவனும்மென துயிரும்முன
தபயம்மினி யென்ருன்.

அவன் அன்னது பகரும் அளவையின்,
மன்னவன் அயர்வான்,
'புவனம் முழுவதும் வென்று ஒரு
முனிவற்கு அருள் புரிவாய்
சிவனும் அயன் அரியும் அலர்,
சிறு மானிடர் பொருளோ?
இவனும், எனது உயிரும் உனது
அபயம் இனி' என்றான்.

பொ :—அந்தப் பரசுராமன் அச்சொற்களைச் சொல்லும் அளவிலே தயரதன் மனம் சலித்துப் (பரசுராமனை நோக்கிப்) பூவுலகம் முழுவதும் வெற்றிகொண்டு (கைப்பற்றி) ஒப்பற்ற காசிப முனிவற்கு (த்தந்து) அருள் செய்தவனே! சிவனும் பிரமனும், திருமாலும் அல்லாத சிறிய மனிதர்கள் உனக்கு ஒரு பொருட்டோ? இனி இந்த இராமனும், எனதுயிரும் உன்னாற் காக்கப்பட வேண்டிய பொருள்கள் ஆகும் என்றான்.

கு :—தனது உயிரை முன்னர்க்கூறாது, தனது உயிரினும் சிறந்தவன் இராமன் ஆகலின், அவனை, "இவன்" எனச் சுட்டித் தன்னுயிர் போன்ற அவனுக்கு ஏதம் நிகழின் தான் உய்யக் கூடாமையின், தனதுயிரும் என்று பிற்கூறினான். காசிபர்க்கு நிலமீந்த வரலாறு முன்னும் கூறப்பட்டது. இனிச் சிவனும் அயன் அரியுமே உனக்கோர் பொருளல்லர். அவ்வாறெனின் இச் சிறு மானிடர் பொருளோ என்றும், இவர்கள் நீ பொருளாகக் கருதத் தக்க சிவன் முதலியோரல்லர் சிறுமானிடர் என்றும், பொருள் கொள்ளலாம். அபயம் என்ற வடசொல் அடைக்கலம் என்று பொருள்படும். பரசுராமன் திருமாலின் ஒரு கூறாக இருந்தும், திருமால் அவற்கு நிகராகான் என்றது, புகழ்தல் பற்றி வந்தது. அயர்வான் - தளர்பவனாய், முற்றெச்சம். அயர்வான் – தளர்வினால் என்றும் கொள்ளலாம். அப்பொழுது அயர்வான் அபயம் என்றான் என முடியும். அழிப்புத் தொழிற்குரியவர் ஆகலின் சிவனை முற்கூறினார். பேராற்றல் சான்ற தயரதன் இவ்விடம் பணிந்ததற்குக் காரணம் ஆண்மைக் குறைவன்று, தன் தனயன்மீது உள்ள அன்பேயாகும். (19)

**1368.** விளிவார்விளி வதுதீவினை
விழைவாருழை யன்றோ
களியாலிவ னயர்கின்றன
வுளவோகன லுமிழும்
ஒளிவாய்மழு வுடையாய்பொர
வுரியாரிடை யல்லால்
எளியாரிடை வலியார்வலி
யென்னாகுவ தென்றான்.

**'விளிவார் விளிவது தீவினை விழைவார் உழை அன்றோ? களியால் இவன் அயர்கின்றன உளவோ? கனல் உமிழும் ஒளிவாய் மழு உடையாய்! பொர உரியார் இடை அல்லால் எளியார் இடை வலியார் வலி என் ஆகுவது?' என்றான்.**

**பொ :**—'நெருப்பைக் காலுகின்ற ஒளி அமைந்த மழுப்படையைத் தாங்கியவனே! சினங்கொள்வார் சினங்கொள்வது தீவினைகளை விரும்புவோரிட மல்லவோ? இந்த இராமன் (செல்வம் கல்வி முதலியவற்றாற் பெருமிதம் கொண்டு) அக்களிப்பினால் அறிவு தளர்ந்து நின்பால் செய்த தீங்கு உளவோ? பொருதற்குரிய வன்மை வாய்ந்தவரிட மன்றி, (ஆற்றலில்லாத) எளியவரிடம், வன்மை வாய்ந்தவரது வலிமை என்ன பயனுடைத்து?' என்று தயரதன் (பரசுராமனை நோக்கிக்) கூறினான்.

**கு :**—எளியாரை வலியார் ஒறுப்பது புகழைத்தராத செயல் என்பது கருத்து. "மாறன்மையின் மறம்வாடுமென் றினை யோரையு மெறியான்" (சிந்தா. 2261) என்ற இடத்தில் சிறந்த வீரனது செயல் குறிக்கப்பட்டது காண்க. "மறனிழுக்காமானம்" (திருக்குறள். 384) என்றது காண்க. கனல் உமிழ்கின்ற ஒளி பொருந்திய வாய் அல்லது முனை எனினுமாம். (20)

**1369.** நனிமாதவ முடையாயிது
பிடிநீயென நல்கும்
தனிநாயக முலகேழையு
முடையாயிது தவிராய்
பனிவார்கடல் புடைசூழ்படி
நரபாலரை யருளா
முனிவாறினை முனிகின்றது
முறையோவென மொழியா.

"'நனி மாதவம் உடையாய்! இது பிடி நீ' என நல்கும்
தனி நாயகம் உலகு ஏழையும் உடையாய்! இது தவிராய்;
பனி வார் கடல் புடை சூழ் படி நரபாலரை அருளா,
முனிவு ஆறினை, முனிகின்றது முறையோ?" என மொழியா.

பொ :—" 'மிக்க பெருந்தவத்தை உடையவனே! இதை ஏற்றுக் கொள்' என்று வழங்கிய உலகம் ஏழையும், (பொதுச் சொலின்றி அரசு புரியும்) உரிமையைப் பெற்றவனே! (எம்மை அழித்தலாகிய) இச் செயலை நீக்கியருளாய். தண்ணிய நீண்ட கடலினால் (நான்கு புறமும்) சூழப்பட்டுள்ள, நிலவுகில் வாழ்கின்ற அரசர்பாற் கருணை காட்டி, (முன் அரசர் மீது நீ கொண்ட சினம் தணிந்தாய். (அத்தகைய நீ) மீட்டும் சிற்றங் கொள்வது முறையாகுமோ?" என்று (மற்றும் சில சொற்களைத் தயரதன்) கூற லானான்.

கு :—நனி மாதவம் உடையாய் என விளித்தது காசிப முனிவரை; பரசுராமனை விளித்ததாகக் கூறினுமாம். ஈற்றடி முற்று மோனை. (21)

1370. புறநின்றவ ரிகழும்படி
நடுவின்றலை புணராத்
திறனின்றுயர் வலியென்பதொ
ரறிவின்றரு செயலோ
அறனின்றத னிலைநின்றுயர்
புகழொன்றுவ தன்றோ
மறனென்பது மறவோயிது
வலியென்பது வலியோ.

'புறம் நின்றவர் இகழும்படி
நடுவின்தலை புணராத்
திறன் நின்று உயர் வலி என்பது ஓர்
அறிவின் தரு செயலோ?
அறன் நின்றதன் நிலை நின்று உயர்
புகழ் ஒன்றுவது அன்றோ
மறன் என்பது? மறவோய்! இது
வலி என்பது வலியோ?'

போ:—வீரம் செறிந்தவனே! அருகில் நிற்பவர் இகழும்படி நடுவுநிலைமையிற் பொருந்தாத வகையிற் பொருந்தி உயர்கின்ற வலி என்பது, ஓர் அறிவினாற்றரப்பட்ட செயலாகுமோ? (ஆகாது) வன்மை என்று புகழ்ந்துரைக்கப்படுவது, (உலகில்) நிலைபேறுடையதான அறநெறியினது நிலைமையிலே நின்று சிறந்த புகழுடன் பொருந்துவதன்றோ? (அவ்வாறிருக்க நீ செய்யப் புக்க) இது வலிமை என்று கூறப்படுவதாகிய உண்மை வலியாகுமோ? (என்றான் தயரதன்).

கு:—பிறர் இகழும்படி நடுநிலை தவறி எம்மை எதிர்ப்பது அறிவிற்குப் பொருந்துவதன்று. அறநெறி வழுவாது, பகைவரை வென்று பெற்ற புகழ்தான் வீரத்தான் எய்தும் புகழ். ஆதலின் நெறிதவறி நீ எங்களிடம் காட்ட எழுந்த பலம் உண்மையான பலம் அன்று என்பது இச் செய்யுளின் கருத்து. (22)

**1371.** சலத்தோடியை விலனென்மக
னனையானுயிர் தபுமேல்
உலத்தோடெதிர் தோளாயென
துறவோடுயி ருகுவேன்
நிலத்தோடுயர் கதிர்வானுற
நெடியாயுன தடியேன்
குலத்தோடற முடியேலிது
குறைகொண்டன னென்றான்.

'சலத்தோடு இயைவு இலன் என் மகன்;
அனையான் உயிர் தபுமேல்,
உலத்தோடு எதிர் தோளாய்! எனது
உறவோடு உயிர் உகுவேன்
நிலத்தோடு, உயர் கதிர்வான் உற;
நெடியாய்! உனது அடியேன்
குலத்தோடு அற முடியேல்; இது
குறை கொண்டனன்! என்றான்.

போ:—'என் மகன் உன்பாற் பகைமையொடும் கூடினவன் அல்லன். அத்தகையானது உயிர் நீங்குமானால், (திரண்ட) கற்றூணோடு மாறுபடும் புயத்தாய்! நான் என் உறவினரோடும், என் நாட்டாருடனும், உயர்ந்த ஒளி பொருந்திய விண்ணுலகை அடையும்படி உயிர்விடுவேன். உனது அடியவனாகிய யான் எனது

குலத்தோடழியும்படி, இறுதி செய்து விடாதே. இவ்வேண்டுகோளை உன்பால் விண்ணப்பித்துக்கொண்டேன்' என்று தயரதன் கூறினான்.

கு:—தபுதல் - இறத்தல். (23)

### தயரதன் மனம் வெம்புதல்

1372. என்னுவடி விழுவானையு
மிகழாவெரி விழியாப்
பொன்னார்கலை யணிவானெதிர்
புகுவானிலை யுணராத்
தன்னுலொரு செயலின்மையை
நினையாவுயிர் தளரா
மின்னுலயர் வுறும்வாளர
வெனவெய்துற லுற்றான்.

என்ன, அடி விழுவானையும் இகழா, எரி விழியாப்,
பொன்னார் கலை அணிவான் எதிர் புகுவான் நிலை உணராத்,
தன்னால் ஒரு செயல் இன்மையை நினையா, உயிர் தளரா,
மின்னால் அயர்வு உறும் வாள் அரவு என, வெய்துறல் உற்றான்.

பொ:— என்று கூறி (குறையிரந்து), அடியில் வீழ்ந்து வணங்கியவனை (தயரதனை)யும் இகழ்ந்து, நெருப்பெழ விழித்து, பொன்னுடை யணிந்து நின்ற இராமனுக்கு நேராகச் சென்ற (பரசுராமனது) நிலையை (த் தயரதன்) உணர்ந்து, தன்னால் இயலக்கூடிய செயல் ஒன்றும் இல்லாமையை நினைந்து, உயிர் தளர்ந்து. (இடியுடன் கூடி எழுகின்ற) மின்னலினால் தளர்ச்சியுறும் கொடிய பாம்பென, (மனம்) வெம்புதலைப் பொருந்தினான்.

கு:—அடிவிழுவானையும் என்பதில் உள்ள உம்மையால் அடிவீழ்பவனைப் புறக்கணித்தல் கூடாது என்பது அறநெறி; அங்ஙனமிருப்பவும் இகழ்ந்தான் என்று குறித்தவாறு. நாகம் இடியோசைக்கு நடுங்கும் என்பர். "இடையினை மின்னென வெருவி......நாகங்கள்......பதைப்பன" சித்திரகூடப். 38.) என்றது காண்க. (24)

## பரசுராமன் சிவனார் வில்லின் வரலாறு கூறுதல் (1373-1379)

**1373.** மானம்முடை முடிமன்னவன்
மதிசோர்வுறன் மதியான்
தானந்நிலை யுறுவானுறு
வினையுண்டது தவிரான்
ஆனம்முடை யுமையண்ணலை
யந்நாளுறு சிலைதான்
ஊனம்முள ததன்மேனிலை
கேணீயென வுரைப்பான்.

மானம் உடை முடி மன்னவன் மதி சோர்வு உறல் மதியான், தான் அந்நிலை உறுவான் உறு வினை உண்டு அது தவிரான், 'ஆனம் உடை உமை அண்ணலை, அந்நாள் உறு சிலைதான் ஊனம் உளது, அதன் மேல் நிலை கேள் நீ' என உரைப்பான்.

பொ :—மானத்தையே உடைமையாகவுடைய முடிதரித்த அரசன் அறிவு சோர்தலைப் பொருட்படுத்தாதவனாய், (அறிவு தளர்தலாகிய) அந்நிலையைத் தான் (விரைவில்) எய்துதற்குரிய ஊழ் வினை உண்டாயிருப்பதனை விலக்க வகையற்றவனாய், (இராமனை நோக்கி) இடபத்தை உடைய உமையின் மணாளனை (சிவபிரானிடம்) அக்காலத்திற் பொருந்திநின்ற வில்லானது குறைபாடுடையது. (அதனால் அதை முறித்து விட்டனை); அவ்வில்லினது, பழைய நிலையை நீ கேட்பாயாக' என்று கூறி மேலும் சொல்பவனானான்.

கு :—மானம் உடை முடிமன்னவன் என்பதற்குத் தன் பெருமை அழியப் பெற்ற மன்னவன் என்றும் பொருள் கொள்ளலாம். சிந்தாமணியில் நிணிதியம் உடை நாய்கன் (493) என்ற தொடர்க்கு இடங்கட் கேற்ப நிதியம் உடைய நாய்கன் என்றும், நிதியம் உடையப் பெற்றவன் என்றும் நச்சினார்க்கினியர் பொருள் வரைதல் காண்க. மானம் என்பதற்கு எஞ்ஞான்றும் தம் நிலையில் தாழாமையும் தெய்வத்தால் தாழ்வு வந்துழி உயிர் வாழாமையுமாம் (குறள். மானம்) என்றது காண்க. '' ஊனவில் இறுத்து ஒட்டை மாமரத்துள் அம் போட்டி '' (இராவணன் மந்திரப். 109) என்று இராவணனும் இராமன் இறுத்த வில் ஊனமுள்ளதாகக் கூறியது காண்க.
(25)

1374. ஒருகால்வரு கதிராமென
ஒளிகால்வன வுலையா
வருகார்தவழ் வடமேருவின்
வலிசால்வன வையம்
அருகாவினை புரிவானுள
னவனாலமை வனவாம்
இருகார்முக முளயாவையு
மேலாதன மேனாள்.

'ஒருகால் வரு கதிர் ஆம் என ஒளி கால்வன, உலையா
வரு கார் தவழ் வட மேருவின் வலி சால்வன, வையம்
அருகா வினை புரிவான் உளன், அவனால் அமைவனவாம்,
இரு கார்முகம் உள, யாவையும் ஏலாதன மேல் நாள்.'

பொ :—'ஒற்றைச் சக்கரத்தையுடைய தேரின் மீது வருகின்ற சூரியன் என்னுமாறு ஒளி விடுவனவும், (சூழ் கொண்டு) வருந்தி மேகங்கள் தவழ்தற்கு இடமான, வடதிசைக் கண் உள்ள, மேரு மலையின் வலியைப் பொருந்துவனவும், நிலவுலகில் உள்ளவர்க்கு அணுகி நோக்குவதற்கும் இயலாத சிற்பத் தொழிலைப் புரிபவனை, விசுவகன்மனால் செய்யப்பட்டு அமைந்தனவும், (உலகில்) எவற்றையும் தமக்கு உவமையாக ஏற்காதனவுமான இரண்டு விற்கள் முன்னாளில் இருந்தன.'

கு :—கால் என்பது சினையாகுபெயராய்க் காலையுடை தேரைச் சுட்டிற்று. சூரியன் ஒற்றை ஆழித்தேரோன் என்ப. "ஓராழித் தேரும் கண்டவுனக்கு" (நாடவிட்ட. 37) என்றது காண்க. வையம் – இடவாகு பெயர். (26)

1375. ஒன்றினை யுமையாள் கேள்வ
★ னுவந்தனன் மற்றை யொன்றை
நின்றுல களந்த நேமி
நெடியமா னெறியிற் கொண்டான்
என்றிஃ துணர்ந்த விண்ணோ
ரிரண்டினும் வன்மை யெய்தும்
வென்றிய தியாவ தென்று
விரிஞ்சனை வினவ வந்நாள்.

'ஒன்றினை உமையாள் கேள்வன்
உவந்தனன்; மற்றை ஒன்றை,
நின்று உலகு அளந்த நேமி
நெடிய மால் நெறியில் கொண்டான்;
என்று இஃது உணர்ந்த விண்ணோர்,
'இரண்டினும் வன்மை எய்தும்
வென்றியது யாவது?' என்று,
விரிஞ்சனை வினவ அந்நாள்."

பொ:—(அவ்விற்கள் இரண்டனுள்) ஒன்றை, உமையின் கணவன் மகிழ்ந்தேற்றான். மற்றையதொன்றை, (திருவிக்கிரமன் உருவாய்) நின்று, உலகினை (ஈரடியால்) அளந்த, ஆழிப்படை தாங்கிய நீண்ட திருமால் முறையாகக் கைக்கொண்டான் என்ற இச் செய்தியை அறிந்த தேவர்கள், இவ்விரண்டு விற்களினும் யாது வலியால் அடைதற்குரிய வெற்றியது என்று பிரமனைக் கேட்க, அந்நாளிலே.

கு:—கேள்வன் – கணவன். விரிஞ்சன் – பிரமன். (27)

**1376.** சீரிது தேவர் தங்கள்
சிந்தனை யென்ப துன்னி
வேரியங் கமலத் தோனு
மியைவதோர் விநயந் தன்னால்
யாரினு முயர்ந்த மூலத்
தொருவரா மிருவர் தம்மை
மூரிவெஞ் சிலை மேலிட்டு
மொய்யமர் மூட்டி விட்டான்.

"'சீரிது தேவர் தங்கள்
சிந்தனை!' என்பது உன்னி,
வேரி அம் கமலத் தோனும்
இயைவது ஓர் விநயம் தன்னால்,
யாரினும் உயர்ந்த மூலத்து
ஒருவராம் இருவர் தம்மை,
மூரி வெம் சிலை மேல் இட்டு
மொய் அமர் மூட்டி விட்டான்."

போ :—“நறுமணம் செறிந்த தாமரை மலர் மீது வதிகின்ற பிரமனும், ‘தேவர்களுடைய எண்ணம் சிறந்தது’ என்பதை நினைந்து, பொருந்திய ஓர் தந்திரத்தினால், யாரினும் மேம்பட்ட காரணநிலையில் ஒருவராய்க் காரிய நிலையில் இருவரானவர்களை வலிமை சான்ற கடியவில்லை ஓர் காரணமாக வைத்து (ஒருவரோடொருவர்) வலிய போர் புரியுமாறு தூண்டிவிட்டான்.”

கு :—வேரி – நறுமணம். “வேரியங்கமலை நோக்கும்” (சிறப்பு. 12) என்றது காண்க. வேரி – தேனுமாம். யாரினும் உயர்ந்த மூலத் தொருவரா மிருவர் என்றது, காப்புத் தொழிலையும் அழித் தலையும் புரியும் திருமாலும் சிவபிரானும் தொழில் வேற்றுமையால் இருவரேனும், இருவரும் ஒருவர் என்று அறிவித்தற்கு என்றுணர்க. “அரன் நாரணன் நாமம் ஆன்விடை புள்ளூர்தி, உரை நூல் மறையுறையும் கோயில் வரை நீர், கரும மழிப்பளிப்புக் கையது வேல் நேமி, உருவமெரி கார்மேனி யொன்று” (பொய்கை – அந்தாதி. 5): “ஏற்றான் புள்ளூர்ந்தா னெயிலெரித்தான் மார்விடந் தான், நீற்றான் நிழல்மணி வண்ணத்தான் - கூற்றொருபால் மங்கையான் பூமகளான், வார்சடையான் நீள் முடியான் கங்கையான் நீள்கழலான் காப்பு” (ஷை 74); “பொன்திகழு மேனிப் புரிசடை யெம் புண்ணியனும், நின்றுலகம் தாய நெடுமாலும், என்றும், இருவரங்கத்தால் திரிவரேலும் ஒருவன், ஒருவனங்கத் தென்று முளன்” (ஷை 99); “தாழ்சடையும் நீண் முடியு மொண்மழுவும் சக்கரமும், சூழரவும் பொன்னாணும் தோன்றுமால் – சூழும், திரண்டருவி பாயும் திருமலைமே லெந்தைக்கு, இரண்டுருவு மொன்றா யிசைந்து” (பூதத். அந்தாதி. 63) முதலிய ஆழ்வார்கள் அருளிச்செயல்களைக் கொண்டு இவ்வொற்றுமை யுணர்க. (28)

**1377.** இருவரு மிரண்டு வில்லு
மேற்றின ருலக மேழும்
வெருவரத் திசைகள் பேர
வெங்கனல் பொங்க மேன்மேல்
செருமலை கின்ற போழ்திற்
றிரிபுர மெரித்த தேவன்
வரிசிலை யிற்ற தாக
மற்றவன் முனிந்து மன்னோ.

'இருவரும் இரண்டு வில்லும் ஏற்றினர், உலகம் ஏழும்
வெருவரத், திசைகள் பேர, வெம் கனல் பொங்க, மேல்மேல்
செரு மலைகின்ற போழ்தில், திரிபுரம் எரித்த தேவன்,
வரிசிலை இற்றது ஆக, மற்று அவன் முனிந்து மன்னோ.'

போ:—'(அரி அரன் என்னும்) இருவரும் இரண்டு விற்களையும் நாணேற்றி, ஏழுலகங்களும் அஞ்சத், திசைகள் நிலைகுலையக், கடுமையான சினத்தீ பொங்கி எழ, இடைவிடாது போர் புரியும் போழ்தில், முப்புரம் தீயிட்ட சிவபிரானது கட்டமைந்த வில் முரிந்துவிடப் பின்பு அச் சிவபிரான் மிக்க சினங்கொண்டு.' (29)

1378. மீட்டும்போர் தொடங்கும் வேலை
விண்ணவர் விலக்க வல்வில்
நீட்டினன் தேவர் கோன்கை
நெற்றியிற் கண்ணன் வெற்றி
காட்டிய கரிய மாலுங்
கார்முக மதனைப் பாரில்
ஈட்டிய தவத்தின் மிக்க
விரிசிகற் கீந்து போனான்.

'மீட்டும் போர் தொடங்கும் வேலை,
விண்ணவர் விலக்க, வல் வில்
நீட்டினன் தேவர்கோன் கை
நெற்றியில் கண்ணன்; வெற்றி
காட்டிய கரிய மாலும்,
கார்முகம் அதனைப் பாரில்
ஈட்டிய தவத்தின் மிக்க
இரிசிகற்கு ஈந்து போனான்.'

போ:—'திரும்பவும் போர் தொடங்கும் அமயத்துத் தேவர்கள் (இடை நின்று) விலக்க, நெற்றியிற் கண் படைத்த சிவன், அந்த வலிய வில்லைத் தேவர்கள் தலைவனான இந்திரன் கையிற் கொடுத்தனன்; வெற்றியைக் காட்டி நின்ற கரிய நிறம் வாய்ந்த திருமாலும், அந்த வில்லைப் பூமியில் தான் (ஆற்றிச்) சேர்த்த தவத்தாற் சிறந்த இரிசிகன் என்ற முனிவனிடம் அளித்துச் சென்றான்.'

கு:—வல்வில் என்றது இகழ்ச்சிக் குறிப்பு, மற்றும் அதனை ஐயாயிரம் பணியாட்கள் தாங்கிச் சென்றனர் என்று முதனூல்

கூறுமாகலின், வலிமை வாய்ந்த வில் எனினுமாம். கம்பர் ''அறுபதி ஞயிர ரளவிலாற்றலர் தறிமடுத்திடையிடை தண்டிற்றுங்கினர்'' (கார்முகப். 4) என்ருர். சிவபிரான் கைக்கொண்ட சிலை முரிந்ததி லிருந்து திருமால் வென்றி தோன்றவே, தேவர்கள் விலக்கினர்.

கீழ்க் கார்முகப் படலத்தில் சிவபெருமான் இவ்வில்லை யெடுத்துக்கொண்டு தக்கன் வேள்வி மண்டபத்தைச் சார்ந்து, அவனது வேள்வியை அழித்த பின்பு, சனகனது முன்னேனாகிய தேவராதன் என்னும் மன்னனிடம் அவ்வில்லை வைத்ததாகக் கூறப்பட்டுள்ளது. எனினும் தேவசிற்பியாற் செய்யப்பட்ட இருவிற்களுள் ஒன்றைத் தேவர் வேண்டச் சிவபிரான் கொண்டு சென்று, அதன் உதவியால் முப்புரம் எரித்த பின்னர்த், தக்கன் வேள்வியை அழித்ததாகவும், பிறகு தேவர் விழைந்த வண்ணம் பிரமன் தூண்டச் சிவனுக்கும் திருமாலுக்கும் போர் நிகழ்ந்த தென்றும், அதன் முடிவில் வில்லைச் சிவன் இந்திரனிடம் தர அவன் தேவராதன் பால் வைத்தனன் என்றும் அறிக. இரிசிகன் பரசுராமனது பாட்டன்; சமதக்கினியின் தந்தை. (30)

**1379.** இரிசிக னெந்தைக் கீய
வெந்தையு மெனக்குத் தந்த
வரிசிலை யிதுநீ நொய்தின்
வாங்குதி யாயின் மன்ன
குரிசில்க ணின்னொ டொப்பா
ரில்லையான் குறித்த போரும்
புரிகிலெ னின்னோ டின்னும்
புகல்வது கேட்டி யென்ருன்.

'இருசிகன் எந்தைக்கு ஈய, எந்தையும் எனக்குத் தந்த
வரி சிலை இது நீ நொய்தின் வாங்குதி ஆயின், மன்ன!
குரிசில்கள் நின்னொடு ஒப்பார் இல்லை; யான் குறித்த போரும்
புரிகிலென் நின்னோடு; இன்னும் புகல்வது கேட்டி!' என்ருன்.

பொ:—'இரிசிக முனிவன் என் தந்தைக் களிப்ப, என் தந்தை யான (சமதக்கினி முனிவர்) என்பாலளித்த கட்டமைந்த வில் இது. நீ (இதனை) எளிதாக வளைக்குவையாயின், அரசே உன்னை ஒக்கும் (பெருமை சான்ற) மன்னர்கள் இல்லை. யான் கருதிவந்த போரும் உன்னுடன் புரியேன் மற்றும் சொல்வதுண்டு, கேட்பா யாக' என்ருன் (பரசுராமன்). (31)

## பரசுராமன் தான் வந்த காரணம் கூறுதல் (1380–1382)

**1380.** ஊனவில் லிறுத்த மொய்ம்பை
நோக்குவ தூக்க மன்றால்
மானவ மற்றுங் கேளாய்
வழிப்பகை யுடைய னும்பால்
ஈனமி லெந்தை சீற்ற
நீக்கினு னென்ன முன்னோர்
தானவ னனைய மன்னன்
கொல்லயான் சலித்து மன்னே.

'ஊன வில் இறுத்த மொய்ம்பை
நோக்குவது ஊக்கம் அன்றால்,
மானவ மற்றும் கேளாய்,
வழிப் பகை உடையன் நும்பால்,
ஈனம் இல் எந்தை சீற்றம்
நீக்கினுன் என்ன, முன் ஓர்
தானவன் அனைய மன்னன்
கொல்ல, யான் சலித்து, மன்னே,'

பொ :—(அப்பொழுது இராமன் பரசுராமனது கையிலிருந்த வில்லைப் பொருட்படுத்தாமல் பார்க்கப், பரசுராமன் பின்னும் சொல்வானுய்) 'நீ (முன்னம்) பழுதுபட்ட சிவன் வில்லை முரித்த (உனது) வன்மையை நினைந்து நிற்பது சிறந்த முயற்சியாகாது. பெருமை மிக்கோய்! இன்னும் கேட்பாயாக. (அரசர் வழிவந்தவராகிய) உங்களிடம் தொடர்ந்து வந்த பகைமையை யுடையேன், (ஏனெனில்) முன்னுளிலே எவ்விதக் குற்றமுமில்லாத என் தந்தை, சீற்றம் தவிர்ந்தவன் என்று நினைந்து, அசுரனை ஒத்த ஓர் அரசன் (கார்த்தவீரியன், என்) தந்தையைக் கொல்ல, நான் மனம் கலங்கி'. (வேந்தை எல்லாம் வேரறக் களைகட்டு என வரும் கவியொடு முடியும்).

(32)

**1381.** மூவெழு முறைமை பாரின்
முடியுடை வேந்தை யெல்லாம்
மேவெழு மழுவின் வாயால்
வேரறக் களைகட் டன்னுர்

தூவெழு குருதி வெள்ளத்
துறையிடை முறையி னெந்தைக்
காவன கடன்க ணேர்ந்தேன்
அருஞ்சின மடக்கிப் போந்தேன்

'மூ எழு முறைமை பாரில்
முடி உடை வேந்தை எல்லாம்,
மேவு எழு மழுவின் வாயால்
வேர் அறக் களைகட்டு, அன்னூர்
தூ எழு குருதி வெள்ளத்
துறையிடை, முறையின் எந்தைக்கு
ஆவன கடன்கள் நேர்ந்தேன்,
அருஞ்சினம் அடக்கிப் போந்தேன்'

பொ :—'இருபத்தொரு தலைமுறை உலகில் முடிதரித்த மன்னர் களை யெல்லாம், (பகைவர்) தசையை விரும்பி எழுகின்ற மழுவா யுதத்தின் நுதியால் வேரோடறும்படி களைந்து ஒழித்து, அவர் களது தசையினின்று பெருகிய உதிர வெள்ளத் துறைக்கண் (இறந்தார்க்கு ஆற்ற வேண்டிய) முறைப்படி என் தந்தைக்குச் செய்யத் தக்க நீர்க்கடன் திக்கடன்களைச் செய்தேன். (அதன் பின்பு) தடுத்தற்கரிய கோபத்தை அடக்கிநின்றேன்.'

கு :—தூ-தசை. 'தூ நின்ற சுடர் வேலாய்' (குலமுறை. 9) என்றது காண்க. (33)

1382. உலகெலா முனிவற் கீந்தே
னுறுபகை யொடுக்கிப் போந்தேன்
அலகின்மா தவங்கள் செய்தோ
ரருவரை யிருந்தே னண்டைச்
சிலையைநீ யிறுத்த வோசை
செவியுறச் சீறி வந்தேன்
மலைகுவன் வல்லை யாயின்
வாங்குதி வில்லை யென்றான்.

'உலகு எலாம் முனிவற்கு ஈந்தேன்,
உறுபகை ஒடுக்கிப் போந்தேன்,
அலகு இல் மா தவங்கள் செய்து ஓர்,
அருவரை இருந்தேன், ஆண்டைச்

சிலையை நீ இறுத்த ஓசை
செவி உறச், சீறி வந்தேன்
மலைகுவன், வல்லை ஆயின்,
வாங்குதி வில்லை' என்றான்.

பொ :—'(யான் வென்ற) நிலவுலகம் முழுவதும் (காசிப) முனிவனுக்குத் தந்தேன். மிக்க பகைகளை அடக்கி வந்தேன். அளவில்லாத பெருமை மிக்க தவங்களைப் புரிந்து, பிறர் எளிதில் அடைதற்கரிய ஒப்பற்ற மகேந்திர மலையில் தங்கியிருந்தேன். நீ சிவபிரான் ஆண்ட வில்லை இறுத்த ஓசை ஆங்கு (என்) காதுகளிற் படச் சினங்கொண்டு இங்குவந்தேன். உன்னுடன் போர் புரிவேன். என்னுடன் பொரும் ஆற்றல் உனக்கு உண்டெனின் இந்த வில்லை வளைப்பாயாக என்றான்.

கு :—செய்து என் அருவரை என்று பாடங் கொண்டு, செய்து, என் இருப்பிடமான அரிய மலையில் இருந்தேன் எனினுமாம். ஆண்டை – அம்மிதிலை என்றுமாம். உறுபகை காமம், கோபம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம் என்ப. நான் பொறுமையை மேற்கொண்டவன் எனினும் எனது வில்லாசிரியனை சிவபிரானது வில்லை நீ முறித்த தருக்குள்ளவனாகலின் உன்பாற் சீறி வந்தேன் என்றான். (34)

### இராமன் வில்லை வளைத்தது

1383. என்றன னென்ன நின்ற
விராமனு முறுவ லெய்தி
நன்றொளிர் முகத்த னாகி
நாரணன் வலியி னாண்ட
வென்றிவிற் றருக வென்னக்
கொடுத்தனன் வீரன் கொண்டான்
துன்றிருஞ் சடையோ னஞ்சத்
தோளுற வாங்கிச் சொல்லும்,

என்றனன்; என்ன, நின்ற
இராமனும் முறுவல் எய்தி,
நன்று ஒளிர் முகத்தன் ஆகி,
'நாரணன் வலியின் ஆண்ட

வென்றி வில் தருக' என்னக்,
கொடுத்தனன், வீரன் கொண்டான்!
துன்று இரும் சடையோன் அஞ்சத்
தோள் உற வாங்கிச் சொல்லும்.

பொ :—என்று கூறினன்; எனக்கூற, நின்ற இராமனும் புன் சிரிப்புக் கொண்டு, பெரிதும் ஒளி விளங்கிய முகத்துடன் கூடிய வனாகி, 'நாராயணன் வன்மையுடன் கைக்கொண்ட வெற்றிவில்லைத் தருக' என்று கூற (பரசுராமன்) கொடுத்தனன். வீரனாகிய இராமன் ஏற்றுக்கொண்டு அடர்ந்த பெரிய சடையையுடைய பரசுராமன் அச்சம் உறும்படி, (வில்லினைத்) தோள் வரையில் (இழுத்து) வளைத்துச் சொல்லத் தொடங்கினான்.

கு :—முறுவல் – நகை, தான் பிறரை எள்ளிப் புரிந்த நகை, வீரத்தெழுந்த வெகுளி நகையுமாம். நன்று – பெரிது. "நன்று பெரிதாகும்" (தொல் – சொல். 343). உள்ளிருந்த வீரம் முகத்தின் விளங்கியதால் நன்றொளிர் முகத்தன் என்றார். (35)

**தன் அம்புக்கு இலக்கு யாது என இராமன் வினவல்**

**1384.** பூதலத் தரசை யெல்லாம்
பொன்றுவித் தனையென் றாலும்
வேதவித் தாய மேலோன்
மைந்தனீ விரதம் பூண்டாய்
ஆதலிற் கொல்ல லாகா
தம்பிது பிழைப்ப தன்றால்
யாதிதற் கிலக்க மாவ
தியம்புதி விரைவி னென்றான்.

'பூதலத்து அரசை எல்லாம்
பொன்றுவித்தனை என்றாலும்,
வேத வித்து ஆய மேலோன்
மைந்தன் நீ, விரதம் பூண்டாய்,
ஆதலில் கொல்லல் ஆகாது;
அம்பு இது பிழைப்பது அன்றால்,
யாது இதற்கு இலக்கம் ஆவது?
இயம்புதி விரைவின்' என்றான்.

37

பொ :—'நிலவுலகின்கணுள்ள அரசர்களை யெல்லாம் கொன்றனை (நான் இப்பொழுது அது காரணமாக உன்னைக் கொன்று பழிக்குப்பழி வாங்கலாம்) என்றாலும் நீ மறைகளை உணர்ந்து தெளிந்த மேன்மை மிக்க முனிவன் மகன், அன்றியும் தவவேடம் தரித்துள்ளாய்; ஆகலின் உன்னைக் கொல்வது முறையன்று; எனினும், இந்த அம்பு குறிதவறி வீண்போவதன்று; என் கையம்புக்குக் குறிப் பொருளாவது யாது? காலந் தாழ்க்காமற் கூறுக' என்றான் (இராமன்).

கு :—வேத வித்து என்று பரசுராமனை விளியாது, வேதவித்தாய மேலோன் மைந்தன் என்றது, தவத்திற்கு நேர்மாறான கொலைத் தொழிலை அவன் மேற்கொண்டிருந்தனன் ஆகலின் என்க. "உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை, அற்றே தவத்திற் குரு" (261.) என்பது தமிழ்மறையன்றோ. (36)

## பரசுராமன் இராமனைத் துதித்தல் (1385–1386)

1385. நீதியாய் முனிந்திடேனீயிங் கியாவர்க்கும்
★ ஆதியா னறிந்தனெ னலங்க னேமியாய்
வேதியா விறுவதே யன்றி வெண்மதிப்
பாதியான் பிடித்தவில் பற்றப் போதுமோ.

'நீதியாய்! முனிந்திடேல்; நீ இங்கு யாவர்க்கும்
ஆதி, யான் அறிந்தனென், அலங்கல் நேமியாய்!
வேதியா! இறுவதே அன்றி, வெண் மதிப்
பாதியான் பிடித்த வில் பற்றப் போதுமோ?'

பொ :—நன்னெறியுடையவனே! நீ சினங்கொள்ளாதே; நீ இவ்வுலகில் உள்ளோர் எல்லோர்க்கும் முதல்வன் என்பதை யான் அறிந்தனன், (திருத்துழாய்) மாலை சூடிய ஆழிப்படையேந்திய (திருமாலின் அமிசமான)வனே! வேதியனே! வெள்ளிய மதிப்பிளவைத்தரித்த சிவபெருமான் (முன்பு கையிற்) பற்றிய வில் பிளந்து முரிவதே யன்றி (ஆற்றல் மிக்க) உனது கையிற் பிடித்தற்கும் போதுமோ?

கு :—நீதி ஆய் எனப் பிரித்து நன்னெறியை ஆராய்வாயாக எனினுமாம். ஆதியான் என்றே கொண்டு முதல்வன் என்று கூறலுமாம். திருமாலின் கூறல்லாத பிறரால் இவ் வில்லைப் பற்றவும் கூடுமோ எனப் புகழ்ந்தவாறுமாம். "இராமபிரானை

'வேதியா' என விளித்தார்; பின்னும் கும்பகருணன் கூற்ருக ''அரசருருக்கொண்டமைந்த வேதியா'' (கும்ப. 357.) என்றதும் நோக்கத்தகும். (37)

1386. பொன்னுடை வனைகழற்
பொலங்கொ டோளினுய்
மின்னுடை நேமியா
ஞதல் மெய்ம்மையால்
என்னுள துலகினுக்
கிடுக்கண் யான்றந்த
உன்னுடை வில்லுமுன்
னுரத்துக் கீடன்ருல்.

'பொன் உடை வனை கழல், பொலம் கொள் தோளினுய்!
மின் உடை நேமியான் ஆதல் மெய்ம்மையால்,
என் உளது உலகினுக்கு இடுக்கண்? யான் தந்த
உன்னுடை வில்லும் உன் உரத்துக்கு ஈடு அன்று ஆல்'.

பொ:—அழகினையுடைய அணிதற்குரிய வீரகண்டையையும், பொன்னுலாகிய அணிகளைக் கொண்ட தோளினையும் உடையானே! ஒளிவிடுகின்ற ஆழிப்படையை உடையவன் நீயாக இருத்தல் உண்மையாகலின், இனி உலகில் உள்ளார்க்கு (நிகழவிருக்கும்) துன்பம் யாதுளது? யான் (இப்பொழுது) தந்த உன்னுடைய வில்லும் உன்வன்மைக் கேற்றதாகாது.

கு:—கழல் என்றதனுல் அருள்பொழிகின்ற அவனது திருவடிப் பெருமையையும், தோள் என்றதனுல் அவனது பொருவிறந்த வீரத்தையும் சுட்டினர். மற்றும், நீ நேமியானுதல் மெய்ம்மை என்றது, நீ நல்லோரைப் புரத்தற்கும் அல்லோரை வேரோடகழ்தற்கும் பூதலத்துதித்தவன் ஆகலின் இனி உலகிற்குத் துன்பம் இன்று என்று குறித்தவாறு. (38)

பரசுராமனது தவம் இராமன் அம்புக்கு இலக்கமாதல்

1387. எய்தவம் பிடைபழு தெய்தி டாமலென்
செய்தவம் யாவையுஞ் சிதைக்க வேயெனக்
கையவ ணெகிழ்தலுங் கணையுஞ் சென்றவன்
மையறு தவமெலாம் வாரி மீண்டதே.

'எய்த அம்பு, இடை பழுது எய்திடாமல் என்
செய்தவம் யாவையும் சிதைக்கவே' எனக்,
கை அவண் நெகிழ்தலும், கணையும் சென்று, அவன்
மை அறு தவம் எலாம் வாரி மீண்டதே.

பொ :—'(நீ எய்த) அம்பானது இப்பொழுது வீண் போகாமல் (குற்றம் எய்திடாதபடி) என்னுடைய செய்யப்பட்ட தவம் அனைத்தையும் (இலக்காகக் கொண்டு) அழிப்பதாக' என்று (பரசுராமன்) கூறிய அளவில் இராமபிரானுடைய கை அங்கே நெகிழ்ந்த அளவில் கணையும் சென்று (பரசுராமனது) குற்றமற்ற தவம் அனைத்தையும் கவர்ந்து (இராமனது கணைப்புட்டிலில்) மீட்டும் புகுந்தது. (39)

### பரசுராமன் விடைபெற்றுச் செல்லுதல்

**1388.** எண்ணிய பொருளெலா
மினிது முற்றுக
மண்ணிய மணிநிற
வண்ண வண்டுழாய்க்
கண்ணிய யாவர்க்கும்
களைக ணாகிய
புண்ணிய விடையெனத்
தொழுது போயினான்.

'எண்ணிய பொருள் எலாம் இனிது முற்றுக!
மண்ணிய மணி நிற வண்ண! வண் துழாய்க்
கண்ணிய! யாவர்க்கும் களைகண் ஆகிய,
புண்ணிய! விடை' எனத் தொழுது போயினான்.

பொ :—'(நன்கு) கழுவித் தூய்மை செய்யப் பெற்ற நீல மணியினது நிறத்தை யொத்த மேனியனே! வளவிய துளசி மாலை தரித்தவனே! (மூவுலகில் உள்ள) எல்லோர்க்கும் ஆதரவாகிய புண்ணியனே! நீ கருதிய பொருள்கள் எல்லாம் (கருதியவாறே) நிறைவேறுவனவாகுக; யான் விடை பெறுகின்றேன்' எனக் கூறி வணங்கிச் சென்றான்.

கு :—நீ பூவுலகில் எதன் பொருட்டுத் தோன்றினாயோ அந்தக் காரியங்கள் இனிது நிறைவேறுவனவாக என ஆசி கூறி, விடை கொண்டு சென்றான் பரசுராமன். "துணிவிற்றாக்கி அறைகழல்

இராமனுகி அறநெறி நிறுத்த வந்த இறை'' (வாலி. 132) என்று நேர் எதிரியான வாலியே இராமபிரான் அவதார புருடன் என்று குறித்தமை காண்க. மண்ணுதல் – கழுவுதல்; நீராட்டுதல். '' மண்ணிய சென்ற ஒண்ணுதல் அரிவை' என்பது குறுந்தொகை. (292)

(40)

## இராமன் தயரதன் துயரைத் தீர்த்தல்

1389. அழிந்தவன் போனபின்
னமல னையுணர்
வொழிந்துதன் னுயிருலைந்
துருகுந் தாதையைப்
பொழிந்தபே ரன்பினுற்
றொழுது முன்புபுக்
கிழிந்தவான் றுயர்க்கடற்
கரைநின் றேற்றினுன்.

அழிந்து அவன் போனபின், அமலன், ஐயுணர்வு
ஒழிந்து, தன் உயிர் உலைந்து, உருகும் தாதையைப்
பொழிந்த பேர் அன்பினுல் தொழுது முன்பு புக்கு,
இழிந்த வான் துயர்க் கடல் கரை நின்று ஏற்றினுன்.

பொ :— அப் பரசுராமன் (செருக்கும் தவமும்) சிதையப் பெற்றுப் போனபின்பு, குற்றமற்ற இராமபிரான், ஐம்புல உணர்வும் நீங்கப் பெற்றுத் தன் உயிர் வருந்தித் தன்னை எண்ணி மனம் கசியும் தந்தையாகிய தயரதன்முன் சென்று, பொங்கி வழிகின்ற பேரன்பொடு வணங்கி அவன் முன்பு மூழ்கி நின்ற பெரிய துன்பக் கடலினின்றும் கரை சேர்த்தான். (41)

## தயரதனது பெருமகிழ்ச்சி

1390. வெளிப்படு முணர்வினன்
விழும நீங்கியே
தளிர்ப்புறு மதகரித்
தானை யானிடைக்

குளிப்பருந் துயர்க்கடற்
கோடு கண்டவன்
களிப்பெனுங் கரையிலாக்
கடலு ளாழ்ந்தனன்.

வெளிப்படும் உணர்வினன், விழுமம் நீங்கியே,
தளிர்ப்புறு மத கரித் தானையான், இடைக்
குளிப்பு அரும் துயர்க் கடல் கோடு கண்டவன்,
களிப்பு எனும் கரை இலாக் கடலுள் ஆழ்ந்தனன்.

பொ :—அழிந்த உணர்வு வெளிப்பட்டவனாகித், துன்பம் நீங்கப் பெற்றுக் களிக்கின்ற, மதஞ் செறிந்த யானைச் சேனையையுடைய பேரரசன், இடையே மூழ்குவதற்கு அருமையான துன்பமாகிய பெருங்கடலின் கரையைக் கண்டவன், பின்னர்க் களிப்பென்னும்-எல்லை காணரிய கடலில் மூழ்கினான்.

கு :—இராமனுக்கு என்ன ஏதம் விளையுமோ என எண்ணித் துயர்க்கடலில் வீழ்ந்த தயரதன், இராமனது வெற்றி கண்டு உவகைக் கடலில் மூழ்கினான் என்க. ஒரு கடலினின்று கரை ஏறியவன் பிறிதோர் கடலில் மூழ்கினன் என்ற நயம் காண்க. முன்பு துன்பத்திற்கு ஓர் எல்லையிருந்தது இப்பொழுது ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு எல்லையின்று என்க. (42)

### தயரதன் ஆனந்தக் கண்ணீர் சொரிதல்

1391. பரிவறு சிந்தையப் பரசு ராமன்கை
வரிசிலை வாங்கியோர் வசையை நல்கிய
ஒருவனைத் தழுவிநின் றுச்சி மோந்துதன்
அருவியங் கண்ணெனுங் கலச மாட்டினான்.

பரிவு அறு சிந்தை அப் பரசுராமன் கை
வரி சிலை வாங்கி ஓர் வசையை நல்கிய
ஒருவனைத் தழுவி நின்று, உச்சி மோந்து, தன்
அருவி அம் கண் எனும் கலசம் ஆட்டினான்.

பொ :—இரக்கமற்ற மனத்துடன் கூடிய அப்பரசுராமன் கையில் இருந்த கட்டமைந்த வில்லை வளைத்து (அவனுக்கு) ஒரு பழியை உண்டாக்கிய ஒப்பற்ற இராமனைத் தழுவி நின்று

அவனது உச்சியை மோந்து அருவிபோல நீர் பெருகா நின்ற அழகிய தனது கண்கள் என்னும் கரகங்கள் கொண்டு நீராட்டினன்.

கு :—வில்லை வாங்கிக் கொண்டு பழியை நல்கினன் என்பதில் மாற்று நிலையணி பயின்றமை காணலாம். கலசம் அதன்கண் உள்ள நீருக்கு ஆகுபெயர். ''ஆங்குயர் மழைக்க ணீரா லாயிரங் கலசமாட்டி'' (திருவடி. 78) என்று பின்னும் கூறுவர். (43)

## தயரதன் மகிழ்ந்து கூறுதல்

**1392.** பொய்ம்மையில் சிறுமையிற்
புரிந்த வாண்டொழில்
மும்மையி னுலகினன்
முடிக்க லாவதோ
மெய்ம்மையிச் சிறுவனே
வினைசெய் தோர்களுக்
கிம்மையு மறுமையு
மீயு மென்றனன்.

'பொய்ம்மை இல் சிறுமையில் புரிந்த ஆண் தொழில்,
மும்மையின் உலகினல் முடிக்கல் ஆவதோ ?
மெய்ம்மை இச் சிறுவனே, வினை செய்தோர்களுக்கு
இம்மையும் மறுமையும் ஈயும்!' என்றனன்.

போ :—வஞ்சனையில்லாத இந்த இளம் வயதில் (இச்சிறுவன்) செய்து முடித்த ஆண்மைத் தொழில், மூவுலகின்கண் உள்ளோராலும் முடிக்கக்கூடியதோ? (அன்று); இந்த இளைஞனே இரு வினையைப் புரிந்தவர்களுக்கு (அவரவர் வினைகட்குத் தக்கவாறே) இம்மை மறுமைப் பயன்களை ஈவான். இது உண்மை என்று நினைந்தான் (தயரதன்).

கு :—மூன்றுலகத்தோரும் ஒன்று கூடினும் முடித்தற்கரிய தொழிலை இவன் இளமையிலேயே செய்ததனல், இவன் இறைவனது அமிசமே என்று தயரதன் எண்ணினன். நல்வினை தீவினைகள் இரண்டும் பிறப்பிற்குக் காரணமாகலின் இவற்றைப் பொன் விலங்கும் இருப்பு விலங்குமாகக் கூறுவர். (44)

## இராமன் வில்லை வருணனிடம் தந்து அயோத்தியை அடைதல்

**1393.** பூமழை பொழிந்தனர் புகுந்த தேவருள்
வாமவேல் வருணனை மான வெஞ்சிலை
சேமியென் றுதவித்தன் சேனை யார்த்தெழ
நாமநீ ரயோத்திமா நகர நண்ணினான்.

பூ மழை பொழிந்தனர் புகுந்த தேவருள்,
வாம வேல் வருணனை, 'மான வெம் சிலை
சேமி' என்று உதவித், தன் சேனை ஆர்த்து எழ
நாம நீர் அயோத்திமாநகரம் நண்ணினான்.

பொ:—அப்பொழுது பூமழை சொரிந்தவர்களாய், அங்கு வந்து அடைந்த தேவர்களுள்ளே, அழகிய வேற்படையையுடைய வருணனை (நோக்கி இராமபிரான்) பெருமையும் கொடுமையுமுடைய இந்த வில்லை நன்றாகப் பாதுகாப்பாயாக என்று (அவன் பால்) அதனைத் தந்து தன் சேனை ஆரவாரித்து (உடன்) எழப் புகழ்மிக்க நீர்வளம் செறிந்த அயோத்தி நகரம் சென்றடைந்தான்.

கு:—இங்கே வருணனிடம் கொடுக்கப்பட்ட வில்லானது கரனுடன் இராமன் போர் புரிந்தபோது, வருணனால் இராமனுக்கு அளிக்கப்பட்டது. ''அண்டர்நாதன் தடக்கையினத்துணைப் பண்டுபோர்மழு வாளியைப் பண்பினாற், கொண்ட வில்லை வருணன் கொடுத்தனன்'' (கரன்வதை. 178) என்றது காண்க. இந்த வில்லே பிறகு விதுரன் கைக்குச் சென்றதாகவும் அதனையும் திருமால் கண்ணனாக அவதரித்த ஞான்று விதுரனைக் கொண்டே முறித்ததாகவும் வரலாறு. நாமம் – புகழ். 'வழுதியர் நாமம்' (தஞ்சைவாணன். 7) நாமம் நீர் என்பதற்குப் பகைவர்க்கு அச்சம் தரும் பரந்த அகழி நீர் என்றும் கொள்ளலாம். நாமம் – அச்சமாதல் ''நாளாவுய்த்த நாமவெஞ் சுரத்து'' (அகம் 131); ''நாமமுதலை நடுங்குபகை யஞ்சான்'' (நற். 287) என்பன கொண்டறிக.
(45)

### தயரதன் பரதனைக் கேகய நாட்டிற்கு அனுப்புதல் (1394-1395)

**1394.** நண்ணின ரின்பத்து
வைகு நாளிடை
மண்ணுறு முரசினம்
வயங்கு தானையான்

அண்ணலப் பரதனை
நோக்கி யாண்டகை
எண்ணருந் தகையதோர்
பொருளி யம்புவான்.

நண்ணினர், இன்பத்து வைகும் நாள் இடை,
மண் உறு முரசு இனம் வயங்கு தானையான்,
அண்ணல் அப் பரதனை நோக்கி, ஆண் தகை
எண் அரும் தகையது ஓர் பொருள் இயம்புவான்.

பொ :—(எல்லோரும் அயோத்தியை) அடைந்தவர்களாய் இன்பத்தோடு வாழும் நாளில், (ஒருநாள்) ஆண்மை சான்றவனுன, மார்ச்சனை பொருந்திய பேரிகைகளின் கூட்டம் விளங்குதற்கு இடமான சேனையையுடைய தயரதன், பெருமை தங்கிய அந்தப் பரதனைப் பார்த்து, யாவராலும் நன்கு பாராட்டத்தக்க அருமையான தகுதிவாய்ந்த ஓர் பொருளைச் சொல்லலானுன்.

கு :—அப் பரதனை என்ற இடத்தில் உள்ள சுட்டு இராமன் திறத்து அளவுகடந்த அன்பு கொண்டவன் அவன் என்பதைக் காட்டும். எண் அரும் என்பதற்கு, யாவராலும் நினைத்தற்குமரிய என்றும் கொள்ளலாம். இராமனுக்கு இளவரசுப் பட்டம் சூட்ட வேண்டும் என்ற எண்ணம் தயரதனுக்கு முன்னரே உண்டென்றும் பரதன் அதற்கு ஓர் தடையாயிருத்தல்கூடும் என்றும் அவன் எண்ணியிருக்கலாம் என்பதை ஒருவாறு உய்த்துணரும்படி எண் அரும் என்ற தொடரைக் கவி அமைத்தனர் என்று கருதலாம். மந்தரை சூழ்ச்சி 58-ஆம் செய்யுளும் இதை விளக்கும். (46)

**1395.** ஆணைநின் றன்முது தாதை யையநிற்
காணிய விழைவதோர் கருத்த னுதலால்
கேணியில் வளைமுரல் கேகயம் புகப்
பூணொளிர் மார்பநீ போதி யென்றனன்.

'ஆணை நின் தன் முது தாதை ஐய! நிற்
காணிய விழைவது ஓர் கருத்தன் ஆதலால்,
கேணியில் வளை முரல் கேகயம் புகப்,
பூண் ஒளிர் மார்ப! நீ போதி' என்றனன்.

பொ :— ஐயனே! செலுத்தும் ஆணையையுடைய உனது பாட்ட(னை கேகயநாட்டு மன்ன)ன், உன்னைப் பார்க்க விருப்ப முடையவன். ஆதலின், அணிகள் விளங்குவதற்குக் காரணமான மார்பையுடையவனே! ''நீர்நிலைகளிலே சங்குகள் ஒலித்தற்கிட மான (நீர்வளம் மிக்க) கேகய தேசத்தை அடைதற்கு நீ செல்லுவாயாக'' என்று தயரதன் பரதனை நோக்கிக் கட்டளை யிட்டான். (47)

## பரதன் கேகய நாடு செல்லுதல்

1396. ஏவலு மிறைஞ்சிப்போ யிராமன் சேவடிப்
பூவினைச் சென்னியிற் புனைந்து போயினன்
ஆவியங் கவனல தில்லை யாதலால்
ஓவலி லுயிர்பிரிந் துடல்சென் றென்னவே.

ஏவலும், இறைஞ்சிப் போய்; இராமன் சேவடிப்
பூவினைச் சென்னியில் புனைந்து போயினன்,
ஆவி அங்கு அவன் அலது இல்லை ஆதலால்,
ஓவலில் உயிர் பிரிந்து உடல் சென்று என்னவே.

பொ —(பேரரசன்) கட்டளையிட்ட அளவில் (பரதன்) வணங் கிச் சென்று இராமபிரானது சிவந்த திருவடிகளாகிய மலர்களைத் தலையிலே தரித்து, அவ்விடத்துள்ள அந்த இராமபிரானையல்லாது (தனக்கு) வேறு உயிரின்றாகையால், நீங்குதலில்லாத உயிரை விட்டுப் பிரிந்து உடம்பு தனித்துச் சென்றாற்போலப் பரதன் (இராமனை விட்டுப்) போயினன்.

கு :—உயிர் பிரிந்து உடல் சென்றது என்பது இல்பொருள் உவமை. பரதனுக்குச் சிறந்த பொருள் யாவும் இராமனே என்பது, ''எந்தையும் யாயு மெம்பிரா னு மெம்முனும் அந்தமில் பெருங்குணத் திராமன்'' (பள்ளிபடை. 58) என்ற பரதன் கூற்றான் அறிக. (48)

## கேகய நாட்டை அடைதல்

1397. உளைவிரி புரவித்தே ருதாசித் தென்றெனும்
வளைமுர றுனையான் மருங்கு போதப்போய்
இளையவன் றன்னொடு மேழு நாளிடை
நளிர்புனற் கேகய நாடு நண்ணினன்.

உளை விரி புரவித் தேர் உதாசித்து என்று எனும்
வளை முரல் தானையான் மருங்கு போதப் போய்,
இளையவன்றன்னொடும் ஏழு நாளிடை,
நளிர் புனல் கேகயநாடு நண்ணினான்.

பொ:—பிடரிமயிர் பரந்த குதிரைகளையும் தேர்களையுமுடைய உதாசித்து என்று சிறப்பாகக் கருதப்படுகிற, சங்குகள் முழங்குதற்கிடமான சேனையையுடைய அரசன் தன் அருகில் வர, தம்பியான சத்துருக்கனுடனே சென்று, ஏழு நாட்களிலே தண்ணிய நீர்வளத்தையுடைய கேகய நாட்டை (ப் பரதன்) அடைந்தான்.

கு:—அழைப்புப் பரதற்கேயன்றிச் சத்துருக்கனனுக்கு இல்லை. அங்ஙனமாகவும் ஒருவர் அழைப்போ கட்டளையோ இன்றி அவன் பரதன் பின் சென்றது அண்ணன்மீது அவன் கொண்ட அளவு கடந்த அன்பையும், அடியார் சேவைத் திறத்தையும் காட்டும் இருவரும் என்றும் இணை பிரியாது வாழ்ந்தனர் என்பது, ''பரதனுமிளவலும் ஒருநொடிபகிரா வரதனுமிளவலும் என மருவினரே'' (திருவவ. 131.) என்ற தொடரால் அறியலாம். இராமனிருக்குமிடம் அயோத்தி என்றாற்போலப் பரதன் இருந்த இடமே தனக்கு உகந்த இடமெனக் கருதிச் சத்துருக்கனன் சென்றான் என்க. (49)

### கவிக்கூற்று

1398. ஆனவன் போனபின் னரசர் கோமகன்
ஊனமில் பேரர சுய்க்கு நாளிடை
வானவர் செய்தமா தவமுண் டாதலால்
மேனனி நிகழ்ந்தன விளம்பு வாமரோ.

ஆனவன் போன பின், அரசர்கோமகன்
ஊனம் இல் பேர் அரசு உய்க்கும் நாள் இடை,
வானவர் செய்த மா தவம் உண்டு ஆதலால்,
மேல் நனி நிகழ்ந்தன விளம்புவாம் அரோ!

பொ:—அப்பரதன் சென்றபின் அரசர்க்கரசனான தயரதன் குற்றமற்ற பெரிய அரசாட்சியைச் செலுத்திக்கொண்டிருக்கும் நாட்களில், தேவர்கள் (இராவணன் முதலியோர் அழிவின் பொருட்டுப்) புரிந்த பெருந்தவம் உண்டாகலின், பின்னர் மிகுதியாக நடைபெற்ற செய்திகளை, (இனி அடுத்த காண்டத்தில்) கூறுவோம்.

கு:—இராமாவதாரத்தின் முக்கிய காரணம் தீயோரை அழித்துத் தேவரையும் நல்லோரையும் புரத்தல் ஆகலின் "வானவர் செய்த மாதவம் உண்டாதலான்" என்றார். "அரக்கர் பாவமும் அல்லவரியற்றிய அறமும் துரக்க நல்லருள் துறந்தனள் தூமொழி மடமான்" (மந்தரை. 78.) "தேவர் செய்தவத்தினற் செம்மலேகினுன்" (சடாயுவுயிர். 19.) என்ற இடங்களிலும் இக் குறிப்புக் காணலாம். (50)

பரசுராமப் படலம் முற்றிற்று.

பாலகாண்டம் முற்றுப்பெற்றது.

## ஒப்பு நோக்கப்பெற்ற சுவடிகளும், அச்சுப்பிரதிகளும் அவற்றின் குறியீடுகளும்

| குறியீடு | சுவடி பெற்ற இடம் | சுவடி எண் | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | தஞ்சை சரஸ்வதி மால் | 367–8 | |
| 2 | ,, | 369 | |
| 3 | ,, | 370 | |
| 4 | ,, | 371 | |
| 5 | ,, | 372 | |
| 6* | ,, | 375 | |
| 12 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 30 | |
| 13 | ,, | 42 | |
| 14 | ,, | 46 | வரைக்காட்சிப் படலம் 8-ஆம் பாடல்வரை யுள்ளது. |
| 15 | ,, | 471 | |
| 16 | ,, | 472 | |
| 17 | ,, | 672 | |
| 18 | ,, | 677 | |
| 19 | திரு. தெய்வசிகாமணிக் கவுண்டர், ஈரோடு. | | |
| 20 | ,, | | |
| 21 | ,, | | |
| 22 | ,, | | |
| 23 | திரு. C. திருநாவுக்கரசுப் பிள்ளை, சிதம்பரம். | | அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தால் விலைக்கு வாங்கப்பட்டது |
| 24 | திரு. C. கணேசையர், யாழ்ப்பாணம். | | |
| 25 | திரு. தெய்வசிகாமணிக் கவுண்டர், ஈரோடு. | | |
| 26 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 27 | |
| 27 | ,, | 28 | |
| 28 | ,, | 33 | |
| 29 | ,, | 41 | |
| 30 | ,, | 540 | |
| 31 | அரசாங்கக் கையெழுத்துப் புத்தகசாலை, சென்னை. | 514 | |
| 32 | திரு. சா. கணேசன், கம்பன் கழகம், காரைக்குடி. | (5) | சித்தூர் வீராசாமி நாயுடு பதிப்பு 1884. |
| 33 | ,, | (8) | சாத்தம்பாக்கம் கிருஷ்ணசாமி முதலியார் பரிசோதித்தது. ஜீவரக்ஷாமிருதப் பதிப்பு 1886 |
| 34 | ,, | (16) | திருமயிலை சண்முகம் பிள்ளை பரிசோதித்தது. நிரஞ்சன விலாசப் பதிப்பு 1924. |

* 7 முதல் 11 முடியவுள்ள ஏடுகளில் பாலகாண்டம் இல்லை.

| குறி யீடு | சுவடி பெற்ற இடம் | சுவடி எண் | குறிப்பு |
|---|---|---|---|
| 35 | திரு. சா. கணேசன், கம்பன் கழகம், காரைக்குடி. | (18) | அ. குமாரசாமிப் பிள்ளையும் கனகசுந்தரம் பிள்ளையும் பரிசோதித்துப் பதிப்பித்தது 1918. (அரும்பத உரையுடன் கூடியது) |
| 36 | ,, | (21) | காஞ்சீபுரம் ராமசாமி நாயுடு உரையுடன் சென்னை இட்டா பார்த்தசாரதி நாயுடு பதிப்பித்தது 1922. |
| 37 | ,, | (27) | சென்னை வேப்பேரி M. S. அச்சகத்தில் அச்சிடப்பட்டது. (உரையுடன் கூடியது) |
| 38 | திரு. நீ. கந்தசாமிப் பிள்ளை, பள்ளி அக்கிரகாரம், தஞ்சை | | |
| 39 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 40 | |
| 40 | | | ஆழ்வார் திருநகரி ப்ரதிகளின் படி பெரியன் ஸ்ரீனிவாசையங்கார் பதிப்பித்தது 1942. |
| 41 | | | வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் உரைப் பதிப்பு. |
| 42 | | | கவித்தலம் துரைசாமி மூப்பனர் பதிப்பு. |
| 43 | கனகசுந்தரம் பிள்ளை | | அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தால் விலைக்கு வாங்கப் பட்டவை. |
| 44 | ,, செப்பரைச்சாமி | | (43, 44 இரண்டிற்கும்) |
| 45 | | | உ. வே. சாமிநாதையர் நூல் நிலையப் பதிப்பு, அடையாறு. |
| 46 | | | பூமகள் விலாசம் பதிப்பு 1928 |
| 47 | அண்ணுமலைப் பல்கலைக் கழக ஏடு. | | பரசுராமப் படலம் 39-ஆம் பாடலிலிருந்தே உள்ளது. |

## குறிப்பு

இப்பதிப்பில் மூலத்தில் எடுத்துக்கொண்ட பாடங்கள், செய்யுட்களின் தொடரெண் முறைப்படி அடிமுறையாகவும் சீர்முறையாகவும் தடித்த முதலெழுத்தோடு முன்னே காட்டப்பெற்றுள்ளன. அவற்றோடு வேறுபட்ட பாடங்கள் அவற்றின்பின் முறையே சேர்க்கப் பெற்றுள்ளன. பாடங்களின் பின்னே குறிக்கப்பட்டுள்ள எண்கள், அப் பாடங்கள் உள்ள சுவடிகளின் குறியீடுகள். '46—' என்னும் குறியீடு, 46 என்னும் எண் இட்டுக் காட்டிய அச்சுப்புத்தகத்தோடு ஒத்த பாடம் உடைய ஏடுகளின் எண்களையும் குறிக்கும். பிழைபட்ட பாடங்களும் அவற்றைக் காட்டும் சுவடிகளின் எண்களும், சிதைந்த சுவடிகளின் எண்களும் விரிவஞ்சிக் குறிக்கப்படவில்லை.

---

# பாட வேறுபாடு

## 11. குலமுறைகிளத்து படலம்

### 721

I குலமுதல்வன்; 46—
குலமுதல; 23.
குலமைந்தன்; 5, 16, 20, 21, 41.

II உயிரனைத்தும்; 46—
உயிரணையாப்; 41.
உயிரெல்லாம்; 1-4, 6, 14, 41.
உலகனைத்தும்; 19, 25, 29.

III சோதித்தன்; 46—
சோதித்த; 17, 18, 22, 40, 41, 45.

வரிசிலையால்; 46—
வருசிலையால்; 4.

IV இவர்குலத்தோர் தராபதி; 1-4, 6, 12-20, 22-25, 35, 37, 39-41, 43-45.
இவர்குலத்தொர் தராபதி; 26-29, 31.
இவர்குலத்துத் தராபதி; 41.
இவர்குலத் தராபதி; 46—
இவன்குலத்தோர் தராபதி; 5, 21.

### 722

I பிணியரங்க; 46—
பிணியரங்கு; 1-6, 13, 16, 20, 22, 28, 41, 44, 45.
பிணியரங்கும்; 24.
பிணியரங்கின்; 12, 15, 19, 25, 27, 29.

அகலப்; 46—
துணியப்; 1-4, 6, 19, 25, 29, 41.
துணிப்பப்; 41.

பேணி; 46—
பண்ணி; 2.

II மணியரங்கம்; 46—
மணியரங்கு; 3-6, 12, 13, 15-22, 24-28, 39, 41, 45.

முடியாய்; 46—
முடியான்; 24.

மலரயனே; 46—
மலரயனே; 26, 41, 48.

வழிபட்டுப்; 46—
வழிப்பட்டுப்; 3, 4, 12, 15-18, 20-25, 27-29, 39. 41.
வழிபட்ட; 26, 41.
வழிபட்டப்; 35.
வழிப்பட்ட; 44.
வழிபடமுன்; 41.

III பணியரங்கப்; 46—
பணியரங்கு; 1-3, 5, 6, 12, 14-16, 19, 20, 22, 25-27, 29, 41, 44.
பணியரங்கம்; 41.
பணியரங்கும்; 4, 13, 21, 24, 45.
பணியரங்குப்; 28.
பணியரங்க; 31.

பெரும்; 46—
நெடும்; 3, 31, 41.

பரஞ்சுடரை; 46—
பரஞ்சுடருக்கு; 45.
பாரளந்தோன்; 12, 27.

யாங்காண; 46—
அரங்கான; 45.
கண்வளர; 12, 27.

IV அணியரங்கம்; 46—
அணியரங்கு; 12, 27.

தந்தானை; 46—
தந்தானும்; 44, 45.
வகுத்தோனும்; 12, 27.

அறியாதார் அறியாதார்; 46—
இவர்குலத்தோ ராண்டகை காண்; 12, 44, 45.
இவர்குலத்தோ ராண்டகை தான்; 27.

## 723

I தானவரைத்; 46—
தானவனைத்; 24.

தலைதுமித்தென்; 46—
தலைதுமித்து; 2, 4, 5, 12, 13-18, 20, 23, 25, 27-29, 31, 39, 41, 43, 45.
தலைதுமித்தோன்; 3, 26, 44, 45.
தலைதுணித்து; 19.
கலைதுமித்து; 22.

II வான்றரக்கிற்றி கொலென்று; 46—
வான்றரக்கிற்றீ கொலெனக்; 5, 15, 19, 21, 29.
வான்றருக்கிற்றி கொலென்று; 1, 2, 4, 6.
வான்றருக்கிற்றீ கொலெனக்; 16-18.
வான்றருக்கிற்றீயென்னக்; 20.
வான்றருகிற்றி கொலென்று; 13, 14, 24.
வான்றருகிற்றி கொலெனக்; 45.
வான்றருகிற்றீ கொலெனக்; 22, 28, 41.
வான்றனக்கின்றீயென்று; 12, 27, 41.
வான்றனக்கின்றீ தியெனக்; 45.
வான்றனக்கின்றீ கொலெனக்; 43.
வான்றனக்கின்றி கொலொன்று; 23.
வான்றனக்கின்றருள் கொலென; 41.
வானவர்தம் தவமியற்றிக்; 44, 45.

குறையிரப்ப; 46—
குறையிரா; 4.

வரங்கொடுத்தாங்கு; 46—
வரங்கொடுத்தற்கு; 1-4, 6, 12, 13, 16-19, 25, 29, 40, 41.
வரங்கொடுத்திட்டு; 15, 23, 28, 43.
வரங்கொடுத்தாற்கு; 20.
வரங்கொடுத்தற்கு; 27.
வரங்கொடுத்தான்; 41.

III சிலையினனுய்; 46—
சிலையினுல்; 5, 16.
சிலையினுன்; 13, 20.

இகல் புரிந்த; 46—
இகல் புரிந்தது; 3, 5, 12, 14, 15, 23, 27-29.
இகல் புரிந்தான்; 1, 6, 41.
இகல் புரிந்தோர்; 17, 18.
இகல் புனைந்தது; 13, 20.
இயல் புரிந்தது; 22.
இகல் புரிந்தோன்; 24.
இகல் புரிந்தார்; 41.

IV இந்திரன்காண்; 46—
இந்திரன்முன்; 24, 45.
இந்திரனே; 22, 40, 41, 45.
இந்திரனும்; 19, 27, 29.

விடையேறுய்ச்; 46—
விடையேறுச்; 1, 3, 4, 6, 26, 45.
தொல்லேறுய்ச்; 17, 18, 22, 40, 41.
கொல்லேறுச்; 45.

சுமந்தானும்; 46—
சுமந்தானே; 5, 12, 15, 17-19, 21-23, 25, 27-29, 40, 41, 43.
சுமந்தான்காண்; 45.

## 724

I அரசவவன் ; 12, 15, 19, 24, 25, 27, 29.
அரசனவன்; 1-6, 13, 16-18.
அரைசனவன்; 46—
அரசவவர்; 20.
அரசரவன்; 41.
அரசவன்றன்; 23, 28, 41.

பின்னோரை; 46—
அன்னோரை ; 20.

II உரைகுறுக; 46—
உரைகுறுகி; 2-4, 41.

இவர்குலத்தோன்; 46—
இவர்குலத்தோர்; 17.
உயர்குலத்தோன்; 3, 4, 15.

III மூப்பிவைமாற்றி; 46—
மூப்பவையெய்தி; 1, 6, 12, 16, 27, 29.
மூப்பவைமாற்றி; 41.
மூப்பிவையின்றி; 41.
மூப்பிவையெய்தி; 2, 4, 14, 17-19, 25, 28, 29, 35, 40, 41, 45, 48.
மூப்பிவையேக; 3.
என்றிவையின்றி; 5, 15, 21, 23.
என்பதுமின்றி; 13, 20.
என்றிவைநீக்கி; 24, 45.
என்றிவைமாற்றி; 41, 45.
என்றிவையெய்தி; 45.

நந்தாமல்; 46—
நந்தாமை; 5, 16, 23, 43.
நந்தாமைக்; 28.
நணுகாமல்; 2.
வருந்தாமல்; 41.

IV கடைந்தமுது; 46—
கடைந்தமுதம்; 5, 12, 16, 19, 22, 25-27, 29, 31, 35, 37, 40, 45, 48.
குடைந்தமுது; 24, 28, 41, 45.
குடைந்தமுதம்; 1-4, 6, 13, 14, 20.

கொடுத்தானும்; 46—]
கொடுத்தானே; 1, 5, 6, 12, 15, 16, 21, 23, 25, 27, 28, 41, 43.

## 725

I கருதலரும்; 46—
கருதவரும்; 2.
கருதரிய; 5, 16-18, 21, 22, 40, 41, 45.
கருதிலரும்; 14.

பெருங்குணத்தோர்; 46—
பெருங்குணத்தோன்; 1, 6, 28, 41.
பெருங்குணத்தார்; 5, 16, 21.
பெருங்குணத்தான்; 23, 43.
புகழ்குணத்தான்; 12, 15, 27.
புகழ்குணத்தோர்; 13, 19, 25, 29.
புகழ்குலத்தோர்; 20.

இவர் முதலோர்; 46—
இவன் முதலோர்; 1-4, 6, 29, 41.
இவர் பின்பு; 20, 35, 41.
அவர் பின்பு; 13, 40, 45.
அவன் பின்பு; 12, 15-18, 22, 23, 27, 28, 43.

கணக்கிறந்தோர்; 46—
கணக்கிறந்தார்; 12, 15, 23, 27, 43.

II நின்றோர்; 46—
நின்றோன்; 41.
நின்றார்; 1-6, 13, 15-18, 20, 21, 23-25, 27, 31, 39, 40, 43-45.
நின்றான்; 22.
நின்று; 28, 41.

III பொருதுறைசேர்; 46—
பொருதிறல் சேர்; 5, 12, 13, 16, 21, 27, 45.
பொருதடரும்; 24, 45.

வேலிஞய்; 46—
வேலினஞய்ப்; 43, 44.
செவ்வேலோய்; 24, 45.

IV ஆண்டோன்; 46—
ஆண்டான்; 1-3, 5, 6, 12, 13, 16, 19-27, 31, 39, 41, 43.

உளனொருவன்; 46—
ஒருவன்காண்; 1-6, 12-25, 27-29, 35, 40, 41, 43, 45.
ஒருவனுளன்; 45.

**726**

I மறை; 46—
நறை; 5, 12, 20, 24, 26, 31, 39, 41, 45.

மணி; 46—
மலர்; 5, 12, 16, 20, 21, 24, 26, 31, 41, 44, 45.

வாளொடு மின்னப்; 46—
வாளொடு மின்னிப்; 15.
வாளொடு நக்க; 31, 39, 41.
வாளொடு நண்ணப்; 24.
வாளொடு நந்தாப்; 20.
வாளொடு நந்தப்; 13, 44, 45.
நாளொடு மின்னப்; 12, 26.

II மன்னு வானவரும்; 46—
மன்னும் வானவரும்; 5, 12-14, 16-18.
மன்னு மானவரும்; 15.
மன்னுந்தானவரும்; 28.

தானவரும்; 46—
வானவரும்; 28.

பொருமொரு நாள்; 46—
பொருதநாள்; 1-6, 12-23, 25, 26, 28, 29, 35, 40, 41, 43, 45.

III தொழுகழலாய்; 46—
தொழுங்கழலாய்; 4.
தொழுகழலான்; 41.

குலத்தோன்; 46—
குலத்தோர்; 13, 20.

பிடித்த; 46—
பிடித்து; 3, 4.
பிடித்தன்று; 44.
பிடித்தே; 24.
பிடித்தவ்; 5, 16, 21.

IV திரிந்தமராபதி; 46—
திரிந்தமரர்பதி; 3-5, 12, 16, 23, 24.
திருந்தமராபதி; 44.
அமைந்தமராபதி; 45.
எதிர்ந்தமரர்பதி; 13.

காத்தான்; 1-3, 6, 12-15, 17-19, 21-24, 27, 31, 39, 40.
காத்தோன்; 46—

**727**

I இன்னுயிராய்; 46—
இன்னுயிரா; 20.
இன்னுயிராம்; 44.

இருநிலங்காத்தாரென்று; 46—
இருநிலங் காத்தாரென்றும்; 31.
இருநிலங்காத்தவரென்று; 24, 35, 45.
இருநிலங் காத்தாரென்னும்; 25.
இரு நிலங் காத்தானென்றும்; 26
இருநிலமுன் காத்தளித்த; 40, 45.
இருநிலமுங்காத்தளித்த; 1, 2, 5, 6, 16-18, 21, 22, 41.
இருநிலமுங்காத்தருளும்; 13.
இருநிலங் காத்தருளுடைய; 12, 20, 27, 45.

II கழலவரை; 46—
கழலரசர்; 45.

யாம்போலும்; 46—
புகழையெவன்; 45.

புகழ்கிற்பாம்; 46—
புகலுதும்யாம்; 45.

III வேலாய்; 46—
வேலோய்; 40.

மென்புறவின்; 13, 20, 24, 28, 45.
மேற்பறவை; 46—
மேற்புறவின்; 45.
மென்பறவை; 12, 27, 41, 44.

IV மன்னுயிர்க்கும்; 17, 18, 25, 28, 40, 41, 45.
மன்னுயிர்க்குத்; 46—

மாறுக; 46—
மாறுது; 28, 44.

வழங்கினனுல்; 46—
வழங்கினுன்; 1-6, 12, 13, 15-25, 27-29, 35, 40, 41.

## 728

I இடரோட்ட; 46—
இடரோட்டம்; 30, 31, 41.
இடரோட்டி; 1-6, 12, 13, 15-24, 27-29, 39, 41, 43-45.
இடரோட்டி; 25.

இனநெடிய; 46—
எனநெடிய; 4, 5, 12-18, 23, 27, 28, 30, 31, 41, 43-45.
எனனெடிய; 1-3, 6.
எனுநெடிய; 22, 41.
இணைநெடிய; 39.
எனைநெடிய; 25, 29.

இவ்வுலகம்; 46—
இவ்வுலகை; 30, 41.
இவ்வுலகின்; 2, 4, 6, 12-15, 19-29, 31, 39-41, 43-45.
இவ்வுலகின்று; 17, 18.
எவ்வுலகின்; 5, 16.

II திடரோட்டம்; 46—
திடரோட்ட; 2.
திடரோட்டும்; 40, 41, 45.
திடரோட்டி; 1, 3, 5, 6, 28, 41, 45.
இடரோட்டும்; 17, 18.
திடரோட்டம்; 25, 29.

கிடந்தது; 1, 5, 6, 12, 13, 15, 17, 18, 20-22, 27, 28, 31, 39, 41, 44.
கிடக்கும்; 46—
கிடந்த; 16, 45.
கிடந்தே; 2.
கிறுவித்; 30, 35, 41.

எனவிரிதார்த்; 1, 6, 13, 44.
வகையிரங்கித்; 46—
வகைக்கிரங்கித்; 23, 40, 43, 45.
வகையோங்கித்; 2.
வகைதிறம்பத்; 45.
எனவிரங்கித்; 5, 12, 15, 21, 27, 28.
எனவிரங்க; 16.
எனவிரங்காத்; 17, 18, 22, 41.
எனவிரிந்தார்; 41.
எனவிரித்தார்; 20, 45.
எனவிரிந்த; 31, 39.
தெவ்வேந்தர்; 30, 41.
தேன்விரிதார்; 41.
தேன்விரிதார்த்; 35.

தெவ்வேந்தர்; 46—
தேர்வேந்தர்; 4, 14, 41.
சிரத்தினெடு; 41.
சிரத்தினெடும்; 30.

III உடரோட்ட; 46—
உடரோட்டு(ம்); 1, 3-6, 12, 14-19, 21, 22, 24, 25, 27-29, 40, 41.
குடரோட்ட; 26, 30, 39.
குடரோடு; 31.

வேலாய்; 46—
வேலோய்; 3, 14, 15, 24, 28.

இவர் குலத்தோர்; 46—
இவர் குலத்தோன்; 14.
அவர் குலத்தோர்; 25.

IV எனின்வேறேர்; 46—
எனில் வேறேர்; 3-5, 12, 13, 16-18, 20, 24, 27, 28, 43, 44.
எனின்வேறு; 15.
எனவேறேர்; 14.

வேண்டுமோ; 46—
வேணுமோ; 20.

## 729

I வேலோய்; 46—
வேலாய்; 3, 4, 13; 27, 28, 44.

அனந்தனே; 46—
அனந்தனுக்கும்; 35, 41, 45.

அந்தணனும்; 15.
அன்னதனைச்; 12, 27.

சொல்லானேல்; 46—
சொல்லரிதேல்; 45.
சொல்வாயால்; 41.
சொல்லினல்; 12, 27.
சொலற்கரிய; 15.
சொலற்கரிதேல்; 35, 41.

II புகழ்ந்துரைத்தற்கு; 5, 12, 15-18, 21-23, 27, 35, 40, 41.
புகழ்ந்தேத்தற்கு; 46—
புகுந்துரைத்தற்கு; 28.

எளிதோ; 1-6, 12-15, 19-25, 27, 28, 35, 41, 43-45.
எளிதே; 46—

அவிழ்; 46—
அவிழ்ந்த; 23.

III மவுலியையும்; 46—
சடைமௌலி; 45.

புக்களைந்த; 46—
புக்களைந்து; 19, 25, 29.
புக்கணைந்த; 22, 44.
புக்களந்த; 15.
மேற்பொலியும்; 45.

புனற்கங்கை; 46—
கங்கையினை; 13, 20.

IV வானின்று; 46—
வானின்றும்; 4.

கொணர்ந்தானும்; 46—
கொணர்ந்தோனும்; 1, 3, 4, 6, 13, 14, 17-19, 22, 25, 29, 40.

மன்னவன்காண்; 46—
மன்னன்காண்; 4, 44.

## 730

I கனியாக்கி; 46—
கனியாக; 2, 6, 41.
கனியாகி; 22.

II இயற்றி; 46—
இயற்ற; 41.

III மதிக்குடையாய்; 46—
மதிக்குடையால்; 1, 6.
மதிக்குடையான்; 41.
மதியுடையாய்; 41.
மதிக்கலையாய்; 25.

குலத்தோன்; 46—
குலத்தோர்; 20, 22, 23, 41.

முன்னொருவன்; 46—
முன்பொருவன்; 13, 20.

IV பெருவேள்வி; 46—
அரிவேள்வி; 43.

நூறும்; 46—
நூறு; 3-5, 12, 13, 15, 17, 18, 20, 23, 24, 26-28, 39, 43, 44.

## 731

I சந்திரனைவென்றானும்; 46—
சந்திரனேயென்றானும்; 41.

உருத்திரனைச்; 46—
உருத்திரரைச்; 39.
சதமகனைச்; 41.
சதுமுகனைச்; 41.

சாய்த்தானும்; 46—
சார்ந்தானும்; 20.

II துந்துவெனும்; 46—
துந்துமியாம்; 5, 16, 21, 41, 44, 45.
துந்துபியாம்; 41.

துணித்தானும்; 46—
துரந்தானும்; 24.

III வந்தகுலத்திடை வந்த; 46—
வந்தகுலத்திடைவேந்தன்; 31, 39, 41.
அந்தமிலாக்குலத்திடை வந்து; 1, 2, 5, 6, 16, 24, 28.

ரகுவென்பான் வரிசிலையால்; 46—
ரகுவென்பான் சிலைவலியால்; 45.
ரகுவென்னும் வரிசிலையான்; 3.

அவதரித்தாகுவ னென்பான்; 1, 2, 6.
அவதரித்த ரகுவென்பான்; 5, 16, 24, 28.

IV வென்றுதிசை; 46—
வென்றுசிலை; 25.

நான்கும்; 46—
நாலும்; 5, 21.

செருவென்ருன்; 46—
செலநின்ருன்; 14.
செலுத்தினன்; 1, 2, 5, 6, 12, 13, 15-25, 27-29, 40, 41, 45.

## 732

III திருநிறத்த; 46—
கருநிறத்த; 35, 41.
மணிநிறத்த; 5, 13-18, 20-23, 27, 40, 41, 43, 45.

என்ன; 46—
அன்ன; 41.

அயன்; 46—
அசன்; 22, 41.

IV மல்லென்னும்; 46—
மல்லொன்று; 1, 6, 19.
மல்லொன்றும்; 3, 13, 20, 29.
மல்லென்னத்; 4, 5, 21.

திரள்; 46—
திணி; 5, 21.

அணியென்ன; 46—
அணியாக; 1, 3-6, 12-15, 17-20, 22-25, 27, 28, 41, 43, 44.

வைத்தானே; 46—
வைத்தானும்; 20, 24.
வைத்தனன்காண்; 45.
வைத்தான்காண்; 31, 41.
வகுத்தானே; 26.

## 733

I தயரதனே; 46—
தசரதனே; 5, 15-18, 23, 25, 43.
தெசரதனே; 13, 20.

II தமையுள்ள; 46—
தம்மையுள்ள; 13, 15, 17, 18, 20, 21, 28.
தமக்குள்ள; 30.

பரிசெல்லாம்; 46—
படியெல்லாம்; 5, 13, 15, 16, 20, 21, 23, 27, 35.

III உரைத்துக்; 46—
உரைக்கச்; 20.
உரைத்தல்; 22.

கரையேற; 46—
கரையேறல்; 2, 6, 13, 15, 20, 25, 41, 44, 45.
கரையேற்ற; 41.
கரையேற்றல்; 3, 4.

அரிதாம்பல்; 46—
அரிதரசர்; 1, 2, 4, 6, 12, 15, 22, 23, 27, 28, 41, 43.
அரிதாகும்; 3, 5, 14, 16-18, 21, 40, 41, 45.
அரிதாமால்; 13, 19, 20, 25, 26, 29, 44.
அறிவரிதால்; 24, 45.
ஏழரிசால்; 41.

IV இயந்துவைத்த; 46—
இயந்துரைத்த; 2.
இயந்துகைத்த; 4, 41.
இயைந்துரைத்த; 41.

யானறிந்தபடிகேளாய்; 46—
யானுரைத்தபடி கேளாய்; 24.
அறிந்தபடி கேட்பாயே; 23.
அறிந்தபடி கேளென்னே; 43.

## 733a

I அந்தரத்தில்; 28—
அந்தரத்தின்; 23, 29, 43.

II மகிழ்தசரதனும்; 28.
மகிட்டயரதனும்; 43.

சரங்கள்; 28—
சரம்; 23, 29, 43.

தொடுத்து; 28—
தொடுத்தே; 23, 43.

III போகரிதென்று; 28—
பேராதென்று; 23, 43.

இயைந்தவனே; 28—
ஈந்தவனே; 23, 43.

## 734

I துனியின்றி; 46—
துனியின்ருய்; 25, 29.
துனிவின்றி; 41.
பனியின்றி; 41.

செல்லச்; 46—
செல்லாச்; 6.
செய்ய; 31.
செய்யச்; 39, 41.

படைவெய்யோன்; 46—
படர்வெய்யோன்; 4.
தேர்வெய்யோன்; 13, 20.

II வென்று; 46—
வென்ற; 41.
ஏன்று; 44.

படிகாப்போன்; 46—
படிகாத்தான்; 1-4, 6, 14, 17-19, 22, 28, 29.
படிகாத்தோன்; 30.
படைகாப்போன்; 23.
பகைகாத்தான்; 25.

III தனுவன்றித்; 46—
தனுவின்றித்; 2, 4, 26.
தனுவென்றித்; 14.
தனுவொன்றித்; 41.

இல்லான்; 46—
இலான்; 28.

கவசத்தான்; 46—
கவசத்தன்; 24.

IV மனுவென்ற; 46—
மனுவென்னும்; 24.

வருந்துவான்; 46—
வருந்தினன்; 12, 27.
வருந்துநாள்; 24, 45,

## 735

I கருநெடுங்கண்; 46—
கடுநெடுங்கண்; 44.

II விலைக்கோட்டும்; 46—
விலைக்கோட்டுப்; 2, 6, 22, 41.

III விலங்கென்றங்கு; 46—
விலங்கென்று; 1-6, 12-21, 23-25, 27-29, 35, 43-45.
விலங்கொன்று; 22.

உடனணுகி; 46—
தொடர்ந்தணுகி; 2-6, 12-25, 27-29, 35, 40, 41, 43-45.

முன்னின்ற; 46—
முன்வந்த; 1-4, 6, 14, 17-19, 23-25, 28, 29, 40, 41, 43-45.

IV திரு; 3, 4, 12, 14, 15, 25, 27-29, 41, 44.
பெயர்; 46—

நீங்கக்; 46—
நீக்கக்; 2, 4, 12, 14, 15, 24, 25.
நீங்கிக்; 41.
நீக்கிக்; 13.
நீங்கு; 31, 39, 41.
நீங்கும்; 44.

கருதினன்; 46—
கருத்தினன்; 39, 41, 44.
கருதுவான்; 41.

## 736

I தநயர்களென்றவமின்மை; 46—
தசரதனேறகைமைந்தர்; 24.
தநயர்களின்றவமின்மை; 39.
தநயர்களென்றகவின்மை; 13.
தநயர்களென்றவமின்னே; 19.
தயாதன்தான்றகைமைந்தர்; 45.

II மணிவயிறு; 46—
மணிவயிற்று; 19, 29, 31, 39, 44.
மணிவயிற்றில்; 2-4, 6, 17, 18, 21, 25-28, 30, 35, 40, 41, 43, 45.
மணிவயிற்றின்; 14.
அணிவயிற்றில்; 5, 12, 13, 15, 16, 20, 22, 23.

வயிற்றகத்து; 24, 45.

வாய்த்திலரால்; 46—
வந்திலரால்; 2, 4-6, 12, 13, 15-22, 24, 25, 29, 31, 39-41, 44. 45.
வந்திலர்காண்; 3.
வந்திலார்; 23, 43.

III கடல் காத்த; 46—
கடல் புடைசூழ்; 2, 5, 6, 12, 13, 15-21, 23-29, 31, 35, 39-41, 43-45.

காத்தேன்; 46—
காத்தோன்; 1, 2, 6.

என்னிற்பின்; 46—
எனநிற்பின்; 15.
நின்றபின்; 41.

IV பணிநீயென்று; 46—
பணிநீரென்று; 1, 6.
பணியீரென்று; 24.

## 737

I அம்முனியும்; 46—
அருள்முனியும்; 3.
அருள்சுரந்த; 41.

அருள்சுரந்த; 46—
உவகையனாய்; 41.

உவகையனாய்; 46—
உவகையினால்; 1, 6, 22, 40, 41, 45.
உவகையினாய்; 4, 21.
உவகையினான்; 13.

அருள்முனி; 41.

II இவ்வுலகம்; 46—
இவ்வுலகும்; 21.

அன்றியீரேழுலகும்; 19, 29.
அன்றியுமற்றேழுலகும்; 45.
அன்றியேயெவ்வுலகும்; 46—
அன்றியே யேழுலகும்; 2, 13-15, 20, 39, 41, 43, 44.
அன்றிமற்றையெவ்வுலகும்; 35, 41.
அன்றிமற்றையேழுலகும்; 41.

இன்றியேயேழுலகும்; 1, 3, 4, 6.
இன்றியீரேழுலகும்; 5, 16, 21, 23, 24.

இனிதளிக்கும்; 46—
இனிக்காக்கும்; 13, 20.
காத்தளிக்கும்; 17, 18, 22, 40, 41.
காத்தருளும்; 41.

III செவ்வியிளம்; 46—
செவ்வியரும்; 44.
செவ்வையிளம்; 1, 3-6, 13, 15, 17, 18, 23-25, 39.

குரிசிலரைத்; 19, 26-29, 31, 45.
குருசிலரைத்; 1-6, 12-18, 20-25, 39-41, 43, 44.
சிறுவர்களைத்; 46—

இனித்தேவர்; 46—
இனித்தெவ்வர்; 4.

IV வவ்விநுகர்; 46—
வவ்விநுகாப்; 14.

உரியவெலாம்; 46—
உரியவெல்லாம்; 13, 22, 44.
உரியதெலாம்; 24.

வருகென்றான்; 46—
வருகவென்றான்; 41.
வருவியென்றான்; 1, 2, 6.
வரியென்றான்; 3, 4, 14, 41.
அமைக்கவென்றான்; 28.

## 738

I தரும்; 12, 13, 20, 24, 27, 29, 33, 35, 37, 41, 44.
தரு; 46—

உரியவெலாம்; 46—
உரியவெல்லாம்; 28, 44.
உரியதெலாம்; 1, 2, 5, 6, 14, 16, 21, 24.

அமைப்ப; 46—
அமைத்தான்; 5, 13, 15-18, 20, 22, 23, 27, 35, 40, 41, 43.

II மாதவரிற்; 46—
மாதவரைப்; 41.

பெரியோனும்; 46—
பெரியானும்; 3.

மற்றதனை; 46—
மகத்தினையும்; 13.

III சோதிமணிப்; 46—
சோதிநிறப்; 17, 18, 22, 40, 41, 45.

பொற்கலத்துச்; 46—
பொற்கலத்திற்; 45,
பரிகலத்துச்; 17, 18, 22, 40, 41.

சுதையனைய; 46—
சுதையன்ன; 12, 13, 20, 23. 24, 27, 41.
சுதையென்ன; 15, 41.

வெண்சோரூர்; 46—
வெண்சோறு; 5, 13, 15, 20, 27, 41, 43.
வண்சோறு; 41.

IV அனனின்றும்; 46—
அனனின்று; 4, 13, 15-20, 23,
அதினின்றும்; 28, 31, 39.
அதினின்று; 41.
கனனின்று; 41.

போந்ததால்; 19, 25, 29.
புறப்பட்ட; 46—
புறப்பட்டான்; 1-6, 12, 13, 15, 20, 22-24, 27, 28, 35, 37, 41, 43, 44.

**739**

I பொன்னின்மணிப்; 46—
பொன்னினணி; 15.

பரிகலத்திற்; 46—
பரிகலத்துப்; 17, 18, 22, 28.
பொற்கலத்து; 1, 2, 4-6, 14, 19, 20.
பொற்கலத்திற்; 12, 13, 27, 41.

புறப்பட்ட; 46—
பொலிகின்ற; 12, 15, 27.

II உணர்ந்த; 46—
தெரிந்த; 12, 13, 15-18, 22-24, 41, 43, 45.
தேர்ந்த; 40, 45.
அறிந்து; 45.

பெரியோன்றன்; 46—
மறையோன்றன்; 41.
பற்றறுத்த; 45.

பணியினால்; 46—
முனிபணியால்; 45.

III தன்னனைய; 1-6, 12-18, 20, 22, 23, 25, 27-37, 39-41, 43, 44.
தன்னினைய; 46—
தன்னைநேர்; 24.

குணத்துத்; 46—
குணத்த; 29.
குணத்திற்; 4.

தசரதனும்; 46—
தயரதனும்; 2-4, 6, 13, 17, 18, 22, 28, 39, 40, 45.
தசரதன்; 19, 29.

வரன்முறையால்; 46—
தகைமுறையால்; 24, 45.
தன்முறையால்; 19, 25.
முறையாலே; 1-6, 12, 15-18, 22, 23, 27, 28, 40, 41, 43, 45.
தனக்குரிய; 45.

IV மூவருக்கும்; 46—
மூவர்க்கும்; 3-5, 12-16, 20, 22, 27, 29.

நாலு; 46—
நான்கு; 1, 6, 15, 44.

அளித்தான்; 46—
ஈய்ந்தான்; 2-6, 12-25, 40, 41, 43, 44.
ஈந்தான்; 26-29.

**740**

I விரிந்திடுதிவினை; 46—
விரிந்தடுதிவினை; 3, 5, 16-18, 22, 41.
விரிந்தடுந்திவினை; 44.

விரிந்தகொடுவினை; 13, 20, 45.

செய்த; 46—
பெயர; 17, 18, 23, 26, 28, 31, 39-41, 43-45.
அகல; 22, 24, 41.

வெவ்விய தீவினையாலும்; 46-
மெய்ம்மைசெய் நல்வினையாலும்; 17, 18, 22-24, 28, 31, 39-41, 43, 45.
மேன்மைசெய் நல்வினையாலும்; 44.

II கடையின்; 46—
குடையின்; 20, 45.

மறையறைந்த; 46—
மறைதெரிந்த; 45.
மறையறிந்த; 45.

அறஞ்செய்த; 46—
அருள்பெருகும்; 17, 18, 40, 41, 45.

அறத்தாலும்; 46—
தவத்தாலும்; 3-6, 12-16, 19, 20, 23, 25, 27, 29, 31, 35, 39, 41, 43, 45.

III கரதலத்திவ்; 46—
கரதலத்தில்; 2, 5, 43.
கரதலத்தால்; 14.
கரதலத்த; 20.
தராதலத்திவ்; 41.

IV கௌசலையென்பாள் பயந்தாள்; 46—
கவுசலையென்பவள் பயந்தாள்; 44.
கவுசலையென்ருள் பயந்தாள்; 41.
கவுசலைமுன் பயந்தனளே; 2.
கவுசலைமுன் பயந்தெடுத்தாள்; 4, 14.
கவுசலையும் பயந்தெடுத்தாள்; 3.

## 741

I நீதித்; 46—
வேள்வித்; 41.

ஆறு; 46—
ஆறும்; 13.

II எனும்; 46—
என்னும்; 4, 19, 20.

பெயரானை; 46—
பெரியோனை; 41.

III இவ்விருந்த; 46—
இவணிருந்த; 2, 31, 39, 41.
இங்கிருந்த; 3, 14, 20.
ஈங்கிருந்த; 13.

IV அனையானைக்; 46—
நிகர்வானைக்; 3.

கேகயர் கோன்மகள்; 46—
கைகயர் கோன்மகள்; 3, 4, 12-20, 22-25, 39, 43, 44.
கைகயர் கோமகள்; 6, 26-29, 31.

## 742

I கெடுக்கும்; 46—
கடந்த; 14, 31, 39, 41.

விறலரக்கர்; 46—
அடலரக்கர்; 1, 3, 4, 6, 17, 18, 22, 24, 28, 40, 41, 44, 45.
வல்லரக்கர்; 5, 12, 13, 15, 16, 20, 21, 23, 27, 43.
வலியவரை; 31.
வலியவரைச்; 14, 39, 41.

II வெருவருதிண்; 46—
செருவலியால்; 14, 39.
செருவலியா; 31.

திறலார்கள்; 46—
நிறுத்தியறம்; 14, 39.
திறலாரை; 44, 45.
திறலினரை; 26.
நிறுத்தியறன்; 31.

வில்லேந்தும்; 46—
வில்லேந்தி; 26, 44, 45.
வில்லெடுக்கும்; 41.
செய்தக்க; 14, 39.
செயத்தக்க; 31.

எனிற் செம்பொன்; 46—
எழிற் செம்பொன்; 25, 41.

